# சுவாமி விவேகானந்தரின்

# ஞானதீபம்

சுடர் 6



**சொற்பொழிவுகள் மற்றும் எழுதியவற்றின்**

**தொகுப்பு**



**ஸ்ரீராமகிருஷ்ண மடம்**

மயிலாப்பூர், சென்னை-600004

# பதிப்புரை

**சு**வாமி விவேகானந்தர் ஏற்றி வைத்த ஞானதீபத்தின் ஆறாம் சுடர் இது. இதில் ஒளிர்வது அவரது உரையாடல்கள், பேட்டிகள் மற்றும் கேள்வி-பதில்கள்.

இந்தச் சுடருக்கு ஒரு தனிச்சிறப்பு உண்டு. இங்கே நாம் சுவாமிஜி பேசுவதைக் கேட்டுக்கொண்டிருப்பதுடன் மட்டும் நிற்கப் போவதில்லை. அவரது பேச்சும் விளக்கங்களும் குறுக்குக் கேள்விகளால் துளைக்கப் படுகின்றன. அந்தக் கேள்விக் கணைகளுக்கு அவர் அளவற்ற பொறுமையோடும், அன்போடும் பதிலளிப்பது நம்மை அதில் ஆழ்ந்து மூழ்கச் செய்கிறது. பிரம்மஞானம், ஆன்மஞானம் என்பவை என்ன? அவற்றை எப்படி அடைவது? நமது பாரதத் திருநாட்டின் பாரம்பரியம் என்ன? அதை நாம் எவ்வாறு இழந்தோம்? இழந்த அந்த மாபெரும் செல்வத்தை மீண்டும் எவ்வாறு பெறுவது? கீதைக்குக் கிருஷ்ணரை எப்படி வரைய வேண்டும்? எப்படிப்பட்ட கல்வி வேண்டும்? புதிய சமுதாயம் எப்படி அமைய வேண்டும்? பெண்கள் முன்னேற்றம் எவ்வாறு இருக்க வேண்டும் என்று பாய்ந்து செல்கிறது அவரது சிந்தனை நீரோட்டம். இதுதவிர ஸ்ரீராமகிருஷ்ண மடம் மற்றும் ராமகிருஷ்ண மிஷனின் தோற்றம், வளர்ச்சி—இவைபற்றிய அவரது கருத்துக்களையும் நாம் இதில் காண முடிகிறது.

முதலாவதான உரையாடல்கள் பகுதியை மொழிபெயர்த்தவர் பேராசிரியர் திரு. ஏ.சுப்பிரமணியம் அவர்கள். பேட்டிகள் மற்றும் கேள்வி-பதில்கள் பகுதி முந்தைய பதிப்பிலிருந்து (1987) எடுக்கப்பட்டவை.

மொழிபெயர்ப்பு, மொழிவளம், அச்சுப்பிரதிகளைச் சரிபார்த்தல் என்று பணியில் ஈடுபட்ட அனைவருக்கும் இறைவன் திருவருள் புரிவாராக! ஞானதீபத்தின் இந்தச் சுடரும் படிப்போருக்கு ஒளிகாட்டி, வழிகாட்டி ஆன்மீகப் பாதையில் அழைத்துச் செல்லுமாக!

31.1.1997, சுவாமி விவேகானந்தரின் 135-ஆம் ஜெயந்தி
ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-4

## இந்தச் சுடரில்....

உரையாடல்கள், பேட்டிகள், பொன்மொழிகள் என்று இந்தச் சுடரில் மூன்று பகுதிகளைக் காண்கிறோம். சுவாமி விவேகானந்தர் தமது சீடர்களாகிய சரத்சந்திர சக்கரவர்த்தி, பிரியநாத் சிங்கர், சுரேந்திர நாத் சேன், சுரேந்திர நாத் தாஸ் குப்தர் என்ற நால்வருடன் நிகழ்த்திய உரையாடல்களின் தொகுப்பே 'உரையாடல்கள் என்ற முதற்பகுதியில் வருகிறது.

மேலைநாடுகளிலும் இந்தியாவிலும் சுவாமிஜி பல்வேறு பத்திரிகைகளுக்கு அளித்த பேட்டிகளும், ஓரிரு கேள்வி-பதில் நிகழ்ச்சிகளும் இரண்டாம் பகுதியில் இடம் பெறுகின்றன.

மூன்றாம் பகுதியாக அவரது பொன்மொழிகள் இடம் பெறுகிறது.

## பொருளடக்கம்

# I

## 1

பாக்பஜாரில் காலம்சென்ற
பிரியநாத் முகோபாத்யாயரின் வீடு, 1897

சுவாமிஜி மேலை நாட்டிலிருந்து திரும்பிவந்து, கல்கத்தாவில் தமது திருவடிகளை வைத்து மூன்று நான்கு நாட்கள்[1] ஆகியிருக்கும். நெடுநாட்களுக்குப் பிறகு அவரது தெய்வீக சான்னித்தியத்தை அனுபவிக்கும் ஸ்ரீராமகிருஷ்ண பக்தர்களின் மகிழ்ச்சி கரைகடந்ததாக இருந்தது. அவர்களுள் வசதி படைத்தவர்கள் அவரைத் தங்கள் வீடுகளுக்கு அழைத்துச் சென்று விருந்தளிப்பதைப் பெரும்பேறாக எண்ணி அவரை அழைத்தார்கள். இன்று பிற்பகல் அவர் பாக்பஜார் பகுதியில் ராஜ்வல்லப பாராவில் உள்ள ஸ்ரீராமகிருஷ்ண பக்தரான பிரியநாத் முகோபாத்யாயரின் வீட்டிற்கு வந்திருக்கிறார். அவர் வரும் செய்தியை அறிந்து பல பக்தர்கள் அங்கே கூடி இருந்தார்கள்.

சீடரும் விவரம் அறிந்து பிற்பகல் சுமார் இரண்டரை மணிக்கு அந்த வீட்டை அடைந்தார். அவர் இதுவரை சுவாமிஜியைச் சந்தித்ததில்லை. இதுவே முதல் சந்திப்பு.

சுவாமி துரீயானந்தர் சீடரை சுவாமிஜியிடம் அழைத்துச் சென்று அறிமுகப்படுத்தினார். சுவாமிஜி மடத்திற்கு வந்த பிறகு, சீடர் ஸ்ரீராமகிருஷ்ணரின்மீது எழுதிய துதிப் பாடல் ஒன்றைப் படித்திருந்ததால் அவர் சீடரைப்பற்றி முன்பே அறிந்திருந்தார். மேலும் ஸ்ரீராமகிருஷ்ணரின் மிக நெருங்கிய சீடர்களுள் ஒருவரான நாகமகாசயரிடம் சீடருக்கு மிகுந்தத் தொடர்பு உண்டு என்பதையும் சுவாமிஜி அறிந்திருந்தார்.

சீடர் சுவாமிஜியின் முன் வீழ்ந்து வணங்கி, எதிரில் அமர்ந்ததும், சுவாமிஜி அவரிடம் சம்ஸ்கிருதத்தில் பேசத் தொடங்கினார். நாகமகாசயரின் உடல்நலத்தை விசாரித்தார். பின்னர் அவரது அசாதாரணமான தியாக சிந்தையையும் பக்திப் பேருணர்வையும் பணிவையும்பற்றிப் பேசினார். அப்போது, 'வயம் தத்வான்வேஷாத்ஹதா: மதுகர த்வம்

---

1. அது 1897, பிப்ரவரி 20.

கலு க்ருதி—ஓ வண்டே! நாங்கள் மெய்ப்பொருளைத் தேடி வீணானோம். நீதான் வெற்றி பெறும் பேற்றை உண்மையில் பெற்றாய்'[1] என்று கூறினார். பிறகு அவர் சீடரிடம், தாம் கூறியவற்றை நாகமகாசயருக்கு எழுதி அனுப்பும்படிக் கூறினார்.

அங்கிருந்த பெரிய கூட்டத்தில் சீடரிடம் தனித்துப் பேசுவதற்கு இடைஞ்சலாக இருக்கவே சுவாமிஜி, சீடரையும் சுவாமி துரீயானந்தரையும் அந்த இடத்திற்கு மேற்கே இருந்த ஒரு சிறிய அறைக்குள் அழைத்துச்சென்றார். சீடரை நோக்கி, சங்கரர் இயற்றிய விவேக சூடாமணியில்(43) உள்ள பின்வரும் சுலோகத்தைக் கூறினார்:

'மா பைஷ்ட வித்வம்ஸ்தவ நாஸ்த்யபாய:
ஸம்ஸார ஸிந்தோஸ்தரணே அஸ்த்யுபாய: ।
ஏனைவ யாதா யதயோஸ்ய பாரம்
தமேவ மார்கம் தவ நிர்திசாமி ॥

—ஓ! ஞானியே! பயப்படாதே. நீ அழிய மாட்டாய். இந்தப் பிறப்பு இறப்பாகிய கடலைக் கடப்பதற்கு வழி இருக்கிறது. உலகைத் துறந்த மகான்கள் எந்த வழியால் அதைக் கடந்தார்களோ அந்த வழியை உனக்குக் காட்டுகிறேன்.' பிறகு அவர் சீடரிடம் விவேக சூடாமணியைப் படிக்கும்படிக் கூறினார்.

இதைக் கேட்டதும் சீடர், 'எனக்கு தீட்சை தருவதற்கான விருப்பத்தை இதன்மூலம் சுவாமிஜி தெரிவிக்கிறாரா?' என்று எண்ணினார். அந்த நாட்களில் சீடர் தீவிர வைதீகராகவும் வேதாந்தியாகவும் இருந்தார். குருவாக ஒருவரை ஏற்றுக்கொள்வதுபற்றி அவர் எந்த முடிவும் செய்யவில்லை. ஜாதி, குலம், ஆசாரம் இவற்றைப் பின்பற்றுவதிலும், அவற்றைப் பிறர் பின்பற்றுமாறு எடுத்துக் கூறுவதிலும் உறுதியானவராக இருந்தார்.

பல்வேறான பேச்சுக்கள் நடந்துகொண்டிருந்தபோது ஒருவர் வந்து, 'மிரர்' (Mirror) பத்திரிகையின் ஆசிரியரான நரேந்திரநாத் சேன் சுவாமிஜியைப் பேட்டி காண வந்திருப்பதாகச் சொன்னார். சுவாமிஜி அவரை அழைத்து வருமாறு கூறினார். நரேந்திரநாத் சேன் உள்ளே வந்து அமர்ந்து, இங்கிலாந்து மற்றும் அமெரிக்காபற்றி பல விஷயங்களைப் பேசத் தொடங்கினார். அவரது கேள்விகளுக்குப் பதிலாக சுவாமிஜி கூறினார்:

---

1. காளிதாசரின் சாகுந்தலம் நாடகத்தில் வரும் பகுதி. சகுந்தலையின் உதட்டில் அமர வந்த வண்டை நோக்கி துஷ்யந்தன் கூறுவது இது.

'அமெரிக்காவைப் போன்ற வேறொரு நாட்டை உலகில் எங்குமே காண முடியாது. தாராள மனப்பான்மை, பரந்த மனம், விருந்தோம்பும் பண்பு, புதிய கருத்துக்களை ஏற்றுக் கொள்வதற்கு உண்மையான ஆர்வம் இவைகொண்டவர் களாக அந்த நாட்டு மக்கள் இருக்கிறார்கள். அமெரிக்காவில் நான் எங்கு வேலை செய்திருந்தாலும், அது எனது சக்தியால் செய்யப்பட்டதல்ல. அமெரிக்க மக்கள் வேதாந்தக் கருத்தை ஏற்றுக் கொண்டார்கள் என்றால், அது அவர்களின் நல்ல மனத்தாலேயே ஆகும்.'

இங்கிலாந்தைப்பற்றிக் குறிப்பிடும்போது கூறினார்: 'இங்கிலாந்தைப் போல், புதியவற்றை ஏற்றுக்கொள்ளாத நாடு உலகில் வேறு எங்கும் இருக்க முடியாது. அவர்கள் சுலபத்தில் புதிய கருத்துக்களை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். ஆனால் விடாமல் முயற்சி செய்து, அவர்கள் ஒரு கருத்தைப் புரிந்து கொள்ளும்படிச் செய்துவிட்டால், பிறகு அந்தக் கருத்தை எந்தக் காரணத்திற்காகவும் விடவே மாட்டார்கள். அத்தகைய உறுதியான உள்ளத்தை வேறு எந்த நாட்டினரிடமும் நீங்கள் பார்க்க முடியாது. அதனால்தான் அவர்கள் இந்த உலகத்தில் அதிகாரத்திலும் நாகரீகத்திலும் முதன்மையான இடத்தைப் பெற்றிருக்கிறார்கள்.'

பிறகு, தகுந்த பிரச்சாரகர்கள் கிடைப்பார்களானால் இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் வேதாந்த போதனையை நிலைநிறுத்துவதற்குப் பெரிய வாய்ப்பு இருக்கிறது என்று கூறிய அவர் தொடர்ந்து, 'நான் அதற்கான அஸ்திவாரம் மட்டும்தான் இட்டிருக்கிறேன். எதிர்காலப் பிரச்சாரகர்கள் என் பாதையைப் பின்பற்றுவார்களானால், காலப்போக்கில் மகத்தான காரியங்கள் செய்யப்படலாம்' என்றார்.

நரேந்திரபாபு: 'இந்த வழியில் நாம் மதப் பிரச்சாரம் செய்வதற்கு எதிர்காலத்தில் என்ன வாய்ப்பு இருக்கிறது?'.

சுவாமிஜி: 'நமது நாட்டில் இந்த வேதாந்தம் மட்டும்தான் இருக்கிறது. மேலை நாகரீகத்தோடு ஒப்பிட்டால் வேறு எதுவும் நம்மிடம் இல்லை என்றே சொல்லலாம். ஆனால் எல்லா வகை யான மத நம்பிக்கைகளையும் மத சாதனைகளையும் கொண்ட எல்லா மனிதர்களுமே ஆன்மீகத்தை அடையச் சம உரிமை கொடுப்பதும், உலகம்தழுவியதுமான வேதாந்த மதத்தை அவர் களிடம் பிரச்சாரம் செய்வதன்மூலம், எத்தகைய மகத்தான ஆன்மீகம் இந்தியாவில் வளர்ந்திருக்கிறது, அது இன்றும்

எப்படி வாழ்ந்துகொண்டிருக்கிறது என்பதை நாகரீகம் மிகுந்த மேலை நாடு அறிந்துகொள்ளும். இந்த மதத்தைப் படிப்பதன்மூலம் மேலை நாடுகளுக்கு நம்மிடமுள்ள மதிப்பும் அனுதாபமும் அதிகரிக்கும். ஏற்கனவே அது ஓரளவிற்கு வளர்ந் திருக்கிறது. இவ்வாறு நாம் அவர்களது அனுதாபத்தையும் மதிப்பையும் பெற்றால் நமது பொருளாதார வாழ்வை உயர்த்துகின்ற விஞ்ஞானங்களை அவர்களிடமிருந்து அறிந்து கொள்ளலாம். அதன்மூலம் வாழ்க்கைப் போராட்டத்திற்கு நம்மை நாம் நல்ல முறையில் தயார் செய்துகொள்ள முடியும். அதுபோலவே, நம்மிடமிருந்து வேதாந்தத்தைக் கற்பதன்மூலம் அவர்கள் தங்கள் ஆன்மீக வாழ்வை உயர்த்திக் கொள்ளவும் பாதுகாத்துக் கொள்ளவும் முடியும்.'

நரேந்திரபாபு: 'இத்தகைய கருத்துப் பரிமாற்றத்தால் நமது அரசியல் மேம்பாட்டிற்கு ஏதாவது நம்பிக்கை இருக்கிறதா?'

சுவாமிஜி: 'அவர்கள் (மேலை நாட்டினர்) பெருவீரனான விரோசனனின்[1] குழந்தைகள். தங்கள் சக்தியால் அவர்கள் பஞ்சபூதங்களையும் பொம்மைகள்போல் ஆட்டி வைக்கின் றனர். இத்தகைய சக்திகளைப் பயன்படுத்தி அவர்களோடு போரிட்டு நாம் சுதந்திரம் பெறலாம் என்று நினைத்தால் உங்கள் எண்ணம் முற்றிலும் தவறு. இமயமலையின் முன் ஒரு சிறு கல் நின்றால் எப்படி இருக்குமோ, அதுபோல்தான் அவர்களை இந்தப் பௌதீக சக்திகளால் எதிர்த்து நாம் நிற்பதும்.

'என் கருத்து என்ன தெரியுமா? வேதாந்தத்தின் மிக உன்னதமான ரகசியங்களை மேலைநாடுகளுக்கு உபதேசிப் பதன்மூலம் அந்த மகத்தான நாடுகளின் அனுதாபத்தையும் மதிப்பையும் பெற்று, நாம் அவர்களுக்கு என்றென்றும் ஆன்மீக குருவாக இருப்போம். அவர்கள் எல்லா பௌதீக விஞ்ஞானங் களிலும் நமக்கு ஆசிரியர்களாக விளங்குவார்கள். இதை மறந்து, என்றைக்கு நம் நாட்டினர் ஆன்மீகத்தை அவர்கள் கையில் ஒப்படைத்துவிட்டு, மதத்தைக் கற்பதற்காக அவர்கள் காலடியில் அமர்கிறார்களோ, அன்றைக்கு, ஏற்கனவே சீரழிந்துள்ள

---

1. இந்துப் புராணங்களின்படி, விரோசனன் அசுரர்களின் முதல் அரசன்; மாய மந்திரங்களில் வல்லவன். (பார்க்க: சாந்தோக்கிய உபநிடதம், 8.7–8) அஸ்ஸிரியர்களின் புராணங்களை ஆராய்ந்தபோது, பெரோசஸ் என்ற அத்தகைய மன்னன் இருந்தது உண்மை என்று சமீபக் காலத்தில் நிரூபிக்கப் பட்டுள்ளது.

இந்த நாடு, என்றென்றைக்குமாக அழிந்து நாசமாகிவிடும். ''எங்களுக்கு இதைக் கொடுங்கள், அதைக் கொடுங்கள்'' என்று இரவுபகலாக அவர்களின் முன் அழுவதால் எதுவும் வராது. அதற்குப் பதிலாக, நாடுகளுக்கிடையே மதிப்பும் அனுதாபமும் நிறைந்த இத்தகைய கொடுக்கல்-வாங்கல் உறவு வளருமானால் இதுபோன்ற கூச்சல்களுக்கு இடமில்லை. அனைத்தையும் அவர்கள் தாமாகவே செய்வார்கள். இவ்வாறு இரண்டு நாடுகளுக்கிடையே வளரும் மதத் தொடர்பாலும், வேதாந்தத்தைப் பெருமளவில் பரப்புவதாலும் இந்த நாடும் மேலை நாடுகளும் அதிக நன்மை அடையும். இதனுடன் ஒப்பிடும் போது, அரசியல் விஷயங்கள் இரண்டாம் பட்சமாகவே எனக்குத் தோன்றுகிறது. மேற்சொன்ன காரியத்தை நடைமுறைப் படுத்துவதற்காக நான் என் வாழ்வையே அர்ப்பணம் செய்வேன், வேறு ஏதாவது வழியில் இந்தியாவிற்கு நன்மையை ஏற்படுத்த முடியும் என்று நீங்கள் நம்பினால், நல்லது, உங்கள் வழியிலேயே நீங்கள் செல்லுங்கள்.'

நரேந்திரபாபு, சுவாமிஜியின் கருத்துடன் தன் கருத்து ஒத்துப் போகாது என்று கூறிவிட்டுச் சிறிதுநேரத்தில் புறப் பட்டுச் சென்றார். சீடர், சுவாமிஜிக்கும் நரேந்திரபாபுவுக்கும் இடையே நடைபெற்ற உரையாடலைக் கேட்டபடி சுவாமிஜி யின் ஒளி தவழும் உருவத்தையே கூர்ந்து பார்த்துக் கொண் டிருந்தார்.

நரேந்திரபாபு சென்றதும், பசுக்களைப் பாதுகாக்கும் சங்கத் தின் பிரச்சாரகர் ஒருவர் சுவாமிஜியைக் காண உள்ளே வந்தார். அவர் காவித் தலைப்பாகை அணிந்து, ஏறக்குறைய ஒரு துறவி போலவே உடை உடுத்திருந்தார். வடஇந்தியாவைச் சார்ந்தவர் அவர் என்பது தெளிவாகத் தெரிந்தது. அவர் வருவது தெரி விக்கப்பட்டதும் சுவாமிஜி அவரைக் காண்பதற்காக வெளி யறைக்கு வந்தார். பிரச்சாரகர் சுவாமிஜியை வணங்கித் தன் கையில் இருந்த பசு மாதாவின் படம் ஒன்றைக் கொடுத்தார். சுவாமிஜி அதை வாங்கிச் சிறிது நேரம் பார்த்துவிட்டு அருகில் இருந்தவரிடம் கொடுத்தார். பிறகு இருவருக்கும் கீழ்வரும் உடையாடல் தொடர்ந்தது.

சுவாமிஜி: 'உங்கள் சங்கத்தின் நோக்கம் என்ன?'

பிரச்சாரகர்: 'நாங்கள் கசாப்புக் கடைக்காரனிடமிருந்து பசு மாதாவைக் காப்பாற்றுகிறோம். பல இடங்களில் பசுக்காப் பகங்கள் அமைக்கப்பட்டுள்ளன. அங்கே நோயுற்ற, வயதான

பசுக்களையும், கசாப்புக் கடைக்காரர்களிடமிருந்து மீட்டுவந்த பசுக்களையும் தீனி முதலியவை கொடுத்துக்காப்பாற்றுகிறோம்.'

சுவாமிஜி: 'உண்மையில் இது நல்ல காரியம்தான். செலவிற்கு உங்களுக்கு எங்கிருந்து பணம் கிடைக்கிறது?'

பிரச்சாரகர்: 'உங்களைப் போன்ற பெரியவர்கள் கருணையுடன் தரும் நன்கொடைகளால்தாம் இந்தக் காரியங்கள் நடக்கின்றன.'

சுவாமிஜி: 'இதுவரையில் எவ்வளவு பணம் செலவழித்திருக்கிறீர்கள்?'

பிரச்சாரகர்: 'மார்வாரிகள் இதற்கு மிக அதிகமாக உதவினார்கள். இந்த நல்ல காரியத்திற்கு அவர்கள் ஒரு பெரிய தொகையைத் தந்திருக்கிறார்கள்.'

சுவாமிஜி: 'மத்திய இந்தியாவில் இப்போது பயங்கரமான பஞ்சம் மக்களை வாட்டுகிறது. அந்தப் பஞ்சத்தில் ஒன்பது லட்சம் மக்கள் பட்டினியால் செத்துப் போனதாக இந்திய அரசாங்கம் அறிக்கை வெளியிட்டிருக்கிறது! உங்கள் சங்கம் இந்தப் பஞ்சத்தில் மக்களைக் காப்பாற்ற ஏதாவது செய்ததா?'

பிரச்சாரகர்: 'இதுபோன்ற பஞ்சங்களிலும் துன்பங்களிலும் நாங்கள் உதவுவதில்லை. இந்தச் சங்கம் பசு மாதாவைக் காப்பதற்கு மட்டும்தான் அமைக்கப்பட்டுள்ளது.'

சுவாமிஜி: 'பஞ்சத்தில் உங்கள் சகோதர சகோதரிகளாகிய ஆயிரக்கணக்கான மக்கள் பட்டினியால் சாவின் கொடிய பசிக்கு இரையாகிக் கொண்டிருக்கிறார்கள். வசதி இருந்தும் அவர்களுக்கு உணவு கொடுத்துக் காப்பாற்ற வேண்டியது உங்கள் கடமை என்று நீங்கள் நினைக்கவில்லையா?'

பிரச்சாரகர்: 'அதை நாங்கள் செய்ய வேண்டியதில்லை. இந்தப் பஞ்சம் அவர்களுடைய கர்மத்தின் விளைவாக, பாவங்களின் விளைவாக வந்திருக்கிறது. கர்மம் எப்படியோ அப்படியே தான் பலனும்.'

இதைக் கேட்டதுதான் தாமதம்! சுவாமிஜியின் கண்கள் கோபத்தால் நெருப்புத் துண்டங்கள்போல் ஜொலித்தன. அவரது முகம் உணர்ச்சியால் சிவந்தது. ஆனால் அவர் உணர்ச்சிகளை அடக்கிக்கொண்டு சொன்னார்: 'மனிதர்கள், சொந்தச் சகோதரர்கள் பசியாலும் பட்டினியாலும் செத்துக் கொண்டிருப்பதைக் கண்டு, அவர்கள் உயிரைக் காப்பாற்ற ஒரு பிடி சோறுகூடத் தராமல், அவர்களிடம் சிறிதும் இரக்கம் கொள்ளாமல், விலங்குகளையும் பறவைகளையும்

காப்பாற்றுவதற்காக உணவை வாரிவாரித் தரும் சங்கங்களிடம் எனக்குச் சிறிதுகூட அனுதாபம் கிடையாது. அத்தகைய சங்கங்களின் மூலம் சமுதாயத்திற்கு ஏதாவது நல்லது நடக்கும் என்று நான் நம்பவில்லை. மனிதன் பட்டினியால் சாவதற்கு அவனது கர்மங்கள் காரணம் என்று கர்ம நியதிக்கு நீங்கள் வக்காலத்து வாங்குவதாக இருந்தால், இந்த உலகத்தில் எதற்காகவும் முயற்சி செய்வதோ போராடுவதோ பயனற்ற வேலை. பசுக்களைக் காப்பாற்றும் உங்கள் வேலையும் அப்படிப்பட்டதுதான். அந்தக் கொள்கையின்படிப் பார்த்தால் பசு மாதாவும் அதன் கர்மத்தால்தான் கசாப்புக் கடைக்காரரிடம் மாட்டிக்கொண்டு சாகிறது. நாம் அதைக் காப்பாற்ற வேண்டிய அவசியமே இல்லை.'

இதைக் கேட்ட பிரச்சாரகர் கொஞ்சம் வெட்கம் அடைந்தவராகத் தடுமாறினார், பிறகு சமாளித்துக் கொண்டு, 'நீங்கள் சொல்வது உண்மைதான். ஆனால் பசு நமது தாய் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றனவே!' என்றார்.

சுவாமிஜி லேசாகச் சிரித்தபடி, 'ஆமாம், பசு நம் தாய் தான். எனக்குப் புரிகிறது. வேறு யார்தான் நம்மைப் போன்ற இவ்வளவு புத்திசாலிகளான பிள்ளைகளைப் பெற முடியும்?' என்றார்.

பிரச்சாரகர் பிறகு பசு மாதாவைக் காப்பாற்றுவதுபற்றி ஒன்றுமே பேசவில்லை. சுவாமிஜியின் கிண்டலின் முழுப் பொருளையும் அவர் புரிந்துகொள்ளவில்லை என்றே தோன்றியது. பசு மாதாவைக் காப்பாற்றும் தங்கள் சங்கத்திற்கு ஏதேனும் கொடுக்கும்படி அவர் மீண்டும் சுவாமிஜியிடம் வேண்டினார்.

சுவாமிஜி: 'நான் ஒரு துறவி, பக்கிரி. உங்களுக்கு உதவுகின்ற அளவுக்கு எனக்குப் பணம் எங்கிருந்து கிடைக்கும்? அப்படி எனக்கு எங்கிருந்தாவது பணம் கிடைத்தாலும் அதை நான் மனிதர்களின் சேவைக்காகத்தான் முதலில் பயன்படுத்துவேன். முதலில் மனிதன்தான் காப்பாற்றப்பட வேண்டும். அவனுக்கு உணவும் கல்வியும் ஆன்மீக ஞானமும் கொடுக்கப்பட வேண்டும். இவையெல்லாம் செய்த பிறகு ஏதாவது பணம் எஞ்சினால் உங்கள் சங்கத்திற்குக் கொடுக்கலாம்.'

இதைக் கேட்டதும் பிரச்சாரகர் சுவாமிஜியை வணங்கி விட்டு எழுந்து வெளியே சென்றார். சுவாமிஜி எங்களைப் பார்த்துப் பேசத் தொடங்கினார்:

'என்ன பேச்சு! கேவலம்! ''மனிதர்கள் கர்மபலனால் சாகி றார்கள், அவர்களுக்கு இரக்கம் காட்டுவதில் என்ன பலன்?'' என்று அவன் கேட்கிறான். இந்த நாடு அடியோடு நாசமாகி விட்டது என்பதற்கு இதுவே சாட்சி. உங்கள் இந்து மதத்தில் கர்மநியதிக் கொள்கை எவ்வளவு கேவலமாகப் பயன்படுத்தப் படுகிறது பார்த்தீர்களா? மற்ற மனிதர்களுக்காகச் சிறிதும் இரக்கம் காட்டாத இவர்களை மனிதர் என்று நினைக்கலாமா?' இவ்வாறு பேசும்போது சுவாமிஜியின் திருமேனி வேதனை யாலும் துயரத்தாலும் நடுங்கியதுபோல் தோன்றியது. பிறகு சுவாமிஜி புகைபிடித்தவாறே சீடரிடம், 'நல்லது. மறுபடியும் என்னை வந்து பார்' என்று கூறினார்.

சீடர்: 'சுவாமிஜி, நீங்கள் எங்கே தங்குவீர்கள்? ஒருவேளை யாராவது பணக்காரர்களின் வீட்டில் தங்கினால் என்னை உள்ளே விடுவார்களா?'

சுவாமிஜி: 'ஆலம்பஜார் மடத்திலோ, கர்சிப்பூரில் கோபால்லால் சீலின் தோட்ட வீட்டிலோதான் இப்போதெல் லாம் தங்குகிறேன். இங்கு ஏதாவது ஓர் இடத்திற்கு நீ வரலாம்.'

சீடர்: 'சுவாமிஜி, நான் உங்களோடு தனித்துப் பேச மிகவும் விரும்புகிறேன்.'

சுவாமிஜி: 'மிகவும் நல்லது. ஒருநாள் இரவு வா. வேதாந் தத்தைப்பற்றி நிறைய பேசலாம்.'

சீடர்: 'சுவாமிஜி, சில அமெரிக்கர்களும் ஆங்கிலேயர் களும் தங்களோடு வந்துள்ளதாகக் கேள்விப்பட்டேன். அவர்கள் என் உடையைப் பார்த்தோ அல்லது நான் பேசுவதைக் கேட்டோ தவறாக ஏதாவது நினைக்க மாட்டார்களா?'

சுவாமிஜி: 'ஏன்? அவர்களும் மனிதர்கள்தானே? அதோடு வேதாந்த மதத்தில் அவர்களுக்கும் மிகுந்த ஈடுபாடு இருக் கிறது. உன்னோடு பேசுவதில் அவர்கள் மகிழ்ச்சியே அடைவார்கள்.'

சீடர்: 'சுவாமிஜி, வேதாந்தம், அதைக் கற்பவர்களுக்குச் சில குறிப்பிட்ட தகுதிகள் இருக்க வேண்டும் என்று கூறுகிறது. உங்கள் மேலை நாட்டுச் சீடர்களிடம் இவை எப்படி இருக்க முடியும்? வேதங்களையும் வேதாந்தத்தையும் படித்த, பாவங் களிலிருந்து விடுபட்ட, சாஸ்திரங்களில் சொல்லியுள்ளபடி அன்றாட சடங்குகளையும் விசேஷச் சடங்குகளையும் செய் துள்ள, உணவிலும் மற்றும் பொதுவான நடத்தைகளிலும் கட்டுப்பாடு மிகுந்த, முக்கியமாக, அடிப்படையான நான்கு

சாதனைகளில்[1] வெற்றி பெற்ற ஒருவனே வேதாந்தத்தைப் பயிற்சி செய்ய வேண்டும் என்று அல்லவா சாஸ்திரங்கள் கூறுகின்றன. உங்களுடைய மேலை நாட்டுச் சீடர்கள், முதலில், பிராமணர்களே இல்லை. பிறகு உணவிலும் உடையிலும் அவர்களிடம் கண்டிப்பு எதுவுமில்லை. அப்படி இருக்கும்போது வேதாந்தத்தை அவர்களால் எப்படிப் புரிந்துகொள்ள முடியும்?'

சுவாமிஜி: 'நீ அவர்களோடு பேசும்போது அவர்கள் வேதாந்தத்தைப் புரிந்துகொண்டார்களா இல்லையா என்பதைத் தெரிந்துகொள்வாய்.'

சீடர் வைதீக இந்து மதத்தின் புற ஆசாரத்தை எவ்வளவு அழுத்தமாகப் பின்பற்றுபவர் என்பதை சுவாமிஜி இப்போது பார்க்க முடிந்திருக்கும்.

பிறகு சுவாமிஜி ஸ்ரீராமகிருஷ்ணரின் பக்தர்கள் சிலருடன் பாக்பஜாரில் உள்ள பலராம் போசின் வீட்டிற்குச் சென்றார். சீடர் பட்டிலாவில் விவேக சூடாமணி புத்தகத்தை வாங்கிக் கொண்டு தர்ஜிபாராவில் உள்ள தம் வீட்டிற்குச் சென்றார்.

## 2

கல்கத்தாவிலிருந்து காசிப்பூருக்குச் செல்லும்
வழியும் கோபால்லால் சீலின் மாளிகையும், 1897

இன்று பிற்பகல் சுவாமிஜி கிரீஷ் சந்திரகோஷின்[2] வீட்டில் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கிறார். சீடர் அங்குச் சென்றதும் சுவாமிஜியை வணங்கினார். அப்போது சுவாமிஜி அங்கிருந்து கோபால்லால் சீலின் தோட்ட வீட்டிற்குச் செல்லத் தயாராக இருந்தார். வெளியே வண்டி தயாராக நிறுத்தப்பட்டிருந்தது.

---

1. நான்கு அடிப்படை சாதனைகள்—
   i. நித்யாநித்ய வஸ்து விவேகம்:
   நிலையான-நிலையற்றவற்றைப் பிரித்தறியும் பகுத்தறிவு
   ii. இஹாமுத்ர பலபோக விராகம்:
   இந்த உலகிலும் மறு உலகங்களிலும் சுகபோக நாட்டத்தில் விருப்பமின்மை.
   iii. சமாதிஷட்க ஸம்பத்தி:
   சமம் முதலான ஆறு குணங்கள்—
   1. சமம்-மன அமைதி
   2. தமம்-புலனடக்கம்
   3. உபரதி-மனம் புறப் பொருட்களை நாடாதிருத்தல்
   4. திதிக்ஷை-பொறுமை
   5. சிரத்தை-நம்பிக்கை
   6. ஸமாதானம்-புத்தி பிரம்மத்தில் நிலைத்திருத்தல்
   —(பார்க்க: விவேக சூடாமணி, 19–27)
   iv. முமுக்ஷுத்வம்-மோட்சத்தில் நாட்டம்.
2. பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் சீடர். புகழ்பெற்ற வங்காள நாடகாசிரியர்.

சுவாமிஜி சீடரிடம், 'நீயும் உடன் வா' என்று கூறினார். சீடரும் வண்டியில் ஏறிக்கொண்டார். வண்டி சித்பூர் சாலையில் சென்ற போது எதிரே கங்கை தெரிந்தது. கங்கையைப் பார்த்ததும் சுவாமிஜி தம்முள் மூழ்கியவராக, 'கங்கா தரங்க ரமணீய ஜடா கலாபம்'[1] என்று தொடங்கும் தோத்திரத்தை இனிமையாகப் பாடினார். அவரிடமிருந்து பரவிய இனிமையான இசையில் மூழ்கி, ஆச்சரிய வசப்பட்டு அமைதியாக இருந்தார் சீடர். சித்பூர் ஹைடிராலிக் பாலத்தை நோக்கிச் செல்லும் தண்ட வாளத்தில் ஒரு ரயில் எஞ்ஜின் வேகமாகச் செல்வதைக் கண்ட சுவாமிஜி சீடரிடம், 'அதைப் பார், சிங்கம்போல் எப்படி கம்பீரமாகச் செல்கிறது' என்றார். இதைக் கேட்ட சீடர், 'அது உயிரற்ற ஜடப்பொருள், அதற்குப் பின்னால் அறிவுள்ள மனிதன் இயக்குகிறான். அதனால் அது ஓடுகிறது. இதில் அந்த எஞ்ஜினுக்கு என்ன பெருமை இருக்கிறது?' என்றார்.

சுவாமிஜி: 'அப்படியா? உணர்வின் அடையாளம் என்ன?'

சீடர்: 'ஏன் கேட்கிறீர்கள்? அறிவின் மூலமாக எது செயல் படுகிறதோ அதுதான் உணர்வு.'

சுவாமிஜி: 'இயற்கையை எதிர்க்கும் ஒவ்வொன்றும் உணர்வுடன் இருப்பவைதான். அங்கேதான் உணர்வு வெளிப் படுகிறது. ஒரு சிறிய எறும்பைக் கொல்வதற்கு முயன்று பார். அதுகூடத் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளப் போராடும். எங்கே போராட்டம் இருக்கிறதோ, எங்கே எதிர்ப்பு இருக் கிறதோ அங்கே உயிரின் அடையாளம் இருக்கிறது. அங்கே உணர்வு வெளிப்படுகிறது.'

சீடர்: 'அந்தச் சோதனை மனிதர்கள் விஷயத்திலும், நாடுகள் விஷயத்திலும் பொருந்துமா?'

சுவாமிஜி: 'உலக வரலாற்றைப் படித்து, இது பொருந்து கிறதா இல்லையா என்று பார். உங்கள் நாட்டைத் தவிர இது மற்ற எல்லா நாடுகளுக்கும் பொருந்தும். உலகத்திலேயே நீங்கள் மட்டும்தான் உயிரற்ற ஜடப்பொருளைப்போல் வீழ்ந்து கிடக் கிறீர்கள்; மனவசியத்தில் ஆழ்ந்துள்ளீர்கள். நீங்கள் பலவீன மானவர்கள் என்றும் உங்களுக்குச் சக்தியே கிடையாது என்றும்தான் மிகப் பழங்காலத்திலிருந்தே மற்றவர்கள் சொல்லி வருகிறார்கள். நீங்களும் அதை அப்படியே ஏற்றுக்கொண்டு,

---

1. கங்கையின் அலைகள் புரளும் அழகிய ஜடாமுடியை உடையவர்.
—வேத வியாசர் எழுதிய விசுவநாத அஷ்டகத்தின் முதல் வரி இது.

சுமார் ஆயிரம் ஆண்டுகளாக, ''நாங்கள் மோசமானவர்கள், ஒன்றுக்கும் உபயோகம் இல்லாதவர்கள்'' என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். (தமது உடலைச் சுட்டிக்காட்டி) இந்த உடம்புகூட உங்கள்நாட்டு மண்ணில்தான் பிறந்தது. ஆனால் நான் ஒருபோதும் அப்படி நினைத்ததே இல்லை. அதனால்தான், நம்மை எப்போதும் பலவீனமானவர்கள் என்றும், கீழான வர்கள் என்றும் சொல்பவர்கள்கூட இறைவனின் திருவருளால் எனக்கு தெய்வ மரியாதை செய்தார்கள்; இப்போதும் செய்து கொண்டிருக்கிறார்கள். உனக்குள் அளவற்ற ஆற்றலும், அளவற்ற அறிவும், வெல்ல முடியாத சக்தியும் இருக்கிறது என்று நீயும் நினைப்பாயானால், அந்தச் சக்திகளை உன்னால் வெளியே கொண்டுவர முடியுமானால் நீயும் என்னைப்போல் ஆக முடியும்.'

சீடர்: 'சுவாமிஜி, அவ்வாறு நினைப்பதற்கான ஆற்றல் எங்களிடம் எங்கே இருக்கிறது? குழந்தைப் பருவத்திலிருந்து எங்களிடம் இப்படிப் பேசி, எங்களை இந்த வகையில் உரு வாக்கும் ஆசிரியர்களோ குருமார்களோ எங்கே இருக் கிறார்கள்? நாங்கள் கேள்விப்பட்டதெல்லாம், நாங்கள் கற்றுக் கொண்டதெல்லாம் படிப்பின் லட்சியம் ஒரு நல்ல வேலையைப் பெற வேண்டும் என்பதே.'

சுவாமிஜி: 'அதனால்தான் அதற்கு மாறான மற்றொரு உபதேசத்தோடும் உதாரணத்தோடும் நாங்கள் வந்திருக்கிறோம். எங்களிடமிருந்து அந்த உண்மையைக் கற்றுக்கொள்ளுங்கள், புரிந்துகொள்ளுங்கள், அதை அனுபவத்தில் காணுங்கள். பிறகு அந்தக் கருத்துக்களைப் பட்டணங்களில், நகரங்களில், கிராமங் களில் பரப்புங்கள். ''எழுந்திருங்கள், விழித்திருங்கள். இனியும் உறங்காதீர்கள். எல்லா தேவைகளையும் துன்பங்களையும் தீர்க்கும் ஆற்றல் உங்கள் ஒவ்வொருவரிடமும் இருக்கிறது. இதை நம்புங்கள், அந்த ஆற்றல் வெளிப்படும்'' என்று எல்லோ ரிடமும் சென்று பிரச்சாரம் செய்யுங்கள். அதோடு பாமர மக்களிடையே விஞ்ஞானம், தத்துவம், வரலாறு, புவியியல் இவற்றின் மையக் கருத்துக்களை எளிய மொழியில் பரப்புங்கள். திருமணமாகாத இளைஞர்களைக்கொண்டு ஓர் இயக்கத்தைத் தொடங்க நான் எண்ணுகிறேன். முதலில் அவர்களுக்குப் போதனை செய்வேன். பிறகு அவர்கள்மூலம் பணி செய்வேன்.'

சீடர்: 'ஆனால் அதற்கு நிறைய பணம் தேவைப்படுமே? பணம் உங்களுக்கு எங்கிருந்து கிடைக்கும்?'

சுவாமிஜி: 'நீ என்ன பேசுகிறாய்? மனிதன் அல்லவா பணத்தை உருவாக்குகிறான்! பணம் மனிதனை உருவாக்கியது என்று எங்கே நீ கேள்விப்பட்டாய்? உன் எண்ணத்தையும் பேச்சையும் நீ முழுமையாக ஒன்றுபடுத்தி விட்டால், உன் பேச்சும் செயலும் ஒன்றாக இருக்குமானால் பணம் தண்ணீரைப் போல் தானாக உன் காலடியில் வந்து கொட்டும்.'

சீடர்: 'சரி, நீங்கள் சொல்வதுபோல் தேவையான பணம் கிடைத்துவிட்டது என்றே வைத்துக் கொள்வோம். அதை வைத்துக்கொண்டு நற்பணியை ஆரம்பிக்கிறீர்கள். அதனால் பெரிதாக என்ன நடந்துவிடும்! இதற்கு முன்னால் மாமனிதர்கள் பலர் பல்வேறு நற்செயல்களைச் செய்யவே செய்தார்கள். அவையெல்லாம் இப்போது எங்கே? நீங்கள் செய்யப்போகும் பணிகளுக்கும் கட்டாயம் அதே கதிதான் ஏற்படும். அப்படி யென்றால் அத்தகைய முயற்சியால் என்ன பயன்?'

சுவாமிஜி: 'எதிர்காலத்தைப் பற்றியே எப்போதும் எண்ணிக் கொண்டிருப்பவனால் எந்தக் காரியமும் செய்ய முடியாது. உண்மையானது, நல்லது என்று நீ எதனைப் புரிந்து கொண்டாயோ அதனை உடனே நிறைவேற்று. எதிர்காலத்தில் இது வருமா, இது வராமல் போகுமா என்று கணக்குப் பார்ப் பதில் என்ன பயன்? வாழ்க்கை மிகவும் குறுகியது. எதிர்காலத் தில் என்ன நடக்கும், என்ன பலன் விளையும் என்றெல்லாம் கணக்கிட்டுக் கொண்டிருந்தால் எதையாவது சாதிக்க முடியுமா? கடவுள் ஒருவர்தான் பலன்களைத் தருபவர். அதை அவரிடம் விட்டுவிட்டு எல்லா வேலைகளையும் செய். பலன்களைக் கணக்கிடுவதில் நீ என்ன பெறப் போகிறாய்? அந்த வழியைப் பின்பற்றாதே. எப்போதும் வேலை செய்துகொண்டே இரு.'

இவ்வாறு பேசிக்கொண்டு வந்தபோது வண்டி தோட்ட வீட்டை அடைந்தது. சுவாமிஜியைப் பார்ப்பதற்காகக் கல்கத்தா விலிருந்து பலர் அங்கு வந்திருந்தார்கள். சுவாமிஜி வண்டி யிலிருந்து இறங்கி, அறைக்குள் சென்று இருக்கையில் அமர்ந்த பின்பு பேச ஆரம்பித்தார். அவருடைய மேலை நாட்டுச் சீட ரான குட்வின் அவரது பக்கத்தில் சேவையே வடிவானவர் போல் நின்றிருந்தார். சீடர் முன்பே அவரிடம் பழகி இருந்தார். எனவே அவரிடம் சென்றார். இருவரும் சுவாமிஜியைப் பற்றிய பல்வேறு கருத்துக்களைப் பேசத் தொடங்கினார்கள்.

மாலையில் சுவாமிஜி சீடரை அழைத்து, 'நீ கடோப நிடதத்தை மனப்பாடம் செய்திருக்கிறாயா?' என்று கேட்டார்.

சீடர்: 'இல்லை சுவாமிஜி, சங்கரரின் விளக்கவுரையுடன் படித்திருக்கிறேன்.'

சுவாமிஜி: 'உபநிடதங்களில் அதைப்போல் அவ்வளவு அழகியது வேறு எதுவும் இல்லை. நீங்கள் எல்லோரும் அதை மனப்பாடம் செய்ய வேண்டுமென்று நான் விரும்புகிறேன். வெறுமனே படிப்பதால் என்ன பயன்? அதில் வரும் நசிகேதனின் நம்பிக்கை, தைரியம், விவேகம், துறவு முதலியவற்றை வாழ்வில் கடைப்பிடிக்க முயற்சி செய்.'

சீடர்: 'அதை அடைய அருள்கூர்ந்து என்னை ஆசீர் வதியுங்கள்.'

சுவாமிஜி: 'நீ ஸ்ரீராமகிருஷ்ணரின் வார்த்தைகளைக் கேட்டிருக்கிறாய் அல்லவா! ''கருணைக் காற்று ஏற்கனவே வீசிக்கொண்டுதான் இருக்கிறது. நீ பாயை விரி'' என்பார் அவர். அனுபூதியை யாராவது யாரிடமாவது திணிக்க முடியுமா, மகனே! ஒருவனின் விதி அவனது கையில்தான் இருக்கிறது. குரு இதைப் புரிந்துகொள்ளும்படிச் செய்கிறார், அவ்வளவுதான். விதையின் சக்திதான் மரமாக வளர்கிறது. காற்றும் தண்ணீரும் அதற்கு வெறும் உதவி மட்டுமே செய்ய முடியும்.'

சீடர்: 'இருந்தாலும் புற உதவி ஒன்று தேவையாகத்தான் இருக்கிறது.'

சுவாமிஜி: 'ஆம். அது உண்மைதான். ஆனால் உன்னுள் சாரம் எதுவும் இல்லையென்றால் எவ்வளவு புறஉதவிகளும் எந்தப் பலனையும் தராது என்பதைப் புரிந்துகொள். இருந் தாலும் ஒவ்வொருவரும் ஆன்ம அனுபூதி பெறும் ஒரு காலம் வரவே செய்கிறது. ஏனெனில் ஒவ்வொருவரும் பிரம்மம். உயர்ந்தது தாழ்ந்தது என்ற வேறுபாடுகள் எல்லாம் அதன் வெளிப்பாட்டின் அளவிலுள்ள வேற்றுமையே. காலம் வரும் போது ஒவ்வொருவரிடமும் அது பூரணமாக வெளிப்படுகிறது. அதனால்தான் சாஸ்திரங்கள் ''காலேனாத்மனி விந்ததி—உரிய காலத்தில் அது தனது ஆன்மாவில் உணரப்படுகிறது''[1] என்று கூறுகின்றன.'

சீடர்: 'ஓ அந்த நாள் என்று வரும்? சுவாமிஜி, எத்தனையோ பிறவிகள் அறியாமை இருளில் உழல வேண்டும் என்றல்லவா சாஸ்திரங்கள் கூறுகின்றன!'

---

1. கீதை, 4. 38.

சுவாமிஜி: 'ஏன் அந்தப் பயம்! நீ இங்கே வந்துவிட்ட தால் இந்தப் பிறவியிலேயே லட்சியத்தை அடைவாய். முக்தி ஆகட்டும், சமாதி ஆகட்டும், இவையெல்லாம் பிரம்மம் வெளிப் படுவதற்குத் தடையாக உள்ளவற்றை நீக்குவதுதான். ஆன்மா சூரியனைப்போல் எப்போதும் பிரகாசித்துக் கொண்டுதான் இருக்கிறது. அறியாமை என்னும் மேகம் அதை மறைத்துக் கொண்டிருக்கிறது, அவ்வளவுதான். மேகத்தை விலக்குங்கள். சூரியன் வெளிப்படும். அதன் பிறகு நீ ''பித்யதே ஹ்ருதய க்ரந்தி:[1]—இதய முடிச்சுக்கள் அவிழ்ந்தன'' என்னும் நிலையை அடையலாம். வழியில் உள்ள தடைகளை அகற்றுமாறுதான் நீ காண்கின்ற பல்வேறான பாதைகளும் கூறுகின்றன. தான் எந்த வழியில் ஆன்மாவை உணர்கிறானோ, அந்த வழியையே ஒருவன் எல்லோருக்கும் சொல்கிறான். ஆனால் எல்லா வழி களின் முடிவும் இந்த ஆன்ம ஞானம்தான், ஆன்ம அனுபூதி தான். அதைப் பெறுவதற்கு எல்லா மனிதர்களுக்கும் எல்லா உயிர்களுக்கும் சம உரிமை இருக்கிறது. இந்தக் கருத்தை அனை வரும் ஒத்துக்கொள்கிறார்கள்.'

சீடர்: 'சுவாமிஜி, சாஸ்திரங்களின் இத்தகைய கருத்துக் களைப் படிக்கும்போது இன்னும் ஆன்மாவை உணர வில்லையே என்ற எண்ணம் எழுந்து மனத்தை வாட்டுகிறது.'

சுவாமிஜி: 'இதுதான் ஏக்கம் என்று சொல்லப்படுவது. இது வளரும் அளவிற்குத் தடைகள் விலக்கப்படுகின்றன; திட நம்பிக்கை உருவாகிறது; படிப்படியாக, உள்ளங்கை நெல்லிக் கனிபோல் ஆன்மா உணரப்படுகிறது. இந்த அனுபூதிதான் மதத்தின் சாரம். சில விதிகளையும் சடங்குகளையும் எல்லோரும் பின்பற்றலாம்; விதிக்கப்பட்டவற்றை நிறைவேற்றவும் ஒதுக்கப் பட்டவற்றை விலக்கவும் செய்யலாம். ஆனால் அனுபூதிக்கான இந்த ஏக்கம் மிகச் சிலரிடமே காணப்படுகிறது. இறையனுபூதிக் காக, ஆன்ம அனுபூதிக்காகப் பித்துப் பிடிக்கின்ற இந்தத் தீவிர ஏக்கம்தான் உண்மையான ஆன்மீகம். கண்ணனுக்காக கோபியர் மனத்தில் எழுந்த கட்டற்ற அந்த வெறி, ஆம், ஆன்மாவை உணர்வதற்கு அத்தகைய தீவிர ஏக்கமே வேண்டும். கோபியர் மனத்திலும்கூட ஆண், பெண் என்ற வித்தியாசம் சிறிதளவு இருக்கவே செய்தது. உண்மையான ஆன்ம ஞானத்தில் பால்வேற்றுமை சிறிதும் இல்லை.'

---

1. முண்டக உபநிடதம், 2. 2. 8.

இவ்வாறு பேசிக்கொண்டே (ஜயதேவரின்) கீத கோவிந்தம் பற்றிப் பேசத் தொடங்கினார் சுவாமிஜி:

'ஜயதேவரின் பாடல்களில் உணர்ச்சி வேகத்தைவிட ஓசை நயம் அதிகமாக இருந்தாலும் சம்ஸ்கிருத மொழியின் மிகச் சிறந்த கடைசிக் கவிஞர் அவர். காதல், ஏக்கம் இவற்றின் உச்ச நிலையை ''பததி பதத்ரே''[1] என்ற பாடலில் எப்படி விளக்கு கிறார், பார்! ஆன்ம அனுபூதிக்கு அத்தகைய காதல் தேவை. இதயம் ஏங்கித் துடிக்க வேண்டும்.

'இப்போது கண்ணனின் விளையாட்டுமயமான பிருந் தாவன வாழ்விலிருந்து குருக்ஷேத்திர வாழ்விற்கு வருவோம். அதுவும்கூட எவ்வளவு தூரம் மனத்தைக் கவர்வதாக உள்ளது. போரின் அமளிதுமளி! எத்தனை பயங்கரமான காட்சி! அந்தப் பெரும் கூச்சல்களுக்கிடையே அவர் எப்படி அமைதியாக சம மான மனநிலையில் இருக்கிறார்! அந்தப் பயங்கரப் போர்க் களத்தில் கீதையை அர்ஜுனனுக்கு உபதேசித்து, க்ஷத்திரிய தர்மப்படி அவனைப் போர்புரியத் தூண்டுகிறார். இந்தப் பயங்கரப் போரை நிகழ்த்துகின்ற ஒருவராக இருந்தும் அதில் பற்றற்று இருக்கிறார்—அவர் ஆயுதங்களைத் தொடவே இல்லை. நீ எந்த நிலையிலிருந்து பார்த்தாலும் ஸ்ரீகிருஷ்ணரின் குணங்கள் நிறைநிலையில் இருப்பதைக் காண்பாய். ஞானம், கர்மம், பக்தி, யோகம் என்று எல்லாவற்றின் வடிவமாக அவர் திகழ்கிறார். இந்தக் காலத்தில் அவரது இந்த நிலையை ஆழ்ந்து படிக்க வேண்டும். கையில் குழலை ஏந்தியுள்ள பிருந்தாவனக் கண்ணனைத் தியானம் செய்வது இந்தக் காலத்திற்குப் போதாது; அது மனிதனுக்கு நற்கதியைக் கொண்டு வராது. இப்போது தேவையானது சிங்க கர்ஜனையான கீதையை முழங்கி நிற்கின்ற குருக்ஷேத்திரக் கண்ணனையும், வில்லையும் அம்பையும் கையில் தாங்கியிருக்கின்ற ராமனையும், அனுமனையும், காளியையும் வழிபடுவதே. அப்போதுதான் மக்கள் மன உறுதியோடும் பேராற்றலுடனும் காரியங்களைச் செய்வார்கள். நான் ஆராய்ந்த தில், இப்போது இந்த நாட்டில் மதம் மதம் என்று முழங்கு பவர்களுள் பெரும்பாலானோர் பலவீனத்தால் இறுகிப்

---

1. பததி பதத்ரே விசலதி பத்ரே சங்கித பவதுபயானம் |
ரசயதி சயனம் ஸசகித நயனம் பச்யதி தவ பந்தானம் ||
—பறவை பறக்கும்போதும் இலைகள் சலசலக்கும்போதும் நீ வரு வதாக அவள் எண்ணுகிறாள். நீ வரும் வழிமேல் விழி வைத்தபடி உனக்காகப் படுக்கையை விரிக்கிறாள்.

போனவர்களாக, மூளை குழம்பியவர்களாக அல்லது கொள்கைவெறியர்களாக இருப்பதையே காண்கிறேன். மிக அதிக அளவில் ரஜோ குணத்தை வளர்ச்சியடையச் செய் யாமல் இந்த உலகத்திலோ மறு உலகத்திலோ உங்களுக்கு எதுவும் கிடைக்காது. இந்த நாடு முழுவதுமே ஆழ்ந்த தமோ குணத்தில் மூழ்கிக் கிடக்கிறது. இந்த வாழ்வில் அடிமைத் தனமும் அடுத்த உலகில் நரகமும்தான் அதன் இயற்கையான விளைவு.'

சீடர்: 'மேலை நாட்டினரிடம் ரஜோகுணம் அதிகமாக இருப்பதால் அவர்கள் படிப்படியாக சாத்வீக நிலையை அடைவார்கள் என்று நினைக்கிறீர்களா?'

சுவாமிஜி: 'நிச்சயமாக. மிக அதிகமான ரஜோகுணத்தைப் பெற்றதால் அவர்கள் போகத்தின், இன்பம் அனுபவிப்பதன் உச்சக்கட்டத்தை அடைந்துவிட்டார்கள். அவர்கள் அல்லாமல், ஒரு சாண் வயிற்றிற்காக அல்லாடிக் கொண்டிருக்கின்ற நீங்களா யோகத்தை அடையப் போவதாக நினைத்துக் கொண்டிருக் கிறீர்கள்? மிகமிக நேர்த்தியான அவர்களது இன்ப அனுபவத் தைக் காணும்போது, ''வித்யுத்வந்தம் லலித வஸனா''[1] என்ற மேகதூதப் பாடல்தான் என் நினைவிற்கு வருகிறது. உங்கள் இன்பமோ, சிறை போன்ற அறைகளில் கந்தைப் பாயில் படுத்துக் கொண்டு, ஆண்டுதோறும் இனவிருத்தி செய்துகொண்டு, பசியால் துடிக்கும் பிச்சைக்காரர்களையும் அடிமைகளையும் உற்பத்தி செய்வதில்தான் இருக்கிறது! அதனால்தான் ரஜோ குணத்தின் தூண்டுதலால் மக்கள் ஆற்றலோடும் சுறுசுறுப் பாகவும் செயலில் ஈடுபட வேண்டும் என்று நான் கூறுகிறேன்.

---

1. வித்யுத்வந்தம் லலிதவஸனா: ஸேந்த்ரசாபம் ஸசித்ரா:
ஸங்கீதாய ப்ரஹதமுரஜா: ஸ்னிக்த கம்பீர கோஷம் |
அந்தஸ்தோயம் மணிமய புவஸ்துங்கமப்ரம்லிஹாக்ரா:
ப்ராஸாதாஸ்த்வாம் துலயிதுமலம் யத்ர தைஸ்தைர்விசேஷை: ||

—ஓ மேகமே, அந்த நகரின் மாளிகைகளை உன்னோடு ஒப்பிடலாம். உங்களுள் பல ஒற்றுமைகள் உள்ளன. உன்னில் மின்னல் மின்னி விளையாடு கிறது, அவற்றுள் அழகிய பெண்கள் நடமாடுகிறார்கள். உன்னிடம் வானவில் உள்ளது, அங்கே சித்திரங்கள் உள்ளன. உன்னிடம் பேரிடி முழக்கம் உள்ளது, அங்கே இசையும் மத்தளமும் முழங்குகின்றன. உன்னிடம் ஒளி ஊடுருவிச் செல்கின்ற தெள்ளிய நீர் உள்ளது, அங்கே அவர்களது அறைகள் ஒளி திகழும் நவரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்டுள்ளன. நீ உயரஉயரப் பறக்கிறாய், அவற்றின் கூரைகளும் வானத்தை முத்தமிடுகின்றன.

—காளிதாசர், மேகதூதம், 2. 1.

அளகாபுரியின் போக சுகங்களை காளிதாசர் இவ்வாறு கூறத் தொடங்கு கிறார். சுவாமிஜி குறிப்பிடுவது இந்தப் பாடலுடன் தொடரும் பாடல்களை யும் சேர்த்தே ஆகும்.

வேலை, வேலை, வேலை; நான்ய: பந்தா வித்யதே஽யனாய— இதைத் தவிர முக்திக்கு வேறு வழியே இல்லை.'

சீடர்: 'சுவாமிஜி, நம் முன்னோர்கள் இத்தகைய ரஜோ குணத்தைப் பெற்றிருந்தார்களா?'

சுவாமிஜி: 'ஏன் அவர்கள் பெறவில்லை? அவர்கள் பல நாடுகளில் நமது குடியேற்றங்களை அமைத்ததையும், திபெத், சீனா, சுமத்ரா, ஏன், தொலைவில் உள்ள ஜப்பானுக்குக் கூட பிரச்சாரகர்களை அனுப்பியதையும் வரலாறு கூற வில்லையா? முன்னேற்றம் அடைய, ரஜோ குணத்தின் மூலமாக அல்லாமல் வேறு ஏதாவது வழி இருக்கிறது என்று நீ நினைக்கிறாயா?'

பேச்சு இப்படி நடந்துகொண்டே இருந்தபோது இரவு கவியலாயிற்று. அப்போது மிஸ். முல்லர் அங்கு வந்தார். ஆங்கிலேயப் பெண்ணான அவர் சுவாமிஜியிடம் அளவற்ற பக்தி கொண்டவர். சுவாமிஜி சீடரை அவருக்கு அறிமுகம் செய்தார். சிறிது நேரப் பேச்சிற்குப் பிறகு மிஸ். முல்லர் மாடிக்குச் சென்றார்.

சுவாமிஜி: 'அவர்கள் எத்தகைய வீரம் மிக்க நாட்டைச் சேர்ந்தவர்கள், பார். அவளது வீடு எவ்வளவு தொலைவில் இருக்கிறது. அவள் ஒரு பெரிய செல்வந்தரின் மகள். ஆன்மீக லட்சியத்தை அடைவதற்காக, அவை எல்லாவற்றையும் விட்டு விட்டு எவ்வளவு தொலைவு வந்திருக்கிறாள், பார்!'

சீடர்: 'ஆமாம். உங்கள் வேலைகள் விசித்திரமாக இருக் கின்றன. எத்தனையோ மேலை நாட்டு ஆண்களும் பெண்களும் உங்களுக்குச் சேவை செய்ய எவ்வளவு ஆர்வத்தோடு காத் திருக்கிறார்கள். இந்தக் காலத்தில் உண்மையில் இது மிகவும் அதிசயம்தான்'.

சுவாமிஜி (தமது உடலைக் காட்டி): 'இந்த உடம்பு நீண்ட காலம் வாழுமானால் நீ மேலும் பல அதிசயங்களைப் பார்ப் பாய். பரந்த இதயமும் ஆற்றலும் நிறைந்த சில இளைஞர்கள் எனக்குக் கிடைப்பார்களானால் நான் இந்த நாடு முழுவதை யுமே ஒரு கலக்கு கலக்கிவிடுவேன். அத்தகைய சிலர் சென்னை யில் இருக்கிறார்கள். ஆனால் வங்காளத்தில் நான் அதிக நம்பிக்கை வைத்திருக்கிறேன். இத்தகைய தெளிந்த அறிவு பெற்றவர்களை எந்த நாட்டிலும் காண்பது அரிது. ஆனால் அவர்களுடைய உடம்பில் தெம்பு இல்லை. அறிவும் உடம்பும் சமச்சீராக வளர வேண்டும். இரும்பைப் போன்ற நரம்புகளும்

சற்றே கூர்த்த அறிவும் இருந்தால் உலகமே உன் காலடியில் இருக்கும்.'

சுவாமிஜியின் இரவு உணவு தயாராகிவிட்டது என்ற விவரம் தெரிவிக்கப்பட்டது. சுவாமிஜி சீடரிடம், 'வா, வந்து, நான் என்ன சாப்பிடுகிறேன் என்று பார்' என்று கூறினார்! பின்னர் சாப்பிட்டுக்கொண்டே சீடரிடம், 'எண்ணெய் மற்றும் காரப் பொருட்களைச் சாப்பிடுவது நல்லதல்ல. லூச்சியை (பூரி) விடச் சப்பாத்தி நல்லது. லூச்சி, நோயாளிகளின் உணவு. மீன், இறைச்சி, புதிய காய்கறிகளைச் சாப்பிடு. இனிப்பைக் குறைத்துக் கொள்' என்று கூறினார். இப்படிப் பேசியவாறே இருந்த அவர், 'என்னப்பா, நான் எத்தனை சப்பாத்தி சாப்பிட்டேன்! இன்னும் சாப்பிட வேண்டுமா?' என்று கேட்டார். எத்தனை சப்பாத்தி சாப்பிட்டோம் என்ற நினைவு அவருக்கு இல்லை. பசி இருக்கிறதா என்ற உணர்வுகூட இல்லை. பேசும் போது உடலுணர்வு அவ்வளவு தூரம் அவரை விட்டுப் போய் விட்டது.

மேலும் கொஞ்சம் சாப்பிட்டுவிட்டு சுவாமிஜி உணவை முடித்துக்கொண்டார். சீடரும் கல்கத்தா திரும்பினார். வண்டி எதுவும் கிடைக்காததால் அவர் நடக்க வேண்டியதாயிற்று. நாளை சுவாமிஜியைப் பார்க்க எவ்வளவு சீக்கிரமாக வரமுடியும் என்று நினைத்தபடியே நடந்து சென்றார் அவர்.

## 3

மறைந்த கோபால்லால் சீலின் தோட்டம், 1897

மேலை நாட்டிலிருந்து திரும்பிய சுவாமிஜி சில நாட்கள் காசிப்பூரிலுள்ள கோபால்லால் சீலின் தோட்டத்தில் தங்கியிருந்தார். கல்கத்தாவிலுள்ள படாபஜாரில் வாழும் சில பிரபலமான பண்டிதர்கள் சுவாமிஜியிடம் வாதம் புரிவதற்காக ஒரு நாள் வந்திருந்தனர். அன்று சீடரும் அங்கிருந்தார்.

அந்தப் பண்டிதர்கள் சம்ஸ்கிருதத்தில் சரளமாகப் பேச வல்லவர்கள். அவர்கள் வந்து சுவாமிஜியை வணங்கிவிட்டு வட்டமாக அவரைச் சுற்றி அமர்ந்தனர். சம்ஸ்கிருதத்தில் உரையாடல் தொடங்கியது. அன்று விவாதம் நிகழ்ந்த பொருள் என்ன என்பதைச் சீடர் மறந்துவிட்டார். ஆனால் அந்தப் பண்டிதர்கள் உரத்தக் குரலெழுப்பி, தத்துவப் பகுதியிலிருந்து சில நுட்பமான கேள்விகளைக் கேட்டு சுவாமிஜியைத் திணறடிக்க முயன்றனர். சுவாமிஜி அவற்றிற்கெல்லாம் அமைதியாகப் பதிலளித்தது மட்டும் சீடரின் நினைவில் உள்ளது.

இந்த வாதத்தில் சுவாமிஜி, முடிவுகளை நிலைநிறுத்து வதாகிய சித்தாந்த பட்சத்தையும், பண்டிதர்கள் கேள்விகளைக் கேட்பதாகிய பூர்வபட்சத்தையும் சார்ந்திருந்தனர். வாதம் நடந்துகொண்டிருக்கும்போது சுவாமிஜி ஓரிடத்தில் 'ஸ்வஸ்தி' என்பதற்குப் பதிலாக 'அஸ்தி' என்னும் சொல்லைக் கூறி விட்டார். பண்டிதர்கள் உரக்கச் சிரித்தனர். உடனே சுவாமிஜி பணிவோடு, 'பண்டிதானாம் தாஸோஹம் க்ஷந்தவ்யமேதத் ஸ்கலனம்—நான் பண்டிதர்களின் அடிமை! இந்தப் பிழையைப் பொறுத்துக் கொள்ளுங்கள்' என்றார். பண்டிதர்கள் சுவாமிஜி யின் பணிவைக் கண்டு வியந்தனர். நீண்ட நேர விவாதத்திற்குப் பிறகு அவர்கள் சுவாமிஜியின் கருத்துக்களே சரி என்பதை ஒத்துக்கொண்டு வணங்கி விடைபெற்றனர்.

அந்தப் பண்டிதர்கள் பூர்வ மீமாம்ச சாஸ்திரங்களை மிக நன்றாகக் கற்றவர்கள் என்பதை, அவர்கள் சென்ற பிறகு சீடர் சுவாமிஜியிடமிருந்து தெரிந்துகொண்டார். சுவாமிஜி வேதாந்த மாகிய உத்தர மீமாம்ச தத்துவத்தை எடுத்துக் கூறி ஞான நெறியே உயர்ந்தது என்பதை விளக்கினார். பண்டிதர்கள் அவர் கூறியதை ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று.

தமது தவறுக்காக பண்டிதர்கள் சிரித்ததைப்பற்றிக் குறிப்பிட்ட சுவாமிஜி, தாம் பல வருடங்கள் சம்ஸ்கிருத மொழியைப் பேசாததால்தான் அந்தத் தவறு ஏற்பட்டது என்று கூறினார். அந்தப் பண்டிதர்களைச் சிறிதும் அவர் குறை கூறவில்லை. விவாதத்தின்போது முக்கியப் பொருளிலிருந்து விலகி இலக்கணப் பிழை ஒன்றிலுள்ள குற்றத்தைக் காட்ட முயல்வதை மேலை நாட்டினர் நாகரீகக் குறைவாகக் கருதுவார்கள் என்பதைத் தெரிவித்தார். பின்னர் 'நாகரீகம் படைத்தவர்கள் கருத்தைப் பார்ப்பார்களே, தவிர மொழி யழகைப் பார்ப்பதில்லை. ஆனால் உங்கள் நாட்டில் அரிசியைப் பார்க்காமல் உமியைப்பற்றிதான் சண்டை போடுவது வழக்கம்' என்று சொல்லிவிட்டுச் சீடருடன் சம்ஸ்கிருதத்தில் உரையாட ஆரம்பித்தார். சீடரும் ஓரளவு சம்ஸ்கிருதத்தில் மறுமொழி கூறினார். இருப்பினும் சுவாமிஜி அவரை ஊக்குவிப்பதற் காகப் புகழ்ந்து பேசினார். அன்று முதல் சுவாமிஜி கூறியதற்கிணங்கச் சீடர் சுவாமிஜியுடன் அவ்வப்போது சம்ஸ்கிருதத்தில் பேசுவார்.

நாகரீகம் என்பது என்ன, என்ற கேள்விக்கு விடையாக சுவாமிஜி அன்று பின்வருமாறு கூறினார்:

'ஆன்மீகத்தில் ஒரு நாட்டினர் அல்லது சமுதாயத்தினர் முன்னேறி இருக்கும் அளவிற்கு அவர்களது நாகரீகமும் உயர்ந்த தாக உள்ளது. பல எந்திரங்களையும், அது போன்ற பிறவற்றை யும் கொண்டு வாழ்க்கை வசதிகளைப் பெருக்கிக் கொண்டதால் மட்டும் ஒரு நாட்டினரை நாகரீகம் படைத்தவர்கள் என்று கூறிவிட முடியாது. இந்தக் காலத்து மேலை நாகரீகம் நாள் தோறும் மக்களின் தேவைகளையும் துன்பங்களையும்தான் பெருக்கிக்கொண்டு போகிறது. மாறாக, பழைய இந்திய நாகரீகம் ஆன்மீக முன்னேற்றத்திற்குரிய வழிகளைக் காட்டிய தன் மூலம், உலகியல் தேவைகளை முற்றிலுமாக நீக்காவிட் டாலும் பெருமளவிற்குக் குறைத்தது. இந்த இருவகை நாக ரீகத்தையும் சமன்படுத்துவதற்காகவே இந்த யுகத்தில் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் தோன்றினார். இன்று மனிதர்கள் செயல் புரிவதில் வல்லவர்களாக இருப்பதுடன் ஆழ்ந்த ஆன்மீக ஞானத்தையும் அடைய வேண்டியிருக்கிறது.'

இந்திய நாகரீகம், மேலை நாகரீகத்துடன் இணைவதால் உலகில் ஒரு புது யுகம் தோன்றும் என்பதை சுவாமிஜி விளக்க லானார்:

'நல்லது, இன்னொரு விஷயம். ஒருவன் ஆன்மீக வாழ்வில் ஈடுபடுந்தோறும் அவன் பிறரிடமிருந்து ஒதுங்கிவிட வேண்டும் என்றும் பிற விஷயங்களைப்பற்றி அவன் வாயிலிருந்து ஒரு வார்த்தைகூட வரக் கூடாது என்றும் மேலை நாட்டினர் எண் ணுகின்றனர். எனது சொற்பொழிவுகளில் பரந்த கருத்துக் களைக் கண்ட பாதிரிகள் மிகவும் வியந்தனர்; சொற்பொழிவின் முடிவில் நான் நண்பர்களுடன் பேசிச் சிரிப்பதைக் கண்டு மலைத்தேவிட்டனர். அவர்களுள் சிலர் என்னிடம் வந்து நேராகவே, ''சுவாமி, நீங்கள் ஒரு குரு, சாதாரண மனிதர்களைப் போல் சிரிக்கவும் விளையாடவும் கூடாது. இந்த விளையாட்டுத் தனம் உங்களுக்கு ஏற்றதல்ல'' என்று கூறினார்கள். அதற்கு நான் அவர்களிடம், ''நாங்கள் ஆனந்தத்தின் குழந்தைகள், கவலை தோய்ந்த முகத்துடனும் சிடுசிடுப்பாகவும் ஏன் இருக்க வேண்டும்?'' என்று கூறினேன். என் வார்த்தைகளின் பொருளை அவர்கள் சரியாகப் புரிந்துகொண்டார்களா இல்லையா என்பது எனக்குத்தெரியாது.'

அன்று சுவாமிஜி பாவசமாதி, நிர்விகல்ப சமாதிபற்றி எல்லாம் பல விஷயங்களைக் கூறினார். என்னால் முடிந்த வரை அவற்றைக் கீழே தருகிறேன்:

'ஒருவன் அனுமனைப்போல் பக்தியை வளர்த்துக்கொள்வதாக வைத்துக் கொள்வோம். அந்த பக்திபாவனை தீவிரமாகுந்தோறும் அவனது மனநிலையும் நடவடிக்கைகளும் மட்டுமல்ல, உடல்கூட அவன் பக்தி செலுத்துபவரைப்போல் மாறத் தொடங்கிவிடும். ஓர் உயிரினம் மற்றொன்றாகப் பரிணமிக்கும் முறையும் இதுவே. இவ்வாறு பக்தன் ஏதாவது ஒரு பாவனையை ஏற்றுக்கொண்டு, படிப்படியாக இஷ்டதெய்வத்தின் வடிவமாகவே ஆகிவிடுகிறான். ஒரு பாவனையின் இறுதி நிலையையே பாவ சமாதி என்கிறோம். ஞானநெறி சாதகன் ''நேதி நேதி'' என்னும் பாதையைப் பின்பற்றுகிறான். அவன் ''நான் இந்த உடலல்ல, மனமல்ல, புத்தியல்ல'' என்று பழகி நிர்விகல்ப சமாதியை அடைகிறான். அப்போது அவன் தனியுணர்வில் நிலைபெறுகிறான். பக்தி நெறிகளின் வழியாக நிறைநிலையை அதாவது இறுதி நிலையை அடைவதற்கு எத்தனையோ பிறவிகள் தேவையாக இருக்கிறது. ஆன்மீகபாவனை சாம்ராஜ்யத்தின் மன்னரான ஸ்ரீராமகிருஷ்ணரோ பதினெட்டிற்குக் குறையாத பாவனைகளுள் அறுதி நிலையை அடைந்திருந்தார். பாவமுகத்தில்[1] இருந்திருக்காவிட்டால் தமது உடல் அழிந்துவிட்டிருக்கும் என்று அவர் கூறுவதுண்டு.'

அன்று சீடர் சுவாமிஜியிடம், 'சுவாமிஜி, நீங்கள் மேலைநாட்டில் எந்த வகையான உணவு உட்கொண்டீர்கள்?' என்று கேட்டார்.

சுவாமிஜி: 'அங்குள்ளவர்கள் உண்ணும் அதே உணவைத்தான். நாங்கள் துறவிகள், எங்கள் ஜாதியை எதுவும் அழிக்க முடியாது.'

இந்த நாட்டில் சுவாமிஜியின் எதிர்காலப் பணி எவ்விதம் நடக்கப்போகிறது என்பதற்கு சுவாமிஜி கீழ்வருமாறு கூறினார்:

'சென்னையிலும் கல்கத்தாவிலும் இரண்டு மையங்களை உருவாக்க வேண்டும். எல்லா துறைகளிலும் மக்களுக்கு நன்மை செய்யக்கூடிய புதுவிதமான துறவிகளை உருவாக்க வேண்டும். இருப்பதை அழிக்கும் முறையால் சமுதாயமோ நாடோ எந்த

---

1. பாவமுகம் என்பதைக் கடவுள் நிலையையும் உலக நிலையையும் இணைக்கின்ற ஒரு நிலை என்று ஒருவாறாக விளக்கலாம்.

ஸ்ரீராமகிருஷ்ணரின் பெருவாழ்வைப் புரிந்துகொள்வதற்கு நாம் அறிய வேண்டிய முக்கியக் கோட்பாடுகளுள் ஒன்று இது. அவரது வரலாற்று ஆசிரியரான சுவாமி சாரதானந்தர் இதனைத் தெளிவாக ஆராய்ந்து விளக்குகிறார். பார்க்க: சென்னை, ஸ்ரீராமகிருஷ்ண மடத்து வெளியீடான 'குருதேவர் ஸ்ரீராமகிருஷ்ணர்', பகுதி 2, பக்கம் 104–107.

விதத்திலும் முன்னேறுவதில்லை. ஆக்கபூர்வமான முறைகளால் தான், அதாவது ஏற்கனவே இருக்கும் வழக்கங்களுக்கும் நெறி களுக்கும் புத்துருவம் கொடுப்பதன்மூலம்தான் முன்னேற்றம் என்பது எல்லா காலங்களிலும் அடையப்பட்டிருக்கிறது. பண்டைய இந்தியாவின் மதப் பிரச்சாரகர்கள் அனைவரும் அந்த வழியிலேயே முயன்றனர். பகவான் புத்தரின் மதம் மட்டுமே அழிவுபூர்வமாக இருந்தது. அதனால் அது இந்தியா விலிருந்து வெளியேற்றப்பட்டும் விட்டது.'

இவ்வாறு பேசிக்கொண்டிருந்தபோது சுவாமிஜி கீழே வருவனவற்றையும் கூறியதாகச் சீடருக்கு ஞாபகம் இருக்கிறது:

'பிரம்மம் ஒரு மனிதனிடம் வெளிப்பட்டால், அந்த ஒளி காட்டும் வழியால் பல்லாயிரக்கணக்கானோர் முன்னேறுவர். பிரம்ம ஞானிகள் மட்டுமே மனித குலத்திற்கு ஆன்மீக வழி காட்டிகளாக இருக்க முடியும். எல்லா சாஸ்திரங்களும் ஆராய்ச்சியும் இதையே நிரூபிக்கின்றன. சுயநலம் பிடித்த பிராமணர்களே பரம்பரை குரு என்ற முறையை இந்த நாட்டில் ஏற்படுத்தினார்கள். இது வேதங்களுக்கும் சாஸ்திரங்களுக்கும் எதிரானது. அதனால்தான் ஆன்மீக சாதனைகளால்கூட மனித னால் நிறைநிலையை அடையவோ பிரம்மஞானம் பெறவோ முடியவில்லை. மதத்தில் ஏற்பட்ட இத்தகைய தவறுகளை நீக்குவதற்காகவே இறைவன் இந்த யுகத்தில் ஸ்ரீராமகிருஷ்ண ராகப் பூமியில் பிறந்தார். அவரது சமரச போதனைகள் உலகம் முழுவதும் பரவுமானால், அதனால் மனித குலத்திற்கே, உலகிற்கே பெரும் பயன் விளையும். இவ்வளவு அற்புதமாகச் சமயசமரசத்தை நிலைநாட்டிய ஒருவரை இந்தியா கடந்த பல நூற்றாண்டுகளாக உருவாக்கவில்லை.'

அப்போது சுவாமிஜியின் சகோதரச் சீடர் ஒருவர் அவ ரிடம், 'நீங்கள் ஏன் ஸ்ரீராமகிருஷ்ணரை அவதார புருஷரென மேலை நாட்டில் பிரச்சாரம் செய்யவில்லை?' என்று கேட்டார்.

சுவாமிஜி: 'அவர்கள் தங்கள் விஞ்ஞானத்தையும் தத்துவத்தையும்பற்றிப் பெரிதாக அலட்டிக்கொள்கிறார்கள். நியாயம், விஞ்ஞானபூர்வமான வாதம், தத்துவ ஆராய்ச்சி இவற்றின்மூலம் அவர்களது அறிவுச் செருக்கைத் தகர்த்து எறியாமல், அங்கு ஒன்றையும் நீங்கள் உருவாக்க முடியாது. முடிந்தவரை அறிவால் ஆராய்ந்தும் ஒன்றும் காணாமல், உண்மையை உணர வேண்டும் என்னும் ஆழ்ந்த ஆர்வத்துடன் என்னிடம் வருபவர்களிடம் நான் ஸ்ரீராமகிருஷ்ணரைப்பற்றிப்

பேசுவதுண்டு. மாறாக, எடுத்தவுடனே நான் அவதாரங்களைப் பற்றிப் பேசத் தொடங்கினால், ''ஓ, நீங்கள் சொல்வதில் புதியது ஒன்றுமில்லை. அவரைப் போன்ற ஏசு எங்களிடம் உள்ளார்'' என்று அவர்கள் கூறிவிடுவார்கள்.'

இவ்வாறு மூன்று நான்கு மணி நேரங்களை மிகவும் மகிழ்ச்சியுடன் கழித்துவிட்டு, சீடரும் மற்றவர்களும் கல்கத்தா திரும்பினார்கள்.

## 4

தட்சிணேசுவரக் காளி கோயில், ஆலம்பஜார் மடம், மார்ச் 1897

சுவாமிஜி முதன்முறையாக இங்கிலாந்திலிருந்து இந்தியா திரும்பியபோது ராமகிருஷ்ண மடம் ஆலம்பஜார் என்ற இடத்தில் இருந்தது. பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் பிறந்தநாள் விழா இந்த ஆண்டு தட்சிணேசுவரத்திலுள்ள ராணி ராசமணி யின் காளி கோயிலில்[1] கொண்டாடப்படும். காலை ஒன்பது மணியளவில் சுவாமிஜி தம் சகோதரச் சீடர்கள் சிலருடன் ஆலம்பஜார் மடத்திலிருந்து அங்கு வந்தார். அவர் செருப்பு அணியவில்லை, மஞ்சள் தலைப்பாகை அணிந்திருந்தார். அவரைக் காணவும் அவரது பேச்சைக் கேட்கவும் மக்கள் பெரும் கூட்டமாகக் காத்திருந்தனர். காளி கோயிலுக்குள் வந்ததும் காளிதேவியின் முன் நெடுஞ்சாண்கிடையாக வீழ்ந்து வணங்கினார் அவர். சுற்றியிருந்த ஆயிரக்கணக்கான மக்களும் அவரைத் தொடர்ந்து, தேவியைத் தலைதாழ்த்தி வணங்கினர். பிறகு ராதாகாந்தரை வணங்கிவிட்டு ஸ்ரீராமகிருஷ்ணர் வாழ்ந்த அறைக்கு வந்தார். மூச்சுவிடக்கூட இடம் இல்லாமல் மக்கள் அந்த அறைக்குள் நிறைந்திருந்தனர்.

சுவாமிஜியுடன் இந்தியா வந்த இரண்டு ஐரோப்பியப் பெண்களும் இந்த விழாவிற்கு வந்திருந்தனர். சுவாமிஜி அவர்களை அழைத்துச் சென்று புனிதமான பஞ்சவடியையும்,[2] வில்வ மரத்தையும்[3] காட்டினார்.

சீடர் இன்னும் சுவாமிஜியுடன் நெருங்கிப் பழகவில்லை என்றாலும் அவரைப் பின்தொடர்ந்து சென்று, அப்போது

---

1. இந்தக் கோயிலில்தான் ஸ்ரீராமகிருஷ்ணர் தமது வாழ்நாளின் முக்கியப் பகுதியைக் (1855-1885) கழித்தார்.

2. ஆல், அரசு, வில்வம், நெல்லி, அசோகம் என்னும் மரங்கள் நடப்பட்ட இடம். சாதனைகளுக்கு ஏற்ற இடமாக இது கருதப்படுகிறது. தட்சிணேசுவரத்திலுள்ள பஞ்சவடி, ஸ்ரீராமகிருஷ்ணர் சாதனைகள் செய்த இடம்.

3. தமது சாதனைகளுள் தேவி வழிபாடு சம்பந்தப்பட்டவையான தந்திர சாதனைகளை ஸ்ரீராமகிருஷ்ணர் இந்த மரத்தின் கீழ்தான் செய்தார்.

நடைபெற்றுக் கொண்டிருந்த ஸ்ரீராமகிருஷ்ணரின் விழாவைப் பற்றி சம்ஸ்கிருதத்தில் தாம் இயற்றிய பாடல் ஒன்றை அவரிடம் கொடுத்தார். பஞ்சவடியை நோக்கி நடந்தபடியே சுவாமிஜி அதைப் படித்தார். பின்னர் சீடரின் பக்கம் திரும்பி, 'பாடல் நன்றாக இருக்கிறது. இன்னும் இதுபோல் எழுது' என்றார்.

பஞ்சவடியின் ஒரு பக்கத்தில் ஸ்ரீராமகிருஷ்ணரின் இல்லறச் சீடர்கள் கூடியிருந்தனர். கிரீஷ் சந்திரகோஷும் இருந்தார். பெரிய கூட்டம் தன்னைச் சூழ்ந்துவர சுவாமிஜி கிரீஷ்பாபுவிடம் வந்து, 'ஓ! கிரீஷ்பாபு இங்கே இருக்கிறார்' என்று கூறி அவரை வணங்கினார். தாங்கள் அங்கே கழித்த பழைய நாட்களை நினைவுகூர்ந்தவாறே சுவாமிஜி கிரீஷிடம், 'கிரீஷ்பாபு, அந்த நாட்களையும் இந்த நாட்களையும் நினைத்துப் பாருங்கள். எவ்வளவு பெரிய மாற்றம்!' என்றார். கிரீஷ்பாபு சுவாமிஜியைப் போல் தாமும் அந்த நினைவுகளில் ஆழ்ந்தவராக, 'ஆம், உண்மைதான், இதைவிடப் பெரிய மாற்றங்களைக் காண மனம் ஏங்குகிறது' என்றார். சிறிதுநேர உரையாடலுக்குப் பிறகு சுவாமிஜி பஞ்சவடிக்கு வடகிழக்கில் நின்ற வில்வ மரத்தை நோக்கி நடந்தார்.

சுவாமிஜியிடமிருந்து ஒரு சொற்பொழிவைக் கேட்க ஒரு பெரிய கூட்டம் மிகுந்த ஆவலோடு நின்றிருந்தது. சுவாமிஜி பேசத் தொடங்கினார். அவர் எவ்வளவு உரக்கப் பேசினாலும் சுற்றியிருந்த மக்கள் எழுப்பிய கூச்சலால் அவரது குரல் அனைவருக்கும் கேட்கவில்லை. அதனால் சொற்பொழிவாற்றும் முயற்சியை விட்டுவிட்டு, தம்முடன் வந்த இரண்டு ஐரோப்பியப் பெண்களுக்கு ஸ்ரீராமகிருஷ்ணர் தவம் செய்த இடங்களைக் காண்பிக்கவும், ஸ்ரீராமகிருஷ்ணரின் சில பக்தர்களை அறிமுகம் செய்துவைக்கவும் அழைத்துச் சென்றார்.

பிற்பகல் மணி மூன்றைத் தாண்டியது. சுவாமிஜி சீடரிடம், 'நான் மடத்திற்குப் போக வேண்டும். ஒரு வண்டி கொண்டு வா' என்றார். சீடர் வண்டி கொண்டு வந்தார். சுவாமிஜி வண்டியின் ஒரு பக்கமும், சுவாமி நிரஞ்ஜனானந்தரும் சீடரும் மறு பக்கமும் உட்கார்ந்துகொள்ள வண்டி ஆலம்பஜார் மடத்தை நோக்கிச் சென்றது. வழியில் சுவாமிஜி சீடரிடம், 'வெறும் கருத்துக்களை மட்டும் வைத்துக்கொண்டு வாழ்வது முடியாது. இதுபோன்ற விழாக்களும் மற்றவையும் அவசியம். அப்போது தான் அந்தக் கருத்துக்கள் படிப்படியாக மக்களிடையே பரவும். இந்துக்கள் ஆண்டு முழுவதும் விழாக்களை வைத்திருப்பதைப்

பார். மதத்தின் பெரிய தத்துவங்களைப் படிப்படியாக மக்களின் மனத்தில் புகுத்துவதுதான் அவற்றின் ரகசியம். ஆனால் இந்த விழாக்களால் தீமையும் இருக்கவே செய்கிறது. பொதுவாக மக்கள் இந்த விழாக்களின் உட்பொருளை விட்டுவிட்டு வெறும் வெளிக் கொண்டாட்டங்களில் மூழ்கிவிடுகிறார்கள். விழாக்கள் முடிந்தபின் மறுபடியும் முன்போலவே ஆகிவிடுகிறார்கள். எனவே உண்மையான ஆன்மீகத்தையும் ஆன்ம ஞானத்தையும் மறைக்கின்ற திரையாக இந்த விழாக்கள் ஆகிவிட்டன என்பதும் உண்மைதான்.

'ஆனால், ''மதம்'', ''ஆன்மா'', என்பவற்றைச் சிறிதுகூடப் புரிந்துகொள்ள முடியாதவர்கள், இத்தகைய விழாக்கள் மூலமும் சடங்குகள் மூலமும் படிப்படியாக அந்த உண்மைகளை உணர்ந்துகொள்ள முயல்கிறார்கள். இன்றைய விழாவையே எடுத்துக்கொள். இதில் கலந்துகொண்டவர்கள் ஒருமுறை யாவது ஸ்ரீராமகிருஷ்ணரை நினைத்திருப்பார்கள். யார் பெய ரால் இவ்வளவு மக்கள் கூடுகிறார்கள், ஏன் கூடுகிறார்கள் என்ற எண்ணங்கள் அவர்கள் மனத்தில் தோன்றும். அந்த அளவு அவரைப்பற்றி நினைக்காதவர்கள்கூட ஆண்டுக்கு ஒரு முறை நடக்கும் இந்த விழாவில் நடக்கும் பக்திப் பாடல்களையும் ஆடலையும் கேட்பார்கள், காண்பார்கள். இல்லையென்றால் பிரசாதமாவது உண்பார்கள். ஸ்ரீராமகிருஷ்ணரின் பக்தர்களைக் காண்பார்கள். இது அவர்களுக்கு நன்மை செய்யுமே தவிர எவ்விதத் தீமையையும் செய்யாது.'

சீடர்: 'ஆனால் இந்த விழாக்களும் சடங்குகளுமே எல்லாம் என்று நினைப்பவர்கள் முன்னேறுவார்களா? அவர் களும் படிப்படியாக, சஷ்டி, மங்கள சண்டி போன்ற தேவதை களை வழிபடுகின்ற சாதாரண நிலைக்கு வந்துவிடுவார்கள். சாகும்வரை மக்கள் இத்தகைய சடங்குகளைப் பின்பற்று கிறார்கள். இந்தச் சடங்குகளின்மூலம் பிரம்மஞானத்தை அடையும் ஒருவரைக்கூடக் காண முடியவில்லையே!'

சுவாமிஜி: 'ஏன் காண முடியாது? இந்தியாவில் மகத்தான ஆன்மீக வீரர்கள் பிறந்தார்கள். அவர்கள் ஆன்மீகத்தின் உச்ச நிலைகளில் திளைக்க இவை கருவிகளாக இருக்கவில்லையா? இவற்றைப் பின்பற்றி ஆன்ம ஞானத்தைப் பெற்ற பின்னர் அவர்கள் இவற்றைப் பொருட்படுத்தவில்லை. எனினும் சமுதாயத்தின் சமச்சீர் நிலையைக் காப்பதற்காக அவதார புருஷர்கள்கூட இத்தகைய சடங்குகளைச் செய்கின்றனர்.'

சீடர்: 'ஆம். வெறும் தோற்ற அளவிலாவது அவர்கள் இந்தச் சடங்குகளைக் கடைப்பிடிக்க வேண்டும். பிரம்மத்தை அறிந்தவர்களுக்கு இந்த உலகம்கூட மாயவித்தையைப்போல் பொய்யாகிவிடுகிறது. அவர்களுக்கு இதுபோன்ற புறச் சடங்கு களைப் பின்பற்ற முடியுமா?'

சுவாமிஜி: 'ஏன் முடியாது? உண்மை என்ற கருத்துகூடப் பிறவற்றைச் சார்ந்ததுதானே! காலம், இடம் மற்றும் மனிதர் களுக்கு ஏற்ப மாறுவதுதானே! எனவே எல்லா சடங்குகளும் பலன் உள்ளவையே. மனிதனின் தகுதிகளுக்கு ஏற்ப அவை பலனைத் தரவே செய்கின்றன. இதையே ஸ்ரீராமகிருஷ்ணர், ''ஒரு தாய், பிள்ளைகளின் உடல்நிலைக்கேற்ப ஒரு மகனுக்கு மீன் வறுவலையும், இன்னொருவனுக்குக் கஞ்சியையும் கொடுக்கிறாள்'' என்று கூறுவார்.'

சுவாமிஜி கூறுவதன் கருத்தை உணர்ந்து சீடர் அமைதி யானார். வண்டி மடத்தை அடைந்தது. தாகத்தோடு இருந்த சுவாமிஜி மடத்திற்குள் சென்றதும் கொஞ்சம் தண்ணீர் அருந் தினார். பிறகு தாம் அணிந்திருந்த கோட்டைக் கழற்றிவிட்டு, கீழே விரிக்கப்பட்ட விரிப்பில் அமர்ந்து, தலையணையின்மீது சாய்ந்து ஓய்வெடுத்தார். சுவாமி நிரஞ்ஜனானந்தர் அவரது பக்கத்தில் அமர்ந்துகொண்டு, 'இதற்குமுன் எந்த ஆண்டு நடந்த விழாவிலும் இவ்வளவு கூட்டம் கூடியதில்லை. கல்கத்தா முழுவதுமே திரண்டு வந்ததுபோல் கூட்டம் இருந்தது' என்றார்.

சுவாமிஜி: 'ஆம், அது இயல்புதான். எதிர்காலத்தில் இன்னும் சிறப்பான நிகழ்ச்சிகள் நடக்கும்.'

சீடர்: 'சுவாமிஜி, ஒவ்வொரு மதப் பிரிவிலும் ஏதாவது ஒருவகையில் இத்தகைய விழாக்கள் நடக்கத்தான் செய்கின்றன. ஆனால் ஒரு பிரிவுடன் மற்றொன்று சேர்வது மட்டும் இல்லை. பரந்த நோக்குடைய முகமதிய மதத்தில்கூட ஷியா மற்றும் சுன்னி பிரிவினர் தங்களுக்குள் அடித்துக்கொள்வதை நான் டாக்காவில் கண்டேன்.'

சுவாமிஜி: 'பிரிவுகள் உள்ள இடங்களில் எல்லாம் இது ஏற்படவே செய்யும். ஆனால் நமது அடிப்படை உணர்ச்சி என்ன தெரியுமா? பிரிவினைவாதமற்ற நிலைதான். நம் பகவான் இதை உணர்த்துவதற்காகத்தான் பிறந்தார். அவர் அனைத்து உருவங்களையும் ஏற்றுக்கொண்டார். ஆனாலும் பிரம்மஞான நிலையிலிருந்து பார்க்கும்போது அவை அனைத்தும் வெறும் மாயை போன்றவை என்பார் அவர்.'

சீடர்: 'சுவாமிஜி, உங்கள் கருத்தை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. இத்தகைய விழாக்களை நடத்துவதன்மூலம் நீங்களும் ஸ்ரீராமகிருஷ்ணரை மையமாக வைத்து அவர் பெயரால் ஒரு மதப் பிரிவை உண்டாக்குகிறீர்களோ என்று எனக்குச் சிலவேளைகளில் தோன்றுகிறது. ஸ்ரீராமகிருஷ்ணர் எந்த மதப் பிரிவையும் சார்ந்தவர் அல்ல என்று நாகமகாசயரிடமிருந்து நான் கேட்டிருக்கிறேன். சாக்தம், வைணவம், பிரம்ம சமாஜம், முகமதிய மதம், கிறிஸ்தவ மதம் ஆகிய அனைத்திற்கும் மிகுந்த மரியாதை அளிப்பது அவரது வழக்கம்.'

சுவாமிஜி: 'எங்களுக்கும் எல்லா மதங்களிடமும் அப்படிப் பட்ட மரியாதை இல்லையென்பதா உன் எண்ணம்!'

இப்படிச் சொல்லிக்கொண்டே சுவாமிஜி, சுவாமி நிரஞ்ஜனானந்தரைக் கூப்பிட்டு, 'இந்த வங்காளி[1] என்ன சொல்கிறான், பார்' என்று கேலியாகச் சொன்னார்.

சீடர்: 'சுவாமிஜி, தயவுசெய்து உங்கள் கருத்து என்ன என்பதைப் புரியவையுங்கள்.'

சுவாமிஜி: 'நல்லது, நீ என் சொற்பொழிவுகளை நிச்சயமாகப் படித்திருக்க வேண்டும். அதில் எங்காவது நான் ஸ்ரீராமகிருஷ்ணரை மையமாக வைத்து எதையாவது உருவாக்கியிருக்கிறேனா? கலப்பற்ற உபநிடத மதத்தையே நான் உலகம் முழுவதும் பிரச்சாரம் செய்தேன்.'

சீடர்: 'அது உண்மைதான். உங்களுடன் நெருங்கிப் பழகியதில் நான் தெரிந்துகொண்டதெல்லாம் நீங்கள் உடல், பொருள், ஆவி அனைத்தையும் ஸ்ரீராமகிருஷ்ணருக்கு அர்ப்பணித்து விட்டீர்கள் என்பதையே. ஸ்ரீராமகிருஷ்ணர் கடவுளே என்பதை நீங்கள் புரிந்துகொண்டால் அதை ஏன் உலக மக்கள் அனைவருக்கும் சொல்லக்கூடாது?'

சுவாமிஜி: 'உண்மைதான். நான் புரிந்துகொண்டதையே உபதேசிக்கிறேன். அத்வைத வேதாந்தம்தான் மிகமிக உண்மையான நெறி என்று நீ அறிந்திருந்தால், நீ ஏன் அதை எல்லோருக்கும் உபதேசிக்கக் கூடாது?'

சீடர்: 'பிறருக்கு உபதேசம் செய்யுமுன் நான் உணர்ந்து அனுபவித்து இருக்க வேண்டும். நான் அத்வைதத்தைப் படித்திருப்பதோடு சரி.'

---

1. வங்காளி என்ற சொல்லைப் பொதுவாக கிழக்கு வங்காளிகளைக் கேலி செய்வதற்காக மேற்கு வங்க மக்கள் பயன்படுத்துவார்கள்.

சுவாமிஜி: 'நல்லது. முதலில் அனுபூதி பெறு; பிறகு பிரச்சாரம் செய். ஒவ்வொரு மனிதனும் தன் வாழ்க்கைக்கு ஆதாரமாக வைத்திருக்கும் நம்பிக்கைகளைப்பற்றி எதுவும் சொல்ல இப்போது உனக்கு உரிமை கிடையாது. ஏன், நீயும் அத்தகைய நம்பிக்கைகள் சிலவற்றைக் கடைப்பிடித்துதானே வாழ்கிறாய்.'

சீடர்: 'உண்மைதான். நான்கூடச் சிலவற்றில் நம்பிக்கை வைத்துதான் வாழ்கிறேன். ஆனால் நான் சாஸ்திரபூர்வமான வற்றையே நம்புகிறேன், சாஸ்திரங்களுக்கு எதிரான எதையும் ஏற்றுக்கொள்வதில்லை.'

சுவாமிஜி: 'சாஸ்திரம் என்று நீ எதைக் குறிப்பிடுகிறாய்? உபநிடதம் என்று நீ சொன்னால், ஏன் பைபிளும், செண்ட் அவஸ்தாவும்[1] அதிகாரபூர்வமானவையாக இருக்கக் கூடாது?'

சீடர்: 'அவை அதிகாரபூர்வமானவை என்றே எடுத்துக் கொண்டாலும், அவை வேதங்களைப் போன்று அவ்வளவு பழமையானவை அல்லவே! மேலும், ஆன்மாவைப் பற்றிய கொள்கை வேதங்களில்போல் வேறு எதிலும் அவ்வளவு உறுதி யாகச் சொல்லப்படவில்லை.'

சுவாமிஜி: 'நீ சொல்வதை நான் ஏற்றுக்கொண்டதாகவே வைத்துக்கொள்வோம். ஆனால் வேதங்களைத் தவிரப் பிறவற் றுள் உண்மை இல்லை என்று சொல்ல உனக்கு என்ன உரிமை இருக்கிறது?'

சீடர்: 'ஆமாம், உண்மைதான். வேதங்களில் மட்டும் அல் லாமல் மற்ற சாஸ்திரங்களிலும் உண்மை இருக்கலாம். அதற்கு எதிராக நான் ஒன்றும் சொல்லவில்லை. என்னைப் பொறுத்த வரை, நான் பின்பற்றி வாழ உபநிடதங்களையே தேர்ந்தெடுத் துள்ளேன். அவற்றிடம் எனக்கு மிக ஆழ்ந்த நம்பிக்கை இருக்கிறது.'

சுவாமிஜி: 'நீ அப்படியே செய். ஆனால் மற்றவர்கள்வேறு ஏதாவது சாஸ்திரங்களில் ''மிக ஆழ்ந்த'' நம்பிக்கை வைத்தால் அதையும் நீ அனுமதிக்க வேண்டும். அப்படி அனுமதித்தால் நாளடைவில் நீங்கள் இருவரும் ஒரே லட்சியத்தை அடைவதை நீயே காண்பாய். ''த்வமஸி பயஸாமர்ணவ இவ—ஆறுகள் வந்து விழுகின்ற கடல் போன்றவன் நீ'' என்று சிவமஹிம்ன ஸ்தோத்திரத்தில் கூறப்படுவதை நீ படித்ததில்லையா?'

---

1. பார்சிகளின் புனித நூல்.

## 5

ஆலம்பஜார் மடம், மே 1897

சுவாமிஜி இன்று சீடருக்கு தீட்சை தரவுள்ளார். எனவே சீடர் அதிகாலையில் ஆலம்பஜார் மடத்தை அடைந்தார். அவரைப் பார்த்ததும் சுவாமிஜி மிகுந்த மகிழ்ச்சியுடன் 'நீ வந்துவிட்டாயா? இன்றைக்கு நீ ''பலி''யாகப் போகிறாய். இல்லையா?' என்றார்.

சீடரிடம் இப்படிக் கூறிவிட்டு, புன்சிரிப்புடன் அருகில் இருந்தவர்களுடன் அமெரிக்கர்களைப்பற்றிப் பேச ஆரம்பித்தார். ஆன்மீக வாழ்க்கைபற்றியும் பேச்சு வந்தது. அப்போது, எப்படி ஒருமனதான பக்தி செலுத்துவது, எப்படி குருவிடம் ஆழ்ந்த நம்பிக்கையும் தீவிர பக்தியும் கொள்ள வேண்டும், அவருக்காக வாழ்க்கையையே எப்படி அர்ப்பணிக்க வேண்டும் என்பதைப் பற்றியெல்லாம் சுவாமிஜி பேசினார். பிறகு சீடரிடம் சில கேள்விகளைக் கேட்டு, அவருடைய உள்ளத்தைச் சோதிக்கத் தொடங்கினார்: 'ஆமாம், என்ன நேர்ந்தாலும், எதுவாக இருந்தாலும், என் கட்டளையை உன்னால் இயன்றவரை பின்பற்றி நடப்பாயா? உனது நன்மைக்காக, கங்கையில் குதிக்கவோ மாடியிலிருந்து குதிக்கவோ சொன்னால் சிறிது கூடத் தயக்கம் இல்லாமல் அவற்றைச் செய்வாயா? நினைத்துப் பார். உன் முடிவை மாற்றிக்கொள்ள இப்போதுகூட நேரம் இருக்கிறது. உணர்ச்சிவேகத்தில் என்னைக் குருவாக ஏற்றுக் கொள்ள அவசரப்படாதே.'

சுவாமிஜி கேட்ட இதுபோன்ற எல்லா கேள்விகளுக்கும் சீடர் தன் சம்மதத்தைத் தெரிவித்தார்.

சுவாமிஜி தொடர்ந்தார்: 'முடிவில்லாத பிறப்பு இறப்பு ஆகிய இந்த மாயைக்கு அப்பால் உன்னை அழைத்துச் செல்வதற்காக, கருணையுடன் உன் மன நோய்களை எல்லாம் அழிப்பவரே உண்மை குரு. பண்டைய நாட்களில் சீடன் கையில் சமித்துடன்[1] குருவின் ஆசிரமத்திற்குச் செல்வான். அவன் தகுதியானவன் என்று அவர் கண்டால், அவனுக்குத் தீட்சை அளித்து வேதங்களை உபதேசிப்பார். உடம்பு, மனம், சொல் ஆகிய மூன்றையும் அடக்க வேண்டும் என்பதற்காக, நூலை அவனது இடுப்பைச் சுற்றிக் கட்டுவார். அவன்

---

1. யாகம் செய்வதற்குத் தேவையான உலர்ந்த சுள்ளிகள்.

இதில்தான் கோவணத்தைக் கட்டிக் கொள்வான். பிற்காலத்தில் இதுவே பூணூல் அணியும் முறையாக மாறியது.'

சீடர்: 'சுவாமிஜி, அப்படியானால் பூணூல் அணிந்து கொள்ளும் பழக்கம் உண்மையாக வேதங்களில் உள்ள பழக்கம் இல்லையா?'

சுவாமிஜி: 'பூணூல் அணிவதுபற்றி வேதங்களில் எங்குமே குறிப்பிடப்படவில்லை. தற்கால ஸ்மிருதியை எழுதிய ரகுநந்தன பட்டாச்சாரியர்கூட ஓரிடத்தில், ''இந்த நிலையில் பூணூலை அணிந்துகொள்ள வேண்டும்'' என்று கூறுகிறார். கோபிலரின் கிருஹ்ய சூத்திரத்திலும் நூலால் செய்யப்பட்ட பூணூலைப் பற்றிப் பேசப்படவே இல்லை. முதல் வைதீகச் சடங்காகிய இது குருவின் முன்னிலையில் நடைபெறும் உபநயனம் என்று சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளது. ஆனால் நம் நாடு இப்போது அடைந்திருக்கும் பரிதாப நிலையைப் பார். சாஸ்திரங்களின் உண்மையான பாதையை விட்டு விலகி, வட்டார வழக்கங்களும் பெண்களின் பழக்கங்களும் நாட்டில் நிறைந்துவிட்டன. அதனால்தான் உன்னைப் பழங்கால சாஸ்திரங்களின் வழியில் நடக்கச் சொல்கிறேன். உன்னிடம் அளவற்ற நம்பிக்கையை வளர்த்துக் கொள். பிறகு அதனை நாட்டிற்கு வழங்கு. நசிகேதன் கொண்டிருந்தது போன்ற சிரத்தை உன் மனத்தில் இருக்கட்டும். வேண்டுமானால் அவனைப்போல் எமலோகத்திற்குச் செல்லவும் தயங்காதே. ஆன்ம ரகசியத்தை அறிவதற்காக, ஆன்ம முக்திக்காக, பிறப்பு இறப்பு என்னும் புதிருக்கு உண்மையான தீர்வைக் காண்பதற்காக நீ மரணத்தின் கொடிய பற்களுக்கு நடுவிலும் அச்சம் சிறிதும் இல்லாமல் செல்ல வேண்டும். அச்சமே மரணம். நீ எல்லா அச்சங்களையும் கடந்து செல்ல வேண்டும். எனவே இன்றிலிருந்து அச்சமற்றவனாக இரு.

'உனது முக்திக்காகவும் மற்றவர்களின் நன்மைக்காகவும் உயிரைக் கொடுக்கவும் தயாராக இரு. எலும்பாலும் தசையாலுமான இந்த மூட்டையைச் சுமந்து திரிவதால் என்ன பயன்? கடவுளுக்காகத் தன்னையே அர்ப்பணித்துக்கொள்ளும் தியாகத்தின் வடிவமான இந்த மந்திரத்தால் தீட்சை பெற்றுக் கொண்டு ததீசி முனிவரைப்போல், எலும்பாலும் தசையாலும் இந்த உடலைப் பிறரது நன்மைக்காக அர்ப்பணித்து விடு. வேத வேதாந்தங்களைப் படித்தவரும், பிரம்மத்தை அறிந்தவரும், மற்றவர்களை அச்சத்திற்கு அப்பால் அழைத்துச் செல்லும் ஆற்றல் பெற்றவராக இருப்பவரும் மட்டுமே உண்மையான

குரு என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. அத்தகையவர்கள் கிடைக்கும்போது எந்தவித யோசனையும் இன்றி அவர்களிடம் திட்சை வாங்கிக்கொள். இப்போதைய விஷயம் என்னதெரியுமா? ''குருடன் குருடனுக்கு வழிகாட்டுவது''தான்.'

பூஜையறையில் திட்சைச் சடங்கு முறையாக நடந்து முடிந்தது. முடிந்ததும் சுவாமிஜி, 'எனக்கு குருதட்சிணை கொடு' என்றார். சிடர், 'ஓ! நான் உங்களுக்கு எதைக்கொடுப்பது?' என்று கேட்டார். அதற்கு சுவாமிஜி, 'பழங்கள் வைத்துள்ள அறைக்குச் சென்று ஒரு பழத்தைக் கொண்டுவா' என்றார். உடனே சிடர் அந்த அறைக்கு ஓடிச் சென்று பத்துப்பன்னிரண்டு லிச்சிப் பழங்களைக் கொண்டு வந்தார். சுவாமிஜி அவற்றைச் சிடரின் கைகளிலிருந்து ஒவ்வொன்றாக வாங்கிச் சாப்பிட்டுக் கொண்டே, 'இப்போது உன் குருவிற்குக் காணிக்கை கொடுத்தாகிவிட்டது' என்றார்.

மடத்து பிரம்மச்சாரி ஒருவரும் (பின்னால் சுவாமி சுத்தானந்தர்) அன்று சிடருடன் திட்சை பெற்றார்.

சுவாமிஜி உணவு அருந்திவிட்டுச் சிறிதுநேரம் ஓய்வெடுக்கச் சென்றார்.

ஓய்விற்குப் பிறகு மேல்மாடி அறையில் வந்து சுவாமிஜி அமர்ந்தார். அவர் தனியாக இருப்பதைக் கண்ட சிடர் அவரிடம் சென்று, 'சுவாமிஜி, நன்மை, தீமை என்ற கருத்துக்கள் எப்படி, எங்கிருந்து வந்தன?' என்று கேட்டார்.

சுவாமிஜி: 'பன்மை என்ற கருத்திலிருந்தே இவை தோன்றின. மனிதன் ஒருமையை நோக்கி முன்னேறும் அளவிற்கு, நன்மை தீமை போன்ற முரணான கருத்துக்களின் அடிப்படையான ''நான்'', ''நீ'' என்னும் வேறுபாட்டு எண்ணங்கள் அழிந்துவிடும். ''இவன் என்னிலிருந்து வேறுபட்டவன்'' என்ற கருத்து தோன்றும்போது மற்ற எல்லா வேற்றுமைகளும் தோன்ற ஆரம்பிக்கின்றன. ஒருமையை முழுமையாக உணர்ந்தவனுக்கு எந்தவிதமான துயரமோ மாயையோ இருக்காது. ''தத்ர கோ மோஹ: க: சோக: ஏகத்வமனு பச்யத:—ஒருமையைக் காண்பவனுக்குத் துயரம் எங்கே? மயக்கம் எங்கே?'[1] எல்லாவித பலவீனங்களுமே பாவம்தான். பலவீனத்திலிருந்துதான் பொறாமை, குரோதம் முதலியவை தோன்றுகின்றன. அதனால் பலவீனம்தான் பாவம். உள்ளிருக்கும் ஆன்மா எப்போதும்

1. ஈசாவாஸ்ய உபநிடதம், 7.

ஒளிர்ந்துகொண்டிருக்கிறது. அந்த ஒளியிலிருந்து வேறு பக்கம் திரும்பிக்கொண்டு, இந்தத் தசையாலும் எலும்பாலுமான உடம்பை நாடியவாறு ''நான், நான், நான்'' என்று அடித்துக் கொள்கின்றனர். இதுதான் எல்லா பலவீனங்களுக்கும் அடிப் படை. இந்தப் பழக்கத்திலிருந்துதான் வியாவகாரிக[1] நோக்கு வாழ்க்கையில் தோன்றியது. இந்த இருமைக்கு அப்பால்தான் தனி உண்மை இருக்கிறது.'

சீடர்: 'அப்படியானால் இந்த வியாவகாரிக அனுபவம் உண்மை இல்லையா?

சுவாமிஜி: 'நான் என்னும் எண்ணம் இருக்கும்வரையில் அது உண்மை. இந்த ''நான்'' என்பதுதான் ஆன்மா, என்னும் அனுபூதி ஏற்பட்ட உடனே வியாவகாரிக உலகம் பொய்யாகி விடுகிறது. பாவம் என்று மக்கள் கூறுவது பலவீனத்தின் விளைவே; ''நான் இந்த உடல்'' என்னும் எண்ணத்தின் இன் னொரு வடிவமே. ''நான் ஆன்மா'' என்ற உண்மையில் மனம் உறுதியாக இருக்குமானால், நீ புண்ணியம்-பாவம், நன்மை-தீமை அனைத்தையும் தாண்டிச் செல்வாய். ''இந்த 'நான்' என்பது தொலைந்தால் எல்லா தொல்லைகளும் அழிந்து போகும்'' என்று ஸ்ரீராமகிருஷ்ணர் கூறுவார்.'

சீடர்: 'சுவாமிஜி, இந்த ''நான்'' கொல்ல முடியாததுபோல் அல்லவா உள்ளது! இதைக் கொல்வது மிகவும் கடினம்.'

சுவாமிஜி: 'அதைக் கொல்வது ஒருவகையில் கடினம்தான்; ஆனால் மற்றொரு வகையில் மிகவும் எளிது! இந்த ''நான்'' எங்கே இருக்கிறது என்பதை உன்னால் சொல்ல முடியுமா? ஒருபோதும் இல்லாத ஒன்றைக் கொல்வதைப்பற்றி நீ எப்படிப் பேச முடியும்? நான்-உணர்வு (Ego) என்னும் இந்தப் பொய் எண்ணத்தால் மனிதன் மனமயக்கத்தில் ஆழ்ந்துள்ளான். இந்த மனமயக்கப் பேய் நம்மைவிட்டுப் போகும்போது, நான் என்பது பற்றிய எல்லா கனவுகளும் மறைந்துவிடும். அதன்பிறகு, சிறு புல் முதல் பிரம்மாவரை எல்லாவற்றிலும் இருப்பது ஆன்மா

---

1. வியாவகாரிக உண்மை, பாரமார்த்திக உண்மை என்று உண்மையின் இரு நிலைகளை வேதாந்தம் பேசுகிறது. சூரியன் கிழக்கில் உதிக்கிறான், மேற்கில் மறைகிறான்—இது நம் ஒவ்வொருவரின் அன்றாட அனுபவம். இது வியாவகாரிக உண்மை. உண்மையில் சூரியன் உதிப்பதோ மறைவதோ இல்லை. இது பாரமார்த்திக உண்மை.

அதுபோல் உலகம் இப்போது நமக்கு எப்படித் தோன்றுகிறதோ அது வியாவகாரிக உண்மை. இறையனுபூதிக்குப் பின்தான் அதன் பாரமார்த்திக உண்மை தெரியவரும்.

மட்டுமே என்பது தெரியவரும். இதை அறிய வேண்டும்; அனுபூதியில் உணர வேண்டும். நாம் செய்யும் எல்லா வழிபாடுகளும் சாதனைகளும் இந்தத் திரையை நீக்குவதற்காகத்தான். திரை நீங்கும்போது தனி ஞானமாகிய சூரியன் தனது சொந்த ஒளியுடன் பிரகாசித்துத் திளைப்பதை நீ காண்பாய். ஆன்மா ஒன்றுதான் சுய ஒளி உடையது. ஆன்மாவை ஆன்மாவால்தான் உணர முடியும். தன்னாலேயே உணரப்பட வேண்டிய ஒன்றை மற்றொன்றின் உதவியால் எப்படி உணர முடியும்? அதனால் தான் வேதங்கள் ''விஜ்ஞாதாரமரே கேன விஜானீயாத்—அறிபவனை எதனால் அறிவது?''[1] என்று கூறுகின்றன. எதையெல்லாம் நீ அறிகிறாயோ அவற்றை உன் மனம் என்னும் கருவியின் மூலம்தான் அறிகிறாய். ஆனால் மனம் ஜடப்பொருள். தூய ஆன்மா பின்னால் இருப்பதால்தான் அது இயங்குகிறது. எனவே மனத்தால் ஆன்மாவை எப்படி அறிய முடியும்? நாம் அறிவதெல்லாம், மனமோ, ஏன், புத்தியோகூட ஆன்மாவை அடைய முடியாது என்பதுதான். அறிவின் எல்லை இதுதான். செயல்படுவதிலிருந்து அல்லது இயக்கத்திலிருந்து விடுபட்டதும் மனம் மறைந்துவிடுகிறது, அப்போது ஆன்மா வெளிப்படுகிறது. இந்த நிலையை உரையாசிரியரான சங்கரர், அபரோக்ஷானுபூதி—புலன்கடந்த அனுபவம் என்கிறார்.'

சீடர்: 'சுவாமிஜி, ''நான்'' என்பதே மனம்தான். அந்த மனம் போய்விட்டால், ''நான்'' என்பதும் இருக்க முடியாது.'

சுவாமிஜி: 'ஆம், அப்போதுள்ள நிலைதான் நான்-உணர்வின் உண்மையான இயல்பு. அந்த ''நான்'' எங்கும் நிறைந்ததாக, எல்லாவற்றிலும் பரவியதாக, எல்லாவற்றின் ஆன்மாவாக விளங்குகிறது. குடத்திற்குள் இருக்கும் வெளி (Space) குடம் நொறுக்கப்பட்டதும் மகா ஆகாசமாக, எங்கும் பரந்த வெளியாகிறது. குடம் உடைந்தபோது அதனுள் இருந்த வெளி அழியவில்லை. அதுபோல் உடம்பிற்குள் அடைபட்டிருப்பதாக நாம் நினைக்கின்ற இந்தச் சிறிய ''நான்'', எங்கும் நிறைந்த ''நான்'' ஆக, ஆன்மாவாக உணரப்படுகிறது. இத்தகைய ''நான்'' அல்லது ஆன்மாவிற்கு மனம் இருப்பதிலோ அழிந்து போவதிலோ என்ன கவலை இருக்கிறது? நான் சொல்வதை நீ நாளடைவில் உணர்வாய்; ''காலேனாத்மனி விந்ததி—உரிய காலத்தில் அது உணரப்படுகிறது.'' அதைப்பற்றிக் கேட்பதும்

---

1. பிருஹதாரண்யக உபநிடதம், 4. 5. 15

(சிரவணம்) சிந்திப்பதுமான (மனனம்) சாதனைகளில் ஈடுபடுந்தோறும், உரிய காலத்தில் இதை நீ பூரணமாக அறிந்துகொள்வாய். பிறகு மனத்தைக் கடந்து செல்வாய். அப்போது இத்தகைய கேள்விகளுக்கு இடம் இருக்காது.'

இதையெல்லாம் கேட்டவாறே சீடர் அமைதியாக உட்கார்ந்திருந்தார். சுவாமிஜி மெதுவாகப் புகைபிடித்தபடியே கூறினார்: 'இந்த எளிய விஷயத்தை விளக்குவதற்கு எத்தனை சாஸ்திரங்கள் எழுதப்பட்டிருக்கின்றன? ஆனாலும் மனிதர்கள் இதை உணர்ந்துகொள்ளத் தவறிவிட்டார்களே! விலை மதிப்பற்ற இந்த மனித வாழ்வை, சில காசுபணம், அழிந்து போகிற பெண்களின் அழகு என்று சிற்றின்பங்களுக்காக இப்படி வீணாக்குகிறார்களே! மகா மாயையின் சக்தி மிகவும் அற்புதமானது! அம்மா! ஓ, அம்மா!'

## 6

பாக்பஜார், 1 மே 1897

சுவாமிஜி, காலம் சென்ற பலராம்போஸின் வீட்டில் சில நாட்களாகத் தங்கி இருக்கிறார். அவரது விருப்பப்படி ஸ்ரீராமகிருஷ்ணரின் பக்தர்கள் ஏராளம் பேர் மாலை மூன்று மணிக்கு அங்கே கூடி இருந்தனர். சுவாமி யோகானந்தரும் இருந்தார். ஒரு சங்கத்தை அமைப்பதற்காக சுவாமிஜி இந்தக் கூட்டத்தைக் கூட்டியிருந்தார். வந்தவர்கள் தங்களுக்குரிய இடத்தில் அமர்ந்ததும் சுவாமிஜி பேசத் தொடங்கினார்:

'பல நாடுகளில் நான் பயணம் செய்ததன் விளைவாக, ஒரு கூட்டமைப்பு இல்லாமல் எந்த ஒரு பெரிய செயலும் செய்ய முடியாது என்ற எண்ணம் என் மனத்தில் வேரூன்றியிருக்கிறது. நம்முடையதைப் போன்ற ஒரு நாட்டில் ஜனநாயக அடிப்படையிலோ பொது வாக்களிப்பு முறையிலோ ஓர் அமைப்பை உடனடியாக ஆரம்பிப்பது நடைமுறையில் அவ்வளவு எளிதல்ல என்றே நான் எண்ணுகிறேன். இந்த விஷயத்தில் மேலை நாட்டினர் மிகுந்த பயிற்சி உடையவர்களாக இருக்கிறார்கள். பொறாமைக் குணமும் அவர்களிடம் நம்மைவிடக் குறைவாக இருக்கிறது. அவர்கள் திறமையை மதிக்கக் கற்றுக் கொண்டிருக்கிறார்கள். உதாரணமாக என் விஷயத்தையே எடுத்துக் கொள்ளுங்கள். அங்கே நான் ஊர்பேர் தெரியாத ஒருவன். என்றாலும் என்னை எவ்வளவு அன்போடு வரவேற்றார்கள், உபசரித்தார்கள்! நமது நாட்டிலும் பாமர மக்களிடம் கல்விபரவும்போது அவர்களிடம் அத்தகைய தாராள மனமும் அனுதாப உணர்வும்

வளரும்; தங்கள் மதப் பிரிவுகள் அல்லது கட்சிகள் என்ற குறுகிய வட்டத்திற்கு வெளியில் பார்க்கவும் சிந்திக்கவும் அவர்கள் கற்றுக்கொள்வார்கள். அப்போதுதான் ஜனநாயக ரீதியில் வேலை செய்வது சாத்தியமாகும். எனவே இப்போது ஆரம்பிக்கும் இந்த அமைப்பிற்கு, பூரண அதிகாரமுள்ள அதிகாரி ஒருவர் அவசியம். ஒவ்வொருவரும் அவரது கட்டளைக்குப் பணிய வேண்டும். அதன்பிறகு உரிய தருணம் வரும்போது பொது வாக்களிப்பு முறையில் அமைப்பை நடத்தலாம்.

'யாருடைய திருப் பெயரால் நாங்கள் துறவற வாழ்க்கையை மேற்கொண்டிருக்கிறோமோ, யாரை லட்சியமாக ஏற்று, இல்லற வாழ்க்கை என்னும் உங்கள் நிலையில் இருந்தவாறே செயல்களத்தில் நீங்கள் பாடுபட்டுக் கொண்டிருக்கிறீர்களோ, மறைந்த இருபது ஆண்டுகளுக்குள்ளேயே யாருடைய புனிதமான பெயரும் அசாதாரண வாழ்வும் மேலை மற்றும் கீழை நாடுகள் முழுவதும் அற்புதமாகப் பரவிக் கொண்டிருக்கிறதோ அவரது பெயராலேயே இந்தச் சங்கத்தை அமைப்போம். நாங்கள் அந்தப் பிரபுவின் தாசர்கள். நீங்கள் எல்லோரும் இந்தப் பணியில் உதவுபவர்களாக இருங்கள்.'

அங்குக் கூடியிருந்த கிரீஷ் சந்திரகோஷும், ஸ்ரீராமகிருஷ்ணரின் மற்ற இல்லற பக்தர்களும் இந்தக் கருத்தை ஏற்றுக் கொண்டார்கள். பிறகு சங்கத்தின் எதிர்காலத் திட்டங்கள் விவாதத்திற்காக எடுத்துக் கொள்ளப்பட்டது. சங்கத்திற்கு 'ராமகிருஷ்ண மிஷன்' என்று பெயரிடப்பட்டது.

அதன் குறிக்கோள் முதலானவை கீழ்க்கண்டவாறு வரையறுக்கப்பட்டன:

**குறிக்கோள்:** மனிதகுல நன்மைக்காக ஸ்ரீராமகிருஷ்ணர் எந்த உண்மைகளைப் போதித்தாரோ, அவரது பெருவாழ்வில் எந்த உண்மைகள் செயல்முறை விளக்கம் பெற்றனவோ அந்த உண்மைகளைப் பிரச்சாரம் செய்தல். உடல்ரீதியாக, மனரீதியாக, ஆன்மீகரீதியாக மனிதனுக்கு எது உன்னதியைத் தருமோ, அந்த வகையில் அவனுக்கு உதவுதல்.

**அடிப்படை:** உலகில் எத்தனை மதங்கள் உள்ளனவோ, அவையனைத்தும் அழிவற்ற ஒரே சனாதன மதத்தின் வெவ்வேறு வடிவங்களே என்று கண்டு, அனைத்து மதத்தினருக்கும் இடையில் நல்லுறவை நிலைநிறுத்த ஸ்ரீராமகிருஷ்ணர் போதித்ததைச் செயல்படுத்தல்.

**செயல்முறை:** மக்களின் லௌகீக மற்றும் ஆன்மீக உன்னதிக்கான கல்வி தரவல்லவர்களை உருவாக்குதல், சிற்பம் மற்றும் அதுபோன்ற கலைகளில் மக்களுக்கு ஆர்வத்தை வளர்த்தல். வேதாந்தம் மற்றும் பல்வேறு நெறிகள் ஸ்ரீராமகிருஷ்ணரின் பெருவாழ்வில் எவ்வாறு விளக்கம் பெற்றனவோ, அதனை மனித குலத்திற்கு எடுத்துக்கூறுதல்.

**இந்தியப் பணி:** இந்தியாவின் நகரந்தோறும் சென்று கல்வி கற்பிக்க விழைகின்ற இல்லறத்தார் மற்றும் துறவியரின் கல்விக்கான ஆசிரமங்களை அமைத்தல்; அவர்கள் நாடுதோறும் சென்று மனித சமுதாயத்திற்குக் கல்வி அளிப்பதற்கான வழி முறைகளை வகுத்தல்.

**வெளிநாட்டுப் பணி:** இவ்வாறு பயிற்சி பெற்றவர்களை வெளிநாட்டிற்கு அனுப்பி அங்கே ஆசிரமங்களை உருவாக்குதல்; அந்த ஆசிரமங்களை இந்திய ஆசிரமங்களுடன் நெருங்கிய தொடர்புகொள்ளச் செய்தல்; புதிய பல ஆசிரமங்களை நிறுவுதல்.

சுவாமிஜி சங்கத்தின் பொதுத் தலைவரானார். மற்ற அலுவலர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஞாயிறுதோறும் மாலை நான்கு மணிக்கு பலராம்போசின் வீட்டில் கூட்டம் நடத்த வேண்டும் என்று முடிவுசெய்யப்பட்டது. நேரம் கிடைத்தபோதெல்லாம் இந்தக் கூட்டங்களில் சுவாமிஜி கலந்து கொண்டார்.

அன்றைய கூட்டம் முடிந்து எல்லோரும் அங்கிருந்து சென்றதும் சுவாமிஜி சுவாமி யோகானந்தரிடம், 'இப்போது இவ்வாறு வேலை தொடங்கிவிட்டது. ஸ்ரீராமகிருஷ்ணரின் திருவுளத்தால் இது எந்த அளவிற்கு வெற்றி பெறுகிறது என்பதைப் பார்ப்போம்' என்றார்.

சுவாமி யோகானந்தர்: 'நீங்கள் மேலைநாட்டு முறையில் இதையெல்லாம் செய்கிறீர்கள். ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசம் இப்படியா இருந்தது?'

சுவாமிஜி: 'இவையெல்லாம் ஸ்ரீராமகிருஷ்ணரின் கருத்தின்படி நடப்பவை அல்ல என்று நீ எப்படிச் சொல்ல முடியும்? அளவற்ற கருத்துக்களின் இருப்பிடமான அவரை உன் குறுகிய கண்ணோட்டத்திற்குள் அடக்க எண்ணுகிறாயா? அப்படி ஏதாவது செய்தால் அதையெல்லாம் நொறுக்கித்தள்ளி அவரது எல்லையற்ற கருத்துக்களை இந்த உலகம் முழுவதும் பரப்புவேன். தம்மை வழிபடும்படி அவர் என்னிடம் கூறியதே

இல்லை. அவர் நமக்கு விட்டுச்சென்ற சாதனை, பக்தி, மன ஒருமைப்பாடு, தியானம் இதுபோன்ற உயர்ந்த கொள்கைகளையும் உண்மைகளையும் அனுபவபூர்வமாக உணர்ந்து, அவற்றை எல்லோருக்கும் உபதேசிக்க வேண்டும். கணக்கில் அடங்காத மதப் பிரிவுகள் அனைத்துமே ஒவ்வொரு பாதைகள்தான். ஏற்கனவே பிரிவுகளால் நிறைந்திருக்கும் இந்த உலகத்தில் மற்றுமொரு மதப் பிரிவை உண்டாக்குவதற்காக நான் பிறக்கவில்லை. குருதேவரின் திருவடிகளில் தஞ்சம் கிடைத்த நாம் பேறு பெற்றவர்கள். அவரது உபதேசங்களை மூன்று உலகங்களிலும் வாழ்பவர்களிடம் பரப்புவதற்காகவே நாம் பிறந்திருக்கிறோம்.'

சுவாமி யோகானந்தர் மறுத்து ஒரு வார்த்தையும் பேசவில்லை. சுவாமிஜி தொடர்ந்தார்:

'நான் அவரது பேரருளை நிதர்சனமாக என் வாழ்வில் பலமுறை பெற்றுள்ளேன். என் பின்னால் நின்று, என்மூலம் அவரே இந்த எல்லா வேலைகளையும் செய்கிறார். பசிக்குக் கவளம் உணவின்றி மரத்தின் அடியில் கிடந்தபோதும், கோவணத்திற்குக் கூட ஒருசிறு துணி இல்லாமல் இருந்த போதும், கையில் காசில்லாமல் உலகத்தையே சுற்றிவர முடிவு செய்தபோதும், அவரது பேரருளால் ஒவ்வொன்றிலும் எனக்கு உதவிகள் கிடைத்தன. அதன்பின்பு சிகாகோ நகரின் தெருக்களில் இந்த விவேகானந்தனைக் காணக் கூட்டம் முட்டி மோதிக் கொண்டு அலைஅலையாக வந்த காலத்திலும் அவரது கருணையை நான் பெற்றிருந்ததால்தான் அந்த மரியாதைகளையும் புகழையும் சிறிதும் சிரமமின்றித் தள்ளிவைக்க என்னால் முடிந்தது. அந்தப் புகழிலும் பெருமையிலும் நூறில் ஒரு பங்கைப் பெற்றால் போதும், சாதாரண மனிதன் நிலைகுலைந்து போவான். அவரது அருளால்தான் நான் சென்ற இடங்களில் எல்லாம் வெற்றி என் பின்னே வந்தது. இப்போது இந்த நாட்டிற்கு ஏதாவது செய்ய வேண்டும். எனவே உங்கள் சந்தேகங்களை எல்லாம் தூர எறிந்துவிட்டு என் பணியில் உதவுங்கள். அவரது விருப்பத்தால் எல்லாம் நிறைவு பெறுவதை நீங்கள் காண்பீர்கள்.'

சுவாமி யோகானந்தர்: 'ஆம், நீங்கள் நினைப்பதுபோலவே நடக்கட்டும்! இதுவரை நாங்கள் உங்களுக்குப் பணிந்து நடக்கவில்லையா? ஸ்ரீராமகிருஷ்ணர் உங்கள்மூலம் இவற்றையெல்லாம் செய்கிறார் என்பதை அவ்வப்போது நான் தெளிவாகக்

காண்கிறேன். எனினும், நான் மனம்விட்டுச் சொல்வதானால், அடிக்கடிச் சந்தேகம் வந்துவிடுகிறது. ஏன் தெரியுமா? நாங்கள் பார்த்தவரையில், இந்த வேலைகள் அவர் செய்துவந்த செயல்களிலிருந்து மாறுபட்டனவாக உள்ளன! அதனால்தான் அவரது பாதையிலிருந்து மாறாமல் இருக்கிறோமா என்று என்னுள் கேட்டுக்கொள்கிறேன். அதனால்தான் இப்படி எதிர்நிலையில் நின்று உங்களை எச்சரிக்கிறேன்.'

சுவாமிஜி: 'இதோ பார்! உண்மை என்னவென்றால் சாதாரண பக்தர்கள் எவ்வளவு புரிந்துகொண்டார்களோ, அந்த கருத்துக்களுக்குள் அப்படியே அடங்குபவரல்ல ஸ்ரீராமகிருஷ்ணர். அவர் எண்ணற்ற கருத்துக்களின் இருப்பிடம். பிரம்ம ஞானத்தின் எல்லையைக்கூட ஒருவேளை அளவிட்டு விடலாம். ஆனால் ஸ்ரீராமகிருஷ்ணரின் கருத்துக்களுடைய எல்லையை மட்டும் அளவிடுதல் முடியாத காரியம். அவரது அருட்பார்வையின் ஒரு வீச்சில் லட்சக்கணக்கான விவேகானந்தர்கள் இப்போதுகூடத் தோன்ற முடியும். ஆனால் அப்படிச் செய்யாமல் தமது காரியங்களைச் செய்து முடித்துக்கொள்ள என்னையே தனிக்கருவியாகத் தேர்ந்து எடுத்திருக்கிறார். இந்த விஷயத்தில் நான் என்ன செய்ய முடியும்? நீயே சொல்.'

இப்படிச் சொல்லிவிட்டு சுவாமிஜி வேறொரு காரியத்திற்காக வெளியே சென்றார். சுவாமி யோகானந்தர் சுவாமிஜியைப் பற்றிய பல்வேறு விவரங்களைச் சீடரிடம் கூறினார்.

சுவாமிஜி திரும்பி வந்து சீடரிடம், 'உங்கள் பக்கங்களில்[1] மக்கள் ஸ்ரீராமகிருஷ்ணரைப்பற்றி அதிகமாக அறிந்துள்ளார்களா?' என்று கேட்டார்.

சீடர்: 'ஒரே ஒருவர், நாகமகாசயர் மட்டும்தான் எங்கள் பகுதியிலிருந்து ஸ்ரீராமகிருஷ்ணரிடம் வந்தார். அவர் மூலம் தான் எங்கள் பகுதியில் பலர் ஸ்ரீராமகிருஷ்ணரைப்பற்றிக் கேள்விப்பட்டனர்; அவரைப்பற்றி மேலும் அறிய வேண்டும் என்ற ஆர்வம் கொண்டனர். ஆனால் ஸ்ரீராமகிருஷ்ணர் கடவுளின் அவதாரம் என்பதை மக்கள் இன்னும் அறிந்து கொள்ளவில்லை; அப்படிச் சொன்னால் சிலர் நம்பாமலும் போகலாம்.'

சுவாமிஜி: 'அப்படி நம்புவது எளிதானது என்றா நினைக்கிறாய்? நாங்கள் அவருடன் நேரில் பழகியிருக்கிறோம், அவரது

---

1. கிழக்கு வங்காளம்.

வாயாலேயே அந்த உண்மையைத் திரும்பத்திரும்பக் கேட்டுள்ளோம், இருபத்துநான்கு மணி நேரமும் அவருடன் தங்கினோம், வாழ்ந்தோம். எங்களுக்கே அவரைப் பற்றிய சந்தேகம் அடிக்கடி எழுகிறது. அப்படி இருக்கும்போது மற்றவர்களைப் பற்றி என்ன சொல்ல முடியும்?'

சீடர்: 'தாம் பரிபூரணமான பகவான் என்று ஸ்ரீராமகிருஷ்ணர் எப்போதாவது தாமே சொன்னதுண்டா?'

சுவாமிஜி: 'ஆம்! பலமுறை அவர் சொல்லியிருக்கிறார்; எங்கள் அனைவரிடமும் சொல்லியுள்ளார். இறுதி நாட்களில் அவர் காசிப்பூரில் தங்கியிருந்தார். உயிர் பிரிந்துவிடலாம் என்னும் அபாயகரமான நிலையில் ஒருநாள் நான் அவரது படுக்கையின் அருகில் இருந்தேன். அப்போது என் மனத்திற்குள், ''நல்லது, இந்த நிலையிலும் நீங்கள் உங்களைக் கடவுள் என்று சொல்வீர்களானால் நான் அதை நம்புவேன்'' என்று எண்ணினேன். இது அவர் காலமாவதற்கு இரண்டு நாட்களுக்கு முன்புதான் நடந்தது. படுக்கையில் படுத்துக்கிடந்த அவர் திடீரென்று விழித்து என்னைப் பார்த்து, ''யார் ராமனோ, யார் கிருஷ்ணனோ அவரே இப்போது இந்த உடம்பில் ராமகிருஷ்ணராக இருக்கிறார். உன் வேதாந்தக் கருத்தின்படி[1] அல்ல'' என்றார். நான் திகைத்துவிட்டேன். அப்படி பகவானின் திருவாய்மூலம் திரும்பத்திரும்பக் கேட்டும்கூட அவர் அவதார புருஷர் என்பதில் எங்களுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. எங்கள் மனத்திலும் சந்தேகமும் சஞ்சலமும் தலை தூக்கிக் கொண்டுதான் இருக்கின்றன. எங்கள் நிலையே இதுவானால் மற்றவர்களைப்பற்றிச் சொல்ல என்ன இருக்கிறது? நம்மைப் போன்ற உடம்பை உடைய ஒரு மனிதரைக் கடவுள் என்று கூறுவதும் நம்புவதும் கடினமான விஷயம். நிறை மனிதர், பிரம்மஞானி என்றெல்லாம் அழைக்கலாம், நினைக்கலாம். மகான் என்று சொல், பிரம்மஞானி என்று சொல், அது பெரிய விஷயம் அல்ல. ஆனால் ஸ்ரீராமகிருஷ்ணரைப் போல் ஓர் உத்தம மனிதர் இதுவரை பூமியில் தோன்றியதே இல்லை. காரிருள் சூழ்ந்த இந்த உலகத்தில் இந்த மாமனிதர் கலங்கரை விளக்கமாக இன்று ஒளிர்கிறார். அவரது

---

1. பிரம்ம ஞானிகள் மனு முதலிய யாருடனும் தங்களை ஒன்றுபடுத்திக் கூறலாம் என்று பிருஹதாரண்யக உபநிடதம் (1.4.10) கூறுகிறது. தாம் கூறியது அந்த வகையில் அல்ல, தம்மிடம் தனிச்சிறப்பு உள்ளது என்பதே குருதேவர் கூறியதன் கருத்தாகும்.

ஒளியால் மட்டுமே இப்போது மனிதர்கள் சம்சாரமாகிய கடலைக் கடக்க முடியும்.'

சீடர்: 'சுவாமிஜி, நேராகப் பார்க்காமலோ கேட்காமலோ உண்மை நம்பிக்கை வராது என்றே எனக்குத் தோன்றுகிறது. மதுர்பாபு குருதேவரைப்பற்றி எத்தனையோ அற்புத நிகழ்ச்சிகளை[1] நேரில் கண்டதாக நான் கேள்விப்பட்டு இருக்கிறேன். அதனால்தான் அவர் குருதேவரிடம் அத்தகைய நம்பிக்கை வைத்திருந்தார்.'

சுவாமிஜி: 'நம்பிக்கையற்றவன் கண்டாலும் நம்ப மாட்டான்; அதை மனத்தின் பிரமை அல்லது கனவு அல்லது வேறு என்னவோ ஒன்று என்று நினைப்பான். கிருஷ்ணரின் விசுவரூப தரிசனத்தை[2] துரியோதனனும் பார்த்தான், அர்ஜுனனும் பார்த்தான். அர்ஜுனன் நம்பினான், துரியோதனன் மாயவித்தை என்று நினைத்தான். கடவுளே உணர்த்தாமல் நாம் எதையுமே உணர முடியாது. பார்க்காமலோ கேட்காமலோகூடச் சிலருக்கு முழு நம்பிக்கை ஏற்பட்டுவிடுகிறது. பன்னிரண்டு வருடங்களாக அற்புதக் காட்சிகளைப் பெற்றும் சந்தேகத்தில் மூழ்கிக் கிடப்பவர்களும் உண்டு. அவரது அருளே சாரம். ஆனால் அருளைப் பெற இடைவிடாத முயற்சி வேண்டும்.'

சீடர்: 'சுவாமிஜி இந்த அருளைப் பெறுவதுபற்றி ஏதாவது நியதி இருக்கிறதா?'

சுவாமிஜி: 'உண்டு என்றும் சொல்லலாம், இல்லை என்றும் சொல்லலாம்.'

சீடர்: 'அது எப்படி?'

சுவாமிஜி: 'உடல், மனம், பேச்சு முதலியவற்றில் புனிதமானவர்கள், ஆழ்ந்த பக்தி உடையவர்கள், உண்மை உண்மையற்றதுபற்றி ஆராய்பவர்கள், கடவுளின் சிந்தனையிலும் தியானத்திலும் விடாமுயற்சியுடன் இருப்பவர்கள்—இவர்களுக்கு மட்டுமே இறையருள் கிடைக்கும். ஆனால் கடவுள் இயற்கையின் எல்லா நியதிகளுக்கும் அப்பாற்பட்டவர், எந்தச் சட்டதிட்டங்களுக்கும் உட்படாதவர். ஸ்ரீராமகிருஷ்ணர் கூறுவதுபோல், குழந்தையின் இயல்பு கொண்டவர் அவர். ஆதலால்தான் சிலர் பல்லாயிரம் பிறவிகளாக அவரைப்

---

1. விரிவாக அறிய 'குருதேவர் ஸ்ரீராமகிருஷ்ணர்' 2. 172–174 (வெளியீடு: ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை 4) பார்க்க.

2. பிரபஞ்சம் முழுவதும் தாமே நிறைந்திருப்பதைக் கிருஷ்ணர் காட்டியது. பார்க்க: கீதை, அத்தியாயம் 11.

பிரார்த்தித்திருந்தாலும் எந்தவிதப் பயனையும் பெறவில்லை. அதேவேளையில் பாவிகள், செய்த பாவத்திற்கு வருந்துபவர்கள், நாத்திகர்கள் என்றெல்லாம் நாம் கூறும் ஒருவருக்குக் கணப் பொழுதில் ஞான ஒளி கிடைத்துவிடுகிறது. அவர் கேட்காமலே இறையருள் அவர்மீது பொழிந்துகொண்டே இருக்கிறது. இவர்கள் முற்பிறவியில் புண்ணியங்கள் செய்து சேர்த்து வைத் திருந்தார்கள் என்று நீ சொல்லலாம். ஆனால் இந்த ரகசியத் தைப் புரிந்துகொள்வது கடினம். ஸ்ரீராமகிருஷ்ணர் சில வேளைகளில், ''நீ கடவுளைத் தஞ்சமடை. காற்றில் அகப்பட்ட சருகைப்போல் அவனை நம்பியிரு'' என்று சொல்வதுண்டு. இன்னும் சிலவேளைகளில், ''இறைவனின் அருளாகிய காற்று எப்போதும் வீசிக் கொண்டிருக்கிறது. நீ செய்ய வேண்டிய தெல்லாம் உன் படகின் பாயை விரிக்க வேண்டியதுதான்'' என்பார்.'

சீடர்: 'சுவாமிஜி, இது மிகவும் கடினமான விஷயம். எந்த ஆராய்ச்சியும் இங்குச் செல்லாது என்று நினைக்கிறேன்.'

சுவாமிஜி: 'எல்லா பகுத்தறிவும் வாதங்களும் மாயையின் எல்லைக்குள் இருப்பவை; காலம், இடம், காரணகாரிய நியதி இவற்றின் கட்டுப்பாட்டில் இருப்பவை. கடவுளோ இவை அனைத்திற்கும் அப்பால் இருக்கிறார். நாம் அவருடைய நியதி யைப்பற்றிப் பேசுகிறோம். அவரோ எல்லா நியதிகளுக்கும் அப்பால் இருக்கிறார். இயற்கை விதிகள் என்று நாம் கூறும் அனைத்தையும் படைத்து, தாமே அவையாகி நிற்கிறார்; எனினும் அவற்றிற்கு அப்பாலாகியும் நிற்கிறார். அவரது அருளைப் பெறுபவன் அந்த வினாடியே எல்லா நியதிகளையும் கடந்துபோகிறான். அவரது அருளுக்கு நியதியில்லை என்பது இதனால்தான். அருள் என்பது அவரது விளையாடல், இந்தப் படைப்பே அவரது விளையாடல்தான். ''லோகவத் து லீலா கைவல்யம்—மனிதர்களின் விளையாட்டுபோல் இதுவும் அவ ரது வேடிக்கையான விளையாட்டே.''[1] இந்த உலகங்களையே விளையாட்டுபோல் படைக்கவும் அழிக்கவும் செய்பவரால், ஒரு கொடிய பாவியிடம் அருள்கொண்டு அவனுக்கு முக்தி அளிப்பது முடியாத காரியமா என்ன? ஆனால் சிலரைக் கடுமை யான சாதனைகள் புரியவைக்கிறார், சிலரை அதில்லாமல் செய்கிறார்—எல்லாம் அவரது விளையாடல், அவரது சித்தம்.'

1. பிரம்ம சூத்திரம், 2. 1. 33.

சீடர்: 'சுவாமிஜி, என்னால் இதைப் புரிந்துகொள்ள முடியவில்லை.'

சுவாமிஜி: 'புரிந்தால் மட்டும் என்ன சாதித்து விடுவாய்? முடிந்தவரை மனத்தை அவரிடம் வை. அதைச் செய்தாயானால், இந்த உலகம் என்னும் மாயவித்தை தானாகவே கலைந்துவிடும். அதற்கு விடாமுயற்சியுடன் போராட வேண்டும். மனத்தைக் காமம் மற்றும் பண ஆசைகளிலிருந்து விடுவிக்க வேண்டும். உண்மை, உண்மையற்றது குறித்து ஆராய்ச்சி செய்ய வேண்டும். ''நான் இந்த உடம்பு அல்ல'' என்ற எண்ணத்துடன் உடம்பற்ற நிலையில் இருக்க வேண்டும்; ''எங்கும் நிறைந்த ஆன்மாவே நான்'' என்பதை அனுபவத்தில் உணர வேண்டும். இத்தகைய இடையறாத முயற்சிதான் புருஷகாரம் எனப்படுகிறது. இதனால் கடவுளிடம் உண்மையான நம்பிக்கை உண்டாகும். அதுதான் மனித முயற்சியின் குறிக்கோள்.'

சிறிதுநேர மௌனத்திற்குப் பிறகு சுவாமிஜி தொடர்ந்து பேசினார்: 'உன்மீது அவரது அருள் இல்லாவிட்டால் நீ இந்த இடத்திற்கு எப்படி வந்திருக்க முடியும்? ''கடவுளின் அருளைப் பெற்றவர்கள் இங்கு வந்தே தீரவேண்டும். அவர்கள் எங்கே இருந்தாலும், எந்தக் காரியங்களைச் செய்து கொண்டிருந்தாலும், இந்த இடத்தின் (எனது) வார்த்தைகளாலும் எண்ணங்களாலும் கவரப்பட்டேயாக வேண்டும்'' என்று ஸ்ரீராமகிருஷ்ணர் சொல்வது வழக்கம். உன் விஷயத்தையே எடுத்துக்கொள்ளேன். இறையருளால் நிறைநிலை அடைந்துள்ள, இறையருள் என்பதை உண்மையாக உணர்ந்துள்ள நாகமகாசயரின் தொடர்பு, இறையருள் இல்லாமல் உனக்குக் கிடைத்தது என்று நினைக்கிறாயா? ''அனேக ஜன்ம ஸம்ஸித்தஸ்ததோ யாதி பராம் கதிம்—ஒருவன் பல பிறவிகளில் தொடர்ந்த முயற்சியின் மூலமே மிக உயர்ந்த நிலையை அடைகிறான்.''[1] பல பிறவிகளின் நல்வினை காரணமாக மட்டுமே ஒருவருக்கு இத்தகைய மகானின் தொடர்பு கிடைக்கும். சாஸ்திரங்கள் கூறுகின்ற உயர்ந்த பக்தியின் எல்லா அறிகுறிகளும் நாகமகாசயரிடம் தாமாகவே வெளிப்பட்டிருக்கின்றன. ''த்ருணாதபி ஸுநீசேன—புல்லைவிடத் தாழ்ந்தவன்''[2] என்னும் பணிவு நிறைநிலையில் இருப்பதை நாங்கள் அவரிடம்தான்

1. கீதை, 6. 45.
2. ஸ்ரீசைதன்யர் இயற்றிய சிக்ஷாஷ்டகத்திலிருந்து.

காண்கிறோம். நாகமகாசயரின் திருவடி பட்டதால் கிழக்கு வங்காளமே ஆசீர்வதிக்கப்பட்டுவிட்டது.'

இவ்வாறு பேசியபடியே சுவாமிஜி மகா கவிஞரான கிரீஷ்சந்திர கோஷைக் காணப் புறப்பட்டார். சுவாமி யோகானந்தரும் சீடரும் அவருடன் சென்றனர். கிரீஷ்சந்திரரின் வீட்டிற்குச் சென்றதும் உட்கார்ந்துகொண்டு சுவாமிஜி கூறினார்: 'ஜி. சி[1], இதைச் செய்ய வேண்டும், அதைச் செய்ய வேண்டும், ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசத்தை உலகம் முழுவதும் பரப்ப வேண்டும் என்னும் உத்வேகமும் எழுச்சியும் இப்போதெல்லாம் என் மனத்தில் எழுந்துகொண்டே இருக்கின்றன. ஆனால் இதன் விளைவாக இந்தியாவில் இன்னொரு மதப் பிரிவு தோன்றிவிடுமோ என்று அஞ்சுகிறேன். எனவே மிகுந்த எச்சரிக்கையோடு நான் செயல்பட வேண்டியுள்ளது. சில வேளைகளிலோ, அப்படி ஒரு மதப் பிரிவு தோன்றினால் தோன்றட்டும் என்றும் நினைக்கிறேன். ஆனால் மீண்டும், அப்படி எதுவும் நேரக் கூடாது என்ற எண்ணம் தோன்றுகிறது. ஸ்ரீராமகிருஷ்ணர் யாருடைய கருத்தையோ நம்பிக்கையையோ குலைத்ததில்லை. சமநோக்கே அவரது கருத்தாக இருந்தது—இத்தகைய எண்ணங்களால் என்னை நான் கட்டுப்படுத்திக் கொள்கிறேன். நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'

கிரீஷ்பாபு: 'நான் என்ன சொல்ல முடியும்? நீங்கள் அவரது கருவி. அவர் எப்படிச் செய்ய நினைக்கிறாரோ, அப்படித்தான் உங்களால் செய்ய முடியும். விளக்கங்களைப் பற்றியெல்லாம் நான் பெரிதாகக் கவலைப்படவில்லை. ஆனால் ஸ்ரீராமகிருஷ்ணரின் சக்தி உங்கள்மூலம் செயல்படுகிறது என்பதை மட்டும் வெட்டவெளிச்சமாக நான் காண்கிறேன்.'

சுவாமிஜி: 'நம் சொந்த விருப்பப்படி வேலை செய்வதாகத் தான் நான் நினைக்கிறேன். ஆனால் துரதிர்ஷ்டமான நேரங்களில், எதிர்ப்புகள் ஏற்படும்போது, தேவைகளும் வறுமையும் துன்புறுத்தும்போது உண்மையான பாதையில் செல்ல அவர் வழிகாட்டுகிறார். இதை என்னால் அறிய முடிகிறது. ஆனாலும் அவரது மகிமையைச் சிறிதும் புரிந்துகொள்ளத் தவறி விடுகிறேன்.'

கிரீஷ்பாபு: 'ஆம், நீங்கள் அதை முழுதாகப் புரிந்து கொண்டுவிட்டால் எல்லாம் மறைந்து போய்விடும். பிறகு

---

1. கிரீஷ் சந்திரகோஷ் என்னும் பெயரின் முதலிரண்டு ஆங்கில எழுத்துக்கள்.

யார் வேலை செய்வது? யாரை வேலை செய்யும்படிச் செய்வது?'

இதன்பிறகு அவர்களின் பேச்சு அமெரிக்காவைப்பற்றித் திரும்பியது. அமெரிக்காவைப்பற்றிப் பேசுவதில் சுவாமிஜிக்கு மிகுந்த உற்சாகம் ஏற்பட்டது. அந்த நாட்டின் ஆச்சரியகரமான செல்வ வளத்தைப் பற்றியும், அந்த நாட்டு ஆண்கள் மற்றும் பெண்களின் நற்குணங்கள், குறைபாடுகள், அவர்களின் ஆடம்பரம் முதலிய பலவற்றைப்பற்றியும் வர்ணித்துக் கொண்டே போனார்.

## 7

கல்கத்தா, 1897

கடந்த சில நாட்களாக சுவாமிஜி பாக்பஜாரில் பலராம் போஸின் வீட்டில் தங்கி இருக்கிறார். இன்று முழு சூரிய கிரகணம். சீடர், சுவாமிஜிக்கான காலைஉணவைச் சமைப்பதாக இருந்தார். அதுபற்றிக் கேட்க அவர் சுவாமிஜியிடம் வந்தார். சுவாமிஜி அவரிடம், 'கிழக்கு வங்காள முறைப்படிச் சமையல் செய். கிரகணத்திற்கு முன்னால் நாம் சாப்பிட்டுவிட வேண்டும்' என்றார்.

அந்த வீட்டின் உட்பகுதி காலியாக இருந்தது. சீடர் உள்ளே சென்று சமையலைத் துவக்கினார். சுவாமிஜியும் அவ்வப்போது உள்ளே வந்து சீடரை உற்சாகப்படுத்திக் கொண்டும், 'குழம்பைக் கவனமாகப் பார்த்துக் கொள். கிழக்கு வங்காள ருசியோடு இருக்க வேண்டும்' என்று கேலி செய்துகொண்டும் இருந்தார்.

சுவாமிஜி குளித்துவிட்டு வரும்போது, சமையல் ஏறக்குறைய முடிந்துவிட்டிருந்தது. உடனே ஒரு பாயை எடுத்துப் போட்டு உட்கார்ந்துகொண்டு, 'சமைத்து முடித்த எதையாவது எடுத்துவா, இனிமேலும் என்னால் தாங்க முடியாது. பசியால் பிராணன் போகிறது' என்றார். சாப்பிடும்போது கசப்பான குழம்பு ஒன்றை மிகவும் சுவைத்தவாறே, 'இதுபோன்ற சுவையான சமையலை நான் சாப்பிட்டதே இல்லை. ஆனாலும் குழம்பைப்போல் வேறு எதிலும் அவ்வளவு அதிகம் காரமில்லை' என்றார். புளிப்பான குழம்பை ருசித்தவாறே, 'இந்தச் சமையல் பர்த்வான் மாவட்டச் சமையல்போல் உள்ளது' என்றார். சாப்பிட்டு முடிந்ததும் கை கழுவிக்கொண்டு கட்டிலில் அமர்ந்தார். சாப்பிட்டு முடிந்ததும் புகையை இழுத்தபடிச்

சீடரிடம், 'நன்றாகச் சமைக்கத் தெரியாதவன் நல்ல துறவியாக இருக்க முடியாது. மனம் தூய்மையாக இருந்தாலன்றிச் சுவை யாகச் சமைக்க முடியாது' என்றார்.

சிறிதுநேரத்தில் எல்லா இடங்களிலும் சங்கு, மணி முதலி யவற்றின் நாதம் எழுந்தது. சுவாமிஜி சீடரிடம், 'சூரிய கிரகணம் ஆரம்பித்திருக்கிறது. நான் கொஞ்சம் தூங்குகிறேன். என் கால்களைப் பிடித்துவிடு' என்றார். படிப்படியாக கிரகணம் சூரியனை முழுவதுமாக மறைத்தது. அதனால் மாலைவேளை யைப் போன்ற இருள் எங்கும் பரவியது.

கிரகணம் முடிவதற்குப் பதினைந்து இருபது நிமிடங்கள் இருந்தபோது சுவாமிஜி எழுந்து கைகால்களைக் கழுவிக் கொண்டு, புகை பிடித்தபடியே சீடரிடம், 'சூரிய கிரகணத்தின் போது யார் எதைச் செய்தாலும் அது எதிர்காலத்தில் லட்சக் கணக்கில் அதிகமாகும் என்று சொல்வார்கள். இந்த உடம்பு நல்ல தூக்கத்தைப் பெற வேண்டும் என்று மகாமாயை திருவுளம் கொள்ளவில்லை போலும். கிரகண காலத்தில் கொஞ்சம் தூங்கினால் எதிர்காலத்தில் நல்ல தூக்கம் வரும் என்று நினைத்தேன். ஆனால் தூங்குவதற்காக நான் செய்த முயற்சிகள் எல்லாம் தோற்றுப் போயின. அதிகமாகப் போனால் பதினைந்து நிமிடங்கள்தான் என்னால் தூங்க முடிந்தது' என்றார்.

பிறகு சுவாமிஜியின் வேண்டுகோளின்படி சில சிறிய சொற்பொழிவுகள் செய்யப்பட்டன. பொழுது மறைவதற்கு ஒருமணி நேரம் இருந்தது. அங்கிருந்தோர் முற்றத்தில் கூடிய போது, அவர்கள் விரும்பும் கேள்விகளைக் கேட்கும்படி சுவாமிஜி கூறினார்.

சுவாமி சுத்தானந்தர்: 'சுவாமிஜி, தியானத்தின் உண்மை யான இயல்பு என்ன?'

சுவாமிஜி: 'தியானம் என்பது ஒரு குறிப்பிட்ட பொருளின் மீது மனத்தைக் குவியச் செய்வது. மனம் ஒரு பொருளின்மீது ஒருமைப்பட்டு நிலைபெறுமானால் பிறகு அதனை எந்தப் பொருளின்மீதும் குவிக்கலாம்.'

சீடர்: 'உருவத் தியானம், அருவத் தியானம் என்று இரண்டு வகை தியானங்கள் சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. இவையெல்லாம் என்ன? இவற்றுள் எது மேலானது?'

சுவாமிஜி: 'முதலில் மனத்தை ஏதாவது ஒரு பொருளின் மீது குவித்துத் தியானத்தைத் தொடங்க வேண்டும். ஒருசமயம் நான் என் மனத்தை ஒரு கறுப்புப் புள்ளியின்மீது குவியும்படிச்

செய்தேன். கடைசியில் என்னால் அந்தப் புள்ளியைப் பார்க்க முடியவில்லை; அந்தப் புள்ளி என் முன்னால் இருக்கிறது என்பதைக்கூடக் காண முடியவில்லை. மனம் வழக்கம்போல் இயங்கவில்லை. மனம் வேலை செய்வதால் எழும் எந்தவிதமான அலையும் எழவில்லை; காற்று சிறிதும் வீசாத, அசைவே இல்லாத கடல்போல் இருந்தது. அந்த நிலையில் புலன்களைக் கடந்த உண்மையை நான் சிறிது உணர்வதுண்டு. எனவே மிகச் சாதாரண புறப் பொருளின்மீது தியானம் செய்வதுகூட மன ஒருமைப்பாட்டை ஏற்படுத்துகிறது என்று நினைக்கிறேன். ஆனால் மனத்திற்குப் பிடித்த பொருள்மீது தியானம் செய்யும் போது மனம் மிகவும் எளிதாக அமைதி அடைகிறது என்பதும் உண்மை. இந்த நாட்டில் இத்தனை தெய்வ வடிவங்களை வழி படுவதற்கு இதுதான் காரணம். இத்தகைய வழிபாட்டிலிருந்து எத்தகைய அற்புதமான கலை வளர்ந்துள்ளது! ஆனால் இப் போது அத்தகைய நிலை இல்லை. என்றாலும் உண்மை என்ன வென்றால் தியானப் பொருள் எல்லோருக்கும் ஒன்றாக இருக்க முடியாது என்பதே. மக்கள் தாங்கள் எந்தப் புறப்பொருளைத் தியானித்து நிறைநிலையை அடைந்தார்களோ அதை மட்டும் உலகிற்கும் போதித்தார்கள். இந்தப் புறப்பொருட்கள் எல்லாம் பூரண மன அமைதியை அடைவதற்கு உதவுபவை மட்டுமே என்ற உண்மையை மறந்து உருவங்களை அளவுகடந்து கொண் டாடினார்கள். வழிகளில் முழுக் கவனத்தையும் செலுத்தினார் களே தவிர, அது சென்று சேரும் முடிவை மறந்து விட்டார்கள். உண்மையில், மனத்தில் அலைகளே இல்லாமல் செய்வதுதான் நோக்கம். ஆனால் மனம் ஏதாவது ஒரு பொருளின்மீது ஆழ்ந்து ஒன்றாமல் இதை அடைய முடியாது.'

சீடர்: 'மனம் ஒரு பொருள்மீது முழுமையாக ஆழ்ந்து அதனுடன் ஒன்றிவிட்டால் அது நமக்கு பிரம்மஞானத்தை எப்படித் தரும்?'

சுவாமிஜி: 'தரும். நாம் தியானிக்கும் பொருளின் வடி வத்தை மனம் முதலில் அடைந்தாலும் பிறகு அந்த உணர்வு மறைந்துவிடும். அதன்பிறகு தூய்மையான உண்மை இருப்பின் அனுபவம் எஞ்சும்.'

சீடர்: 'சரி, மன ஒருமைப்பாட்டை அடைந்த பிறகும் ஆசைகள் தோன்றுகின்றனவே, அது எப்படி?'

சுவாமிஜி: 'அவை சம்ஸ்காரங்களால் உண்டாகின்றன. புத்தர் சமாதியில் லயிக்கப்போகின்ற நேரத்தில் காமன்

வெளிப்பட்டான். காமன் என்று எதுவும் வெளியே உண்மையில் இல்லை. முந்தைய சம்ஸ்காரங்களே நிழல் வடிவில் வெளியில் தோன்றியது.'

சீடர்: 'ஆனால் நிறைநிலையை அடையுமுன் பலவகையான பயங்கர அனுபவங்களை அடைய வேண்டும் என்று கேள்விப்பட்டேன். அவையும் மனத்தின் கற்பனைதானா?'

சுவாமிஜி: 'கற்பனை அல்லாமல் வேறு என்ன? அவை மனத்தின் புறத் தோற்றங்கள் என்பதைச் சாதகன் அந்த வேளையில் அறிவதில்லை. மனத்திற்கு வெளியே எதுவும் இல்லை. நீ வெளியே இருப்பதாகக் காண்கின்ற உலகம்கூட வெளியில் இல்லை. எல்லாமே மனத்தின் கற்பனைதான். மனம் அலைகளற்றுப் போகும்போது, அது பிரம்ம உணர்வைப் பிரதிபலிக்கிறது. அப்போது எல்லா உலகங்களின் காட்சிகளும் ஏற்படலாம். ''யம் யம் லோகம் மனஸா ஸம்விபாதி—எந்த உலகத்தைக் காண வேண்டும் என்று நினைக்கிறானோ''[1] அதை உடனடியாகக் காண முடியும். அவன் எதை எண்ணுகிறானோ அது உடனே கைகூடும். நினைப்பது நடைபெறுகின்ற இத்தகைய சத்திய சங்கல்ப நிலையை அடைந்த பிறகும் எச்சரிக்கையாக இருந்து, எந்த ஆசைகளுக்கும் அடிமையாகாமல் இருப்பவன் பிரம்ம ஞானம் பெறுகிறான். அந்த நிலையை அடைந்த பிறகு வழிதவறியவன் பல்வேறு சித்திகளைப் பெறுவான், ஆனால் அறுதி லட்சியத்திலிருந்து வழுவிவிடுவான்.'

இவ்வாறு சொல்லிவிட்டு சுவாமிஜி, 'சிவ சிவ' என்று கூறியபடியே மீண்டும் தொடர்ந்தார்: 'வாழ்க்கையின் இந்த மேலான ரகசியத்தைத் தியாகத்தின் மூலமாக மட்டுமே அறிந்து கொள்ள முடியும். தியாகம், தியாகம், தியாகம்—இதுவே உங்கள் வாழ்க்கையின் மூல மந்திரம் ஆகட்டும். ''ஸர்வம் வஸ்து பயான்விதம் புவிந்ருணாம் வைராக்யமேவாபயம்—மனிதர்களும், உலகில் உள்ள பொருட்களும் அச்சத்தால் சூழப்பட்டிருக்கின்றன. வைராக்கியம் (துறவு) மட்டுமே பயமின்மையைத் தரும்.''[2]

## 8

கல்கத்தா, மார்ச் அல்லது ஏப்ரல் 1897

இன்று சீடர் சுவாமிஜியைச் சந்திக்க பாக்பஜார் வந்தார். அப்போது சுவாமிஜி வெளியே செல்லத் தயாராக இருந்தார்.

1. முண்டக உபநிடதம் 3. 1. 10.
2. வைராக்கிய சதகம், பர்த்ருஹரி.

சிடரைப் பார்த்த சுவாமிஜி, 'நல்லது. என்னோடு வா' என்று சொல்லியபடி மாடியிலிருந்து கீழே இறங்கினார். சிடரும் பின்னாலேயே வந்தார். வாடகை வண்டியில் இருவரும் ஏறினர். வண்டி தெற்கு நோக்கிப் புறப்பட்டது.

சிடர்: 'சுவாமிஜி, எங்கே போகிறீர்கள்?'

சுவாமிஜி: 'என்னோடு வா, நீயே நேரில் பார்க்கலாம்.'

போகும் இடம் எது என்பதை சுவாமிஜி சொல்லவில்லை. வண்டி பீடன் தெருவை அடைந்ததும் கீழ்வருமாறு பேசத் தொடங்கினார்:

'உங்கள் நாட்டில் பெண்களுக்குக் கல்வி தர யாரும் எந்த முயற்சியும் செய்யவில்லை. ஆண்களாகிய நீங்கள் கல்வி பெறுகிறீர்கள்; மனிதர்கள் ஆகிறீர்கள். ஆனால் உங்கள் துன்ப துயரங்களில் பங்குகொள்கின்ற, உயிரைத் தந்து உங்களுக்குச் சேவை செய்கின்ற பெண்களுக்குக் கல்வி தர நீங்கள் என்ன செய்கிறீர்கள்?'

சிடர்: 'ஏன், இப்போது பெண்களுக்காக எத்தனையோ பள்ளிகளும் கல்லூரிகளும் தோன்றியிருக்கின்றன! எவ்வளவோ பெண்கள் எம்.ஏ, பி.ஏ., பட்டங்களும் பெற்றிருக்கிறார்களே!'

சுவாமிஜி: 'இந்த எம்.ஏ. எல்லாம் மேலைநாட்டுப் படிப்புகள். எத்தனை பள்ளிகள் உங்களுடைய தர்ம சாஸ்திரங்களின் வழியில், தேசிய நீரோட்டத்தின் வழியில் உள்ளன? பரிதாபம்! அத்தகைய தேசியக் கல்வி ஆண்களுக்கே பெரிதாக ஒன்றும் கிடைக்கவில்லை, பெண்களைப்பற்றிச் சொல்ல என்ன இருக்கிறது? அரசின் புள்ளி விவரப்படி இந்தியாவில் பத்துப் பன்னிரண்டு சதவீதமே படித்தவர்கள் இருக்கிறார்கள்; அதில் ஒரு சதவீதம்கூடப் பெண்கள் இல்லையென்றே தோன்றுகிறது.

'இல்லையெனில் நாடு இவ்வளவு கீழான நிலையை அடையுமா என்ன? கல்வி பரவாமல், அறிவு உதிக்காமல் நாட்டில் முன்னேற்றம் எப்படி ஏற்பட முடியும்? எதிர்காலத்தின் நம்பிக்கையாக விளங்குகின்ற, கல்வி பெற்ற வெகுசிலரான உங்களிடமும் நாட்டு மக்களுக்குக் கல்வியைப் பரப்புவதில் உண்மையான முயற்சியோ உழைப்போ இருப்பதாகத் தெரியவில்லை. முதலில் சாதாரண மக்களிடமும் பெண்களிடமும் கல்வியைப் பரப்பாமல் இப்போதைய நிலைமையை முன்னேற்றவே முடியாது என்பதை உறுதியாக அறிந்துகொள்.

'அதற்காகச் சில பிரம்மச்சாரிகள் மற்றும் பிரம்மச்சாரிணிகளுக்குப் பயிற்சி தரும் எண்ணம் எனக்கு உண்டு.

பிரம்மச்சாரிகள் நாளடைவில் சன்னியாசம் பெற்று, நாடு முழுவதும் கிராமம் கிராமமாகச் சென்று கல்வியைப் பரப்புவார்கள். பிரம்மச்சாரிணிகளும் பெண்களிடையே அந்தப் பணியை செய்வார்கள். இந்தப் பணி நம் தேசிய முறையில்தான் நடக்க வேண்டும். ஆண்களுக்குப் பயிற்சி மையங்கள் ஏற்படுத்துவது போலவே பெண்களுக்கும் ஏற்படுத்த வேண்டும். படிப்பும் ஒழுக்கமும் நிறைந்த பிரம்மச்சாரிணிகள் இந்த நிலையங்களில் கல்வி கற்பிக்கும் பணியை மேற்கொள்ள வேண்டும். புராணங்கள், இதிகாசங்கள், வீட்டு வேலை, கலைகள், குடும்ப வாழ்வின் கடமைகள், சிறந்த ஒழுக்கத்தை வளர்க்கும் அடிப்படைக் குணங்கள் முதலியவற்றை நவீன விஞ்ஞானத்தின் உதவியுடன் சொல்லித் தர வேண்டும். அத்துடன் தர்மம், நீதி முதலியவற்றிலும் மாணவியருக்குப் பயிற்சி தர வேண்டும். எந்தப் பயிற்சியால், காலப்போக்கில் அவர்கள் சிறந்த இல்லத் தலைவிகளாக உருவாகுவார்களோ, அந்தப் பயிற்சியை அவர்களுக்கு அளிக்க வேண்டும். இத்தகைய தாய்மார்களின் குழந்தைகள் நற்குணங்களில் சிறந்து விளங்குவார்கள். படித்த, நீதி வழுவாத தாய்மார்களின் வீட்டில்தான் மாமனிதர்கள் பிறப்பார்கள். நீங்களோ உங்கள் பெண்களைக் குழந்தை பெறும் எந்திரங்களாக ஆக்கிவிட்டீர்கள். ராம், ராம்! உங்கள் கல்வியின் பலன் இதுதானா? முதலில் பெண்களை முன்னேற்றியாக வேண்டும்! பாமரர்களை விழிப்புணர்த்தியாக வேண்டும். அப்போதுதான் இந்த நாட்டிற்கு நன்மை வர முடியும்.'

சோர்பகன் என்ற இடத்திற்கு அருகே வண்டி சென்று கொண்டிருந்தது. அப்போது சுவாமிஜி, மகாகாளி பாடசாலையை நிறுவிய தபஸ்வினி மாதாஜி தம்மை அந்தப் பள்ளிக் கூடத்தைப் பார்வையிட அழைத்திருக்கும் செய்தியைக்கூறி, அங்கே போய்க் கொண்டிருப்பதையும் கூறினார். எங்கள் வண்டி அந்த் இடத்தை அடைந்ததும் மூன்று நான்குபேர் சுவாமிஜியை வரவேற்று, மாடிக்கு அழைத்துச் சென்றார்கள். அங்கே தபஸ்வினி மாதாஜி நின்றிருந்தார். சுவாமிஜியைக் கண்டதும் வரவேற்று ஓர் அறைக்கு அழைத்துச் சென்றார். அங்கே கூடியிருந்த பெண்கள் எல்லோரும் எழுந்துநின்று அவரை வணங்கி வரவேற்றார்கள். மாதாஜி கூறியதும் எல்லோரும் சிவபெருமானைப் பற்றிய சம்ஸ்கிருத சுலோகம் ஒன்றை இசையுடன் பாடினர். அதன்பின் தங்களுக்குக் கற்பிக்கப்பட்டிருக்கும்

வழிபாட்டு முறைகளைச் செய்து காட்டினர். இவற்றை மகிழ்ச்சியோடும் உற்சாகத்தோடும் பார்த்த பிறகு சுவாமிஜி மற்ற வகுப்புகளைப் பார்க்கச் சென்றார். அதன்பிறகு மாதாஜி ஒரு குறிப்பிட்ட பெண்ணிடம் காளிதாசரின் ரகுவம்சம் என்னும் சம்ஸ்கிருத காவியத்தில் உள்ள மூன்றாம் அத்தியாயத்தின் முதல் செய்யுளைக் குறிப்பிட்டு, அதை விளக்கும்படிக் கூறினார். அந்த விளக்கத்தைக் கேட்ட சுவாமிஜி, தபஸ்வினி மாதாஜி பெண்களிடையே கல்வியைப் பரப்ப எடுத்துக் கொள்ளும் விடாமுயற்சிகளுக்கும் நல்ல முறைகளுக்கும் மிகுந்த பாராட்டுதல்களைத் தெரிவித்தார். அப்போது மாதாஜி மிகுந்த பணிவுடன், 'நான் என் மாணவிகளுக்குச் சேவை செய்யும்போது அவர்களைச் சாட்சாத் தேவியாக எண்ணியே செய்கிறேன். புகழோ வேறெதையுமோ விரும்பி நான் இந்தப் பள்ளியை ஆரம்பிக்கவில்லை' என்றார்.

மாதாஜி கேட்டுக்கொண்டதன் பேரில் சுவாமிஜி, பள்ளியின் விருந்தினர் கருத்துஏட்டில் தமது கருத்தை எழுதினார்: 'இந்த இயக்கம் சரியான திசையில் செல்கிறது' என்பது அவர் எழுதியதன் கடைசி வாக்கியமாக இருந்தது.

பிறகு சுவாமிஜி மாதாஜியை வணங்கிவிட்டு, வண்டியில் சென்று அமர்ந்தார். வண்டி பாக்பஜாரை நோக்கிச் சென்றது. வழியில் கீழ்க்காணும் உரையாடல் நடைபெற்றது.

சுவாமிஜி: 'மாதாஜி பிறந்த ஊர் எது? அனைத்தையும் அவர் துறந்துவிட்டார். எனினும் மக்களுக்குச் சேவை செய்வதில் அவருக்குள்ள ஊக்கத்தைப் பார். பெண்ணாக இல்லாமல் இருந்திருந்தால் அவரால் பெண்களுக்கு இப்படிச் சிறப்பான முறையில் கல்வியைச் சொல்லித் தர முடியுமா? அங்கே எல்லாமே நன்றாக இருக்கிறது. ஆனால் இல்லறத்தார்களான சில ஆண்கள் அங்கு ஆசிரியர்களாக இருப்பதுதான் எனக்கு நன்றாகப் படவில்லை. விதவைகள் அல்லது பிரம்மச்சாரிணிகள் கல்வி கற்பிப்பதே தகுந்தது. இந்த நாட்டில் பெண்கள் பள்ளியில் ஆண்களின் தொடர்பைத் தவிர்ப்பது நல்லது.'

சீடர்: 'சுவாமிஜி, இந்த நாட்டில் இப்போது கார்கி, கனா, லீலாவதி போன்ற ஒழுக்கம் நிறைந்த, கல்வியில் சிறந்த பெண்களை எங்கே போய்க் கண்டுபிடிப்பது?'

சுவாமிஜி: 'அத்தகைய பெண்கள் இப்போது இந்த நாட்டில் இல்லை என்றா நினைக்கிறாய்? இந்த இந்தியாவின் புனித மண்ணில்தான், சீதை, சாவித்திரியின் நாட்டில்தான், இந்த

நாட்டுப் பெண்களில்தான் அத்தகைய ஒழுக்கம், சேவை மனப் பான்மை, அன்பு, கருணை, அகமலர்ச்சி, பக்தி இவற்றைக் காண முடியும். உலகில் வேறு எங்குமே இப்படி நான் பார்க்க வில்லை. மேலைநாட்டுப் பெண்களைப் பார்த்தால் பலவேளை களில் பெண்களாகவே தெரியவில்லை. அவர்கள் முழுக்க முழுக்க ஆண்களின் நகல்போலவே இருக்கிறார்கள். வண்டி ஓட்டுகிறார்கள், அலுவலகங்களில் வேலை செய்கிறார்கள், பள்ளி செல்கிறார்கள், ஆசிரியையாக வேலை பார்க்கிறார்கள். கண்களுக்கு இதம் தரும் நாணம், பணிவு போன்ற பெண்மைப் பண்புகளை இந்தியப் பெண்களிடம் மட்டுமே காண முடியும். இவ்வளவு இருந்தும் இந்தப் பெண்களை முன்னேற்ற உங்க ளால் முடியவில்லை! அவர்களுள் அறிவொளி ஏற்ற நீங்கள் முயலவில்லை. அவர்களுக்கு மட்டும் சரியான கல்வி கொடுக்கப் படுமானால் அவர்கள் லட்சியப் பெண்களாக உருவெடுப் பார்கள்.'

சீடர்: 'சுவாமிஜி, தபஸ்வினி மாதாஜி அளிக்கும் கல்வியால் நீங்கள் சொல்லும் லட்சியப் பெண்மை நிலையை நம் பெண்கள் அடைய முடியும் என்று நினைக்கிறீர்களா? இந்தப் பெண்களும் வளர்ந்தவுடன் திருமணம் செய்துகொண்டு, சில காலத்திற்குள் சாதாரணப் பெண்களைப்போல் ஆகிவிடுவார்கள். இவர்கள் பிரம்மச்சாரிணிகளாக வாழ்ந்தால், சமுதாயத்தின் மற்றும் நாட்டின் முன்னேற்றத்திற்காகத் தங்கள் வாழ்வை அர்ப்பணிக்க முடியும்; நம் சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள மிக உயர்ந்த லட்சியத்தை அடைய முடியும் என்று தோன்றுகிறது.'

சுவாமிஜி: 'படிப்படியாக எல்லாம் நடக்கும். சமுதாயத் தின் ஏச்சுக்களுக்கும் தண்டனைக்கும் பயப்படாமல், தங்கள் பெண்களைத் திருமணமாகாதவர்களாக வைத்திருக்கத்தக்க அறிவுள்ளவர்கள் இதுவரை இந்த நாட்டில் பிறக்கவில்லை. சமுதாயத்தின் மீதுள்ள பயத்தின் காரணமாகத் தங்கள் பெண் களுக்குப் பன்னிரண்டு பதின்மூன்று வயது வருவதற்குள்ளா கவே திருமணம் செய்துவிடுவதைப் பார். சில நாட்களுக்கு முன்னால், திருமண வயதை நிர்ணயிக்கும் சட்டம் நிறைவேறி யதும், சமுதாயத் தலைவர்கள் பலர் லட்சக்கணக்கான மக்களை ஒன்றுசேர்த்துக் கொண்டு, ''இந்தச் சட்டம் எங்களுக்கு வேண் டாம்'' என்று கூச்சல் போட்டார்கள். வேறு ஏதாவது ஒரு நாட்டில் என்றால், இத்தகைய இழிவு தங்கள் சமுதாயத்தில் உள்ளதே என்று வெட்கித் தலைகுனிந்திருப்பார்கள். இப்படிக்

கூட்டம் போட்டுக் கூச்சலிடுவது என்ற பேச்சிற்கே இடம் இருந்திருக்காது!'

சீடர்: 'சுவாமிஜி, எதையும் யோசிக்காமலா பழங்காலத்தில் இத்தகைய சட்டத்தை ஏற்படுத்தி இருப்பார்கள்? கட்டாயமாக இதற்கு ஏதாவது உட்கருத்து இருக்க வேண்டும்?'

சுவாமிஜி: 'அப்படி என்ன உட்கருத்து?'

சீடர்: 'முதலில், சிறுவயதிலேயே திருமணம் ஆகிப் பெண்கள் புகுந்தவீட்டிற்கு வந்து, குல தர்மங்களை இளவயதி லிருந்தே கற்றுக்கொள்ள முடியும். மாமன் மாமியார்களின் வழிகாட்டுதலால் குடும்பக் கடமைகளில் போதுமான திறமை பெறுவார்கள். பருவமடைந்த பெண்கள் தங்கள் பெற்றோரின் வீட்டில் இருக்க நேர்ந்தால் வழிதவறுவதற்கான வாய்ப்பு அதிகம். இளம் வயதிலேயே திருமணம் செய்துவிட்டால் அவர்கள் வழிதவற நேராது. மேலும் நாணம், அடக்கம், பணிவு, பொறுமை, உழைப்பு போன்ற பண்புகளும் பேரளவில் அவர் களிடம் வளரும்.'

சுவாமிஜி: 'இதை மற்றொரு கோணத்தில் பார்த்தால், இளமை மணத்தால் சிறு வயதிலேயே பிள்ளைகளைப் பெற நேர்கின்றது. இதன்விளைவாகப் பெண்கள் இளம் வயதிலேயே அதிகமாக இறந்து போகிறார்கள். அவர்களுக்குப் பிறக்கும் பிள்ளைகளும் நோஞ்சான்களாகி, நம் நாட்டுப் பிச்சைக்காரர் களின் எண்ணிக்கையைத்தான் அதிகமாக்கும். பெற்றோரின் உடம்பு வலிமையாகவும் ஆரோக்கியமாகவும் இல்லாவிட்டால், வலிமையும், நல்ல உடல் வளமும் நிறைந்த குழந்தைகள் அவர் களுக்கு எப்படிப் பிறக்க முடியும்? கல்வியளித்து, சிறிது வயது சென்றபிறகு பெண்களுக்குத் திருமணம் செய்தால் நாட்டிற்கு உண்மையிலேயே நன்மை செய்யும் நல்ல பிள்ளைகளைப் பெறுவார்கள். இன்று விதவைகள் இவ்வளவு அதிகமாக இருப்ப தற்குக் காரணம் இந்த இளம் வயதுத் திருமணம்தான். இளமைத் திருமணங்கள் குறைந்தால் விதவைகளின் எண்ணிக்கையும் குறைந்துவிடும்.'

சீடர்: 'ஆனால் சுவாமிஜி, பெண்கள் வயதேறிய பிறகு திருமணம் செய்துகொண்டால் குடும்பக் கடமைகளை அவ் வளவு மனமொத்துச் செய்ய மாட்டார்கள் என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. கல்கத்தாவில் இப்போது, படித்த மருமகள்கள் கால்களுக்குச் செம்பஞ்சுக் குழம்பைப் பூசியபடி உட்கார்ந்து கொண்டிருக்க, வயதான மாமியார்களே சமையல் செய்வதாக

நான் கேள்விப்படுகிறேன். ஆனால் எங்கள் கிழக்கு வங்காளத்தில் இப்படி நடக்கவே செய்யாது.'

சுவாமிஜி: 'நல்லதும் கெட்டதும் எல்லா இடங்களிலும் உள்ளன. ஒவ்வொரு நாட்டிலும் சமுதாயம் என்பது தானாக உருவாகிறது என்பதே என் கருத்து. எனவே இளமை மணத்தைத் தடுப்பது, விதவைகளின் மறுமணத்தை ஆதரிப்பது போன்ற விஷயங்களைப்பற்றி நாம் மண்டையை உடைத்துக்கொள்ள வேண்டியதில்லை. சமுதாயத்திலுள்ள ஆண், பெண் அனைவருக்கும் உண்மைக் கல்வியை அளிப்பதே நமது கடமை. அந்தக் கல்வி மூலமாக நல்லது எது; கெட்டது எது என்பதை அவர்கள் புரிந்துகொள்வார்கள், தாங்களாகவே கெட்டதை விலக்கிவிடுவார்கள். அதன்பிறகு சமுதாயத்தில் வலிந்து எதையும் நிறுவவோ அழிக்கவோ வேண்டியதில்லை.'

சீடர்: 'நம் பெண்களுக்கு இப்போது எந்தமாதிரியான கல்வி தேவை?'

சுவாமிஜி: 'தர்மம், கலைகள், விஞ்ஞானம், குடும்பக் கடமைகள், சமையல், தையல், சுகாதாரம் இப்படிப்பட்ட எளிமையான பாடங்களைக் கற்பிப்பது நல்லது. நாவல்களையோ நாடகங்களையோ படிக்க அனுமதிப்பது நல்லதல்ல. மகாகாளி பாடசாலை பெரிதும் சரியான வழியில் போய்க் கொண்டிருக்கிறது. ஆனால் வழிபாட்டுமுறை மட்டும் சொல்லித் தருவது போதாது. அவர்கள் பெறும் கல்வி எல்லா விஷயங்களிலும் கண்களைத் திறப்பதாக அமைய வேண்டும். லட்சியப் பெண்மையின் பண்புகளை எப்போதும் அவர்கள் முன் வைத்து, மிகவுயர்ந்த தியாகத்தில் அவர்களுக்கு ஆழ்ந்த ஈடுபாடு உண்டாகுமாறு செய்ய வேண்டும். சீதை, சாவித்திரி, தமயந்தி, லீலாவதி, கனா, மீரா முதலிய உன்னதமானவர்களின் வாழ்க்கையை அவர்களுக்குச் சொல்லி, அவர்களும் தங்கள் வாழ்க்கையை அதேபோல் உருவாக்கிக் கொள்ளும்படிச் செய்ய வேண்டும்.'

வண்டி பாக்பஜாரில் பலராம் போஸின் வீட்டை அடைந்தது. சுவாமிஜி வண்டியிலிருந்து இறங்கி மாடிக்குச் சென்றார். அங்கே அவரைக் காணக் கூடியிருந்தவர்களிடம் மகாகாளி பாடசாலையில் கண்டவற்றை எல்லாம் கூறினார்.

புதிதாக அமைக்கப்பட்டதான, ராமகிருஷ்ண மிஷனின் உறுப்பினர்கள் செய்ய வேண்டுவதுபற்றிப் பேசிய சுவாமிஜி, கல்வி தானம், ஞான தானம் இவையே மேலானது,

முக்கியமானது என்ற கருத்தைப் பல நியாயங்களைக் காட்டி வலியுறுத்திப் பேசினார். பின்னர் சீடரின் பக்கம் திரும்பி, 'கல்வி கொடு, கல்வி கொடு. நான்ய: பந்தா வித்யதேஸயனாய— இதைத் தவிர வேறு வழியே இல்லை' என்றார். கல்வியைப் பரப்ப மறுப்பவர்களைக் குறிப்பிட்டு வேடிக்கையாக, 'நீ அந்தப் பிரகலாதர்களின் கூட்டத்துடன் சேர்ந்துவிடாதே' என்றார். அதன் பொருள் என்னவென்று கேட்டதும், 'ஓ! அதை நீ கேள்விப்பட்டதில்லையா? ''க'' என்ற முதல் எழுத்தைக் கண்டதுமே, பிரகலாதனுக்குக் கண்ணனின் நினைவு வந்துவிட்டது; கண்களில் கண்ணீர் பெருக்கெடுத்து ஓடியது. அதற்கப்புறம் அவன் எப்படிப் படிக்க முடியும்? படிக்க முடியாமல் அவனைத் தடுத்தது பக்திக் கண்ணீர்; ஆனால் உங்களுடைய இந்த முட்டாள்கூட்டத்தின் கண்களில் வழிவதோ பயத்தின் காரணமாகப் பெருகும் கண்ணீர். பல பக்தர்கள் அவர்களைப் போன்றவர்களே.'

இதைக் கேட்டுக் கொண்டிருந்த அனைவரும் கொல்லென்று சிரித்தார்கள். சுவாமி யோகானந்தர் சுவாமிஜியைப் பார்த்து, 'ஏதாவது ஒன்றைச் செய்து முடிக்க வேண்டும் என்ற தீவிரம் உங்கள் மனத்தில் தோன்றிவிட்டால், அந்தக் காரியம் செய்து முடிக்கப்படும்வரை உங்களால் அமைதியாக இருக்க முடியாது. அந்தக் காரியம் நிச்சயம் செய்தே முடிக்கப்படும். இப்போது உங்கள் மனத்தில் எது இருக்கிறதோ சந்தேகம் இல்லாமல் அதுவும் நடந்தே தீரும்' என்றார்.

## 9

கல்கத்தா, 1897

கடந்த பத்து நாட்களாகச் சீடர் சுவாமிஜியுடன் பலராம் போஸின் வீட்டில் தங்கி, சாயனரின் ரிக்வேத விளக்கவுரையைப் படித்துக் கொண்டிருக்கிறார். மாக்ஸ்முல்லர் ரிக்வேதம் பற்றி எழுதிய நூல்கள் ஒரு நண்பரின் நூல்நிலையத்திலிருந்து கொண்டு வரப்பட்டன. சீடரின் சம்ஸ்கிருத உச்சரிப்பையும் வாக்கிய அமைப்பையும் தேவையானபோதெல்லாம் சுவாமிஜி திருத்திக் கொண்டிருந்தார். வேதங்கள் என்றென்றும் உள்ளவை என்பதை நிலைநாட்டுவதற்காகக் கூறும் வாதங்களின் திறமையை வெகுவாகப் பாராட்டினார். சிலநேரங்களில் அவற்றிற்கு மாறான கருத்துக்களைக் கூறி சாயனரின் கருத்தைக் கேலியும் செய்தார்.

இவ்வாறு படிப்பு தொடர்ந்து கொண்டிருந்தபோது மாக்ஸ்முல்லரைப்பற்றிப் பேசத் தொடங்கினார்:

'உனக்குத் தெரியுமா? தாம் எழுதிய உரையைப் புதுப்பிக்க சாயனர்தான் இப்போது மாக்ஸ்முல்லராகப் பிறந்திருக்கிறார் என்று நான் எண்ணுகிறேன். நீண்ட காலமாகவே எனக்கு இந்தக் கருத்து இருந்தது. மாக்ஸ்முல்லரைப் பார்த்த பிறகு அது உறுதியாகிவிட்டது. இந்த நாட்டில்கூட, வேத வேதாந் தங்களில் அவரைப்போல் அவ்வளவு உறுதியான, அவ்வளவு ஊறிப்போன ஒருவரை நீ காண முடியாது. அனைத்திற்கும் மேலாக, ஸ்ரீராமகிருஷ்ணரிடம் அவருக்கு எவ்வளவு ஆழம் காண முடியாத பக்தி தெரியுமா! ஸ்ரீராமகிருஷ்ணர் அவதார புருஷர் என்பதை அவர் நம்புகிறார். நான் அவரது விருந் தினனாக இருந்தபோது எவ்வளவு அற்புதமாக என்னை உபசரித் தார்! அவரையும் அவரது மனைவியையும் நான் பார்த்தபோது அவர்கள் வசிஷ்டரும் அருந்ததியும்போல் வாழ்ந்து வருவ தாகவே தோன்றியது. நான் பிரிந்து வரும்போது அவரது கண்களில் கண்ணீர் பெருகியது.'

சீடர்: 'சாயனரே மாக்ஸ்முல்லராகப் பிறந்தார் என்றால் அவர் புனிதமான இந்தப் பாரத நாட்டில் பிறக்காமல் மிலேச்ச நாட்டில் ஏன் பிறந்தார்?'

சுவாமிஜி: 'அறியாமை காரணமாகவே மனிதன், ''நான் ஆரியன், மற்றவர்கள் மிலேச்சர்கள்'' என்று வேறுபடுத்து கிறான். வேதங்களுக்கே உரை எழுதியவரான, ஞானத்தின் பேரொளிப் பிழம்பான அவரிடம் வருணாசிரமப் பிரிவுகளும் ஜாதிப் பிரிவுகளும் இருக்க முடியுமா? அவருக்கு இவையெல் லாம் முற்றிலும் பொருளற்றவை. மனித குலத்தின் நன்மைக்காக, தாம் எங்கே பிறக்க விரும்புகிறாரோ அங்கே அவரால் பிறக்க முடியும். குறிப்பாகக் கல்வி, செல்வம் இரண்டுமே உள்ள நாட் டில் பிறக்கவில்லை என்றால், இவ்வளவு பெரிய நூல்களை யெல்லாம் அச்சிட்டு வெளியிடுவதற்கான பொருள் எப்படிக் கிடைக்கும்! ரிக்வேதத்தை வெளியிட அவருக்குக் கிழக்கிந்தியக் கம்பெனி ஒன்பது லட்சம் ரூபாய் கொடுத்தது உனக்குத் தெரி யாதா? அதுகூடப் போதவில்லை. இந்த நாட்டில் அதற்காக நூற்றுக்கணக்கான பண்டிதர்களை மாதச் சம்பளம் கொடுத்து அமர்த்த வேண்டியிருந்தது. இந்தக் காலத்தில் இந்த நாட்டில் அறிவுக்காக, ஞானத்திற்காக யாராவது இவ்வளவு பணம் செலவழிப்பதைக் காண முடியுமா? கையெழுத்துப் பிரதியைத்

தயாரிக்கவே இருபத்தைந்து வருடங்கள் ஆகியதாகத் தமது முன்னுரையில் மாக்ஸ்முல்லர் எழுதியுள்ளார். அச்சிடுவதற்கு, மேலும் இருபது ஆண்டுகள் பிடித்தன. தமது வாழ்வில் நாற்பத்தைந்து ஆண்டுக் காலத்தை, ஒரு நூலை வெளியிடுவதற்காகச் சாதாரண மனிதன் யாராவது கழிப்பானா? சற்று சிந்தித்துப் பார்! நான் அவரை சாயனர் என்று சொல்வது வெறும் கற்பனையா என்ன?'

மாக்ஸ்முல்லரைப் பற்றிய பேச்சிற்குப் பிறகு வேதங்களைப் படிப்பது தொடர்ந்தது. படைப்பே வேதங்களிலிருந்துதான் தோன்றியது என்னும் சாயனரின் கருத்தைப் பல வழிகளில் ஆதரித்து சுவாமிஜி பேசத் தொடங்கினார்:

'வேதங்கள் என்பவை அனாதியான உண்மைகளின் தொகுதி. வேத ரிஷிகள் அவற்றைத் தங்கள் அனுபவத்தில் கண்டறிந்தார்கள். புலன்களைக் கடந்து செல்லக் கூடியவர்களால் மட்டுமே இவற்றை அனுபவத்தில் காண முடியும்; நம்மைப் போன்ற சாதாரண மக்களால் காண முடியாது. அதனால்தான் வேதங்களில் ரிஷி என்ற சொல் ''மந்த்ரார்த்த த்ரஷ்டா—மந்திரங்களின் உண்மைகளை நேரில் கண்டவர்'' என்று பொருள்படுகிறது; வெறும் பூணூல் போட்ட பிராமணனைக் குறிப்பது அல்ல அந்தச் சொல். ஜாதிப் பிரிவுகள் பிற்காலத்தில் தான் ஏற்பட்டன. வேதம் ஒலியின் இயல்பை உடையது; அதாவது கருத்தின் இயல்பை உடையது. அது பல கருத்துக்களின் தொகுதி. சப்தம் அதாவது ஒலி என்ற சொல், நுண்கருத்து, அதாவது நுண்கருத்தாக இருந்து பின்னர் தூலமாகி தன்னை வெளிப்படுத்திக் கொள்கின்ற ஒன்று என்றே வேதங்களில் பொருள்படுகிறது. எனவே படைப்பு அழியும்போது, அடுத்த படைப்பிற்கான நுட்பமான விதைகள் வேதங்களில் ஒடுங்குகின்றன. அதனால்தான் முதலில் மீனாவதாரத்தில் வேதங்களை வெளிப்படுத்தியதாக நாம் புராணங்களில் படிக்கிறோம். இந்த முதல் அவதாரத்திலேயே வேதம் வெளிப்பட்டது. பின்னர் அந்த வேதங்களிலிருந்து படிப்படியாகப் படைப்பு தோன்றியது. அதாவது, வேதங்களிலுள்ள சப்தங்களை ஆதாரமாகக் கொண்டே உலகிலுள்ள எல்லா தூலப் பொருட்களும் ஒவ்வொன்றாக உருவாயின. ஏனெனில் எல்லா பருப்பொருட்களின் நுண்மையான வடிவம் சப்தமே அல்லவா! முந்தைய கல்பங்களிலும் இவ்வாறுதான் படைப்பு தோன்றியது. இதுவே வைதீக சந்தியா மந்திரத்தில் ''ஸூர்யா சந்த்ரமஸௌ தாதா யதா

பூர்வமகல்பயத் ப்ருதிவீம் திவம் சாந்தரிக்ஷமதோ ஸ்வ:— சூரியன், சந்திரன், பூமி, ஆகாசம், சொர்க்கம், மேல்உலகங்கள் மற்ற எல்லாவற்றையுமே பிரம்மா முந்தைய யுகங்களில் போலவே படைத்தார்.''[1] என்று கூறப்பட்டுள்ளது. புரிகிறதா?'

சீடர்: 'ஆனால் சுவாமிஜி, உண்மையில் ஒரு தூலப் பொருள் இல்லாதபோது ஒலி எதைக் குறிக்கும்? எப்படி அவற்றிற்குப் பெயர் தருவது?'

சுவாமிஜி: 'எடுத்த எடுப்பில் இப்படித் தோன்றுவது இயல்புதான். ஆனால் கொஞ்சம் சிந்தித்துப் பார். இந்தக் குடம் உடைந்து போகிறது என்று வைத்துக்கொள். அப்போது குடம் என்னும் கருத்தே அழிந்து மறைந்துவிடுமா? இல்லை. ஏனெனில் குடம் தூலப்பொருள், ஆனால் குடம் என்னும் கருத்து குடத்தின் ஒலி நிலை அல்லது நுண்நிலை. இப்படியே ஒவ்வொரு பொருளுக்கும் ஒலிநிலை உள்ளது. அதாவது நுண் நிலை உள்ளது. நாம் காண்கின்ற, கேட்கின்ற, அனுபவிக்கின்ற, தொட்டுணர்கின்ற பொருட்கள் எல்லாமே இவ்வாறு நுண் நிலை அல்லது ஒலிநிலையில் இருக்கின்ற பொருட்களின் தூல வெளிப்பாடுகளே. இவற்றின் இடையில் உள்ள தொடர்பு காரணகாரியத் தொடர்பு போன்றது. உலகமே அழிந்து போனாலும்கூட, ஒலிநிலை அல்லது அந்த உலகின் உணர்வான, தூலப் பொருட்கள் அனைத்தின் நுண் நிலையான பிரம்மத்தில் காரண வடிவில் நிலைபெறுகிறது. படைப்பு தொடங்கும் முன்னர், முதலில் இந்த நுண் வடிவங்களின் தொகுதியான பொருள் விம்மிப் புடைப்பதுபோல் அதிர்கிறது. அப்போது நுட்பமான, ஆதி ஒலியான 'ஓம்' தானாக வெளிப்படுகிறது. பின்னர் படிப் படியாக அந்தத் தொகுதியிலிருந்து ஒவ்வொரு பொருளுடையவும் நுட்பமான ஒலி வடிவம் தோன்றுகிறது. பின்னர் அது தூலமாக வெளிப்படுகிறது. இந்தக் காரண ஒலி அல்லது உலக உணர்வே பிரம்மம், அதுதான் வேதம். இதுவே சாயனரின் கருத்து. புரிகிறதா?'

சீடர்: 'இல்லை சுவாமிஜி. தெளிவாகப் புரியவில்லை.'

சுவாமிஜி: 'சரி. உலகத்தில் உள்ள எல்லா குடங்களும் அழிந்துபோனாலும் குடம் என்னும் கருத்து அல்லது ஒலி வடிவம் இருக்கவே செய்யும். இதைப் புரிந்துகொள்கிறாய் அல்லவா? அதுபோல் இந்தப் பிரபஞ்சம் அழிந்தாலும்

---

1. ரிக்வேதம், 10. 190. 3.

அதாவது பிரபஞ்சத்தை உருவாக்கியுள்ள எல்லா பொருட்களும் அணுஅணுவாகச் சிதைந்து போனாலும் அந்தப் பொருட்களைப் பற்றிய, உலகைப் பற்றிய கருத்து ஏன் இருக்கக் கூடாது? அவற்றிலிருந்து மீண்டும் படைப்பு ஏன் வர முடியாது?'

சீடர்: 'ஆனால் சுவாமிஜி, ''குடம், குடம்'' என்று கத்துவதால் குடம் வந்து விடுமா?'

சுவாமிஜி: 'வராது. நீயோ நானோ கூச்சலிட்டால் ஒன்றும் நடக்காது. ஆனால் எண்ணியது எண்ணியவாறு நிறைவேறப் பெறுபவரான அதாவது ஸித்த சங்கல்பரான பிரம்மத்தில் குடம் பற்றிய எண்ணம் எழுமானால் குடம் வந்தே தீரவேண்டும். சாத்தியமற்றவை என்று சொல்லப்படுபவை, சாதாரண சாதகர்களின் சங்கல்பத்தாலேயே நடைபெறும்போது, ஸித்த சங்கல்பரான பிரம்மத்தைப்பற்றி என்ன சொல்ல இருக்கிறது? படைப்பின் ஆரம்பத்தில் பிரம்மம் முதலில் ஒலி வடிவாகிறார், பின்னர் ''நாதம்'' அல்லது ''ஓம்'' வடிவாகிறார். அடுத்த நிலையில், முந்திய யுகங்களில் இருந்த பூமி, ஆகாசம், சொர்க்கம், அல்லது பசு, மனிதன், குடம், துணி முதலிய குறிப்பிட்ட ஒலிகள் அல்லது கருத்துக்கள் அந்த 'ஓம்' என்பதிலிருந்து வெளிவருகின்றன. ஸித்த சங்கல்பரான பிரம்மத்தில் இந்தக் கருத்துக்கள் ஒவ்வொன்றாகப் படிப்படியாகத் தோன்றுகின்ற கணமே அவற்றின் தூல வடிவங்களும் தோன்றி இந்த அற்புதப் பிரபஞ்சம் ஆகிறது. ஒலியே படைப்பின் அடிப்படை என்பது இப்போது புரிகிறதா?'

சீடர்: 'ஆம், ஏதோ சிறிது புரிகிறது. ஆனால் தெளிவாகப் புரியவில்லை'.

சுவாமிஜி: 'நல்லது மகனே! தெளிவாகப் புரிந்துகொள்வது, அதாவது பிரத்தியட்ச அனுபவம் பெறுவது சாதாரண விஷயமா என்ன? மனம் பிரம்மத்தில் மூழ்கும்போது, ஒன்றன்பின் ஒன்றாக இத்தகைய நிலைகளையெல்லாம் கடந்து இறுதியாக நிர்விகல்ப சமாதியை அடைகிறது—முதலில் இந்த உலகம் எண்ணமயமாகத் தெரியும். பிறகு எல்லாமே ஆழ்ந்த ஓங்காரத்திற்குள் ஒடுங்கும். பிறகு அதுவும் கேட்காமல் போய்விடும். அது இருக்கிறதா இல்லையா என்று தோன்றும். இதுதான் அனாதி நாதம். பின்னர் மனம் சுத்தப் பிரம்மத்தில் ஒடுங்கிவிடும். அவ்வளவுதான்—எல்லாம் அமைதி!'

பிரம்மத்தை அடையும் இந்த நிலையைச் சொந்த அனுபவம் இல்லாத யாராலும் இவ்வளவு தெளிவாக விளக்க

முடியாது என்று நினைத்தபடி வாயடைத்துப் போய் உட்கார்ந் திருந்தார் சீடர்.

சுவாமிஜி பேச்சைத் தொடர்ந்தார்: 'அவதாரபுருஷர் களுக்கு இணையான மகாபுருஷர்கள் சமாதியிலிருந்து ''நான்'', ''எனது'' என்னும் சாதாரண உலக நிலைக்குத் திரும்பும் போது, தோன்றா நிலையிலுள்ள நாதத்தையே முதலில் அனுபவிக்கிறார்கள். பின்னர், படிப்படியாக நாதம் தெளிவாகி, ஓங்காரத்தை அனுபவிக்கிறார்கள். ஓங்காரத்திலிருந்து நாதமயமான உலகை உணர்கிறார்கள். இறுதியாக, தூலப் பிரபஞ்சத்தை உணர்கிறார்கள். ஆனால் சாதாரண சாதகர்கள் மிகவும் சிரமப்பட்டுதான் நாதத்தைக் கடந்து சென்று பிரம்ம அனுபவம் பெறுகிறார்கள். அவர்களால் மீண்டும் இந்தச் சாதாரண உலக நிலைக்குத் திரும்ப முடியாது. அவர்கள் ''க்ஷீரே நீரவத்—பாலில் நீர்போல்'' பிரம்மத்தில் கரைந்து விடுவார்கள்.'

படைப்பைப் பற்றிய இத்தகைய பேச்சு நடந்து கொண் டிருந்தபோது கிரீஷ்சந்திர கோஷ் வந்தார். சுவாமிஜி அவரை மிகுந்த மரியாதையோடு வரவேற்றுவிட்டுச் சீடரிடம் தொடர்ந்து பேசினார்:

'சப்தம் இரண்டாகப் பிரிக்கப்பட்டுள்ளது: ஒன்று வைதீகம், மற்றது லெளகிகம். இந்தப் பிரிவை நான் ''சப்தசக்தி ப்ரகாசிகா'' என்னும் நியாய நூலில் கண்டேன். அதில் கூறப் படும் வாதங்கள் உண்மையில் சிந்தனையின் மிக ஆழ்ந்த சக்தி யைக் காட்டுகின்றன. ஆனால் அதில் வரும் கலைச்சொற்களைப் பார்த்தால் தலை சுற்றுகிறது.'

பின்னர் சுவாமிஜி கிரீஷின் பக்கம் திரும்பி, 'ஜி.சி. என்ன சொல்கிறீர்கள்? ஆமாம். இதையெல்லாம் நீங்கள் படிக்கிறீர் களா என்ன? விஷ்ணுகிஷ்ணு என்றே உங்கள் வாழ்நாள் கழி கிறது' என்றார்.

கிரீஷ்: 'சகோதரா, நான் எதையென்று படிப்பேன்! அதற் கான நேரமும் இல்லை, ஆர்வமும் இல்லை. ஆனால் இந்த முறை குருதேவரின் திருவருளால் உங்கள் வேத வேதாந் தங்களுக்கு எல்லாம் ஒரு கும்பிடு போட்டபடி, அவற்றை ஒரே தாண்டாகத் தாண்டிவிடுவேன். அவர் உங்களை இதை யெல்லாம் படிக்க வைத்தார். ஏனெனில் உங்கள்மூலம் அவர் பல காரியங்களைச் செய்ய விரும்புகிறார். எனக்கு அவை யெல்லாம் தேவையில்லை.'

இதைச் சொல்லிவிட்டு கிரீஷ் அந்தப் பெரிய ரிக்வேதப் புத்தகங்களை மீண்டும்மீண்டும் தலையால் தொட்டு வணங்கியபடியே, 'வேத வடிவாக இருக்கும் ஸ்ரீராமகிருஷ்ணருக்கு வணக்கம்' என்று திரும்பத்திரும்பக் கூறினார்!

சுவாமிஜி ஆழ்ந்த அமைதியில் மூழ்கியிருந்தார். கிரீஷ் திடீரென்று அவரை அழைத்து, 'நான் ஒன்று சொல்ல வேண்டும். வேத, வேதாந்தங்களை எல்லாம் நீங்கள் நன்றாகப் படித்திருக்கிறீர்கள். ஆனால் இங்கு நாம் தினமும் காண்கின்ற வேதனைகள், வறுமை, விபச்சாரம், கருக்கலைப்பு போன்ற கொடுமைகளைப் போக்குவதற்கான வழி அவற்றுள் எங்காவது கூறப்பட்டிருக்கிறதா?' என்று கேட்டார். மேலும் தொடர்ந்து சமுதாயத்தின் கொடுமைகளையும், பாவங்களையும், மக்கள் படும் வேதனைகளையும் திரும்பத்திரும்ப அழுத்தமாகக் கூறிக்கொண்டே இருந்தார். சுவாமிஜி ஒன்றும் பேசாமல் அப்படியே உட்கார்ந்திருந்தார். இந்த நாட்டில் தமது சகோதர சகோதரிகளான மக்கள் படும் துயரங்களும் சோதனைகளும் மனத்தில் புகுந்ததால் அவரது கண்களில் கண்ணீர் பொங்கியது. அந்த உணர்ச்சிகளை மறைப்பதற்காக அங்கிருந்து எழுந்து சென்றார்.

அவர் போனதும் கிரீஷ் சீடரிடம் கூறினார்: 'ஏ வங்காளி, பார்த்தாயா? என்ன அன்புமயமான இதயம்! வெறும் இந்த வேதங்களில் புலமை பெற்றதற்காக நான் உங்கள் சுவாமிஜியை மதிக்கவில்லை. உயிர்களின் துன்பம் கண்டு, இங்கிருந்து எழுந்து போய்த் தனிமையில் அழுது துடிக்கிறாரே! அந்த மகத்தான இதயத்திற்காகத்தான் நான் அவரைப் போற்றுகிறேன்.'

சீடரும் கிரீஷும் நெடுநேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். ஞானமும் பக்தியும் கடைசியில் ஒன்றாக இருப்பதை கிரீஷ் விளக்கித் தெளிவுபடுத்தினார். இதற்குள் சுவாமிஜி மீண்டும் அறைக்குள் வந்து சீடரிடம், 'நெடுநேரமாக என்ன பேசிக் கொண்டிருக்கிறீர்கள்?' என்று கேட்டார். சீடர், 'வேதங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். ஆச்சரியம் என்னவென்றால் கிரீஷ் பாபு இந்த வேதங்களை எல்லாம் படிக்கவில்லை. ஆனால் வேதங்களின் அறுதி உண்மைகளைத் தெளிவாக அறிந்து கொண்டிருக்கிறார்' என்றார்.

சுவாமிஜி: 'குருபக்தி உள்ளவனுக்கு எல்லா ஞானங்களும் தானாகவே வாய்க்கிறது. அவர்கள் படிக்கவோ கேட்கவோ வேண்டியதில்லை. அத்தகைய பக்தியும் நம்பிக்கையும் இந்த

உலகில் மிகவும் அருமை. கிரீஷ் பாபுவிடம் இருக்கும் பக்தியும் நம்பிக்கையும்போல் ஒருவருக்கு இருந்தால் அவர்கள் சாஸ்திரங்களைப் படிக்க வேண்டியதே இல்லை. ஆனால் அவரைக் காப்பியடிக்க ஒருவன் நினைத்தால் அவனுக்கு அழிவு நிச்சயம். அவரது அறிவுரைகளைப் பின்பற்று. ஒருபோதும் அவரைக் காப்பியடிக்க முயலாதே.'

சீடர்: 'சரி சுவாமிஜி.'

சுவாமிஜி: 'வெறுமனே சரி என்பதில் பயனில்லை. நான் சொல்லியதன் பொருளைப் புரிந்துகொள். சொல்பவற்றிற்கெல்லாம் முட்டாள்போல் தலையை ஆட்டாதே. நான் சொன்னாலும் நம்பாதே. முதலில் புரிந்துகொண்டு பின்னர் ஏற்றுக்கொள். தாம் சொல்வதை நன்றாகப் புரிந்துகொண்ட பிறகே அதை ஏற்றுக்கொள்ளும்படி என்னை வற்புத்துவார் குருதேவர். தெளிவான பகுத்தறிவு, சாஸ்திர உண்மைகள் இவற்றின் துணையுடன் உன் வழியில் செல். தொடர்ந்து பகுத்தறிவதால் புத்தி தெளிவடையும்; அந்தப் புத்தியில் பிரம்மம் பிரதிபலிக்க முடியும் புரிகிறதா?'

சீடர்: 'புரிந்துகொண்டேன். ஆனால் பலர் கூறும் பல்வேறு கருத்துக்களைக் கேட்டு மூளை குழம்புகிறது. இதோ கிரீஷ்பாபு, ''இந்தச் சாஸ்திரப் படிப்பை வைத்துக்கொண்டு நீ என்ன செய்ய முடியும்?'' என்று கேட்டார். இப்போது நீங்கள் பகுத்தறிந்து ஆராயச் சொல்கிறீர்கள். நான் செய்ய வேண்டியது என்ன?'

சுவாமிஜி: 'நாங்கள் இருவர் சொன்னதும் உண்மைதான். ஆனால் இரண்டும் இருவேறு கோணங்களிலிருந்து சொல்லப்பட்டன. எல்லா வாதங்களும் கேள்விகளும் ஊமையாகிப் போகின்ற ஒரு நிலை உள்ளது: ''மூகாஸ்வாதனவத்—ஊமை கண்ட சுவைபோல்.'' மற்றொரு நிலை இருக்கிறது: அதாவது, வேதங்கள் முதலான சாஸ்திரங்களைப் படிப்பதன்மூலமும் பாராயணம் செய்வதன்மூலமும் உண்மையை அடைய முடியும். உனது வழி இதுவே, இதன்மூலமே நீ உண்மையை அறிவாய். புரிகிறதா?'

சுவாமிஜியிடம் இத்தகைய ஆணையைப் பெற்ற சீடர், அது கிரீஷ் பாபு கூறியதற்கு மாறானது என்று தவறாக எண்ணினார். அதை கிரீஷுக்குச் சுட்டிக்காட்டவும் எண்ணிய அவர் கிரீஷிடம், 'கேட்டீர்களா? சுவாமிஜி என்னை வேத வேதாந்தங்களைப் படிக்கவும் ஆராயவும் சொல்கிறார்' என்றார்.

கிரீஷ்பாபு: 'நல்லது. நீ அப்படியே செய். சுவாமிஜியின் ஆசியால் நிச்சயமாக வெற்றி பெறுவாய்.'

அந்த வேளையில் சுவாமிஜியின் சீடரான சுவாமி சதானந்தர் அங்கு வந்தார். சுவாமிஜி அவரிடம், 'இப் போது ஜி.சி. உருக்கமாகச் சொல்லிக் கொண்டிருந்த நம் நாட்டின் துயரங்களைக் கேட்டு என் இதயம் வேதனையில் துடிக்கிறது. நம் நாட்டிற்காக உன்னால் ஏதாவது செய்ய முடியுமா?'

சதானந்தர்: 'சுவாமிஜி, தங்கள் கட்டளை பிறக்கட்டும். அடிமை தயாராக இருக்கிறேன்.'

சுவாமிஜி: 'முதலில் சிறிய அளவில் நிவாரண முகாம் ஒன்றை ஆரம்பி. அங்கே ஏழைகளும் துயரப்படுபவர்களும் உதவி பெற வேண்டும். நோயுற்றவர்களுக்குச் சேவைசெய்ய வேண்டும். துணைக்கு யாருமே இல்லாதவர்களுக்கு ஜாதி, இன வித்தியாசமில்லாமல் சேவை செய்ய வேண்டும்.'

சதானந்தர்: 'உங்கள் கட்டளைப்படியே செய்கிறேன்.'

சுவாமிஜி: 'உயிர்களுக்குச் செய்கின்ற சேவையைவிடப் பெரிய தர்மம் எதுவுமில்லை. உண்மையாக இந்தத் தர்மம் செய்யப்படுமானால், சம்சாரத்தளை எளிதில் உடைந்துவிடும்; முக்தி: கரபலாயதே—உள்ளங்கை நெல்லிக்கனிபோல் முக்தி கிடைத்துவிடும்.'

கிரிஷ்பாபுவைப் பார்த்தபடி சுவாமிஜி பேசினார்: 'கிரீஷ்பாபு இப்போது எனக்கு என்ன தோன்றுகிறது தெரியுமா? இந்த உலகின் துன்பங்களை நீக்குவதற்காக ஆயிரம் பிறவி களை எடுக்க வேண்டியிருந்தாலும் நான் நிச்சயம் பிறப்பேன். அதனால் யாராவது ஒருவரின் துயரம் சிறிதளவு துடைக்கப் படுமானால்கூட நான் அதைச் செய்வேன். தனக்கு மட்டுமே முக்தி கிடைக்கப் பாடுபடுவதால் என்ன பயன் என்று தோன்றுகிறது. எல்லோரையும் தன்னுடன் அந்த முக்திப் பாதையில் அழைத்துச் செல்ல வேண்டும். ஏனோ இப்படி என் மனத்தில் தோன்றுகிறது. ஏன் என்பதைச் சொல்லுங்கள், பார்க்கலாம்.'

கிரீஷ்: 'ஆகா, இப்படித் தோன்றவில்லை என்றால், மற்ற வர்களைவிட உயர்ந்தவர் என்று உங்களை ஸ்ரீராமகிருஷ்ணர் ஏன் சொல்ல வேண்டும்?'

இதைக் கூறிவிட்டு, கிரீஷ் பாபு வேறு வேலை இருப்பதாகக் கூறி விடை பெற்றார்.

## 10

ஆலம்பஜார் மடம், 1897

மேலை நாட்டிலிருந்து முதன்முறையாகக் கல்கத்தா திரும்பிய பின் தம்மைக் காண வருகின்ற இளைஞர்களிடம் பிரம்மச் சரியம், தியாகம் போன்றவைபற்றியே சுவாமிஜி உற்சாகத்துடன் பேசினார். யாராவது துறவியாகும் விருப்பம் தெரிவித்தால் அதற்காக அவரிடமிருந்து மகத்தான பாராட்டுதல்களும் அன்பும் கிடைத்தன. அவரது இந்த உற்சாகத்தால் உத்வேகம் பெற்று, தங்களுடைய அதிர்ஷ்டம் காரணமாகக் குடும்ப வாழ்க்கையை உதறிவிட்டு, பல இளைஞர்கள் தீட்சை பெற்றுத் துறவிகளாயினர். அவர்களுள் முதல் நான்கு இளைஞர்கள்[1] ஆலம்பஜார் மடத்தில் சன்னியாச தீட்சை பெற்றபோது சீடர் அங்கே இருந்தார்.

முன்பொரு முறை ஒரு குறிப்பிட்ட இளைஞனுக்கு சுவாமிஜி சன்னியாச தீட்சை தரக் கூடாது என்று சுவாமிஜி யின் சகோதரச் சீடர்கள் கேட்டுக் கொண்டதாகவும், அதற்கு சுவாமிஜி, 'பாவிகள், துயரில் உழல்பவர்கள், ஏழைகள், சம்சாரத் தீயில் துடிப்பவர்கள், வழிதவறியவர்கள் இவர்களின் மோட் சத்திற்கு, மேன்மைக்குப் பாடுபடாமல் நாமும் ஒதுங்கிக் கொண் டால், வேறு யார்தான் அவர்களுக்காகக் கவலைப்படுவார்கள்? எனவே தயவுசெய்து இந்த விஷயத்தில் நீங்கள் குறுக்கே நிற் காதீர்கள்' என்று சொன்னாராம். சீடர் இதை அறிந்திருந்தார். சுவாமிஜியின் இந்த வார்த்தைகளைக் கேட்டதும் மற்றவர்கள் அமைதியாகி விட்டார்கள். ஆதரவற்றவர்களின் அடைக்கல மாக விளங்கும் அவர் எப்போதும்போல் அந்த இளைஞனுக்கு சன்னியாச தீட்சை தர முடிவு செய்தார்.

சீடர் கடந்த இரண்டு நாட்களாக மடத்தில் தங்கியிருக் கிறார். சுவாமிஜி அவரை அழைத்து, 'நல்லது, நீ புரோகிதக் குடும்பத்தைச் சேர்ந்தவன். அதனால் சன்னியாச தீட்சை பெற இருப்பவர்கள் இன்று சிராத்தச் சடங்கு செய்வதற்கான ஏற்பாடுகளைச் செய். நாளை அவர்களுக்கு நான் சன்னியாச தீட்சை தருகிறேன். இன்றைய சடங்கைக் கூறும் சாஸ்திரங் களைப் படித்து வைத்துக்கொள்' என்றார். சீடரும் அவ் வாறே செய்தார்.

---

1. சுவாமி நித்யானந்தர், விரஜானந்தர், பிரகாசானந்தர் மற்றும் நிர்பயானந்தர்.

துறவற வாழ்வின் கடுமையான விதிகளை எண்ணிச் சீடரின் மனம் மிகவும் வருத்தமுற்றது. இதை உணர்ந்த சுவாமிஜி, 'இந்த அனுபவத்தால் மனத்தில் ஒருவகைப் பயம் ஏற்பட்டிருக்கிறது அல்லவா?' என்றார். சீடர் மௌனமாக அதை ஆமோதித்தார். சுவாமிஜி தொடர்ந்தார். 'உலகத்தைப் பொறுத்தவரை இன்றிலிருந்து இந்த நால்வரும் செத்து விட்டார்கள்; நாளையிலிருந்து புதிய உடம்பு, புதிய எண்ணங்கள், புதிய ஆடை எல்லாம் பெறப் போகிறார்கள். சுடர் விட்டெரியும் நெருப்பு சுவாலைபோல் இவர்கள் பிரம்மவீர்யத்துடன் ஒளிரப் போகிறார்கள். ''ந கர்மணா ந ப்ரஜயா தனேன த்யாகேனைகே அம்ருதத்வ மானசு:—செயல்களால் அல்ல, சந்தான விருத்தியால் அல்ல, செல்வத்தால் அல்ல, தியாகத்தால் மட்டுமே மரணமிலாப் பெருநிலை அடையப்படுகிறது.'[1]

சடங்கு முடிந்ததும் நான்கு பிரம்மச்சாரிகளும் சுவாமிஜியின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினர். சுவாமிஜி அவர்களிடம், 'மனித வாழ்வின் மிக உயர்ந்த நிலையை ஏற்றுக்கொண்டிருக்கிறீர்கள். உங்கள் பிறவி புண்ணியமானது; குடும்பங்கள் புண்ணியமானவை, உங்களைத் தாங்கிய அன்னையர் புண்ணியம் பெற்றவர்கள். ''குலம் பவித்ரம் ஜனனீ க்ருதார்த்தா —குலம் முழுவதுமே புனிதம் அடைகிறது; தாய், வாழ்வின் மிக உயர்ந்த சிறப்பைப் பெறுகிறாள்''[2] என்று கூறி ஆசீர்வதித்தார்.

இரவு உணவு முடிந்தது. சுவாமிஜி துறவற வாழ்வின் பெருமைகளை மட்டுமே பேசிக் கொண்டிருந்தார். அன்று சன்னியாச தீட்சை பெற்ற அந்த இளைஞர்களிடம் அவர் கூறினார்: 'சன்னியாச வாழ்வின் உண்மையான நோக்கம், ''ஆத்மனோ மோக்ஷார்த்தம் ஜகத் ஹிதாய ச—சொந்த முக்தியும் உலக நன்மையும்''தான். சன்னியாசம் பெறாமல் ஒருபோதும் பிரம்மஞானியாக முடியாது. இது வேத வேதாந்தங்களில்

---

1. கைவல்ய உபநிடதம், 3.
2. குலம் பவித்ரம் ஜனனீ க்ருதார்த்தா
வஸுந்தரா புண்யவதீ ச தேன।
அபார ஸச்சித்ஸுக ஸாகரேऽஸ்மின்
லீனம் பரே ப்ரஹ்மணி யஸ்ய சேத:॥ —ஸூத ஸம்ஹிதை, 2. 20. 45
—கரை காண முடியாத உண்மை–அறிவு–இன்பக் கடலாகிய பரப்பிரம்மத்தில் யாருடைய மனம் ஒடுங்கியுள்ளதோ, அவர் பிறந்த குலம் முழுவதுமே புனிதம் அடைகிறது; தாய், வாழ்வின் மிக உயர்ந்த சிறப்பைப் பெறுகிறாள்; பூமியே புண்ணியம் பெறுகிறது.

எல்லாம் கூறப்பட்டுள்ளது. ''உலகியல் வாழ்வையும் வாழ்வோம், பிரம்மத்தையும் அறிவோம்'' என்று கூறுபவர்களின் பேச்சைக் கேட்காதீர்கள். அது ரகசியமாக போகத்தை விரும்புபவர்கள் தங்களைத் தாங்களே ஆறுதல் படுத்துவதற்காகச் சொல்லிக்கொள்ளும் வார்த்தைகள். சிறிதேனும் போக நாட்டம் உள்ளவர்கள், இம்மியளவேனும் ஆசை இருப்பவர்கள் இந்தத் துறவு வாழ்வை நினைத்தாலே பயப்படுவார்கள். அத்தகையவர்கள் தங்களைத் தாங்களே தேற்றிக் கொள்வதற்காகப் போகம், தியாகம் என்னும் இரண்டையும் இணைத்து உபதேசம் செய்கிறார்கள். இவையெல்லாம் பைத்தியக்காரர்களின் பிதற்றல், பித்தம் முற்றிப்போனவர்களின் உளறல்கள், சாஸ்திர சம்மதம் இல்லாதவை, அவைதீகமானவை. தியாகம் இல்லாமல் முக்தி இல்லை. தியாகம் இல்லாமல் மிக உயர்ந்த தான பராபக்தி இல்லை. தியாகம், தியாகமே வேண்டியது. ''நான்ய: பந்தா வித்யதேऽயனாய—அதைத் தவிர வேறு வழியே இல்லை.'' கீதையில்கூட, ''காம்யானாம் கர்மணாம் ந்யாஸம் ஸந்யாஸம் கவயோ விது:—ஆசைகளோடு கூடிய செயல்களைத் துறப்பதே சன்னியாசம் என்பதை மகான்கள் அறிவார்கள்.''[1] என்று கூறப்பட்டுள்ளது.

'சம்சாரம் என்னும் தொல்லையை விலக்காமல் யாரும் முக்தி பெற முடியாது. சிலர் சம்சார வாழ்வில் உழல்கிறார்கள் என்ற உண்மையே, அவர்கள் ஏதோ ஆசைகளுக்கு அடிமைகளாக இருக்கிறார்கள் என்பதற்கு நிரூபணமாகும். இல்லையெனில் ஒருவன் ஏன் இந்த உலக வாழ்வில் ஒட்டிக் கொண்டிருக்க வேண்டும்? காமம், பணம், அதிகாரம், புகழ், படிப்பு, புலமை என்று ஏதோ ஒன்றிற்கு அவன் அடிமையாக இருக்கிறான். இத்தகைய எல்லா அடிமைத்தனங்களிலிருந்தும் தன்னை விடுவித்துக்கொண்ட பிறகுதான் முக்திப் பாதையில் முன்னேற முடியும். யார் என்ன வேண்டுமானாலும் சொல்லட்டும். நான் புரிந்துகொண்டது என்ன தெரியுமா? இவற்றையெல்லாம் விடாமல், சன்னியாச வாழ்வைத் தழுவாமல் யாரும் காப்பாற்றப்படப் போவதில்லை; பிரம்ம ஞானத்தை அடைவதும் சாத்தியமில்லை.'

சீடர்: 'சன்னியாசத்தை ஏற்றுக்கொள்வதாலேயே நிறை நிலையை அடைய முடியுமா?'

---

1. கீதை, 18. 2.

சுவாமிஜி: 'நிறைநிலையை அடைகிறோமா இல்லையா என்பதல்ல பிரச்சினை. நீ இந்தச் சம்சாரச் சக்கரத்திலிருந்து வெளியேறாதவரை, ஆசை என்னும் அடிமைத்தனத்தை அகற்றாதவரை, உன்னால் பக்தியையோ முக்தியையோ அடைய முடியாது. பிரம்ம ஞானிகளுக்குச் சித்திகளும் செல்வமும் எல்லாம் மிகமிகத் துச்சமானவை.'

சீடர்: 'சன்னியாசத்திற்கென்று ஏதாவது சிறப்பான நேரம் இருக்கிறதா? பல்வேறான சன்னியாசங்கள் உள்ளனவா?'

சுவாமிஜி: 'சன்னியாச வாழ்க்கைக்கென்று குறிப்பிட்ட நேரம் எதுவும் இல்லை. ''யதஹரேவ விரஜேத் ததஹரேவ ப்ரவ்ரஜேத்—துறவு மனப்பான்மை வந்தவுடனேயே சன்னியாச வாழ்வை ஏற்றுக்கொள்''[1] என்று வேதங்கள் கூறுகின்றன. யோக வாசிஷ்டத்திலும்,

''யுவைவ தர்மசீல: ஸ்யாத் அனித்யம் கலு ஜீவிதம் |
கோ ஹி ஜானாதி கஸ்யாத்ய ம்ருத்யுகாலோ
பவிஷ்யதி ?

—வாழ்க்கை நிலையற்றதாக இருப்பதால் ஒருவன் இளமையிலேயே ஆன்மீக வாழ்விற்குத் தன்னை அர்ப்பணித்துக் கொள்ள வேண்டும். இந்த உடம்பு எப்போது விழும் என்பது யாருக்குத் தெரியும்?'' என்று கூறப்பட்டுள்ளது.

'சாஸ்திரங்களில் நான்கு வகையான சன்னியாசங்கள் கூறப்படுகின்றன. அவை (1) வித்வத் (2) விவிதிஷா (3) மர்க்கடம் (4) ஆதுரம்.

'திடீரென்று தீவிர வைராக்கியம் உண்டாகி சன்னியாசம் பெறுவது வித்வத் சன்னியாசம். முற்பிறவி சம்ஸ்காரங்கள் இல்லாமல் இது ஒருபோதும் ஏற்பட முடியாது.

'ஆன்மாவை உணர வேண்டும் என்ற பேரார்வத்தால் உந்தப்பட்டு, சாஸ்திர பாராயணம் மற்றும் சாதனைகள் வாயிலாகத் தனது சொந்த இயல்பை உணர்வதற்காக, பிரம்மஞானியான ஒருவரிடமிருந்து சன்னியாசம் பெற்று, பாராயணம், சாதனை என்று வாழ்வது விவிதிஷா சன்னியாசம்.

'வாழ்க்கையில் பெறுகின்ற அடிகள், மிக நெருங்கியவரின் மரணம் போன்ற ஏதோ காரணங்களால் ஏற்றுக்கொள்வது மர்க்கட சன்னியாசம். இந்த வைராக்கியம் நெடுநாட்கள் நிலைக்காது. இத்தகைய சன்னியாசத்தைப்பற்றி ஸ்ரீராமகிருஷ்ணர்,

1. ஜாபால உபநிடதம், 4.

''இப்படிப்பட்டவன் வீட்டைவிட்டு நெடுந்தொலைவு போய் விடுவான். அங்கே என்ன? ஒரு நல்ல வேலை கிடைத்துவிடும். பிறகு மனைவியைத் தன்னிடம் சேர்ப்பதற்கான ஏற்பாடுகள் நடக்கும். இல்லையென்றால் புதிதாகக் கல்யாணம் செய்து கொள்வான்'' என்று கூறுவார்.

'தீராத நோய் காரணமாகப் படுத்த படுக்கையில் இருக்கிறான் ஒருவன். பிழைப்பதற்கான வழியே இல்லை. அவனுக்குச் சாஸ்திரங்கள் விதித்துள்ளது ஆதுர சன்னியாசம். அந்த சன்னியாசப் பிரமாணத்தை எடுத்துக்கொண்டு அவன் இறந்து போனால் அந்தப் புண்ணியத்தால் அடுத்தது அவனுக்கு நற்பிறவி வாய்க்கும். ஒருவேளை பிழைத்துக் கொள்வானானால் அவன் பழைய வாழ்க்கைக்குத் திரும்ப மாட்டான். எஞ்சிய வாழ்நாளை பிரம்மஞானத்தை அடையும் முயற்சியிலேயே செலவிடுவான். சுவாமி சிவானந்தர் உன் சித்தப்பாவுக்கு இத்தகைய சன்னியாசம் கொடுத்தார். அவர் இறந்துவிட்டார். அந்தத் தீட்சையின் காரணமாக அவருக்கு உயர்ந்த பிறவி கிடைக்கும். என்னதான் ஆனாலும் ஆன்ம ஞானம் பெற சன்னியாசத்தைத் தவிர வேறு வழி எதுவும் இல்லை.'

சீடர்: 'அப்படியென்றால் இல்லறத்தார்களின் கதி என்ன?'

சுவாமிஜி: 'ஏன்? அவர்கள் செய்யும் நற்செயல்களின் பலனாக அடுத்த ஏதாவது பிறவியில் வைராக்கியம் பெறுவார்கள். வைராக்கியம் வந்தால் எல்லாம் வந்துவிடும். பின்னர் தாமதமின்றி பிறப்பு இறப்பு என்னும் புதிருக்கு விடை கிடைத்துவிடும். ஆனால் எல்லா விதிகளுக்கும் விலக்குகள் உண்டு. இல்லறதர்மத்தை நிறைவு செய்தவாறே ஓரிருவர் முக்த புருஷர்களாகவும் செய்கிறார்கள். உதாரணத்திற்கு நாகமகாசயர்.'

சீடர்: 'சுவாமிஜி, உபநிடதங்கள் முதலான நூல்கள்கூட வைராக்கியம், சன்னியாசம் போன்றவைபற்றித் தெளிவாகக் கூறவில்லையே?'

சுவாமிஜி: 'என்ன பைத்தியக்காரனைப்போல் உளறுகிறாய்? உபநிடதங்களின் சாரமே வைராக்கியம்தான். விவேகத்தால் வரும் ஆன்ம ஒளியே உபநிடதங்களின் அறுதி லட்சியம். என்றாலும் புத்தர் காலத்திலிருந்துதான் இந்தத் தியாக தர்மம் இந்தியா முழுவதும் சிறப்பாகப் பிரச்சாரம் செய்யப்பட்டது என்பது என் நம்பிக்கை. அப்போதிலிருந்துதான் புலனின்பங்களை விடுவது என்பது ஆன்மீக வாழ்வின் மிக உயர்ந்த லட்சியமாகக் கொள்ளப்பட்டது. புத்த மதத்தின் இந்தத்

தியாக வைராக்கியக் கொள்கையை இந்து மதம் அப்படியே ஏற்றுக்கொண்டது. புத்தரைப் போன்று மகத்தான தியாகி இந்த உலகத்தில் பிறந்ததே இல்லை.'

சீடர்: 'அப்படியென்றால் புத்தருக்கு முன்பு தியாக வைராக்கிய லட்சியம் இந்த நாட்டில் மிகக் குறைவாக இருந்தது என்று கூறுகிறீர்களா? நாட்டில் துறவிகளே இருக்கவில்லையா?'

சுவாமிஜி: 'யார் அப்படிச் சொன்னது? சன்னியாச அமைப்பு இருந்தது. ஆனால் அதுதான் வாழ்க்கையின் அறுதி லட்சியம் என்று சாதாரண மக்கள் அறிந்திருக்கவில்லை; அதில் அதிக ஆர்வம் காட்டவில்லை. ஆன்மீக ஆராய்ச்சிகளில் அவ்வளவு உறுதி இருக்கவில்லை. அதனால்தான் பல யோகிகளையும் சாதுக்களையும் நாடிச் சென்றபோதும் புத்தரால் சாந்தி பெற முடியவில்லை. அதன்பிறகு, ஆன்ம ஞானத்தை நாடி, ''இஹாஸனே சுஷ்யது மே சரீரம்—என் உடம்பு இங்கேயே உலர்ந்து வறண்டு போகட்டும்''[1] என்ற உறுதியுடன் ஓரிடத்தில் அமர்ந்தார்; ஞான ஒளி பெற்ற பிறகுதான் எழுந்தார். இந்தியாவில் நீ இப்போது பார்க்கின்ற மடங்கள் எல்லாம் ஒருகாலத்தில் பௌத்தர்களுக்குச் சொந்தமானவையாக இருந்தன. இந்துக்கள் அவற்றைக் கைப்பற்றித் தங்களுக்கு ஏற்றவகையில் மாற்றியமைத்துக் கொண்டார்கள். உண்மையைச் சொல்வதென்றால் துறவுப் பாதை என்பது புத்தருடன்தான் தோன்றியது. செத்துப் போயிருந்த இந்த அமைப்பிற்கு அவரே புத்துயிர் ஊட்டினார்.'

அப்போது சுவாமிஜியின் சகோதரச் சீடரான சுவாமிராமகிருஷ்ணானந்தர் குறுக்கிட்டு, 'ஆனால் புத்தர் பிறக்குமுன்பே நான்கு ஆசிரமப் பிரிவுகளும்[2] இருந்தன என்பதற்கு ஸம்ஹிதைகளும் புராணங்களும் ஆதாரமாக உள்ளனவே' என்றார்.

சுவாமிஜி: 'பெரும்பாலான புராணங்களும், மனு முதலிய தர்ம சாஸ்திரங்களும், மகாபாரதத்தில் பல பகுதிகளும்

---

1. இஹாஸனே சுஷ்யது மே சரீரம்
த்வகஸ்தி மாம்ஸம் விலயம் ச யாது।
அப்ராப்ய போதிம் பஹுகல்ப துர்லபாம்
நைவாஸனாத் காயமிதச் சலிஷ்யதி॥

—லலித விஸ்தாரம்

—என் உடம்பு இங்கேயே உலர்ந்து வறண்டு போகட்டும். தோலும் எலும்பும் சதையும் இற்று அழியட்டும். காலங்காலமாக முயன்றாலும் கிடைப்பதற்கு அரிதான அந்த மெய்யுணர்வைப் பெறாமல் இங்கிருந்து எழமாட்டேன்.

2. பிரம்மச்சரியம் (மாணவ நிலை), கார்ஹஸ்த்யம் (இல்லறம்), வானப்ரஸ்தம் (குடும்பக் கடமைகளிலிருந்து ஓய்வு பெற்ற நிலை), சன்னியாசம்.

காலத்தால் பிற்பட்டவை. பகவான் புத்தர் இவற்றிற்கு வெகுகாலம் முன்னதாக வாழ்ந்தவர்.'

ராமகிருஷ்ணானந்தர்: 'அது உண்மையென்று எடுத்துக் கொண்டால் வேதங்கள், உபநிடதங்கள், சம்ஹிதைகள், புராணங்கள் முதலியவற்றில் புத்த மதத்தைப் பற்றிய பேச்சுகள் காணப்பட வேண்டுமே! அந்த நூல்களில் அதைப் பற்றிய பேச்சே இல்லை. எனவே புத்தர் அவற்றிற்கு முற்காலத்தவர் என்று எப்படிச் சொல்ல முடியும்? சில பழைய புராணங்களில் புத்த மதத்தைப்பற்றி இங்கும் அங்குமாக சொல்லப்பட்டிருக் கிறது. அதை வைத்துக்கொண்டு இந்துக்களின் சம்ஹிதைகளும் புராணங்களும் பிற்காலத்தவை என்று முடிவு செய்துவிட இயலாது.'

சுவாமிஜி: 'வரலாற்றைப் படி. அப்போது புத்தமதக் கருத்துக்களை ஏற்றுக்கொண்டுதான் இந்துமதம் இவ்வளவு மகத்தான மதமாக ஆகியுள்ளது என்பதை நீ அறிந்து கொள்வாய்.'

ராமகிருஷ்ணானந்தர்: 'தியாகம், வைராக்கியம் முதலிய வற்றை வாழ்க்கையில் முழுக்கமுழுக்கப் பின்பற்றி, இந்துமதக் கருத்துக்களுக்குப் புத்துயிர் அளித்தது மட்டுமே புத்தரின் செயல் என்றே எனக்குத் தோன்றுகிறது.'

சுவாமிஜி: 'இதனை நிரூபிக்க முடியாது. ஏனெனில் புத்தர் பிறப்பதற்கு முன்பு நமக்கு எந்த வரலாறும் இல்லை. வரலாற்றை ஆதாரமாக ஏற்றுக்கொள்வதானால், புராதன காலம் என்னும் காரிருளில் புத்தர் ஒருவரே அறிவொளியுடன் சுடர் விடுகிறார்.'

சன்னியாசம் பற்றிய பேச்சு மறுபடியும் துவங்கியது.

சுவாமிஜி: 'சன்னியாசத்தின் தோற்றம் எப்போது வேண்டு மானாலும் இருந்துவிட்டுப் போகட்டும். மனித வாழ்வின் லட்சியம் இந்தத் தியாகப் பாதையை ஏற்றுக்கொண்டு, பிரம்ம ஞானியாவதே. வாழ்வில் அடைய வேண்டிய மிக மேலான நிலை சன்னியாசம்தான். வைராக்கியம் உதித்த பிறகு யார் உலக வாழ்வைத் துறக்கிறார்களோ அவர்களே பேறு பெற்றவர்கள்.'

சீடர்: 'ஆனால் துறவிகளின் எண்ணிக்கை அதிகரிப்பதால், நாட்டின் வளர்ச்சி தடைபடுவதாக இப்போது பலரும் கூறி வருகிறார்களே! சன்னியாசிகள் தங்கள் வாழ்க்கைக்கு இல்லறத் தார்களையே எதிர்பார்த்து எந்த வேலையும் செய்யாமல்

இருக்கிறார்கள். இது நாட்டின் சமுதாய உயர்விற்கோ பொருளாதார வளர்ச்சிக்கோ எந்த வகையிலும் உதவியாக இல்லை என்று அவர்கள் கருதுகிறார்கள்.'

சுவாமிஜி: 'பொருளாதார வளர்ச்சி அல்லது சமுதாய முன்னேற்றம் என்றால் என்ன என்பதைச் சற்று சொல் பார்க்கலாம்!'

சீடர்: 'மேலைநாட்டு மக்கள் கல்வியின் உதவியுடன் உணவு, உடை போன்ற முக்கியத் தேவைகளில் தன்னிறைவு பெற்றிருக்கிறார்கள். விஞ்ஞானத்தின் உதவியால் வாணிபம், கலை, உணவு, உடை, முதலியவற்றிலும் ரயில் மற்றும் தகவல் தொடர்பு சாதனங்களிலும் எவ்வளவோ வளர்ச்சி கண்டிருக் கிறார்கள். அதையே நான் சொல்கிறேன்.'

சுவாமிஜி: 'மனிதனிடம் இருக்கும் ராஜச சக்தி வெளி வராமல் இவையெல்லாம் நடக்கும் என்று நினைக்கிறாயா? இந்தியாவைச் சுற்றிப் பார்த்ததில் இத்தகைய ரஜஸின் வெளிப் பாட்டை நான் எங்கும் காணவில்லை. எங்குப் பார்த்தாலும் தமஸ், தமஸ். சாதாரண மக்கள் அனைவரும் ஆழ்ந்த தமஸில் தான் மூழ்கிக் கிடக்கிறார்கள். துறவிகளிடம் மட்டுமே நான் இந்த ரஜஸையும் சத்வத்தையும் காண முடிந்தது. அவர்களே இந்த நாட்டின் முதுகெலும்புகள்.

'உண்மையான துறவியரே இல்லறத்தாரின் வழிகாட்டிகள். துறவியரின் உபதேசத்தாலும் ஞான ஒளியாலும்தான் இல் லறத்தார் வாழ்க்கைப் போரில் பலமுறை வெற்றி முரசு கொட்டி யிருக்கிறார்கள். சாதுக்களின் இந்த விலைமதிப்பற்ற உபதேசங் களுக்குப் பதிலாகத்தான் இல்லறத்தார் அவர்களுக்கு உணவும் உடையும் தருகிறார்கள். இந்தக் கொடுக்கல்–வாங்கல் மட்டும் இல்லையென்றால் இதற்குள், அமெரிக்காவின் செவ்விந் தியர்கள் அமெரிக்காவில் இல்லாமல் போனதுபோல் இந்தியர் களும் இங்கு ஏறக்குறைய மறைந்து போயிருப்பார்கள். சாதுக் களுக்குச் சில பிடி உணவைக் கொடுத்துக் கொண்டிருப்பதால் தான் இல்லறத்தார் இன்றும் முன்னேற்றப் பாதையில் செல்ல முடிகிறது.

'துறவிகள் சோம்பேறிகளும் அல்ல. எல்லா வேலைகளுக் கும் அடி ஊற்றாக இருப்பது அவர்களே. துறவியின் வாழ்விலும் செயலிலும் உயர்ந்த லட்சியங்களின் வெளிப்பாட்டைக் கண்டும், அவர்களிடமிருந்து உயர் கருத்துக்களைப் பெற்றும் தான் இல்லறத்தார் இந்தக் கர்ம பூமியில், வாழ்க்கைப் போரில்

நிரம்பப் போராடினார்கள், போராடுகிறார்கள். புனிதத் துறவியரைக் கண்டுதான் அவர்கள் தங்கள் வாழ்வில் புனிதமான லட்சியங்களைப் பின்பற்றுகின்றனர்; அதனால் சரியான முறை யில் செயல்புரிகின்றனர். துறவிகள் இறைவனுக்காகவும் உலக நன்மைக்காகவும் அனைத்தையும் துறந்து, தியாகம் என்பதைத் தங்கள் வாழ்வில் வாழ்ந்துகாட்டி, இல்லறத்தார்களையும் நன்முயற்சிகளை மேற்கொள்ள உத்வேகப்படுத்துகிறார்கள். அதற்குப் பதிலாக அவர்களுக்குச் சில பிடி உணவை இவர்கள் தருகிறார்கள். இனி, அனைத்தையும் துறந்த துறவியரின் நல் வாழ்த்துக்களால்தான் இல்லறத்தாரிடம் அந்த உணவைப் பயிரிடுவதற்கான வழியும் திறமையும் வளர்கின்றன. இவற்றை யெல்லாம் உணர்ந்து கொள்ளாததால்தான் மக்கள் சன்னியாச அமைப்புகளைத் தூற்றுகிறார்கள். மற்ற நாடுகளில் இது எப்படி யாவது இருக்கலாம். ஆனால் இந்த நாட்டில் இல்லறத்தார்களின் வாழ்வெனும் கப்பல் கவிழாமல் இருப்பதன் காரணம், துறவியர் க்கான் பிடித்து அந்தக் கப்பலை வழிநடத்திச் செல்வதுதான்.'

சீடர்: 'ஆனால் உலக நன்மைக்காகத் தங்களை அர்ப்பணம் செய்துகொள்ளும் உண்மையான துறவியர் எத்தனைபேரைக் காண முடிகிறது?'

சுவாமிஜி: 'ஆயிரம் ஆண்டுகளுக்கு ஒருமுறை ஸ்ரீராம கிருஷ்ணரைப் போன்ற ஒரு துறவி தோன்றுவதே போது மானது. அத்தகைய ஒருவர் விட்டுச் செல்கின்ற உயர் லட்சியத்தையும் மேலான கருத்துக்களையும் வைத்துக்கொண்டு ஆயிரம் ஆண்டுகாலம் மக்கள் வாழ முடியும். இதுபோன்ற சன்னியாச ஆசிரமங்கள் இந்த நாட்டில் இருந்ததால் அல்லவா அவரைப் போன்ற மாமனிதர்கள் இங்கே தோன்றினர். வாழ்க்கையின் எல்லா நிலைகளிலுமே குறைகள் இருக்கத்தான் செய்கின்றன; சிலவற்றில் அதிகம், சிலவற்றில் குறைவு; அவ்வளவுதான். ஆனால் குறைகள் இருந்தும், இந்தத் துறவுநெறி மற்ற எல்லா வாழ்க்கை நிலைகளுக்கும் மேலாக இருக்கிறதே, அது ஏன்? ஏனெனில் உண்மையான துறவியர் தங்கள் சொந்த முக்தியைக்கூடத் துறந்துவிட்டு உலகத்திற்கு நன்மை செய்து வாழ்கின்றனரே, அதனால்தான். உலகிற்கு நன்மை செய்வதற் காகவே அவர்கள் பிறக்கின்றனர். அத்தகைய மேன்மை மிக்க சன்னியாச ஆசிரமத்திற்கு நீங்கள் நன்றியோடு இல்லை யென்றால், நீங்கள் கேவலமானவர்கள்; மறுபடியும் சொல் கிறேன்—நீங்கள் கேவலமானவர்களே.'

சுவாமிஜி இதைப் பேசும்போது அவரது முகமண்டலம் கொழுந்துவிட்டு எரிவதுபோல் இருந்தது. துறவின் மொத்த உருவமே அவர் வடிவத்தில் காட்சியளிப்பதுபோல் சீடருக்குத் தோன்றியது.

சன்னியாசத்தின் சிறப்பைத் தம் அகத்தின் ஆழத்தில் உணர்ந்தவராக, தம்முள் ஆழ்ந்தவராக சுவாமிஜி கீழ்வரும் பாடலைத் தமது இனிமையான குரலில்பாடினார்:

வேதாந்த வாக்யேஷு ஸதா ரமந்தோ பிக்ஷான்ன
மாத்ரேண ச துஷ்டிமந்த: ।
அசோகமந்த: கரணே சரந்த: கௌபீனவந்த:
கலு பாக்யவந்த: ॥[1]

—வேதாந்தக் கருத்துக்களில் ஆனந்தமாக உலவிக் கொண்டு, பிச்சையாகக் கிடைக்கும் உணவால் மட்டுமே திருப்தி யடைந்து, எத்தகைய துன்ப உணர்ச்சியாலும் தொடப்படாமல், நாடெங்கும் திரிந்துகொண்டு கோவணத்தை மட்டுமே அணி கின்றவர்களான துறவியர் உண்மையிலேயே பேறுபெற்ற வர்கள்.'

சுவாமிஜி தொடர்ந்து பேசினார்: 'பலரது நன்மைக் காகவும் பலரது மகிழ்ச்சிக்காகவும் துறவி பிறக்கிறான். துறவை மேற்கொண்டு, இந்த லட்சியத்தை மறப்பவனின் வாழ்க்கை முற்றிலும் வீண். பிறருக்காகத் தன் வாழ்வைத் தியாகம் செய்ய வும், மனிதர்களின் கொடிய துன்பங்களைத் தடுக்கவும், விதவை களின் கண்ணீர் துடைக்கவும், பிள்ளைகளை இழந்த தாய்மார் களின் உள்ளத்திற்கு அமைதியைத் தரவும், கல்வியறிவற்ற பாமர மக்களை வாழ்க்கைப் போராட்டத்திற்குத் தயார் செய்யவும், சாஸ்திர அறிவைப் புகட்டுவதன்மூலம் அனைவருக்கும் இவ் வுலகம் மற்றும் மறுவுலகில் நன்மை செய்யவும், ஞான ஒளியைப் பாய்ச்சுவதன் மூலம் எல்லோரிடமும் உறங்கிக் கொண்டிருக்கும் சிங்கமான பிரம்மத்தை எழுப்பவுமே சன்னியாசி இந்த உலகத்தில் பிறந்திருக்கிறான்.'

பிறகு சகோதரத் துறவியரைப் பார்த்தபடி, 'ஆத்மனோ மோக்ஷார்த்தம் ஜகத் ஹிதாய ச—சொந்த முக்திக்காகவும் உலக நன்மைக்காகவும் அமைந்ததே நமது வாழ்க்கை. பிறகு எதற் காகச் சோம்பேறித்தனமாக உட்கார்ந்திருக்கிறீர்கள்? எழுந் திருங்கள், விழித்திருங்கள், பிறரையும் விழிப்புணர்த்துங்கள்.

---

1. கௌபீன பஞ்சகம், ஆதி சங்கரர்.

இறப்பதற்குமுன் மனித வாழ்வின் நிறைவைப் பெறுங்கள். எழுந்திருங்கள், விழித்திருங்கள், லட்சியத்தை அடையும்வரை நில்லாதீர்கள்' என்றார்.

## 11

நவகோபால் கோஷின் வீடு,
ராமகிருஷ்ணபூர், ஹௌரா, பிப்ரவரி 6, 1898

ஹௌராவைச் சேர்ந்த ராமகிருஷ்ணபூரிலுள்ள நவ கோபால் கோஷ் என்பவரின் வீட்டில் இன்று ஸ்ரீராமகிருஷ்ண ரின் திருவுருவை நிறுவுகின்ற விழா. ராமகிருஷ்ண மடத்தின் துறவியரும் ஸ்ரீராமகிருஷ்ணரின் இல்லற பக்தர்களும் அழைக் கப்பட்டிருந்தனர்.

சுவாமிஜியும் பக்தர்களும் ஊர்வலமாக ஸ்ரீராமகிருஷ்ண பூரிலுள்ள குளிக்கும் துறையை அடைந்தனர். சுவாமிஜி மிக எளிமையான காவி உடை அணிந்திருந்தார். தலையில் தலைப் பாகை இருந்தது. செருப்பு அணியவில்லை. பாதையின் இரண்டு பக்கங்களிலும் அவரைக் காண்பதற்காக மக்கள் திரண்டிருந் தனர். சுவாமிஜி தாமே கோல்[1] வாத்தியத்தை வாசித்தவாறு, ஸ்ரீராமகிருஷ்ணரைப் பற்றிய புகழ்பெற்ற நாட்டுப் பாடலான, 'ஏழைப் பிராமணப் பெண்ணின் மடியில் படுத்திருக்கும் நீ யாரோ?' என்ற பாடலைப் பாடியபடியே ஊர்வலத்திற்குத் தலைமை தாங்கி முன்னே வந்தார். பக்தர்கள் அனைவரும் பாடலைப் பாடியபடி அவர் பின்னால் வந்தனர்.

ஊர்வலம் நவகோபாலின் வீட்டிற்கு வந்ததும் சுவாமிஜி திருவுருவை நிறுவப்போகும் வழிபாட்டறையைக் காண மாடிக் குச் சென்றார். அந்த அறையின் தரை பளிங்குக் கற்களால் பதிக்கப்பட்டிருந்தது. அதன் நடுவில் ஒரு சிம்மாசனம்! அதன் மீது ஸ்ரீராமகிருஷ்ணரின் வெண்களிமண் (Porcelain) திருவுரு வம் வைக்கப்பட்டிருந்தது. வழிபாட்டிற்கான ஏற்பாடுகள் அனைத்தும் அருமையாக இருந்தன. சுவாமிஜி மிகுந்த மகிழ்ச்சி அடைந்தார்.

நவகோபால் கோஷின் மனைவியும், அந்த வீட்டின் மற்ற பெண்களும் சுவாமிஜியின் முன் வீழ்ந்து வணங்கினர். நவ கோபாலின் மனைவி சுவாமிஜிக்கு விசிறத் தொடங்கினார். ஒவ்வோர் ஏற்பாட்டையும் சுவாமிஜி பாராட்டியதைக் கேட்ட அவள், 'ஸ்ரீராமகிருஷ்ணரை வழிபட எங்களிடம் என்ன தகுதி

1. மிருதங்கம் போன்ற ஒரு வாத்தியம்.

இருக்கிறது? இது ஏழையின் வீடு. எல்லா ஏற்பாடுகளுமே சாதாரணம். நீங்கள் கருணையுடன் அருள்கூர்ந்து அவரது திருவுருவை இங்கே பிரதிஷ்டை செய்து எங்களை ஆசிர்வதியுங்கள்' என்றார்.

அதற்கு சுவாமிஜி வேடிக்கையாக, 'உங்கள் ஸ்ரீராமகிருஷ்ணரும் சரி, அவரது பதினான்கு தலைமுறையினரும் சரி, இத்தகைய பளிங்குக்கல் பதித்த வீட்டில் வாழ்ந்ததில்லை. கிராமத்து ஓலைக்குடிசையில் அவர் பிறந்தார். வாழ்நாள் முழுவதும் அதிக வசதியில்லாமலே வாழ்ந்தார். இவ்வளவு அருமையான சேவை செய்யப்படும் இந்த இடத்தில் வாழவில்லையென்றால் வேறு எங்குதான் வாழ்வார்?' என்று கேட்டார். சுவாமிஜியின் இந்த வார்த்தைகள் எல்லோரையும் சிரிக்க வைத்தன.

பின்னர் சுவாமிஜி திருநீறு அணிந்து பூஜாரியின் இருக்கையில் அமர்ந்து, சுவாமி பிரகாசானந்தரின் உதவியுடன் பூஜையைத் தொடங்கினார். பூஜை முடிந்ததும் அங்கே இருந்தபடியே, பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரை வணங்குவதற்குரிய,

ஸ்தாபகாய ச தர்மஸ்ய ஸர்வ தர்ம ஸ்வரூபிணே ।
அவதார வரிஷ்டாய ராமக்ருஷ்ணாய தே நம: ॥[1]

என்ற மந்திரத்தை இயற்றினார். எல்லோரும் அந்த மந்திரத்தைக் கூறி ஸ்ரீராமகிருஷ்ணரை வீழ்ந்து வணங்கினர். மாலையில் சுவாமிஜி பாக்பஜார் திரும்பினார்.

## 12

பலராம்போஸின் வீடு, 1898

சுவாமிஜி கடந்த இரண்டு நாட்களாக பாக்பஜாரில் உள்ள பலராம்போஸின் வீட்டில் தங்கி இருக்கிறார். சீடரும் மற்றும் நான்கைந்து பேரும் சேவை செய்வதற்காக அவருடன் உள்ளனர். சுவாமிஜி முன்னும் பின்னுமாக நடந்தபடி, குரு கோவிந்த சிங்கின் வாழ்க்கையின் பல செய்திகளைக் கூறினார். மகத்தான தியாகம், தவம், பொறுமை, வாழ்வையே அர்ப்பணித்துச் செய்த காரியங்கள் முதலியவற்றால் அவர் சீக்கிய மதத்தை எப்படி மறுமலர்ச்சி பெறச் செய்தார், முஸ்லீம்களாக மாறிய இந்துக்களுக்குத் தீட்சை தந்து அவர்களை எப்படி மறுபடியும் சீக்கிய மதத்திற்கு மாற்றினார், நர்மதை நதிக்கரையில் அவர் தமது

1. அறத்தை நிலைநாட்டியவரும், அனைத்து அறங்களின் வடிவினரும், அவதாரங்களுள் தலைசிறந்தவருமான ஸ்ரீராமகிருஷ்ணரை வணங்குகிறேன்.

அற்புத வாழ்வை எப்படி முடித்துக் கொண்டார் என்பதைப் பற்றியெல்லாம் உணர்ச்சியோடும் உற்சாகத்தோடும் தம்மை மறந்த நிலையில் பேசினார். குரு கோவிந்த சிங்கின் காலத்தில், தீட்சை தரும்போது சீடர்களுக்குள் குருவால் புகுத்தப்படும் மகத்தான சக்தியைப்பற்றிப் பேசும்போது,

'ஸபா லாக் பர் ஏக் சடாவூம் ।
ஜப் குருகோவிந்த நாம ஸுனாவூம் ॥

—குரு கோவிந்த சிங் தீட்சை தந்தால் ஒரே மனிதன் லட்சத்து இருபத்தையாயிரம் பகைவர்களை வெல்லும் வலிமை உடையவனாக மாறிவிடுகிறான்' என்று கூறினார். மேலும் தொடர்ந்துபேசினார்:

'அவரது சக்தியின் காரணமாக, அவரிடம் தீட்சை பெற்ற வர்களில் தர்மத்தின் வீரம் நிறைந்தது. தர்ம வழி நிற்காத லட்சத்து இருபத்தையாயிரம் பேரைக்கூட அந்த வீரத்தால் அவர்கள் வெல்ல முடிந்தது.'

இவ்வாறு தர்மத்தின் மகோன்னதத்தைப் பேசி வரும் போது, சுவாமிஜியிடம் காணப்பட்ட அளவற்ற உத்வேகத்தின் காரணமாக, அவரது கண்கள் நெருப்பைப் பொழிவதுபோல் இருந்தன. அவரது பேச்சைக் கேட்டவர்கள் வாயடைத்துப் போய் அந்த அற்புதக் காட்சியைப் பார்த்தபடி இருந்தார்கள்.

சிறிது நேரத்திற்குப் பிறகு சீடர் சுவாமிஜியிடம் கேட்டார்: 'சுவாமிஜி, குருகோவிந்த சிங்கால் முஸ்லீம்களையும் இந்துக் களையும் தமது மதத்திற்குள் சேர்த்து, இருவரையுமே ஒரே லட்சியத்தை நோக்கி அழைத்துச் செல்ல முடிந்தது ஒரு மகத் தான காரியம். இந்திய வரலாற்றில் இதைப் போன்ற இரண் டாவதொரு வாழ்வு இல்லை.'

சுவாமிஜி: 'பொதுவான விஷயம் ஒன்று இல்லாமல் மனிதர்களை ஒருபோதும் ஒன்றுசேர்க்க முடியாது. அவர்களின் நோக்கம் ஒன்றாக இல்லாவிட்டால், கூட்டங்கள் போடுவது, சங்கங்கள் அமைப்பது, சொற்பொழிவுகள் நிகழ்த்துவது இவற் றால் மக்களை ஒன்றுசேர்த்துவிட முடியாது. குருகோவிந்த சிங் தம் காலத்தில் வாழ்ந்தவர்கள் அனைவரும்—அவர்கள் இந்துக்களானாலும் சரி, முஸ்லீம்களானாலும் சரி—அநீதியும் அடக்குமுறையும் நிறைந்த ஓர் ஆட்சியின் கீழ் இருக்கும் உண்மையை உணரும்படிச் செய்தார். அனைவருக்கும் பொது வான எந்த விஷயத்தையும் அவர் உருவாக்கவில்லை; பிரச்சினை யைச் சாதாரண மக்களுக்குச் சுட்டிக்காட்ட மட்டுமே செய்தார்.

எனவே இந்துக்களும் முஸ்லீம்களும் அவர் காட்டிய வழியைப் பின்பற்றினர். அவர் மிகப் பெரிய சக்தி உபாசகர். இந்திய வரலாற்றில் அவரைப் போன்றவர்கள் மிகமிகச் சிலரே.'

இரவு நெடுநேரம் ஆகிவிட்டதால் சுவாமிஜி மற்றவர்களோடு முதல் மாடியின் வராந்தாவிற்கு வந்தார். அங்கு சித்திகளைப் பற்றிய கீழ்க்காணும் உரையாடல் நடைபெற்றது.

சுவாமிஜி: 'சிறிது மன ஒருமைப்பாட்டின் மூலமே அதிசயமான சக்திகளை அடைந்துவிடலாம். (சீடரின் பக்கம் திரும்பி) நல்லது, பிறர் மனத்தில் இருப்பதை அறிந்துகொள்ளும் கலையை நீ கற்றுக்கொள்கிறாயா? அதை நான் உனக்கு நான்கு அல்லது ஐந்து நாட்களில் கற்றுக்கொடுக்க முடியும்.'

சீடர்: 'அதனால் என்ன நன்மை?'

சுவாமிஜி: 'ஏன், நீ பிறர் மனத்தில் இருப்பதைத் தெரிந்துகொள்ளலாம்.'

சீடர்: 'அது எனக்குப் பிரம்ம ஞானம் பெறச் சிறிதாவது உதவுமா?'

சுவாமிஜி: 'துளிகூட உதவாது.'

சீடர்: 'அப்படியானால் அதைத் தெரிந்துகொள்ள வேண்டிய அவசியம் எனக்கு இல்லை. ஆனால் நீங்கள் உணர்ந்த அல்லது கண்ட அத்தகைய சித்திகளைப்பற்றி அறிந்துகொள்ள விரும்புகிறேன்.'

சுவாமிஜி: 'நான் இமயமலைப் பகுதியில் பயணம் செய்துகொண்டிருந்தபோது, ஒருநாள் இரவு மலைக் கிராமம் ஒன்றில் தங்க நேரிட்டது. அன்று மாலைவேளைக்குச் சற்று பிறகு தொடர்ந்து மேள ஒலி கேட்டது. நான் தங்கியிருந்த வீட்டுக்காரனிடம் அதன் காரணம்பற்றிக் கேட்டேன். அப்போது அவன், அந்தக் கிராமத்தில் உள்ள ஒருவனைப் பேய் பிடித்திருப்பதாகக் கூறினான். வீட்டுக்காரனின் வேண்டுகோளை நிறைவேற்றவும், அங்கு என்னதான் நடக்கிறது என்று அறியும் ஆவலாலும் நான் அங்குச் சென்றேன். அங்கே பலர் கூடியிருந்தனர். மிக அடர்த்தியான நீண்ட தலைமயிர் உடைய உயரமான ஒருவனைக் காட்டி, அவனுக்குத்தான் பேய் பிடித்திருப்பதாகச் சொன்னார்கள். சிலர் அவனுக்குப் பக்கத்தில் அமர்ந்து ஒரு கோடரியை நெருப்பில் பழுக்க வைத்துக் கொண்டிருந்தனர்; சிறிதுநேரத்தில் அது சிவந்து நெருப்புமயமாக மாறியது. அதை அந்த ஆவேசம் வந்த மனிதனின் உடலில் சில இடங்களிலும் அவனது தலைமுடியிலும் வைத்தார்கள். அதிசயத்திலும்

அதிசயமாக, நெருப்புக் கோடரி வைக்கப்பட்ட போதிலும் அவனது உடலோ தலைமுடியோ ஒன்றும் ஆகவில்லை, அப்படியே இருந்தது. அந்த மனிதனின் முகத்திலும் நெருப்புக் கோடரியால் சுடப்படுவதால் உண்டாகும் வேதனையின் அடையாளம் சிறிதும் இல்லை. நான் ஆச்சரியத்தில் உறைந்து போய் நின்றேன்.

'இதற்கிடையே அந்தக் கிராமத் தலைவன் என்னிடம் வந்து கைகூப்பியபடியே, ''சுவாமிஜி! இந்த மனிதன்மீது கருணைவைத்து பேயை ஓட்டிவிடுங்கள்'' என்றான். எனக்கோ என்ன செய்வதென்று தெரியவில்லை. குழப்பத்தில் ஆழ்ந்து நின்றேன் நான். எல்லோரும் கேட்டுக்கொண்டதால் நான் அவனருகே போக வேண்டியதாயிற்று. அவனருகே சென்றேன். முதலில் அந்தக் கோடரியைச் சோதிக்க வேண்டும் என்று தோன்றியது. கோடரியைத் தொட்டேன். அப்போது நெருப்பு சற்றுத் தணிந்து, சிவப்பு ஒளி குன்றி, கறுத்து இருந்தாலும் என் விரல் பொசுங்கிவிட்டது. கோடரியின் சூட்டைப் பற்றிய என் சந்தேகம் பறந்தது. வேதனை ஒருபுறம் இருந்தாலும், அவனது தலையில் கை வைத்துக் கொஞ்ச நேரம் ஜபம் செய்தேன். பத்துப் பன்னிரண்டு நிமிடங்களுக்கெல்லாம் அந்த மனிதன் நல்ல நிலையை அடைந்துவிட்டான்.

'அதன்பிறகு அந்தக் கிராம மக்கள் என்னிடம் காட்டிய மரியாதை இருக்கிறதே, அதைச் சொல்லி முடியாது! என்னைக் கிருஷ்ணன்—விஷ்ணு என்றெல்லாம்தான் கருதினர். எனக்கோ தலையும் புரியவில்லை, வாலும் புரியவில்லை. ஒன்றும் பேசாமல் நான் தங்கியிருந்த வீட்டுக்காரனுடன் குடிசைக்குத் திரும்பினேன். அப்போது மணி இரவு பன்னிரண்டு இருக்கும். பிறகு படுக்கைக்குச் சென்றேன். ஆனால் கோடரி சுட்ட வேதனையும் இந்த நிகழ்ச்சிபற்றி ஒன்றுமே புரிந்துகொள்ள முடியாத குழப்பமும் என்னைத் தூங்கவே விடவில்லை. பழுக்கக் காய்ச்சி, சிவந்த கோடரி மனிதனின் உடல்மீது வைக்கப்பட்டும் அவனது உடம்பு அதனால் தீய்ந்து போகாத புதிர் திரும்பத்திரும்ப என் மனத்திற்குள் எழுந்தபடியே இருந்தது. ''ஹொராஷியோ, வானத்திலும், பூமியிலும் உன் தத்துவங்களால் கனவுகூடக் காண முடியாத அற்புதங்கள் இருக்கின்றன''[1] என்றுதான் தோன்றியது.'

---

1. ஷேக்ஸ்பியரின் ஹாம்லெட் (Hamlet) நாடகத்தில் வரும் ஒரு பகுதி.

சீடர்: 'பின்னால் எப்போதாவது அதைப்பற்றிய விளக்கத்தைப் புரிந்துகொண்டீர்களா?'

சுவாமிஜி: 'இல்லை. பேச்சுவாக்கில் இன்று அது நினைவு வந்தது. அதனால் சொன்னேன்.'

பின்னர் சுவாமிஜி கூறினார்: 'ஸ்ரீராமகிருஷ்ணர் இதையெல்லாம் இழிவாகப் பேசுவது வழக்கம். ''இத்தகைய சித்திகளில் மனத்தைச் செலுத்தினால் ஒருவன் கடவுளை அடைய முடியாது'' என்பார் அவர். ஆனால் மனித மனம் மிகவும் பலவீனமானது. துறவிகளில்கூட தொண்ணூறு சதவீதம் பேர் அதன்மீது ஆசை கொண்டவர்களாகவே இருக்கின்றனர். இல்லறத்தார்களைப் பற்றிச் சொல்ல வேண்டியதே இல்லை. மேலை நாடுகளில் இதுபோன்ற அதிசயங்களைக் காணும்போது மக்கள் திகைத்துப் போகிறார்கள். இந்தச் சித்திகள் இழிவானவை, தெய்வீக வாழ்விற்கு இடையூறு என்பதை ஸ்ரீராமகிருஷ்ணர் தமது கருணையால் எனக்குப் புரிய வைத்திருக்கிறார். அதனால் நான் புரிந்துகொண்டேன். ஸ்ரீராமகிருஷ்ணரின் குழந்தைகள் யாரும் அவற்றைப் பொருட்படுத்துவதில்லை என்பதை நீ பார்த்ததில்லையா?'

இந்த நேரத்தில் சுவாமி யோகானந்தர் சுவாமிஜியிடம், 'நீங்கள் சென்னையில் இருந்தபோது சந்தித்த மந்திரவாதியைப் பற்றி இவனுக்குச் சொல்லுங்களேன்' என்றார்.

சீடரும் ஆர்வம் காட்டவே சுவாமிஜி கூறினார்:

'நான் ஒருமுறை சென்னையில் மன்மத பாபுவின் வீட்டில் தங்கி இருந்தேன். அப்போது ஒருநாள் என் தாய் இறந்துவிட்டதாகக் கனவு கண்டேன். என் மனம் மிகவும் குழம்பித் தவித்தது. வீட்டிற்கு என்றல்ல, மடத்திற்கும்கூட அப்போது நான் கடிதம் எழுதுவதில்லை. என் கனவை மன்மத பாபுவிடம் சொன்னேன். கனவின் உண்மையை அறிந்துகொள்வதற்காக அவர் கல்கத்தாவிற்குத் தந்தி கொடுத்தார். என் மனம் மிகுந்த சஞ்சலத்திற்கு உள்ளாகியிருந்தது. அந்தவேளையில் என் சென்னை நண்பர்கள் நான் அமெரிக்கா செல்வதற்கான ஏற்பாடுகளைச் செய்துவிட்டு, என்னை வற்புறுத்திக் கொண்டிருந்தார்கள். நானோ, என் தாயைப்பற்றி எந்த விதமான செய்தியும் கிடைக்காமல் புறப்பட விரும்பவில்லை. மன்மத பாபு எனது இந்த நிலைமையைக் கண்டு அவருக்குத் தெரிந்த ஒரு மந்திரவாதியிடம் போகலாம் என்று யோசனை கூறினார். அவன் சென்னையிலிருந்து சற்றுத் தொலைவில் வாழ்ந்து வந்தான். பேய்களை ஓட்டவும்,

கடந்தகாலம் மற்றும் எதிர்கால நிகழ்ச்சிகளைக் கூறவும் வல்லவன் அவன்.

'மன்மத பாபுவின் வேண்டுகோளுக்காகவும், கனவின் உண்மையைத் தெரிந்துகொள்வதற்காகவும் அவனிடம் போகச் சம்மதித்தேன். சிறிது தூரம் ரயிலில் பயணம் செய்து, பிறகு நடந்து செல்ல வேண்டியிருந்தது. நான், மன்மத பாபு, அளசிங்கர் மற்றும் ஒருவரும் சென்றோம். ஒரு சுடுகாட்டிற்கு அருகில் அவன் இருந்தான். கறுத்த மெலிந்த பயமூட்டும் தோற்றம் அவனுடையது. அவன்தான் பேயோட்டுபவன் என்பதை அவனுடன் இருந்தவர்கள் தென்னிந்திய மொழியில் சொன்னார்கள்.

'முதலில் அந்த மனிதன் எங்களைக் கண்ணெடுத்தும் பார்க்கவில்லை. நெடுநேரம் காத்திருந்துவிட்டு நாங்கள் அங்கிருந்து புறப்பட்டபோது, கொஞ்ச நேரம் காத்திருக்கும்படி அவன் எங்களைக் கேட்டுக் கொண்டான். அளசிங்கர் அதை மொழிபெயர்த்துச் சொன்னார். பிறகு அவன், ஒரு பென்சிலைச் சிறிதுநேரம் பிடித்தவாறே அமர்ந்திருந்துவிட்டு, ஏதேதோ கோடுகளை வரைந்தான். அப்போது அந்த மனிதனின் மனம் ஒருமுகப்பட்டு, முழுமையான கட்டுப்பாட்டிற்கு வந்துவிட்டது. அதன்பிறகு அவன் என் பெயரைச் சொன்னான். பிறகு என் குலம், எனது பதினான்கு தலைமுறையினர் பற்றிய விவரங்களைச் சொன்னான். ஸ்ரீராமகிருஷ்ணர் என்னுடன் எப்போதும் இருந்து வருவதைக் கூறினான். பிறகு என் தாய் உயிருடன் இருக்கும் நல்ல செய்தியையும் கூறினான். அத்துடன் நான் விரைவில் நெடுந்தொலைவு செல்ல நேரும் என்றும் கூறினான். அவனிடமிருந்து திரும்பிய பிறகு என் தாய் சுகமாக இருப்பதாகக் கல்கத்தாவிலிருந்தும் தந்தி வந்திருந்தது. (சுவாமி யோகானந்தரின் பக்கம் திரும்பி) அது குருவி உட்காரப் பனம் பழம் விழுந்த கதையோ, வேறு எப்படியோ. ஆனால் அவன் சொன்னது ஒவ்வொன்றும் அப்படியே பலித்தது.'

யோகானந்தர்: 'முன்பு நீங்கள் இவற்றையெல்லாம் நம்புவதில்லை. அதனால்தான் இந்த அனுபவம் உங்களுக்கு அவசியமாக இருந்தது.'

சுவாமிஜி: 'எதையும் காணவோ கேட்கவோ செய்யாமல் நம்ப வேண்டுமா என்ன? அத்தகையவன் அல்ல நான். மாயையின் அரசில் வந்து, நான் கண்ட மந்திர ஜாலங்கள்தான் எத்தனையெத்தனை! மாயை! மாயை! ராம்! ராம்! என்ன

குப்பையைப்பற்றி இவ்வளவு நேரம் பேசிக் கொண்டிருக்கிறோம். எப்போதும் பேயை நினைத்துக் கொண்டிருப்பவன் பேயாகத்தான் ஆவான். அறிந்தோ அறியாமலோ ''நான் அழியாத, தூய்மையான, சுதந்திரமான, ஒளிமயமான ஆன்மா'' என்று இரவும்பகலும் சொல்பவன் பிரம்ம ஞானி ஆகிறான்.'

இதைச் சொல்லிவிட்டு சுவாமிஜி சீடரை அன்போடு பார்த்து, 'இதுபோன்ற முட்டாள்தனமான விஷயங்களுக்கெல்லாம் உன் மனத்தில் இடம் கொடுக்காதே. உண்மை எது, உண்மையற்றது எது என்பதுபற்றி இரவும்பகலும் சிந்தனை செய். ஆன்மாவை அறிவதற்காக முழுமூச்சுடன் முயற்சி செய். ஆன்ம ஞானத்தைவிட உயர்ந்தது எதுவும் இல்லை. மற்ற எல்லாம் மாயை, இந்திர ஜாலம்! ஆன்மா ஒன்றுதான் என்றும் மாறாத உண்மை. இதை நான் அறிந்துகொண்டேன். அதனால் தான் நீங்களும் அறிய வேண்டும் என்று முயற்சி செய்கிறேன். ''ஏகமேவாத்யம் ப்ரஹ்ம நேஹ நானாஸ்தி கிஞ்சன—இருப்பது இரண்டற்ற பிரம்மம் ஒன்றே, பல பொருட்கள் என்று உலகத்தில் ஒன்றுமே இல்லை.'[1]

இரவு பதினொரு மணிவரை பேச்சு நடந்தது. அதன்பிறகு சுவாமிஜி சாப்பிட்டார். பின்னர் ஓய்வெடுக்கத் தமது அறைக்குச் சென்றார். சீடர் சுவாமிஜியின் பாதங்களில் வீழ்ந்து வணங்கி விடை பெற்றார். அப்போது சுவாமிஜி, 'நாளை நீ வருகிறாய் அல்லவா?' என்றார்.

சீடர்: 'வராமல் என்ன செய்வேன்! ஒருநாளைக்கு ஒரு முறையாவது உங்களைத் தரிசிக்காவிட்டால் என் மனம் ஏங்கித் தவிக்கிறது.'

சுவாமிஜி: 'இரவு நீண்டநேரமாகிவிட்டது. போய் வா.'

## 13

பேலூரில் வாடகை மடம், 1898

ஆலம்பஜாரிலிருந்து மாற்றப்பட்ட மடத்தின் கட்டிடமான நீலாம்பர் பாபுவின் மாளிகையில் சுவாமிஜி தங்கி இருக்கிறார். ஸ்ரீராமகிருஷ்ணரின் பிறந்தநாள் விழாவைச் சிறப்பான முறையில் கொண்டாடுவதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. அந்தப் புனித நாளின் காலை வேளை. வழிபாட்டிற்காகச் செய்யப்பட்ட ஏற்பாடுகளை சுவாமிஜி பார்வையிட்டார்.

1. விவேக சூடாமணி, 468.

முடிந்ததும் சிடரைப் பார்த்து, 'நல்லது, பூணூல்களை எல்லாம் கொண்டு வந்திருப்பாய் என்று நினைக்கிறேன்' என்றார்.

சிடர்: 'ஆம், கொண்டு வந்திருக்கிறேன். நீங்கள் கூறியது போல் எல்லாம் தயாராக இருக்கிறது. ஆனால் எதற்கு இத்தனை பூணூல்கள் என்பதுதான் புரியவில்லை.'

சுவாமிஜி: 'ஒவ்வோர் இருபிறப்பாளனும்[1] பூணூல் அணிந்து கொள்வதற்கு உரிமை உடையவன். இதற்கு வேதங்களே பிரமாணமாக உள்ளன. ஸ்ரீராமகிருஷ்ணரின் பிறந்த நாளான இந்தப் புனித நாளில் யாரெல்லாம் இங்கு வருகிறார்களோ அவர்களுக்கெல்லாம் பூணூல் அணிவிக்கப் போகிறேன். இவர்கள் தங்கள் உண்மை நிலையிலிருந்து வழுவி விட்டார்கள். இத்தகையோர் சரியான பிராயச்சித்தத்திற்குப் பிறகு பூணூல் அணியலாம் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. இன்று ஸ்ரீராமகிருஷ்ணர் பிறந்த மகத்தான நாள். அவரது திருப்பெயரை ஜபிப்பவர்கள் தூய்மை அடைகிறார்கள். எனவே இங்குக் கூடியுள்ள பக்தர்களுக்குப் பூணூல் அணிவிக்க வேண்டும். புரிகிறதா?'

சிடர்: 'உங்கள் கட்டளைப்படி நிறைய பூணூல்களைக் கொண்டு வந்திருக்கிறேன். பூஜைக்குப் பிறகு நீங்கள் அனுமதி தந்ததும் பக்தர்களுக்கு அவற்றை அணிவிக்கிறேன்.'

சுவாமிஜி: 'பிராமணர் அல்லாத பக்தர்களுக்கு இந்த காயத்ரி மந்திரத்தை உபதேசி. (க்ஷத்திரியர் முதலான இரு பிறப்பாளர்களுக்குரிய காயத்ரியைக் கூறுகிறார் சுவாமிஜி) படிப்படியாக இந்த நாட்டில் உள்ள அனைவரையும் பிராமண நிலைக்கு உயர்த்தியாக வேண்டும். ஸ்ரீராமகிருஷ்ணரின் பக்தர்கள் என்றல்ல, ஒவ்வோர் இந்துவும் சகோதரனே. ''தொடாதே, தொடாதே'' என்று கூறி நாம் அவர்களை நாசப்படுத்திவிட்டோம். அதனால்தான் இந்த நாடு இவ்வளவு மோசமாகக் கோழைத்தனத்திலும் அறியாமையிலும் ஆழ்ந்து கிடக்கிறது. இவர்களை உயர்த்த வேண்டும். ''நீங்களும் எங்களைப் போன்ற மனிதர்களே. எங்களுக்குள்ள எல்லா உரிமைகளும் உங்களுக்கும் உண்டு'' என்று அவர்களிடம் சொல்ல வேண்டும். புரிந்ததா?'

சிடர்: 'ஆம், சுவாமிஜி!'

சுவாமிஜி: 'பூணூல் அணிந்துகொள்ளப் போகும் பக்தர்களிடம் கங்கையில் குளித்துவிட்டு வரச் சொல். வந்ததும்

1. பிராமணர்கள், க்ஷத்திரியர்கள் மற்றும் வைசியர்களை துவிஜர்கள் அதாவது இருபிறப்பாளர்கள் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன.

ஸ்ரீராமகிருஷ்ணர் முன் அவர்கள் வீழ்ந்து வணங்கட்டும். பிறகு அவர்களுக்குப் பூணூலை அணிவி.'

நாற்பது ஐம்பது பக்தர்கள் இவ்வாறு சீடர்மூலமாக காயத்ரி மந்திரம் பெற்றுப் பூணூல் அணிந்துகொண்டனர். அவர்கள் பூணூலை அணிந்துகொண்டபோது சுவாமிஜியின் முகம் அளவற்ற மகிழ்ச்சியால் பூரித்துப் பொங்கியது. சிறிது நேரத்திற்குள் கிரீஷ்சந்திர கோஷ் கல்கத்தாவிலிருந்து மடத்திற்கு வந்தார்.

அப்போது சுவாமிஜியின் விருப்பப்படி இன்னிசை நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்யப்பட்டது. மடத்தின் துறவியர் சுவாமிஜியை யோகிபோல் அலங்கரித்தனர்.

பின்னர் சுவாமிஜி மிக இனிமையான குரலில் 'கூஜந்தம் ராம ராமேதி'[1] என்று தொடங்கும் பாடலைத் தம்புராவின் இசையோடு மென்மையாகப் பாடலானார். அது முடியும் தறுவாயில், மனத்தை அப்படியே சுண்டியிழுக்கும் மகத்தான மந்திரமான, 'ராம், ராம், ஸ்ரீராம், ராம்' என்பதைத் திரும்பத் திரும்பப் பாடிக்கொண்டே இருந்தார். அவரது கண்கள் பாதி திறந்திருந்தன. முகத்தின் இயல்பான கம்பீரம் பல மடங்கு அதிகமாகப் பிரகாசித்தது. அரைமணி நேரத்திற்கும் மேலாக எல்லோரும் இந்த அற்புதத்தில் கட்டுண்டு கிடந்தனர்.

பிறகு சுவாமிஜி, மனத்தை மயக்கும் அதே குரலில், துளசிதாசர் ஸ்ரீராமர்மீது பாடிய பாடலைப் பாடினார். பின்னர் இன்னிசை நிகழ்ச்சி நடந்தது.

இதன்பிறகு சுவாமிஜி திடீரென்று தமக்கு அணிவித்திருந்த யோகி வேடத்தைக் களைந்து, கிரீஷ்பாபுவிற்கு அவற்றை அணிவித்தார். பிறகு எல்லோரிடமும் கிரீஷ்பாபுவைச் சுட்டிக்காட்டி, 'ஸ்ரீராமகிருஷ்ணர் இவரை ''பைரவரின்[2] அவதாரம்'' என்று கூறுவது வழக்கம். இவருக்கும் நமக்கும் எந்தவித வேறுபாடும் இல்லை' என்றார். கிரீஷ்பாபு இவற்றையெல்லாம் பார்த்த வாறு பேச்சிழந்து அப்படியே உட்கார்ந்திருந்தார். காவி உடை ஒன்று கிரீஷுக்கு அணிவிக்கப்பட்டது. அவர் அதைத் தடுக்கவில்லை. அவர் தமது சகோதரச் சீடர்களின்

---

1. கூஜந்தம் ராம ராமேதி மதுரம் மதுராக்ஷரம் |
ஆருஹ்ய கவிதா சாகாம் வந்தே வால்மீகி கோகிலம் ||
—கவிதை என்னும் மரக்கிளையில் அமர்ந்தருளி, இனிமையிலும் இனிமை பொழியும் தேனிசைக் குரலில் 'ராம், ராம்' என்று பாடும் வான்மீகி என்னும் குயிலை வணங்குகிறேன்.
2. சிவபெருமானின் கணங்களுள் ஒருவர்.

விருப்பத்துடன் ஒன்றிவிட்டார். அப்போது சுவாமிஜி, 'நல்லது, ஜி.சி. இன்று நீங்கள் ஸ்ரீராமகிருஷ்ணரைப்பற்றிப் பேச வேண்டும். (தம்மைச் சுற்றி இருப்பவர்களைப் பார்த்து) எல்லோரும் கவனமாகக் கேளுங்கள்' என்றார்.

சுவாமிஜி இப்படிச் சொல்லிய பிறகும் கிரீஷ் அசையாமல் சிலைபோல் அமர்ந்திருந்தார். ஆனந்த வெள்ளத்தில் மூழ்கி அவர் தம்மையே மறந்துவிட்டிருந்தார். நெடுநேரம் கழித்து அவர், 'ஆ! எல்லையற்ற கருணை வடிவான நம் பிரபுவைப்பற்றி அற்பனான நான் என்ன பேச முடியும்? மிக இழிந்த பிராணி யான நான், பிறந்ததிலிருந்தே தூய்மையின் வடிவாக வாழ்ந்து எல்லா ஆசைகளையும் காமத்தையும் துறந்த துறவிகளாக இருக்கும் உங்களோடு சரிசமமாக உட்கார்ந்திருக்கும் இந்தப் பெரிய சலுகையை எனக்கு அவர் தந்திருக்கிறாரே, அந்த ஒன்றிலேயே அவர் என்னிடம் காட்டும் அளவற்ற கருணையை நான் உணர்கிறேன்' என்றார். இதைப் பேசும்போது உணர்ச்சிப் பெருக்கால் சொற்கள் தொண்டையில் அடைத்துக் கொண்டன. அவரால் அதற்குமேல் ஒன்றும் பேச முடியவில்லை.

இதன்பிறகு சுவாமிஜி சில இந்திப் பாடல்களைப் பாடி னார். பின்னர் பக்தர்கள் சிற்றுண்டி அருந்த அழைக்கப்பட்ட னர். அது முடிந்ததும் சுவாமிஜி மாடி வராந்தாவில் வந்து அமர்ந்தார். எல்லோரும் அவரைச் சுற்றி அமர்ந்தார்கள். அன்றைக்குப் பூணூல் அணிந்த இல்லறத்தார் ஒருவரை அழைத்து சுவாமிஜி கூறினார்: 'நீங்கள் எல்லோரும் இரு பிறப்பாளராகி விட்டீர்கள். அந்த உயர்ந்த நிலையை இழந்து விட்டிருந்தீர்கள். இப்போது மறுபடியும் அந்த நிலையை அடைந்துவிட்டீர்கள். நாள்தோறும் காயத்ரி மந்திரத்தைக் குறைந்த பட்சம் நூறு முறையாவது ஜபம் செய்ய வேண்டும். புரிந்ததா?' அந்த பக்தர் 'சரி' என்று சம்மதித்தார்.

இதற்கிடையே 'ம.'[1] என்று அழைக்கப்படும் மகேந்திரநாத் குப்தர் அங்கு வந்தார். சுவாமிஜி மிகுந்த அன்புடன் அவரை வரவேற்று உட்கார இடம் அளித்தார். அவரைப் பார்த்து, 'இன்று ஸ்ரீராமகிருஷ்ணரின் பிறந்தநாள் விழா. எனவே அவரைப்பற்றி நீங்கள் கொஞ்சம் சொல்ல வேண்டும்' என்றார்.

---

1. ஸ்ரீராமகிருஷ்ணரின் இல்லறச் சீடர்களில் ஒருவர். ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்களைத் தொகுத்தவர். இந்தத் தொகுப்பே தமிழில் 'ஸ்ரீராமகிருஷ்ண ரின் அமுதமொழிகள்' என்ற பெயரில் மூன்று பகுதிகளாகச் சென்னை ஸ்ரீராமகிருஷ்ண மடத்திலிருந்து வெளிவந்துள்ளது.

ம. அதற்கு மறுமொழியாகப் புன்சிரிப்போடு தலை பூமியில் படும்படி குனிந்து வணங்கினார்.

அப்போது மூர்ஷிதாபாத்திலிருந்து சுவாமி அகண்டானந்தர் ஒன்றரை மணங்கு பந்துவா என்னும் இனிப்போடு வந்திருப்பதாகச் செய்தி சொல்லப்பட்டது. நாங்கள் எல்லோரும் அவ்வளவு அதிகமான இனிப்பைக் காண விரைந்து சென்றோம். அந்த இனிப்பு சுவாமிஜியிடம் கொண்டு வரப்பட்டது. 'இதைக் கொண்டுபோய்க் கோயிலில் நிவேதனம் செய்யுங்கள்' என்றார் அவர்.

பிறகு சுவாமிஜி, சுவாமி அகண்டானந்தரைப்பற்றித் தமது சீடர்களிடம், 'அவர் எத்தகைய செயல்வீரர் பாருங்கள். பயம், மரணம், இவற்றைப் பற்றிய எண்ணமே அவருக்குக் கிடையாது. ''பஹுஜன ஹிதாய பஹுஜன ஸுகாய—பலரது நன்மைக்கான, பலரது மகிழ்ச்சிக்கான'' வேலைகளைச் செய்துகொண்டே போகிறார்'.

சீடர்: 'அவருக்கு, அத்தகைய சக்தி கடின தவத்தால்தான் வந்திருக்க வேண்டும்.'

சுவாமிஜி: 'உண்மை. தவத்தின் விளைவாக ஆற்றல் பிறக்கிறது. பிறரது நன்மைக்காகப் பாடுபடுவது தவமாக அமைகிறது. கர்மயோகிகள் வேலைகளையே தவத்தின் ஒரு பகுதியாகக் கொள்கிறார்கள். தவம் செய்வது பிறர் நலத்தை நாடும் உணர்வை அதிகமாக்கி, சுயநலம் கருதாத வேலைகளைச் செய்யும்படிச் செய்கிறது. பிறர் நன்மைக்காகச் செயல்புரிவது, தவம் செய்வதன் சிறந்த பலனான மனத் தூய்மையை அளிக்கிறது. மனத்தூய்மையால் இறைக் காட்சி கிடைக்கிறது.'

சீடர்: 'ஆனால் ஆரம்பத்திலேயே பிறருடைய நன்மைக்காக எத்தனைபேர் முழுமனத்துடன் செயல்புரிய முடியும்? பிறரது மகிழ்ச்சிக்காகத் தன் மகிழ்ச்சியைத் தியாகம் செய்யும் உறுதியும், பிறருக்காகத் தன் வாழ்வை அர்ப்பணிக்கும் பரந்த மனப்பான்மையும் அவ்வளவு எளிதாக வருமா என்ன?'

சுவாமிஜி: 'சரி. எத்தனை பேருடைய மனம் தவம் செய்யத் தயாராக இருக்கிறது? பணத்தாசையும் பெண்ணாசையும் இழுக்கின்ற இழுப்பில், எத்தனை பேர் கடவுளைக் காண ஏங்குகிறார்கள்? பலன்கருதாத வேலை என்பது தவத்தைப் போலவே கடினமானது. எனவே பிறர் நலனுக்காகப் பாடு படுபவர்களுக்கு எதிராக எதையும் சொல்ல உனக்கு உரிமை இல்லை. உனக்குத் தவம் செய்வதில் விருப்பம் இருந்தால் நீ

தவம் செய். மற்றவர்களுக்கு வேலை செய்வது விருப்பமானதாக இருக்கலாம். அவர்களைத் தடுப்பதற்கு உனக்கு எந்த உரிமையும் கிடையாது. வேலை என்பது தவம் அல்ல என்ற எண்ணம் உன் மனத்தில் உறுதியாக இருப்பதுபோல் தோன்றுகிறது.'

சீடர்: 'ஆம். தவம் என்பதற்கு நான் முற்றிலும் வேறான தொரு கருத்தையே இதற்குமுன்பு கொண்டிருந்தேன்.'

சுவாமிஜி: 'ஆன்மீகச் சாதனைகளைத் தொடர்ந்து செய்து வரும்போது நாளடைவில் அவைமீது ஒரு குறிப்பிட்ட உறுதி யான மனநிலை உண்டாகிறது. அதுபோல், சுயநலமில்லாத செயல்களையும் திரும்பத்திரும்பச் செய்யும்போது, விருப்ப மில்லை என்றாலும்கூட, படிப்படியாக மனம் அந்த வேலை யோடு ஒன்றிவிடும். தொடர்ந்து மனம் அத்தகைய வேலை களை நாடும். புரிகிறதா? விருப்பம் இல்லையென்றாலும் பிறர் நலத்திற்காக வேலை செய்து, தவத்தால் கிடைக்கும் பலன் அதன்மூலம் கிடைக்கிறதா இல்லையா என்பதைப் பார். பிறருக் காகச் செய்யும் செயல்களின் பலனாக மனத்தின் கோணல்கள் எல்லாம் நேராகின்றன; மனிதன் படிப்படியாகப் பிறர் நன்மைக் காக உண்மையான தியாகம் செய்வதற்குத் தயாராக்கப்படு கிறான்.'

சீடர்: 'ஆனால் சுவாமிஜி, பிறருக்கு நன்மை செய்ய வேண்டுவதன் அவசியம்தான் என்ன?'

சுவாமிஜி: 'அது ஒவ்வொருவனின் சொந்த நன்மைக் காகவே. ''நான்'' என்று நீ உணர்கின்ற இந்த உடம்பைப் பிறர் சேவைக்காக ஈடுபடுத்தும்போது ''நான்'' என்னும் நினைப்பை மறக்கிறோம். இறுதியில் உடம்பை நாமாகக் கருதாத நிலை வந்துவிடும். நீ எவ்வளவு ஒருமைப்பாட்டுடன் பிறரது நன்மையை நாடுகிறாயோ, அவ்வளவிற்கு உன்னை நீ மறப்பாய். இவ்வாறு வேலையால் படிப்படியாக உன் மனம் தூய்மை அடையும். அப்போது உன் ஆன்மாவே எல்லா உயிர்களிலும் எல்லா பொருட்களிலும் இருப்பதை உணர்வாய். இவ்வாறு பிறருக்கு நன்மை செய்வது உங்கள் ஆன்மாவை நீங்கள் உணர் வதற்கான ஒரு வழியாக அமைகிறது. எனவே செயல் புரிவதும் ஆன்மீகச் சாதனைகளுள் ஒன்று என்பதைத் தெரிந்துகொள். செயலின் லட்சியமும் ஆன்மாவின் வெளிப்பாடுதான். ஞானத் தாலும் பக்தியாலும் பிறவற்றாலும் அடையப்படுகின்ற அதே ஆன்ம வெளிப்பாடு, பிறரது நன்மைக்காகச் செயல்புரிவதாலும் அடையப்படுகிறது.'

சீடர்: 'ஆனால் இரவும்பகலும் பிறரைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தால் ஆன்ம சிந்தனையில் ஈடுபடுவது எப்போது? எல்லைக்கு உட்பட்ட ஒன்றையே நினைத்துக் கொண்டிருந்தால் எல்லையற்ற ஆன்மாவை எப்படி உணர முடியும்?'

சுவாமிஜி: 'எல்லா சாதனைகளுடையவும், ஆன்மீகப் பாதைகளுடையவும் மிக உயர்ந்த லட்சியம் ஆன்ம ஞானத்தைப் பெறுவதுதான். பிறரது சேவைக்காக உன்னை நீ அர்ப்பணம் செய்து, அதன் விளைவாக உன் மனம் தூய்மையுற்று, எல்லா உயிர்களையும் உன் ஆன்மாபோல் காணும் பேறு பெறுவாயானால், ஆன்ம அனுபவமாக நீ அடைவதற்கு வேறு என்ன இருக்கிறது? ஆன்ம தரிசனம் என்பது என்ன இந்தச் சுவரைப்போல், அந்த மரக்கட்டையைப்போல் ஜடமாக ஆவது என்றா நினைத்துக் கொண்டிருக்கிறாய்?'

சீடர்: 'அப்படி நான் எண்ணவில்லை. ஆனாலும் எல்லா செயல்களையும் மனத்தின் நினைப்புகளையும் அடக்குவதைத் தானே சாஸ்திரங்கள், ஆன்மா தன் இயல்பில் இருப்பது என்று கூறுகின்றன!'

சுவாமிஜி: 'சாஸ்திரங்கள் கூறும் சமாதி நிலை இதுதான். ஆனால் இது சுலபத்தில் அடையக்கூடியது அல்ல. அப்படியே யாராவது இந்த நிலையை அடைந்தாலும் அது நிலைத்திருப்பதில்லை. அதன்பிறகு அவன் என்ன செய்வான்? அதனால்தான் அந்த நிலையை உணர்ந்த பிறகு சாதகன் ஆன்மாவை எல்லா உயிர்களிலும் காண்கிறான். தன்னை அந்த உயிர்களிலிருந்து வேறாகக் காணாமல், அவற்றிற்குச் சேவை செய்து தன் வினைப் பயனைக் கழிப்பான். இந்த நிலையையே சாஸ்திரங்கள், ஜீவன் முக்த நிலை என்று கூறுகின்றன.'

சீடர்: 'எனவே, ஜீவன்முக்த நிலையை அடையாமல் உண்மையாகப் பிறரது நன்மைக்காகச் செயல்புரிய முடியாது என்றாகிறது.'

சுவாமிஜி: 'சாஸ்திரங்கள் அவ்வாறே கூறுகின்றன. ஆனால் பிறர் நலனுக்காகச் சேவை செய்வது ஒருவனை ஜீவன்முக்த நிலைக்கு அழைத்துச் செல்லும் என்றும் அவை கூறுகின்றன. இல்லையென்றால் ''கர்ம யோகம்'' என்னும் தனியான பாதையைச் சாஸ்திரங்கள் போதிக்க வேண்டிய அவசியம் இல்லை.'

சீடர் உண்மையைப் புரிந்துகொண்டு அமைதியானார். சுவாமிஜியும் பேச்சை முடித்துக்கொண்டு, ஸ்ரீராமகிருஷ்ணரின் அவதாரப் பெருமையைப்பற்றி கிரீஷ் சந்திர கோஷ்

இயற்றியிருந்த 'ஏழைப் பிராமணப் பெண்ணின் மடியில் தவழும் நீ யாரோ!' என்ற பாடலை, மனித நிலைக்கு எட்டாத இனிமை யோடு பாடத் துவங்கினார்.

## 14

பேலூரில் வாடகை மடம், 1898

புதிதாக அமைக்கப்பட்ட மடத்தில் ஹோமம் செய்து சுவாமிஜி ஸ்ரீராமகிருஷ்ணரைப் பிரதிஷ்டை செய்யவுள்ளார். பிரதிஷ்டை நிகழ்ச்சியைக் காண்பதற்காகச் சீடர் முன்னிரவிலிருந்தே அங்கே தங்கியிருக்கிறார்.

காலையில் சுவாமிஜி கங்கையில் குளித்துவிட்டுப் பூஜை யறைக்குச் சென்றார். அங்கு வைக்கப்பட்டிருந்த ஸ்ரீராம கிருஷ்ணரின் திருப்பாதுகைகளுக்கு மலர் சமர்ப்பித்து வழி பட்ட பின் தியானத்தில் ஆழ்ந்தார்.

தியானமும் பூஜையும் முடிந்தன. மடத்தின் புதிய கட்டிடத் திற்குள் செல்வதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டன. ஒரு செப்புப் பெட்டியில் வைக்கப்பட்டிருந்த ஸ்ரீராமகிருஷ்ணரின் புனித அஸ்தியை சுவாமிஜி தாமே தமது வலது தோளில் தூக்கி வைத்துக்கொண்டு முன்னால் சென்றார். சீடர், மடத்திலுள்ள துறவியருடன் சுவாமிஜியின் பின்னால் நடந்து சென்றார். மணிகளின் ஓசையும் சங்கின் ஒலியும் எங்கும் நிறைந்தது. இவ்வாறு போய்க் கொண்டிருக்கும்போது சுவாமிஜி, 'ஸ்ரீராமகிருஷ்ணர் என்னிடம், ''என்னை நீ உன் தோளில் தூக்கிக்கொண்டு போய் எங்கே வைத்தாலும், அது மரத்தடி யாக இருந்தாலும் சரி, குடிசையாக இருந்தாலும் சரி, அங்கே நான் தங்கி இருப்பேன்'' என்று கூறினார். அதனால்தான் புதிய மடத்திற்கு நானே அவரது அஸ்தியைச் சுமந்து செல்கிறேன். பலரது நன்மைக்காக அவர் அந்த இடத்தில் நெடுங்காலம் வாழப் போகிறார். இது நிச்சயம்' என்றார்.

சீடர்: 'அவர் இதை எப்போது உங்களிடம் சொன்னார்?'

சுவாமிஜி (உடன் நடந்துவரும் துறவியரைச் சுட்டிக் காட்டி): 'அவர்கள் அதைச் சொல்லவில்லையா? காசிப்பூர்த் தோட்ட வீட்டில்[1] அதைக் கூறினார்.'

சீடர்: 'அப்படியா? அந்த நாட்களில்தானே அவருக்கு யார் சேவை செய்வது என்பது குறித்து அவரது துறவிச்சீடர்களுக்கும் இல்லறச் சீடர்களுக்கும் இடையே பூசல் ஏற்பட்டது?'

1. ஸ்ரீராமகிருஷ்ணர் தமது இறுதி நாட்களில் வாழ்ந்த இடம்.

சுவாமிஜி: 'ஆமாம், பூசல் அல்ல, சிறிய மனஸ்தாபம் அவ்வளவுதான். ஸ்ரீராமகிருஷ்ணரின் பக்தர்களிடம், அவரது அருளை உண்மையாகப் பெற்ற அவருடைய சீடர்களிடம்—அவர்கள் துறவிகளாக இருந்தாலும், இல்லறத்தார்களாக இருந்தாலும்— போட்டியோ பூசலோ எதுவும் இல்லை, இருக்கவும் முடியாது. இது நிச்சயம். அந்த மிகச் சிறிய மனஸ்தாபத்தின் காரணம் என்ன, அது உனக்குத் தெரியுமா? ஒவ்வொரு பக்தரும் தன் அறிவுக்கு எட்டியபடிதான் ஸ்ரீராமகிருஷ்ணரைக் காண்கிறார், புரிந்துகொள்கிறார். உண்மையில் ஸ்ரீராமகிருஷ்ணர் ஒரு மகத்தான சூரியன் போன்றவர். நாம் ஒவ்வொருவரும் பல்வேறு நிறக் கண்ணாடிகளை அணிந்து அவரைப் பார்க்கிறோம். அதனால் ஒரே சூரியனைப் பல்வேறு நிறங்களில் காண்கிறோம். இதிலிருந்துதான் பிரிவுகள் தோன்றுகின்றன என்பது மறுக்க முடியாத உண்மை. அவதார புருஷர்களுடன் நேரடித் தொடர்புகொண்ட அதிர்ஷ்டசாலிகளின் வாழ்நாளுக்குள் அத்தகைய பிரிவுகள் ஏற்படுவது மிகவும் அரிது. ஆன்மாவில் மட்டுமே இன்பம் காண்கின்ற அந்த அவதார புருஷர்களின் பேரொளி, அவர்களின் கண்களைக் கூச வைத்து, அவர்களிடமுள்ள கர்வம், ஆணவம், குறுகிய மனப்பான்மை முதலியவற்றை அடித்துச் சென்றுவிடும். இதன் காரணமாக, தனியான மதப் பிரிவு அது இது என்றெல்லாம் நினைப்பதற்கான நேரமே அவர்களுக்கு இல்லாமல் போய்விடுகிறது. அவர்கள் ஒவ்வொருவரும் தாங்கள் விரும்பிய வகையில் தங்கள் இதயம் கனிந்த வழிபாட்டை அவருக்குச் செலுத்துவதிலேயே திருப்தி அடைவார்கள்.'

சீடர்: 'சுவாமிஜி, ஒரே அவதார புருஷரின் பக்தர்கள் அவர் கடவுள் என்பதை அறிந்தாலும், அவரது பல்வேறு நிலைகளைக் காண நேர்வதால் காலப்போக்கில் பல்வேறு பிரிவுகள் தோன்றக்கூடும் என்றா சொல்கிறீர்கள்?'

சுவாமிஜி: 'ஆம். பிற்காலத்தில் பல பிரிவுகள் உருவாகவே செய்யும். உதாரணத்திற்கு சைதன்யரின் பக்தர்களைப் பார்; அவர்களுக்குள் இருநூறு முன்னூறு பிரிவுகள் தோன்றிவிட்டன. கிறிஸ்தவர்களுள் ஆயிரமாயிரம் பிரிவுகள் உண்டாகிவிட்டன. ஆனால் அந்த எல்லா பிரிவுகளும் சந்தேகம் இல்லாமல் சைதன்யரையும் ஏசுவையும்தான் பின்பற்றுகின்றன.'

சீடர்: 'ஸ்ரீராமகிருஷ்ண பக்தர்களும் பிற்காலத்தில் இப்படிப் பல்வேறு பிரிவுகளாகப் பிரிந்து போவார்களா?'

சுவாமிஜி: 'பிரிந்து போகாமல் என்ன செய்வார்கள்? ஆனால் நமது மடம் அந்தப் பிரிவுகள் அனைத்தையும், கொள்கைகள் அனைத்தையும் சமரசப்படுத்தி நிற்கும். ஸ்ரீராம கிருஷ்ணர் பரந்த கொள்கையைக் கொண்டிருந்தது போலவே இந்த மடமும் அத்தகைய பரந்த கொள்கையின் மையமாக விளங்கும். இங்கிருந்து எழுந்து பரவும் சமரசப் பேரொளி வெள்ளம் உலகனைத்தையுமே நிறைக்கும்.'

இதற்குள் எல்லோரும் மடத்தை அடைந்தார்கள். சுவாமிஜி தமது தோளில் இருந்து பெட்டியை இறக்கித் தரைமீது விரிக்கப்பட்டிருந்த விரிப்பில் வைத்து, அதன்முன் நெற்றி தரையில் படும்படி வீழ்ந்து வணங்கினார்; மற்றவர்களும் அது போலவே வணங்கினார்கள்.

பிறகு சுவாமிஜி பூஜை செய்ய உட்கார்ந்தார். பூஜையை முடித்துவிட்டு ஹோமம் செய்தார், ஆஹுதிகளை அளித்தார். சகோதரச் சீடர்களின் துணையோடு தாமே பாயசம் செய்து ஸ்ரீராமகிருஷ்ணருக்குப் படைத்தார். அன்று அந்த இடத்தில் ஒருசில இல்லறத்தார்களுக்குத் தீட்சையும் அளித்திருக்கலாம். இந்தச் சடங்குகள் முடிந்த பிறகு சுவாமிஜி அங்குக் கூடியிருந்தவர்களைப் பார்த்து, 'இந்த யுகத்தின் மகத்தான அவதார புருஷரான ஸ்ரீராமகிருஷ்ணர் பலரது நன்மைக்காகவும் பலரது மகிழ்ச்சிக்காகவும் இன்றிலிருந்து இந்தப் புனிதமான இடத்தில் பல காலம் வாழ்ந்து, இந்த இடத்தை இணையற்றதொரு சர்வசமய சமரச மையமாக ஆக்கும்படி இதயபூர்வமாகப் பிரார்த்தனை செய்யுங்கள்' என்றார். எல்லோரும் அவர் கூறியபடியே கைகளைக் குவித்துப் பிரார்த்தனை செய்தனர்.

பிறகு சுவாமிஜி சீடரை அழைத்து அவரிடம், 'எங்களில் (சன்னியாசிகளில்) யாருக்கும் ஸ்ரீராமகிருஷ்ணரின் அஸ்தியைக் கொண்டுவந்த இந்தப் பெட்டியைத் திரும்ப எடுத்துச் செல்லும் உரிமை இல்லை. ஏனென்றால் நாங்கள் இன்று அவரை இங்குப் பிரதிஷ்டை செய்துவிட்டோம். எனவே நீ இதைத் தலைமீது சுமந்து பழைய மடத்திற்கு (நீலாம்பர் பாபுவின் தோட்டவீடு) எடுத்துச் செல்' என்றார். சீடர் அந்தப் பெட்டியைத் தொடத் தயங்கினார். அதைக் கண்ட சுவாமிஜி, 'பயம் வேண்டாம். எடுத்துச் செல். இது என் கட்டளை' என்றார். சீடர் மகிழ்ச்சி யுடன் அவர் கட்டளைக்கு அடிபணிந்தார். பெட்டியைத் தலை யில் சுமந்துகொண்டு நீலாம்பர் பாபுவின் வீட்டை நோக்கி

நடந்தார். அவர் முன்னாலும், பிறகு சுவாமிஜியும், அவர் பின்னால் மற்றவர்களும் வந்தனர்.

வழியில் சுவாமிஜி சீடரிடம், 'ஸ்ரீராமகிருஷ்ணர் இன்று உன் தலைமீது அமர்ந்து உன்னை ஆசீர்வதிக்கிறார். நிலையற்ற பொருள் எதன்மீதும் உன் மனம் செல்ல இடம் தராமல் இன்றிலிருந்து எச்சரிக்கையாக இரு' என்றார். வழியில் ஒரு சிறிய பாலத்தைக் கடக்க வேண்டிவந்தது. சுவாமிஜி சீடரிடம், 'எச்சரிக்கையாக நடந்துபோ' என்றார்.

எல்லோரும் மடத்தை அடைந்தனர். நிகழ்ச்சி தடையின்றிச் சிறப்பாக நிறைவுற்றதால் எல்லோரும் மிக்க மகிழ்ச்சி அடைந்தார்கள். சுவாமிஜி சீடரிடம் சொன்னார்: 'ஸ்ரீராமகிருஷ்ணரின் விருப்பத்தால் அவரது தர்மபூமி நிறுவப்பட்டு விட்டது. பன்னிரண்டு ஆண்டுகளாக இருந்த என் கவலை தீர்ந்தது. இப்போது என் மனத்தில் என்ன இருக்கிறது தெரியுமா? இந்த மடம் கல்விக்கும் ஆன்மீகத்திற்கும் ஒரு மையமாக அமையும். அறவழி நிற்கின்ற உன்னைப் போன்ற இல்லறத்தார்கள் இதைச் சுற்றி வீடுகளைக் கட்டிக்கொண்டு வாழ்வார்கள். நடுவே துறவிகள் வாழ்வார்கள். மடத்திற்குத் தெற்குப் பகுதியில் ஆங்கிலேய மற்றும் அமெரிக்கச் சீடர்கள் வாழ்வதற்கான வீடுகள் கட்டப்படும். இந்தத் திட்டம் எப்படி இருக்கிறது?'

சீடர்: 'அற்புதமான சிந்தனை.'

சுவாமிஜி: 'வெறும் சிந்தனை மட்டுமல்ல! காலப்போக்கில் இவை எல்லாமே நடக்கும். நான் அதற்கான அடிக்கல்லை மட்டுமே அமைக்கிறேன். இதன்பிறகு என்னென்ன நடக்கப் போகிறது, தெரியுமா! நான் சிலவற்றைச் செய்வேன். ஆனால் உங்கள் உள்ளத்தில் பல கருத்துக்களை விதைத்துச் செல்வேன். நீங்கள் அவற்றை எதிர்காலத்தில் செயல்படுத்த வேண்டும். பெரியபெரிய கொள்கைகளைக் கேட்டால் மட்டும் போதாது. அவற்றைச் செயல்முறையில் காட்ட வேண்டும்; ஒவ்வொரு செயலிலும் இணைக்க வேண்டும். பெரியபெரிய சாஸ்திரங்களை மனப்பாடம் செய்வதால் மட்டும் என்ன பயன்? முதலில் அவற்றின் உட்பொருளை அறிந்துகொள்ள வேண்டும். பிறகு அவற்றை அன்றாட வாழ்வில் நடைமுறைப்படுத்த வேண்டும், புரிகிறதா? இதுதான் செயல்முறை மதம்.'

பின்னர் பேச்சு ஆதிசங்கரரைப்பற்றித் திரும்பியது. வெறி என்று சொல்லுமளவிற்கு அவரிடம் ஈடுபாடு கொண்டவர் சீடர். சுவாமிஜி இதை அறிவார். யாரிடமும் கொள்கைவெறியை

அவர் சகிக்க மாட்டார். தமது கூர்த்த அறிவால் அதைப் பொடிப்பொடியாக்கி விடுவார்.

சுவாமிஜி: 'சங்கரரின் அறிவு வாள்முனை போன்று கூர்மையானது; அவர் நல்ல சிந்தனையாளர், பேரறிஞர். சந்தேகமில்லை. ஆனால் அவரிடம் அவ்வளவு பரந்த நோக்கம் இல்லை. அவரது இதயமும் அப்படியே இருந்தது என்றுதான் தோன்றுகிறது. அதனுடன், தான் ஒரு பிராமணன் என்ற கர்வமும் இருந்தது. தென்னிந்திய பிராமணர் கூட்டத்தில் அவர் ஒருவர், அவ்வளவு தான், வேறென்ன? பிராமணன் அல்லாதவன் பிரம்ம ஞானம் பெற முடியாது என்பதை எவ்வளவு திறம்பட வேதாந்த சூத்திர விளக்கவுரையில் எழுதுகிறார்! என்ன சாதுரியமான வாதங்கள்! முற்பிறவியில் பிராமணராக இருந்ததால்தான் விதுரர்[1] பிரம்ம ஞானம் பெற்றதாகக் கூறுகிறார். சரி, இப்போது ஒரு சூத்திரன் பிரம்மஞானம் பெற்றால் உன் சங்கரரின் கருத்துப்படி அவன் போன பிறவியில் பிராமணனாகப் இருந்ததால்தான், அப்படித் தானே! கடவுளே! பிராமணத்துவத்தை ஏன் இப்படி இழுஇழு என்று இழுக்க வேண்டும்! முதல் மூன்று ஜாதியினரும் வேதங்களைப் படிக்கலாம், பிரம்மஞானம் அடையலாம் என்று வேதங்கள் கூறவில்லையா? எனவே சங்கரர் வேதங்களுக்கு எதிராக தமது புத்திசாலித்தனத்தைக் காட்ட வேண்டியதில்லை. இனி, வாதத்தில் தோற்ற பல புத்தபிட்சுகளை நெருப்பிற்கு இரையாக்கிய அவரது இதயத்தை என்னவென்று சொல்வது! அந்த பிட்சுக்களும் வாதத்தில் தோற்றுவிட்டதற்காகத் தங்களைத் தாங்களே எரித்துக்கொண்டார்களே, அதுவும் முட்டாள்தனம்தான். சங்கரரின் இந்தச் செய்கையைக் கொள்கை வெறி என்று சொல்லாமல், வேறு என்னவென்று சொல்வாய்? ஆனால் புத்தரின் இதயத்தைப் பார். ஓர் ஆட்டுக்குட்டியின் உயிரைக் காப்பாற்றத் தமது உயிரையும் கொடுக்கத் தயாராக இருந்த அவரது இதயத்தைப் பார். அவரது கொள்கையான ''பஹுஜன ஹிதாய பஹுஜன ஸுகாய—பலருடைய நன்மைக்காகவும் பலருடைய மகிழ்ச்சிக்காகவும்'' என்பது எவ்வளவு மகத்தானது! எவ்வளவு பரந்த இதயம்! என்ன கருணை!'

சீடர்: 'ஒரு விலங்கிற்காகத் தன்னையே பலி கொடுக்கத் தயாரான புத்தரின் செய்கையையும் ஒருவகை வெறி என்று சொல்லலாமே!'

---

1. மகாபாரதத்தில் வரும் பாத்திரம்; சூத்திரத் தாய்க்குப் பிறந்தவர், ரிஷியாகப் போற்றப்பட்டவர்; பாண்டவர்களின் சித்தப்பா.

சுவாமிஜி: 'ஆனால் அவரது அந்த வெறியிலிருந்து உலகிற்கு எவ்வளவு நன்மை கிடைத்தது என்பதைப் பார். எத்தனை மடங்கள், பள்ளிகள், கல்லூரிகள், மருத்துவமனைகள்! விலங்குகளுக்குக்கூட மருத்துவமனைகள் அமைக்கப்பட்டன! கட்டிடக் கலை எந்த அளவிற்கு வளர்ச்சி பெற்றது. சிந்தித்துப் பார். புத்தர் தோன்றுவதற்கு முன்னால் இந்த நாட்டில் இவையெல்லாம் இருந்தனவா என்ன! இருந்தவையெல்லாம் பனையோலையில் எழுதப்பட்ட சில சாஸ்திரக் குவியல் மட்டும்! அவையும் சிலருக்குத்தான் தெரிந்திருந்தன! பகவான் புத்தர்தான் அந்தக் கருத்துக்களையெல்லாம் நடைமுறைக்குக் கொண்டுவந்து, அவற்றை அன்றாட வாழ்க்கையில் மக்கள் எப்படிக் கடைப்பிடிப்பது என்பதையும் செய்து காட்டினார். சொல்லப் போனால் உண்மையில் அவர்தான் வேதாந்தத்தின் திரண்ட வடிவமானவர்.'

சீடர்: 'ஆனால் சுவாமிஜி, அவரல்லவா வருணாசிரம தர்மத்தை[1] அழித்து இந்தியாவில் இந்து மதத்திற்குள் ஒரு குழப்பத்தை உண்டாக்கினார்! இந்தக் காரணத்தால்தான் அவரது மதம் இந்த நாட்டை விட்டே நாளடைவில் துரத்தப்பட்டது என்று சொல்வது உண்மை என்றுதான் தோன்றுகிறது!'

சுவாமிஜி: 'புத்தமதத்தின் இந்தச் சீரழிவிற்குக் காரணம் அவரது உபதேசங்கள் அல்ல; அவரைப் பின்பற்றியவர்களின் தவறுதான். தத்துவத்தில் மிக ஆழ்ந்துபோய், அதேவேளையில் பரந்த மனப்பான்மை அவர்களிடம் குறைந்தது. பிறகு படிப் படியாக வாமாச்சாரம்[2] எனப்படும் தீமை நுழைந்து, புத்த மதத்தை அடியோடு அழித்துவிட்டது. தற்போதைய தாந்திரீக நெறியில்கூட அத்தகைய வாமாச்சாரம் இல்லை. முக்கியமான பௌத்த மையங்களுள் ஒன்று புரி ஜகன்னாதர் கோயில். அந்தக் கோயில் சுவரில் காணப்படுகின்ற அருவருப்பான சித்திரங்களைப் பார்த்தாலே நான் சொல்வதன் உண்மை புரிந்து விடும். ராமானுஜர் மற்றும் சைதன்யர் காலத்திற்குப்பின் அந்தத் தலம் வைணவர்களின் ஆதிக்கத்தின் கீழ் வந்தது. அந்த மகான்களின் ஆற்றலால் அந்த இடங்கள் இன்று புதியதோர் உருப்பெற்று விட்டன.'

சீடர்: 'சுவாமிஜி, தீர்த்தத்தலங்களின் மகிமைபற்றிச் சாஸ்திரங்கள் கூறுகின்றனவே, இவை எந்த அளவிற்கு உண்மை?

---

1. பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்ற பிரிவு.
2. மதத்தின் பெயரில் பெண்களுடன் வரம்புமுறையில்லாது பழகுதல்.

சுவாமிஜி: 'இந்தப் பிரம்மாண்டமே நித்திய ஆன்மாவான இறைவனின் திருமேனி என்னும்போது, குறிப்பிட்ட இடங்களின் மகிமைபற்றி ஆச்சரியப்படுவதற்கு என்ன இருக்கிறது? குறிப்பிட்ட இடங்களில் இறைவனின் விசேஷ வெளிப்பாடு இருக்கிறது. அது தானாகவே ஏற்பட்டதாக இருக்கலாம் அல்லது தூய மனித மனங்களின் ஏக்கப் பிரார்த்தனைகளின் காரணமாக இருக்கலாம். சாதாரண மனிதன் அங்கே சாதனைகள் செய்தால் விரைவில் பலன் பெறுவான். தீர்த்தத் தலங்களில் வாழ்வது காலப்போக்கில் ஒருவனது ஆன்மீக வளர்ச்சிக்குத் துணை செய்யும்.

'ஆனால் தெளிவாகத் தெரிந்துகொள்: மனிதனின் உடம்பைவிடச் சிறந்த தீர்த்தம் எதுவும் கிடையாது. ஆன்மா, இந்த உடம்பில் வெளிப்படுவது போன்று வேறு எங்கும் அதிகமாக வெளிப்படுவதில்லை. புரி ஜகன்னாதரின் தேர்கூட உடம்பான இந்தத் தேரின் தூல வடிவம்தான். இந்த உடம்புத் தேரில் தான் ஆன்மாவைக் காண வேண்டும். ''ஆத்மானம் ரதினம் வித்தி—ஆன்மாவைத் தேரில் அமர்ந்திருப்பவனாக அறிந்து கொள்''[1] ''மத்யே வாமனமாஸீதம் விச்வே தேவா உபாஸதே—உடலுக்குள் அமர்ந்திருக்கும் வாமனரை எல்லா தேவர்களும் வணங்குகிறார்கள்''[2] என்ற வாக்கியங்களை நீ படித்ததில்லையா? வாமன வடிவமான இந்த ஆன்மாவின் காட்சியைப் பெறுவது தான் உண்மையில் ஜகன்னாதரின் தரிசனம் ஆகும். ''ரதே வாமனம் த்ருஷ்டா புனர்ஜன்ம ந வித்யதே—தேரில் வாமனரைக் கண்டவர்களுக்கு மறுபிறவி இல்லை'' என்பதன் பொருள், உன்னுள் இருக்கும் ஆன்மாவை உன்னால் காண முடியுமானால், நீ எப்போதும் உன்னோடு சேர்த்து இணைத்துக்கொள்ளும் விசித்திரமான ஜட மூட்டையை அதாவது உன்னுடைய இந்த உடம்பின் நினைவை ஒதுக்கித் தள்ளிவிட்டு, ஆன்மாவைக் காண்பாயானால் உனக்கு மறுபிறவி இல்லை என்பதே. மரத் தேரில் இழுத்துவரப்படும் திருவுருவைக் காண்பதால் முக்தி கிடைக்குமானால் ஆண்டுதோறும் கோடிக்கணக்கானோர் முக்தி பெற்றிருப்பார்களே. அதிலும் இப்போது ரயில் வேறு உள்ளது, புரிக்கு எளிதாகப் போகவும் முடியும்! இதுபற்றி பக்தர்கள் கொண்டுள்ள நம்பிக்கையைத் தவறு என்றோ, பயனில்லாதது என்றோ நான் சொல்ல வரவில்லை.

1. கட உபநிடதம், 2. 2. 3.
2. கட உபநிடதம், 1. 3. 3.

திருவுருவங்களை வழிபடுவதன்மூலம் படிப்படியாக ஆன்மீகத்தின் உயர்நிலைகளை அடைகின்ற மக்களும் இருக்கிறார்கள். எனவே திருவுருவங்களில் எம்பெருமானின் சிறப்பான ஆற்றல் வெளிப்படுகிறது என்பதில் சந்தேகமே இல்லை.'

சீடர்: 'அப்படியென்றால் பாமரனுக்கும் பண்டிதனுக்கும் தர்மம் என்பது வெவ்வேறா?'

சுவாமிஜி: 'நிச்சயமாக. இல்லையென்றால் உன் சாஸ்திரங்கள் எதற்காகச் சாதகர்களின் தகுதிகளைப்பற்றி இவ்வளவு நீட்டி முழக்குகின்றன? எல்லாமே உண்மைதான். சார்பு நிலை உண்மையில் வேறுபாடுகள் இருக்கவே செய்கின்றன. மனிதன் உண்மை என்று அறிந்திருப்பவை அனைத்தும் இத்தகையவைதான். சில, தாழ்ந்த உண்மைகள்; சில, அவற்றைவிட உயர்ந்த உண்மைகள். நித்தியமான உண்மை கடவுள் ஒருவர் மட்டுமே. ஆன்மாதான் ஜடப்பொருட்களில் செயலற்ற நிலையில் இருக்கிறது; உயிர்ப்பொருளான மனிதனில் சிறிது விழிப்புற்று உணர்வுடன் உள்ளது; கிருஷ்ணர், புத்தர், சங்கரர் முதலியவர்களிடம் இதே ஆன்மாதான் மிக உயர்ந்த உணர்வு நிலையில் உள்ளது, அதாவது முற்றிலும் விழிப்புற்ற நிலையில் உள்ளது. இதைவிட உயர்ந்த நிலை ஒன்று உள்ளது. அதை எழுத்திலோ பேச்சிலோ சொல்ல முடியாது. அது அவாங்மனஸ கோசரம்—வாக்கிற்கோ மனத்திற்கோ எட்டாத நிலை.'

சீடர்: 'பக்தி நெறிகளுள் சில, இறைவனிடம் ஒரு குறிப்பிட்ட உறவுமுறையை உருவாக்கிக் கொண்டு சாதனைகளில் ஈடுபட வேண்டும் என்று கூறுகின்றன. ஆன்மாவின் மகிமைகளையெல்லாம் அவை அறிவதில்லை. அறிய நேர்ந்தாலும், அவற்றை ஒதுக்கி இந்த உறவு முறைகளில் எப்போதும் ஆழ்ந்திருங்கள் என்று வற்புறுத்துகின்றன.''

சுவாமிஜி: 'அவர்களைப் பொறுத்தவரையில் அது உண்மை. இதே சாதனையைத் தொடர்ந்து செய்து வருவார்களானால் ஒருநாள் அவர்களும் தங்களுள் பிரம்மம் விழித்து எழுவதை உணர்வார்கள். ஆனால் நாங்கள் (துறவிகள்) செய்வது வேறு வகையான சாதனை. நாங்கள் உலகியலைத் துறந்து விட்டோம். எனவே இறைவனுடன் தந்தை, தாய், மனைவி, பிள்ளை என்றெல்லாம் உலகியல் உறவுமுறை கொண்டாட எங்களால் எப்படி முடியும்? இவையெல்லாம் குறுகிய கருத்துக்களாகவே எங்களுக்குத் தோன்றுகின்றன. எல்லா உறவுமுறைகளையும் கருத்துக்களையும் கடந்த எம்பெருமானை வழிபடுவது என்பது

கடினம்தான். ஆனால் அமுதம் கிடைக்கவில்லை என்பதற்காக விஷத்தையா சாப்பிடுவது? எப்போதும் ஆன்மாவைப் பற்றியே பேசு, கேள், சிந்தனை செய். இவ்வாறு செய்துகொண்டே வந்தால், காலப்போக்கில் உன்னுள்ளும் சிங்கம் (பிரம்மம்) சிலிர்த்து எழுவதைக் காண்பாய். இந்த உறவுமுறை விளையாட்டுக்களை எல்லாம் கடந்து போ. கடோபநிடதத்தில் எமன் கூறுவதை நினைவுகொள்—''உத்திஷ்டத ஜாக்ரத ப்ராப்ய வரான் நிபோதத.''[1]

பேச்சு முடிவுற்றது. சாப்பாட்டிற்கான மணி அடித்தது. சுவாமிஜி சாப்பிடுவதற்குச் சீடருடன் சென்றார்.

## 15

பேலூரில் வாடகை மடம், பிப்ரவரி 1898

மடம் ஆலம்பஜாரிலிருந்து கங்கைக்கரையில் பேலூரிலுள்ள நீலாம்பர் பாபுவின் மாளிகைக்கு மாற்றப்பட்டிருந்தது. இந்தப் புதிய இடத்திற்கு வந்ததில் சுவாமிஜி மிகவும் மகிழ்ச்சியாக இருந்தார். சீடர் வந்ததும் அவரிடம், 'பக்கத்தில் கங்கை எவ்வளவு அழகாக ஓடுகிறது! எவ்வளவு அழகான கட்டிடம்! மடத்திற்கு இது பொருத்தமான இடம்!' என்று கூறினார். அப்போது நடுப்பகல் நேரம்.

மாலையில் சுவாமிஜி மாடியில் அமர்ந்திருப்பதைச் சீடர் கண்டார். அங்குச் சென்ற சீடரிடம் அவர் பல விஷயங்களைப் பேசினார். சுவாமிஜியின் சிறுவயது நிகழ்ச்சிகளைக் கேட்டறிய ஆவல் கொண்டார் சீடர். சுவாமிஜி சொன்னார்: 'சிறுவயது முதலே பயம் என்பது துளியும் அற்றவனாக நான் இருந்தேன். இல்லையென்றால் கையில் தம்பிடி இல்லாமல் உலகம் முழுவதையும் சுற்றி வந்திருக்க முடியுமா?'

சீடர்: 'உங்கள் மாணவப் பருவத்தில் நீங்கள் தெய்வீகக் காட்சி எதையாவது கண்டது உண்டா?'

சுவாமிஜி: 'பள்ளியில் படித்துக் கொண்டிருந்தபோது ஒருநாள் அறையைத் தாளிட்டுக்கொண்டு நான் தியானம் செய்தேன். மனம் மிக ஆழ்ந்து ஒருமுகப்பட்டது. அந்த நிலையில் எவ்வளவு நேரம் இருந்தேன் என்பது தெரியவில்லை. தியானம் கலைந்து, ஆசனத்தில் உட்கார்ந்திருந்தேன். அப்போது அந்த அறையின் தெற்குச் சுவரிலிருந்து ஒளிமயமான

---

1. எழுந்திருங்கள், விழித்திருங்கள், மகான்களை அடைந்து உண்மையை அறிந்துகொள்ளுங்கள்.

ஒருவர் தோன்றி என் முன் வந்துநின்றார். அவரது முகத்திலிருந்து ஓர் அற்புதப் பேரொளி பொங்கிப் பரவிக் கொண்டிருந்தது. அந்த முகத்தில் எந்தச் சலனமும் இல்லை. தலை மழிக்கப்பட்டு, கையில் கமண்டலமும் தடியும் ஏந்தியதோர் அமைதிப் பேருருவான துறவி அவர். என்னிடம் ஏதோ சொல்ல விரும்புபவர்போல் என்னைப் பார்த்தபடியே சிறிதுநேரம் நின்றிருந்தார். நான் பேச்சற்று உறைந்துபோய் அமர்ந்திருந்தேன். அப்போது ஒருவகையான பயம் என்னைப் பிடித்துக் கொண்டது. பயத்தில் அறையின் கதவைத் திறந்து வேகமாக வெளியே போய்விட்டேன். ஆனால் பிறகு, இப்படி ஓடி வந்தது முட்டாள்தனம், இல்லாவிட்டால் அவர் நம்மிடம் ஏதோ சொல்லியிருப்பார் என்று நினைத்துக் கொண்டேன். அதன்பிறகு அவரை நான் பார்க்கவே இல்லை. மறுபடியும் அவரைப் பார்த்தால் பயப்படக்கூடாது, அவருடன் பேச வேண்டும் என்றெல்லாம் பலமுறை நினைத்துக் கொண்டேன். ஆனால் மீண்டும் அவரைப் பார்க்கவே இல்லை.'

சீடர்: 'அதன்பிறகு அந்த விஷயத்தை நீங்கள் எண்ணியது உண்டா?'

சுவாமிஜி: 'உண்டு, ஆனால் ஒரு முடிவும் தெரியவில்லை. ஒருவேளை அவர் புத்தராக இருக்கலாம் என்று இப்போது நினைக்கிறேன்!'

சிறிது நேர அமைதிக்குப் பிறகு சுவாமிஜி கூறினார்: 'மனம் தூய்மையானால், காமம் மற்றும் பொருளாசைகளிலிருந்து விடுபட்டால் எத்தனையெத்தனை தெய்வீகக் காட்சிகளைப் பெறலாம்—அற்புதம், அற்புதம்! ஆனால் தெய்வீகக் காட்சிகளில் அக்கறை காட்டக் கூடாது. அவற்றில் மனத்தைச் செலுத்தினால் சாதகன் முன்னேற முடியாது. ''என் அன்பு நிறை இறைவனுடைய கருவறையின் வெளிப் பிராகாரங்களில் எண்ண முடியாத ரத்தினங்கள் கேட்பாரில்லாமல் இறைந்து கிடக்கின்றன'' என்று ஸ்ரீராமகிருஷ்ணர் அடிக்கடிச் சொல்வதுபற்றி நீ கேட்டதில்லையா? ஆன்மாவை உணர வேண்டும். இவற்றையெல்லாம் நினைத்துக் கொண்டிருப்பதில் என்ன பயன்?'

இதைக் கூறிவிட்டு சுவாமிஜி சிறிதுநேரம் சிந்தனையில் மூழ்கியவராக அமர்ந்திருந்தார். பிறகு தொடர்ந்தார்:

'நான் அமெரிக்காவில் இருந்தபோது என்னிடம் சில ஆச்சரியகரமான சக்திகள் வெளிப்பட்டன. மக்களின்

கண்களைப் பார்த்தே கணப்பொழுதில் அவர்கள் மனத்தில் இருப்பதையெல்லாம் அறிந்துகொள்வேன். யார் என்ன நினைக்கிறார் என்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் எனக்குத் தெளிவாகத் தெரியும். சிலரிடம் அதை அப்படியே சொல்வேன். அப்படி நான் கூறிய பலர் என் சீடர்கள் ஆனார்கள். ஏதோ உள்நோக்கத்துடன் என்னோடு பழகியவர்கள், எனது இந்தச் சக்தியை அறிந்ததும், அதற்குப் பிறகு என் முன்னால் வருவதற்குத் துணிவின்றி விலகிவிட்டார்கள்.

'சிகாகோ மற்றும் பல நகரங்களில் சொற்பொழிவு நிகழ்த்து வதற்கு ஆரம்பித்த காலத்தில் வாரந்தோறும் பன்னிரண்டு, பதினான்கு, சிலவேளைகளில் அதைவிட அதிகமாகவும் சொற் பொழிவு செய்ய வேண்டியிருந்தது. மனக் களைப்பு மற்றும் உடல் களைப்பினால் நான் மிகவும் சோர்ந்துவிட்டேன். இனி சொல்வதற்கு எதுவும் இல்லை, எல்லாம் வற்றிவிட்டதுபோல் தோன்றியது. என்ன செய்வேன், நாளை புதிய விஷயத்திற்கு எங்கே போவேன் என்று எண்ணினேன். எல்லாம் வறண்டு போனது போலாயிற்று. ஒருநாள் சொற்பொழிவு முடிந்தபிறகு படுக்கையில் படுத்தபடியே, இனி என்ன செய்வது என்ற சிந்தனையில் ஆழ்ந்தேன். லேசாகத் தூக்கம் கண்களைச் சுழற்றி யது. அந்த அரைத்தூக்க நிலையில் யாரோ ஒருவர் என் பக்கத் தில் நின்று சொற்பொழிவு ஆற்றுவது போலிருந்தது—எல்லாம் புதிய விஷயங்கள், புதிய கருத்துக்கள், என் வாழ்வில் அதுவரை யிலும் கேட்டறியாத புத்தம்புதுச் சிந்தனைகள்! விழித்து எழுந்த தும் அந்தக் கருத்துக்களையெல்லாம் என் சொற்பொழிவில் கூறினேன். எத்தனையோ முறை இப்படி நிகழ்ந்ததுண்டு! படுக்கையில் படுத்திருக்கும்போது பலமுறை அத்தகைய சொற்பொழிவுகளை நான் கேட்டேன். சில நேரங்களில் அந்தச் சொற்பொழிவு, மிகுந்த உரத்த குரலில் பேசப்படும். மறுநாள் காலையில் என் பக்கத்து அறைகளில் தங்கி இருந்தவர்கள் வந்து, ''சுவாமிஜி, நேற்று இரவு அவ்வளவு சத்தமாக யாரோடு பேசிக் கொண்டிருந்தீர்கள்?'' என்று கேட்பார்கள். அதற்குப் பதில் சொல்லாமல் தவிர்த்துவிடுவேன். ஆ! அது அற்புத நிகழ்ச்சி.'

சீடர் வாயடைத்துப் போனார். நீண்டநேரம் ஆழ்ந்து சிந்தித்த பிறகு சுவாமிஜியிடம், 'சுவாமிஜி, அப்படியென்றால் சூட்சும உடலின்மூலம் உங்களுக்கு நீங்களே சொற்பொழிவு செய்திருக்கிறீர்கள். சிலநேரங்களில் அது உங்கள் தூல உடம்பின்

காதுகளுக்கும் கேட்டிருக்கிறது' என்றார். 'இருக்கலாம்' என்றார் சுவாமிஜி.

அமெரிக்காவில் சுவாமிஜியின் அனுபவங்களைப் பற்றிய பேச்சு மீண்டும் எழுந்தது. அப்போது சுவாமிஜி கூறினார்: 'அந்த நாட்டில் பெண்கள் ஆண்களைவிட அதிகம் படித்தவர்களாக இருக்கிறார்கள். விஞ்ஞானத்திலும் தத்துவத்திலும் ஆழ்ந்த அறிவுடையவர்களாக இருக்கிறார்கள். அதனால்தான் என்னை அவ்வளவு அதிகமாகப் பாராட்டவும் மதிக்கவும் செய்தார்கள். ஆண்கள் நாள் முழுவதும் வேலைகளில் முறுக்கிப் பிழியப்படுகிறார்கள். அவர்களுக்கு ஓய்வு மிகவும் குறைவு. பெண்களோ ஆசிரியைகளாக இருக்கிறார்கள்; அறிவாளிகளாக இருக்கிறார்கள். அமெரிக்காவில் எந்தப் பக்கம் திரும்பினாலும் பெண்களின் ஆதிக்கத்தைக் காணலாம்.''

சீடர்: 'சுவாமிஜி, மதவெறி பிடித்த கிறிஸ்தவர்கள் உங்களை எதிர்க்கவில்லையா?'

சுவாமிஜி: 'எதிர்க்காமல் என்ன செய்வார்கள்? மக்கள் எனக்கு மரியாதை செலுத்த ஆரம்பித்ததும் பாதிரிகள் என்னை எதிர்த்தார்கள். என்னைப்பற்றிப் பல அவதூறுகளைப் பரப்பினார்கள். செய்தித்தாள்களில் அவற்றை வெளியிட்டுப் பிரச்சாரம் செய்தார்கள். அவற்றை மறுக்கும்படி அப்போது பலர் என்னிடம் கூறியதுண்டு. நான் அவற்றைச் சிறிதும் பொருட்படுத்தவில்லை. ஏமாற்று வேலைகளால் இந்த உலகில் மகத்தான எதையும் சாதிக்க முடியாது என்பது என் திட நம்பிக்கை. எனவே இத்தகைய கேவலமான பிரச்சாரத்தைப் பொருட்படுத்தாமல் என் பணியைத் தொடர்ந்தேன். இதன் விளைவாக நான்கண்டது என்னவென்றால், அப்படி என்மீது பழி சொல்லியவர்களே பிறகு என்னிடம் வந்து தங்கள் செயல்களுக்கு வருந்தி மன்னிப்புக் கேட்டார்கள்; முன்பு என்னைப் பற்றி வெளியிட்ட அவதூறுகளை மறுத்துச் செய்தித்தாள்களில் வெளியிட்டு, அப்படிச் செய்ததற்காக வருத்தமும் தெரிவித்தார்கள்.

'சிலவேளைகளில் நான் ஏதாவது வீட்டிற்கு விருந்திற்கு அழைக்கப்பட்டிருப்பேன். அதை அறிந்துகொண்டு, நான் போவதற்கு முன்பாக அங்கு போய் என்னைப் பற்றிய ஏதாவது அவதூறுகளைச் சொல்லிவிடுவார்கள். என்னை அழைத்தவர்கள் இதைக் கேட்டதும் கதவுகளைப் பூட்டிக்கொண்டு, வீட்டைவிட்டே போய்விடுவார்கள். நான் அங்கே சென்றால்

கதவுகள் பூட்டப்பட்டிருக்கும்; யாரும் இருக்க மாட்டார்கள். சில நாட்கள் கழியும். அனைத்தும் பொய் என்பதை அவர்கள் தெரிந்துகொண்டு, என்னிடம் வந்து தங்கள் செயலுக்கு வருத்தம் தெரிவிப்பார்கள்; என் சீடர்களாகவும் ஆவார்கள்.

'மகனே, இந்த உலகம் முழுவதுமே உலகியல் மனிதர்களால் நிரம்பி இருக்கிறது. ஆனால் ஒழுக்கமும் தைரியமும் விவேகமும் உள்ளவர்களை இது ஏமாற்ற முடியுமா என்ன! இந்த உலகம் எதைச் சொல்கிறதோ சொல்லட்டும், நான் என் கடமையைச் செய்கிறேன்—இதுதான் ஒரு வீரனின் செயல்முறையாக இருக்க வேண்டும். அப்படியில்லாமல், இவன் என்ன சொல்கிறான், அவன் என்ன எழுதுகிறான் என்பதிலேயே இரவும்பகலும் மனத்தைச் செலுத்திக் கொண்டிருந்தால் இந்த உலகத்தில் பெரும் காரியங்கள் எதையும் சாதிக்க முடியாது. ''சான்றோர்கள் உன்னைப் பாராட்டட்டும் அல்லது பழிக்கட்டும். செல்வத்தின் தேவதையான லட்சுமி வரட்டும் அல்லது அவளுக்கு எங்கு விருப்பமோ அங்கே போகட்டும். மரணம் இன்றோ அல்லது நூறு ஆண்டுகள் கழித்தோ வரட்டும். என்ன நேர்ந்தாலும் மேலோர்கள் நேரான பாதையிலிருந்து ஒருபோதும் தவற மாட்டார்கள்'[1] என்னும் சம்ஸ்கிருத சுலோகம் உனக்கு நினைவிருக்கிறது அல்லவா! மக்கள் உன்னைப் பாராட்டட்டும் அல்லது பழிக்கட்டும். திருமகளின் அருள் உன்மீது வரட்டும் அல்லது வராமல் போகட்டும், உன் உடம்பு இன்றைக்கு அழியட்டும் அல்லது இன்னும் ஒரு யுகம் கழித்து அழியட்டும். நியாய வழியிலிருந்து ஒருபோதும் விலகாதே. ஒருவன் அமைதி என்னும் சொர்க்கத்தை அடைவதற்கு முன்பு எவ்வளவோ புயல்களையும் அலைகளையும் கடந்தாக வேண்டியிருக்கிறது! ஒருவன் எவ்வளவு மகத்தானவனாக ஆகிறானோ, அந்த அளவிற்கு அவன் கடுமையான சோதனைகளைச் சந்திக்க வேண்டி இருக்கிறது. நடைமுறையில் நன்றாகப் பரிசோதித்த பின்னரே உலகம் அவர்களின் மகோன்னதத்தை ஏற்றுக்கொள்கிறது. யார் பயந்த மனமும் கோழைத்தனமும் உடையவனாக இருக்கிறானோ, அவன் சீறியெழும் அலைகளுக்கு அஞ்சி

1. நிந்தந்து நீதிநிபுணா: யதி வா ஸ்துவந்து
லக்ஷ்மீ: ஸமாவிசது கச்சது வா யதேஷ்டம்|
அத்யைவ மரணமஸ்து சதாப்தாந்தரே வா
ந்யாயாத் பத: ப்ரவிசலந்தி பதம் ந தீரா: ||
—பர்த்ருஹரி, நீதி சதகம், 74.

தன் சிறு கப்பலைக் கரைக்கு அருகிலேயே மூழ்கடித்துவிடுகிறான். வீரர்கள் இதற்கெல்லாம் அசைந்து கொடுப்பார்களா, என்ன! வருவது வரட்டும், நான் என் லட்சியத்தை அடைந்தே தீர்வேன்—இதுதான் வீரம். இத்தகைய வீரம் உன்னிடம் இல்லாவிட்டால் நூறு தெய்வங்கள் வந்தாலும் உன் ஜடத் தன்மையை நீக்க முடியாது.'

சீடர்: 'அப்படியென்றால் தெய்வத்தின் திருவருளைச் சார்ந்து வாழ்வது பலவீனத்தின் அடையாளம் என்றா சொல்கிறீர்கள்?'

சுவாமிஜி: 'தெய்வத்தைச் சார்ந்து வாழ்வதை அதாவது சரணாகதியை மனித முயற்சிகளின் உச்சநிலையாக சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஆனால் இந்த நாட்டில் இப்போது மக்கள் ''தெய்வம் தெய்வம்'' என்று அடித்துக் கொள்கிறார்களே, அது அவர்கள் செத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதன் அடையாளம்; கோழைத்தனத்தின் வெளிப்பாடு; ஏதோவொரு வினோதமான தெய்வத்தை உருவாக்கி, தங்கள் தவறுகளை அவர் மீது சுமத்துவதற்கான முயற்சி. ஸ்ரீராமகிருஷ்ணரின் 'பசுவைக் கொன்ற பாவம்' என்ற கதையை[1] நீ கேட்டதில்லையா? கடைசியில் தோட்டச் சொந்தக்காரனே பசுவைக் கொன்ற பாவத்திற்காகத் துயரப்பட வேண்டியிருந்தது.

'இப்போது ஒவ்வொருவரும் ''கடவுளின் திருவுளப்படியே நடக்கிறேன்'' என்று கூறிக்கொண்டு தங்கள் பாவ புண்ணியச் சுமைகளைக் கடவுள்மீது வைத்து விடுகிறார்களாம்! தாங்கள் தண்ணீரில் நனையாத தாமரை இலைபோல் இருக்கிறார்களாம்! இப்படி எப்போதும் வாழ்வார்களானால் அவர்கள் முக்தர்களே! ஆனால் நல்லது நடந்தால் அது என் திறமை, கெட்டது நடந்தால் அது கடவுளின் செயல்!—ஆகா, என்ன அற்புதமான

---

1. ஒருவன் அழகிய தோட்டம் ஒன்றை உருவாக்கினான். அந்தத் தோட்டத்தில் ஒரு பசு நுழைந்து மேய்ந்துவிட்டது. அவனுக்கு வந்த ஆத்திரத்தில் அந்தப் பசுவைப் பயங்கரமாக அடித்தான். அது இறந்துவிட்டது. அந்தப் பாவத்திலிருந்து விடுபட அவன் ஒரு தந்திரத்தைக் கையாண்டான். நமது கைகளுக்கு இந்திரனே அதிபதி என்பதால் பசுவைக் கொன்ற பாவத்தின் பழியை இந்திரன்மீது போட்டான் அவன். இதை அறிந்த இந்திரன், ஒரு பிராமணனின் வடிவத்தில் அங்கே வந்தான். தோட்டக்காரனை மெல்ல அணுகிப் பேச்சுக் கொடுத்தபோது அந்தத் தோட்டக்காரன், தோட்டத்தை உருவாக்கியதும் அதற்கு நீர் பாய்ச்சுவதும், அதை அழகுபடுத்துவதும், அனைத்தும் தானே தன் கைப்படச் செய்தது என்று பெருமையாக ஒப்புக்கொண்டான். தனது தந்திரம் பலித்த இந்திரன், 'இவையனைத்தையும் நீயே செய்திருக்கிறாய், ஆனால் பசுவைக் கொன்றதுமட்டும் இந்திரன் என்று சொல்கிறாயே' என்று கூறி மறைந்தான்.

சரணாகதி! பூரண பக்தியோ பூரண ஞானமோ அடையாமல் சரணாகதி நிலையில் சிறிதுகூட வாழ முடியாது. உண்மையிலேயே சரணாகதி நிலையை அடைந்தவனிடம் நன்மை, தீமை என்ற வேற்றுமை உணர்வே இருக்காது. இதற்கு இன்று மிகச் சிறந்த உதாரணம் நம்மிடையே வாழும் நாகமகாசயர்.'

பிறகு பேச்சு நாகமகாசயரைப்பற்றித் திரும்பியது. 'அவரைப்போல் உயர்நிலை பக்தர் இன்னொருவரைப் பார்க்கவே முடியாது. ஓ, அவரை மீண்டும் எப்போது காண்பேன்' என்றார் சுவாமிஜி.

சீடர்: 'அவர் தங்களைக் காண விரைவில் கல்கத்தா வருவதாக அன்னை (நாகமகாசயரின் மனைவி) எனக்கு எழுதி இருக்கிறார்.'

சுவாமிஜி: 'ஸ்ரீராமகிருஷ்ணர் அவரை ஜனகருடன் ஒப்பிடுவது வழக்கம். அவரைப்போல் புலன்களை வென்றவரைப்பற்றிக் கேள்விப்படவே முடியாது; பார்ப்பது என்ற பேச்சிற்கே இடமில்லை. முடிந்த அளவு அவருடன் நெருக்கமாகப் பழகு. அவர் ஸ்ரீராமகிருஷ்ணரின் மிக நெருக்கமான சீடர்களுள் ஒருவர்.'

சீடர்: 'எங்கள் ஊர்ப்பக்கம் பலர் அவரைப் பைத்தியம் என்றே சொல்வார்கள். ஆனால் நான் அவரை முதலில் சந்தித்ததுமே அவர் ஒரு மகான் என்பதைத் தெரிந்துகொண்டேன். அவர் என்னிடம் மிகுந்த அன்பு காட்டுவார், அவரது மேலான ஆசிகள் எனக்கு இருக்கிறது.'

சுவாமிஜி: 'அத்தகைய மகாபுருஷரின் நட்பைப் பெற்ற நீ கவலைப்படுவதற்கு என்ன இருக்கிறது? பல பிறவிகளில் செய்த புண்ணியங்களின் பலனாலேயே ஒருவனுக்கு அவரைப் போன்ற மகான்களின் ஆசிகள் கிடைக்கும். அவர் வீட்டில் எப்படி வாழ்கிறார்?'

சீடர்: 'அவர் வேலை என்று எதுவும் பார்க்கவில்லை. விருந்தினர் சேவைதான் முக்கிய வேலை. பால் பாபுக்கள் தருகின்ற சிறு தொகையைத் தவிர குடும்பச் செலவிற்கு வேறு எந்த வருவாயும் இல்லை. செலவுகளோ பெரிய பணக்காரக் குடும்பத்தில் ஆகும் செலவுகளைப்போல் ஆகின்றன. ஆனால் அவர் ஒரு பைசாகூடத் தமது சுகத்திற்காகச் செலவழிப்பதில்லை. எல்லா செலவுகளுமே மற்றவர்களின் சேவைகளுக்காகத்தான். சேவை, சேவை—இதுவே அவரது வாழ்வின் மகத்தான லட்சியமாக உள்ளது. எல்லா உயிர்களிலும் அவர் தன் ஆன்மாவையே

கண்டு, தாமும் அவையும் வேறல்ல என்ற உணர்வில் தோய்ந்து, இப்படிச் சேவை செய்வதில் மூழ்கிக் கிடக்கிறாரோ என்று தோன்றுகிறது. பிறர் சேவையில் ஈடுபடுவதில், தமக்கு உடம்பு என்று ஒன்று இருக்கிறது என்பதையும் மறந்துவிடுகிறார். நீங்கள் சொன்னீர்களே உணர்வுகடந்த நிலை என்று, அந்த நிலையிலேயே அவர் எப்போதும் வாழ்வதாகத்தான் எனக்குத் தோன்றுகிறது.'

சுவாமிஜி: 'ஏன் அவர் அப்படி வாழ முடியாது? அவரை ஸ்ரீராமகிருஷ்ணர் எப்படி நேசித்தார்! உன் வங்காளத்தில் ஸ்ரீராமகிருஷ்ணரின் அன்பர் ஒருவர் அவர் வடிவில் பிறந்திருக்கிறார். அவரது ஒளியால் கிழக்கு வங்காளமே ஒளி பெற்றுள்ளது.'

## 16

பேலூரில் வாடகை மடம், நவம்பர் 1898

இரண்டு மூன்று நாட்களுக்கு முன்புதான் சுவாமிஜி காஷ்மீரிலிருந்து திரும்பி வந்திருந்தார். அவரது உடல்நிலை நன்றாக இல்லை. சீடர் மடத்திற்கு வந்ததும் சுவாமி பிரம்மானந்தர் சீடரைப் பார்த்து, 'சுவாமிஜி காஷ்மீர் சென்று திரும்பியதிலிருந்து யாரோடும் பேசவில்லை. சிந்தனையில் மூழ்கியபடி ஒரே இடத்தில் அமர்ந்திருக்கிறார். நீ அவரிடம் சென்று பேசி, அவருடைய மனத்தைச் சற்றுச் சாதாரண நிலையில் இறங்கி வரும்படிச் செய்' என்றார்.

மாடியிலிருந்த சுவாமிஜியின் அறைக்குச் சென்றார் சீடர். அங்கு சுவாமிஜி ஆழ்ந்த தியானத்தில் மூழ்கியவர்போல் அமர்ந்திருந்தார். முகத்தில் சிரிப்பில்லை; ஒளி மிகுந்த கண்களில் புற நோக்கு இல்லை; தமக்குள் இருக்கும் ஏதோ ஒன்றைப் பார்த்துக் கொண்டிருப்பதுபோல் அவர் தோற்றம் இருந்தது. சீடரைக் கண்டதும், 'மகனே, வந்திருக்கிறாயா? உட்கார்' என்று மட்டுமே சொல்லிவிட்டு, மீண்டும் அமைதியில் மூழ்கினார். சுவாமிஜியின் இடது கண் மிகவும் சிவப்பாக இருப்பதைக் கண்ட சீடர், 'என்ன உங்கள் இடது கண் இவ்வளவு சிவப்பாக இருக்கிறது?' என்று கேட்டார். 'ஒன்றுமில்லை' என்று சொல்லிவிட்டு சுவாமிஜி மறுபடியும் அமைதிமயமானார்.

நெடுநேரம் கழிந்தது. சுவாமிஜி ஒன்றும் பேசவில்லை. இதைக் கண்டு சீடரின் மனம் வேதனையில் வாடியது. உடனே அவர் சுவாமிஜியின் திருமுன்னர் வீழ்ந்து வணங்கி அவரது இரண்டு திருப்பாதங்களையும் கைகளால் பற்றிக்கொண்டு,

'அமர்நாத்தில் நீங்கள் கண்டதையெல்லாம் எனக்குச் சொல்ல மாட்டீர்களா?' என்று கேட்டார்.

சீடரின் இந்த வேண்டுதலால் சுவாமிஜியின் அழுத்தமான மனநிலை சிறிது தளர்ந்து அவரது புற நோக்கு அதிகமாகியது. அவர் சொன்னார்: 'அமர்நாத்தைத் தரிசித்ததிலிருந்து சிவ பெருமான் இருபத்து நான்கு மணி நேரமும் என் தலைமீது உட்கார்ந்திருப்பதுபோல் உள்ளது. எத்தனை முயன்றும் அவர் கீழே இறங்க மறுக்கிறார்.'

சீடர் இதைக் கேட்டதும் திகைத்துப் போனார்.

சுவாமிஜி: 'நான் அமர்நாத் கோயிலிலும், க்ஷீர்பவானி கோயிலிலும் ஆழ்ந்த தவம் செய்தேன். போகட்டும், புகையிலை தயாரித்துக் கொண்டு வா.'

சீடர் மிகுந்த மகிழ்ச்சியோடு சுவாமிஜியின் கட்டளையை ஏற்று புகையிலையைத் தயார் செய்துகொண்டு வந்தார். சுவாமிஜி நிதானமாகப் புகைத்துக்கொண்டே சொல்ல ஆரம்பித்தார்:

'அமர்நாத்திற்குச் செல்லும் வழியில் மிகவும் செங்குத்தான மலைமீது நான் ஏறினேன். பொதுவாக அந்த வழியில் மலைவாழ் மக்களைத் தவிர யாரும் போவதில்லை. ஆனால் அந்த வழியாகத்தான் போக வேண்டும் என்று எனக்குத் தோன்றி விட்டது. போவேன் என்றால் போவேன்தான். ஓ, அதில் ஏறிய சிரமம் உடலைச் சற்று பாதித்துவிட்டது. இதில், பயங்கரமான குளிர்வேறு ஊசியால் உடம்பைக் குத்துவதுபோல் இருந்தது.'

சீடர்: 'அமர்நாத் சிவபெருமானை நாம் நிர்வாணமாகவே தரிசிக்க வேண்டும் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அது உண்மையா?'

சுவாமிஜி: 'ஆமாம். நானும் கோவணத்தை மட்டும் கட்டிக் கொண்டுதான் சென்றேன். உடம்பு முழுவதும் விபூதி பூசிக் கொண்டிருந்தேன். குகையினுள் இருந்தபோது குளிரோ வெப்பமோ சிறிதும் தெரியவில்லை. அங்கிருந்து வெளியே வந்ததும் உடம்பு குளிரால் மரத்துப் போனது போலாகி விட்டது.'

சீடர்: 'அங்கே புனிதப் புறாக்களைப் பார்த்தீர்களா? அவ்வளவு குளிரான அந்த இடத்தில் எந்த உயிரும் வாழாது என்றும் ஆனால் எங்கிருந்தோ வெண்புறாக் கூட்டம் ஒன்று அவ்வப்போது அங்கு வருவதாகவும் கேள்விப்பட்டிருக்கிறேன்.'

சுவாமிஜி: 'ஆமாம். மூன்று நான்கு வெண் புறாக்களை அங்கே கண்டேன். அவை வசிப்பது குகையிலா அல்லது பக்கத்தில் உள்ள மலைகளிலா என்பது தெரியவில்லை.'

சீடர்: 'சுவாமிஜி, கோயிலிலிருந்து வெளியே வரும்போது புறாக்களைப் பார்த்தால், அவர்களுக்கு சாட்சாத் அமரநாதரான சிவபெருமானின் காட்சி கிடைத்துவிட்டதற்கு அடையாளம் அது என்று மக்கள் பேசிக்கொள்வதைக் கேட்டிருக்கிறேன்.'

சுவாமிஜி: 'அங்கே புறாக்களைப் பார்த்தவர்கள் நினைப்பது நிறைவேறும் என்று நான் கேட்டிருக்கிறேன்.'

திரும்பி வரும்போது எல்லோரும் வரும் வழியாக வேதாம் காஷ்மீருக்கு திரும்பியதாக சுவாமிஜி கூறினார். ஸ்ரீநகருக்குத் திரும்பிய சில நாட்களில் க்ஷீர்பவானி கோயிலுக்குச் சென்று ஏழு நாட்கள் தங்கி, வழிபாடு நடத்தி, ஹோமம் இயற்றி, காளிக்கு க்ஷீரம் (பால்) படைத்தார். ஒவ்வொரு நாள் பூஜையிலும் ஒரு மணங்கு பாலை அவர் தேவிக்குப் படைத்தார்.

ஒருநாள் அப்படிப் பூஜை செய்து கொண்டிருந்தபோது, 'தேவி பவானி இங்கே எழுந்தருளி எவ்வளவு காலமாக அருள் புரிந்து கொண்டிருக்கிறாள். முகமதியர் இங்கே வந்து அவள் கோயிலை இப்படி அழித்திருக்கிறார்கள். இந்த இடத்தில் வாழும் மக்கள் இதைக் காப்பாற்ற ஒன்றும் செய்யவில்லை. ஐயோ, நான் மட்டும் அப்போது இங்கே இருந்திருந்தால் இதை அனுமதித்திருக்க மாட்டேன்!' என்ற எண்ணம் அவர் மனத்தில் எழுந்தது. மனம் துயரத்தாலும் வேதனையாலும் வாடியது. அப்போது தேவியின் குரல் தெளிவாக அவருக்குக் கேட்டது. அவள் கூறினாள்: 'என் விருப்பப்படிதான் முகமதியர்கள் இந்தக் கோயிலை அழித்தார்கள். இடிந்துபோன கோயிலில் வாழ வேண்டுமென்பது என் ஆசை. நான் நினைத்தால் இங்கே, இந்தக் கணமே பொன்னாலான ஏழடுக்கு மாளிகையை எழுப்ப முடியாதா? உன்னால் என்ன செய்ய முடியும்? நான் உன்னைக் காப்பாற்றுகிறேனா அல்லது நீ என்னைக் காப்பாற்றுகிறாயா?' சுவாமிஜி சீடரிடம் கூறினார்: 'அந்தக் குரலைக் கேட்டதிலிருந்து மடம் கட்ட வேண்டும், அது இது என்றெல்லாம் திட்டம் போடுவதை விட்டுவிட்டேன். அன்னை எப்படி விரும்புகிறாளோ அப்படியே நடக்கும்.'

சீடர் ஒன்றும் பேச முடியாதவராக தமக்குள் எண்ணலானார்: 'நாம் காணும் அனைத்தும் உள்ளே உள்ள ஆன்மாவின் எதிரொலிகளே, வெளியில் எதுவுமே இல்லை என்று ஒருநாள்

இவரே சொன்னாரே!' எண்ணியது மட்டுமல்ல, பயப்படாமல் சுவாமிஜியிடமும் கேட்டார்: 'தெய்வத்தின் குரல் போன்றதெல்லாம் நமது சிந்தனைகளின் எதிரொலி மட்டுமே என்று நீங்கள் சொன்னீர்களே!'

அதற்கு சுவாமிஜி கம்பீரமான குரலில் கூறினார்: 'அது உள்ளே இருப்பதோ வெளியே இருப்பதோ, நான் கேட்டது போல் நீயும் உன் காதுகளால் அசரீரியான அந்தக் குரலைக் கேட்டிருந்தால் அது பொய் என்று உன்னால் சொல்ல முடிந்திருக்காது. நீயும் நானும் பேசிக்கொள்வதுபோல் தெய்வத்தின் குரலையும் தெளிவாகக் கேட்க முடியும்.'

சீடர் சுவாமிஜியின் வார்த்தையை மறுக்காமல் ஏற்றுக் கொண்டார். கேட்பவரை அப்படியே ஏற்றுக்கொள்ள வைக்கும் சக்தி அவரது பேச்சிற்கு இருந்தது.

பின்னர், ஆவி பற்றிய பேச்சைச் சீடர் எழுப்பினார்: 'சுவாமிஜி பேய், பிசாசு, ஆவிபற்றிக் கேள்விப்படுகிறோம், சாஸ்திரங்களும் கூறுகின்றன. அதெல்லாம் உண்மைதானா?'

சுவாமிஜி: 'நிச்சயமாக உண்மைதான். நீ பார்க்காவிட்டால் அவையெல்லாம் பொய் என்றாகிவிடுமா? உன் பார்வைக்கு அப்பால் நெடுந்தொலைவில் எத்தனையோ பிரம்மாண்டங்கள் சுற்றி வருகின்றன. நீ பார்க்கவில்லை என்பதால் அவை இல்லாமல் போய்விடுமா? ஆனால் பேய்பிசாசு என்றெல்லாம் நினைத்து மனத்தைக் குழப்பிக் கொள்ளாதே. அவை இருக்கின்றன, இருந்துவிட்டுப் போகட்டும் என்று நினைத்துக் கொள். உன் வேலையெல்லாம் உன்னுள் இருக்கும் ஆன்மாவை உணர்வதுதான். நீ ஆன்மாவை உணரும்போது, பேய்பிசாசுகள் எல்லாம் உன் அடிமையாகிவிடும்.'

சீடர்: 'ஆனால் அவற்றைப் பார்த்தால் இறந்த பிறகும் வாழ்க்கை இருக்கிறது என்ற நம்பிக்கை திடப்படும். மனவுலகம் பற்றிய சந்தேகமே வராது.'

சுவாமிஜி: 'நீங்கள் எல்லாம் மகா வீரர்கள். பேயையும் பிசாசையும் பார்த்துதான் மறுவுலக வாழ்க்கைமீது நம்பிக்கையை அதிகமாக்கிக் கொள்ளப் போகிறீர்களா? நீங்கள் பல விஞ்ஞான நூல்களைப் படித்திருக்கிறீர்கள், சாஸ்திரங்களைப் படித்திருக்கிறீர்கள், இந்த அளவில்லாத அண்டங்களைப் பற்றிய பல்வேறு ரகசியங்களையெல்லாம் அறிந்திருக்கிறீர்கள். இவ்வளவு அறிவு இருந்தும் பேய்களையும் பிசாசுகளையும் பார்த்தா ஆன்ம ஞானத்தைப் பெறப் போகிறீர்கள்? சீ, சீ!'

சீடர்: 'சுவாமிஜி, நீங்கள் பேய்பிசாசுகளை எப்போதாவது பார்த்திருக்கிறீர்களா?'

சுவாமிஜி, இறந்துபோன தமது உறவினர் ஒருவர் அடிக்கடி அவரிடம் வருவதுபற்றிக் கூறினார். சில நேரங்களில் அந்த ஆவி வெகுதொலைவில் நடக்கும் நிகழ்ச்சிகளை எல்லாம் அவரிடம் வந்து சொல்லும். அவற்றைச் சரிபார்க்கும்போது சில செய்திகள் பொய்யாக இருக்கும். அதன்பிறகு ஏதோ ஒரு தீர்த்தத்தலத்தில் அவர் அந்த ஆவி விடுதலை பெற வேண்டுமென்று பிரார்த்தனை செய்தார். அதன்பிறகு அவர் அந்த ஆவியைப் பார்க்கவில்லை.

சிராத்தம் முதலிய சடங்குகளால் அவர்களுக்குச் சாந்தியும் திருப்தியும் கிடைக்குமா என்று கேட்டார் சீடர். சுவாமிஜி அதற்கு, 'கிடைக்கலாம்' என்றார். அந்த நம்பிக்கையின் ஆதாரம் பற்றிச் சீடர் கேட்டபோது, 'அந்தச் சடங்குகள் ஆவிகளுக்குச் சாந்தியையும் திருப்தியையும் தருகின்றன என்பதற்கு மறுக்க முடியாத பிரமாணங்கள் உள்ளன. இன்று என் உடல்நிலை சரியில்லை. இன்னொரு நாள் உனக்கு அதை விளக்கமாகச் சொல்கிறேன்' என்றார். ஆனால் சீடருக்கு அந்தக் கேள்வியை மறுபடியும் கேட்கின்ற வாய்ப்பு கிடைக்காமலே போய்விட்டது.

## 17

பேலூரில் வாடகை மடம், நவம்பர் 1898

மடம் இன்னும் பேலூரில் நீலாம்பர் பாபுவின் வீட்டிலிருந்து மாற்றப்படவில்லை. சுவாமிஜி இப்போது சம்ஸ்கிருத நூல்களைப் படிப்பதிலும், அது குறித்து விவாதிப்பதிலும் ஆழ்ந்து ஈடுபட்டிருக்கிறார். இந்தக் காலத்தில்தான் அவர், 'ஆசண்டால ப்ரதிஹ தரய:' என்று தொடங்கும் பாடலை எழுதினார். இன்று 'ஓம் ஹ்ரீம் ருதம்' என்னும் பாடலை எழுதினார். அதைச் சீடரிடம் கொடுத்து, 'இந்தப் பாடல்களில் ஏதாவது பிழை இருக்கிறதா பார்' என்றார். சீடர் அதை எழுதிக் கொண்டார்.

இன்று கலைமகள் சுவாமிஜியின் நாவில் நடம் புரிவது போல் தோன்றியது. சீடரிடம் இரண்டுமணி நேரத்திற்கும் மேலாக மிக இனிமையான சம்ஸ்கிருதத்தில் பேசினார். சீடர் பாட்டை எழுதிக்கொண்டதும், சுவாமிஜி அவரிடம், 'இதோ பார், எனது சிந்தனை, கருத்தில் மூழ்கியிருந்ததால் இலக்கணப்

பிழைகள் ஏற்பட்டிருக்கலாம். அதனால்தான் சரிபார்க்கச் சொல்கிறேன்' என்றார்.

சீடர்: 'அப்படியே பிழைகள் இருந்தாலும் அவை பிழைகள் அல்ல; அது ஆர்ஷ ப்ரயோகம், அறிஞர்களுக்கு மொழியில் தரப்படும் அனுமதி.'

சுவாமிஜி: 'நீ அப்படிச் சொல்லலாம், மற்றவர்களும் இதை ஒப்புக்கொள்ள வேண்டுமென்று என்ன கட்டாயம் இருக்கிறது? அன்று ''இந்து என்றால் என்ன?'' என்பது குறித்து நான் வங்க மொழியில் ஒரு கட்டுரை எழுதினேன். அது சரளமாக இல்லை என்று உங்களிலேயே சிலர் குறை கூறினீர்கள். நாளாக நாளாக மற்ற பொருட்களைப் போலவே மொழியும் சிந்தனையும்கூடப் புத்துணர்வு இழந்து சலிப்பூட்டுவதாகிவிடும் என்றே எனக்குத் தோன்றுகிறது. இப்போது அத்தகைய நிலைதான் இந்த நாட்டில் உருவாகிவிட்டதோ என்னவோ! ஆனால் ஸ்ரீராமகிருஷ்ணர் அவதரித்ததிலிருந்து சிந்தனையிலும் மொழியிலும் ஒரு புதிய வேகம் வந்திருக்கிறது. அனைத்தும் புதிய அச்சில் வார்க்கப்பட வேண்டும். ஒவ்வொன்றும் புதியதோர் அறிவுமுத்திரையோடு பிரச்சாரம் செய்யப்பட வேண்டும்.

'உதாரணமாக, இப்போது பழைய சன்னியாச முறை தேய்ந்து புதிய முறை வளர்ந்து வருகிறது. சமுதாயம் இதை எதிர்க்கத்தான் செய்கிறது. ஆனால் அதனால் ஏதாவது நடந்ததா? அல்லது நாங்கள்தான் அதற்காகப் பயப்படுகிறோமா? இந்தக் காலத் துறவியர் அயல்நாடுகளுக்கு மதப் பிரச்சாரம் செய்வதற்காகப் போக வேண்டி இருக்கிறது. இவர்கள் பழங்காலத் துறவியரைப்போல் உடம்பு முழுவதும் திருநீறு பூசிக் கொண்டு, அரை நிர்வாணமாகப் போனால், முதலில் கப்பலிலேயே ஏற்ற மாட்டார்கள். எப்படியாவது கப்பலில் ஏறி அயல்நாடுகளை அடைந்துவிட்டால்கூட அவர்களுக்குக் கிடைக்கும் இடம் சிறைச்சாலையே.

'காலம், இடம், நாகரீகத்திற்கு ஏற்ப ஒவ்வொன்றும் கொஞ்சம் மாற வேண்டியுள்ளது. எனவே இத்தகைய மொழி மாற்றத்துடன் வங்க மொழியில் நான் கட்டுரைகள் எழுதப் போகிறேன். பண்டிதர்கள் அவற்றைக் கடுமையாக விமர்சிக்கலாம். விமர்சித்துவிட்டுப் போகட்டும். நான் வங்க மொழிக்கு ஒரு புத்துருவம் கொடுக்க முயலப் போகிறேன். இப்போதெல்லாம் வங்க எழுத்தாளர்கள் அதிகமான வினைச்சொற்களைப் பயன்படுத்துகிறார்கள், அது மொழியின் வேகத்தைக் கெடுத்து

விடுகிறது. வினைச்சொல்லில் கூறும் கருத்தை அவர்கள் பெயரெச்சத்தின் மூலம் சொல்வார்களானால் அது மொழியின் வேகத்தை அதிகரிக்கும். எனவே அத்தகைய முறையில் எழுதத் தொடங்கு. உத்போதன் பத்திரிகைக்கு அத்தகைய நடையில் ஒரு கட்டுரை எழுதிக் கொடு. மொழியில் வினைச் சொற்களைப் பயன்படுத்துவதற்கான காரணம் என்ன தெரியுமா? அது சிந்திக்க ஓர் இடைவெளியைத் தருகிறது. எனவே அதிகமாக வினைச் சொற்களைப் பயன்படுத்துவது மொழியினுடைய பலவீனத்தின் அடையாளமாகும்; மனிதனுக்கு மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்குவது போன்றது அது. இப்படி எழுதுவது அந்த மொழிக்கு அதிக வேகம் இல்லை என்பதையே காட்டுகிறது. அதனால்தான் வங்க மொழியில் நன்றாகச் சொற்பொழிவாற்ற முடிவதில்லை. மொழியை அடக்கியாளும் திறன் பெற்றவர்களுக்குச் சிந்தனைத் தடை பெரும்பாலும் ஏற்படாது. சோறும் பருப்பும் சாப்பிட்டுச் சாப்பிட்டு உங்கள் உடம்பு சக்தியற்றுக் கிடப்பதைப் போலவே, உங்கள் மொழியும் சக்தி இல்லாமல் கிடக்கிறது. உணவில், வாழ்க்கை முறையில், சிந்தனையில், மொழியில் எல்லாவற்றிலுமே சக்தியைப் புகுத்தியாக வேண்டும். எல்லா திசைகளிலும் ஆற்றலை வெளிப்படுத்தியாக வேண்டும். ரத்தக் குழாய்களில் எல்லாம், ரத்த ஓட்டத்தில் எல்லாம் ஆற்றல் ஊட்டப்படவேண்டும். அதன்மூலம் எல்லா விஷயங்களிலும் ஆற்றலின் துடிப்பு பொங்கித் ததும்பும். அப்போதுதான் இந்த நாட்டு மக்கள் இந்தப் பயங்கரமான வாழ்க்கைப் போராட்டத்தில் உயிர்பிழைக்க முடியும். இல்லையென்றால் வெகுசீக்கிரத்தில் இந்த நாடும் நாட்டு மக்களும் மரணத்தின் நிழலில் படிந்து விடுவார்கள்.'

சீடர்: 'சுவாமிஜி, இந்த நாட்டு மக்களின் வாழ்க்கைமுறை காலங்காலமாக ஒரு குறிப்பிட்ட ரீதியில் அமைந்திருக்கிறது. அவ்வளவு சீக்கிரமாக அதை மாற்ற முடியும் என்று நினைக்கிறீர்களா?'

சுவாமிஜி: 'பழைய வாழ்க்கைமுறை சரியல்ல என்று நீ தெரிந்துகொண்டால் பிறகு நான் சொல்வதைப்போல் புதிய ரீதியில் வாழ ஏன் நீ கற்றுக்கொள்ளக் கூடாது? உன்னைப் பார்த்து மேலும் பத்துபேர் அதைப் பின்பற்றுவார்கள். அவர்களிடமிருந்து ஐம்பதுபேர் கற்றுக் கொள்வார்கள். இவ்வாறு நாளடைவில் இந்தப் புதிய சிந்தனையால் இந்திய இனமே விழிப்புற்றுவிடும். புரிந்துகொண்டும் அதன்படி நடக்கவில்லை

என்றால் நீங்கள் வெறும் வாய்ச்சொல் வீரர்கள், செயல்முறையில் முட்டாள்கள்.'

சீடர்: 'உங்கள் வார்த்தைகள் என் மனத்தில் தைரியத்தையும் உற்சாகத்தையும் வேகத்தையும் ஊட்டுகின்றன.'

சுவாமிஜி: 'படிப்படியாக மனத்தை வலிமைப்படுத்த வேண்டும். ஒரு ''மனிதன்'' உருவாகிவிட்டால் போதும், நூறாயிரம் சொற்பொழிவுகள் செய்யும் வேலையை அது செய்துவிடும். எண்ணமும் செயலும் ஒன்றாக இருக்க வேண்டும்; அது வாழ்க்கையில் கடைப்பிடிக்கப்பட வேண்டும். இதைத்தான் ஸ்ரீராமகிருஷ்ணர் ''உணர்வு வீட்டில் திருட்டு''[1] கூடாது என்று கூறினார். எல்லா விஷயங்களிலும் செயல்முறை வேண்டும். கொள்கைகளாலும் கோட்பாடுகளாலும் நாடே நாசமாகிவிட்டது. யார் ஸ்ரீராமகிருஷ்ணரின் உண்மையான பிள்ளையோ, அவர்கள் மதத்தின் நடைமுறைப் பகுதியை வெளிப்படுத்துவார்கள்; மனிதர்கள் மற்றும் சமுதாயத்தின் உளறல்களைப் பற்றிக் கவலைப்படாமல், ஒருமுகப்பட்ட எண்ணத்துடன் அதைச் செயல்படுத்துவார்கள். ''யானை தெருவில் நடந்து போகிறது. ஆயிரம் நாய்கள் அதைப் பார்த்துக் குரைக்கின்றன. அதுபோல் உலகியல் மக்களின் பழிச்சொற்களைக் கேட்டு சாதுக்கள் எந்தவிதமான வருத்தமோ கோபமோ அடைவதில்லை''[2] என்னும் துளசிதாசரின் பாடலை நீ கேட்டதில்லையா? இத்தகைய மனநிலை வேண்டும். உலகியல் மக்கள் வெறும் புழுக்கள் என்பதை மனத்திற்கொள்ள வேண்டும். அவர்களின் பாராட்டிற்கும் பழிக்கும் செவிசாய்த்தால் மகத்தான காரியங்கள் எதையும் சாதிக்க முடியாது. ''நாயமாத்மா பலஹீனேன லப்ய:—இந்த ஆன்மா பலவீனர்களால் அடையப்படுவதில்லை.''[3] உடம்பிலும் மனத்திலும் வலிமை இல்லாமல் போனால் ஆன்மாவை அடைய முடியாது. நல்ல சத்தான உணவைச் சாப்பிட்டு முதலில் உடம்பை வலிமைப்படுத்த வேண்டும். அதன்பிறகே மனம் வலிமைபெறும். மனம் என்பது

---

1. உணர்வு (Consciousness) பிளவுபட்டுச் செயல்படுவது. இது மனிதனை சிந்தனை நிலை (Thinking) உணர்ச்சி நிலை (Feeling) செயல்நிலை (Willing) என்று மூன்று நிலைகளிலும் பாதிக்கிறது. உணர்வில் ஒரு பகுதி ஒரு லட்சியத்தை நாடும்போது, பிற பகுதிகள் அதற்கு எதிரான வழிகளில் செல்கின்ற நிலை இது. உலகியல் வாழ்க்கை ஆயினும் ஆன்மீக வாழ்க்கை ஆயினும் இந்த நிலைக்கு ஆளான ஒருவர் வெற்றி பெறுவதில்லை!

2. ஹாத்தீ சலே பாஜார்மே குத்தா போக்கே ஹாஜார் ।
ஸாதூரன்கோ துர்பாவ நேஹி ஜப்நிந்தே ஸம்ஸார் ॥

3. முண்டக உபநிடதம், 3. 2. 4.

உடம்பின் நுட்பமான பகுதிதான். மனத்திலும் வாக்கிலும் மகத்தான வலிமையை ஏற்றிக்கொள். ''நான் தாழ்ந்தவன், நான் தாழ்ந்தவன்'' என்று திரும்பத்திரும்ப எண்ணுபவன் தாழ்ந்தே போகிறான். அதனால்தான் சாஸ்திரம் சொல்கிறது—

''முக்தாபிமானீ முக்தோ ஹி பத்தோ பத்தாபி மான்யபி।

கிம்வதந்தீஹ ஸத்யேயம் யா மதி: ஸா கதிர்பவேத் ॥[1]

—யார் தன்னை முக்தன் என்று நினைக்கிறானோ அவன் முக்தன் ஆகிறான். தான் கட்டுண்டவன் என்று நினைப்பவன் கட்டுண்டவன் ஆகிறான்''. ''எண்ணம் போலவே ஒருவன் ஆகிறான்'' என்னும் பழமொழி உண்மையே. தான் முக்தன் என்ற எண்ணம் எப்போதும் யாரிடம் உணர்வுத் துடிப்புடன் விளங்குகிறதோ அவன் முக்தன் ஆகிறான். தன்னைக் கட்டுண்டவன் என்று நினைப்பவன் பிறவிபிறவிகளாகக் கட்டுண்டே கிடக்கிறான். உலக வாழ்விலும் சரி, ஆன்மீக வாழ்விலும் சரி, இது உண்மை. மனவலிமை இழந்தவர்களால் எந்த வேலையையும் செய்ய முடியாது. பிறவிகள்தோறும் அவர்கள் அழுது அரற்றிக்கொண்டே வந்துவந்து போகிறார்கள். ''வீரபோக்யா வஸுந்தரா—இந்த உலகம் வீரர்களால்தான் அனுபவிக்கப்படுகிறது'' என்பது அழியாத உண்மை. வீரனாக இரு. ''அபீ: அபீ:—பயமில்லை, பயமில்லை'' என்று எப்போதும் முழங்கு; ''பயம் கொள்ளாதே'' என்பதை எல்லோரிடமும் சொல். பயமே மரணம், பயமே பாவம், பயமே நரகம், பயமே அதர்மம், பயமே தவறான வாழ்க்கை. உலகத்திலுள்ள எதிர்மறையான சிந்தனைகள் எல்லாமே பயம் என்னும் இந்தச் சாத்தானிலிருந்தே தோன்றின. இந்தப் பயம்தான், சூரியன், காற்று, மரணம், அனைத்தையும் தத்தம் இடத்திலேயே கட்டுப்படுத்திச் செயல்படும்படி வைத்திருக்கிறது. எதையும் அது தன் பிடியிலிருந்து தப்பிச் செல்ல விடுவதில்லை. அதனால்தான் வேதங்கள் கூறுகின்றன—

''பயாதஸ்யாக்னிஸ்தபதி பயாத்தபதி ஸூர்ய:।

பயாதிந்த்ரச்ச வாயுச்ச ம்ருத்யுர்தாவதி பஞ்சம: ॥[2]

—பயத்தின் காரணமாகவே நெருப்பு எரிகிறது; சூரியன் சுடுகிறது. பயத்தின் காரணமாகவே இந்திரனும் வாயுவும் தங்கள்

---

1. அஷ்டாவக்ர சம்ஹிதை, 1. 11.
2. கடோபநிடதம், 2. 3. 3.

வேலைகளைச் செய்கிறார்கள். மரணமும் பூமியில் கம்பீரநடை போடுகிறது.'' இந்திரனும் சந்திரனும் வாயுவும் வருணனும் பய மற்ற நிலையை அடைந்தால் பிரம்மத்தோடு ஒன்றாகி விடு வார்கள்; படைப்பு என்கின்ற இந்த ஏற்றுச்செயலும் (Superimposition) மறைந்துவிடும். அதனால்தான் நான் ''பயம் கொள் ளாதே, பயம் கொள்ளாதே'' என்கிறேன்.'

சுவாமிஜி இதைச் சொல்லிக் கொண்டிருந்தபோது, சீடரின் கண்களுக்கு அவர் பயமின்மையின் ஒரு திரண்ட வடிவமாகவே தோன்றினார். இவரது முன்னிலையில் மரண பயம்கூட ஒருவனைவிட்டு ஓடி மறைந்துவிடுகிறதே என்று சீடர் நினைத்தார்.

சுவாமிஜி தொடர்ந்தார்: 'இந்த உடம்பை எடுத்து, வாழ்க்கையின் இன்பம் துன்பம், செல்வம் வறுமை என்னும் அலைகளால் எத்தனை முறைதான் நீ பந்தாடப்படுவாய்! ஆனால் இதெல்லாம் கணநேரமே இருப்பது என்பதைத் தெளிவாகத் தெரிந்துகொள். அவற்றைப்பற்றிச் சிறிதும் கவலைப்படாதே. ''நான் பிறப்பில்லாத இறப்பில்லாத உணர்வுப் பொருளான ஆன்மா'' என்னும் எண்ணத்தை உன் மனத்தில் உறுதியாக்கி, இந்த எண்ணத்திலேயே உன் வாழ்நாளைக் கழி. ''எனக்குப் பிறப்பில்லை, இறப்பு இல்லை. நான் எதனாலும் தொட முடியாத ஆன்மா''—இந்த எண்ணத்தில் மூழ்கிவிடு. இந்தச் சிந்தனையுடன் ஒருமுறை ஒன்றிவிடுவாயானால், துன்பங்களும் துயரங்களும் வரும் நேரத்தில், இந்த எண்ணங்கள் தானாகவே உன் மனத்தில் எழுந்து நிற்கும். நீ முயன்று அந்த எண்ணத்தைக் கொண்டுவர வேண்டியிருக்காது.

'அன்று வைத்தியநாத் தேவ்கரில் பாபு பிரியமுகர்ஜியின் வீட்டில் நான் தங்கி இருந்தேன். பயங்கரமான ஆஸ்துமா நோயின் தாக்குதல் அங்கு எனக்கு ஏற்பட்டது. மூச்சுமுட்டிச் சாவே வந்துவிட்டதுபோல் தோன்றியது. ஆனால் ஒவ்வொரு மூச்சுடனும் என்னுள்ளிருந்து, ''ஸோஹம், ஸோஹம்—நானே அவன், நானே அவன்'' என்னும் ஆழ்ந்த ஒலி எழுந்தது. தலையணையின் மீது சாய்ந்துகொண்டு உடம்பிலிருந்து உயிர் பிரிவதற்காக நான் காத்திருந்தேன். அதே நேரத்தில் உள்ளிருந்து ''ஸோஹம், ஸோஹம்'' என்ற ஒலியும் எழுந்தபடியே இருந்தது; ''ஏகமேவாத்வயம் ப்ரஹ்ம; நேஹ நாநாஸ்தி கிஞ்சன—இரண்டற்ற ஒன்றேயான பிரம்மம் மட்டுமே உண்மைப் பொருள்;

பலவான எதுவும் இந்த உலகத்தில் இல்லை'' என்ற ஒலியையும் கேட்டேன்.

சீடர் ஆச்சரியத்துடன், 'சுவாமிஜி, உங்களுடன் பேசிக் கொண்டும், உங்கள் அனுபவங்களைக் கேட்டுக் கொண்டும் இருந்தால் சாஸ்திரங்களைப் படிக்கவேண்டிய அவசியமே இல்லை' என்றார்.

சுவாமிஜி: 'இல்லையப்பா, இல்லை. சாஸ்திரங்களையும் படிக்க வேண்டும். ஞானம் பெறுவதற்குச் சாஸ்திரங்கள் மிகவும் இன்றியமையாதவை. அதற்காக நான் விரைவில் மடத்தில் வகுப்புகளைத் தொடங்கப் போகிறேன். வேதங்கள், உபநிடதங்கள், கீதை, பாகவதம் முதலியவை அந்த வகுப்பு களில் சொல்லித் தரப்படும். பாணினியின் அஷ்டாத்யாயியும் நடத்தப்பட வேண்டும்.'

சீடர்: 'நீங்கள் பாணினியின் அஷ்டாத்யாயியைப் படித்திருக்கிறீர்களா?'

சுவாமிஜி: 'நான் ஜெய்பூரில் தங்கியிருந்தபோது ஒரு பெரிய இலக்கணப் பண்டிதரைச் சந்தித்தேன். அவரிடம் சம்ஸ்கிருத இலக்கணம் கற்க வேண்டும் என்று தோன்றியது. மகா பண்டிதராக இருந்தும் கற்பிக்கும் திறமை அவரிடம் இல்லை. முதல் சூத்திரத்திற்கான உரையையே எனக்கு மூன்று நாட்கள் தொடர்ந்து விளக்கிக்கொண்டிருந்தார். என்றாலும் என்னால் எதையும் புரிந்துகொள்ள முடியவில்லை. நான்காவது நாள் அவரே எரிச்சலடைந்து, ''சுவாமிஜி, மூன்று நாள் முயன்றும் என்னால் இந்த முதல் சூத்திரத்தின் உரையையே உங்களுக்குப் புரியவைக்க முடியவில்லை; என்னிடம் பாடம் கேட்பதால் உங்களுக்கு எந்தப் பயனும் கிடைக்காது என்றே நினைக்கிறேன்'' என்றார். இதைக் கேட்டதும் எனக்கு என்னைப் பற்றியே மிகுந்த வெட்கம் ஏற்பட்டது. திட சங்கல்பம் செய்து கொண்டு, அந்த முதல் சூத்திரத்தின் உரையை நானே தனியாகப் படிக்க ஆரம்பித்தேன். மூன்று மணி நேரத்தில் அந்த உரையின் கருத்து மிகத் தெளிவாக எனக்கு விளங்கிவிட்டது. பின்னர் பண்டிதரிடம் சென்று அந்த உரை முழுவதன் பொருளையும் சொன்னேன். இதைக் கேட்டதும் அவர், ''மூன்று நாட்கள் விளக்கியும் என்னால் உங்களுக்குப் புரியவைக்க முடியாத இந்த உரையின் கருத்தை மூன்றே மணி நேரத்தில் நீங்கள் எப்படி இவ்வளவு தெளிவாகப் புரிந்துகொண்டீர்கள்?'' என்று கேட்டார். அதற்குப் பிறகு தினந்தோறும் ஒவ்வோர்

அத்தியாயமாக நான் அந்த நூலை எளிதில் படித்து முடித்தேன். மன ஒருமைப்பாட்டின் மூலமாக எதையும் சாதிக்க முடியும். மலைகளைக்கூட அணு அணுவாக உடைத்தெறிய முடியும்.'

சீடர்: 'உங்களைப் பற்றிய ஒவ்வொன்றும் அற்புதமாக உள்ளது.'

சுவாமிஜி: 'இந்தப் பிரபஞ்சத்தில் அற்புதம் என்று எதுவுமே இல்லை. அறியாமையே இருள். அந்த இருள் எல்லாவற்றையும் மூடிக்கொண்டு அவற்றை அற்புதம்போல் காட்டுகிறது. ஞான தீபத்தால் ஒளி பெறும்போது எந்த அற்புதமும் நிலைக்காது. நிகழ இயலாததையும் நிகழ்த்திக் காட்டவல்லதான மாயையும் அப்போது மறைந்துவிடுகிறது. யாரை அறிவதன் மூலம் எல்லாவற்றையும் அறிய முடியுமோ, அவரை அறி, அவரையே தியானி. அந்த ஆன்மா உணரப்படும்போது எல்லா சாஸ்திரங்களின் பொருளும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெளிவாகத் தெரிந்துவிடும். பழங்கால ரிஷிகள் ஆன்மஞானம் பெற்றார்கள். நம்மால் பெற முடியாதா என்ன? நாமும் மனிதர்கள்தாம். ஒருவனின் வாழ்வில் ஒருமுறை நிகழ்ந்தது, சரியான முயற்சிகளிருந்தால், மற்றவர்களின் வாழ்விலும் நிகழ்ந்தே தீரும். வரலாற்றில் முன்னர் நடந்தது பின்னரும் நடப்பது இயல்பு. ஒருமுறை நிகழ்ந்தது மீண்டும்மீண்டும் நிகழவே செய்யும். எல்லா உயிர்களிலும் இருப்பது ஒரே ஆன்மாதான். வெவ்வேறு உயிர்களிடம் அது வெளிப்படுவதில்தான் வேறுபாடு உள்ளது. அந்த ஆன்மாவை வெளிப்படுத்த முயற்சி செய். அப்போது உன் புத்தி எல்லா பொருட்களையும் துளைத்துச் செல்வதை நீ காண்பாய். ஆன்மாவை உணராதவனின் அறிவு ஒருதலைப் பட்சமானது. ஆன்மாவை உணர்ந்தவனின் அறிவு எல்லாவற்றையும் தழுவிய முழுமையான அறிவு. ஆன்மாவை உணர்ந்ததும் விஞ்ஞானம், தத்துவம் எல்லாமே உனக்கு எளிதில் கைவரப் பெறும். ஆன்மாவின் பெருமையைச் சிங்கம்போல் கர்ஜனை செய். ''எழுந்திருங்கள், விழித்திருங்கள்'' லட்சியத்தை அடையும்வரை நில்லாதீர்கள் என்று முழங்கி எல்லோருடைய மனத்திலும் பயமின்மையைப் புகுத்து.'

## 18

பேலூரில் வாடகை மடம், 1898

கடந்த இரு நாட்களாகச் சீடர் பேலூரில் நீலாம்பர் பாபுவின் தோட்ட வீட்டில் சுவாமிஜியுடன் தங்கியுள்ளார். இன்றிரவு

தமது அறையில் இரவைக் கழிக்க சீடருக்கு சுவாமிஜி அனுமதி தந்திருந்தார். சீடர் சுவாமிஜியின் கால்களைப் பிடித்துவிட்டு, சேவை செய்துகொண்டிருந்தபோது சுவாமிஜி அவரிடம் கூறினார்: 'இத்தகைய இடத்தை விட்டுவிட்டுக் கல்கத்தா போக விரும்பினாயே! என்ன புனிதமான சூழ்நிலை இங்கே நிலவுகிறது பார். கங்கையின் தூய்மையான காற்று! சாதுக்களின் கூட்டம்! இதுபோன்று வேறு ஓர் இடத்தைப் பார்க்க உன்னால் முடியுமா?'

சீடர்: 'கடந்த பிறவிகளில் நான் செய்த தவங்களின் பயனால் உங்களுடன் இருக்கும் இந்தப் பெரும்பேற்றைப் பெற்றிருக்கிறேன். இனிமேல் மாயையால் நான் பீடிக்கப்படாதபடி இருக்க என்னை ஆசீர்வதியுங்கள். இப்போதெல்லாம் என் மனம் ஆன்மீக அனுபூதிக்காக ஏங்குகிறது.'

சுவாமிஜி: 'இத்தகைய ஏக்கம் எனக்கும் பலமுறை ஏற்பட்டிருக்கிறது. காசிப்பூரில் இருந்தபோது ஒருநாள் குருதேவரிடம் மிகுந்த ஏக்கத்தோடு இதைக் கூறிப் பிரார்த்தித்தேன். அன்று மாலையில் தியானம் செய்து கொண்டிருந்தபோது உடம்பு பற்றிய என் நினைவு முழுவதும் போய்விட்டது. உடம்பு இல்லை என்றே தோன்றியது. சந்திரன், சூரியன், வெளி, காலம், ஆகாசம் எல்லாமே ஒன்றாகி எங்கோ கரைந்தது போலாகி விட்டது. உடல் முதலான எண்ணங்கள் எல்லாம் ஏறக்குறைய ஒடுங்கிவிட்டன. நானும் ஏறக்குறைய கரைந்தேவிட்டேன், வேறு என்ன? சிறிது ''நான்'' மட்டும் இருந்தது. அதனால்தான் அந்தச் சமாதி நிலையிலிருந்து திரும்பி வர முடிந்தது. இத்தகைய சமாதி நிலையில்தான் நான் வேறு, பிரம்மம் வேறு என்ற வித்தியாசம் விலகுகிறது. பரந்த கடலில் எங்கே பார்த்தாலும் தண்ணீர்; தண்ணீரைத் தவிர வேறு எதுவும் இல்லாததுபோல், எல்லாமே ஒன்றாகிவிடும்; மொழி சிந்தனையெல்லாம் அழிந்து விடும். ''வாக்கு, மனம் கடந்த நிலை'' என்பதை அப்போதுதான் உண்மையிலேயே உணர முடியும். அதற்கு முன் சாதகன் ''நான் பிரம்மம்'' என்று நினைக்கும்போதும் சொல்லும்போதும் ''நான்'' வேறு, ''பிரம்மம்'' வேறு என்னும் துவைத உணர்வு இருக்கவே செய்யும். அதன்பிறகு பலமுறை முயன்றும் அந்த நிலை மீண்டும் எனக்குக் கிட்டவில்லை. குருதேவரிடம் இதை நான் சொன்னதும் அவர், ''இரவுபகலாக நீ அந்த நிலையிலேயே இருந்தால் தேவியின் வேலை நடக்காது. அதனால் தான் அந்த நிலை மறுபடியும் உனக்கு வரவில்லை. வேலை

முடிந்தால் மீண்டும் அந்த நிலை உனக்கு வரும்'' என்று கூறிவிட்டார்.'

சீடர்: 'அனைத்தையும் கடந்த நிர்விகல்ப சமாதியை அடைந்த பிறகு நான்-உணர்வைப் பற்றிக்கொண்டு பல்வேறாகக் காட்சி தரும் இந்த உலக நிலைக்கு வர முடியுமா?'

சுவாமிஜி: 'ஸ்ரீராமகிருஷ்ணர், ''உலகின் நன்மைக்காக, அவதார புருஷர்களால் மட்டுமே சமாதி நிலையிலிருந்து சாதாரண உலக நிலைக்கு வர முடியும். சாதாரண மனிதர்களால் இது முடியாது. இருபத்தொரு நாட்கள் அவர்கள் உயிருடன் அந்தச் சமாதியில் இருப்பார்கள். பிறகு பழுத்த இலை மரத்திலிருந்து விழுவதுபோல், அவர்களின் உடல் சம்சாரமாகிய மரத்திலிருந்து கீழே விழுந்துவிடும்'' என்று கூறுவார்.'

சீடர்: 'மனம் மறைந்து சமாதி வாய்க்கும்போது, மனத்தின் மேற்பரப்பில் எந்த அலைகளும் இல்லாமல் போகும்போது, மீண்டும் நான்—உணர்வைப் பற்றிக்கொண்டு உலக நினைவிற்கு எப்படி வர முடியும்! மனம் என்பதே இல்லாதபோது, சமாதி நிலையிலிருந்து உலக நிலைக்கு வருவது யார்? எதன்மூலம் வருவது?'

சுவாமிஜி: 'இறுதி சமாதி நிலையிலிருந்து யாரும் மீண்டு வருவதில்லை என்பது வேதாந்தத்தின் முடிவு. ''அனாவ்ருத்தி **சப்தாத்**—சாஸ்திரங்களின்படி, மீண்டு வருவதில்லை'' என்று வேதாந்த சூத்திரம் (4. 4. 22) கூறுகிறது. ஆனால் அவதார புருஷர்கள் இந்த உலகின் நன்மைக்காக, ஒரு சில ஆசைகளை வைத்திருக்கிறார்கள். அதைப் பிடித்துக்கொண்டு அவர்கள் உணர்வுகடந்த நிலையிலிருந்து சாதாரண உலக நினைவிற்கு வருகிறார்கள்.'

சீடர்: 'ஆனால் சுவாமிஜி, ஓரிரு ஆசைகள் இருந்தால் அதை இறுதி சமாதி என்று எப்படிச் சொல்வது? நிர்விகல்ப நிலையில் இந்த மனத்தின் எல்லா செயல்பாடுகளும், ஆசைகளும் அழிக்கப்பட்டு விடுகின்றன என்று சாஸ்திரங்கள் கூறுகின்றனவே!'

சுவாமிஜி: 'அப்படியென்றால், மகா பிரளயத்திற்குப் பிறகு மறுபடியும் இந்தப் பிரபஞ்சம் எப்படித் தோன்ற முடியும்?மகா பிரளயத்தின்போதும் அனைத்தும் பிரம்மத்தில் ஒன்றிவிடுகின்றனவே! அப்படி ஒன்றிய பிறகும் பிரபஞ்சத்தின் தோற்றமும் ஒடுக்கமும் அலைகள்போல் மாறிமாறி வருவதாகச் சாஸ்திரங்கள் கூறுகின்றனவே! மகா பிரளயத்திற்குப் பிறகு அண்டங்கள்

தோன்றுவதும் ஒடுங்குவதும்போல் அவதார புருஷர்களிடம் நிர்விகல்ப நிலையும் உலக நிலையும் தோன்றவும் ஒடுங்கவும் செய்கின்றன என்று ஏன் கொள்ளக் கூடாது?'

சீடர்: 'பிரளய காலத்தில் அடுத்த படைப்பிற்கான விதைகள் முற்றிலும் அழிந்துபோகாமல் பிரம்மத்திடம் ஒடுக்க நிலையில் உள்ளதால் அது மகா பிரளயம் அல்ல, நிர்விகல்ப சமாதி அல்ல. மாறாக, அது, நீங்கள் சொல்வதுபோல் விதை மற்றும் சக்தியின் தோன்றா நிலை (Potential state) என்று நான் சொல்லலாமே!'

சுவாமிஜி: 'அப்படியானால், எந்தக் குணமும் இல்லாத, ஒன்றினாலும் பற்றப்படாத பிரம்மத்திலிருந்து எப்படிப் பிரபஞ்சம் வெளிப்பட முடியும்? இதற்கு நீ பதில் சொல் பார்க்கலாம்.'

சீடர்: 'இது வெளிப்பட்டிருப்பதுபோல் தோன்றுகிறது. அவ்வளவுதான்! பாலைவனத்தின் கானல்நீர் போன்றதே பிரம்மத்திலிருந்து தோன்றும் படைப்பு. படைப்போ அல்லது வேறு எதுவுமோ உண்மையில் இல்லை என்று நமது சாஸ்திரங்கள் இந்தக் கேள்விக்குப் பதிலளிக்கின்றனவே! இருக்கின்ற பொருளான பிரம்மத்தை, இல்லையென்றோ பொய்யென்றோ காட்டுகின்ற மாயையின் சக்தியால்தான் இந்த மயக்கம் ஏற்படுகிறது.'

சுவாமிஜி: 'படைப்பே பொய்யானால் ஜீவன் நிர்விகல்ப சமாதியை அடைவதையும் அதிலிருந்து திரும்புவதையும்கூட வெறும் தோற்றமென்று கூறலாமே! ஜீவன் தன்னியல்பில் பிரம்மமே. அது பந்தத்தை எப்படி அனுபவிக்க முடியும்? அப்போது ''நான் ஆன்மா'' என்ற அனுபவத்தைப் பெற எண்ணும் விருப்பமும் மயக்கமே. ஏனெனில், ''நீ ஏற்கனவே அதுவாகத் தான் இருக்கிறாய்'' என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. எனவே ''அயமேவ ஹி தே பந்த ஸமாதிமனுதிஷ்டஸி—நீ சமாதியை அடைய முயலும் முயற்சிதான் உனது பந்தம்.''[1]

சீடர்: 'இது பெரிய குழப்பமாக இருக்கிறது. நானே பிரம்மம் என்றால் நான் ஏன் அதை எப்போதும் உணர்வதில்லை?'

சுவாமிஜி: 'உணர்வுநிலையில் அதை அடைய வேண்டுமானால் ஒரு கருவி தேவை. மனமே அந்தக் கருவி. ஆனால் அது ஜடப்பொருள். பின்னால் இருக்கும் ஆன்மாவின் உணர்வினால் அதுவும் உணர்வுடையதுபோல் தோன்றுகிறது.

---

1. அஷ்டாவக்ர சம்ஹிதை, 1. 15.

அதனால்தான் பஞ்சதசியின் ஆசிரியர் ''சிச்சாயாவேசத: சக்திச் சேதனேவ விபாதி ஸா—உணர்வுப் பொருளான ஆன்மாவின் நிழல் அல்லது பிரதிபலிப்பால்தான் சக்தி அறிவுள்ளதுபோல் தோன்றுகிறது!''[1] என்று கூறுகிறார். அதுபோல் நம் மனமும் உணர்வுடையதுபோல் காட்சி அளிக்கிறது. ஆகவே உணர்வின் சாரமாக இருக்கும் ஆன்மாவை மனத்தின்மூலம் அறிந்து கொள்ள முடியாது என்பது உறுதி. ஆன்மாவை அறிய நீ மனத்திற்கு அப்பால் செல்ல வேண்டும். மனத்தைக் கடந்து வேறு எந்தவொரு கருவியும் இல்லை, ஆன்மா மட்டுமே இருக்கிறது. அதாவது, அங்கே எதை அறிவாயோ அதுவே கருவியின் இடத்தைப் பிடித்துக்கொள்கிறது. அறிபவன், அறிவு, அறியும் கருவி எல்லாம் ஒன்றாகிவிடுகின்றன. அதனால்தான் வேதங்கள், ''விஜ்ஞாதாரமரே கேன விஜானீயாத்—அறிபவனை எதனால் அறிவது?'' என்று கேட்கின்றன. உண்மை என்னவென்றால் உணர்வு நிலைக்கு அப்பால் ஒரு நிலை உள்ளது. அங்கு அறிபவன், அறிவு, அறியும் கருவி என்று எதுவும் இல்லை. மனம் ஒடுங்கும்போது அந்த நிலை உணரப்படுகிறது. ''உணரப்படுகிறது'' என்று நான் சொல்கிறேன். ஏனென்றால் அந்த அனுபூதி நிலையை உணர்த்த வேறு வார்த்தைகள் இல்லை. சங்கரர் அதை ''அபரோக்ஷானுபூதி'' என்கிறார். இந்த நிலையை அடைந்த பிறகும் அவதார புருஷர்கள் சாதாரண உலக உணர்வு நிலைக்குத் திரும்பி வந்து அந்த அனுபவத்தை ஓரளவு கூறுகிறார்கள். எனவேதான் வேதங்களும் சாஸ்திரங்களும் ரிஷிகளின் அனுபூதியிலிருந்து தோன்றியவை என்று கூறப்படுகின்றன. கடலின் ஆழத்தை அளக்கப்போகின்ற உப்புப் பொம்மை கடலிலேயே கரைந்துவிடுவது போன்றதே சாதாரண மனிதர்களின் நிலை, புரிகிறதா? நீ அறிந்துகொள்ள வேண்டியதெல்லாம் நீ அழியாத பிரம்மம் என்பதுதான்.

'நீ ஏற்கனவே அந்தப் பிரம்மமாகத்தான் இருக்கிறாய். ஆனால் ஜடப்பொருளான மனம் (மாயை என்று இதையே சாஸ்திரங்கள் கூறுகின்றன) இடையே வந்து அதனை உணரவிடாமல் தடுக்கிறது. மிக நுட்பமான ஜடப்பொருளாலான அந்த மனம் அடக்கப்படும்போது ஆன்மா தன் இயல்பான ஒளியுடன் தானாகவே சுடர்விடுகிறது. மாயை அல்லது மனம் என்பது பொய்த் தோற்றம் என்பதற்கு ஒரு நிரூபணம் என்ன

---

1. பஞ்சதசி, 3. 40.

என்றால் அது ஜடப்பொருள், அது இருள்மயமானது என்பது தான். அதற்குப் பின்னால் இருக்கும் ஆன்மாவின் ஒளியே அதை உணர்வுள்ளதுபோல் தோன்றச் செய்கிறது. இதை நீ புரிந்துகொள்ளும்போது, மனம் அகண்டப் பேருணர்வில் அறிவுக்கடலில் கலந்துவிடுகிறது. அப்போதுதான் ''அயமாத்மா ப்ரஹ்ம—இந்த ஆன்மா பிரம்மம்''[1] என்பதை உணர்வாய்.'

பிறகு சுவாமிஜி சீடரிடம், 'உனக்குத் தூக்கம் வருவது போலிருக்கிறது. போய்த் தூங்கு' என்றார்.

அன்று இரவு சீடர் ஓர் அற்புதமான கனவு கண்டார். அதனால் சுவாமிஜியைப் பூஜித்து வழிபடும் ஆவல் அவரிடம் எழுந்தது. சுவாமிஜியிடம் அனுமதி கேட்டுக் கெஞ்சினார். முதலில் மறுத்த சுவாமிஜி, சீடரின் தொடர்ந்த பிடிவாதத்தையும் கெஞ்சலையும் கண்டு இறுதியில் அனுமதி அளித்தார்.

பூஜை முடிந்ததும் சுவாமிஜி சீடரிடம், 'சரி, உன் பூஜை முடிந்தது. ஆனால் குருதேவரின் வழிபாட்டிற்கு மலர் வைக்கப் பயன்படுத்தும் தட்டை என் பூஜைக்குப் பயன்படுத்திய உன் தெய்வ நிந்தனைச் செயலைக் கேட்டதும் சுவாமி பிரேமானந்தர் கோபத்தால் கொதிக்கப் போகிறார்' என்றார். சுவாமிஜி இந்த வார்த்தைகளைச் சொல்லி முடிப்பதற்குள் சுவாமி பிரேமானந்தர் அங்கு வந்துவிட்டார். அவரிடம் சுவாமிஜி, 'எவ்வளவு பெரிய தெய்வ நிந்தனைச் செயல் நடந்துவிட்டது பார்த்தாயா? குருதேவரின் பூஜைக்குரிய பொருளை இவன் என்னைப் பூஜிக்கப் பயன்படுத்தினான்' என்றார். பிரேமானந்தர் இதைக் கேட்டு மகிழ்ச்சிப் புன்முறுவலுடன், 'நல்ல காரியம் செய்தான். நீங்களும் ஸ்ரீராமகிருஷ்ணரும் வேறா என்ன?' என்றார். இதைக் கேட்ட பின்னரே சீடருக்கு அமைதி வந்தது.

சீடர் ஒரு வைதீக இந்து. சாஸ்திரங்கள் தடுக்கும் உணவு மட்டுமின்றி, பிறர் தொட்டவற்றைக்கூட அவர் ஏற்றுக் கொள்வதில்லை. அதனால் சுவாமிஜி அவரைப் புரோகிதர் என்று கூப்பிடுவார். சுவாமிஜி காலைச் சிற்றுண்டி சாப்பிட்டுக் கொண்டிருந்தார். அருகில் இருந்த சுவாமி சதானந்தரிடம் 'அந்தப் புரோகிதரை இங்கு அழைத்து வா' என்றார்.

சீடர் வந்ததும் சுவாமிஜி தாம் சாப்பிட்டுக் கொண்டிருந்த உணவின் ஒரு பகுதியை எடுத்து அவருக்குக் கொடுத்தார். எந்த

---

1. பிருஹதாரண்யக உபநிடதம், 2. 5. 19.

விதமான மறுப்பும் இல்லாமல் சீடர் அதை வாங்கி உண்டதைக் கண்ட சுவாமிஜி அவரிடம், 'நீ இப்போது சாப்பிட்டாயே, அவை முட்டை கலந்து செய்யப்பட்டவை' என்றார். அதைக் கேட்ட சீடர், 'அதில் என்ன வேண்டுமானாலும் கலந்திருக் கட்டும், அதை நான் தெரிந்துகொள்ள வேண்டிய அவசிய மில்லை. உங்கள் பிரசாதமாகிய இந்த அமுதத்தைச் சாப்பிட்ட தால் மரணமற்ற அமுத நிலையை அடைந்துவிட்டேன்!' என் றார். இதைக் கேட்டதும் சுவாமிஜி, 'உன்னிடம் இன்றிலிருந்து ஜாதி, குலம், உயர்குடிப் பிறப்பு, பாவ புண்ணியங்கள், ஆணவம் எல்லாம் அழிய ஆசீர்வதிக்கிறேன்' என்றார்.

## 19

பேலூரில் வாடகை மடம், 1898

காலையில் சீடர் மடத்திற்கு வந்தார். சுவாமிஜியின் திருவடி களை வணங்கியதும் சுவாமிஜி அவரிடம், 'நீ இன்னும் தொடர்ந்து பிறர் தயவில் வேலை செய்வதால் என்ன பயன்? ஏதாவது சொந்த முயற்சி செய்யலாமே!' என்று சொன்னார். அப்போது சீடர் தனியாக ஆசிரியர் பணி செய்துகொண் டிருந்தார். சீடரின் வேலையைப்பற்றிக் கேட்ட சுவாமிஜி, 'நீண்ட நாள் ஆசிரியர் வேலை பார்த்தால் அறிவு மழுங்கிப் போகும்; அறிவொளி உண்டாகாது. இரவுபகலாக ஒருவன் பிள்ளைகளுடன் இருந்தால் படிப்படியாக அவன் மந்தமாகி விடுவான். ஆசிரியர் வேலையை விட்டுவிடு' என்றார்.

சீடர்: 'விட்டுவிட்டால் நான் என்ன செய்வது?'

சுவாமிஜி: 'ஏன்? நீ இல்லறத்தானாக வாழ விரும்பி, பணம் சம்பாதிக்க வேண்டுமென்று ஆசைப்பட்டால் அமெரிக்காவிற்குப் போ. அங்கே தொழில் செய்வதற்கான வழிமுறைகளை நான் காட்டுகிறேன். ஐந்து வருடங்களில் நீ நிறையப் பணம் சம்பாதித்துவிடலாம்.'

சீடர்: 'அங்கே போய் நான் என்ன தொழில் செய்வது? அதற்கான பணத்தை நான் எங்கே தேடுவேன்?'

சுவாமிஜி: 'என்ன உளறுகிறாய்? வெல்ல முடியாத சக்தி உன்னுள் உள்ளது. ''நான் உதவாக்கரை'' என்று நினைத்து நினைத்தே இப்படிச் சக்தி இல்லாதவனாகிவிட்டாய். நீ மட்டும் என்றில்லை, மனித இனம் முழுவதுமே இப்படித்தான் ஆகி விட்டது. ஒருமுறை உலகத்தைச் சுற்றி வா. அங்கெல்லாம் மக்களின் வாழ்க்கை எவ்வளவு வேகத்தோடு இயங்குகிறது

என்பதைக் காண்பாய். இங்கே நீங்கள் என்ன செய்கிறீர்கள்? இவ்வளவு அதிகமாகப் படித்த பிறகும், பிச்சைக்காரர்களைப் போல் ''வேலை கொடுங்கள், வேலை கொடுங்கள்'' என்று அழுகிறீர்களே! மற்றவர்களின் காலால் உதைபட்டு உதைபட்டு, அடிமையாக வேலை செய்துசெய்து இன்று நீங்கள் மனிதர்களாகவா இருக்கிறீர்கள்? குண்டூசி அளவுகூடப் பயன் அற்றவர்கள் நீங்கள்!

'இவ்வளவு தண்ணீரும் மண்வளமும் நிறைந்த இந்த நாட்டில், மற்ற எந்த நாட்டையும்விட இயற்கை பல ஆயிரம் மடங்கு விளைச்சலை உற்பத்தி செய்யும் இந்த நாட்டில் பிறந்த உங்கள் வயிற்றுக்கு உணவில்லை; உடம்பில் போர்த்திக் கொள்ளத் துணியில்லை. மற்ற நாட்டில் நாகரீகங்கள் பரவுவதற்குக் காரணமான பொருட்கள் உற்பத்தியாகும் இந்த நாட்டில், அன்னபூரணியின் நாட்டில் உங்களுக்கு இந்த இழிநிலை. உங்கள் நிலைமை நாயின் நிலைமையைவிடக் கேவலமாக இருக்கிறது. இந்த லட்சணத்தில் உங்கள் வேதத்தையும் வேதாந்தத்தையும் பற்றிப் பெருமையடித்துக் கொள்கிறீர்கள்! சாதாரணத் தேவையான எளிய உணவும் உடையும் கொடுக்க முடியாத நாட்டிற்கு, எதற்கெடுத்தாலும் மற்றவர்களை எதிர் பார்த்து நிற்கின்ற ஒரு நாட்டிற்குப் பெருமை என்ன வேண்டிக் கிடக்கிறது? மதம், கர்மம் எல்லாவற்றையும் கங்கையில் வீசியெறிந்துவிட்டு, முதலில் வாழ்க்கைப் போராட்டத்தில் வெற்றி பெற உன்னைத் தயார் செய்துகொள்.

'உங்கள் நாட்டிலுள்ள மூலப்பொருட்களைப் பயன்படுத்தி அயல் நாட்டினர் பணமாகக் குவிக்கிறார்கள். நீங்களோ பொதி சுமக்கின்ற கழுதைகளைப்போல் அவர்களின் மூட்டைகளைச் சுமக்கிறீர்கள். இந்தியாவின் மூலப்பொருட்களை இறக்குமதி செய்து, தங்கள் அறிவைப் பயன்படுத்தி, பலவகையான பொருட்களை உற்பத்தி செய்து, அவர்கள் பெரிய பணக்காரர்கள் ஆகிறார்கள். நீங்களோ உங்கள் புத்தியைப் பூட்டி வைத்துவிட்டு, உங்கள் சொத்தையும் மற்றவர்களுக்குக் கொடுத்துவிட்டு, ''சோறு, சோறு'' என்று பரிதாபமாக அலைகிறீர்கள்!'

சீடர்: 'வாழ்க்கைக்கான வருமானத்தை எப்படிச் சம்பாதிப்பது?'

சுவாமிஜி: 'வழி உன் கைகளிலேயே இருக்கிறது. உன் கண்களை நீயே கட்டிக்கொண்டு, ''நான் குருடன், என்னால்

பார்க்க முடியவில்லை'' என்று கூறுகிறாய். கண்களைக் கட்டியிருக்கும் கட்டுகளைக் கிழித்து எறி. உலகமே பட்டப் பகலாக ஒளிபெற்றுத் திகழ்வதைக் காண்பாய். பணம் திரட்ட முடியவில்லை என்றால் கப்பலில் ஒரு வேலைக்காரனாகச் சேர்ந்து வெளிநாட்டிற்குப் போ. இந்தியத் துணிகள், டவல், மூங்கில் சாமான்கள் போன்ற உள்நாட்டுப் பொருட்களை எடுத்துச் செல். அதை அமெரிக்க, ஐரோப்பியத் தெருக்களில் வைத்துச் சில்லறை வியாபாரம் செய். இன்றும் அங்கு இந்தியப் பொருட்களுக்கு எவ்வளவு மதிப்பு இருக்கிறது என்பதைக் காண்பாய். ஹுக்ளி மாவட்டத்தில் உள்ள சில முகமதியர்கள் இவ்வாறு வியாபாரம் செய்து பணக்காரர்களாகி இருப்பதை நான் அமெரிக்காவில் பார்த்தேன். அவர்களைவிட உன் புத்தி குறைவானதா? காசிப்பட்டுப் புடவைகளைப் பார். அதுபோல் சிறப்பாக உலகில் எங்குமே செய்யப்படுவதில்லை. அவற்றை எடுத்துக்கொண்டு அமெரிக்காவிற்குப் போ. அதில் அங்கி (Gown) தைத்து விற்பனை செய். பிறகு உனது வருமானத்தைப் பார்.'

சீடர்: 'ஆனால் காசிப்பட்டில் தைத்த அங்கிகளை அமெரிக்கப் பெண்கள் வாங்குவார்களா? சித்திர வேலைப் பாடுள்ள துணிகளை அந்த நாட்டுப் பெண்கள் விரும்பு வதில்லை என்று கேள்விப்பட்டிருக்கிறேன்.'

சுவாமிஜி: 'வாங்குவார்களா, மாட்டார்களா என்பதை நான் பார்த்துக் கொள்கிறேன். நீ திட மனத்துடன் அங்கே போ, பார்க்கலாம். அந்த நாட்டில் எனக்குப் பல நண்பர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கு உன்னை நான் அறிமுகம் செய் கிறேன். முதலில் நீ எடுத்துச் செல்லும் துணிகளை அவர் களையே வாங்கச் சொல்கிறேன். அதன் பிறகு அவர்களைப் பார்த்து மேலும் பலர் வாங்குவார்கள். உன்னால் கொடுக்க முடியாத அளவிற்கு உன் துணிகளுக்குத் தேவை ஏற்பட்டுவிடும்.'

சீடர்: 'அந்த வியாபாரத்திற்கான மூலதனத்திற்கு நான் எங்கே போவேன்?'

சுவாமிஜி: 'முதலில் நானே எப்படியாவது கொஞ்சம் பணம் தருகிறேன். பிறகு உன் முயற்சியால் நீயே பார்த்துக்கொள். ''ஹதோ வா ப்ராப்ஸ்யஸி ஸ்வர்கம் ஜித்வா வா போக்ஷ்யஸே மஹீம்[1]—மரணம் அடைந்தால் சொர்க்கத்திற்குச் செல்வாய்;

1. கீதை, 2. 37.

வென்றால் பூமியை ஆள்வாய்''. உன் உதாரணத்தைப் பின் பற்றிப் பலர் வியாபாரம் செய்ய முன்வருவார்கள். நீ வெற்றி பெற்றால் பணக்காரனாக வாழ்வாய். இந்த முயற்சியில் நீ இறந்துபோனால் அதுகூட நல்லதுதான்.'

சீடர்: 'உண்மைதான் சுவாமிஜி, ஆனால் ஏனோ தைரியம் வரவில்லை.'

சுவாமிஜி: 'இதைத்தான் நான் சொல்கிறேன், மகனே! உங்களிடம் போதுமான சிரத்தை இல்லை, தன்னம்பிக்கை இல்லை. உங்களால் என்ன சாதிக்க முடியும்? போகமும் இல்லை, தியாகமும் இல்லை. நான் சொன்ன இந்த வழியில் முயன்று, பணக்காரனாகி வாழ்க்கையை வெற்றிகரமாக நடத்து. இல்லையென்றால் எல்லாவற்றையும் விட்டுவிட்டு எங்களைப் போன்ற வாழ்க்கையை மேற்கொள். ஆன்மீக உபதேசம் தந்து மக்களுக்குச் சேவை செய். அப்போது எங்களுக்குக் கிடைப்பது போல் பிச்சை உணவாவது உனக்குக் கிடைக்கும். ஒன்றுமே செய்யாவிட்டால் யாரும் யாரையும் விரும்ப மாட்டார்கள். நாங்கள் ஏதோ ஓரிரு நல்ல விஷயங்களைச் சொல்வதால்தான் இல்லறத்தார்கள் எங்களுக்கு ஒருபிடி உணவு தருகிறார்கள். வேலை செய்யாவிட்டால் உனக்கு ஏன் உணவு தர வேண்டும்? மற்றவர்களிடம் கைகட்டி அடிமையாக வேலை செய்து இவ்வளவு துன்பங்களை அனுபவிக்கிறாய். அப்படியும் உனக்குப் புத்தி வரவில்லை. அதனால்தான் உன் துன்பத்திற்கும் விடிவு காலமே இல்லை. நிச்சயமாக இது மாயையின் வேலைதான்.

'மேலை நாட்டுப் பாராளுமன்றங்களில், பிறரிடம் வேலை செய்பவர்கள் அமரும் இடம் பின் வரிசையிலும், தானாகவே முயற்சி செய்து, கல்வி, அறிவு இவற்றின்மூலம் தன்னை உயர்த்திக் கொண்டவர்களின் இருக்கைகள் முன் வரிசைகளிலும் இருப்பதை நான் கண்டேன். மேலை நாடுகளில் ஜாதி பற்றிய பிரச்சினைகள் இல்லை. தொழில் மூலமாகவும், மற்ற சொந்த முயற்சிகளின் மூலமாகவும் யார் முன்னுக்கு வருகிறார்களோ அவர்களே அந்த நாட்டின் தலைவர்களாக, அந்த நாட்டின் தலைவிதியை நிர்ணயிப்பவர்களாக இருக்கிறார்கள். உங்கள் நாட்டிலோ ஜாதியைத் தலைமீது வைத்துக்கொண்டு, கடைசியில் ஒருபிடி சோற்றுக்குக்கூட வழியில்லாத நிலை! ஒரு குண்டூசியைக்கூட உற்பத்தி செய்யத் திராணியில்லை. இந்த லட்சணத்தில் இங்கிலாந்தைக் குறை சொல்கிறீர்கள்! வெட்கக்கேடு! முதலில் அவர்கள் காலடியில் உட்கார்ந்து,

அவர்களிடமிருந்து கலை, தொழில் என்று வாழ்க்கைப் போராட்டத்திற்குத் தேவையானவற்றைக் கற்றுக்கொள் ளுங்கள். அத்தகைய தகுதிகளைப் பெற்றால் முன்புபோலவே உங்களுக்கு மதிப்பு வரும். அவர்களும் உங்கள் பேச்சுக்குத் தலைசாய்ப்பார்கள். இப்படித் தேவையான எதையும் செய்யக் காணோம்! வெறுமனே காங்கிரஸ், காங்கிரஸ் என்று கூச்சல் போட்டுக் கொண்டிருப்பதால் என்ன பயன்?'

சீடர்: 'ஆனால் சுவாமிஜி, நாட்டில் உள்ள படித்தவர்கள் எல்லோரும் காங்கிரசில் சேர்ந்திருக்கிறார்களே!'

சுவாமிஜி: 'சில தேர்வுகளில் தேறிவிட வேண்டும், பிரமாத மாகச் சொற்பொழிவு செய்ய வேண்டும்—அவன் படித்தவன் ஆகிவிட்டான்! சராசரி மக்களை அன்றாட வாழ்க்கைப் போராட்டத்திற்குத் தயார் செய்யாத கல்வி, ஒழுக்க வலிமையைத் தராத கல்வி, பிறர் நலம் நாடுகின்ற உணர்வைத் தராத கல்வி, சிங்கம் போன்ற தைரியத்தைக் கொடுக்காதகல்வி, அதைக் கல்வி என்று சொல்ல முடியுமா? ஒருவனைத் தன் சொந்தக் கால்களிலேயே நிற்கும்படிச் செய்வதே உண்மையான கல்வி. பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் இப்போது நீங்கள் பெற்றுக் கொண்டிருக்கும் கல்வி உங்கள் இனத்தையே தீராத அஜீரண நோயாளிகளாக ஆக்கிவிட்டது. நீங்கள் வெறும் எந்திரங்களைப்போல் வாழ்கிறீர்கள்—பிறக்கிறீர்கள், சாகிறீர்கள், அவ்வளவுதான்.

'விவசாயிகள், செருப்பு தைப்பவர்கள், தோட்டிகள் போன் றோரிடம் உங்களுள் பலரைவிட மிக அதிகமான உழைக்கும் திறனும், தன்னையே சார்ந்திருக்கும் ஆற்றலும் உள்ளது. காலங் காலமாக அமைதியாக உழைத்து, அவர்கள் இந்த நாட்டின் செல்வத்தையும் தானிய வளத்தையும் பெருக்குகிறார்கள். அவர்கள் பெரிதாக அலட்டிக் கொள்வதும் இல்லை; மிக விரைவில் உங்களைவிட உயர்ந்த நிலையை அடையவும் போகி றார்கள். கொஞ்சம் கொஞ்சமாக அவர்களிடம் பணம் சேர்ந்து வருகிறது. பணத்திற்காக உங்களைப்போல் அவர்கள் சிரமப்படு வதில்லை. தற்காலக் கல்வி உங்கள் நடை உடை பாவனைகளை மாற்றிவிட்டது. ஆனால் புதியவற்றைப் படைக்கும் சக்தி உங் களிடம் இல்லாததால் செல்வத்தைச் சம்பாதிப்பதற்கான வழிகளை நீங்கள் கண்டுபிடிக்கவில்லை. பொறுமையாக இருக் கின்ற கீழ் ஜாதியினரை நெடுங்காலமாக அடக்கி ஒடுக்கி வைத் திருக்கிறீர்கள். இப்போது அவர்கள் உங்களை அடக்கி ஒடுக்கும்

காலம் வந்திருக்கிறது. ''வேலை, வேலை'' என்று வேலை தேடி அலையும் வீணான அலைச்சலிலேயே நீங்கள் அழிந்துபோகப் போகிறீர்கள்.'

சீடர்: 'புதியவற்றைப் படைக்கும் சக்தி பிற நாட்டினரை விட நம்மிடம் குறைவாக இருந்தாலும், கீழ் வகுப்பு மக்கள் நம் உயர்ந்த வகுப்பினரின் அறிவாற்றலால்தான் வழிநடத்தப்பட்டு வருகிறார்கள். அப்படியிருக்க வாழ்க்கைப் போராட்டத்தில் உயர்ந்த வகுப்பினரை வென்றுவிடும் அளவிற்கு ஆற்றலும் அறிவும் அவர்களுக்கு எங்கிருந்து வந்துவிடும்?'

சுவாமிஜி: 'உங்களைப்போல் அவர்களால் சில புத்தகங் களைப் படிக்க முடியாமல் இருக்கலாம்; சூட்டும் கோட்டும் போடுகின்ற உங்கள் ''உடை நாகரீகம்'' அவர்களிடம் இல்லா மல் இருக்கலாம். அதனால் என்ன? எல்லா நாடுகளிலும் அவர் களே சமுதாயத்தின் முதுகெலும்பாக இருக்கிறார்கள். இந்தக் கீழ்நிலை மக்கள் வேலை செய்வதை நிறுத்திவிட்டால் நீங்கள் உணவையும் உடையையும் எங்கிருந்து பெறுவீர்கள்? கல்கத்தா வில் உள்ள தோட்டிகள் ஒரு நாளைக்கு வேலை நிறுத்தம் செய் தால் சர்வ குழப்பம் ஆகிவிடாதா? மூன்று நாட்கள் வேலையை நிறுத்திவிட்டாலோ தொற்று நோய்களால் நகரமே காலியாகி விடும். தொழிலாளிகள் வேலை செய்வதை நிறுத்திவிட்டால் உங்களுக்கு உணவும் உடையும் வருவது நின்றுவிடும். இதில், அவர்களைத் தாழ்ந்தவர்கள் என்றும் உங்களைப் படித்தவர்கள் என்றும் கூறித் திரிகிறீர்கள்!

'வாழ்க்கைப் போராட்டத்திலேயே எப்போதும் மூழ்கி, அறிவு விழிப்புப் பெறும் வாய்ப்பில்லாதவர்களாக அவர்கள் இருக்கிறார்கள். அறிவுடையவர்களின் வழிகாட்டுதலில், வேலை செய்யும் திறமைமிக்க எந்திரங்களைப்போல் இரவுபகலாக உழைக்கிறார்கள். அறிவாளிகள் கூட்டம் அவர்களுடைய உழைப்பின் பலனை விழுங்கிக் கொண்டிருக்கிறது. எல்லா நாடுகளிலும் இதுதான் நடைமுறையாக இருக்கிறது. ஆனால் இப்போது காலம் மாறிவிட்டது. கீழ்நிலை மக்கள் விழித்துவிட் டார்கள். இந்த நிலைமைக்கு எதிராக ஒரே அணியாகத் திரண்டு, நியாயப்படித் தங்களுக்குத் தரப்பட வேண்டிய பங்கைப் பெறுவதற்கு உறுதி பூண்டுவிட்டார்கள். ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் உள்ள தொழிலாளர்கள் விழிப்புற்று, அதற்குப் பாதையும் வகுத்துவிட்டார்கள். இந்தியாவிலும் அதற் கான அறிகுறிகள் தெரியத் தொடங்கிவிட்டன. இப்போது நம்

நாட்டில் நடக்கும் பல வேலை நிறுத்தங்கள் அதையே காட்டு கின்றன. இனி உயர்ந்த ஜாதி மக்கள் தலைகீழாக நின்றாலும் தாழ்ந்த ஜாதியினரை அடக்கி நசுக்க முடியாது. அவர்கள் தங் களுக்குரிய நியாயமான உரிமைகளைப் பெற உதவி செய்வது தான் உயர்ஜாதியினருக்கு இனி நல்லது.

'எனவே பாமர மக்களிடையே கல்வியைப் பரப்பும் வேலை யைத் துவக்கு என்று உன்னிடம் நான் சொல்கிறேன். ''நீங்கள் எங்கள் உடன்பிறந்தவர்கள். எங்கள் உடம்பின் ஒரு பகுதி. நாங்கள் உங்களிடம் அன்பு செலுத்துகிறோம். உங்களை ஒரு போதும் வெறுக்க மாட்டோம்'' என்று அவர்களுக்குப் புரிய வையுங்கள். அவர்களுக்கு உங்களுடைய இந்தப் பரிவும் அன்பும் கிடைத்தால் ஆயிரம் மடங்கு உத்வேகத்துடன் அவர்கள் வேலை செய்வார்கள். நவீன விஞ்ஞானத்தின் துணையுடன் அவர்களது அறிவைத் தூண்டிவிடுங்கள். வரலாறு, புவியியல், விஞ்ஞானம், இலக்கியம் முதலியவற்றுடன் மதத்தின் உண்மைகளையும் அவர்களுக்குச் சொல்லிக் கொடுங்கள். கல்வியை அளிப்பதன் பலனாக, ஆசிரியர்களாகிய உங்கள் வறுமையும் தீரும். இப்படி ஒருவருக்கொருவர் உதவிக்கொள்வதன்மூலம் இருசாராரிடமும் நட்பும் பெருகும்.'

சீடர்: 'ஆனால் சுவாமிஜி, அவர்களிடம் கல்வி பரவினால் நாளடைவில் அவர்களும் அறிவுவளம் பெறுவார்கள். பிறகு எங்களைப்போல் சோம்பேறிகளாகவும் வேலை செய்ய விரும் பாதவர்களாகவும் மாறி, அவர்களுக்கு அடுத்த நிலையிலுள்ள தொழிலாளர்களின் உழைப்பைச் சுரண்டி வாழ ஆரம்பித்து விடுவார்கள்.'

சுவாமிஜி: 'அது எப்படி நடக்கும்?' அறிவு விழிப்புற்றாலும் குயவன் குயவனாகவும், மீனவன் மீனவனாகவும், விவசாயி விவசாயி ஆகவும்தான் இருப்பான். அவர்கள் ஏன் பரம்பரைத் தொழிலை விடவேண்டும்? ''ஸஹஜம் கர்ம கௌந்தேய ஸதோஷமபி ந த்யஜேத்—எவ்வளவு குறை உடையதானாலும் உங்கள் தர்மத்தை விடாதீர்கள்.''[1] இத்தகைய கருத்துக்கள் போதிக்கப்பட்டால் அவர்கள் எப்படித் தங்கள் பரம்பரைத் தொழிலை விடுவார்கள்? தங்கள் தொழிலை மேலும் சிறப்பாகச் செய்வதற்குத்தான் அந்த அறிவைப் பயன்படுத்துவார்கள். காலப் போக்கில் அவர்களிடையேயும் மாமனிதர்கள் தோன்றுவார்கள்.

---

1. கீதை, 18. 48.

உயர் ஜாதியினராகிய நீங்கள் அவர்களை உங்களிடையே ஏற்றுக் கொள்ளுங்கள். முற்காலத்தில் பிராமணர்கள், அறிவும் ஆற்றலும் நிறைந்த க்ஷத்திரியரான விசுவாமித்திரரைத் தங்களுள் ஒருவராக ஏற்றுக்கொண்டார்கள். இதனால் க்ஷத்திரிய இனம் முழுவதுமே பிராமணர்களிடம் எவ்வளவு நன்றி காட்டியது. அத்தகைய இரக்கத்தாலும் கூட்டுறவாலும் பறவைகளையும் மிருகங்களையும்கூடத் தன்வசப்படுத்தி விடலாம். மனிதர்களைப்பற்றிச் சொல்ல என்ன இருக்கிறது?'

சீடர்: 'நீங்கள் சொல்வது உண்மைதான். ஆனால் உயர்ந்த மற்றும் தாழ்ந்த ஜாதியினருக்கு இடையேயுள்ள தூரம் இணைக்க முடியாததுபோல் அல்லவா தோன்றுகிறது. உயர் ஜாதியினரைத் தாழ்ந்த ஜாதியினரிடம் இரக்கம் காட்டும்படிச் செய்ய முயல்வது இந்தியாவில் மிகக் கடினமான காரியம்.'

சுவாமிஜி: 'அது நடக்காவிட்டால் உங்களுக்கு முன்னேற்றம் இல்லை. இதுவரை நெடுங்காலமாக நீங்கள் செய்து வருகின்ற போராட்டங்களாலும் சச்சரவுகளாலும் அழிந்து விடுவீர்கள். பாமர மக்கள் விழித்தெழுந்து, உங்கள் சுரண்டலையும் அடக்கு முறையையும் புரிந்துகொண்டால், ஒரு மூச்சில் உங்களைப் பறக்கடித்து விடுவார்கள். அவர்கள்தாம் உங்களிடையே நாகரீகத்தைப் புகுத்தினார்கள். எதிர்காலத்தில் அதை உடைத்தெறியப் போவதும் அவர்கள்தான். மகோன்னதமான ரோமப் பேரரசும் நாகரீகமும் கௌல் ஜாதியினரால் எப்படித் தூள் தூளாகியது என்பதை எண்ணிப் பார். அதனால் தாழ்ந்த மக்களுக்கு கல்வியையும் பண்பாட்டையும் அளித்து அவர்களை உறக்கத்திலிருந்து விழிக்கச் செய். அவர்கள் விழித்து எழுந்தால்—நிச்சயம் ஒருநாள் விழித்து எழத்தான் போகிறார்கள்—அப்போது நீங்கள் அவர்களுக்குச் செய்த உதவியை மறக்காமல் நன்றியுள்ளவர்களாக இருப்பார்கள்.'

இந்த உரையாடலுக்குப் பிறகு சுவாமிஜி சீடரிடம் பின்வருமாறு கூறினார்:

'இந்தப் பேச்சு இத்துடன் முடியட்டும். இப்போது உன் விவகாரத்தைச் சொல். என்ன முடிவு எடுத்திருக்கிறாய் என்பதை என்னிடம் சொல். என்னவாக இருந்தாலும் பரவாயில்லை. ஏதாவது வேலை செய். அல்லது ''ஆத்மனோ மோக்ஷார்த்தம் ஜகத் ஹிதாய ச—சொந்த முக்திக்காகவும், உலக நன்மைக்காகவும்'' எங்களைப்போல் உண்மையான சன்னியாச வாழ்க்கையை மேற்கொள். இவற்றுள் இரண்டாவது சிறந்த வாழ்க்கை என்பது

உண்மைதான். உபயோகமற்ற இல்லறத்தில் ஈடுபட்டு என்ன நன்மையை அடையப் போகிறாய்?

'எல்லாமே நிலையற்றது என்பது உனக்குத் தெரிந்தது தானே! ''நளினீ தளகத ஜலமதி தரளம் தத்வத் ஜீவனமதிசய சபலம்—தாமரையிலைத் தண்ணீர் போன்று வாழ்க்கை உறுதி யில்லாதது.''[1] ஆன்மஞானம் பெறும் ஆர்வம் இருக்குமானால் இனியும் காலம் தாழ்த்தாதே. உடனடியாக முயற்சியில் ஈடுபடு. ''யதஹரேவ விரஜேத் ததஹரேவ பரவ்ரஜேத்—விரக்தி தோன்றும் அந்தக் கணமே உலகைத் துறந்துவிடு.''[2] மற்றவர் களின் நன்மைக்காக உன் வாழ்வைத் தியாகம் செய். வீடுவீடாகச் சென்று, ''எழுந்திருங்கள், விழித்திருங்கள், லட்சியத்தை அடை யும்வரை நில்லாதீர்கள்'' என்னும் அபயச் செய்தியை அறிவி.'

## 20

கல்கத்தா, 1898

சகோதரி நிவேதிதையும் சுவாமி யோகானந்தரும் உடன்வர சுவாமிஜி கல்கத்தாவில் அலிபூரில் உள்ள மிருக காட்சிச் சாலையைக் காண வந்திருந்தார். அதன் கண்காணிப்பாளர் அவர்களை மிகுந்த மகிழ்ச்சியுடன் வரவேற்று, சுற்றிக் காண்பித் தார். அங்குள்ள பலவகையான விலங்குகளைப் பார்த்தபடியே, டார்வினின் பரிணாமக் கொள்கையைப்பற்றி மேலோட்ட மாகப் பேசிக்கொண்டு வந்தார் சுவாமிஜி. பாம்புகள் அடைக்கப் பட்டிருந்த இடத்தில் வந்ததும், உடம்பெல்லாம் வட்டவட்ட மான வளையங்கள் இருந்த மலைப்பாம்பைச் சுட்டிக்காட்டி, 'இந்த மலைப்பாம்பிலிருந்துதான் படிப்படியாக ஆமை தோன்றியது. இதுபோன்ற பாம்பு நெடுநாட்கள் ஒரே இடத்தில் இருந்ததால் அதன் முதுகு மிகவும் கடினமான ஓடாக மாறியது' என்றார்.

பின்னர் சீடரிடம் வேடிக்கையாக, 'நீங்கள் ஆமைகளைச் சாப்பிடுவீர்கள் இல்லையா? பாம்புதான் படிப்படியாக ஆமை யாக மாறியது என்கிறார் டார்வின். அப்படியென்றால் நீங்கள் பாம்பை உண்பவர்க' என்றார். இதைக் கேட்ட சீடர், 'சுவாமிஜி, பரிணாம முறைப்படி ஒரு விலங்கு இன்னொன்றாக மாறும்போது அதற்கு முந்தைய வடிவமும் குணங்களும் இருப்பதில்லை. பிறகு ஆமையைச் சாப்பிடுவது எப்படிப்

---

1. ஆதிசங்கரர், பஜகோவிந்தம்.
2. ஜாபால உபநிடதம், 4.

பாம்பைச் சாப்பிடுவதாகும்?' என்று மறுத்தார். சீடரின் இந்தப் பதிலைக் கேட்டு எல்லோரும் சிரித்தார்கள்.

மற்றும் சில விலங்குகளைப் பார்த்துவிட்டு சுவாமிஜி அங்கு இருந்த ராம் பிரம்மபாபுவின் வீட்டிற்குச் சென்றார். அங்கு அவரும் மற்றவர்களும் தேனீர் அருந்தினார்கள். சகோதரி நிவேதிதையின் அருகில் அமரவும் அவர் தொட்ட இனிப்பு, தேனீர் முதலியவற்றைத் தொடவும் சீடர் தயங்கியதைக் கண்ட சுவாமிஜி, சீடரை நிவேதிதையின் அருகே நாற்காலியில் அமரும் படியும் இனிப்பையும் தேனீரையும் சாப்பிடும்படியும் கூறினார். சீடர் அந்தக் கட்டளைக்குப் பணிந்தார். சுவாமிஜி தண்ணீரைக் குடித்துவிட்டு மீதியைச் சீடரிடம் கொடுத்தார். சீடர் அதை அருந்தினார். அதன் பிறகு டார்வினின் பரிணாம வாதத்தைப் பற்றிய கீழ்க்காணும் பேச்சு நடந்தது.

ராம்பாபு: 'டார்வினின் பரிணாமக் கொள்கையைப் பற்றியும், அந்தக் கொள்கையை நிலைநாட்ட அவர் கூறும் காரணங் களைப் பற்றியும் உங்கள் கருத்து என்ன?'

சுவாமிஜி: 'ஒரு பேச்சுக்காக அவரது கருத்து சரியான தென்று கொண்டாலும், உயிர்களின் பரிணாமத்திற்கு அது தான் முடிவான காரணம் என்பதை என்னால் ஏற்றுக்கொள்ள முடியாது.'

ராம்பாபு: 'நமது பழங்கால அறிஞர்கள் இதைப்பற்றிக் கூறுகிறார்களா?'

சுவாமிஜி: 'சாங்கியத் தத்துவத்தில் சிறந்த முறையில் கூறப்பட்டிருக்கிறது. பரிணாமம் பற்றிய கருத்தில் பழங்கால இந்திய ஞானியரின் கருத்தே அறுதி முடிவு என்று நான் நினைக்கிறேன்!'

ராம்பாபு: 'அதுபற்றிச் சுருக்கமாக நீங்கள் சொல்ல முடியுமா?'

சுவாமிஜி: 'வாழ்க்கைப் போராட்டம் (Struggle for Existence), மிகத் தகுதியுள்ளவை வாழ்தல் (Survival of the Fittest), இயற்கையான தேர்வு (Natural Selection) முதலிய விதிகளைப் பற்றி உங்களுக்குத் தெரிந்திருக்கும். மிகச் சிறிய உயிர் மிகப் பெரிய உயிராகப் பரிணமித்ததற்கான காரணங்களாக இவற்றையே மேலைநாட்டு அறிஞர்கள் கூறுகிறார்கள். ஆனால் பதஞ்ஜலியின் நூலில் இவை எதுவும் காரணம் என்று கூறப் படவில்லை. ஓர் இன உயிர் மற்றோர் இனமாக மாறுவதன் காரணம் 'இயற்கையின் உள் நிறைவு' (ப்ரக்ருத்யாபூராத்) தான்

என்கிறார் பதஞ்ஜலி.[1] தடைகளுக்கு எதிராக இரவுபகலாகப் போராடுவதால் இது ஏற்படுவதில்லை. என்னைப் பொறுத்த வரையில் போராட்டங்களும் போட்டிகளும், பலவேளைகளில், உயிர் முழுமை அடைவதற்குத் தடைகளாகவே இருக்கின்றன. மேலை நாட்டுக் கருத்துபோல், ஆயிரக்கணக்கான உயிர்களின் அழிவால்தான் ஓர் உயிர் பரிணமிக்கிறது என்றால், அத்தகைய பரிணாமத்தால் உலகிற்கு நன்மை எதுவுமில்லை. பௌதீக வளர்ச்சி இருக்கிறது என்று கொண்டாலும் ஆன்மீக வளர்ச்சிக்கு இது ஒரு பெருந்தடை என்பதை ஏற்றேயாக வேண்டும்.

'நம் நாட்டுத் தத்துவ அறிஞர்களின்படி, உயிர் என்பது பூரண ஆன்மாவே. மாறுபாடுகள் எல்லாம் ஆன்மாவின் வெளிப்பாட்டிலுள்ள வேற்றுமையே. பரிணாம வளர்ச்சிக்கும் இயற்கையின் வெளிப்பாட்டிற்கும் தடைகளாக இருப்பவை நீக்கப்பட்டதும் ஆன்மா முழுமையாக வெளிப்படுகிறது. இயற்கையின் வெளிப்பாடு சிறு உயிர்களில் எப்படி வேண்டு மானாலும் இருக்கட்டும். ஆனால் உயர்ந்த இனங்களில், அவை எப்போதும் தடைகளை எதிர்த்து நடத்தும் போராட்டங் களால்தான் பரிணமிக்க முடியும் என்பது உண்மையல்ல. போராட்டத்தைவிட, கல்வி, பண்பாடு, மன ஒருமைப்பாடு, தியானம், முக்கியமாகத் தியாகம் ஆகியவற்றால்தான் தடைகள் நீக்கப்படுகின்றன. அதற்கேற்ப ஆன்மாவும் வெளிப்படுகிறது. எனவே தடைகளை விளைவுகள் என்று கொள்ளாமல் ஆன்மா வின் வெளிப்பாட்டிற்கான காரணங்கள் என்று கொண்டு, அவை இயற்கையின் ஆச்சரியகரமான வேறுபாடுகளுக்குத் துணை செய்கின்றன என்று கூறுவது பகுத்தறிவிற்கு ஒத்து வராது. தீமை செய்கின்ற ஆயிரம் பேரைக் கொல்வதன்மூலம் தீமையை உலகத்திலிருந்து நீக்க முயல்வதால் உலகத்தில் தீமை தான் அதிகமாகும். ஆனால் அறிவுரைகளின் மூலம் மக்கள் தீமை செய்யாமல் தடுக்கப் பட்டால் உலகத்தில் தீமையே இருக் காது. மேலை நாட்டினரின் இந்தப் போராட்டக் கொள்கை எவ்வளவு பயங்கரமானது என்பதைப் பாருங்கள்.'

ராம்பாபு சுவாமிஜியின் இந்தப் பேச்சைக் கேட்டு ஆச்சரியத்துடன், 'இந்தியாவிற்குத் தற்போது உங்களைப் போல் கீழை நாட்டு, மேலை நாட்டுத் தத்துவங்களில் நல்ல

1. யோக சூத்திரங்கள், 4. 2; ஞானதீபம்: சுடர் 2, பக். 188 பார்க்க.

புலமை பெற்றவர்களே உடனடியாகத் தேவை. எதிலும் ஒரு பக்கத்தை மட்டுமே ஏற்றுக்கொள்பவர்களான, இன்றைய படித்தவர்களின் தவறுகளை அவர்களாலேயே திருத்த முடியும். பரிணாமக் கொள்கை பற்றிய உங்கள் விளக்கத்தைக் கேட்டு நான் அளவற்ற மகிழ்ச்சி அடைகிறேன்' என்றார்.

சிறிது நேரத்தில் சுவாமிஜியும் மற்றவர்களும் அங்கிருந்து புறப்பட்டு பாக்பஜாரில் உள்ள பலராம் போஸின் வீட்டை அடைந்தார்கள். அப்போது இரவு மணி எட்டு. சிறிது நேரம் ஓய்வெடுத்த பிறகு சுவாமிஜி வரவேற்பு அறைக்கு வந்தார். அங்கே, அவர் மிருகக் காட்சிசாலையில் சுருக்கமாகப் பரிணாமக் கொள்கைபற்றிக் கூறிய கருத்தை விரிவாகக் கேட்கச் சிறு கூட்டம் ஆர்வத்தோடு காத்திருந்தது. சுவாமிஜி அறைக்குள் வந்ததும், சீடர் அந்தப் பேச்சை ஆரம்பித்தார்.

சீடர்: 'சுவாமிஜி, நீங்கள் மிருகக் காட்சிசாலையில் கூறிய பரிணாம வளர்ச்சி பற்றிய கருத்தை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. அதை எளிய முறையில் கூறுங்கள்.'

சுவாமிஜி: 'புரியவில்லையா! எந்தப் பகுதி புரியவில்லை?'

சீடர்: 'நீங்கள் அடிக்கடி எங்களிடம், புறச் சக்திகளை எதிர்த்துப் போராடும் ஆற்றல்தான் உயிர் இருப்பதன் அடையாளமாகவும் முன்னேற்றத்தின் முதற்படியாகவும் உள்ளது என்று கூறியிருக்கிறீர்கள். இப்போது அதற்கு மாறாகக் கூறுகிறீர்களே!'

சுவாமிஜி: 'நான் ஏன் மாறாகக் கூற வேண்டும்? நீதான் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை. அவர்கள் கூறும் வாழ்க்கைப் போராட்டம், மிகத் தகுதி உள்ளவை வாழ்தல் முதலிய விதிகள் விலங்குகளின் உலகத்தில் இருப்பதைத் தெளிவாகக் காண்கிறோம். அதனால்தான் டார்வினின் கொள்கை ஏறக்குறைய சரி என்று தோன்றுகிறது. ஆனால் பகுத்தறிவுள்ள மனிதர்களிடம் இந்த விதிகள் முற்றிலும் மாறாக இருக்கின்றன. உதாரணமாக, நாம் யாரை மாமனிதர்களாக, லட்சிய மனிதர்களாகக் கொண்டிருக்கிறோமோ, அவர்களிடம் இந்தப் புறப் போராட்டம் எதையும் காணவே முடியாது. விலங்குகளிடம் இயல்புணர்ச்சி மிகுந்து காணப்படுகிறது. ஆனால் மனிதனிடமோ, அவன் உயரும் அளவிற்கு அவனிடம் பகுத்தறிவு மிகுந்து காணப்படுகிறது. எனவே விலங்குகளின் உலகில் ஒன்று மற்றவற்றை அழிப்பதால் முன்னேற்றம் ஏற்படுவதுபோல் பகுத்தறிவு நிறைந்த மனித உலகில் ஏற்பட முடியாது. மனிதனின்

மிக உயர்ந்த பரிணாமம் தியாகத்தின்மூலம் மட்டுமே ஏற்படுகிறது. ஒருவன் மற்றவர்களுக்காக எவ்வளவு தூரம் தியாகம் செய்வானோ அந்த அளவிற்கு அவன் உயர்ந்தவன். விலங்கினத்திலோ, எந்த விலங்கு மற்ற விலங்குகளை அதிகமாகக் கொல்கிறதோ, அதுவே மிருகங்களிலேயே மிகுந்த வலிமை படைத்ததாகக் கருதப்படுகிறது. எனவே இந்தப் போராட்டக் கொள்கை இரண்டு பக்கத்திற்கும் பொருந்த முடியாது. மனிதனின் போராட்டம் மனத்தில் நடக்கிறது. மனத்தை அடக்கும் அளவிற்கு ஒருவன் உயர்கிறான். மனத்தின் செயல்பாடுகள் முழுமையாகக் கட்டுப்படுத்தப்படும்போதுதான் ஆன்மா வெளிப்படுகிறது. உடம்பைக் காப்பாற்றுவதற்காக மிருகங்களிடையே நடக்கின்ற போராட்டம், மனிதர்களிடம் மனத்தைக் கட்டுப்படுத்துவது அல்லது சத்வ நிலையில் நிறுத்துவதாகிய போராட்டமாக அமைகிறது. உண்மையான மரமும் தண்ணீரில் தெரிகின்ற அதன் நிழலும்போல் மிருகங்களின் வாழ்க்கையிலும் மனித வாழ்க்கையிலும் போராட்டங்கள் வெவ்வேறாக அமைந்துள்ளன.'

சீடர்: 'அப்படியென்றால் நீங்கள் ஏன் உடல்வலிமையை அவ்வளவு வலியுறுத்துகிறீர்கள்!'

சுவாமிஜி: 'உங்களை நீங்கள் மனிதர்கள் என்றா நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்? உங்களிடம் ஏதோ கொஞ்சம் பகுத்தறிவு இருக்கிறது, அவ்வளவுதான். வலிமையான உடல் இல்லையானால் மனத்துடன் எப்படிப் போராடுவீர்கள்? பரிணாமத்தின் மிக உயர்ந்த படியான ''மனிதன்'' என்ற நிலையிலா நீங்கள் இருக்கிறீர்கள்? உண்பது, உறங்குவது, இனப்பெருக்கம் என்பதைத் தவிர உங்களிடம் வேறு ஏதாவது இருக்கிறதா என்ன? நீங்கள் இன்னும் நான்கு கால்கள் படைத்த மிருகங்களாக ஆகாமல் இருப்பது உங்கள் அதிர்ஷ்டம்தான். ''சுய மதிப்பும் (மான்) தன்னுணர்வும் (ஹுஷ்) இருப்பவனே மனிதன் (மானுஷ்)'' என்று ஸ்ரீராமகிருஷ்ணர் சொல்வது வழக்கம். நீங்களோ வெறுமனே பிறந்து இறக்கின்ற பிராணிகள்! சொந்த நாட்டினரின் பொறாமைக்கும் அயல்நாட்டினரின் வெறுப்புக்கும் ஆளாகித் திரிகின்ற அவலங்கள்! நீங்கள் எல்லாம் வெறும் மிருகங்கள். அதனால்தான் உங்களைப் போராடச் சொல்கிறேன். தத்துவங்களையும் அதையும் இதையும் ஒதுக்கி வையுங்கள். அன்றாட வாழ்க்கையையும் செயல்பாடுகளையும் சற்று அமைதியாகக் கவனியுங்கள். நீங்கள் மனிதர்களுக்கும்

விலங்குகளுக்கும் இடைப்பட்ட நிலையில் இருப்பதை அப்போது அறிவீர்கள். முதலில் உடல் வலிமையை வளர்த்துக் கொள்ளுங்கள். அதன் பிறகே மனத்தைக் கட்டுப்படுத்த முடியும். ''நாயமாத்மா பலஹீனேன லப்ய:—இந்த ஆன்மா பலவீனர்களால் அடையப்படுவதில்லை.''[1] புரிகிறதா?'

சீடர்: 'சுவாமிஜி, இந்தப் பலவீனம் என்ற சொல்லுக்கு பிரம்மச்சரியத்திலிருந்து வழுவுவது என்று அல்லவா உரையாசிரியர் (சங்கரர்) பொருள் கொள்கிறார்.'

சுவாமிஜி: 'கொள்ளட்டுமே! உடல் பலவீனமானவன் ஆன்மாவை அடையத் தகுதியற்றவன் என்று நான் சொல்கிறேன்.'

சீடர்: 'ஆனால் மூடர்கள் பலர் வலிமையான உடலைப் பெற்றிருக்கிறார்களே!'

சுவாமிஜி: 'சற்று சிரமப்பட்டு ஒருமுறை அவர்களுக்கு நல்ல கருத்துக்களைக் கொடுக்க முடியுமானால், உடல் வலிமையற்றவனைவிட அவர்கள் வெகுசீக்கிரத்தில் அதை நடைமுறையில் பின்பற்றுவார்கள். பலவீனமான உடம்பு உடையவர்களால், காமத்தையோ கோபத்தையோ கட்டுப்படுத்துவது மிகவும் கடினமாக இருப்பதை நீ பார்க்கவில்லையா? மெலிந்த உடலுடன் இருப்பவர்கள் மிக எளிதாகக் கோப வசப்படுவார்கள்; காமவசப்படுவார்கள்.'

சீடர்: 'ஆனால் இந்த விதிக்கு விலக்கானவர்களும் இருக்கிறார்கள்.'

சுவாமிஜி: 'அதை யார் இல்லை என்றது? ஒருமுறை மனம் கட்டுப்பட்டுவிட்டது என்றால் பிறகு அவனது உடம்பு வலிமையாக இருக்கிறதா அல்லது மெலிந்து போனதா என்பதுபற்றிக் கவலையே இல்லை. உண்மை என்னவென்றால், வலிமையான உடல் இல்லாதவன் ஆன்ம ஞானத்திற்குத் தகுதி உடையவன் ஆக மாட்டான். ''உடம்பில் ஒரு தழும்பு இருந்தாலும் கூட அவனால் நிறைநிலையை அடைய முடியாது'' என்று ஸ்ரீராமகிருஷ்ணர் கூறுவதுண்டு.'

சுவாமிஜி உணர்ச்சிவசப்பட்டுப் பேசுவதைக் கண்ட சீடர், அதற்கு மேலும் அந்தப் பேச்சை வளர்க்க விரும்பவில்லை. சுவாமிஜி கூறுவதை ஏற்றுக்கொண்டு அமைதியாக இருந்தார். சிறிதுநேரம் கழிந்தது. சுவாமிஜி அங்குக் கூடியிருப்பவர்களைப்

---

1. முண்டக உபநிடதம், 3. 2. 4.

பார்த்து, 'இந்தப் புரோகிதன் இன்று நிவேதிதை தொட்ட உணவைச் சாப்பிட்டான் தெரியுமா! அவள் தொட்ட இனிப்பைச் சாப்பிட்டான். அதாவது பரவாயில்லை, (சீடரைப் பார்த்து), ஆனால் அவள் தொட்ட தண்ணீரை நீ எப்படிக் குடித்தாய்?' என்றார்.

சீடர்: 'அப்படிச் செய்யும்படிக் கட்டளையிட்டது நீங்கள். குரு கட்டளையிட்டால் நான் எதையும் செய்வேன். தண்ணீரைக் குடிக்க எனக்குப் பிடிக்கவில்லைதான். ஆனால் நீங்கள் குடித்து விட்டு என்னிடம் தந்தீர்கள். அதை நான் பிரசாதமாக ஏற்றுக் கொண்டேன்.'

சுவாமிஜி: 'அப்படியா! இப்போது உன் ஜாதி போய் விட்டது. இனிமேல் உன்னை யாரும் பிராமணன் என்று மதிக்கமாட்டார்கள்.'

சீடன்: 'மதிக்காவிட்டால் போகட்டும், நீங்கள் கட்டளை யிட்டால் சண்டாளனின் வீட்டிலும் உண்பேன்.'

சீடரின் இந்த வார்த்தைகள் சுவாமிஜியையும் அங்கிருந் தவர்களையும் பலத்த சிரிப்பில் ஆழ்த்தின.

நடு இரவு ஆகியிருந்தது. சீடர் தாம் தங்கியிருந்த இடத்திற்கு வந்தார், வீடு பூட்டப்பட்டு இருந்தது. எனவே வீட்டிற்கு வெளி யிலேயே படுத்துக்கொண்டார்.

காலத்தின் சக்கரம், தனது வேகத்தில் சிறிதும் மாற்றம் இல்லாமல் சுழன்றுகொண்டே இருக்கிறது. சுவாமிஜியும் நிவேதிதையும் யோகானந்தரும் இந்த உலகத்தில் இப்போது இல்லை. ஆனால் அவர்கள் விட்டுச்சென்ற புனிதமான நினைவுகள் மனத்தில் உள்ளன. அந்த நினைவுகளைத் தம்மால் இயன்றவரை எழுதி வைப்பதைப் பெரியதோர் ஆசீர்வாதமாகச் சீடர் நினைக்கிறார்.

## 21

பேலூரில் வாடகை மடம், 1898

சீடர் மடத்திற்கு வந்திருந்தார். மடம் இப்போது நீலாம்பர் பாபுவின் மாளிகைக்கு மாற்றப்பட்டிருக்கிறது. இதன் அருகில் தான் புதிய மடத்திற்கான இடம் வாங்கப்பட்டுள்ளது. மாலை நான்கு மணி.

சுவாமிஜி சீடரை அழைத்துக்கொண்டு புதிய இடத்தைப் பார்ப்பதற்காகச் சென்றார். அந்த இடம் காடாக இருந்தது. வடக்குப் பக்கத்தில் செங்கல்லால் கட்டப்பட்ட ஒற்றை மாடிக் கட்டிடம் ஒன்று இருந்தது. சுவாமிஜி நடந்துகொண்டே

பேசினார். பேச்சுவாக்கில் எதிர்காலத்தில் அந்த இடத்தில் அமைக்கப்பட இருக்கும் மடத்தின் திட்டங்களையும் அதன் சட்டதிட்டங்களையும்பற்றிப் பேசினார்.

அந்த வீட்டின் கிழக்கில் இருக்கும் வராந்தாவை அடைந்ததும் சுவாமிஜி கூறினார்: 'இங்கே துறவிகள் தங்குவார்கள். இந்த மடத்தை ஆன்மீகச் சாதனைகள் மற்றும் அறிவுப் பண்பாட்டு மையமாக மாற்ற வேண்டுமென்பது என் விருப்பம். இங்கிருந்து எழும் சக்தி உலகம் முழுவதும் பாய்ந்து பரவும்; மனிதர்களின் வாழ்க்கைப் போக்கையே மாற்றும். இந்த இடத்திலிருந்து ஞானம், பக்தி, யோகம், கர்மம் இவற்றைச் சமரசப்படுத்துவதற்கான லட்சிய ஊற்றுக்கள் பொங்கிப் பெருகும். காலப்போக்கில் இங்கு வாழும் துறவியரின் தலையசைவினாலேயே எல்லா திசைகளிலும் மூலைமுடுக்குகளிலும் உயிர்ச் சக்தி விழிப்புற்று எழும். உண்மையான ஆன்மீக தாகம்கொண்டவர்கள் அனைவரும் நாளடைவில் இங்கே வந்து கூடுவார்கள். இதுபோன்ற ஓராயிரம் எண்ணங்கள் என் மனத்தில் தோன்றுகின்றன.

'அதோ அந்தத் தெற்குப் பக்கத்தில் இருக்கும் நிலத்திற்கு அப்பால்தான் கல்வி நிலையம் அமையும். அங்கே இலக்கணம், தத்துவம், விஞ்ஞானம், இலக்கியம், கவிதை, ஸ்மிருதிகள், பக்தி சாஸ்திரங்கள், ஆங்கிலம் முதலியவை சொல்லித் தரப்படும். இந்தக் கல்வி நிலையம் பழங்கால குருகுல முறையில் அமையும். பால பிரம்மச்சாரிகள் இங்கே தங்கி சாஸ்திரங்களைப் படிப்பார்கள். உணவும் உடையும் மற்றவையெல்லாம் அவர்களுக்கு மடத்திலிருந்து தரப்படும். ஐந்தாண்டு பயிற்சிக்குப் பிறகு அவர்கள் விரும்பினால் திரும்பிச் சென்று இல்லறத்தார்களாக வாழலாம்; அல்லது மடத்திலுள்ள மூத்தத் துறவியரின் அனுமதியுடன் சன்னியாச வாழ்க்கை ஏற்று இங்கேயும் வாழலாம். ஒழுக்கம் தவறி நடக்கும் பிரம்மச்சாரிகளை உடனே வெளியே அனுப்பிவிடும் அதிகாரம் மடத்தின் அதிகாரிகளுக்கு உண்டு. ஜாதி, மத வித்தியாசமில்லாமல் இங்குக் கல்வி வழங்கப்படும். இதை எதிர்ப்பவர்கள் இங்குச் சேர்க்கப்பட மாட்டார்கள். தங்கள் ஜாதிக்கு உரிய உணவுப் பழக்க வழக்கங்களை மேற்கொள்ள விரும்புபவர்கள் அதற்காகத் தனி ஏற்பாடு செய்துகொள்ள வேண்டும். வகுப்புகளில் அவர்கள் மற்றவர்களோடு சேர்ந்துதான் அமர வேண்டும். மடத்தின் அதிகாரிகள் இவர்களின் நடத்தையை உன்னிப்பாகக் கவனித்து வருவார்கள்.

இங்குப் பயிற்சி பெறாமல் யாரும் இந்த மடத்தில் சன்னியாசி களாகச் சேர்த்துக் கொள்ளப்பட மாட்டார்கள். இந்த அடிப்படையில் மடம் நடந்தால் எப்படியிருக்கும்? சொல் பார்க்கலாம்.'

சீடர்: 'அப்படியென்றால் பழங்கால முறைப்படி, குருகுலக் கல்வி முறையை மறுபடியும் செயல்முறைப்படுத்த விரும்பு கிறீர்கள், அப்படித்தானே?'

சுவாமிஜி: ஆம், அப்படியேதான். இக்காலக் கல்விமுறை பிரம்ம வித்தையை அறிந்துகொள்வதற்கான வாய்ப்பு எதையும் தரவில்லை. பழங்காலத்தில் இருந்ததுபோல் பிரம்மச்சரியம் என்கின்ற படியை மீண்டும் உண்டாக்க வேண்டும். ஆனால் அதன் விதிகளைப் பரந்த அடிப்படையில் அமைக்க வேண்டும். அதாவது காலத்திற்கு ஏற்றாற்போல் சில மாற்றங்களை அதில் புகுத்த வேண்டும். அதைப்பற்றி நான் பின்னால் பேசுகிறேன்.'

சுவாமிஜி தொடர்ந்தார்:

'மடத்திற்குத் தெற்கில் இருக்கும் அதோ அந்த இடத்தை யும் காலப்போக்கில் நாம் வாங்க வேண்டும். அங்கே அன்ன சத்திரம் ஆரம்பிக்க வேண்டும். அங்கே ஏழை எளியவர்களுக்கும் நலிந்தவர்களுக்கும், அவர்களை சாட்சாத் நாராயணனாகக் கண்டு, நாராயண சேவை என்ற ரீதியில் உணவளிக்க ஏற்பாடு செய்ய வேண்டும். அந்த அன்ன சத்திரம் ஸ்ரீராமகிருஷ்ணரின் பெயரால் அமைக்கப்படும். கிடைக்கும் பணத்திற்கு ஏற்ப அதை ஆரம்பிக்க வேண்டும். உதாரணமாக, முதலில் இரண்டு மூன்று பேர்களுக்கு உணவளிப்பதிலிருந்து சேவையைத் தொடங்க வேண்டும். ஆர்வமுள்ள பிரம்மச்சாரிகளை இந்த அன்ன சத்திரத்தை நடத்தப் பழக்க வேண்டும். அதை நடத்துவதற்கான வழிமுறைகளை அவர்களே தேட வேண்டும். தேவையானால் பிச்சையெடுத்தும்கூடப் பணம் சேர்க்க வேண்டும். மடத்தி லிருந்து இதற்காக ஒரு பைசாவும் கொடுக்கக்கூடாது. அந்தப் பிரம்மச்சாரிகளுக்கு இதற்கான பணத்தைத் தேடத் தெரிந்திருக்க வேண்டும். இவ்வாறு ஐந்து ஆண்டுகள் அன்ன சத்திரம் நடத்து வதில் முழுமையாகப் பயிற்சி பெற்றபின்தான், கல்விநிலையத் தில் அவர்கள் அனுமதிக்கப்படுவார்கள். ஐந்து ஆண்டுகள் அன்ன சத்திரத்தில், ஐந்து ஆண்டுகள் கல்வி நிலையத்தில் என்று பத்தாண்டு காலப் பயிற்சிக்குப் பிறகு அவர்களுக்குத் துறவியாகும் விருப்பம் இருந்தால், அவர்கள் அதற்குத் தகுதி உடையவர்கள் என்று மடத்தின் மூத்தத் துறவியரும்

நினைத்தால், சன்னியாச தீட்சை தந்து அவர்கள் மடத்தில் வாழ அனுமதிக்கலாம். ஆனால் மடத்தின் தலைவர் இந்தச் சட்டத்திற்குக் கட்டுப்படாமல், மிகச் சிறந்த தகுதி வாய்ந்த பிரம்மச்சாரிக்கு எந்த நேரத்திலும் சன்னியாச தீட்சை கொடுக்கும் அதிகாரம் படைத்தவராக இருப்பார். சாதாரண பிரம்மச்சாரிகள், முன்பு நான் சொன்னதுபோல் படிப்படியாகத்தான் சன்னியாச வாழ்வில் புகுவார்கள். இப்படிப்பட்ட எண்ணங்கள் எல்லாம் என் மனத்தில் இருக்கின்றன.'

சீடர்: 'இப்படிப்பட்ட மூன்று அமைப்புகளை நீங்கள் உண்டாக்குவதன் நோக்கம் என்ன?'

சுவாமிஜி: 'என் கருத்து உனக்குப் புரியவில்லையா? முதலில் அன்னதானம், பிறகு வருவது வித்யாதானம், அடுத்தது மிக உயர்ந்த தானமாகிய ஞானதானம். இந்த மூன்றையும் நாம் இந்த மடத்தின் வாயிலாகச் செய்ய வேண்டும். தொடர்ந்து அன்னதானம் செய்வதன்மூலம், பிறர் நலம் நாடுவதான பண்பும், உயிர்களைச் சிவபெருமானாகக் கண்டு சேவை செய்யும் இயல்பும் பிரம்மச்சாரிகளின் மனத்தில் ஆழப் பதியும். இது படிப்படியாக அவர்கள் மனத்தைத் தூய்மைப்படுத்தி அவர்களிடம் சாத்வீகக் குணங்களை உண்டாக்கும். காலப் போக்கில் அவர்கள் பிரம்ம ஞானத்தைப் பெறுவதற்கான தகுதி பெறுவார்கள்; சன்னியாசி ஆவதற்கான தகுதி பெறுவார்கள்.'

சீடர்: 'சுவாமிஜி! ஞானதானம்தான் மிக உயர்ந்தது என்றால், நீங்கள் ஏன் அன்னதானத்தையும் வித்யா தானத்தையும் ஆரம்பிக்கிறீர்கள்?'

சுவாமிஜி: 'இன்னும்கூடவா நீ என் கருத்தைப் புரிந்து கொள்ளவில்லை? நன்றாகக் கவனி. உணவிற்குப் பஞ்சமாக இருக்கும் இந்தக் காலத்தில், சுயநலமின்றி, சேவை மனப் பான்மையுடன், பிச்சையெடுத்தோ அல்லது வேறு வழியின் மூலமோ ஏழை எளியவர்களுக்குச் சிறிது உணவு கொடுத்தீர் களானால், அது உங்களுக்கும் உலகத்திற்கும் நன்மை செய் வதுடன் நீங்கள் செய்யும் நல்ல காரியத்திற்கு ஒவ்வொருவருடைய பரிவுணர்ச்சியையும் அன்பையும் பெற்றுத் தரும். காமத்திலும் பணத்தாசையிலும் கட்டுண்டு கிடக்கும் உலக மக்கள் அன்பு மிகுந்த இந்தச் சேவையில் நம்பிக்கைக் கொண்டு உங்களுக்கு உதவ முன்வருவார்கள். வித்யாதானத்தாலும், ஞானதானத்தாலும் மக்களைக் கவர்வதைவிட, கேட்காமலேயே

செய்கின்ற அன்னதானத்தால் நீ மக்களை ஆயிரம் மடங்கு கவரலாம். பொது மக்களின் பரிவை அன்னதானத்தால் பெறு வதுபோல் வேறு எந்த வேலையாலும் பெற முடியாது. இது உண்மையிலேயே மகோன்னதமான சேவை. உண்மையிலேயே நற்பணியில் ஈடுபடுபவனுக்கு மனிதன், மனிதன் ஏன், இறைவனே உதவுவார். மக்களை இந்தத் தானத்தின்மூலம் கவர்ந்தால், பிறகு அவர்களுக்கு வித்யாதானத்தையும் ஞானதானத்தையும் அளிக்கலாம். எனவே முதலில் அன்னதானம்.'

சீடர்: 'அன்னதானத்திற்கு முதலில் இடம் வேண்டும். பிறகு கட்டிடம் அது இது எல்லாம் வேண்டும். பிறகு வேலைகள் தொடங்கப் பணம் வேண்டும். அவ்வளவு பணமும் எங்கிருந்து வரும்?'

சுவாமிஜி: 'மடத்தின் தெற்கே இருக்கும் இடத்தை அதற் காக உடனடியாகக் கொடுத்து விடுகிறேன். வில்வ மரத்தின் அருகே அதற்கென்று ஒரு கொட்டகையையும் அமைத்துத் தருகிறேன். குருடர்கள், நோயாளிகள் என்று ஓரிருவரை வைத்து நாளை முதல் அவர்களின் சேவையில் ஈடுபடு பார்க்கலாம். பிச்சையெடுத்தாவது அவர்களுக்கு உணவளி. உன் கைகளா லேயே அவர்களுக்குச் சமைத்துப் போடு. சில நாட்கள் தொடர்ந்து இப்படிச் செய்தால் உனக்கு உதவுவதற்குப் பலர் முன்வருவார்கள். ந ஹி கல்யாண க்ருத் கச்சித் துர்கதிம் தாத கச்சதி—மகனே! நல்லதைச் செய்பவன் ஒருபோதும் துன்பப் படமாட்டான்.'[1]

சீடர்: 'ஆம். அது உண்மைதான். ஆனால் தொடர்ந்து செய்து வந்தால் இப்படி வேலை செய்வதே ஒரு பந்தமாகி விடாதா?'

சுவாமிஜி: 'உன்னிடம் செயலின் பலனைப் பற்றிய எண் ணம் இல்லாமல் இருக்குமானால், சுயநல ஆசைகளுக்கு அப் பால் செல்லும் ஏக்கம் உனக்கு இருக்குமானால், அந்த நற் பணிகள் எல்லாம் உன் பந்தங்களை உடைத்தெறியவே துணை செய்யும். அந்த வேலைகள் பந்தப்படுத்தும் என்று சொல் கிறாயே! எவ்வளவு அறிவற்றவனாக இருக்கிறாய்! கர்ம பந்தங் களை வேருடன் பிடுங்கி எறிய ஒரே வழி பலனில் பற்றில்லாமல் செயல்புரிவதே அல்லவா! நான்ய: பந்தா வித்யதேயேऽயனாய— அதைத் தவிர வேறு வழியே இல்லை.'

---

1. கீதை, 6. 40

சீடர்: 'அன்னதானம் மற்றும் சேவை நிலையம்பற்றி உங்களிடமிருந்து விரிவாகக் கேட்க உற்சாகம் பொங்குகிறது.'

சுவாமிஜி: 'ஏழைஎளியவர்களுக்காக நல்ல காற்றோட்டமுள்ள சிறிய அறைகளைக் கட்ட வேண்டும். ஓர் அறையில் இரண்டு அல்லது மூன்று பேர்தான் தங்க வேண்டும். அவர்களுக்கு நல்ல படுக்கை, தூய ஆடைகள் முதலியவை தர வேண்டும். ஒரு மருத்துவர் இருக்க வேண்டும். அவர், வாரத்தில் ஒன்றோ இரண்டோ முறை தம் வசதிப்படி அவர்களைப் பரிசோதிக்க வேண்டும். இந்தச் சேவாசிரமம் அன்ன சத்திரத்தோடு இணைந்த ஒரு பகுதியாக இருக்க வேண்டும். அங்கே நோயாளிகளுக்குச் சிகிச்சையும் தரப்பட வேண்டும். நாளடைவில், வேண்டிய பணம் கிடைக்கும்போது பெரிய சமையலறை கட்டலாம். அந்த அன்ன சத்திரத்தில் ''தாருங்கள், பெற்றுக் கொள்ளுங்கள், சாப்பிடுங்கள்'' என்று உணவுப் பொருட்களைக் கேட்கும் ஓசையும், பரிமாறுபவர்களின் ஓசையும் மட்டுமே கேட்க வேண்டும். அங்குச் சமைக்கப்படுகின்ற சோற்றிலிருந்து வடிக்கப்படும் கஞ்சி கங்கையில் கலந்து கங்கை நீரையே வெண்ணிறமாக்க வேண்டும். அத்தகைய அன்ன சத்திரத்தை நான் பார்க்கும்போதுதான் என் மனத்திற்கு ஆறுதல் ஏற்படும்.'

சீடர்: 'உங்கள் மனத்தில் இத்தகைய ஆசை எழுந்துவிட்டதால் நாளடைவில் அது நடந்தே தீரும்.'

சீடரின் வார்த்தைகளைக் கேட்டதும் சுவாமிஜி சிறிது நேரம் அசையாமல் கங்கையைப் பார்த்தபடியே இருந்தார். பிறகு ஆனந்தம் பொங்கக் கூறலானார்:

'உங்களுள் யாரிடமிருந்து எப்போது சிங்கம் கர்ஜித்துக் கொண்டு எழப்போகிறதோ யார் கண்டார்கள்? உங்களுள் ஒருவரில் தேவி பராசக்தி ஆற்றலை எழுப்பிவிட்டால் இதுபோல் நூற்றுக்கணக்கான அன்ன சத்திரங்கள் தோன்றிவிடும். எல்லோரிடமும் ஞானம், சக்தி, பக்தி எல்லாமே முழுமையாக இருக்கிறது. பல்வேறு அளவுகளில் மக்களிடம் அது வெளிப்படுவதை நாம் காண்கிறோம். அந்த அளவுகளுக்கு ஏற்ப ஒருவரை உயர்ந்தவர் என்றும் இன்னொருவரைத் தாழ்ந்தவர் என்றும் எண்ணுகிறோம். மனிதனின் மனத்தில் திரை போன்ற ஒன்று தோன்றி அந்தச் சக்தியின் முழுமையான வெளிப்பாட்டை மறைத்து நிற்கிறது. அந்தத் திரை நீக்கப்பட்டால் உடனே எல்லாம் சரியாகிவிடும்! அப்போது உங்களுக்கு எது தேவையோ, நீங்கள் என்ன விரும்புகிறீர்களோ அது நடந்தே தீரும்.'

சுவாமிஜி தொடர்ந்து பேசினார்:

'இறைவனின் திருவுளம் இருக்குமானால் இந்த மடத்தை ஒரு மகா சமரச நிலையமாக ஆக்குவோம். நம் பகவான் எல்லா கொள்கைகளின் சமரச வடிவமாக விளங்கினார். இந்தச் சமரசக் கருத்தை இங்கே நாம் நிலைபெறச் செய்தோமானால் அவர் இந்த உலகில் நிலைபெற்று வாழ்வார். எல்லா மதங்களிலும் எல்லா நெறிகளிலும் உள்ளவர்களும், பிராமணர் முதல் சண்டாளர்கள் வரையில் அனைவரும் இங்கு வருமாறும், அவரவர் லட்சியத்தை இங்கே காணுமாறும் பார்த்துக்கொள்ள வேண்டும். ஸ்ரீராமகிருஷ்ணரை நான் மடத்தில் பிரதிஷ்டை செய்த அன்று, அவரது கருத்துக்கள் இந்த இடத்திலிருந்து எழுந்து அண்டசராசரங்கள் முழுவதும் பரவி நிற்பதுபோல் என் மனத்தில் தோன்றக் கண்டேன். நான் என்னால் முடிந்த அளவு செய்கிறேன், செய்வேன். நீங்களும் அவரது பரந்த கருத்துக்களை மக்களுக்கு விளக்கிச் சொல்ல வேண்டும். வெறுமனே வேதாந்தத்தைப் படித்துக்கொண்டிருப்பதால் என்ன பயன்? அந்த அத்வைதத்தின் உண்மையை நடைமுறை வாழ்க்கையில் நிரூபித்துக் காட்ட வேண்டும். சங்கரர் இந்த அத்வைதத்தைக் காடுகளிலும் மலைகளிலும் விட்டுப்போனார். அவற்றை அங்கிருந்து கொண்டுவந்து, உலக வாழ்க்கையில், மக்கள் தொழில் புரிந்து வாழும் சமுதாயத்தில் பரப்பவே நான் வந்துள்ளேன். அத்வைதத்தின் கர்ஜனை வீடுகள்தோறும் புல்வெளிகளிலும் தோப்புகளிலும் குன்றுகளிலும் சமவெளிகளிலும் கேட்க வேண்டும். நான் இதைச் சாதிக்க நீங்கள் உதவுங்கள். வேலை செய்யுங்கள்.'

சீடர்: 'சுவாமிஜி, தியானத்தின்மூலம் இந்த நிலையை அடைவதுதான் சிறப்பு என்றே எனக்குத் தோன்றுகிறது. ஓடவும் துள்ளிக் குதிக்கவும் எனக்கு விருப்பம் இல்லை.'

சுவாமிஜி: 'போதைப் பொருட்களை உண்டுவிட்டு மயங்குகிறார்களே, அதுபோன்ற நிலை இது. அத்வைதத்தால் தூண்டப்பட்டுச் சிலவேளைகளில் ஆனந்தக் கூத்தாட வேண்டும்; சில நேரங்களில் உணர்விழந்து கிடக்க வேண்டும். நல்ல பொருள் கிடைத்தால் அதைத் தனியாகத் தின்பதில் என்ன மகிழ்ச்சி இருக்கிறது? பிறருடன் பகிர்ந்து உண்ண வேண்டும். ஆன்ம அனுபூதி பெற்று, நீ முக்தி அடைந்துவிட்டாய் என்று வைத்துக் கொள்வோம். அதனால் உலகிற்கு என்ன லாபம்? மூவுலகையும் முக்தி பெறச் செய்து, உடன் அழைத்துச் செல்ல வேண்டும்.

அதன்பிறகுதான் நிலையான உண்மைப் பொருளில் நீ நிலை பெறுவாய். மகனே! அந்த இன்பத்திற்கு ஈடு சொல்ல ஏதாவது இருக்கிறதா என்ன! அப்போது நீ ''நிரவதி ககனாபம்—ஆகாசம் போன்று எல்லையே இல்லாத''[1] பேரானந்தத்தில் நிலைபெறுவாய்; உயிருள்ள, உயிரற்ற பொருட்கள் அனைத்திலும் நீயே இருப்பதைக் கண்டு திக்குமுக்காடிப் போவாய்; உலகில் உள்ள உயிருள்ள, உயிரற்ற பொருட்கள் அனைத்தையுமே உன் ஆன்மாவாக உணர்வாய். அப்போது, அனைவரையும் உன்னைப் போலவே கருதாமலிருக்க முடியாது. இதுதான் செயல்முறை வேதாந்தம். நான் சொல்வது புரிகிறதா?

'பிரம்மம் ஒன்றுதான். வியாவகார நிலையில் அது பலவாகத் தெரிகிறது. நாமம் (பெயர்), ரூபம் (உருவம்) இவையே வியாவகார நிலையின் வேர். உதாரணமாக, குடம் என்பதிலிருந்து அதன் பெயரையும் உருவத்தையும் நீக்கிவிடு. எஞ்சுவது என்ன? மண் மட்டுமே. அதுதான் உண்மை. அதுபோலவே பிரமையின் காரணமாகவே குடம், துணி, மண் இப்படிப் பலவற்றை நீ காண்கிறாய். ஞானத்திற்கு எதிரான இந்த அஞ்ஞானம் இருக்கிறதே, அதற்கென்று உண்மையான இருப்பு இல்லை. ஆனால் இந்த அஞ்ஞானத்தைச் சார்ந்துதான் உலகமே இயங்கிக் கொண்டிருக்கிறது. மனைவி, குழந்தைகள், உடம்பு, மனம் என்று இவை எல்லாமே நாமரூபங்களின் துணையுடன் அஞ்ஞானம் படைக்கின்ற உலகில்தான் காணப்படுகின்றன. இந்த அஞ்ஞானம் நீக்கப்பட்ட அந்தக் கணமே நிலையான பிரம்ம அனுபூதி கைவரப் பெறுகிறது.'

சீடர்: 'இந்த அஞ்ஞானம் எங்கிருந்து வந்தது?'

சுவாமிஜி: 'அது எங்கிருந்து வந்தது என்பதைப் பிறகு சொல்கிறேன். கயிற்றைப் பாம்பென்று நினைத்து என்ன ஓட்டம் ஓடுகிறாய்! நீ ஓடுவதாலேயே கயிறு பாம்பாக மாறிவிட்டதா? இல்லையே. உன் அறியாமைதானே உன்னை அப்படி ஓடவைத்தது?'

சீடர்: 'ஆம், அறியாமையால்தான் நான் ஓடுகிறேன்.'

சுவாமிஜி: 'சரி. பிறகு அது கயிறுதான் என்று தெரிந்ததும், முன்பு பாம்பு என்று நினைத்து நீ ஓடியதை உன் அறியாமையை நினைத்துச் சிரிக்க மாட்டாயா? எனவே நாம ரூபங்கள் எல்லாம் பொய் என்ற உணர்வு வராமல் போகுமா என்ன?'

---

1. விவேக சூடாமணி, 408.

சீடர்: 'வரவே செய்யும்.'

சுவாமிஜி: 'அப்படியென்றால் நாமரூபங்கள் பொய் என்றாகிறது. எனவே பிரம்மம் மட்டுமே உண்மையானது என்பதும் நிரூபிக்கப்படுகிறது. படைப்பில் இத்தனை வெவ்வேறு வண்ணக்கோலங்கள் இருந்தாலும் பிரம்மத்தின் இயல்பில் சிறிது மாற்றம்கூட இல்லை. மாயையின் அந்தி இருட்டினால்தான் இது மனைவி, இது குழந்தை, இது எனது, இது பிறருடையது என்று நினைக்கிறாய்; இவை அனைத்தையுமே விளங்கச் செய்வது ஆன்மா என்பதை அறிந்து கொள்ளத் தவறிவிடுகிறாய். குருவின் உபதேசத்தாலும், உன் சொந்த நம்பிக்கையாலும் இந்த நாமரூபங்களாலான பிரபஞ்சத்தைக் கடந்து, இதற்கு ஆதாரமாக இருக்கும் உண்மைப் பொருளை எப்போது பார்ப்பாயோ அப்போதுதான் புல் முதல் பிரம்மாண்டம்வரை எல்லாவற்றிலும் உன் ஆன்மாவைக் காண்பாய். அப்போதுதான் ''பித்யதே ஹ்ருதய க்ரந்திச்சித்யந்தே ஸர்வ ஸம்சயா:—இதயத்தின் முடிச்சுகள் எல்லாம் அவிழ்க்கப்படுகின்றன, எல்லா சந்தேகங்களும் நீக்கப்படுகின்றன.''[1]

சீடர்: 'சுவாமிஜி, நான் இந்த மாயையின் ஆரம்பத்தையும் முடிவையும் அறிய விரும்புகிறேன்.'

சுவாமிஜி: 'பின்னால் இல்லாமல் போகின்ற பொருள் என்றால், அது உண்மையல்ல என்பது உனக்குத் தெரியும். உண்மையாக பிரம்மத்தை அறிந்தவருக்கு அஞ்ஞானம் என்பதே இல்லாமல் போகிறது. அவர் கயிறைக் கயிறாகவே காண்கிறார்; ஒருபோதும் பாம்பாகக் காண்பதில்லை. அதைப் பாம்பாகப் பார்த்து மற்றவர்கள் கூச்சல் போடுவதைக் கண்டு அவர் சிரிக்கிறார். எனவே மாயைக்கென்று தனித்த இருப்பு கிடையாது. மாயை இருக்கிறது என்றும் சொல்ல முடியாது, இல்லை என்றும் சொல்ல முடியாது. ''ஸன்னாப்யஸன்னாப்யுபயாத்மிகா நோ—அது இருப்பதுமல்ல, இல்லாததுமல்ல, இரண்டும் சேர்ந்ததும் அல்ல.''[2] தவறு என்று உறுதி செய்யப்பட்ட ஒன்றைப் பற்றிய கேள்விகளோ அதற்குத் தரப்படும் பதில்களோ என்ன இருக்க முடியும்? அதைப்பற்றிக் கேட்கப்படும் கேள்விகளும் பொருளற்றவை. அது ஏன் என்பதை நான் விளக்குகிறேன். இந்தக் கேள்வியும், அதற்கான பதிலும் பெயர், வடிவம், காலம்,

---

1. முண்டக உபநிடதம், 2. 2. 8.
2. விவேக சூடாமணி, 109.

இடம் என்பவற்றின் அடிப்படையிலிருந்துதானே கேட்கப்படு கின்றன? இப்படிப்பட்ட கேள்விகளாலும் பதில்களாலும் காலம், இடம் இவற்றைக் கடந்து நிற்கும் பிரம்மத்தை விளக்க முடியுமா? எனவே சாஸ்திரங்களும் மந்திரங்களும் எல்லாம் வியாவகாரிக நிலையில் உண்மையானவை; பாரமார்த்திக நிலை யில் உண்மையல்ல. தனக்கென்று தெளிவான இருப்பு இல்லாத மாயையை நீ எப்படிப் புரிந்துகொள்ள முடியும்? பிரம்மம் வெளிப்படும்போதோ இதுபோன்ற கேள்விகளுக்கு இடமே இல்லை. ஸ்ரீராமகிருஷ்ணர் கூறுகின்ற சக்கிலியனின் கதையை[1] நீ கேட்டதில்லையா? அதுபோல்தான் மாயையை ஒருவன் அறிந்துகொண்டதும் அந்தக் கணமே அது மறைந்துவிடுகிறது.'

சீடர்: 'ஆனால் சுவாமிஜி, இந்த மாயை எங்கிருந்துதான் வருகிறது?'

சுவாமிஜி: 'இல்லவே இல்லாத ஒன்று எப்படி வரும்? இருந்தால் அல்லவா, வருவது!'

சீடர்: 'அப்படியானால் உயிர்களும் இந்த உலகமும் எப் படித் தோன்றின?'

சுவாமிஜி: 'இருப்பது பிரம்மம் மட்டும்தான். நாமரூபங்கள் என்ற பொய்யான திரையின்மூலம் அந்த ஒரே பிரம்மத்தையே நீ பல்வேறு வடிவங்களிலும் பெயர்களிலும் காண்கிறாய்.'

சீடர்: 'பொய்யான இந்த நாமரூபங்கள் எதற்காக? அவை எங்கிருந்து வருகின்றன?'

சுவாமிஜி: 'சாஸ்திரங்கள் இந்த நாமரூபங்களாகிய சம்ஸ்காரத்தை, அதாவது மாயையை நீர்ப் பிரவாகம்போன்ற

---

1. ஒரு பிராமணன் தனது சீடனின் வீட்டிற்குச் செல்ல விரும்பினான். தனது சுமைகளை எடுத்துச் செல்வதற்காக அவன் ஒரு கூலிக்காரனை அமர்த்த எண்ணினான். ஆனால் உயர்ந்த ஜாதிக் கூலியாள் யாரும் கிடைக்க வில்லை. எனவே ஒரு சக்கிலியனை அமர்த்தினான். தான் தீண்டத்தகாதவன் என்று கூறி முதலில் சக்கிலியன் ஒதுங்கினான். அதற்குப் பிராமணன் அவ னிடம், 'யார் என்ன சொன்னாலும் பதில் எதுவும் பேசாமல் அமைதியாக நின்றால் போதும், நீ சக்கிலியன் என்பதை யாரும் அறிந்துகொள்ள மாட் டார்கள்' என்றுகூறி மிகவும் வற்புறுத்தினான். அவனும் ஒத்துக்கொண்டு பிராமணனுடன் சென்றான். இருவரும் சீடனின் வீட்டை அடைந்தார்கள். அங்கிருந்த ஒருவன் சக்கிலியனிடம், ஓரிடத்தில் கிடந்த செருப்புகளை இன்னோரிடத்தில் வைக்கும்படிக் கூறினான். அவனோ, பிராமணன் கூறியதை எண்ணிக்கொண்டு, தான் சும்மா இருப்பதே நல்லது என்று கருதி, கேட்டும் கேட்காதவன்போல் இருந்துவிட்டான். சொன்ன அந்த மனிதன் கோபத் துடன், 'ஏனடா, நான் சொல்வது கேட்கவில்லையா? நீ என்ன சக்கிலியனா?' என்றான். அச்சமுற்ற சக்கிலியன், 'எஜமானே, என்னைக் கண்டுபிடித்து விட்டார்கள்? நான் இனி இங்கு நிற்கக் கூடாது' என்று சொல்லிக்கொண்டே ஓட்டம் பிடித்தான்.

உண்மை என்று கூறுகின்றன. ஆனால் அதற்கு முடிவு இருக்கிறது. கயிறு எப்படி எந்தவித மாற்றமும் இல்லாமல் இருக்கிறதோ, அப்படியே பிரம்மமும் தன்னியல்பு மாறாமல் இருக்கிறது. அதனால்தான், இந்தப் பிரம்மாண்டம் முழுவதுமே பிரம்மத்தின் மீது ஏற்றுச்செயல் காரணமாக இந்திர ஜாலம் போல் காணப்படுகிறது என்று வேதாந்த சாஸ்திரங்கள் முடிவாகக் கூறுகின்றன. மாயை காரணமாக பிரம்மத்தின் இயல்பு சிறிதுகூட மாறுவதில்லை. புரிகிறதா?'

சீடர்: 'ஒன்றை இன்னும் என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை?'

சுவாமிஜி: 'என்ன அது?'

சீடர்: 'உலகில் படைத்தல், காத்தல், அழித்தல் முதலியவை எல்லாம் பிரம்மத்தின்மீது ஏற்றப்பட்டிருக்கிறது, அவற்றிற்கென்று தனியான இருப்பு இல்லை என்று நீங்கள் இப்போது சொன்னீர்கள். அது எப்படி? தான் ஏற்கனவே காணாத ஒன்றைப் பற்றிய பிரமை ஒருவனுக்கு வர முடியாது. பாம்பையே பார்க்காத ஒருவன் கயிற்றைப் பார்த்துப் பாம்பென்று பயப்பட மாட்டான். உலகின் படைப்பைப் பற்றிய அனுபவம் இல்லாத ஒருவன், இந்த உலகமே பிரம்மம் என்ற தவறான கருத்துக்கு எப்படி வருவான்? எனவே படைப்பு இருக்கிறது, அதாவது இருந்தது. அதனால்தான் படைப்புபற்றிப் பிரமையை உண்டாக்குகிறது. இந்தக் கருத்து துவைதத்திற்கு இடம் அளிக்கிறது.'

சுவாமிஜி: 'நீ கூறுகின்ற படைப்பு அது இது என்று எதுவுமே காணவில்லை என்று, ஓர் ஆன்ம ஞானி எடுத்த எடுப்பிலேயே தகர்த்து எறிந்துவிடுவான். அவன் பிரம்மத்தை, பிரம்மத்தை மட்டுமே காண்கிறான். அவன் கயிற்றைத்தான் பார்க்கிறான்; பாம்பை அல்ல. நீ அவனிடம் போய், ''நான் படைப்பைத்தான் அதாவது பாம்பைத்தான் பார்க்கிறேன்'' என்று வாதம் செய்தால், உனது பார்வையில் உள்ள தவற்றை நீக்குவதற்காக கயிற்றின் உண்மைத் தன்மைகளை உனக்கு விளக்க முயற்சிப்பான். அவனுடைய விளக்கத்தின் மூலமும் உனது பகுத்தறிவின் மூலமும், கயிற்றின் அதாவது பிரம்மத்தின் இயல்பைப் புரிந்துகொள்வாயானால் பாம்பு அல்லது படைப்பு மறைந்துவிடும். அப்போது படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய பிரமைகள் பிரம்மத்தின்மீது ஏற்றப்பட்டதே என்பதைத் தவிர வேறு என்ன கூறுவாய்?'

'இந்தப் படைப்பு தொடக்கமில்லாத பிரவாகம்போல் நிகழ்ந்துகொண்டே இருக்குமானால் நிகழ்ந்துவிட்டுப் போகட்டும். அதற்கு ஒரு முடிவு காண்பதில் எந்தப் பயனும் இல்லை. உள்ளங்கை நெல்லிக்கனிபோல் பிரம்மத்தை உணரா மல் இந்தக் கேள்விக்கு முழுமையான விடை காண முடியாது. பிரம்மத்தை உணர்ந்து விட்டாலோ கேள்வியே எழாது. கேள்வி எழாதபோது பதிலின் தேவையும் இல்லை. அப்போது பிரம்மத் தின் உண்மை நிலையை உணர்வது என்பது ''மூகாஸ்வாதன வத்[1]—ஊமை கண்ட சுவைபோல்'' வெளிப்படுத்த முடியாத தாகிவிடுகிறது.'

சீடர்: 'அப்படியென்றால் இவ்வளவு ஆராய்ந்து என்ன பயன்?'

சுவாமிஜி: 'இதனைப் புரிந்துகொள்வதற்குத்தான். ஆனால் உண்மை என்பது ஆராய்ச்சிகளையெல்லாம் கடந்தது; ''நைஷா தர்க்கேண மதிராபனேயா—அந்த உறுதியை வாதத்தின் மூலம் அடைய முடியாது.''[2]

இப்படிப் பேசியபடியே சுவாமிஜி சீடருடன் மடத்தை அடைந்தார். பிறகு அங்கிருந்த சன்னியாசிகளிடம் தமக்கும் சீடருக்கும் புதிய மடத்தின் அருகே நடந்த உரையாடலைச் சுருக்கமாகக் கூறினார். பின்னர் மாடிப்படிகளில் ஏறியபடியே சீடரிடம், ''நாயமாத்மா பலஹீனேன லப்ய:—ஆன்மா பல வீனர்களால் அடையப்படுவதில்லை'' என்று கூறினார்.

## 22

பேலூரில் வாடகை மடம், 1899

பொதுமக்களிடம் ஸ்ரீராமகிருஷ்ணரின் கருத்துக்களைப் பரப்ப, சுவாமிஜியின் மேற்பார்வையில், சுவாமி திரிகுணாதீ தானந்தர் மாதம் இருமுறை வெளிவரும் 'உத்போதன்' என்னும் வங்காளப் பத்திரிகையைத் துவக்கி இருக்கிறார். அதன் முதல் இதழ் வெளியிடப்பட்டுள்ளது. சீடர் நீலாம்பர் பாபுவின் தோட்ட வீட்டில் இருந்த மடத்திற்கு ஒருநாள் வந்தார். சுவாமிஜி உத்போதன் பத்திரிகையைப்பற்றிக் கீழ்வரும் உரையாடலைத் துவக்கினார்.

சுவாமிஜி (உத்போதன் என்னும் சொல்லை வேடிக்கையாக உச்சரித்து): 'உத்பந்தனைப்[3] பார்த்தாயா?'

---

1. நாரத பக்தி சூத்திரங்கள், 52.
2. கடோபநிடதம், 1. 2. 9.
3. தூக்கில் தொங்கித் தற்கொலை செய்துகொள்ளல்.

சீடர்: 'பார்த்தேன், நன்றாக இருக்கிறது.'

சுவாமிஜி: 'இந்தப் பத்திரிகையின் கருத்து, மொழி அமைப்பு எல்லாவற்றையும் ஒரு புதிய முறையில் அமைக்க வேண்டும்.'

சீடர்: 'எப்படி?'

சுவாமிஜி: 'ஸ்ரீராமகிருஷ்ணரின் கருத்துக்களை எல்லோருக்கும் கொடுத்தேயாக வேண்டும். அத்துடன் வங்க மொழியில் ஒரு புதிய வேகத்தைப் புகுத்த வேண்டும். உதாரணமாக வினைச் சொல்லை அடிக்கடிப் பயன்படுத்துவது ஒரு மொழியின் வேகத்தைக் கெடுத்துவிடுகிறது. பெயரெச்சங்களைப் பயன் படுத்தி வினைச்சொற்களைப் பயன்படுத்துவதைக் குறைக்க வேண்டும். அந்த வகையில் கட்டுரை எழுது. என்னிடம் காட்டி விட்டு, உத்போதனில் வெளியிடக் கொடு.'

சீடர்: 'சுவாமிஜி, அந்தப் பத்திரிகையை நடத்துவதற்காக சுவாமி திரிகுணாதீதானந்தர் உழைப்பதுபோல் வேறு யாராலும் உழைக்க முடியாது.'

சுவாமிஜி: 'ஸ்ரீராமகிருஷ்ணரின் சன்னியாசிக் குழந்தைகள் மரத்தடியில் உட்கார்ந்து, நெருப்பை மூட்டிக் கொண்டிருப் பதற்கு மட்டும் பிறந்திருப்பதாகவா நினைக்கிறாய்? அவர்களில் யாராவது ஒருவர் ஒரு வேலையை எடுத்துக் கொண்டால், அவர்கள் அந்த வேலையைச் செய்யும் திறமையைப் பார்த்து மக்கள் திகைத்து நிற்பார்கள். எப்படி வேலை செய்வது என் பதை அவர்களிடமிருந்து கற்றுக்கொள். பாரேன். என் கட்டளையை ஏற்றுக்கொண்டு, அதற்காகத் தனது ஆன்மீக சாதனை, தியானம் முதலிய எல்லாவற்றையும் விட்டுவிட்டு இந்த வேலையிலேயே மூழ்கிவிட்டான் அவன். இது என்ன சாதாரணமான தியாகமா? அவன் என்னிடம் கொண்டுள்ள அளவற்ற அன்புதான் இதற்கு அடிப்படையாக உள்ளது! வெற்றி யடையாமல் அவன் நிற்க மாட்டான். உங்களிடம் இத்தகைய உறுதி இருக்கிறதா?'

சீடர்: 'ஆனால் காவியுடை அணிந்த சன்னியாசி, இல் லறத்தார்களின் வீடுவீடாக ஏறி இறங்குவது அவ்வளவு நன்றாக இல்லை.'

சுவாமிஜி: 'ஏன்? பத்திரிகை நடத்துவதே இல்லறத்தார் களின் நன்மைக்காகத்தான். நாட்டில் புதிய கருத்துக்களைப் பரப்புவதால் சாதாரண மக்களுக்கு நன்மை உண்டாகும். சுய நலமற்ற இந்த வேலை, தியானம் முதலிய சாதனைகளைவிடக்

சீழானது என்றா நினைக்கிறாய்? எங்கள் லட்சியம் மனித சமுதாயத்திற்கு நன்மை செய்வது. இந்தப் பத்திரிகையின் வாயிலாக லாபம் சம்பாதிக்க வேண்டும் என்னும் எண்ணம் எங்களுக்கு இல்லை. நாங்கள் எல்லாவற்றையும் துறந்த சன்னியாசிகள். எங்களுக்கு மனைவியோ குழந்தைகளோ இல்லை. நாங்கள் செத்த பிறகு யாருக்காகவும் எதுவும் வைக்க வேண்டியது இல்லை. இந்தப் பத்திரிகை நன்றாக நடந்து லாபம் வந்தால் அந்தப் பணம் முழுவதும் மனித சமுதாயத்தின் சேவைக்காகவே செலவிடப்படும். இதிலிருந்து கிடைக்கும் அதிகமான தொகை நாட்டின் பல பகுதிகளில் மடங்கள் ஏற்படுத்தவும், சேவாசிரமங்கள் அமைக்கவும் இதுபோன்ற இன்னும் எவ்வளவோ காரியங்களுக்காகச் செலவிடப்படும். இல்லறத்தார்களைப் போல் எங்கள் பைகளை நிரப்பிக்கொள்ளும் நோக்கத்தோடு நாங்கள் எதையும் செய்யவில்லை. நன்றாகத் தெரிந்துகொள், எங்கள் இயக்கத்தின் ஒவ்வொரு காரியமும் மற்றவர்களின் நன்மைக்காகவே.'

சீடர்: 'இருந்தாலும் எல்லோரும் இதைப் புரிந்துகொள்வார்கள் என்று சொல்ல முடியாது.'

சுவாமிஜி: 'அவர்கள் புரிந்துகொள்ளவில்லை என்றால் என்ன? அதனால் எங்களுக்கு லாபமோ நஷ்டமோ எதுவும் இல்லை. விமர்சனங்களைக் கணக்கிட்டு நாங்கள் எந்த வேலையையும் செய்வதில்லை.'

சீடர்: 'இந்தப் பத்திரிகை இப்போது பதினைந்து நாட்களுக்கு ஒருமுறை வருகிறது. அது வாரந்தோறும் வர வேண்டுமென்று விரும்புகிறோம்.'

சுவாமிஜி: 'அப்படித்தான் வர வேண்டும். ஆனால் பணம் எங்கே இருக்கிறது? குருதேவரின் திருவருளால் பணம் கிடைக்குமானால் எதிர்காலத்தில் அதைத் தினசரியாகவே ஆக்கிவிடலாம். தினந்தோறும் லட்சம் பத்திரிகைகள் அச்சிட்டு, கல்கத்தாவின் தெருக்கள்தோறும் இலவசமாகவே தரலாம்.'

சீடர்: 'தங்களின் இந்த எண்ணம் மிகவும் சிறந்ததாக உள்ளது.'

சுவாமிஜி: இந்தப் பத்திரிகைக்குப் போதுமான பணம் திரட்டப் பட்டதும் உன்னை அதன் ஆசிரியராக அமர்த்த எண்ணியுள்ளேன். எந்தத் தொழிலையும் தன்னந்தனியாக லாபகரமாக நடத்தும் திறமை உங்களுக்கு இன்னும் வரவில்லை. அப்படிச் செய்வது, எல்லாவற்றையும் தியாகம் செய்த

சன்னியாசிகளுக்காக மட்டுமே ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கிறது. அவர்கள் வேலை செய்துசெய்தே சாகவும் நேரலாம். என்றாலும் எடுத்த வேலையை விடுவார்கள் என்ற பேச்சே இல்லை. ஆனால் ஒரு சிறு எதிர்ப்பு, ஒரு சிறிய விமர்சனம் போதும், உங்களுக்கு எல்லாம் இருள் சூழ்ந்ததாகிவிடும்.'

சீடர்: 'அன்றைக்கு நான் சுவாமி திரிகுணாதீதானந்தரைப் பார்த்தேன். அச்சகத்தில் வேலையைத் தொடங்குவதற்கு முன்னால் அவர் ஸ்ரீராமகிருஷ்ணரின் படத்தை வழிபட்டார்; அந்த வேலை வெற்றிகரமாக நடைபெற உங்கள் ஆசிகளை வேண்டினார்.'

சுவாமிஜி: 'ஸ்ரீராமகிருஷ்ணரே நமது மையம். நாங்கள் ஒவ்வொருவரும் அந்த மையத்தின் ஒளிக்கிரணங்கள். சாரதா (திரிகுணாதீதானந்தர்) வேலையை ஆரம்பிக்குமுன் ஸ்ரீராம கிருஷ்ணரை வழிபட்டான் அல்லவா? அது நல்லது. ஆனால் அதுபற்றி அவன் என்னிடம் ஒன்றும் சொல்லவில்லை.'

சீடர்: 'அவர் உங்களிடம் பயப்படுகிறார். பத்திரிகையின் முதல் இதழ் எப்படி இருக்கிறது என்று உங்கள் கருத்தைக் கேட்கும்படி என்னிடம் சொன்னார். என்மூலம் அதுபற்றி அறிந்தபிறகு உங்களை வந்து பார்ப்பதாகச் சொன்னார்.'

சுவாமிஜி: 'அவனுடைய வேலை குறித்து நான் அளவற்ற மகிழ்ச்சி அடைவதாகப் போய்ச் சொல். எனது அன்பையும் ஆசிகளையும் சொல். உங்களால் முடிந்த அளவுக்கு அவனுக்கு அந்த வேலையில் உதவுங்கள். அப்படிச் செய்தால் நீங்கள் ஸ்ரீராமகிருஷ்ணரின் வேலையைச் செய்கிறீர்கள்.'

இதைச் சொல்லிவிட்டு சுவாமிஜி, சுவாமி பிரம்மானந்தரை அழைத்தார். உத்போதனுக்குத் தேவைப்பட்டால் பணம் கொடுக்கும்படிக் கூறினார்.

அன்று இரவு உணவிற்குப் பிறகு சுவாமிஜி உத்போதன் பற்றிப் பின்வருமாறு பேசினார்:

'உத்போதனில் உடன்பாட்டுக் கருத்துக்களை மட்டுமே மக்களுக்கு நாம் தர வேண்டும். எதிர்மறையான கருத்துக்கள் மனிதனைப் பலவீனப்படுத்தும். எங்கே பெற்றோர்கள் எப் போது பார்த்தாலும் பிள்ளைகளைப் படிக்குமாறு வற்புறுத்திக் கொண்டிருக்கிறார்களோ, ''இவர்களால் எந்தப் பயனும் இல்லை, முட்டாள்கள், மடையர்கள்'' என்று திட்டிக் கொண் டிருக்கிறார்களோ அந்தப் பிள்ளைகள் பின்னால் பலவேளை களில் அதுபோலவே ஆகிவிடுகிறார்கள். நீ சிறுவர்களிடம்

அன்பான வார்த்தைகளைப் பேசி உற்சாகம் தந்தால் நாளடை வில் அவர்கள் நன்றாகப் படிப்பார்கள். கல்வியில் எந்த முறை சிறுவர்களுக்குப் பயன் தருகிறதோ, அதே முறை உயர்ந்த கருத்துக்களை உபதேசிப்பதிலும் பயன் தரும். உடன்பாடான கருத்துக்களைக் கொடுத்தீர்களானால் சாதாரணமானவர் களும் மனிதர்கள் ஆவார்கள். சொந்தக் கால்களிலேயே நின்று காரியங்களைச் செய்யவும் கற்றுக் கொள்வார்கள். மொழி, இலக்கியம், தத்துவம், கவிதை, கலை முதலிய எதிலும் மக்களின் தவறுகளையே சொல்லிக் கொண்டிருக்கக் கூடாது. படிப்படி யாக அந்தக் காரியங்களை நல்லமுறையில் செய்யும் வகையை அவர்களுக்குப் போதிக்க வேண்டும். குற்றங்களைச் சுட்டிக் காட்டுவது மனிதர்களின் உணர்ச்சியைப் பாதிக்கும். ''நாங்கள் ஒன்றுக்குமே பயனில்லாதவர்கள்'' என்று நினைப்பவர்களைக் கூட ஸ்ரீராமகிருஷ்ணர் உற்சாகமூட்டி, அவர்களின் வாழ்க்கை யையே மாற்றியதை நாங்கள் பார்த்திருக்கிறோம். அவருடைய உபதேச முறை இணையற்ற அற்புதம் வாய்ந்தது.'

சிறிது நேர அமைதிக்குப் பிறகு சுவாமிஜி கூறினார்: 'மதத்தைப் பரப்புவது என்றாலே ஒவ்வொருவர் மீதும், ஒவ் வொன்றின் மீதும் குறை சொல்வதே என்று நினைத்துக் கொள் ளாதே. உடல், மனம், ஆன்மீகம் ஆகிய ஒவ்வொரு நிலையிலும் மனிதர்களுக்கு உடன்பாட்டுக் கருத்துக்களையே தர வேண்டும். யாரையும் வெறுக்கக் கூடாது. நீங்கள் ஒருவரை ஒருவர் வெறுத்த தால்தான் இவ்வளவு இழிநிலையை அடைந்திருக்கிறீர்கள். இப்போது உடன்பாட்டுக் கருத்துக்களை மட்டுமே பரப்பி மனிதர்களை உயர்த்த வேண்டும். முதலில் இந்த வகையில் இந்துக்களை எழுச்சி பெறச் செய்ய வேண்டும். பிறகு உலகம் முழுவதையுமே விழிப்புறச் செய்ய வேண்டும். அதற்காகத் தான் ஸ்ரீராமகிருஷ்ணர் அவதாரம் செய்தார். உலகில் யாரு டைய கருத்தையும் அவர் அழித்ததில்லை. மிகமிகக் கீழ் நிலையிலுள்ள மனிதர்களுக்குக்கூட அவர் நம்பிக்கையும் உற்சாகமும் தந்து உயர்த்தி இருக்கிறார். நாம் அவரது வழியைப் பின்பற்றி அவர்களை மேலே தூக்கி உற்சாகப்படுத்த வேண்டும், புரிகிறதா?

'உங்கள் வரலாறு, இலக்கியம், புராணங்கள் என்று எல்லா சாஸ்திரங்களுமே மக்களைப் பயமுறுத்த மட்டுமே செய்கின்றன. ''நரகத்திற்குத்தான் போவாய். உனக்குக் கதியே இல்லை'' என்றே அவை மனிதர்களிடம் சொல்கின்றன. அதனால்தான்

இந்தவிதமான மந்தநிலை இந்தியாவின் நாடி நரம்புகளுக்குள் புகுந்துவிட்டது. எனவே வேத வேதாந்தங்களின் உயர்ந்த கருத்துக்களை எளிய மொழியில் எல்லோருக்கும் எடுத்துச் சொல்ல வேண்டும். ஒழுக்கம், நன்னடத்தை, கல்வி முதலிய வற்றை அளித்துச் சண்டாளர்களையும் பிராமணர்களின் நிலைக்கு உயர்த்த வேண்டும். உற்சாகம் பெற்று எழுந்திரு. இவற்றையெல்லாம் உத்போதனில் எழுது. இளைஞர்கள், வயதானவர்கள், ஆண், பெண் அனைவரையும் ஆற்றல் பெற்று எழுந்திருக்கச் செய். அதன் பிறகுதான் உன் வேத வேதாந்தப் படிப்பு வெற்றி பெற்றதாக நான் கருதுவேன். என்ன சொல் கிறாய்? இதை உன்னால் செய்ய முடியுமா?'

சீடர்: 'உங்கள் ஆசிகளும் கட்டளையும் இருந்தால் நான் வெற்றி பெறுவேன் என்றே நினைக்கிறேன்.'

சுவாமிஜி: 'மற்றொன்று. உடம்பை நல்ல வலிமையுள்ள தாக வைக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். அதை மற்றவர் களுக்கும் கற்றுத் தர வேண்டும். இப்போதுகூட நான் தினமும் ''டம்ப்பெல்'' (Dumb-bell) தூக்கி உடற்பயிற்சி செய்வதை நீ பார்க்கவில்லையா? காலையும் மாலையும் நடைப்பயிற்சி செய். கடினமான உடல் வேலைகளில் ஈடுபடு. உடலுக்கும் மனத் திற்கும் சரிசமமாகப் பயிற்சி தர வேண்டும். எல்லாவற்றிற்கும் மற்றவர்களை எதிர்பார்த்தால் எப்படி முன்னேறுவாய்? உடம்பை வலிமையாக வைத்திருக்க வேண்டுவதன் அவசியத்தை மக்கள் அறிந்துகொள்ளும்படிச் செய்தால், பிறகு அவர்களே அதைச் செய்து கொள்வார்கள். இந்த வகையான கல்விதான் இப்போது தேவை.'

## 23

கட்டிட வேலை நடைபெறும் பேலூர் மடம், 1898

சீடர்: 'சுவாமிஜி! நீங்கள் ஏன் இந்த நாட்டில் சொற்பொழி வாற்றுவதில்லை? அமெரிக்காவையும் ஐரோப்பாவையும் உங்கள் சொற்பொழிவால் கிளர்ந்து எழும்படிச் செய்தீர்கள். இந்த நாட்டிற்கு வந்தபிறகு பேசாமல் இருக்கிறீர்களே! இங்கு தான் அதன் தேவை அதிகம் என்று எனக்குத் தோன்றுகிறது?'

சுவாமிஜி: 'இந்த நாட்டில் முதலில் நிலத்தைப் பண்படுத்த வேண்டும். அதன்பிறகு விதைத்தால்தான் விளைச்சல் நன்றாக இருக்கும். ஐரோப்பாவும் அமெரிக்காவும்தான் பண்பட்டு, விதைகளைத் தூவ ஏற்றதாக, வளமாக இருக்கிறது. அங்கே

மக்கள் போகத்தின் உச்சியில் இருக்கிறார்கள். சுகபோகங்களில் நிறைவு கண்டுவிட்டதால் அவர்களின் மனம் அதில் இப்போது திருப்தி காணவில்லை. பயங்கரமான வெறுமையை அவர்கள் உணர்கிறார்கள். இந்த நாட்டில் போகமுமில்லை, யோகமும் இல்லை. போக நாட்டம் சிறிது குறைந்தால்தானே யோகத்தைப் பற்றிக் கேட்கவும் புரிந்துகொள்ளவும் முடியும்! போதிய உணவின்மையால் உடம்பும் மனமும் இளைத்துக் கிடக்கிறது. நோய், துன்பம், வறுமை என்று இவற்றின் பிறப்பிடமாக இருக்கும் இந்த நிலையில் இங்கு சொற்பொழிவுகளால் என்ன பயன்?'

சீடர்: 'அது எப்படி? நம் நாடு தர்மபூமி. இங்குதான் மக்கள் வேறு எங்கும் இல்லாத அளவு மதத்தைப் பற்றியெல்லாம் புரிந்துகொள்கிறார்கள், செயல்முறையில் கடைப்பிடிக்கிறார்கள் என்று நீங்களே சொன்னீர்கள். பிறகு ஏன் இந்த நாட்டிற்கு உங்கள் எழுச்சி மிக்க சொற்பொழிவால் பயன் விளையாமல் போகும்?'

சுவாமிஜி: 'மதம் ஆகட்டும், ஆன்மீகம் ஆகட்டும் முதலில் வயிறு நிறைந்தால் பிறகுதான் எல்லாம். முதலில் கூர்ம (ஆமை) அவதார வழிபாடு, அதாவது வயிற்றுக் கடவுள் வழிபாடு. வயிற்றுக் கடவுளை திருப்திப் படுத்தாதவரையில் யாரும் உன் சொற்பொழிவைக் கேட்க மாட்டார்கள். இந்த வயிற்றுப் பிரச்சினையை எப்படிச் சமாளிப்பது என்பதிலேயே இந்தியா நிலைகுலைந்து கிடப்பதை நீ காணவில்லையா! வெளிநாட்டுக்காரர்களின் விரோதம், வரையறை இல்லாத ஏற்றுமதி, இவற்றை விட இங்குள்ள மக்களிடம் காணப்படுவதான அடிமைகளுக்கே உரிய பயங்கரமான பொறாமை இவை எல்லாம் இந்தியாவின் உயிர்ச்சக்தியைத் தின்றுகொண்டிருக்கிறது. எனவே மதத்தைப் போதிக்க விரும்பினால் முதலில் மக்களின் வயிற்றுப் பிரச்சினைக்கு வழி செய். இல்லாவிட்டால் சொற்பொழிவு மற்றும் அதுபோன்ற காரியங்களால் விசேஷ பயன் எதுவும் உண்டாகாது.'

சீடர்: 'அதற்கு நாம் இப்போது என்ன செய்யலாம்?'

சுவாமிஜி: 'தங்களைப்பற்றி நினைக்காமல் மற்றவர்களுக்காகத் தங்கள் வாழ்வையே தியாகம் செய்யத் தயாராக இருக்கின்ற தியாகிகளான சில இளைஞர்கள் முதலில் வேண்டும். அத்தகைய இளம் சன்னியாசிகளை உருவாக்கத்தான் இந்த மடத்தை அமைக்கிறேன். பயிற்சி முடிந்ததும் அவர்கள்

வீடுவீடாகச் சென்று மக்கள் தங்கள் பரிதாப நிலையை உணரச் செய்வார்கள்; அதிலிருந்து விடுபட்டு வளமாக வாழ்வதற்கான வழிகளைக் கூறுவார்கள்; அத்துடன் மதத்தின் உயர்ந்த உண்மைகளை அவர்கள் புரிந்துகொள்ளும்படிச் சுலபமாக எடுத்துக் கூறுவார்கள். உங்கள் நாட்டுப் பாமர மக்கள் உறைந்து கிடக்கின்ற எரிமலைக் குழம்புபோல் இருக்கிறார்கள். தற்போதைய பல்கலைக் கழகங்கள் தருகின்ற கல்வி பாமர மக்களில் ஒன்று அல்லது இரண்டு சதவீதத்தினருக்கே சென்று சேர்கிறது. அப்படிப் பெறுபவர்களிலும் ஒருவரால்கூட நாட்டிற்கு நன்மை செய்வதில் வெற்றி பெற முடியவில்லை. அவர்கள் என்ன செய்வார்கள் பாவம்! கல்லூரியிலிருந்து வெளிவரும்போது ஏழு குழந்தைகளுக்குத் தந்தைகளாகி விட்டிருப்பார்கள். பிறகு எப்படியோ முயன்று ஓர் எழுத்தர் வேலை, மிக அதிகமாகப் போனால் ஒரு வக்கீல் வேலை! அவ்வளவுதான் அவர்களால் முடியும். அவர்கள் பெற்ற கல்வியின் பலன் இதுதான். குடும்ப பாரத்தைச் சுமந்துகொண்டு, மகத்தான காரியங்களைச் செய்யவோ உயர்ந்த சிந்தனைகளை நினைக்கவோ நேரம் ஏது? தங்கள் சொந்தத் தேவைகளையே நிறைவேற்றிக்கொள்ள முடியவில்லை; மற்றவர்களுக்காக என்ன செய்வார்கள்?'

சீடர்: 'அப்படியானால் வேறு வழியே இல்லையா?'

சுவாமிஜி: 'நிச்சயமாக இருக்கிறது. இது சனாதன தர்மத்தின் பூமி. அது வீழ்ச்சியடைந்துவிட்டது, அதில் சந்தேகமில்லை. ஆனால் அது நிச்சயம் மீண்டும்எழும். எழுந்து நிற்கும் அதன் மகிமை உலகம் முழுவதையுமே பிரமிக்க வைக்கும். கடலில் பெரிய அலைகள் எந்த அளவு கீழே விழுகிறதோ அந்த அளவு உயரத்திற்கு அதைவிட ஆற்றலோடு மறுபடியும் எழுவதை நீ கண்டதில்லையா? இங்கும் அப்படியே நடக்கும். கீழ்வானம் சிவந்துவிட்டது. சூரியன் இன்னும் சிறிது நேரத்தில் உதித்துவிடுவான். நீங்கள் இப்போது வரிந்துகட்டிக் கொண்டு தோள் கொடுங்கள். இல்லற வாழ்க்கையால் என்ன பயன்? இப்போது உங்கள் கடமை, கிராமம் கிராமமாகச் சென்று, ''வெறுமனே உட்கார்ந்திருப்பதால் இனி ஒன்றும் செய்ய முடியாது'' என்பதை மக்களிடம் எடுத்துக் கூறுவதுதான். கல்வியற்ற, மதமிழந்த நிலையை அவர்களிடம் எடுத்துச் சொல்லி, ''ஓ சகோதரர்களே! எல்லோரும் எழுந்திருங்கள், விழித்துக் கொள்ளுங்கள். எவ்வளவு காலம் தூக்கத்திலே நீங்கள் ஆழ்ந்து கிடப்பீர்கள்?'' என்று அவர்களை விழிப்புணர்த்துங்கள்.

சாஸ்திரங்களின் நுட்பமான கருத்துக்களை அவர்கள் புரிந்து கொள்ளும் வழியில் எளிமையாகச் சொல்லுங்கள். இதுவரையில் பிராமணர்கள் மதத்தைத் தங்கள் கைகளுக்குள் வைத்திருந்தார்கள். காலத்தின் மாறுதலுக்கு முன்னால் அவர்களால் நிற்க முடியவில்லை. எனவே இந்த நாட்டில் உள்ள ஒவ்வொருவருமே மத அறிவைப் பெறுவதற்கான நடவடிக்கைகளை எடுங்கள். பிராமணனுக்கு எந்த அளவு மதத்தில் உரிமை உள்ளதோ அந்த அளவு மற்றவர்களுக்கும் உரிமை உண்டு என்பதை எல்லோருடைய மனத்திலும் உறுதிப்படுத்துங்கள். இந்த அக்கினி மந்திரத்தைச் சண்டாளர்கள் முதல் அனைவருக்கும் கொடுங்கள். அதோடு வாழ்க்கைத் தேவைகளான வியாபாரம், விவசாயம் முதலியவை பற்றியும் எளிய முறையில் சொல்லித் தாருங்கள். நீங்கள் இதைச் செய்யாவிட்டால் உங்கள் கல்வி நாசமாகப் போக வேண்டிய கல்வி; உங்கள் வேத வேதாந்தப் படிப்பு நாசமாகப் போகவேண்டிய படிப்பு!'

சீடர்: 'ஆனால் எங்களிடம் வலிமை எங்கே இருக்கிறது? சுவாமிஜி, உங்களிடம் இருக்கும் சக்தியில் நூறில் ஒரு பங்கு என்னிடம் இருந்தால் நான் பாக்கியசாலி ஆவேன்; பிறரையும் பேறு பெற்றவர்கள் ஆக்குவேன்.'

சுவாமிஜி: 'முட்டாளே, சக்தியும் மற்றவையும் பிறர் தந்து வருபவையா என்ன? அது உனக்குள்ளேயே உள்ளது. காலம் வரும்போது தானாக வெளிப்படும். நீ வேலையைத் தொடங்கு. பிறகு பார். உன்னாலேயே தடுக்க முடியாத அளவு சக்தி வெளிப்படுவதைக் காண்பாய். பிறருக்காக ஒருசிறிதே வேலை செய்தாலும் அது நம்மிடம் சக்தியைக் கிளர்ந்தெழச் செய்யும். மற்றவர்களின் நன்மையை நினைத்துக் கொண்டிருப்பதுகூட மனத்தில் சிங்கத்தின் வலிமையை உண்டாக்கும். உங்களை நான் எவ்வளவோ நேசிக்கிறேன். ஆனால் பிறரது நன்மைக்காக வேலை செய்துசெய்து நீங்கள் இறந்துபோவதையே விரும்புகிறேன். அது எனக்கு மிகுந்த மகிழ்ச்சி தரும்.'

சீடர்: 'நாங்கள் செத்துப்போனால் எங்களை நம்பி வாழ்பவர்களின் கதி என்ன ஆவது?'

சுவாமிஜி: 'நீ உன் வாழ்க்கையைப் பிறருக்காகத் தியாகம் செய்யத் தயாரானால், உன்னைச் சார்ந்தவர்களுக்குக் கடவுள் நிச்சயமாக வழி செய்வார். ''ந ஹி கல்யாண க்ருத்கச்சித்துர்கதிம் தாத கச்சதி—மகனே, நன்மை செய்பவன் ஒருபோதும் துயரப்பட மாட்டான்'' என்று கீதை சொல்வதைப் படித்ததில்லையா?

சீடர்: 'படித்திருக்கிறேன்.'

சுவாமிஜி: 'முக்கியமானது தியாகம்தான். தியாகம் இல்லாமல் ஒருவனால் தன் இதயம் முழுவதையும் அர்ப்பணித்து, பிறருக்காக வேலை செய்ய முடியாது. தியாகி எல்லோரையும் சமமாகக் காண்கிறான்; எல்லோருடைய சேவையிலும் ஈடுபடுகிறான். எல்லோரையும் சமமாகக் காணும்படி வேதாந்தம் கூறுவதை நீ படித்திருக்கிறாயே! அப்படி இருக்கும்போது எதற்காக மற்றவர்களைவிட, உன் மனைவிமக்களிடம் அதிகக் கவனத்தைச் செலுத்துகிறாய்! உன் வாசற்படியில் நாராயணனே பிச்சைக்காரனின் வடிவத்தில் செத்துக் கொண்டிருக்கிறான். அவனுக்கு ஏதாவது கொடுப்பதற்குப் பதில் உன் மனைவிக்கும் மக்களுக்கும் சுவையான விருந்தைக் கொடுத்துக் கொண்டிருப்பாயா? அது மிருகத்தனம் இல்லையா?'

சீடர்: 'பிறருக்காக உழைக்கும்போது சில நேரங்களில் நிறைய பணம் தேவைப்படும். அதற்கு நான் எங்கே போவேன்?'

சுவாமிஜி: 'உன்னால் இயன்ற அளவு செய். உன்னிடம் பணம் இல்லையென்றால் பணத்தால் உதவி செய்ய வேண்டாம். ஆறுதல் தருகின்ற இரண்டு வார்த்தைகளை இதமாகப் பேச முடியும் அல்லவா? அதற்குக் கூடவா பணம் வேண்டும்?'

சீடர்: 'இல்லை. அதை நான் செய்ய முடியும்.'

சுவாமிஜி: 'முடியும் என்று சொல்வாய். ஆனால் செய்ய மாட்டாய். செய்ய முடியும் என்பதைச் செயலில் காட்டு; அப்போதுதான் நீ என்னிடம் வருவது பலன் தந்திருக்கிறது என்பதை நான் அறிவேன். செயலில் ஈடுபடு. வாழ்க்கைதான் எத்தனை நாள்! நீ இந்த உலகிற்கு வந்துள்ளாய். ஓர் அடையாளத்தை விட்டுச் செல். இல்லையென்றால் உனக்கும் இந்த மரங்களுக்கும் கற்களுக்கும் என்ன வித்தியாசம்? அவையும் தோன்றுகின்றன, வாழ்கின்றன, சாகின்றன. அதுபோல் பிறந்து சாவதற்கு மனிதனானவன் விரும்புவானா என்ன! நீ வேதாந்தம் படித்தது பயன் தந்தது என்பதை எனக்குக் காட்டு. எல்லோரிடமும் சென்று, ''உங்கள் ஒவ்வொருவரிடமும் எல்லையற்ற சக்தி இருக்கிறது, அதனை எழுப்புங்கள்'' என்று முழங்கு. சொந்த முக்தியில் என்ன இருக்கிறது? முக்தியை நாடுவது என்பது முழுக்க முழுக்கச் சுயநலம். உன் தியானத்தைத் தூக்கி எறி, உன் முக்தி அது இது என்று எல்லாவற்றையும் தூக்கி எறி! நான் எந்த வேலைகளில் ஈடுபட்டிருக்கிறேனோ அந்த வேலைகளில் உன்னையும் அர்ப்பணம் செய்.'

சீடர் இந்த உணர்ச்சிமிக்க வார்த்தைகளைத் திகைப்புடன் கேட்டுக்கொண்டிருந்தார். சுவாமிஜி தொடர்ந்து பேசினார்:

'நீங்கள் முதலில் நிலத்தைப் பண்படுத்துங்கள். உரிய காலத்தில் என்னைப்போல் ஆயிரக்கணக்கான விவேகானந்தர் கள் தோன்றிச் சொற்பொழிவு செய்வார்கள். அதைப்பற்றி நீ கவலைப்பட்டுக் கொண்டிருக்க வேண்டாம். எங்களுள் (ஸ்ரீராமகிருஷ்ணரின் சீடர்கள்) சிலரையே எடுத்துக் கொள் ளேன். முதலில் தங்களிடம் ஆற்றல் இல்லை என்றெல்லாம் எப்படிப் பயந்தார்கள்! இன்று அவர்களே எத்தனை அனாதை இல்லங்கள், பஞ்ச நிவாரண மையங்கள் என்று ஆரம்பித்துள் ளார்கள் பார். நிவேதிதை ஐரோப்பியப் பெண்ணாக இருந்தும், உங்களுக்குச் சேவை செய்வது எப்படி என்பதைக் கற்று, மிக வும் சாதாரண வேலைகளைக்கூடச் செய்வதை நீ பார்க்க வில்லையா? இந்தியர்களாகிய நீங்கள் இந்த நாட்டு மக்களுக்கு அதுபோன்று சேவை செய்யக் கூடாதா? எங்கெல்லாம் தொற்று நோய்களும் பஞ்சமும் துயரமும் மக்களை வாட்டுகின்றனவோ அங்கெல்லாம் செல்லுங்கள். மிக அதிகமாகப் போனால் இந்த முயற்சியில் நீங்கள் செத்துப் போகலாம். அதனால் என்ன? உன்னையும் என்னையும்போல் எத்தனைபேர் புழுக்களைப் போல் பிறந்து செத்துக் கொண்டிருக்கிறார்கள். இதனால் உலகத்தில் என்ன பெரிய மாறுதல் ஏற்பட்டுவிட்டது? உயர்ந்த லட்சியத்திற்காக உயிரை விடு. நீ இறந்தேயாக வேண்டும். தப்ப முடியாது. அப்படி இருக்கும்போது ஒரு மகத்தான லட்சியத் திற்காக உயிரை விடு. இந்தக் கருத்தை வீடுவீடாகச் சென்று பரப்பு. இதனால் நீயும் நன்மை அடைவாய்; உன் நாட்டிற்கும் நல்லது செய்தவனாவாய். நாட்டின் எதிர்கால நம்பிக்கையே உங்களிடம்தான் உள்ளது. நீங்கள் எல்லாம் ஒன்றுமே செய் யாமல் இருப்பதைக் காண நான் மிகவும் வேதனைப்படுகிறேன். வேலை செய்யத் தொடங்கு, வேலை செய்யத் தொடங்கு. தாமதிக்காதே. ஒவ்வொரு நாளும் சாவு நெருங்கி வந்து கொண்டே இருக்கிறது. பின்னால் பார்த்துக் கொள்ளலாம் என்று சோம்பேறியாக உட்கார்ந்திருக்காதே! அதனால் ஒன்றுமே நடக்காது.'

## 24

கட்டிட வேலை நடைபெறும் பேலூர் மடம், 1898

சீடர்: 'சுவாமிஜி! ஞானத்தையும் பக்தியையும் எப்படி சமரசப் படுத்துவது? சங்கரரின் பெயரைக் கேட்டாலே பக்தர்கள்

காதுகளை மூடிக்கொள்கிறார்கள். பக்தர்கள் இறைவன் பெயரில் ஆடுவதையும் பாடுவதையும் அழுவதையும் பார்த்து அவர்களை வெறியர்கள் என்று ஞானநெறியினர் சொல்கிறார்கள்.'

சுவாமிஜி: 'விஷயம் என்னவென்றால் இத்தகைய வெறுப்புக்கள் எல்லாம் ஆரம்ப நிலையில்தான் ஏற்படுகிறது. ஸ்ரீராமகிருஷ்ணர் கூறிய பூதங்களும் குரங்குகளும் சண்டை போட்டுக்கொண்ட கதையை[1] நீ கேட்டதில்லையா?'

சீடர்: 'கேட்டிருக்கிறேன்.'

சுவாமிஜி: 'மிக உயர்ந்த நிலையில் பக்திக்கும் ஞானத்திற்கும் எந்த வேறுபாடும் இல்லை. இறைவனை அன்பு வடிவில் காண்பதுதான் உயர்ந்த பக்தி. இறைவனின் அன்பு வடிவை எல்லோரிடமும் நீ கண்டால் யாரை வெறுப்பாய்? யாரைத் துன்புறுத்துவாய்? மனத்தில் சின்னஞ்சிறு ஆசை இருக்கும் வரையிலும், ஸ்ரீராமகிருஷ்ணர் சொல்வாரே, அதுபோல் காம காஞ்சன ஆசை என்பது சிறிதாவது மனத்தில் இருக்கும் வரையிலும் அத்தகைய அன்பு ஏற்படுவதில்லை. முழுமையான பக்தி உணர்வில் உடலுணர்வுகூட இருப்பதில்லை. அதுபோலவே உயர்ஞானம் என்பது ஏகாத்மானுபூதி, எங்கும் ஆன்மாவையே காண்பது. மனத்தில் சிறிது நான்-உணர்வு இருந்தாலும் அந்த நிலை வருவதில்லை.'

சீடர்: 'அப்படியானால் நீங்கள் உயர்ந்த பக்தி என்று எதைச் சொல்கிறீர்களோ அதுவே உயர்ந்த ஞானம் இல்லையா?'

சுவாமிஜி: 'அதுவேதான். முழுமையான ஞானியாகாமல் முழுமையான பக்தி வராது. பிரம்மம் என்பது ஸத்-சித்-ஆனந்தம் என வேதாந்த சாஸ்திரம் கூறவில்லையா?'

சீடர்: 'ஆமாம், சொல்கிறது.'

சுவாமிஜி: 'ஸத்-சித்-ஆனந்தம் என்பதன் பொருள் ஸத்–இருப்பு; சித்–உணர்வு அல்லது ஞானம்; ஆனந்தமே அன்பு. பிரம்மத்தின் ஸத் நிலையை எடுத்துக்கொண்டால், பக்திக்கும் ஞானத்திற்கும் எந்தவிதமான கருத்து வேற்றுமையும் இல்லை. ஞானிகள் இறைவனின் சித் அல்லது உணர்வு நிலையின்மீது அதிகமான கவனம் செலுத்துகிறார்கள். பக்தர்கள் ஆனந்த

---

1. ஒருமுறை சிவபெருமானுக்கும் ராமனுக்கும் இடையில் போர் நிகழ்ந்தது. சிவன் ராமனின் குரு, ராமனோ சிவனின் குரு. போர் முடிந்ததும் அவர்கள் இருவரும் மீண்டும் அன்புடன் பழகினர். ஆனால் சிவபெருமானின் பூத கணங்களுக்கும், ராமனின் குரங்குப் படைகளுக்கும் சண்டை தீரவேயில்லை.

நிலையின்மீது அதிகக் கவனம் செலுத்துகிறார்கள், அவ்வளவு தான். ஆனால் உணர்வுநிலை என்பது உணரப்பட்டதும் ஆனந்த நிலையும் உணரப்பட்டதாகிறது. ஏனெனில் எது உணர்வோ அதுவே ஆனந்தம்.'

சீடர்: 'அப்படியென்றால் ஏன் இத்தனை நெறிகள் இந்தியாவில் உள்ளன? பக்தி, ஞான சாஸ்திரங்களுக்கு இடையில் இவ்வளவு வேறுபாடுகள் ஏன்?'

சுவாமிஜி: 'இந்தப் போட்டியும் பூசலும் ஆரம்பநிலையில் தான்; உண்மை ஞானத்தையும் உண்மை பக்தியையும் அடைவதற்கான ஆரம்ப வழிகளில்தான். ஆனால் எது உயர்ந்தது—வழிகளா, முடிவா? நிச்சயமாக முடிவைவிட அதை அடையும் வழி உயர்ந்ததாக இருக்க முடியாது. மக்களின் தகுதியைப் பொறுத்து வழிகள் பலவாறாக இருக்கலாம். ஜபம், தியானம், பூஜை, ஹோமம் இவையெல்லாம் மதத்தின் சில பகுதிகள்; ஆனால் இவையும் வெறும் வழிகளே. பக்தியின் உயர்ந்த நிலையை அடைவது அல்லது பிரம்மஞானத்தைப் பெறுவது என்பதே முடிவு. நீ சிறிது சிந்தித்துப் பார்த்தால் அவர்கள் சண்டையிடுவது எதைப்பற்றி என்பதை அறிவாய்.

'ஒருவர், ''கிழக்குமுகமாகப் பிரார்த்தனை செய்தால் கடவுளை அடைவாய்'' என்பார். மற்றொருவர், ''இல்லை, மேற்கு நோக்கிப் பிரார்த்தனை செய்தால்தான் கடவுளைக் காண்பாய்'' என்பார். பல நூறு ஆண்டுகளுக்கு முன்னால் யாரோ ஒருவர் கிழக்கு நோக்கி அமர்ந்தபடிக் கடவுளைப் பார்த்திருப்பார். அவரது சீடர்கள், கிழக்கைப் பார்த்து அமர்ந்தால்தான் இறையனுபூதி கிடைக்கும், மற்ற எந்த வழியிலும் இறையனுபூதி கிடைக்காது என்று பிரச்சாரம் செய்வார்கள். மற்றொரு பிரிவினர், ''இன்னவர் மேற்கே பார்த்தபடி அமர்ந்துதான் முக்தி பெற்றார். நாங்கள் கேள்விப்பட்டோம். உங்கள் கருத்தை நாங்கள் ஏற்க மாட்டோம்'' என்று சொல்வார்கள். இப்படித்தான் இத்தனை நெறிகள் தோன்றின.

'ஒருவர் ஹரிநாமத்தை ஜபம் செய்து மிக உயர்ந்த பக்தியைப் பெற்றிருப்பார். உடனே,

''ஹரேர்நாம ஹரேர்நாம ஹரேர்நாமைவ கேவலம் |
கலௌ நாஸ்த்யேவ நாஸ்த்யேவ நாஸ்த்யேவ
கதிரன்யதா ||

—ஹரியின் திருநாமம், ஹரியின் திருநாமம், ஹரி நாமம் திருநாமம் இல்லாமல் இந்தக் கலியுகத்தில் வேறு கதியே

இல்லை, இல்லை, இல்லை'' என்று சாஸ்திரம் ஒன்று பிறந்து விடும். மற்றொருவர் அல்லா என்று ஜபித்துக் கடவுளை அடைந் திருப்பார். உடனே அவர் மற்றொரு மதத்தை நிறுவிவிடுவார்.

'ஆனால் அந்த வழிபாடுகளும் ஜபங்களும் எந்த முடிவை நோக்கிச் செல்கின்றன என்பதை நாம் பார்க்க வேண்டும். இவற்றின் முடிவு சிரத்தை. சிரத்தை என்னும் சம்ஸ்கிருதச் சொல்லின் கருத்தை விளக்கும் சொல் எதுவும் நம் மொழியில் இல்லை. நசிகேதனின் உள்ளத்தில் சிரத்தை புகுந்தது என்று உபநிடதம் (கடோபநிடதம்) கூறுகிறது. 'ஒருமைப்பாடு (ஏகாக்ரதா) என்பதுகூட அந்தச் சொல்லின் கருத்தை முழுமை யாக விளக்கவில்லை; ஒருமுக ஈடுபாடு (ஏகாக்ர நிஷ்டா) என் னும் சொல் ஓரளவுக்கு விளக்குகிறது. எந்த உண்மையின் மீதா யினும் சரி, நிஷ்டையுடனும் அதாவது மாறாத ஈடுபாட்டுடனும் மனஒருமைப்பாட்டுடனும் சிந்தனை செய்தால் மனம் படிப் படியாக ஒருமையை நோக்கி அதாவது சத்-சித்-ஆனந்தத்தை அறியும் பாதையில் இட்டுச் செல்லப்படுவதை உணரலாம். இத்தகைய நிஷ்டையை வாழ்வில் கொண்டு வருமாறுதான் பக்தி மற்றும் ஞான சாஸ்திரங்கள் வலியுறுத்துகின்றன. கால இடைவெளிகளால் இந்த மகத்தான உண்மைகள் பல்வேறாக உருமாறி தேசாசாரங்களாகவும், குறிப்பிட்ட பழக்கவழக்கங் களாகவும் மாறிவிட்டன. இது இந்தியாவில் மட்டுமல்ல, உலகில் ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொரு சமுதாயத்திலும் ஏற்பட் டுள்ளது. சாதாரண மக்கள் இந்தச் சடங்குகளை வைத்துக் கொண்டு தங்களுக்குள் சண்டையிட்டுக் கொள்கிறார்கள். அவர்கள் இறுதியான லட்சியத்தை அறிவதில்லை. அதன் விளைவாகச் சண்டைகளும் சச்சரவுகளும் தொடர்கின்றன.'

சீடர்: 'அப்படியென்றால் வழிதான் என்ன?'

சுவாமிஜி: 'பழைய காலத்தைப்போல் உண்மையான சிரத்தையை மீண்டும் கொண்டுவர வேண்டும். களைகளை வேரோடு நீக்க வேண்டும். எந்த மதத்தை வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளுங்கள். அவை ஒவ்வொன்றிலும் காலதேச எல்லைகளைக் கடந்த உண்மை இருக்கவே செய்கிறது. ஆனால் குப்பையும் அழுக்கும் அவற்றின்மீது சேர்ந்துள்ளன. அவற்றை நீக்கி, உண்மையான, நிலையான கொள்கைகளை மக்களின் முன் வைக்க வேண்டும். அப்போதுதான் உங்கள் மதமும் நாடும் வளம் பெறும்.'

சீடர்: 'அதை எவ்வாறு செய்து முடிப்பது?'

சுவாமிஜி: 'முதலில் மகாபுருஷர்களின் வழிபாட்டைக் கொண்டு வர வேண்டும். அழியாத அந்த உண்மைப் பொருளை உணர்ந்த அந்த மகான்களை, அனுமன், ராமகிருஷ்ணர் போன்ற தெய்வ புருஷர்களை லட்சிய புருஷர்களாக மக்கள்முன் வைக்க வேண்டும். இங்கு ராமருடையவும் அனுமனுடையவும் வழி பாட்டை உன்னால் கொண்டுவர முடியுமா? பிருந்தாவனக் கண்ணனை இப்போது சற்றே ஒதுக்கி வைப்போம். சிங்கக் குரலில் கீதையை முழங்கிய கண்ணனின் வழிபாட்டைப் பரப்புங்கள். சக்தி வழிபாட்டைக் கொண்டு வாருங்கள்.'

சீடர்: 'அப்படியென்றால் பிருந்தாவன லீலை நல்ல தில்லையா?'

சுவாமிஜி: 'இந்தக் காலச் சூழ்நிலைக்குக் கண்ணனின் அந்த நிலை ஏற்றதல்ல. புல்லாங்குழலை ஊதி இப்போது இந்த நாட்டிற்கு மறுமலர்ச்சியைக் கொண்டுவர முடியாது. இப் போது தேவைப்படுவதெல்லாம் மகா தியாகம், மகா நிஷ்டை, மகா தைரியம் இவையே. இவற்றுடன் சுயநலம் துளியும் கலவாத சுத்த புத்தியின் துணையுடன், தீவிர முயற்சியில் ஈடுபட்டு எல்லாவற்றையும் உள்ளது உள்ளபடி அறிந்துகொள்வதே நமது இப்போதைய தேவை'.

சீடர்: 'அப்படியென்றால் பிருந்தாவன லீலை தவறு என்பதா உங்கள் கருத்து?'

சுவாமிஜி: 'யார் அப்படிச் சொன்னது? அதனைச் சரியான கண்ணோட்டத்தில் காணவும் சரியாகப் புரிந்துகொள்ளவும் மிகவுயர்ந்த சாதனைகள் வேண்டும். ஆனால் உடலின்பங்களி லும் செல்வத்திலும் மிதமிஞ்சி மூழ்கிக் கிடக்கின்ற இந்தக்காலத் தில், அதன் உண்மையை யாரும் அறிந்துகொள்ள முடியாது.'

சீடர்: 'சுவாமிஜி, அப்படியென்றால் மதுரபாவனை[1] சாதனை செய்பவர்கள் சரியான பாதையில் போகவில்லையா?'

சுவாமிஜி: 'அப்படித்தான் நினைக்கிறேன். ஏதோ ஓரிருவர் விதிவிலக்குகளாக இருக்கலாம். ஆனால் மிகப்பெரும் பகுதி யினர் மோசமான கறைபடிந்த அஞ்ஞான இருளில் மூழ்கிக் கிடக்கிறார்கள். அதனால்தான், இந்த நாடு உயர்த்தப்பட வேண்டுமானால் மகாவீரராகிய அனுமனின் வழிபாடு துவக் கப்பட வேண்டும், சக்திவழிபாடு வேண்டும், வீடுதோறும்

---

1. இறைவனைக் கணவனாக, காதலனாகக் கொண்டு வழிபாடு செய்கின்ற பக்தி நெறி. விரிவான விளக்கத்திற்கு 'குருதேவர் ஸ்ரீராமகிருஷ்ணர்', 1. 333–353, (சென்னை, ஸ்ரீராமகிருஷ்ண மட வெளியீடு) பார்க்கவும்.

ராமசந்திர மூர்த்தி வழிபடப்பட வேண்டும் என்கிறேன். அதில் தான் உங்கள் நன்மை அடங்கி இருக்கிறது, அதில்தான் நாட்டின் நன்மை அடங்கி இருக்கிறது. இதைத் தவிர வேறு வழியில்லை.'

சீடர்: 'ஆனால் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் எந்தநேரமும் இறைவனைப் பாடிக்கொண்டிருப்பது வழக்கம் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன்.'

சுவாமிஜி: 'அவருடைய விஷயம் வேறு. அவரையும் சாதாரண மனிதனையும் எப்படி ஒப்பிட முடியும்? அவர் பல் வேறு மத சாதனைகளையும் செய்ததன்மூலம் எல்லா மதங் களும் ஒரே கடவுளை நோக்கியே செல்கின்றன என்பதை உலகிற்கு எடுத்துக்காட்டினார். அவர் செய்ததை நீயோ நானோ செய்ய முடியும் என்று நினைக்கிறாயா? அவர் யார், எவ்வளவு உயர்ந்தவர் என்பதை இப்போதுகூட என்னால் அறிந்து கொள்ள முடியவில்லை. அதனால்தான் அவரைப்பற்றி எல்லா இடங்களிலும் என்னால் பேச முடியவில்லை. அவர் யார் என்பது அவருக்குத்தான் தெரியும். அவரது உடம்பு மட்டும் தான் மனித உடம்பாக இருந்தது. ஆனால் அவரது செயல்பாடு, நடவடிக்கை எல்லாமே அமானுஷ்யமானதாகவே இருந்தது'.

சீடர்: 'நீங்கள் அவரை ஓர் அவதார புருஷர் என்று நம்பு கிறீர்களா?'

சுவாமிஜி: 'முதலில் அவதாரம் என்ற சொல்மூலம் நீ என்ன புரிந்துகொண்டுள்ளாய் என்பதைச் சொல்.'

சீடர்: 'ஏன் அப்படிக் கேட்கிறீர்கள். ராமர், கிருஷ்ணர், கௌராங்கர், புத்தர், ஏசு போன்ற ஒருவர் என்று கூறுகிறேன்.'

சுவாமிஜி: 'பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் இப்போது நீ குறிப்பிட்ட அத்தனை பேர்களிலும் உயர்ந்தவர் என்பதை நான் அறிவேன். நம்புகிறேன் என்பதில்லை, அது கீழ்நிலை; நான் அறிவேன். இந்தப் பேச்சை இதோடு நிறுத்துவோம்.'

சுவாமிஜி சிறிதுநேரம் அமைதியாக இருந்தார். பிறகு தொடர்ந்து பேசினார்:

'தர்மத்தை நிலைநிறுத்துவதற்காக, காலத்திற்கும் சமுதாயச் சூழலுக்கும் ஏற்ப மகா புருஷர்கள் தோன்றுகிறார்கள். அவர் களை உன் விருப்பப்படி மகாபுருஷர்கள் என்றோ அவதார புருஷர்கள் என்றோ அழைத்துக்கொள். அது பெரிய விஷயம் அல்ல. அவர்கள் தங்கள் வாழ்க்கையின்மூலம் ஒரு லட்சியத்தை உலகிற்கு அளிக்கிறார்கள். அவர்களுடைய அச்சில் தங்களை வார்த்துக் கொள்கின்ற பலரும் அவருடன் தோன்றுகிறார்கள்.

இவ்வாறு பரம்பரை தொடர்கிறது. காலப்போக்கில் இந்தப் பரம்பரை தங்கள் உயர்வை இழந்து நலிவடைகிறது. அப்போது மறுபடியும் மகாபுருஷர்கள் தோன்றுகிறார்கள். இது ஒரு பிரவாகம்போல் தொடர்ந்து கொண்டிருக்கிறது.'

சீடர்: 'ஸ்ரீராமகிருஷ்ணர் ஓர் அவதார புருஷர் என்று நீங்கள் ஏன் பிரச்சாரம் செய்யக் கூடாது? அதற்கான ஆற்றல், பேச்சுத்திறன் எல்லாமே உங்களிடம் இருக்கிறது.'

சுவாமிஜி: 'அவரை நான் அறிந்துகொண்டது மிகவும் குறைவு. அதனால்தான் நான் அவரைப் பிரச்சாரம் செய்வதில்லை. எப்போதாவது அவரைப்பற்றி ஏதாவது பேச நேரும்போது அவரைப் பற்றிய உண்மைகளை நான் விட்டுவிடுவேனோ அல்லது தவறாகச் சொல்லிவிடுவேனோ என்று அஞ்சுகிறேன். அந்த அளவிற்கு அவர் உயர்ந்தவர். அவரது ஆற்றலைப் பற்றிச் சொல்ல என் ஆற்றல் போதுமானதல்ல. அவரைப்பற்றி நான் பேச முயன்றால் அவர் உண்மையில் எப்படிப்பட்டவர் என்பதை உலகிற்குக் காட்டுவதற்குப் பதிலாக, நான் அவரை எப்படிப் புரிந்துகொண்டேன் என்பதைக் காட்டி அவரைச் சிறுமைப்படுத்தி விடுவேனோ என்று தோன்றுகிறது.'

சீடர்: 'ஆனால் இன்று பலரும் அவரை அவதார புருஷர் என்று பிரச்சாரம் செய்கிறார்களே!'

சுவாமிஜி: 'அவர்கள் செய்துவிட்டுப் போகட்டும். அவர்கள் அவரை அறிந்தவகையில் அப்படிப் பிரச்சாரம் செய்கிறார்கள். நீயும் அவரை அப்படிப் புரிந்துகொண்டால் அவ்வாறே பிரச்சாரம் செய்யலாம்.'

சீடர்: 'உங்களையே என்னால் சரியாகப் புரிந்துகொள்ள முடியவில்லை. இதில், ஸ்ரீராமகிருஷ்ணரைப் புரிந்துகொள்வதாவது! உங்கள் அருளின் ஒரு கிரணம் பெற்றாலும் போதும் என்னை நான் பெரும் பேறுபெற்றவனாகக் கருதுவேன்.'

## 25

கட்டிட வேலை நடைபெறும் மடம், 1898

சீடர்: 'சுவாமிஜி, இருக்கின்ற உண்மைப் பொருள் பிரம்மம் ஒன்றே என்றால் உலகத்தில் இவ்வளவு வேறுபாடுகள் காணப்படுவது ஏன்?'

சுவாமிஜி: 'பிரம்மம் உண்மைப் பொருளோ எதுவோ, யாருக்குத் தெரியும்? சொல் பார்க்கலாம். உலகையே நாம் காண்கிறோம். அதையே உண்மையென்று நம்பவும்

செய்கிறோம். எனவே படைப்பின் இந்த வேறுபாடுகளை உண்மையெனக் கொண்டு ஆராய்ச்சிப் பாதையில் முன்னேறு வோமானால், காலப்போக்கில், மூலகாரணமாகிய ஒருமையை அடைய முடியும். அந்த ஒருமை நிலையில் நீ நிலைபெற் றிருந்தால் உலகத்தில் வேறுபாடுகளை உன்னால் பார்க்க முடியாது.'

சீடர்: 'சுவாமிஜி, நான் அந்த ஒருமையில் நிலைபெற்றிருந் தேனானால் இந்தக் கேள்வியை எப்படி எழுப்ப முடியும்? வேறுபாடுகளைக் காண்பதால்தான், அவற்றை உண்மையென்று நம்புவதால்தான் இந்தக் கேள்வியைக் கேட்கிறேன்.'

சுவாமிஜி: 'சரி. வேறுபாடுகளை உண்மையெனக் கொண்டு, ஒருமையின் மூலகாரணத்தை ஆராய்வதை வ்யதி ரேகி முறை என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. அதாவது இல்லாத ஒன்றை இருப்பதாகக் கொண்டு, அல்லது பொய்யான ஒன்றை உண்மையெனக் கொண்டு, தர்க்க முறையில், அது இல்லை அல்லது அது பொய் என்று நிரூபிப்பது. உண்மை யல்லாததை உண்மையெனக் கொண்டு உண்மையை அறியும் முறையையே நீ கூறுகிறாய், அல்லவா?'

சீடர்: 'ஆம். ஆனால் இருப்பது என்பதே உண்மை, இல் லாதது என்பது பொய் என்பதே எனது கருத்து.'

சுவாமிஜி: 'வேதங்கள், ''இருப்பது இரண்டற்ற ஒன்று மட்டுமே'' என்று அல்லவா கூறுகின்றன? அப்படியானால் உன்னுடைய வேறுபாட்டுக் கருத்து பொய்யாகிறது. நீ வேதத்தை நம்புகிறாய் என்று நான் நினைக்கிறேன்.'

சீடர்: 'நிச்சயமாக. ஆனால் நம்பாதவர்களை மடக்க வேறு வாதம் வேண்டுமே!'

சுவாமிஜி: 'அது சரி. ஜடவிஞ்ஞானத்தின்மூலம் அதைச் செய்யலாம். புலன்களின்மூலம் வரும் அறிவான பிரத்தியட்ச அறிவை நாம் நம்ப முடியாது என்பதை முதலில் அவர்களுக்குப் புரியவைக்க வேண்டும். புலன்கள் பொய்யான அறிவைத் தர முடியும். மேலும் உண்மைப் பொருள் என்பது மனம், புத்தி, புலன்கள் இவற்றின் எல்லையைக் கடந்தது. பின்னர், இந்த மனம், புத்தி மற்றும் புலன்களைக் கடந்து செல்ல வழி இருக் கிறது என்பதை அவர்களுக்குக் கூற வேண்டும். அதையே யோகம் என்று ரிஷிகள் கூறுகிறார்கள். யோகம் பயிற்சியைப் பொறுத்தே இருக்கிறது. அதனைக் கைக்கொள்ள வேண்டும். நம்பிக்கை இருந்தாலும் இல்லாவிட்டாலும் பயிற்சி செய்தால்

பலன் கிடைக்கும். நீயே செய்து பார். ரிஷிகள் கூறியவை அனைத்தும் உண்மை என்பதை நான் நேருக்கு நேராகக் கண்டேன். இதோ பார், நீ வேறுபாடு என்று கூறுகின்ற அனைத்தும் மறைந்துவிடுகின்ற ஒரு காலம் வரும். அப்போது வேறுபாடுகளை நீ உணரவே முடியாமல் போய்விடும். குருதேவரின் திருவருளால் நானே அந்த நிலையை என் வாழ்க்கையில் அனுபவித்திருக்கிறேன்.'

சீடர்: 'எப்போது அனுபவித்தீர்கள்?'

சுவாமிஜி: 'ஒருநாள் தட்சிணேசுவரக் கோயில் தோட்டத்தில் ஸ்ரீராமகிருஷ்ணர் என்னைத் தொட்டார். தொட்ட உடனே வீடுகளும், அறைகளும், ஜன்னல்களும், வராந்தாக்களும், மரங்களும், சூரியன், சந்திரன் மற்ற எல்லாமே ஆகாசத்தில் ஒடுங்குவதுபோல் கண்டேன். மெல்லமெல்ல ஆகாசமும் எங்கோ ஒடுங்கிவிட்டது. அதன்பிறகு என்ன நடந்தது என்பது எனக்கு நினைவில்லை. ஆனால் நான் மிகவும் பயந்தது நினைவில் உள்ளது. அச்சத்துடன் ஸ்ரீராமகிருஷ்ணரிடம், ''ஐயோ, என்னை என்ன செய்கிறீர்கள்! எனக்கு அம்மா அப்பா உள்ளனர்'' என்று கூவினேன். அவர் சிரித்தவாறே, ''சரி, அப்படியானால் இப்போதைக்கு இது போதும்'' என்று சொல்லிவிட்டு என்னை மீண்டும் தொட்டார். உடனே படிப்படியாக அந்த நிலையிலிருந்து மீண்டேன். வீடுகள், கதவுகள், ஜன்னல்கள், வராந்தாக்கள் எல்லாம் மீண்டும் தெரியலாயின. மற்றொரு முறை அமெரிக்காவில் ஓர் ஏரியின் கரையில் அமர்ந்திருந்தபோதும் இதே அனுபவம் எனக்கு ஏற்பட்டது.'

சீடர் (திகைப்புடன்): 'ஆனால் சுவாமிஜி, மூளைக் கலக்கத்தால்கூட இவ்வாறு ஏற்படலாமே! இன்னொன்று, இந்த அனுபவத்தால் உங்களுக்குச் சிறப்பாக ஆனந்த உணர்வு ஏதாவது ஏற்பட்டதா என்ன?'

சுவாமிஜி: 'நோய் இல்லை, போதை இல்லை, மூச்சைத் தாறுமாறாக இழுத்துப் பிராணாயாமம் செய்யவில்லை. சாதாரண மனிதனாக, நல்ல உடல் வலிமையோடும் சுய உணர்வோடும் இருந்தபோது உண்டான ஒரு நிலையை மூளைக் கலக்கத்தால் வந்ததென்று சொல்கிறாயா? அது மட்டுமின்றி, இந்த அனுபவம் வேதங்கள் கூறுவதை ஒத்திருக்கிறது; பழங்கால ரிஷிகள் மற்றும் ஆச்சாரியர்களின் வார்த்தைகளுக்கும் பொருந்தி வருகிறது. (சிரித்துக்கொண்டே) கடைசியில் நீ என்னை மூளை கலங்கியவன் என்றா முடிவுகட்டி விட்டாய்?'

சீடர்: 'இல்லை, இல்லை. நான் அந்தப் பொருளில் சொல்லவில்லை. இந்த ஒருமை அனுபூதிக்கு சாஸ்திரங்களில், நூற்றுக் கணக்கான சான்றுகளைக் காணும்போது, அதை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெளிவாகப் பார்த்ததாக நீங்களும் கூறும் போது, உங்கள் அனுபவம் வேதங்கள் முதலான சாஸ்திரங் களின் கருத்தோடு ஒத்திருக்கும்போது அதைப் பொய் என்று நான் எப்படிச் சொல்வேன்? சங்கரர்கூட அந்த நிலையை ''த்வ கதம் கேன வா நீதம்—(இந்தப் பிரபஞ்சம்) எங்கு போய்விட்டது? யார் கொண்டு போனார்கள்?''[1] என்றெல்லாம் கூறுகிறாரே!'

சுவாமிஜி: 'இந்த ஒருமை அனுபூதியையே சாஸ்திரங்கள் பிரம்மஞானம் என்கின்றன. இதனால் ஒருவன் அச்சத்திலிருந்து விடுபடுகிறான். பிறப்பு இறப்பு என்ற வலையிலிருந்து விடுபடு கிறான். கீழான புலனின்பங்களில் கட்டுண்ட ஒருவனால் இந்தப் பிரம்மானந்தத்தை அனுபவிக்க முடியாது. ஆனால் இந்தப் பிரம்மஞானத்தை அனுபவித்துவிட்டால் அதன்பிறகு இந்த உலகத்தின் சுகதுக்கங்களை அவன் நாடமாட்டான்.'

சீடர்: 'அப்படியானால், உண்மையில் நாம் மேலான அந்தப் பிரம்மம் என்றால், நாம் ஏன் அந்த ஆனந்தத்தை அடைய முயல்வதில்லை? பயனற்றதான காமம், பணத்தாசை போன்ற வலையில் சிக்கி ஏன் மீண்டும்மீண்டும் மரணத்தின் வாயில் பட்டு அழிகிறோம்?'

சுவாமிஜி: 'மனிதன் அந்த ஆனந்தத்தை, அந்த அமைதியை நாடவில்லை என்றா நீ நினைக்கிறாய்?' ஆழமாகச் சிந்தித்துப் பார்த்தால், ஒருவன் எந்தக் காரியம் செய்தாலும், பேரானந் தத்தை நாடியே அதைச் செய்கிறான். ஆனால் இதனை எல்லோ ராலும் அறிந்துகொள்ள முடியவில்லை, அவ்வளவுதான். இந்தப் பரமானந்தத்தைப் பெற வேண்டும் என்ற ஆர்வம் பிரம்மா முதல் புல்வரை எல்லோரிடமும் நிறைந்துள்ளது. ஆனந்த வடிவான பிரம்மமும் எல்லோருள்ளும் ஊடுருவி நிற்கவே செய்கிறது. நீயும் அந்தப் பூரண பிரம்மம்தான். நீ அந்தப் பிரம்மம் என்பதை முழுமையாக நினைத்தால், அந்த அனுபூதி உண்டாகும். தேவையெல்லாம் அனுபூதி மட்டுமே. நீ உன் மனைவிமக்களுக்காக உழைத்து ஓடாகிறாயே, அதன் நோக்க மும் அந்த மேலான பிரம்மானந்தத்தை அடைவதுதான். இந்த மோகவலையில் சிக்கி, அடிமேல் அடியுண்டு மனிதனின் மனம்

1. விவேகசூடாமணி, 483.

இறுதியில் தன் சொந்த இயல்பை நோக்கித் திரும்புகிறது. பிரம்மஞானத்தை அடைய வேண்டும் என்னும் ஆவல் இருப்பதால்தான், மனிதன் பயங்கரமான அதிர்ச்சிகளையும் துயரங்களையும் ஒன்றன்பின் ஒன்றாகப் பெறவும் தாங்கவும் செய்கிறான். ஒவ்வொருவரும் இப்படித் தன்னுள் திரும்பும் காலம் வரவே செய்யும். சிலருக்கு இந்தப் பிறவியில் வரும், சிலருக்கு ஆயிரம் பிறவிகள் தாண்டி வரலாம்.'

சீடர்: 'அந்த அனுபூதி, தங்கள் ஆசீர்வாதத்தையும் குருதேவரின் திருவருளையும் பொறுத்தே இருக்கிறது.'

சுவாமிஜி: 'குருதேவரின் பேரருளாகிய காற்று எப்போதும் வீசிக் கொண்டிருக்கிறது. நீ உன் படகின் பாயை விரித்துவிடு. எதைச் செய்தாலும் ஒருமித்த மனத்துடன் அதைச் செய். ''நான் சத்–சித்–ஆனந்தப் பொருள். எனக்குப் பயமோ கவலையோ ஏது? இந்த உடம்பு, மனம், புத்தி எல்லாமே அழியக்கூடியவை. நான் இவற்றிற்கெல்லாம் அப்பால் இருப்பவன்'' என்று இரவும் பகலும் நினை.'

சீடர்: 'இப்படிப்பட்ட எண்ணம் கண நேரம் தோன்றுகிறது, ஆனால் உடனே மறைந்துவிடுகிறது. பயனற்ற சம்சார வாழ்வின் நினைவுகளே மீண்டும் எழுகின்றன.'

சுவாமிஜி: 'ஆரம்பத்தில் அப்படித்தான் நடக்கும். படிப்படியாக எல்லாம் சரியாகிவிடும். ஆனால் மனத்தில் தீவிரம் வேண்டும்; உறுதிப்பாடு வேண்டும். ''நான் என்றும் தூய்மையானவன், எல்லாம் அறிந்தவன், என்றும் சுதந்திரமானவன். நான் எப்படித் தீமை செய்ய முடியும்? சாதாரண மனிதனைப் போல் காமம், பணத்தாசை இவற்றால் கவரப்பட்டு நான் முட்டாளாவது முடிகிற காரியமா?'' என்று எப்போதும் நினை. இப்படிப்பட்ட நினைவுகளால் மனத்தை உறுதிப்படுத்து. இது நிச்சயமாக நல்ல பலனைத் தரும்.'

சீடர்: 'சில நேரங்களில் மனம் உறுதியாக இருக்கும். ஆனால் தொடர்ந்து, நீதிபதி பதவிக்கான தேர்வு எழுத வேண்டும், பணமும் பேரும் புகழும் வரும், அதனால் மகிழ்ச்சியாக வாழலாம் என்ற நினைவும் வந்துவிடுகிறது.'

சுவாமிஜி: 'அப்படிப்பட்ட நினைவு உன் மனத்தில் தோன்றிய உடனே ஆராய்ச்சி செய். நீ வேதாந்தம் படிப்பவன் ஆயிற்றே! தூங்கும்போதுகூட இந்த ஆராய்ச்சி என்னும் வாளை உன் தலையணையின் கீழ் வைத்துக்கொள். அப்போது இத்தகைய பேராசை கனவிலும் உன்னை நெருங்காது. இவ்வாறு

ஆசைகளை விடாமுயற்சியுடன் விடும்போது உண்மையான வைராக்கியம் வரும். அப்போது சொர்க்கத்தின் கதவுகள் தாமாகவே திறப்பதைக் காண்பாய்.'

சீடர்: 'சுவாமிஜி, ஆனால் தீவிர வைராக்கியம் மனத்தின் மென்மை உணர்வுகளை அழித்துவிடுவதாக பக்திசாஸ்திரங்கள் கூறுகின்றனவே!'

சுவாமிஜி: 'அப்படிக் கூறுகின்ற உன் சாஸ்திரங்களை வீசி எறிந்துவிடு. வைராக்கியம் இல்லாமல் புலனின்பங்களில் வெறுப்பு ஏற்படாமல், காமம் பணத்தாசை இவற்றைக் காகத்தின் எச்சம்போல் ஒதுக்காமல், ''ந ஸித்யதி ப்ரஹ்ம சதாந்த ரேऽபி— நூற்றுக்கணக்கான பிரம்ம யுகங்களிலும் (முக்தி) அடைய முடியாது.''[1] ஜபம், தியானம், பூஜை, ஹோமம், தவம் எல்லாமே தீவிர வைராக்கியத்தைப் பெறுவதற்காகத்தான். வைராக்கியமின்றி ஒருவன் முக்திக்காகச் செய்யும் முயற்சிகள் எல்லாம், நங்கூரமிட்ட படகின் மீதிருந்து துடுப்பைச் செலுத்துவதைப் போன்றதே. ''ந ப்ரஜயா தனேன த்யாகேனைகே அம்ருதத்வ மானசு:—பிள்ளைகளாலோ செல்வத்தாலோ அல்ல, தியாகத்தினாலேயே மரணமிலாப் பெருநிலை அடையப் படுகிறது.''

சீடர்: 'காமத்தையும் பணத்தாசையையும் துறந்துவிட்டால் எல்லாம் கிடைத்துவிடுமா?'

சுவாமிஜி: 'இந்த இரண்டையும் துறந்தால் வேறு தடைகள் உள்ளன. உதாரணத்திற்கு, பேர்புகழைச் சொல்லலாம். சாதாரண மனிதர்கள் அதில் நிலைதடுமாறி விடுகிறார்கள். மக்கள் மரியாதைகளைப் பொழிவார்கள். மெள்ளமெள்ளப் பல்வேறு ஆசைகள் மனத்தில் நுழையும். அதனால்தான் முக்கால் பங்கு தியாகிகள் ஒரு நிலைக்குமேல் முன்னேற்றம் அடையாமல் நின்றுவிடுகிறார்கள். இந்த மடத்தையும் மற்றவற்றையும் நிலைநிறுத்துவதற்கு நானே மீண்டும் வர வேண்டியிருக்கலாம். யார் கண்டார்கள்?'

சீடர்: 'நீங்களே இப்படிப் பேசினால் எங்கள் கதி என்ன?'

சுவாமிஜி: 'சம்சாரத்தில் வாழ்கிறாய், அதற்காகப் பயம் எதற்கு! ''*அபீரபீரபீ:*—பயப்படாதீர்கள், பயப்படாதீர்கள், பயப்படாதீர்கள்'' நாகமகாசயரைப் பார்த்திருக்கிறாய் அல்லவா? இல்லறத்தில் இருந்தும் துறவியைவிடப் பெரியவர்

1. விவேகசூடாமணி, 6.

அவர். அவரைப் போன்றவர்களைப் பார்ப்பது அரிது. யாராவது இல்லறத்தானாக வாழ வேண்டுமானால் நாகமகாசயரைப் போல் வாழட்டும். அவர் கிழக்கு வங்காளத்திற்கே ஓர் ஒளி விளக்காகத் திகழ்கிறார். அந்தப் பகுதியில் உள்ள மக்களிடம் அடிக்கடி அவரைப் போய்ப் பார்க்கச் சொல். அது அவர்களுக்கு மிகுந்த நன்மையைச் செய்யும்.'

சீடர்: 'ஸ்ரீராமகிருஷ்ணரின் தெய்வீக நாடகத்தில் ஓர் அங்கம் நாகமகாசயர். பணிவின் வடிவம் அவர்'.

சுவாமிஜி: 'நிச்சயமாக. அதில் எந்தவிதச் சந்தேகமும் இல்லை. நான் ஒருமுறை அவரைப் பார்க்கச் செல்ல வேண்டும். நீயும் வருவாயா? மழைக் காலத்தில் வயல்களில் எல்லாம் வெள்ளம் பாய்ந்து செல்லும் காட்சியைப் பார்ப்பது எனக்கு மிகவும் பிடிக்கும். நான் செல்வதுபற்றி அவருக்குக் கடிதம் எழுதுகிறாயா?'

சீடர்: 'நிச்சயமாக எழுதுகிறேன். நீங்கள் அங்குச் செல்வது தெரிந்தால் அவர் ஆனந்தக் கூத்தாடுவார். முன்பொருமுறை நீங்கள் அங்கே செல்வதாக இருந்தபோது அவர், உங்கள் பாத தூளி பட்டாலே கிழக்கு வங்காளம் புண்ணியத் தலமாகிவிடும் என்றார்.'

சுவாமிஜி: 'உனக்குத் தெரியுமா? ஸ்ரீராமகிருஷ்ணர் நாகமகாசயரைக் ''கொழுந்துவிட்டெரியும் நெருப்பு'' என்று கூறுவார்.'

சீடர்: 'ஆமாம். அதைக் கேள்விப்பட்டிருக்கிறேன்.'

சுவாமிஜி: 'இரவு நீண்ட நேரமாகிவிட்டது. புறப்படு, ஏதாவது சாப்பிட்டுவிட்டுச் செல்.'

சீடர் சிறிது சிற்றுண்டி சாப்பிட்டுவிட்டு கல்கத்தாவிற்குத் திரும்பினார். சுவாமிஜி அச்சமின்மையைப்பற்றிக் கூறியவற்றையும் அந்த ஆற்றலைத் தூண்டும்படி அவரிடமிருந்து பிறந்த ''நான் சுதந்திரமானவன், நான் சுதந்திரமானவன்'' என்னும் செய்தியையும் ஆழமாகச் சிந்தித்துக்கொண்டே சென்றார்.

''ஆ, சுவாமிஜி எத்தகையதோர் அற்புத புருஷர். ஞான மூர்த்தியான சங்கரரேதானோ இவர்'' என்று தோன்றியது சீடருக்கு.'

## 26

### கட்டிட வேலை நடைபெறும் மடம், 1898

சீடர்: 'ஒருவன் முதலில் காமம் மற்றும் பணத்தாசையிலிருந்து விடுபடாமல் சாதனையில் முன்னேற மாட்டான் என்று

ஸ்ரீராமகிருஷ்ணர் கூறுகிறார். அப்படியென்றால் இல்லறத்தார்களின் நிலை என்ன? அவர்களின் மனம் இரவுபகலாக அந்த இரண்டில் மட்டுமல்லவா ஆழ்ந்திருக்கிறது!'

சுவாமிஜி: 'இல்லறத்தானாக இருந்தாலும் சரி, சன்னியாசியாக இருந்தாலும் சரி, அவனிடம் காமமும் பணத்தாசையும் இருக்கும்வரை மனம் கடவுளிடம் போகாது. மனம் இவற்றில் மாட்டிக் கொண்டிருக்கும்வரை உண்மையான பக்தி, நிஷ்டை, சிரத்தை எதுவும் தோன்றவே முடியாது.'

சீடர்: 'அப்படியானால் இல்லறத்தார்களுக்கு வழி என்ன?'

சுவாமிஜி: 'சிறுசிறு ஆசைகளை அனுபவித்துத் தீர்க்க வேண்டும். பெரிய ஆசைகளை எல்லாம் விவேகத்தால் ஆராய்ந்து விட்டுவிட வேண்டும். இதுவே வழி. ''யதி ப்ரஹ்மா ஸ்வயம் வதேத்—பிரம்மதேவனே வேறுவிதமாக எழுதினாலும் சரி'' தியாகம் இன்றிக் கடவுளை அறிய முடியாது.'

சீடர்: 'சுவாமிஜி, சன்னியாச வாழ்வை ஏற்றுக்கொண்டாலே உலகப்பற்று நீங்கிவிடுமா?'

சுவாமிஜி: 'அதெப்படி நீங்கும்? ஆனால் துறவிகள் காமத்தையும் பணத்தாசையையும் முழுமையாகத் துறக்க முன்வருகிறார்கள், போராடுகிறார்கள். இல்லறத்தார்களோ, நங்கூரமிட்ட படகிலமர்ந்து துடுப்பைச் செலுத்துகிறார்கள். இதுதான் வித்தியாசம். புலனுகர்ச்சியில் விருப்பம் எப்போதாவது தணிந்ததுண்டா? ''பூய ஏவாபிவர்ததே—மேலும்மேலும் வளர்ந்து கொண்டே இருக்கும்.''[1] நாளுக்குநாள் வளர்வது அது.'

சீடர்: 'ஏன்? தொடர்ந்து சுகபோகங்களை அனுபவித்துக் கொண்டே இருந்தால் இறுதியில் ஒரு வெறுப்புத் தோன்றாதா?'

சுவாமிஜி: 'உளறாதே முட்டாளே. எத்தனை பேருக்கு அப்படி வெறுப்பு வந்ததைப் பார்த்தாய்? புலனின்பப் பொருட்களோடு எப்போதும் தொடர்பு கொண்டிருப்பதால் மனத்தில் ஒரு முத்திரை பதிந்துவிடுகிறது, ஒரு தழும்பு ஏற்பட்டுவிடுகிறது. தியாகம், தியாகம்—இதுவே மூலமந்திரம்.'

சீடர்: 'ஆனாலும் ''க்ருஹேஷு பஞ்சேந்த்ரிய நிக்ரஹஸ் தப: நிவ்ருத்தராகஸ்ய க்ருஹம் தபோவனம்—ஆசைகளை அடக்கியவனுக்கு வீடே தவபூமியாகி விடுகிறது'' என்றும் அறிஞர்கள் கூறியுள்ளார்களே!'

---

1. பாகவதம் 9. 19. 14 & மனு, 2. 94.

சுவாமிஜி: 'இல்லறத்தில் வாழ்ந்தபடியே காமத்தையும் பணத்தாசையும் துறந்தவர்கள் பாக்கியவான்கள். ஆனால் அது எத்தனைபேரால் முடியும்?'

சீடர்: 'ஆனால் சன்னியாசிகளும்கூட முழுமையாக இந்த ஆசைகளை விட்டவர்கள் அல்ல என்று நீங்களே முன்பு சொன்னீர்களே!'

சுவாமிஜி: 'ஆம், சொன்னேன். ஆனால் சன்னியாசிகள் தியாகப் பாதையில் போகின்றனர் என்பதையும் சொன்னேனே! அவர்கள் குறைந்த பட்சம் காமம் மற்றும் பணத்தாசைக்கு எதிராகப் போராடுவதற்காக யுத்தக் களத்தில் இறங்கிவிட்டனர். காமமும் பொருளாசையும் துன்பத்தையே தருபவை என்பதையே இல்லறத்தார் அறியவில்லை. ஆன்ம முன்னேற்றத்திற்கான முயற்சியிலும் அவர்கள் ஈடுபடவில்லை, எதிர்த்துப் போராட வேண்டும் என்ற எண்ணமே இன்னும் அவர்களிடம் வரவில்லை.'

சீடர்: 'ஏன், பலர் போராடிக் கொண்டுதான் இருக்கிறார்கள்.'

சுவாமிஜி: 'அப்படிப் போராடுபவர்கள் படிப்படியாகத் துறவு நிலையை அடைவார்கள். அவர்களுடைய காமமும் பொருளாசையும் படிப்படியாகக் குறையும். ஆனால் வருவது வரட்டும், நடப்பது நடக்கட்டும் என்று இருப்பவர்களுக்கும் ஆன்ம ஞானத்திற்கும் வெகுதூரம். ''இந்தக் கணமே இறைவனை அடைவேன்; இந்தப் பிறவியிலேயே அடைவேன்''— இவையே வீரனின் வார்த்தைகள். அத்தகைய வீரர்கள் அடுத்த வினாடியே எல்லாவற்றையும் துறப்பதற்குத் தயாராக இருக்கிறார்கள். அவர்களைப்பற்றிச் சாஸ்திரம் ''யதஹரேவ விரஜேத் ததஹரேவ ப்ரவ்ரஜேத்—எப்போது வைராக்கியம் வருமோ, அப்போதே சம்சார வாழ்வை விட்டுவிடு'' என்று கூறுகிறது.'

சீடர்: 'ஆனால் ஸ்ரீராமகிருஷ்ணர், ''ஒருவன் கடவுளிடம் பிரார்த்தித்தால் அவர் அருள்கூர்ந்து எல்லா பற்றுக்களையும் அகற்றிவிடுவார்'' என்று அடிக்கடிச் சொல்வதில்லையா?'

சுவாமிஜி: 'ஆம். அது உண்மைதான். கடவுளின் அருளால் எல்லாம் முடியும். இந்த அருளைப் பெற ஒருவன் தூயவனாக வேண்டும், புனிதனாக வேண்டும். எண்ணத்தில், பேச்சில், செயலில் புனிதம் வேண்டும். அப்போதுதான் அவரது அருள் வரும்.'

சீடர்: 'நினைப்பு, பேச்சு, செயல் இவற்றை, தானே கட்டுப் படுத்த முடிந்தவனுக்கு இறைவனின் அருள் எதற்கு? அவன் தன் சொந்த முயற்சியாலேயே ஆன்மீகப் பாதையில் முன்னேறிச் செல்ல மாட்டானா?'

சுவாமிஜி: 'மனம் வாக்கு காயத்தால் ஆன்ம ஞானத்திற் காகப் போராடுபவனுக்கு இறையருள் உண்டாகிறது. எந்தவித மான முயற்சியும் இன்றி உட்கார்ந்து இருந்தால், அவருடைய கருணை வரவே வராது.'

சீடர்: 'ஒவ்வொருவரும் நல்லவர்களாக இருக்கத்தான் ஏங்குகிறார்கள். ஆனால் எப்படியோ மனம் தீமைகளை நோக்கித் திரும்பிவிடுகிறது. ஒவ்வொருவரும் நல்லவர்களாக இருக்க, உண்மையானவர்களாக இருக்க, கடவுளை அறிய விரும்புவதில்லையா?'

சுவாமிஜி: 'அவ்வித விருப்பமுள்ளவர்கள் என்றால் அவர் கள் போராடிக் கொண்டிருக்கிறார்கள் என்பதுதான் பொருள். அவர்களிடம் இறைவனும் தன் கருணையைப் பொழிகிறான்.'

சீடர்: 'பாவிகள், இழிந்த வாழ்க்கையை நடத்தியவர்கள் போன்றோர் பின்னர் சிரமமோ, பெரிய சாதனைகளோ இல் லாமல் கடவுளை அடைந்தனர் என்று அவதார புருஷர்களின் வரலாறுகளில் கூறப்படுகிறதே. இதன் பொருள் என்ன?'

சுவாமிஜி: 'அவர்களிடம் மிகப் பெரிய அளவில் வெறுப்பும் சஞ்சலமும் ஏற்கனவே தோன்றியிருக்கிறது. உலக இன்பங்களை அனுபவித்து அனுபவித்துச் சலிப்பு ஏற்பட்டு விட்டது. அமைதிக்காக அவர்கள் துடித்திருக்க வேண்டும். சிறிதேனும் அமைதி பெறாமல் இந்த உலக வாழ்க்கையை ஒருகணம்கூடப் பொறுக்க முடியாது என்ற அளவிற்கு அவர்கள் வெறுமையை உணர்ந்திருக்க வேண்டும். எனவே கடவுளும் அவர்களிடம் கருணை காட்டுகிறார். அவர்கள்தமோ குணத் திலிருந்து நேராக ஆன்மீகப் பாதையை அடைந்துவிடு கிறார்கள்.'

சீடர்: 'தமோ குணம் ஆகட்டும், எதுவும் ஆகட்டும். அந்த வழியிலும் அவர்கள் கடவுளை அடையத்தானே செய்தார்கள்!'

சுவாமிஜி: 'ஆமாம், ஏன் இல்லை? ஆனால் புறக்கடை வழியாகப் புகுவதைவிட நேர் வாசல் வழியாகப் புகுவது நல்ல தல்லவா? அதுமட்டுமின்றி, ''இந்த எனது அமைதியின்மை எப்படி விலகும்?'' என்ற ஒரு துடிப்பும் அதற்கான முயற்சியும் இந்தப் பாதையிலும் இருக்கத்தானே செய்கிறது.'

சீடர்: 'நீங்கள் சொல்வது சரிதான், சந்தேகமில்லை. ஆனால் இங்கே நமக்கு உறுதியாகத் தெரிவது கடவுளின் கருணை இருந்தால்தான் இது நடக்கும் என்பதே.'

சுவாமிஜி: 'ஆமாம். அது நிச்சயம். ஆனால் அப்படிக் கடவுளை அடைபவர்கள்கூட மிகவும் சிலர்தான்.'

சீடர்: 'உண்மைதான். ஐம்புலன்களை அடக்கி, காம காஞ் சனப் பற்றுக்களைத் துறந்து கடவுளை அடையும் முயற்சியில் ஈடுபடுபவர்கள் ஒரு பிரிவினர். ஆனால் இறைவனின் திரு நாமத்தைப் பாடி அவரையே நம்பியிருப்பவர்களின் ஆசைகளை அவரே நீக்கிப் பரமபதமும் அளிக்கிறார்.'

சுவாமிஜி: 'உண்மை. ஆனால் இந்த இரண்டாம் வகை யினர் மிகவும் குறைவு. இவர்களே நிறைநிலை அடைந்த பிறகு கிருபாசித்தர்கள் என்று அழைக்கப்படுகின்றனர். முதல் பிரிவினர் ஞானிகள். இரண்டாமவர்கள் பக்தர்கள். ஆனால் இருசாராருக்கும் தியாகம்தான் மூலமந்திரம்.'

சீடர்: 'அதைப்பற்றிச் சந்தேகமே இல்லை. கிரீஷ் சந்திர கோஷ் ஒருமுறை என்னிடம் இறையருளுக்கு எந்த நிபந்தனை யும் இல்லை என்று கூறினார். அப்படி நிபந்தனைகள் ஏதாவது இருக்குமானால் அதை அருள் என்றே சொல்ல முடியாது; அருள் என்பது எல்லா நிபந்தனைகளையும் கடந்து நிற்கிறது.'

சுவாமிஜி: 'கிரீஷ் சந்திரர் கூறினாரே, அந்த நிலையில்கூட நாம் புரிந்துகொள்ள முடியாத நிபந்தனை ஒன்று இருக்கலாம். நிபந்தனைகள் அனைத்தையும் கடந்த நிலை என்பது கடைசி நிலை. காலம், இடம், காரணகாரியம் அனைத்தையும் கடந்த நிலை அது. அங்கே காரணகாரிய நியதி எதுவும் இல்லை. அங்கு யார் கருணை காட்டுவது? யாருக்குக் கருணை காட்டு வது? அங்கே வழிபடுபவர்-வழிபடும் பொருள், தியானிப்பவர்-தியானிக்கப்படும் பொருள், அறிபவன்-அறியப்படுவது எல்லாம் ஒன்றாகிவிடுகின்றன.'

சீடர்: 'சுவாமிஜி, உங்கள் வார்த்தைகளைக் கேட்பதன் மூலம் வேதவேதாந்தங்களின் சாரத்தையே புரிந்துகொண்டேன். இவ்வளவு காலம் வார்த்தைஜாலங்களின் நடுவே வாழ்ந்து கொண்டிருந்தேன் என்றுதான் தோன்றுகிறது.'

## 27

கட்டிட வேலை நடைபெறும் மடம், 1898

சீடர்: 'சுவாமிஜி, உணவிற்கும் ஆன்மீக வளர்ச்சிக்கும் ஏதாவது தொடர்பு இருக்கிறதா?'

சுவாமிஜி: 'சிறிது தொடர்பு இருக்கிறது.'

சீடர்: 'மீன் அல்லது இறைச்சியைச் சாப்பிடுவது சரியானதா? அது அவசியமானதா?'

சுவாமிஜி: 'வேண்டிய அளவு சாப்பிடு என் மகனே! அதனால் பாவம் ஏதாவது வருமானால் அதை நான் ஏற்றுக் கொள்கிறேன். உன் நாட்டு மக்களை ஒருமுறை உற்றுப் பார். அவர்கள் முகத்தில் எவ்வளவு வேதனையின் கீற்றுகள். நெஞ்சில் உரமோ துணிவோ இல்லாத நிலை! வயிறு மட்டும் பெரிதாக உள்ளது, கைகால்களோ பலமின்றிக் கிடக்கின்றன. கோழைகள், ஆண்மையற்றவர்கள்.'

சீடர்: 'இறைச்சியையும் மீனையும் சாப்பிடுவதால் நன்மை வருமானால் புத்த மதமும் வைணவமும், ''அஹிம்ஸா பரமோ தர்ம:—கொல்லாமை மிகச் சிறந்த பண்பு'' என்று ஏன் போதிக்க வேண்டும்?'

சுவாமிஜி: 'பௌத்தமும் வைணவமும் வெவ்வேறு அல்ல, புத்த மதம் அழிந்து கொண்டிருந்தபோது, இந்து மதம் அதிலிருந்து முக்கியக் கொள்கைகள் சிலவற்றை எடுத்துக் கொண்டது. அதுவே இன்று வைணவம் என்ற பெயரில் விளங்குகிறது. பௌத்தர்கள் கூறும் ''கொல்லாமை மிகச் சிறந்த பண்பு'' என்பது நல்லதுதான் . ஆனால் மக்களின் தகுதியைப் பார்க்காமல் எல்லோரும் கடைப்பிடித்தேயாக வேண்டும் என்று சட்டத்தின்மூலம் கட்டாயப்படுத்தியதால் அது இந்தியாவை நாசமாக்கிவிட்டது. விளைவு? பெரிய தார்மீகக் கொக்குகள் தான்.[1] அவர்கள் எறும்புகளுக்கு நாள்தோறும் சர்க்கரை வைப்பார்கள். அதேநேரத்தில் பணத்திற்காகச் சொந்த சகோதரனையே அழிக்கவும் தயங்க மாட்டார்கள்.'

சீடர்: 'வேதங்களிலும், மனு போன்ற சாஸ்திரங்களிலும் மீனையும் இறைச்சியையும் சாப்பிடுவதற்குத் தடை விதிக்கப்பட்டிருக்கிறதே!'

சுவாமிஜி: 'ஆமாம். சாப்பிடுவதற்கு மட்டுமல்ல; கொல்வதற்கும் தடை விதிக்கப்பட்டிருக்கிறது. வேதங்கள், ''மாஹிம்ஸ்யாத் ஸர்வ பூதானி—எந்த உயிருக்கும் துன்பம் செய்யாதீர்கள்'' என்று கூறுகிறது. மனு, ''நிவ்ருத்திஸ்து மஹாபலா—

1. தண்ணீரில் ஒற்றைக் காலில் தவம் செய்வதுபோல் நிற்கும்கொக்கு. சின்னஞ்சிறு மீன்கள் அருகில் நீந்தும்போது அது அவற்றை உண்ணாமல் அஹிம்சாவாதிபோல் நிற்கும். ஆனால் பெரிய மீன் ஒன்று வந்தால் போதும், லபக்கென்று கொத்தித் தின்றுவிடும்.

ஆசையைத் துறப்பது மிகச் சிறந்த பலனைத் தரும்''[1] என்று கூறுகிறார்.'

சீடர்: 'இப்போதெல்லாம் ஆன்மீக வாழ்வு என்று ஆரம்பித்த உடனே மீனையும் இறைச்சியும் விட்டுவிடுகிறார்கள். பலருக்கு இவற்றைச் சாப்பிடுவது, விபச்சாரம் போன்ற பாதகங்களைவிடப் பெரும் பாவமாகத் தெரிகிறது. இத்தகைய கருத்து எங்கிருந்து தோன்றியது என்று நினைக்கிறீர்கள்?'

சுவாமிஜி: 'அவை எங்கிருந்து வந்தது என்று அறிந்து கொள்வதால் என்ன லாபம்? அத்தகைய கருத்துக்கள் நம் சமுதாயத்தையும் நாட்டையும் நாசமாக்கிக் கொண்டிருப்பதை நேரடியாகக் காண்கிறாயே நீ! இதோ பார், கிழக்கு வங்க மக்கள் அதிகமாக மீன், இறைச்சி, ஆமை முதலியவற்றை உண்கிறார்கள். அதனால் மேற்கு வங்காளிகளைவிட ஆரோக்கியமாக இருக்கிறார்கள். கிழக்கு வங்காளத்தில் உள்ள பணக்காரர்கள்கூட இரவில் பூரியோ சப்பாத்தியோ சாப்பிடுவதில்லை. அவர்கள் அஜீரணம் போன்ற நோய்களால் வருந்துவதும் இல்லை. கிழக்கு வங்காளத்தின் கிராம மக்களுக்கு இந்த நோய்கள் என்றால் என்ன என்பதே தெரியாதென்று நான் கேள்விப்பட்டுள்ளேன்.'

சீடர்: 'ஆமாம் சுவாமிஜி, எங்கள் பகுதியில் அஜீரணத்தால் ஏற்படும் நோய்கள் இல்லவே இல்லை. இந்தப் பகுதிக்கு வந்த பிறகுதான் நான் அதைக் கேள்விப்பட்டேன். நாங்கள் காலையிலும் இரவிலும் மீனும் சோறும்தான் சாப்பிடுவோம்.'

சுவாமிஜி: 'நன்றாகச் சாப்பிடு. வெறும் காய்கறிகளை உண்டு, வயிற்று நோய் பிடித்த பாபாஜிக்கள் இந்த நாட்டில் பெருகி விட்டார்கள். இது சத்வ குணத்தின் அடையாளம் அல்ல, மிதமிஞ்சிய தமோ குணத்தின் அடையாளம்; மரணத்தின் நிழல். முகத்தில் ஒளி, மனத்தில் சளைக்காத உற்சாகம், எல்லையற்ற செயல்திறன் இவையே சத்வத்தின் அடையாளங்கள். சோம்பல், தூக்கம், மந்தநிலை, மோகம் இவை தமோ குணத்தின் அடையாளங்கள்.'

சீடர்: 'மீனும் இறைச்சியும் மனிதனிடம் ரஜோ குணத்தை அதிகமாக்காதா?'

சுவாமிஜி: 'நீங்கள் எல்லாம் அந்த ராஜசத்தைப் பெற வேண்டுமென்றுதான் நான் விரும்புகிறேன். இப்போது ராஜசம்

---

1. மனு, 5. 56.

தான் தேவைப்படுகிறது. சாத்வீக குணம் உடையவர்களாக யாரையெல்லாம் நினைத்துக் கொண்டிருக்கிறாயோ அவர்களுள் தொண்ணூறு சதவீதம் பேர் ஆழ்ந்த தமோ குணத்தில் தான் மூழ்கிக் கிடக்கிறார்கள். அவர்களில் பதினாறில் ஒருவர் உண்மையான சாத்வீகியாக இருந்தால் அதுவே பெரிய விஷயம். நமக்கு இப்போது தேவை என்னவென்றால் ராஜச சக்தியின் பெருந்தாண்டவம்தான். இந்த நாடு முழுவதுமே தமோ குணத்தால் மூடப்பட்டுக் கிடப்பதை நீ பார்க்கவில்லையா! இந்த நாட்டு மக்களை மீனும் இறைச்சியும் உண்ண வைத்து, அவர்களை விழித்தெழச் செய்ய வேண்டும்; செயல் வீரர்களாக்க வேண்டும். இல்லையென்றால் அவர்கள் மரங்கள்போல, கற்களைப்போல் உணர்ச்சியற்ற ஜடங்களாகப் போய்விடுவார்கள். எனவே மகனே, மீனையும் இறைச்சியையும் நன்றாக சாப்பிடு என்கிறேன்.'

சீடர்: 'சத்வ குணம் முழுமையாகத் தோன்றுமானால் ஒருவரால் மீனையும் இறைச்சியையும் விரும்ப முடியுமா?'

சுவாமிஜி: 'முடியாது, விரும்ப முடியாது. உண்மையான சாத்வீக குணம் தோன்றும்போது மீன், இறைச்சி முதலியவற்றின் மீதுள்ள ஆசைகள் எல்லாம் மறைந்துவிடுகின்றன. ஆனால் சத்வ குணம் ஓங்குவதால் பிறருக்காக அனைத்தையும் தியாகம் செய்தல், காமம் மற்றும் பணத்தாசை முற்றிலுமாக இல்லாதிருத்தல், கர்வமின்மை, அகங்காரமின்மை ஆகியவையும் உண்டாகும். இதையும் நீ கவனிக்க வேண்டும். இந்தக் குணங்கள் வரும்போது மீன், இறைச்சி உணவுகளைச் சாப்பிடும் விருப்பம் போய்விடும். இத்தகைய குணங்கள் இல்லாமல், அஹிம்சை, அஹிம்சை என்று ஒருவன் சொல்லித் திரிந்தால் அவன் அயோக்கியன், ஆஷாடபூதி என்று தெரிந்துகொள். நீயும் சத்வ குணம் நிறைந்தவனாகும் போது மீனும் இறைச்சியும் சாப்பிடுவதை முழுமையாக விட்டுவிடு.'

சீடர்: 'ஆனால் சுவாமிஜி, சாந்தோக்ய உபநிடதத்தில் (7. 26. 2) ''ஆஹார **சுத்தெள** ஸத்வ **சுத்தி**:—தூய்மையான உணவால் சத்வம் தூய்மை அடைகிறது'' என்று சொல்லப்படுகிறதே!'

சுவாமிஜி: 'ஆம். எனக்குத் தெரியும். அங்கு சங்கரர் ஆஹாரம் என்பதற்கு ''புலன்களால் நுகரப்படும் பொருட்கள்'' என்று பொருள் கூறுகிறார். ராமானுஜரோ ஆஹாரம் என்பதற்கு உணவு என்று பொருள் கொள்கிறார். என்னைப்

பொறுத்தவரையில், இரண்டு கருத்துக்களுடையவும் சமரச மான பொருளை நாம் எடுத்துக்கொள்ள வேண்டும். சாப் பாட்டில் எது தூய்மையானது, எது தூய்மை இல்லாதது என் பதைப் பற்றிய பேச்சிலேயே வாழ்நாளைக் கழிக்க வேண்டுமா அல்லது நம் புலன்களையெல்லாம் அடக்கிப் பழக வேண்டுமா? நிச்சயமாகப் புலன்களை அடக்குவதுதான் முதன்மையானது. அத்தகைய புலனடக்கத்திற்காக உணவில் தூய்மை முதலான விதிகளைச் சற்று கடைப்பிடிக்க வேண்டும், அவ்வளவுதான்.

'நமது சாஸ்திரப்படி மூன்று வகையான காரணங்கள் உணவை அசுத்தமாக்குகின்றன—(1) ஜாதி தோஷம்: பூண்டு, வெங்காயம் முதலியவை இயல்பாகவே தோஷம் உடையவை. (2) நிமித்த தோஷம்: இறந்த பூச்சிகள், தூசி முதலியவை விழுவதால் உணவு அசுத்தமடைதல், இது கடைகளில் வாங்கும் உணவுப் பொருட்களில் நாம் காண்பதுபோல். (3) ஆச்ரய தோஷம்: தீய இடங்களிலிருந்து வருவதாலும், தீயவர்கள் தொடுவதாலும் உணவில் வரும் தோஷம்.

'முதலிரண்டு தோஷங்கள் விஷயத்தில் தனி கவனம் செலுத்த வேண்டும். ஆனால் இந்த நாட்டில் இந்த இரண் டையும்பற்றி யாரும் கவலைப்படுவதாகத் தெரியவில்லை. சண்டையெல்லாம் மூன்றாவதுபற்றிதான். இதில் விஷயம் என்னவென்றால், உணவு பிறர் தொடுவதால் கெட்டுவிட்டதா இல்லையா என்பதை ஒரு யோகியால் மட்டுமே அறிய முடியும்; மற்றவர்களால் முடியாதென்றே சொல்லலாம். ஆனால் அதைப் பிடித்துக் கொண்டுதான் இந்த நாட்டின் ஒருகோடி யிலிருந்து மறுகோடிவரை ''தொடாதே, தொடாதே'' என்று கூச்சலிட்டு மாய்கிறார்கள். நல்லவன் கெட்டவன் என்பதை யெல்லாம் பார்க்க வேண்டாம், பூணூல் மட்டும் இருந்தால் போதும், அவனிடமிருந்து உணவை ஏற்றுக் கொள்ளலாமாம்! உண்மையிலேயே ஆச்ரய தோஷத்தை அறிய முடிந்தவராக நான் கண்டது ஸ்ரீராமகிருஷ்ணரை மட்டுமே. பல நேரங் களில் அவரால் சிலரது கையிலிருந்து எதையும் வாங்கிச் சாப்பிட முடியாமல் போய்விடும். அதுபற்றி ஆராய்ந்தால் அந்தக் குறிப்பிட்ட நபர் ஏதாவது பாவங்கள் செய்தவராக இருப்பார்.

'உங்கள் மதம் இப்போது சோற்றுப் பானைகளுக்குள் அடங்கி விட்டது—பிற ஜாதியினர் தொட்ட உணவை உண்ணாதிருந்தால் போதும், இறையனுபூதி சர்வ நிச்சயம்!

உயர்ந்த உண்மைகளை ஒதுக்கிவிட்டு, அற்ப விஷயங்களுக்காக அடித்துக் கொள்கிறீர்கள்!'

சீடர்: 'அப்படியானால், யார் தொட்ட உணவையும் சாப்பிடுவதுதான் நமது கடமையா?'

சுவாமிஜி: 'நான் ஏன் அப்படிச் சொல்ல வேண்டும்? நீ பிராமணன். பிற ஜாதியினரின் உணவை உண்ண மாட்டாய். ஆனால் மற்ற பிராமணர்கள் சமைத்ததைச் சாப்பிடலாமே! ராம பிரிவைச் சேர்ந்த நீ பாரேந்திர பிரிவைச் சேர்ந்தவர்கள் சமைத்த உணவை ஏன் சாப்பிடக் கூடாது? நீ சமைத்த உணவை ஏன் பாரேந்திர பிராமணன் சாப்பிடக் கூடாது? மராத்தி, தெலுங்கர், கன்னோஜி பிராமணர்களுள் ஒருவர் சமைத்த உணவை மற்றவர்கள் ஏன் சாப்பிடக் கூடாது? கல்கத்தாவிலோ ஜாதி விஷயம் அதிவினோதமாக உள்ளது. பிராமணர்களும் காயஸ்தர்களும் ஹோட்டலில் போய் சாப்பிடுகிறார்கள். வெளியே வந்து சமுதாயத்தின் பெரிய தலைவர்களாகத் தங்களைக் காட்டிக் கொள்கிறார்கள்; இதைத் தொடாதே, அதைத் தொடாதே என்று சட்டதிட்டங்களைப் போடுகிறார்கள். இப்படிப்பட்ட அயோக்கியர்கள் போடும் சட்டதிட்டங்களால்தான் சமுதாயம் நடக்க வேண்டுமா? அவர்களின் சட்டங்களைத் தூக்கியெறிந்துவிட்டு, நமது மகத்தான ரிஷிகள் உருவாக்கிய சட்டதிட்டங்களை மீண்டும் கொண்டுவர வேண்டும். அப்போதுதான் நாடு நலமடையும்.'

சீடர்: 'அப்படியென்றால் இப்போது கல்கத்தாவில் பழங்கால ரிஷிகள் செய்த சட்டங்கள் வழிகாட்டிகளாக இல்லையா?'

சுவாமிஜி: 'கல்கத்தாவில் ஏன், நான் இந்தியா முழுவதும் மூலைமுடுக்கெல்லாம் தேடிவிட்டேன். ரிஷிகள் அமைத்த விதிகள் எங்கேயும் சரியாகப் பின்பற்றப்படவில்லை. நாட்டு வழக்கங்கள், வட்டார வழக்கங்கள், பெண்களிடையில் இருக்கின்ற சடங்குகள் இவைதாம் எங்கும் ஆட்சி செய்கின்றன. சாஸ்திரங்களை யார் படிக்கிறார்கள்? அதன்படி சமுதாயத்தை நடத்த யார் நினைக்கிறார்கள்?'

சீடர்: 'அப்படியென்றால் நாம் செய்ய வேண்டியது என்ன?'

சுவாமிஜி: 'ரிஷிகளின் பழைய சட்டங்களை மீண்டும் கொண்டுவர வேண்டும். மனு, யாஜ்ஞவல்கியர் ஆகியவர்களின் கருத்துக்களால் நாட்டிற்கு உயிரூட்ட வேண்டும். சிறிது மாற்றங்கள் செய்து மக்களுக்குத் தர வேண்டும். இப்போது

இந்தியாவில் பழங்காலத்தில் இருந்த அந்த நான்கு ஜாதி அமைப்புமுறை இல்லை. ஆனால் நாம் அவர்களைப் பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்ற நான்கு பிரிவுகளுக்குள் கொண்டுவர வேண்டும். எல்லா பிராமணர் களையும் இணைத்து ஒரே பிராமண ஜாதியை உண்டாக்க வேண்டும். அதுபோலவே மற்ற மூன்று ஜாதிகளையும் உருவாக்கி வைதீக நெறிக்குள் கொண்டுவர வேண்டும். இது செய்யப்படாமல், ''நாங்கள் உங்களைத் தொட மாட்டோம்'' என்ற உங்கள் வெறும் கூச்சலா நமது தாய்நாட்டிற்கு நன்மையைத் தரும்?'

## 28

கட்டிட வேலை நடைபெறும் மடம், 1899

சீடர்: 'சுவாமிஜி! நம் சமுதாயமும் நாடும் ஏன் இவ்வளவு மோசமான நிலைக்கு வந்துவிட்டது?'

சுவாமிஜி: 'நீங்களே அதற்குப் பொறுப்பு.'

சீடர்: 'அது எப்படி? ஆச்சரியமாக இருக்கிறதே!'

சுவாமிஜி: 'நெடுங்காலமாகத் தாழ்ந்த வகுப்பினரை வெறுத்து ஒதுக்கினீர்கள், அதன் பயனாக இன்று உலகால் வெறுக்கப்படுபவர்களாகி விட்டீர்கள்.'

சீடர்: 'நாங்கள் எங்கே அவர்களை வெறுத்து ஒதுக்கினோம்?'

சுவாமிஜி: 'ஏன்? புரோகிதர்களாகிய நீங்கள், பிராமணரல்லாதவர்களை வேதங்களையும் வேதாந்தங்களையும் மற்ற சாஸ்திரங்களையும் படிக்க அனுமதிக்கவில்லை. அவர்களைத் தொடுவதில்லை. நீங்கள் அவர்களைக் கீழான நிலையிலேயே வைத்திருந்தீர்கள். சுயநலத்தின் காரணமாக அவர்களை இவ்வாறு இழிவுபடுத்தினீர்கள். பிராமணர்கள், தாமே எல்லா தர்ம சாஸ்திரங்களையும் தங்கள் தனி உரிமையாக ஆக்கி, விதி விலக்குகளைத் தங்கள் கைகளில் வைத்துக் கொண்டார்கள்! இந்தியாவின் பிற பிரிவினரைக் கீழானவர்கள், இழிந்தவர்கள் என்று திரும்பத்திரும்பச் சொல்லி அவர்கள் மனத்தில் தாங்கள் உண்மையில் அத்தகையவர்களே என்ற எண்ணத்தை உண்டாக்கிவிட்டார்கள். ஆங்கிலத்தில் சொல்வார்களே, அதுபோல் 'ஹிப்னடைஸ்' (Hypnotise) செய்து விட்டார்கள், அதாவது மனவசியம் செய்துவிட்டார்கள். இப்போது பிராமணர் அல்லாதவர்கள் சிறிதுசிறிதாக எழுச்சி பெற்றுக் கொண்டிருக் கிறார்கள். பிராமணர்களின் சாஸ்திரங்களிலும் மந்திரங்களிலும்

அவர்களுக்கு இருந்துவந்த நம்பிக்கை தளர்ந்துவருகிறது. மேலைநாட்டுக் கல்வி பரவியதால், பிராமணர்களின் சூழ்ச்சிகள் யாவும் மழைக் காலத்தில் பத்மா நதியின் கரைகள் சரிந்து விழுவதைப்போல் சரிந்து கொண்டிருக்கின்றன! நீ அதைப் பார்க்கவில்லையா?'

சீடர்: 'ஆமாம். ஆசாரம் போன்றவை எல்லாம் இப்போது படிப்படியாகக் குறைந்து வருகிறது.'

சுவாமிஜி: 'குறையாமல் என்ன செய்யும்? பிராமணர்கள் படிப்படியாக மிக அதிக அளவில் ஒழுக்கம் இல்லாதவர்களாக வும் ஆசாரம் இல்லாதவர்களாகவும் மாறிவிட்டார்கள். தங்கள் ஆதிக்கத்தை அழியாமல் காப்பாற்றிக் கொள்வதற்காக அவை தீகமான, நீதிக்குப் புறம்பான, பகுத்தறிவிற்குப் பொருந்தாத எத்தனையெத்தனை நியமங்களை நடைமுறைக்குக் கொண்டு வந்தார்கள்! அதன் விளைவுகளை இப்போது அறுவடை செய்து கொண்டிருக்கிறார்கள்.'

சீடர்: 'அந்த விளைவுகள் எவை?'

சுவாமிஜி: 'உனக்குத் தெரியவில்லையா? இந்தியாவிலுள்ள சாதாரண மக்களை இழிவுபடுத்தியதால்தான் கடந்த ஆயிரம் ஆண்டுகளாக நீங்கள் அடிமைகளாக இருக்கிறீர்கள்; மேலை நாட்டினரின் கண்களுக்கு வெறுக்கத் தக்கவர்களாக இருக் கிறீர்கள்; உங்கள் நாட்டினராலேயே ஒதுக்கப்படுகிறீர்கள்.'

சீடர்: 'ஆனால் சுவாமிஜி, சடங்குகளையெல்லாம் இன்னும் பிராமணர்கள்தாம் வழி நடத்துகிறார்கள். கர்பா தானம் முதலான எல்லா சடங்குகளிலும்[1] மக்கள் அவர்கள் சொல்வதையே பின்பற்றுகிறார்கள். அப்படி இருக்கும் போது நீங்கள் ஏன் இப்படிப் பேசுகிறீர்கள்?'

சுவாமிஜி: 'நீ சொல்வதை நான் எங்கும் காணவில்லை. சாஸ்திரங்களில் சொல்லப்பட்டுள்ள பத்து சடங்குகள் எல்லாம் இப்போது எங்கே செய்யப்படுகின்றன? நான் இந்தியா முழுவதும் பயணம் செய்திருக்கிறேன். சுருதிகளிலும் ஸ்மிருதி களிலும் தடை செய்யப்பட்டுள்ள வட்டாரப் பழக்க

---

1. இவை பத்து சம்ஸ்காரங்கள் எனப்படுகின்றன—1. கர்பாதானம் (கருத்தரித்தல்); 2. பும்ஸவனம் (கருத்தரித்த 2,3 அல்லது 4-ஆம் மாதங்களில் செய்யப்படுவது); 3. ஸீமந்தோன்னயனம் (5 முதல் 8-ஆம் மாதங்களுக்குள் செய்யப்படுவது ); 4. ஜாதகர்மம் (குழந்தை பிறந்ததும் செய்யப்படுவது); 5. நாமகரணம் (பெயரிடுதல்); 6. அன்ன ப்ராஸனம் (சோறு ஊட்டுதல்); 7. சௌலம் (மூன்று வயதில் செய்யப்படுவது); 8. உபநயனம் (பூணூல் அணி விக்கும் சடங்கு); 9. விவாஹம் (திருமணம்); 10. அந்த்யேஷ்டி (ஈமச் சடங்கு).

வழக்கங்களும் சடங்குகளுமே எங்கும் ஆதிக்கம் செலுத்து கின்றன. உள்ளூர் நடைமுறைகள், சடங்குகள், பெண் களிடையே மட்டும் காணப்படும் சில பழக்கவழக்கங்கள் இவை யெல்லாம் ஸ்மிருதிகளின் இடத்தைப் பிடித்துக் கொண்டிருக் கின்றன. யார் யாருக்குப் பணிகிறார்கள்? போதிய பணம் கொடுத்தால் உங்கள் புரோகிதர்கள் நீ விரும்பும் விதிவிலக்கு களை எழுதிவைக்கத் தயாராக இருக்கிறார்கள். அவர்களுள் எத்தனை பேர் கல்ப, க்ருஹ்ய, ச்ரௌத சூத்திரங்களைப் படித்திருக்கின்றனர்? வங்காளத்தில் ரகுநந்தனரின் விதிகளே பெரும்பாலும் பின்பற்றப்படுகின்றன. சற்று அதிகமாகப் போனால் மிதாக்ஷரரின் முறை வழக்கில் உள்ளது. மற்ற சில இடங்களில் மனு சாஸ்திரவிதிகள் பின்பற்றப்படுகின்றன. ஒரே சாஸ்திர விதிதான் எல்லா இடங்களிலும் பின்பற்றப்படுவதாக நீ நினைக்கிறாய் போலும்! அதனால்தான் வேதங்களின் உயர்வை மக்களுக்கு எடுத்துக் காட்டி, அவர்களை வேதங்களைப் படிக்கவைத்து, வேதங்களின்படி நடக்கச்செய்ய வேண்டுமென நான் விரும்புகிறேன்.'

சீடர்: 'இந்தக் காலத்தில் அதைச் செய்ய முடியுமா?'

சுவாமிஜி: 'பழங்காலத்தில் சொல்லப்பட்டுள்ள எல்லா விதிகளும் இப்போது பயன்படாதுதான். ஆனால் அவற்றில் புதியவற்றைச் சேர்ப்பதன் மூலமும் மாறுதல்களைச் செய்வதன் மூலமும் காலத்திற்கு ஏற்றாற்போல் உருவாக்கி, சமுதாயத்திற்கு அதை ஒரு புதியமாதிரியாக ஆக்கித் தந்தால், அவை ஏன் மக்களால் ஏற்றுக்கொள்ளப்படாது?'

சீடர்: 'மனு சாஸ்திர விதிகள் மட்டுமாவது இந்தியா முழு வதும் பின்பற்றப்படுவதாகவே நான் எண்ணியிருந்தேன்.'

சுவாமிஜி: 'அப்படி இல்லவே இல்லை. உங்கள் வங் காளத்தை எடுத்துக் கொள்ளுங்கள்: தந்திரங்களில் கூறப்பட்ட வாமாச்சாரப் பழக்கங்களும் சடங்குகளும் வேர்வரைக்கும் பரவிவிட்டன. அழிந்துபோன புத்த மதத்தின் எஞ்சிய எலும்புக் கூடான வைணவத்தில்கூட இந்த வாமாச்சாரம் நுழைந்து விட்டது! வேதங்களுக்கு எதிரான இந்த வாமாச்சாரத்தை நாம் தடுக்க வேண்டும்.'

சீடர்: 'இந்தக் குப்பைக் குவியல்களைத் தூய்மை செய்வது என்பது ஆகக்கூடிய காரியமா?'

சுவாமிஜி: 'ஏ கோழையே! முட்டாள்தனமாக என்ன உளறுகிறாய்? முடியாது, முடியாது என்று இப்படி அழுது

தான் இந்த நாட்டையே குட்டிச்சுவராக்கி விட்டீர்கள். மனித முயற்சியால் முடியாதது என்ன இருக்கிறது?'

சீடர்: 'ஆனால் சுவாமிஜி, மனுவும் யாஜ்ஞவல்கியரும் மீண்டும் இந்த நாட்டில் பிறக்காமல் அத்தகைய காரியங்களைச் செய்ய முடியாது?'

சுவாமிஜி: 'அடக் கடவுளே! புனிதமும் தன்னலமற்ற உழைப்பும்தானே அவர்களை மனுவாகவும் யாஜ்ஞவல்கியராகவும் ஆக்கியது! இல்லை, வேறு ஏதாவது அவர்களை அப்படி ஆக்கியதா? நாமும் முயன்றால் அந்த மனுவையும் யாஜ்ஞவல்கியரையும்விட மகத்தானவர்கள் ஆகலாம். அப்போது நம் கருத்துக்கள் ஏன் பின்பற்றப்படாது?'

சீடர்: 'நீங்கள்தான் சிறிது நேரத்திற்கு முன்பு பழங்கால விதிமுறைகளை நாட்டில் பரப்ப வேண்டும் என்று சொன்னீர்கள். அப்படி இருக்கும்போது பழங்கால ரிஷிகளாகிய மனு முதலியவர்களை எப்படிக் குறைவாக மதிப்பிடலாம்?'

சுவாமிஜி: 'நான் என்ன சொல்கிறேன், நீ என்ன புரிந்துகொள்கிறாய்? நான் சொன்னதன் கருத்தையே நீ விட்டுவிட்டாய்! பழைய வைதீகப் பழக்கவழக்கங்களையும் விதிகளையும் இப்போதைய சமுதாயத்தின் தேவைக்கும் காலத்தின் தேவைக்கும் ஏற்ப மாற்றிப் புது வடிவம் கொடுத்து நாட்டில் செயல்படுத்த வேண்டுமென்று சொன்னேன். அப்படித் தானே?'

சீடர்: 'ஆமாம்.'

சுவாமிஜி: 'பிறகு நீ ஏன் இப்படிப் பேசுகிறாய்? நீ சாஸ்திரங்களைப் படித்திருக்கிறாய். என் நம்பிக்கை உன் போன்றவர்களிடம்தான் இருக்கிறது. என் வார்த்தைகளின் உண்மைக் கருத்துக்களைப் புரிந்து செயல்படு.'

சீடர்: 'நாங்கள் சொல்வதை யார் கேட்பார்கள்? இந்த நாடு ஏன் அதைப் பின்பற்ற வேண்டும்?'

சுவாமிஜி: 'அவர்களுக்குச் சரியாகப் புரியவைத்து அதைச் செயலிலும் காட்டினால் அவர்கள் கண்டிப்பாக உன் சொல்லைக் கேட்டேயாக வேண்டும். அப்படி இல்லாமல் கிளிப்பிள்ளைகளைப் போல் சுலோகங்களை மட்டும் சொல்வதும் வெற்றுப் பண்டிதராகி, கோழையைப் போல் பிறர் எழுதியவற்றை மேற்கோள் காட்டுவதுமாக இருந்து, ஆனால் செயலில் எதுவும் காட்டாவிட்டால் உன் பேச்சை யார் கேட்பார்கள்?'

சீடர்: 'சமுதாயச் சீர்திருத்தத்தைப்பற்றிச் சுருக்கமாகச் சிறிது கூறுங்கள்.'

சுவாமிஜி: 'ஏன், வேண்டிய அளவு நான் உனக்கு ஏற்கனவே சொல்லிவிட்டேன். அவற்றுள் எதையேனும் ஒன்றைச் செயல் படுத்து. சாஸ்திரங்களைப் படித்ததாலும், எனது பேச்சுக்களைக் கேட்டதாலும் நீ பயன் பெற்றாய் என்பதை உலகம் காணட்டும். மனு தர்மம் அது இது என்று எத்தனையோ சாஸ்திரங்களைப் படித்திருக்கிறாய், அவற்றின் அடிப்படை, அவற்றின் நோக்கம் என்னவென்று சிந்தித்துப் பார். அந்த அடிப்படையைச் சிறிதும் மாற்றாமல் வைத்துக்கொண்டு, அவற்றின் சாரத்தைப் பழங்கால ரிஷிகளின் முறைப்படித் தொகுத்து, இக்காலத்திற்கு ஏற்ற சிந்தனைகளைச் சேர்த்து புதிய விதிகளை உருவாக்கு. அந்த விதிகளால் இந்தியாவில் உள்ள எல்லா இனத்தினரும் எல்லா ஜாதியினரும் எல்லா பிரிவினரும் உண்மையான நன்மை அடைய வேண்டும் என்பதை மட்டும் கவனத்தில் வைத்துக் கொள். அத்தகைய ஸ்மிருதி ஒன்றை உருவாக்கு. நான் அதைத் திருத்தித் தருகிறேன்.'

சீடர்: 'சுவாமிஜி, அது அவ்வளவு சுலபம் அல்ல. அப்படி ஒன்றை எழுதினாலும் மக்கள் அதை ஏற்றுக்கொள்வார்களா?'

சுவாமிஜி: 'ஏன் ஏற்க மாட்டார்கள்? நீ முதலில் எழுது. ''காலோஹ்ய்யம் நிரவதிர் விபுலா ச ப்ருத்வீ—காலம் எல்லை யற்றது, உலகம் மிகப் பரந்தது.'' நீ மட்டும் சரியாக எழுதினால் காலம் வரும்போது அது நிச்சயம் ஏற்றுக் கொள்ளப்படும். உன்னிடம் நம்பிக்கை கொள். நீங்கள்தானே ஒரு காலத்தில் வேத ரிஷிகளாக இருந்தீர்கள்; இப்போது வேறு உடல் தாங்கி வந்திருக்கிறீர்கள், அவ்வளவுதான். உங்களிடம் எல்லையற்ற சக்தி இருப்பதை நான் என் ஞானக் கண்களால் காண்கிறேன். அந்தச் சக்தியைக் கிளர்ந்து எழச் செய். எழுந்திரு. எழுந்திரு. எழுந்து வரிந்துகட்டிக் கொண்டுச் செயலில் இறங்கு. நிலையற்ற பணத்தையும் புகழையும் வைத்துக் கொண்டு என்ன செய்யப் போகிறாய்? என் எண்ணம் என்ன தெரியுமா? எனக்கு முக்தியும் வேண்டாம், வேறெதுவும் வேண்டாம். என் வேலையெல்லாம் இத்தகைய கருத்துக்களை உங்களிடம் கிளர்ந்தெழும்படிச் செய்வதுதான். ஒரேஒரு மனிதனை உருவாக்குவதற்காக லட்சம் பிறவிகள் எடுக்கவும் நான் தயாராக இருக்கிறேன்.'

சீடர்: 'இத்தகைய முயற்சிகளால் என்ன பயன்? சாவு நம் பின்னால் எப்போதும் நிற்கிறதே!'

சுவாமிஜி: 'சீ, இது என்ன பேச்சு! சாவதென்றாலும் அது ஒரு முறைதானே! கோழையைப் போல் எப்போதும் சாவைப்

பற்றியே நினைத்துநினைத்து ஏன் ஒவ்வொரு கணமும் செத்துக் கொண்டிருக்கிறாய்?'

சீடர்: 'சரி, நினைக்கவில்லை. ஆனால் நிலையற்ற இந்த உலகத்தில் வேலை செய்தாலும் அதனால் கிடைக்கப்போகும் நன்மை என்ன?'

சுவாமிஜி: 'என் மகனே! சாவு தவிர்க்க முடியாதது என்றாகி விட்ட போது, கற்களைப் போலவும் கட்டைகளைப் போலவும் கிடந்து சாவதைவிட வீரனாகச் சாவது சிறந்ததல்லவா? அழியக் கூடிய இந்த உலகில் இரண்டு நாட்கள் அதிகமாக வாழ்வதால் தான் என்ன பயன்? துருப்பிடித்து அழிவதைவிடத் தேய்ந்து அழிவது மேலானது அல்லவா! நரைத்து, மூத்து கொஞ்சம் கொஞ்சமாகச் சாவதைவிட, பிறருக்காகச் சிறிதேனும் நன்மை செய்து வீரனாக இறப்பது மேலானதல்லவா?'

சீடர்: 'உண்மைதான். இன்று உங்களிடம் எதை யெதையோ கேட்டுத் தொந்தரவு செய்துவிட்டேன்.'

சுவாமிஜி: 'ஆர்வமுள்ளவர்களிடம் இரண்டு நாட்கள் முழுவதும் பேசினாலும் எனக்குக் களைப்பு வராது. உணவையும் உறக்கத்தையும் விட்டுவிட்டு, இரவுபகலாகப் பேச முடியும். நான் நினைத்தால் இமாலயத்தில் ஒரு குகையில் அமர்ந்து சமாதியில் மூழ்கிவிடவும் முடியும். இப்போதெல்லாம் அன்னை யின் அருளால் சாப்பாட்டைப்பற்றி நான் நினைக்க வேண்டிய தில்லை. அது எப்படியோ வந்து சேர்கிறது. பிறகு நான் ஏன் அப்படி மலைக்குகையில் இருக்கவில்லை? இங்கு ஏன் இருக் கிறேன்? இந்த நாட்டின் துயரமான நிலையும் அதன் எதிர் காலத்தைப் பற்றிய சிந்தனையும்தான் நான் அவ்வாறு இருக்க விடாமல் செய்கின்றன; சமாதி முதலியனவெல்லாம் பயனற் றவையாகத் தோன்றுகின்றன; பிரம்மபதம்கூடத் துச்சமாகத் தோன்றுகிறது. உங்கள் நன்மைதான் என் வாழ்க்கை விரதம். என்று அந்த விரதம் நிறைவேறுமோ, அன்று இந்த உடம்பை வீசிவிட்டு ஒரே ஓட்டமாக ஓடி விடுவேன்.'

சுவாமிஜியின் வார்த்தைகளைக் கேட்டு சீடர் பேசாமல் அவரைப் பார்த்தபடியே, அவரது ஆச்சரியகரமான மனத்தை, எல்லையற்ற அன்பை நினைத்தபடி அமர்ந்திருந்தார். நெடுநேரத் திற்குப் பிறகு அவரிடமிருந்து விடைபெறுவதற்காக எழுந்து பக்தியோடு அவரை வணங்கி, போவதற்கு அனுமதி கேட்டார்.

சுவாமிஜி: 'நீ ஏன் போக விரும்புகிறாய்? மடத்திலேயே ஏன் தங்கக் கூடாது? உலகியல் மக்களிடையே சென்றால்

மனம் மீண்டும் தூய்மையிழந்துவிடும். இங்கே பார். எவ்வளவு சுகமாகக் காற்று வீசுகிறது. இதோ கங்கை பாய்கிறது. சாதுக்கள் சாதனைகளில் ஈடுபட்டுள்ளார்கள்; உயர்ந்த கருத்துக்களைப் பற்றிப் பேசுகிறார்கள். கல்கத்தா சென்ற உடனே குப்பையெல்லாம்தான் உன் எண்ணத்தில் வரும்.'

சீடர் மிகுந்த மகிழ்ச்சியோடு, 'மிகவும் நல்லது. இன்று தங்குகிறேன்' என்றார்.

சுவாமிஜி: 'ஏன் இன்று மட்டும்? எப்போதும் நீ இங்கேயே ஏன் தங்கக் கூடாது? சம்சார வாழ்விற்குப் போவதில் என்ன பயன்?'

சுவாமிஜியின் வார்த்தைகளைக் கேட்டுச் சீடர் தலை குனிந்து நின்றார். பலவிதமான சிந்தனைகள் அவர் மனத்தில் தோன்றி, அவரைப் பேச முடியாமல் செய்தன.

## 29

கட்டிட வேலை நடைபெறும் மடம், 1898

மடம் கட்டப்படும் இடத்தில் சுவாமிஜி சீடருடன் நடந்து கொண்டிருந்தார். வில்வ மரத்தின் அருகில் நின்றுகொண்டு, 'ஓ இமயமே! கணேசர் எனக்கு நன்மையை அருள்பவர்' என்று தொடங்கி 'தண்டி சன்னியாசிகளும் சடை முடி உடைய யோகிகளும்கூட வருவார்கள்' என்று முடியும் வங்கமொழிப் பாடல் ஒன்றைப் பாடினார். இறுதி வரிகளைத் திரும்பத் திரும்பப் பாடியபடியே, 'உனக்குப் புரிகிறதா? காலப்போக்கில் இங்கே எத்தனையெத்தனையோ சாதுக்களும் சன்னியாசிகளும் வருவார்கள்' என்றார். இதைச் சொல்லிக்கொண்டே மரத்தின் அடியில் அமர்ந்து, 'வில்வமரத்தின் அடி மிகவும் புனிதமானது. இங்கு அமர்ந்து சாதனைகள் செய்வது விரைவில் ஆன்ம விழிப்பை உண்டாக்கும்' என்று குருதேவர் சொல்வது வழக்கம்' என்றார்.

சீடர்: 'சுவாமிஜி, ஆன்மா, ஆன்மாவல்லாதது பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபடுபவர்கள் இடம், காலம் முதலியவற்றைக் கருத்தில் கொள்வது அவசியமா?'

சுவாமிஜி: 'ஆன்ம ஞானத்தில் நிலைத்திருப்பவர்களுக்குத் தேவையில்லை. ஆனால் அந்த நிலையை உடனடியாக அடைந்துவிட முடியுமா என்ன? எவ்வளவோ சாதனைகள் அதற்குத் தேவை! எனவே ஆரம்பக் காலத்தில் புற உதவிகளை ஏற்று, சொந்தக் காலில் நிற்பதற்குக் கற்றுக்கொள்ள வேண்டும்.

ஆன்மஞானத்தில் நிலைத்த பிறகு புற உதவிகள் தேவை இல்லை.

'சாஸ்திரங்களில் பல்வேறான சாதனைகள் கூறப்பட்டிருப்பது இந்த ஆன்ம ஞானத்தை அடைவதற்காகத்தான். ஆனால் சாதகர்களின் தகுதிக்கு ஏற்பச் சாதனைகளும் வெவ்வேறாக உள்ளன என்பதும் உண்மை. இந்தச் சாதனைகளும் ஒருவகையான செயல்தான். செயல் இருக்கும்வரையில் ஆன்மாவைக் காணவும் முடியாது. ஆன்மாவைக் காண்பதற்குக் குறுக்கே நிற்கும் தடைகளைச் சாஸ்திரங்கள் கூறுகின்ற சாதனைகளின் மூலம் நீக்க வேண்டும். செயலால் ஆன்மாவை நேரடியாக அடைய முடியாது; மூடியிருக்கும் சில திரைகளை நீக்குவதற்கு அது உதவுகிறது, அவ்வளவுதான். பிறகு ஆன்மா தன் சொந்த மகிமையில் தானே ஒளிர்கிறது. அதனால் அல்லவா உரையாசிரியர் (சங்கரர்), ''பிரம்ம ஞானத்தில் செயல் என்பதற்கு ஒரு துளியும் தொடர்பு இல்லை'' என்று கூறுகிறார்.'

சீடர்: 'ஆனால் ஆன்ம வெளிப்பாட்டிற்கு எதிராக நிற்கும் தடைகளை எல்லாம் ஏதாவது ஒருவகையில் செயல்புரியாமல் நீக்க முடியாது. எனவே செயல் என்பது பிரம்ம ஞானத்தை அடைய ஒரு மறைமுகமான வழியாக உள்ளது.'

சுவாமிஜி: 'காரணகாரியத் தொடர்ச்சி என்னும் நிலையிலிருந்து பார்த்தால் முதலில் அப்படித் தோன்றுகிறது. ''பலன் கருதிச் செய்யப்படும் கர்மம், நிச்சயமாகப் பலனைக் கொண்டு வரும்'' என்ற பூர்வ மீமாம்சைக் கருத்து இந்தக் கண்ணோட்டத்தில் எழுந்ததுதான். ஆனால் ஆன்மாவின் காட்சியை இவ்வாறு கர்மத்தின்மூலம் அடைய முடியாது. ஏனெனில் சாதகன் ஆன்மீகச் சாதனைகளைப் பழகும்போது பலன்களைப் பொருட்படுத்தக் கூடாது என்று கூறப்பட்டிருக்கிறது. எனவே அவை சாதகனின் மனத்தைத் தூய்மைப்படுத்துவதற்கான காரணங்கள் மட்டுமே. இந்தச் சாதனைகளின் விளைவாக ஆன்ம ஞானம் கிடைக்குமென்றால் சாஸ்திரங்கள் இந்தச் சாதனையின் பலன்களை விட்டுவிடும்படிச் சொல்லாது. எனவே பலனைக் கருதியே காரியங்கள் செய்யப்படுகின்றன என்று பூர்வ மீமாம்சை கூறுகிறது. இந்தக் கொள்கையை மறுத்து, கீதையில், பலனில் விருப்பம் கொள்ளாமல் கர்மயோகம் செய்ய வேண்டும் என்ற கருத்து கூறப்பட்டது. புரிகிறதா?'

சீடர்: 'பலன்களை நாடக் கூடாது என்றால் கஷ்டப்பட்டு ஏன்தான் கர்மத்தில் ஈடுபட வேண்டும்?'

சுவாமிஜி: 'உடலெடுத்த யாரும் ஏதாவது செயல்புரிவது தவிர்க்க முடியாதது. செயல்புரிந்தே ஆகவேண்டும் என்றிருக்கையில், எந்தவிதமாகச் செயல்புரிந்தால் ஆன்மக் காட்சி பெற்று முக்திப்பேற்றை அடைய முடியுமோ, அந்த விதமாகச் செயல்புரிவதே பலன் கருதாத கர்மயோகம் எனப்படுகிறது. ''ஏன்தான் வேலை செய்ய வேண்டும்?'' என்று நீ கேட்டாயே, அதற்கு, எந்த வேலை செய்தாலும் அதற்குப் பின்னால் ஏதாவது ஓர் ஆதாய நாட்டம் இருக்கிறது என்பதுதான் பதில். ஆனால் தொடர்ந்து செயல் புரியும்போது, ஒரு செயல் மற்றொரு செயலுக்கு இழுத்துச் சென்று, பிறவி, மறுபிறவி என்று நம்மைப் பிறவிகள்தோறும் உழலச் செய்வதைக் காணலாம். அப்போது மனிதன் விழித்தெழுந்து ''இதன் முடிவுதான் எங்கே?'' என்று கேட்கிறான். அதன் பிறகே அவன் கீதையில் (4. 17) பகவான் கூறிய ''கஹனா கர்மணோ கதி:—கர்மத்தின் போக்கை அறிவது மிகவும் கடினமானது'' என்ற கருத்தின் முழு உண்மையை அறிகிறான். பலனை எதிர்பார்த்துச் செய்யும் செயல்கள் எந்த அமைதியையும் கொண்டுவராததை அறியும்போது, அவன் செயல்புரிவதை விட்டுவிடுகிறான். ஆனால் உடலெடுத்துள்ள நாம் எதையாவது செய்தேயாக வேண்டியிருக்கிறது. எதைச் செய்வது? எனவே சில நற்பணிகளைச் செய். ஆனால் பலனை நாடாதே. ஏனெனில் இந்தப் பலனில் கணக்கற்ற பிறப்பு, இறப்புகளுக்கான விதைகள் மறைந்திருப்பதை அவன் அறிகிறான். எனவே செயல்கள் அனைத்தையும் துறந்த பிரம்மஞானி, பார்வைக்கு ஏதோ வேலைகளில் மூழ்கி இருப்பதுபோல் காணப்பட்டாலும் உண்மையில் அவனுக்கு அதில் எந்தப் பற்றும் கிடையாது. இவர்களையே சாஸ்திரங்கள் நிஷ்காம கர்மயோகிகள் என்று அழைக்கின்றன.'

சீடர்: 'அப்படியென்றால் பிரம்மஞானிகள் தன்னலமின்றிச் செயல்புரிவது பைத்தியக்காரனின் செயல்கள் போன்றதா?'

சுவாமிஜி: 'ஏன் அப்படி நினைக்கிறாய்? பலனை விட்டுவிடுவது என்றால், தனக்காக, சொந்த உடம்பிற்காக, மனத்திற்காக, சொந்த சுகத்திற்காக வேலை செய்யாதிருப்பது என்று பொருள். பிரம்மஞானி தன் சுகத்தை நாடுவதே இல்லை. ஆனால் மற்றவர்களின் சுகத்திற்காக, அவர்களின் உண்மையான நன்மைக்காக அவர் ஏன் செயல்புரியக் கூடாது? பலனை விரும்பாமல் அவர்கள் செய்யும் எந்தச் செயலும் உலகிற்கு நன்மையைத்தான் கொண்டு வரும். அவையனைத்தும், ''பலருடைய

நன்மைக்காகவும் பலருடைய மகிழ்ச்சிக்காகவும்'' உரியவையாகி விடும். ''அவர்கள் ஒருபோதும் தவறான அடி எடுத்து வைப்பதே இல்லை'' என்று ஸ்ரீராமகிருஷ்ணர் கூறுவது வழக்கம். உத்தர ராம சரிதத்தில் (1.14) உள்ள, ''ரிஷீணாம் புனராத்யானாம் வாசமர்தோள்னுதாவதி—பழங்கால ரிஷிகளின் வார்த்தைகளில் எப்போதும் உண்மை இருக்கும்; அவை பொய்யாவதில்லை'' என்பதை நீ படித்ததில்லையா?

'மனம் ஆன்மாவில் ஒடுங்கி, ஏறக்குறைய அலைகள் அற்ற நிலையை அடையும்போதுதான், இம்மையிலும் மறுமையிலும் செயல்களின் பலனை அனுபவிப்பதில் உள்ள விருப்பம் அகல் கிறது. அதாவது, இப்போதோ, இறந்தபிறகு மேல் உலகங் களிலோ உள்ள எதையும் அனுபவிக்கும் ஆசை இல்லை. விருப்பு, வெறுப்பு எதுவும் இல்லை. ஆனால் மனம் சமாதி நிலையிலிருந்து, ''நான், எனது'' என்னும் உலக நிலைக்கு இறங்கும்போது, முற்பிறவி வினைப்பயனின் இயக்கத்தால் அல்லது சம்ஸ்காரத்தால் அல்லது பழக்கத்தால் உடம்பு இயங் கவே செய்கிறது. அப்போது மனம் அனேகமாக உணர்வுகடந்த நிலையில் இருக்கும்; சாப்பிடுவது முதலிய செயல்கள், வெறும் தேவை காரணமாக நடைபெறுகின்றன; உடல் நினைவுகள் மிகவும் குறைந்து போகிறது. உணர்வுகடந்த அந்த நிலையில் செய்யப்படும் செயல்கள் அனைத்தும் சரியான செயல்களாக இருக்கும். அந்தச் செயல்களால் உலகிற்கு உண்மையான நன்மை உண்டாகிறது. ஏனெனில் அந்த மனிதனின் மனம் சுயநலத்தால் தூய்மை கெட்டோ அல்லது லாபநஷ்டத்தைக் கணக்கிட்டோ இயங்கவில்லை. இந்த உணர்வுகடந்த நிலையில் என்றும் இருந்தவாறுதான் கடவுள் இந்த அற்புதமான பிரபஞ்சத்தைப் படைத்தார். எனவே இந்த உலகத்தில் எந்தக் குறைபாடும் இல்லை. அதனால்தான் ஆன்மஞானி பற்றற்றுச் செய்யும் செயல்கள் குறையுடையதாக இருக்காது என்று நான் கூறுகிறேன். அவை உலகிற்கு உண்மையான நன்மையையே செய்கின்றன.'

சீடர்: 'ஞானமும் கர்மமும் ஒன்றுக்கொன்று மாறு பட்டது, மிக உயர்ந்த ஞான நிலையில் செயல் என்பதற்கு இடமே இல்லை; வேறு விதமாகச் சொல்வதென்றால் செயலின் மூலம் பிரம்மத்தை அடைய முடியாது—இதை நீங்கள் சற்று முன்புதான் சொன்னீர்கள். ஆனால் ஏன் அடிக்கடி ரஜோ சக்தியை எழுப்பும் பேச்சுக்களைத் தீவிரமாகப் பேசுகிறீர்கள்?

அன்று என்னிடம், ''செயல் புரி, செயல் புரி, செயல் புரி, அதைத் தவிர வேறு வழியே இல்லை'' என்று கூறினீர்கள்.'

சுவாமிஜி: 'நான் உலகமெல்லாம் சுற்றி வந்ததில், இந்த நாட்டைப்போல் மக்கள் இவ்வளவு தமோ குணத்தில் மூழ்கிக் கிடப்பதை வேறு எங்கும் காணவில்லை. வெளிப் பார்வைக்கு சாத்வீக குணம் இருப்பதுபோல் தோன்றுகிறது. ஆனால் உள்ளே கற்களையும் கட்டைகளையும் போன்ற மந்தநிலையே நிறைந்து வழிகிறது. இத்தகையோரால் என்ன காரியம் செய்ய முடியும்? இத்தகைய சோம்பேறிகள், புலனின்பங்களில் அழுந்திப்போன ஜடங்களான இந்த இனம் இன்னும் உலகில் எவ்வளவு காலம் தாக்குப்பிடித்து வாழும்? முதலில் மேலைநாடு களுக்குச் சென்று அந்த மக்களைப் பார். பிறகு வந்து என் வார்த்தைகளுக்கு மறுப்புச் சொல். எத்தனைத் தொழில்கள்! தொழில் செய்வதில் எவ்வளவு ஆர்வமும் ஊக்கமும்! அவர் களின் வாழ்க்கையில்தான் ரஜோ குணத்தின் என்னவோர் வெளிப்பாடு! ஆனால் உங்கள் நாட்டு மக்களின் ரத்தமோ இதயத்திலேயே உறைந்து போய்விட்டதுபோல் உள்ளது! நரம்பு களில் ரத்தம் ஓடவில்லை. உடம்பு பக்கவாதத்தால் தாக்கப் பட்டதுபோல் செயலிழந்து கிடக்கிறது. எனவே என் லட்சியம் முதலில் இவர்களிடம் ராஜச சக்தியை வளர்த்து, செயல்படும் படிச் செய்து, வாழ்க்கைப் போராட்டத்திற்குத் தகுதியானவர் களாக ஆக்குவதுதான்.

'உடம்பில் வலுவில்லை, மனத்தில் உற்சாகம் இல்லை, மூளையில் புத்தொளியில்லை; இந்த நடைப்பிணங்களால் என்ன சாதிக்க முடியுமப்பா! எப்படியாவது உந்தித் தள்ளி அவர் களிடம் சிறிது துடிப்பைக் கொண்டுவர வேண்டும். அதற் காகவே நான் என் வாழ்க்கையை அர்ப்பணித்திருக்கிறேன். தவறாத வேத மந்திரங்களின் சக்தியால் அவர்களை எழுச்சி பெறச் செய்வேன். அவர்களிடம், ''உத்திஷ்டத, ஜாக்ரத— எழுந்திருங்கள், விழித்திருங்கள்'' என்னும் அபயச் செய்தியை முழங்குவதற்காகவே நான் பிறந்திருக்கிறேன். இந்த வேலையில் நீங்கள் எனக்கு உதவியாக இருங்கள். நாடு முழுவதும் கிராமம் கிராமமாகச் செல்லுங்கள். இந்த அபயச் செய்தியை சண்டாளன் முதல் பிராமணன்வரை எல்லோருக்கும் சொல் லுங்கள். ''நீங்கள் எல்லையற்ற சக்தி படைத்தவர்கள், மரண மிலாப் பெருநிலையின் பங்குதாரர்கள்'' என்பதை அவர் களிடம் சொல்லுங்கள். இவ்வாறு அவர்களிடம் ராஜச சக்தியை

எழுப்புங்கள். அவர்களை வாழ்க்கைப் போராட்டத்திற்குத் தகுதி உடையவர்களாகச் செய்யுங்கள். அதன்பிறகு அவர்களிடம் முக்தியைப்பற்றிப் பேசுங்கள். முதலில் அக சக்தியை எழுப்பி, அவர்களைச் சொந்தக் கால்களிலேயே நிற்கச்செய்ய வேண்டும். அவர்கள் நல்ல உணவு, உடை, சுகபோகங்கள் எல்லாவற்றையும் பெறட்டும். அதன்பிறகு இந்தப் பந்தங்களிலிருந்து எப்படி முற்றிலுமாக விடுதலை பெறுவது என்பதைச் சொல்லிக் கொடுங்கள்.

'சோம்பலும் கயமையும் வஞ்சகமும் இந்த நாட்டையே மூடிக் கொண்டிருக்கின்றன. அறிவுள்ள ஒருவன் இவற்றையெல்லாம் பார்த்துக்கொண்டு அமைதியாக இருக்க முடியுமா? அவன் கண்களில் நீர் பெருகாதா? சென்னை, பம்பாய், பஞ்சாப், வங்காளம் என்று எங்கே பார்த்தாலும் வாழ்க்கைத் துடிப்பு இருப்பதற்கான அடையாளத்தையே என்னால் காண முடியவில்லை. படித்தவர்கள் என்று உங்களை நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்! என்ன மண்ணாங்கட்டியைப் படித்து விட்டீர்கள்? மற்றவர்களின் கருத்துக்களைத் திருப்பிச் சொல்லக் கற்றிருக்கிறீர்கள்! அயல்மொழியில் படித்து, மனப்பாடம் செய்து உங்கள் மூளையை நிரப்பிக்கொண்டு, சில பட்டங்களை வாங்கிக்கொண்டிருக்கிறீர்கள்! சீ, சீ, இதுவா படிப்பு? உங்கள் படிப்பின் லட்சியம் என்ன? ஒரு குமாஸ்தா வேலை அல்லது ஒரு கேடுகெட்ட வக்கீல், அதிகம் போனால் குமாஸ்தா வேலையின் பரிணாமமான ஒரு துணை நீதிபதி—இதுதானே! இதனால் உங்களுக்கு என்ன நன்மை வரும், இல்லை நாட்டிற்குத்தான் என்ன நன்மை வந்துவிடும்? ஒருமுறை கண்களைத் திறந்துபார். பொன் விளையும் பூமியான இந்தப் பாரதத் திருநாட்டில் ஒரு பிடி உணவிற்காக மக்கள் அல்லாடும் பரிதாபத்தைப் பார். உங்கள் படிப்பால் இந்தப் பரிதாபக் குரல்களின் தேவை நிறைவேறுமா? ஒருபோதும் நிறைவேறாது. மேலை விஞ்ஞானத்தின் உதவியுடன் பூமியை நன்றாக உழுது, உணவுப் பொருட்களை அதிகமாக உற்பத்தி செய்யக் கற்றுக் கொள்ளுங்கள்—ஒருவனின் கீழ் கைகட்டி வேலை பார்த்தல்ல, உங்கள் சொந்த முயற்சியால் புதிய வழிகளைக் கண்டுபிடிப்பதன்மூலம் இதைச் செய்யுங்கள். இப்படித் தங்களுக்கு வேண்டிய உணவையும் உடையையும் தாங்களே ஈட்டிக் கொள்வதற்காகத்தான் அவர்கள் ரஜோ குணம் கொண்டவர்களாக இருக்க வேண்டும் என்று நான் போதிக்கிறேன். உணவுக்காகவும் உடைக்காகவும்

கவலைப்பட்டுக் கவலைப்பட்டு இந்த நாடே இப்படிப்பட்ட கீழ்நிலைக்கு வந்துவிட்டது. இதை நீக்குவதற்கு நீங்கள் என்ன செய்திருக்கிறீர்கள்? உங்கள் சாஸ்திரங்களையெல்லாம் கங்கையில் வீசி எறியுங்கள். முதலில் உணவுக்கும் உடைக்கும் வழிசொல்லிக் கொடுங்கள். பிறகு சாஸ்திரங்களைக் கற்பியுங்கள். உலகியல் தேவைகள் தீரவில்லை என்றால் யாரும் உன் சாஸ்திரங்களைக் கேட்க மாட்டார்கள். அதனால்தான் முதலில் உன்னுள் உறைகின்ற ஆன்மசக்தியை எழுப்பு என்கிறேன். அதன்பிறகு உன்னால் முடிந்த அளவு, மக்களை அந்தச் சக்தியில் நம்பிக்கை கொள்ளச் செய். முதலில் உணவு, உடை முதலிய தேவைகளைத் தீர்க்கும் வழியைக் கற்றுக் கொடு; பிறகு ஆன்மீகம். இனியும் சோம்பேறியாக உட்கார நேரம் இல்லை. மரணம் எந்த நேரம் வரும் என்பது யாருக்குத் தெரியும்?'

இந்த வார்த்தைகளைச் சொல்லும்போது பரிதாபம், துயரம், இரக்கம் இவை அனைத்தும் சுவாமிஜியின் முகத்தில் கலந்து சுடர்விட்டன. கண்களிலிருந்து தீப்பொறி பறப்பது போலிருந்தது. அந்தக் கம்பீரக் காட்சியைக் கண்டு சீடர் அச்சத்துடன் அமர்ந்திருந்தார்; சிறிது நேரம் கழித்து சுவாமிஜி பேச ஆரம்பித்தார்:

'இந்த நாட்டு மக்களுக்கு அந்தச் செயல்திறன், தன்னம்பிக்கை எல்லாம் உரிய காலத்தில் வந்தே தீரும். நான் அதைத் தெளிவாகக் காண்கிறேன். இது தவறவே தவறாது. வருகின்ற மூன்று யுகங்களை, அறிவுடையவனால் தெளிவாகக் காண முடியும். ஸ்ரீராமகிருஷ்ணர் பிறந்த நாளிலிருந்து கீழ்த்திசையில் ஆதவனின் கிரணங்கள் தோன்றிவிட்டன. காலப்போக்கில் அந்த ஞான ஒளி நண்பகல் சூரியனின் ஒளிபோல நாடு முழுவதையும் ஒளிரச் செய்யும்.'

## 30

பேலூர் மடம், 1899

மடத்தின் கட்டிட வேலை ஏறக்குறைய முடிந்து விட்டது. சுவாமிஜியின் உடல் நலம் சரியில்லை. மருத்துவர்கள் அவரைக் காலையிலும் மாலையிலும் கங்கையில் படகில் உலவி வரும்படிக் கூறியுள்ளார்கள்.

அன்று ஞாயிறு. மாடியில் சுவாமிஜியின் அறையில் சீடர் அவருடன் பேசிக் கொண்டிருந்தார். மடத்து சன்னியாசிகளும் பிரம்மச்சாரிகளும் பின்பற்றுவதற்கான சில விதிமுறைகளை

இப்போது சுவாமிஜி உருவாக்கி இருக்கிறார். அதன் முக்கிய நோக்கம் மடத்தின் சன்னியாசி மற்றும் பிரம்மச்சாரிகள் இல்லறத்தார்களுடன் நெருங்கிப் பழகாமலிருக்க வேண்டும் என்பதே. பேச்சு அதைப்பற்றித் திரும்பியது.

சுவாமிஜி: 'இப்போதெல்லாம் இல்லறத்தார்களின் உடை முதலியவற்றில், அவர்களது கட்டுப்பாடற்ற வாழ்க்கையை உணர்த்தும் ஒருவித நாற்றத்தை நான் உணர்கிறேன். எனவே மடத்தில் இல்லறத்தார்கள் வந்து சாதுக்களின் படுக்கையில் உட்காரவோ படுக்கவோ கூடாது என்று விதி செய்திருக்கிறேன். இத்தகைய நாற்றத்தைப் பற்றியும் சாதுக்களால் அதைப் பொறுக்க முடியாது என்றும் சாஸ்திரங்களில் படித்துள்ளேன். அது உண்மையாக இருப்பதை இப்போது உணர்கிறேன். இந்த விதிகளைக் கடைப்பிடிப்பதன் மூலம் பிரம்மச்சாரிகள் எதிர் காலத்தில் தகுதியுள்ள சன்னியாசிகளாக உருவாக முடியும். சன்னியாச தர்மத்தில் அவர்கள் நன்றாக நிலைபெற்ற பிறகு, இல்லறத்தார்களுடன் சமமாகக் கலந்து பழகினாலும் எந்தத் தீங்கும் ஏற்படாது. ஆனால் இப்போது கண்டிப்பான விதி களுக்கு உட்படுத்தி வைக்காவிட்டால் அவர்கள் வழிதவறி விடு வார்கள். உண்மையான பிரம்மச்சாரியாக இருக்க வேண்டு மானால், ஆரம்பத்தில் புலனடக்கத்தில் மிகக் கடுமையான விதிகளைப் பின்பற்ற வேண்டும். பெண்களோடு பழகாமல் இருப்பது மட்டுமல்ல, திருமணமானவர்களின் தொடர்பையும் கூட விட்டுவிட வேண்டும்.'

சுவாமிஜியின் இந்த வார்த்தைகளைக் கேட்ட இல்லறத் தாரான சீடர் அச்சமடைந்தார். தாம் முன்புபோல் மடத்தின் சாதுக்கள் மற்றும் பிரம்மச்சாரிகளோடு இனி நெருங்கிப் பழக முடியாது என்பதை அறிந்து மிகுந்த துயரமடைந்தவராக சுவாமிஜியிடம், 'சுவாமிஜி, நான் என் குடும்பத்தினரிடம் கொண்டுள்ள அன்பைவிட ஆழ்ந்த அன்பை இந்த மடத்தில் உள்ள சாதுக்களிடமும் மற்றவர்களிடமும் உணர்கிறேன். அவர்கள் எனக்குக் காலங்காலமாகத் தெரிந்தவர்கள்போல் தோன்றுகிறார்கள். இந்த மடத்தில் நான் அனுபவித்த சுதந் திரத்தைப் போன்று இந்த உலகத்தில் வேறு எங்கும் நான் அனுபவித்ததில்லை' என்றார்.

சுவாமிஜி: 'சுத்த சத்வ குணம் கொண்டவர்கள் யாரா னாலும் இங்கே அதுபோன்ற உணர்வைப் பெறுவார்கள். அப்படி உணராதவர்கள் இந்த இடத்தைச் சேர்ந்தவர்கள் அல்ல

என்று அறிந்துகொள்ள வேண்டும். அதனால்தான் இங்கே என்னவோ அதிசயம் இருக்கிறது என்று இங்கே வருபவர்கள் ஓடிவிடுகிறார்கள். பிரம்மச்சரிய ஒழுக்கம் இல்லாதவர்கள், இரவும் பகலும் பணம் பணம் என்று அலைபவர்கள்—இவர்களால் மடத்தின் லட்சியங்களைப் பாராட்டவோ, மடத்தில் உள்ளவர்களைச் சொந்தமாக எண்ணவோ முடியாது. இங்குள்ள சன்னியாசிகள் பழங்காலச் சன்னியாசிகளைப்போல் விபூதி பூசி, ஜடை முடியுடனும் இடுக்கிகளுடனும் திரிபவர்களோ, நோய்களுக்கு மருந்து சொல்லிக்கொண்டு அலைபவர்களோ அல்ல. அதனால்தான் ஜனங்களால் இவர்களைப் புரிந்துகொள்ள முடியவில்லை. எங்கள் குருதேவரின் கொள்கைகள், வழிகள், செயல்கள் எல்லாம் புதுமையானவை. எனவே நாங்களும் புதுமையாக இருக்கிறோம். சில நேரங்களில் நல்ல உடைகளை அணிந்து சொற்பொழிவு செய்கிறோம்; சில நேரங்களில் விபூதியைப் பூசிக்கொண்டு ''ஹரஹர, வ்யோம் வ்யோம்'' என்று ஜபித்தபடி மலைகளிலும் காடுகளிலும் தீவிரமான தவத்தில் மூழ்கிவிடுகிறோம்.

'பழைய பஞ்சாங்கத்தையும் புராணங்களையும் மேற்கோள் காட்டிக் கொண்டிருப்பதில் எந்தப் பலனும் இல்லையப்பா! மேலை நாகரீக அலை பொங்கிப் பாய்ந்து நாட்டையே மூழ்கடித்துக் கொண்டிருக்கிறது. அதன் பலனைச் சிறிதும் அறியாமல், மலையுச்சிகளில் சென்று வெறுமனே கண்களை மூடிக் கொண்டிருப்பதால் என்ன பயன்? இப்போது தேவையெல்லாம் கீதையில் பகவான் சொல்லியிருப்பதுபோல், தீவிர கர்மயோகம், எல்லையற்ற தைரியம், அளவற்ற பலம் இவையே. அப்போது தான் நாட்டு மக்கள் எழுச்சி பெறுவார்கள். இல்லையென்றால் நீ இப்போது இருளில் உழல்வதுபோல், அவர்களும் இருளிலேயே அழுந்திக் கிடப்பார்கள்.'

பொழுது சாய்ந்துவிட்டது. கங்கையில் படகில் உலவுவதற்கான ஆடைகளை அணிந்துகொண்டு சுவாமிஜி மாடியிலிருந்து கீழே வந்தார். அவருடன் சீடரும் மற்றும் துறவியர் இருவரும் படகில் அமர்ந்தார்கள். படகு தட்சிணேசுவரக் கோயிலைக் கடந்து பானிஹாட்டி என்ற இடத்திற்குச் சென்று, கங்கைக் கரையில் இருந்த கோவிந்த குமார் சௌத்ரியின் வீட்டின் அருகே நங்கூரம் பாய்ச்சி நின்றது. அந்த வீட்டை மடத்திற்கு வாடகைக்கு வைத்துக் கொள்ள வேண்டும் என்ற எண்ணம் முன்பு இருந்தது.

சுவாமிஜி படகிலிருந்து இறங்கி அந்த வீட்டையும் தோட்டத்தையும் கவனமாகச் சுற்றிப் பார்த்தபடி கூறினார்: 'இந்தத் தோட்டம் மிக அழகாக இருக்கிறது; ஆனால் கல்கத்தாவிலிருந்து வெகு தொலைவில் உள்ளது. குருதேவரின் பக்தர்கள் வந்துபோவதற்குச் சிரமமாக இருக்கும். இங்கே மடம் அமையாமல் போனது நல்லதுதான்'.

இருள் சூழலாயிற்று. படகு மடத்திற்குத் திரும்பியது.

## 31

பேலூர் மடம், 1899

இன்று சீடர் நாகமகாசயருடன் மடத்திற்கு வந்திருந்தார்.

சுவாமிஜி (நாகமகாசயரை வணங்கி): 'நலம்தானே?'

நாகமகாசயர்: 'உங்களைத் தரிசிப்பதற்காக வந்தேன். ஜெய் சங்கர! ஜெய் சங்கர! இன்று சிவதரிசனம் பெற்றுவிட்டேன்.'

இவ்வாறு சொல்லியபடி நாகமகாசயர் சுவாமிஜியின் முன் இரண்டு கைகளையும் கூப்பி வணங்கியபடியே பணிவுடன் நின்றுகொண்டிருந்தார்.

சுவாமிஜி: 'உங்கள் உடல்நிலை எப்படி இருக்கிறது?'

நாகமகாசயர்: 'தசையும் எலும்புகளும் சேர்ந்த கூடாகிய, எதற்கும் உதவாத இந்த உடம்பைப்பற்றி ஏன் கேட்கிறீர்கள்! உங்களைக் கண்டதால் நான் பேறுபெற்றேன், பேறுபெற்றேன்.'

இவ்வாறு கூறி அவர் நெடுஞ்சாண்கிடையாகத் தரையில் வீழ்ந்து சுவாமிஜியை வணங்கினார்.

சுவாமிஜி (அவரைத் தூக்கியபடி): 'என்ன காரியம் செய்கிறீர்கள்?'

நாகமகாசயர்: 'இன்று நான் சிவதரிசனம் பெற்றேன். என் அகக் கண்களால் நான் அதைக் காண்கிறேன். ஜெய் ஸ்ரீராமகிருஷ்ண!'

சுவாமிஜி (சீடரைப் பார்த்து): 'உண்மையான பக்தி மனிதனை எப்படி மாற்றுகிறது பார்த்தாயா? நாகமகாசயர் தெய்வீகத்தில் மூழ்கித் தம்மையே மறந்துவிட்டிருக்கிறார். அவருக்கு உடம்பைப் பற்றிய நினைவு முற்றிலும் நீங்கிவிட்டது. இப்படி இன்னொருவரைக் காண முடியாது. (சுவாமி பிரேமானந்தரிடம்) நாகமகாசயருக்குக் கொஞ்சம் பிரசாதம் கொண்டுவா.'

நாகமகாசயர்: 'பிரசாதமா! பிரசாதமா! (கைகளைக் குவித்து சுவாமிஜியை வணங்கியபடி) உங்களைக் கண்டதும் இன்று என் பிறவிப் பசியே தீர்ந்துவிட்டது.'

மடத்தின் சன்னியாசிகள் மற்றும் பிரம்மச்சாரிகளுக்கு உபநிடத வகுப்பு நடைபெற்றுக் கொண்டிருந்தது. சுவாமிஜி அவர்களிடம், 'இன்று குருதேவரின் மகத்தான பக்தர் ஒருவர் வந்திருக்கிறார். எனவே இன்று உங்களுக்கு வகுப்பு தேவை யில்லை' என்றார். உடனே எல்லோரும் புத்தகங்களை மூடி வைத்துவிட்டு, நாகமகாசயரைச் சுற்றி அமர்ந்தார்கள். சுவாமிஜி யும் அவருக்கு முன்னால் உட்கார்ந்தார்.

சுவாமிஜி (எல்லோரையும் பார்த்து): 'பாருங்கள்! நாக மகாசயரைப் பாருங்கள். இவர் இல்லறத்தில் இருப்பவர். ஆனால் உலகம் என்ற ஒன்று இருப்பதைப் பற்றிய எண்ணமே இவருக்கு இல்லை. எப்போதும் இறையுணர்விலேயே ஆழ்ந் திருக்கிறார். (நாகமகாசயரிடம்) எங்களுக்கும் பிரம்மச்சாரி களுக்கும் குருதேவரைப்பற்றிச் சிறிது சொல்லுங்கள்.'

நாகமகாசயர்: 'என்ன சொல்கிறீர்கள்? நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? அவரைப்பற்றி நான் என்ன சொல்வேன்? அவரது அவதாரப் பணியில் உதவியாக இருக்கும் மகாவீரரான தங்களைத் தரிசிக்க வந்தேன். இப்போது அவரது உபதேசங் களை மக்கள் புரிந்துகொள்வார்கள். ஜெய் ராமகிருஷ்ண! ஜெய் ராமகிருஷ்ண!'

சுவாமிஜி: 'ஸ்ரீராமகிருஷ்ணரை உள்ளபடி புரிந்து கொண்டவர் நீங்கள்தாம். நாங்கள் இங்குமங்கும் சுற்றிக் கொண் டிருக்கிறோம், அவ்வளவுதான்.'

நாகமகாசயர்: 'ஓ, நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? நீங்கள் குருதேவரின் நிழல். நீங்கள் இருவரும் ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்கள். கண்ணுள்ளவர்கள் இதைக் காணட்டும்!'

சுவாமிஜி: 'இந்த மடங்களையெல்லாம் ஆரம்பித்தது சரியான வழிதானா?'

நாகமகாசயர்: 'நான் அற்பன். எனக்கு என்ன தெரியும்? நீங்கள் என்ன செய்தாலும் அது உலகிற்கு நன்மையே செய்யும். ஆமாம், நன்மையே செய்யும்.'

பல பிரம்மச்சாரிகளும் சாதுக்களும் நாகமகாசயருடைய திருப்பாதங்களைத் தொட்டு வணங்கி, பாததூளியைத் தங்கள் தலையில் தரித்துக்கொள்ள முயன்றார்கள். இது நாகமகாச யரிடம் பதற்றத்தை ஏற்படுத்தியது. உடனே சுவாமிஜி, 'அவரைத் தொந்தரவு செய்யாதீர்கள். அவர் மிகவும் சங்கடப்படுகிறார்' என்றார். இதைக் கேட்டதும் எல்லோரும் தங்கள் இடங்களில் சென்று அமர்ந்தார்கள்.

சுவாமிஜி: 'நீங்கள் ஏன் மடத்தில் வந்து தங்கக் கூடாது? உங்கள் வாழ்க்கை, இங்குள்ள பிரம்மச்சாரிகளுக்கு நல்ல பாடமாக அமையும்.'

நாகமகாசயர்: 'ஸ்ரீராமகிருஷ்ணரிடம் நான் இதைப்பற்றி ஒருமுறை கேட்டேன். அதற்கு அவர், ''இல்லறத்திலேயே இரு'' என்றார். எனவே குடும்பத்திலேயே இருக்கிறேன். உங்களையெல்லாம் இடையிடையே தரிசிக்கும் பேறு பெறுகிறேன்.'

சுவாமிஜி: 'தங்கள் ஊருக்கு நான் ஒருமுறை வரலாம் என்று எண்ணியுள்ளேன்.'

இதைக் கேட்டதும் நாகமகாசயர் மகிழ்ச்சி மிகுதியால் பைத்தியம்போலவே ஆகிவிட்டார். 'அந்த நாள் என்று வரும்? அந்தத் தலமே காசியாகிவிடும். அந்தப் பேறு எனக்குக் கிடைக்குமா?' என்று கேட்டார்.

சுவாமிஜி: 'அங்கு வர வேண்டுமென்று ஆசை இருக்கிறது. தேவி அழைத்துவந்தால் வருவேன்.'

நாகமகாசயர்: 'உங்களை யார் புரிந்துகொள்ள முடியும்? யார் புரிந்துகொள்ள முடியும்? அகக்கண் திறக்காமல் உங்களை யாராலும் புரிந்துகொள்ள முடியாது. ஸ்ரீராமகிருஷ்ணர் மட்டும்தான் உங்களைப் புரிந்துகொண்டார். பிறர் அவர் சொன்னதை நம்பினார்கள், அவ்வளவுதான். அல்லாமல் உங்களை யார் புரிந்துகொண்டார்கள்!'

சுவாமிஜி: 'இப்போது என் ஒரே ஆசை இந்த நாட்டை எழுச்சிபெறச் செய்ய வேண்டும் என்பதுதான். தன் சக்தியில் நம்பிக்கை இழந்து, எந்தவிதமான உணர்ச்சியும் இல்லாமல் மக்கள் உறங்கிக் கொண்டிருப்பதுபோல் உள்ளது. அவர்களை எப்படியாவது எழுப்பி, அவர்களிடம் சனாதன தர்மத்தின் உணர்வை ஊட்டி விட்டேனானால், ஸ்ரீராமகிருஷ்ணரும் நாமும் பிறந்தது பயன் உடையதாகிவிட்டது என்பதைப் புரிந்து கொள்ளலாம். இந்த ஆசை மட்டுமே உள்ளது. முக்தி முதலியவை எல்லாம் எனக்குத் துச்சமாகத் தெரிகிறது. என் ஆசை நிறைவேற நீங்கள் ஆசீர்வதியுங்கள்.'

நாகமகாசயர்: 'ஸ்ரீராமகிருஷ்ணர் ஆசீர்வதிப்பார். யாரால் உங்கள் விருப்பத்தைத் தடுக்க முடியும்? நீங்கள் என்ன நினைக்கிறீர்களோ அது நடந்தே தீரும்.'

சுவாமிஜி: 'அவரது விருப்பம் இல்லையென்றால் எதுவுமே நடக்காது.'

நாகமகாசயர்: ‘அவர் விருப்பமும் உங்கள் விருப்பமும் ஒன்றாகிவிட்டது. உங்கள் விருப்பமே அவருடைய விருப்பமும். ஜெய் ராமகிருஷ்ண! ஜெய் ராமகிருஷ்ண!

சுவாமிஜி: ‘வேலை செய்ய வேண்டுமென்றால் வலிமையான உடல் வேண்டும். இந்த நாட்டிற்கு வந்ததிலிருந்து என் உடல்நலம் சரியில்லை. மேலை நாடுகளில் இருந்தபோது நல்ல உடல்நலத்தோடு இருந்தேன்.’

நாகமகாசயர்: ‘உடலெடுத்தால் வாடகை கொடுத்தேயாக வேண்டும் என்று குருதேவர் சொல்வது வழக்கம். நோய்களும் துன்பமும்தான் வாடகை. உங்கள் திருமேனியோ தங்கப் பெட்டி. அதை மிகவும் கவனமாகக் காக்க வேண்டும். யார் அதைச் செய்வார்கள்? யார் இதைப் புரிந்துகொள்வார்கள்? ஸ்ரீராமகிருஷ்ணர் மட்டும்தான் புரிந்துகொண்டார். ஜெய் ராம கிருஷ்ண! ஜெய் ராமகிருஷ்ண!’

சுவாமிஜி: ‘மடத்தில் உள்ளோர் என்னை நன்றாகக் கவனித்துக்கொள்கிறார்கள்.’

நாகமகாசயர்: ‘யார் கவனித்துக்கொள்கிறார்களோ, அவர்களுக்குத்தான் நன்மை. அவர்களுக்குத் தெரிந்தாலும் சரி, தெரியாவிட்டாலும் சரி, இது உண்மை. சரியான அக்கறை எடுத்துக் கொள்ளாவிட்டால் அது நிலைக்காமல் போய்விடுகின்ற அபாயம் உள்ளது.’

சுவாமிஜி: ‘நாகமகாசயரே! நான் என்ன செய்கிறேன், என்ன செய்யவில்லை என்பது புரியவில்லை. ஒரு குறிப்பிட்ட வேளையில் ஒரு குறிப்பிட்ட திசையில் வேலை செய்வதற்கு ஆர்வம் கொள்கிறேன். அதன்படியே காரியங்களைச் செய்கிறேன். அது நல்லதற்கா, கெட்டதற்கா என்று என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை.’

நாகமகாசயர்: ‘பெட்டி இப்போது பூட்டப்பட்டது, என்று ஸ்ரீராமகிருஷ்ணர் கூறினார். எனவே முழுவதுமாக அறிந்து கொள்ள உங்களை விடமாட்டார். நீங்கள் அதை அறிந்து கொண்டால் உங்கள் மனித வாழ்க்கை முடிந்துவிடும்.’

இதைக் கேட்டதும் சுவாமிஜி வெட்டவெளியை நேராகப் பார்த்தபடி ஆழ்ந்த சிந்தனையில் சிறிதுநேரம் அப்படியே நின்றார். அப்போது சுவாமி பிரேமானந்தர் பிரசாதம் கொண்டு வந்து நாகமகாசயருக்கும் பிறருக்கும் கொடுத்தார். நாகமகாசயர் அதை இரு கைகளாலும் வாங்கி, ஆனந்தக் கூத்தாடியபடி உட்கொண்டார்.

சிறிதுநேரத்திற்குப் பிறகு சுவாமிஜி குளத்தின் அருகே மண்வெட்டியால் எதையோ தோண்டிக் கொண்டிருப்பதை நாகமகாசயர் கண்டார். அதைக் கண்டதும் நேராக அவரிடம் சென்று அவரது கைகளைப் பிடித்து, 'நாங்கள் இங்கே இருக்கும்போது நீங்கள் ஏன் இதையெல்லாம் செய்கிறீர்கள்?' என்று கூறி மண்வெட்டியை வாங்கிக் கொண்டார். சுவாமிஜி மண்வெட்டியைப் போட்டுவிட்டு தோட்டத்தில் நடந்தவாறு பேச ஆரம்பித்தார்:

'ஸ்ரீராமகிருஷ்ணர் மகாசமாதி அடைந்த பிறகு, நாகமகாசயர் கல்கத்தாவில் தமது எளிய வீட்டில் நான்கைந்து நாட்களாகப் பட்டினியாகக் கிடக்கிறார் என்று கேள்விப்பட்டோம். நானும் சுவாமி துரீயானந்தரும் மற்றொருவரும் அவரது வீட்டிற்குச் சென்றோம். படுத்துக் கிடந்த அவர் எங்களைப் பார்த்ததும் எழுந்தார். ''இன்று உங்கள் வீட்டில் சாப்பிட வந்துள்ளோம்'' என்று கூறினோம். உடனே அவர் எழுந்து கடைக்குச் சென்று அரிசி, சமைப்பதற்குப் பானை, விறகு முதலிய எல்லாம் வாங்கிவந்து சமைக்கத் தொடங்கினார். நாங்களும் சாப்பிட்டு, நாகமகாசயரையும் சாப்பிட வைக்க வேண்டும் என்று நினைத்தோம். சமையல் முடிந்ததும் எங்களுக்கு அவர் பரிமாறினார். நாங்கள் அவருக்குத் தனியாக வைத்துவிட்டுச் சாப்பிட ஆரம்பித்தோம். சாப்பிட்டு முடிந்ததும் அவரைச் சாப்பிடும்படி வேண்டினோம். உடனே அவர் சோற்றுப்பானையை உடைத்தெறிந்துவிட்டு, தலையில் அடித்துக் கொண்டு, ''எந்த உடம்பில் வாழ்ந்து நான் இறைக்காட்சி பெற முடியவில்லையோ, அந்த உடம்பிற்குச் சாப்பாடு வேறு போட வேண்டுமா?'' என்று திரும்பத் திரும்பச் சொல்ல ஆரம்பித்தார். நாங்கள் திகைத்து நின்றுவிட்டோம். அதன்பிறகு மிகவும் வேண்டி, அவரைக் கொஞ்சம் சாப்பிட வைத்துவிட்டுத் திரும்பினோம்.'

சுவாமிஜி (சீடரிடம்): 'நாகமகாசயர் மடத்தில் இரவு தங்குவாரா?'

சீடர்: 'தங்கமாட்டார். அவருக்குக் கொஞ்சம் வேலை இருக்கிறது. இன்றே வீடு திரும்புகிறார்.'

சுவாமிஜி: 'அப்படியானால் படகிற்கு ஏற்பாடு செய், இப்போதே இருட்டிவிட்டது.'

படகு வந்தது. சீடரும் நாகமகாசயரும் சுவாமிஜியை வணங்கி விடை பெற்றனர். படகு கல்கத்தாவை நோக்கிப் புறப்பட்டது.

## 32

பேலூர் மடம், 1899

சுவாமிஜி நல்ல உடல்நலத்தோடு இருக்கிறார். ஒரு ஞாயிற்றுக் கிழமை காலையில் சீடர் மடத்திற்கு வந்தார். சுவாமிஜியைப் பார்த்த பிறகு மாடியிலிருந்து கீழே வந்து சுவாமி நிர்மலானந்த ருடன் வேதாந்த சாஸ்திரங்களைப்பற்றிப் பேசிக்கொண்டிருந் தார். அப்போது சுவாமிஜி அங்கே வந்து சீடரைப் பார்த்து, 'நிர்மலானந்தருடன் என்ன பேசிக் கொண்டிருக்கிறாய்?' என்று கேட்டார்.

சீடர்: 'சுவாமிஜி, இவர், ''வேதாந்தம் கூறும் பிரம்மம் என்பது உன் சுவாமிஜிக்கும் உனக்கும்தான் தெரியும். எங் களுக்கோ—கிருஷ்ணஸ்து பகவான் ஸ்வயம் கிருஷ்ணரே முழுமுதற் கடவுள்[1] என்பதுதான் தெரியும்'' என்கிறார்.

சுவாமிஜி: 'அதற்கு நீ என்ன சொன்னாய்?'

சீடர்: 'ஒரே ஆன்மாவே உண்மைப் பொருள், கிருஷ்ணர் ஒரு பிரம்மஞானியாக இருந்தார், அவ்வளவுதான் என்று நான் சொன்னேன். சுவாமி நிர்மலானந்தர் உள்ளே வேதாந்தியாக இருக்கிறார். வாதத்திற்காக வெளியே துவைதக் கருத்தைப் பேசு கிறார். முதலில் இறைவனின் உருவத் தன்மையை நிறுவி, பிறகு படிப்படியாகத் தர்க்கமுறையில் வேதாந்தத்தின் அடிப்படையை உறுதிப்படுத்த எண்ணுகிறார் போலும். ஆனால் அவர் என்னை ''வைணவன்'' என்று அழைத்ததும், அவரது நோக்கத்தை மறந்து அவருடன் வாதம் செய்ய ஆரம்பித்து விட்டேன்.'

சுவாமிஜி: 'அவர் உன்னை நேசிக்கிறார். எனவே உன்னைக் கேலி செய்வதில் மகிழ்ச்சி அடைகிறார். அவரது வார்த்தை களைக் கேட்டு நீ ஏன் இடிந்துபோனாய்? நீயும் அவரை, ''நீங்கள் சூன்யவாதி, நாத்திகர்'' என்று சொல்லியிருக்க வேண்டாமா?'

சீடர்: 'சுவாமிஜி, இறைவன் என்பவர் எல்லாம் வல்ல ஒருவர், அவ்வளவுதான் என்று உபநிடதங்களில் எங்காவது சொல்லப்பட்டிருக்கிறதா? பொதுவாக மக்கள் அப்படியோர் இறைவனையே நம்புகிறார்கள்.'

சுவாமிஜி: 'எல்லாம் வல்லவரான இறைவனைப் பற்றிய மிக உயர்ந்த கொள்கை அவர் ஓர் உருவமுடையவர் என்பதாக இருக்க முடியாது. ஜீவன் என்பது தனிப்பட்ட உயிர். இறைவன்

1. பாகவதம், 1. 3. 28.

எல்லா ஜீவன்களும் சேர்ந்த ஒருவர். ஜீவன்களில் அவித்யை அல்லது மாயை மிக அதிகமாக உள்ளது. ஆனால் இறைவன் வித்யை மற்றும் அவித்யையின் மொத்தமான மாயையைக் கட்டுப்படுத்துகிறார். தம்மிடமிருந்து தாமாகவே, இந்த அசைகின்ற மற்றும் அசையாத பொருட்கள் நிறைந்த உலகை வெளிப்படுத்துகிறார். ஆனால் பிரம்மம் இந்தத் தனிப்பட்ட ஜீவன், மொத்த ஜீவனான இறைவன் இரண்டையும் கடந்து நிற்கிறது. பிரம்மத்தில் அம்சம், பகுதி, என்பதெல்லாம் இல்லை. சுலபமாகப் புரிந்து கொள்வதற்காகவே அதில் மூன்று பகுதிகள், நான்கு பகுதிகள் என்றெல்லாம் இருப்பதாகக் கற்பனை செய்யப்படுகிறது. அதன் எந்தப் பகுதியில் படைத்தல், காத்தல், அழித்தல் இவை நடைபெறுவதாகத் தோன்றுகிறதோ, அந்தப் பகுதியே இறைவன் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. மற்ற மூன்று பகுதிகளும் மறைபொருளாக உள்ளது. அங்கு துவைதக் கற்பனைகள் எதனுடையவும் நிழல்கூட இல்லை. அதுவே பிரம்மம். இதனால், பிரம்மம் என்பது ஜீவர்கள் மற்றும் பிரபஞ்சம் இவற்றிலிருந்து வேறுபட்டது என்பது பொருளல்ல. பிரம்மமே ஜீவர்களாகவும் உலகங்களாகவும் ஆகியிருக்கிறது என்று விசிஷ்டாத்வைதிகள் கூறுகிறார்கள்.

'ஆனால் அத்வைதிகளோ உயிர்களும் உலகங்களும் பிரம்மத்தின்மீது ஏற்றப்பட்டிருக்கிறது; உண்மையில் பிரம்மத்தில் எந்தவிதமான வேறுபாடுகளும் இல்லை என்கிறார்கள். அவர்களின் கருத்துப்படி, உலகம் என்பது வெறும் நாமரூபம் மட்டுமே. நாமரூபம் இருக்கும்வரைதான் உலகமும் நிலைத்திருக்கும். தியானம் போன்ற சாதனைகளின் மூலம் இந்த நாமரூபம் ஒடுங்கும்போது, ஒன்றேயான பிரம்மம் மட்டுமே இருக்கும். அதன்பிறகு, நீ, நான், ஜீவர்கள், உலகங்கள் ஆகியவற்றின் தனி இருப்புக்களை உணர முடியாது. அப்போது, நித்தியமான தூய உணர்வுப் பொருள் அல்லது பிரம்மமே நான் என்பது உணரப்படுகிறது. ஜீவனின் உண்மையான இயல்பு பிரம்மம். தியானம் முதலானவைமூலம் திரைகள் அகன்றதும் இந்தக் கருத்து உணரப்படுகிறது, அவ்வளவுதான். இதுதான் சுத்த அத்வைதத்தின் கொள்கை. வேத வேதாந்தங்கள், சாஸ்திரங்கள் எல்லாம் இதைத்தான் பல்வேறு வழிகளில் விளக்குகின்றன.'

சீடர்: 'அப்படியென்றால் இறைவன் எல்லாம் வல்ல ஒரு தனிப்பொருள் என்பது எப்படி உண்மையாகும்?'

சுவாமிஜி: 'மனம் என்னும் வரையறையின் அதாவது உபாதியின் காரணமாகத்தான் மனிதன் மனிதனாக உள்ளான். அவன் மனத்தின் மூலம்தான் எதையும் புரிந்துகொள்ள வேண்டும்; உணர வேண்டும். ஆனால் மனம் எண்ணுகின்ற எதுவும் வரையறைக்கு உட்பட்டதாகவே இருக்கும். எனவே, தான் தனியானவன், அதுபோல் இறைவனும் தனியொருவர் என்றே அவனால் கூற முடியும். மனிதன் தன் லட்சியமாக மனித வடிவம் ஒன்றையே கொள்ள முடியும். அவன் உலகத் துன்பங்களாலும், நோயாலும், மரண பயத்தாலும் அடிபட்டு, நம்பிக்கை இழந்து, ஆதரவற்ற நிலைக்குத் துரத்தப்படும்போது தனக்கு ஆதரவாக ஒருவரைத் தேடுவது இயல்பே. யாரிடம் நம்பிக்கை வைத்துவிட்டு, தான் கவலையின்றி இருக்கலாமோ அப்படிப்பட்ட ஒருவரை அவன் நாடுகிறான். ஆனால் அத்தகைய ஓரிடம் எது? எதையும் சாராத எல்லாம் அறிந்த ஆன்மாவே அவன் சரணடையக்கூடிய ஒரே இடம். மனிதன் முதலில் இதை அறிய முடிவதில்லை. விவேகமும் வைராக்கியமும் ஏற்பட்டு, தியானம் போன்ற சாதனைகளில் ஈடுபட ஈடுபட அது அவனுக்குப் படிப்படியாகத் தெரிய வருகிறது.

'ஆனால் எந்த ஆன்மீகப் பாதையில் ஒருவன் முன்னேறினாலும், அவன் தன்னை அறியாமல் தன்னுள் இருக்கும் பிரம்மத்தையே எழுப்புகிறான். ஒவ்வொருவனும் பின்பற்றும் பாதைகள் பல்வேறாக இருக்கலாம். உருவக் கடவுளின்மீது நம்பிக்கை கொண்டவர்கள் அந்தக் கொள்கைக்கு ஏற்ற சாதனைகளில் ஈடுபட வேண்டும். ஒருமுகப்பட்ட முயற்சி இருக்குமானால் அவர்களுள் இருக்கும் பிரம்மமாகிய சிங்கம் விழித்தெழும். பிரம்ம ஞானம் பெறுவதே உயிர்களின் லட்சியம். ஆனால் பல்வேறு பாதைகள், பல்வேறு பயணங்கள். ஜீவனின் உண்மை இயல்பு பிரம்மம் என்றாலும், மனம் என்னும் உபாதியின் காரணமாக எல்லாவகையான சந்தேகங்கள், துன்பங்கள், மகிழ்ச்சிகள், வேதனைகள் முதலியவற்றால் அது பாதிக்கப்படுகிறது. ஆனால் பிரம்மா முதல் புல் வரையில் எல்லாமே தங்கள் உண்மை இயல்பை அறியவே முன்னேறிக் கொண்டிருக்கின்றன. ''நானே பிரம்மம்'' என்பதை அறியும் வரையில் பிறப்புஇறப்பாகிய சுழலிலிருந்து யாரும் தப்ப முடியாது. மனிதப் பிறவியை அடைந்து பிறப்பு இறப்பிலிருந்து விடுதலை பெற வேண்டும் என்னும் ஆர்வம் பெருகி, அதோடு மகாபுருஷர் ஒருவரின் அருளும் கிடைத்தால், ஒருவனுக்குப் பிரம்ம ஞானம் பெற

வேண்டும் என்னும் ஆசை எழுகிறது. இல்லையென்றால் காமம் மற்றும் பணத்தாசையில் மாட்டிக் கொண்ட மனிதனின் மனத்தில் அந்த ஆர்வம் எழவே செய்யாது.

'மனைவி, மக்கள், புகழ், செல்வம் இவற்றை அடைய விரும்புபவனின் மனத்தில் பிரம்மத்தை அறியும் ஆசை எப்படி எழும்? யார் எல்லாவற்றையும் துறப்பதற்குத் தயாராக இருக்கிறானோ, நன்மை-தீமை, இன்பம்-துன்பம் என்னும் வேகமான இரட்டைச் சுழல்களுக்கு இடையே அமைதியோடும் உறுதியோடும் நடுநிலையோடும் தன் லட்சியத்தில் விழிப்போடும் இருக்கிறானோ, அவனே ஆன்மஞானத்தை அடைவதற்கும் பாடுபடுகிறான். நிர்கச்சதி ஜகஜ் ஜாலாத் பிஞ்ஜராதிவ கேஸரீ—பெருவலிமையுடன் உலக வலையை அறுத்து எறிந்துவிட்டு சிங்கம்போல் வெளியேறுகிறான்.'

சீடர்: 'அப்படியானால் சன்னியாசம் பெறாமல் பிரம்ம ஞானத்தை அடைய முடியாதா?'

சுவாமிஜி: 'முடியாது. முடியவே முடியாது. அகம், புறம்—இரண்டு விதத்திலும் சன்னியாசம் பெற வேண்டும். சங்கரரும் உபநிடதத்தில் ''தபஸோ வாப்யலிங்காத்''[1] என்ற பகுதிக்கு உரையெழுதும்போது இதைக் கூறுகிறார். அதாவது சன்னியாச வாழ்வின் சின்னங்களான காவியுடை, தண்டம், கமண்டலம் முதலியவற்றை ஏற்றுக்கொள்ளாமல் தவம் செய்தால், அடைவதற்குக் கடினமான பிரம்மத்தை அடைய முடியாது. வைராக்கியம் இல்லாமல், தியாகச் சிந்தை இல்லாமல், போக நாட்டத்தை விடாமல் எதையாவது அடைய முடியுமா? ''தந்திரத்தால் பறித்துவிட அது குழந்தையின் கையில் உள்ள மிட்டாயா''[2] என்ன?'

சீடர்: 'ஆனால் சாதனைகள் செய்யச் செய்யத்தானே தியாகச் சிந்தை படிப்படியாக வரும்?'

சுவாமிஜி: 'யாருக்கு அது படிப்படியாக வருகிறதோ அவர்களுக்கு அப்படியே வரட்டும். நீ ஏன் அதைச் சொல்லிக் கொண்டு காத்திருக்க வேண்டும்? வாய்க்காலை வெட்டி நீரைக் கொண்டுவரும் முயற்சியை இப்போதே தொடங்கு. ''எல்லாம் உரிய காலத்தில் நடக்கும் என்பது உதவாக்கரையின் போக்கு'' என்பார் ஸ்ரீராமகிருஷ்ணர். டுத்தால் ஒருவன் பேசாமல்

1. முண்டக உபநிடதம், 3.2.4.
2. வங்காளத்தின் பக்திக் கவிஞரான ராம பிரசாதரின் பாடல்

உட்கார்ந்திருப்பானா? தண்ணீரைத் தேடி ஓட மாட்டானா? உனக்குத் தாகம் ஏற்படவில்லை. அதனால்தான் உட்கார்ந் திருக்கிறாய். பிரம்மஞானம்பற்றிய ஆர்வம் தோன்றவில்லை. அதனால்தான் மனைவி மக்கள் என்று மகிழ்ந்திருக்கிறாய்.'

சீடர்: 'உண்மையில் எனக்கு ஏன் எல்லாவற்றையும் துறக்கும் மனம் ஏற்படவில்லை என்பது தெரியவில்லை. அது உண்டாவதற்காக அருள்கூர்ந்து ஏதாவதுசெய்யுங்கள்.'

சுவாமிஜி: 'முடிவும் அதற்கான வழியும் உன்னிடம்தான் உள்ளன. நான் வேண்டுமானால் அதைத் தூண்டிவிடலாம். இவ்வளவு சாஸ்திரங்களைப் படிக்கிறாய், பிரம்மஞானிகளான சாதுக்களுக்குச் சேவை செய்கிறாய், அவர்களுடன் பழகிக் கொண்டும் இருக்கிறாய். இவை எல்லாம்கூட உனக்குத் தியாக மனப்பான்மையைத் தரவில்லையென்றால் உன் வாழ்க்கை வீணே. ஆனால் முற்றிலும் வீணாகப் போகாது. உரிய காலத்தில் இதன் பலன் ஏதாவது ஒருவகையில் வெளிப்படவே செய்யும்.'

இதைக் கேட்டு சீடர் மனம் சோர்ந்து போனார். பிறகு சுவாமிஜியைப் பார்த்து, 'சுவாமிஜி, நான் உங்களிடம் சரண் அடைந்துவிட்டேன். இந்தப் பிறவியிலேயே நான் முக்தி பெறு வதற்கான வழியைக் காட்டுங்கள்' என்றார்.

சுவாமிஜி: 'ஏன் பயப்படுகிறாய்? இந்த உடம்பு, வீடு, இந்த மனிதர்கள், உலகம் எல்லாமே கனவைப் போன்று முற்றிலும் நிலையற்றவை என்று எப்போதும் மனத்தில் ஆராய்ச்சி செய். உடம்பு வெறும் ஜடக் கருவி மட்டுமே என்பதை எப்போதும் நினைவில் கொள். இதனுள் இருக்கின்றவனான, தன்னிலே மகிழ்ந்திருப்பவனான புருஷனே உன் உண்மை இயல்பு. மன மாகிய உபாதி அதனை மறைக்கின்ற முதலாவதும் மிக நுண் ணியதுமான திரை; உடலே வெளித்திரை. பிரிக்க முடியாத, மாற்றமில்லாத, சுயம்ஜோதியான புருஷன் இந்த மாயைத் திரையால் மறைக்கப்பட்டிருக்கிறான். அதனால்தான் உன் உண்மை இயல்பு உனக்குத் தெரியவில்லை. புலன்களை நாடி எப்போதும் புறத்தே செல்லும் மனத்தின் ஓட்டத்தைத் தடுத்து அதனை உள்ளே திருப்ப வேண்டும். இந்த மனம் கொல்லப்பட வேண்டும். இந்த உடம்பு தூலப் பொருட்களால் ஆனது, அது அழிந்தால் பஞ்ச பூதங்களில் கலந்துவிடும். ஆனால் சம்ஸ்காரத் தொகுதியான மனம் அவ்வளவு சீக்கிரம் அழிவதில்லை. அது சிலகாலம் விதை வடிவாக இருக்கிறது, பிறகு மரமாக வளர் கிறது, அதாவது மற்றொரு உடம்பை எடுத்துக்கொள்கிறது.

இவ்வாறு ஞானம் பெறும்வரை பிறப்பு இறப்பு என்னும் வட்டத்தில் சுற்றிக்கொண்டே இருக்கிறது. அதனால்தான் தியானம், மன ஒருமைப்பாடு, தத்துவ ஆராய்ச்சி ஆகியவை மூலம் மனத்தை சச்சிதானந்தப் பெருங்கடலில் ஆழ்த்து என்று கூறுகிறேன். மனம் அழிந்தால் எல்லாம் மறைந்துவிடுகின்றன; நீ பிரம்மத்தில் நிலைத்துவிடுகிறாய்.'

சீடர்: 'அடக்க முடியாத இந்தப் பைத்திய மனத்தைப் பிரம்மத்தை நோக்கித் திருப்புவது மிகவும் கடினமானது.'

சுவாமிஜி: 'வீரனுக்கு முடியாதது என்று ஒன்று இருக்கிறதா? கோழைகள்தான் அப்படிப் பேசுவார்கள். ''வீராணாமேவ கரதலகதா முக்தி: ந புன: காபுருஷாணாம்—வீரர்களுக்கே முக்தி கையில் கிடைக்கிறது. கோழைகளுக்கு அல்ல.'' கீதையிலும்,(6. 35) 'அப்யாஸேன து கௌந்தேய வைராக்யேண ச க்ருஹ்யதே—ஓ அர்ஜுனா, பயிற்சியின் மூலமும் வைராக்கியத்தின் மூலமும் மனத்தைக் கட்டுப்பாட்டிற்குக் கொண்டு வரலாம்'' என்று பகவான் கூறுகிறார். சித்தம் என்பது தெளிந்த நீர் நிறைந்த ஏரி போன்றது. புலன்களுடன் தொடர்பு காரணமாக அதில் எழும் அலைகளே மனம். எனவேதான் மனம் என்பது சங்கல்ப விகல்பாத்மகம் அதாவது மாறிக்கொண்டேயிருப்பது எனப்படுகிறது. இந்தச் சங்கல்ப விகல்பங்களாகிய மாற்றங்களிலிருந்தே ஆசை எழுகிறது. ஆசை, தூலக் கருவியான உடல்மூலம் செயல்படுகிறது. இனி, செயல் என்பது எப்படி முடிவு இல்லாததோ, அதுபோல் அதன் பலன்களும் முடிவற்றவை. இந்த எண்ணற்ற கர்மபலன்களாகிய அலைகளின் காரணமாக மனம் அலைபாய்ந்த வண்ணமே உள்ளது. மனத்தை அலைகள் இல்லாமல் செய்ய வேண்டும்; மீண்டும் அதை ஓர் அலைகூட இல்லாத தெளிந்த ஏரியாக்க வேண்டும். அப்போது தான் பிரம்மம் வெளிப்படும். ''பித்யதே ஹ்ருதய க்ரந்தி:—அப்போது உள்ளத்தின் முடிச்சுக்கள் அறுந்து போகின்றன''[1] என்பது போன்ற சாஸ்திரக் கூற்றுகள் இந்த நிலையையே சிறிது காட்டுகின்றன, புரிகிறதா?'

சீடர்: 'ஆம். ஆனால் தியானம் என்பது ஏதாவது ஒரு பொருள் மீதுதானே செய்தாக வேண்டும்!'

சுவாமிஜி: 'நீயே உன் தியானத்திற்குரிய பொருளாகிறாய். நீயே எங்கும் நிறைந்த ஆன்மா என்று தியானம் செய். ''நான்

1. முண்டக உபநிடதம், 2. 2. 8.

உடம்பு அல்ல, மனம் அல்ல, புத்தி அல்ல, தூலமோ சூட்சுமமோ அல்ல''. இவ்வாறு ஒவ்வொன்றாக மறுத்து, மனத்தைத் தனி உணர்வு வடிவான உன் இயல்பில் ஆழ்த்து. திரும்பத்திரும்ப அதில் ஆழ்த்தி அந்தக் குரங்கு மனத்தைக் கொன்றுவிடு. அதன் பிறகே ஞானசாரமான உன் சொந்த இயல்பில் நிலைத்திருப்பாய். அங்கே தியானிப்பவன், தியானிக்கப்படும் பொருள், தியானம் அனைத்தும் ஒன்றாகிவிடும். அறிபவன், அறியப்படும் பொருள், அறிவு எல்லாம் ஒன்றாகிவிடும். ஏற்றப்பட்டுள்ள அனைத்தும் மறைந்துவிடும். இது சாஸ்திரங்களில், மூன்று சார்பறிவுகளையும் (திரிபுடி பேத ஞானம்) கடந்து செல்வது என்று கூறப்படுகிறது. இந்த நிலையில் சார்பறிவு என்பது இல்லை. ஆன்மா ஒன்றுதான் அறிவது என்றால், அதை நீ எவ்வாறு அறிய முடியும்? ஆன்மாதான் ஞானம், ஆன்மாதான் உணர்வு. ஆன்மாதான் சச்சிதானந்தம். இருப்பது என்றோ, இல்லாதது என்றோ அறுதியிட்டுக் கூற முடியாத மாயையின் ஆற்றலின் காரணமாகத்தான், ஜீவ வடிவான பிரம்மத்திற்கு அறிபவன், அறியப்படும் பொருள், அறிவு என்ற கருத்து ஏற்படுகிறது. இந்த நிலை பொதுவாக உணர்வு நிலை என்று சொல்லப்படுகிறது. இந்த இருமை நிலையிலிருந்து நீங்கி, பிரம்மத்தில் ஒன்றாகிவிடும் நிலையே சாஸ்திரங்களில் ''உணர்வுகடந்த நிலை'' என்று கூறப்படுகிறது. இதையே சாஸ்திரங்கள் ''ஸ்திமித ஸலில ராசி ப்ரக்யமாக்யா விஹீனம்—பெயரேதும் இல்லாத அமைதியாக விளங்கும் கடல் போன்றது''[1] என்று கூறுகின்றன.'

சுவாமிஜி தம்முள் மூழ்கியபடியே பேச்சைத் தொடர்ந்தார்:

'எல்லா தத்துவங்களும் விஞ்ஞானங்களும் அறிபவன் அறியப்படுவது என்னும் தொடர்பறிவால் எழுந்தவையே. இந்தத் தொடர்பறிவுகளுக்கு அப்பால் இருக்கும் பொருளை எந்த எண்ணமோ பேச்சோ முழுமையாக உணர்த்த முடியாது. விஞ்ஞானம், தத்துவம் முதலியனவெல்லாம் பகுதி உண்மைகளே. எனவே முழு உண்மையான பரம்பொருளை வெளிப்படுத்துவதற்கு அவை போதுமானவையாக ஒருபோதும் அமைய முடியாது. அதனால்தான் அந்த முழு உண்மை நிலையிலிருந்து, அதாவது பாரமார்த்திக நிலையிலிருந்து பார்க்கும் போது எல்லாமே பொய்யாகத் தோன்றுகின்றன—தர்மம் பொய், கர்மம் பொய், நான் பொய், நீ பொய், உலகம் பொய்.

---

1. விவேக சூடாமணி, 410.

இந்த நிலையை அடையும்போதுதான் நானே எல்லாம், நானே எங்கும் நிறைந்த ஆன்மா என்ற நிலை உணரப்படுகிறது. நான் இருப்பதற்கு நானே சாட்சி. நான் இருக்கிறேன் என்பதைநிலை நாட்ட வேறு என்ன சாட்சி வேண்டும்? சாஸ்திரங்கள் சொல்வதுபோல் ''நித்யமஸ்மத்ப்ரஸித்தம்—நான் நித்தியப் பொருள் என்பதை நானே அறிகிறேன்.'[1] நான் உண்மையில் அந்த நிலையை அனுபவித்திருக்கிறேன்; உணர்ந்திருக்கிறேன். நீங்களும் அதைக் காணுங்கள், உணருங்கள். பின்னர் இந்த பிரம்ம தத்துவத்தை எல்லோருக்கும் பிரச்சாரம் செய்யலாம். அதன் பிறகுதான் உன்னால் அமைதியை அடைய முடியும்.'

இதைப் பேசும்போது சுவாமிஜி ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியிருந்தார். அவர் வேறு ஏதோ ஓர் உலகில் சஞ்சரிப்பதை அவரது திருமுகம் காட்டியது. சிறிது நேரத்திற்குப் பிறகு தொடர்ந்து பேசினார்:

'எல்லா தத்துவங்களையும் தெளிவாக உணரச் செய்கின்ற, எல்லா உண்மைகளையும் உள்ளடக்கிய இந்தப் பிரம்ம ஞானத்தை உன் சொந்த வாழ்க்கையில் அனுபவித்து அறி. உலகிற்கும் எடுத்துக் கூறு. இதனால் உனக்கும் நன்மை உண்டாகும், உலகிற்கும் நன்மையுண்டாகும். சாரமான உண்மையை இன்று உனக்குக் கூறிவிட்டேன். இதைவிட உயர்ந்தது எதுவும் இல்லை.'

சீடர்: 'சுவாமிஜி, நீங்கள் இப்போது ஞானத்தைப்பற்றிப் பேனீர்கள். சில சமயம் பக்தி, சில நேரங்களில் கர்மம் இன்னும் சிலவேளைகளில் யோகம் என்று பல்வேறாகப் பேசுகிறீர்கள். இது எங்களைக் குழப்புகிறது.'

சுவாமிஜி: 'உண்மை என்ன தெரியுமா? பிரம்மஞானி ஆவதுதான் மிக உயர்ந்த லட்சியம். அதுதான் முடிவான குறிக்கோள். ஆனால் எப்போதும் பிரம்மத்திலேயே ஆழ்ந்திருக்க முடியாது. சாதாரண நிலைக்கு வரும்போது பற்றிக்கொள்ள ஏதாவது வேண்டும். அப்போது மற்றவர்களுக்கு நன்மை தரும் செயல்களைச் செய்வது நல்லது. எனவேதான் வேறுபாட்டுணர்வு இன்றி, உயிர்களுக்குச் சேவை செய்ய வேண்டுமென்று நான் வற்புறுத்துகிறேன். ஆனால், மகனே, செயலின் பாதை மிகவும் சிக்கலானது. பெரியபெரிய மகான்கள்கூட அதில் கட்டுண்டு விடுகிறார்கள். அதனால்தான் பலனில் பற்றில்லாமல் செயல்புரிய வேண்டும். இதுதான் கீதையின் உபதேசம். ஆனால்

---

1. விவேக சூடாமணி, 409.

பிரம்ம ஞானத்தில் செயலின் தொடர்பு சிறிதும் இல்லை என்பதைத் தெரிந்துகொள். நற்செயல்கள், மிஞ்சிப்போனால், மனத்தைத் தூய்மைப்படுத்தும், அவ்வளவுதான். அதனால்தான் உரையாசிரியரான சங்கரர் கர்மத்தையும் ஞானத்தையும் இணைப்பதை மிகக் கடுமையாகக் குறை கூறுகிறார். பலன் கருதாத பணிமூலம் ஏதோ ஒருசிலர் பிரம்மஞானம் பெறக்கூடும். இதுவும் ஒரு வழிதான். ஆனால் குறிக்கோள் பிரம்மத்தை அடைவதே. ஞானயோகம், கர்மயோகம் மற்றும் பிற நெறிகள் அனைத்தின் நோக்கமும் பிரம்மஞானத்தை அடைவதுதான் என்பதை மறந்துவிடாதே.'

சீடர்: 'இப்போது பக்தியோகம் மற்றும் ராஜயோகங்களின் பயனைக் கூறுங்கள்.'

சுவாமிஜி: 'இந்தப் பாதைகளைப் பின்பற்றியும் பிரம்ம ஞானத்தை அடையலாம். பக்தியோகம் நிதானமான வழி. பலன் மெள்ளவே வரும். ஆனால் சுலபமான வழி. யோக நெறியில் தடைகள் ஏராளம் உண்டு. மனம் சித்திகளை நாடிப் போய்விடலாம், அதனால் குறிக்கோளை அடையாமல் போக நேரலாம். ஞானநெறி மட்டுமே எளிதாகப் பலன் தருவது. அது மற்ற நெறிகளைவிட அறிவுபூர்வமானது, அதனால்தான் அது எல்லா நாடுகளிலும் எல்லா காலங்களிலும் ஒரேமாதிரியாகப் போற்றப்படுகிறது. ஆராய்ச்சிப் பாதையான அந்த ஞான நெறியில்கூட, மனம் பயனில்லாத வாதப் பிரதிவாதங்களில் மாட்டிக் கொள்ளும் ஆபத்து இருக்கிறது. எனவே அதனோடு தியானத்தையும் சேர்த்துச் செய்ய வேண்டும். ஆராய்ச்சி, தியானம் இவற்றின்மூலம் பிரம்மத்தை அடைய வேண்டும். இந்த வழியில் ஒருவன் நிச்சயமாக லட்சியத்தை அடைவான். இதுதான் நிச்சயமான வெற்றியைத் தருகின்ற சுலபமான பாதை என்பது என் கருத்து.'

சீடர்: 'தயவுசெய்து அவதார தத்துவத்தைப்பற்றிச் சிறிது சொல்லுங்கள்.'

சுவாமிஜி: 'ஒரே நாளில் எல்லா தத்துவங்களையும் அறிந்துவிட நினைக்கிறாய் போலிருக்கிறது!'

சீடர்: 'ஒரே நாளில் சந்தேகங்கள் எல்லாம் தீர்ந்து போனால் நான் மீண்டும்மீண்டும் உங்களுக்குத் தொந்தரவு கொடுக்க வேண்டாம் அல்லவா!'

சுவாமிஜி: 'சாஸ்திரங்களால் மிகமிக உயர்ந்ததாகப் பேசப்படுகின்ற இந்த ஆன்ம ஞானம் யாருடைய அருளால்

ஒருகணத்தில் அடையப்படுகிறதோ அவர்கள்தாம் நடமாடும் கோயில்கள்—அவதார புருஷர்கள். பிறப்பிலிருந்தே அவர்கள் பிரம்மஞானிகளாக இருக்கிறார்கள். பிரம்மத்திற்கும் பிரம்ம ஞானத்திற்கும் எந்தவித வித்தியாசமும் இல்லை. ''ப்ரஹ்மவேத ப்ரஹ்மைவ பவதி—பிரம்மத்தை அறிந்தவன் பிரம்மமே ஆகிறான்.''[1] என்று கூறுகின்றன. ஆன்மாவை அறிய முடியாது. ஏனெனில் ஆன்மாவே அறிபவனாக இருக்கிறான். இதை நான் உனக்கு ஏற்கனவே சொல்லி இருக்கிறேன். எனவே மனிதனின் தொடர்பறிவால் அறிய முடிந்த மிகப் பெரிய எல்லை ஆன்மா வில் நிலைபெற்ற இந்த அவதார புருஷர்களே. மனித மனம் புரிந்துகொள்ளக்கூடிய அதிகபட்சமான இறைத் தத்துவம் அவதார புருஷர்களைப் பற்றியதுதான். அதைக் கடந்து இந்தத் தொடர்பறிவு செல்லாது. அத்தகைய பிரம்மஞானிகள் மிகமிக அரிதாகவே உலகில் தோன்றுகிறார்கள். மிகமிகக் குறைவான வர்களே அவர்களைப் புரிந்துகொள்ளவும் முடியும். அந்த அவதார புருஷர்களே சாஸ்திரங்களுக்கு நிரூபணமாக இருக் கிறார்கள்; சம்சாரப் பெருங்கடலில் ஒளி காட்டும் கலங்கரை விளக்கங்களாக இருக்கிறார்கள். அத்தகைய அவதார புருஷர் களோடு இருப்பதாலும், அவர்களின் அருளாலும் மனத்தின் இருள் ஒருகணத்தில் மறைகிறது; எளிதாக பிரம்மஞானம் பளிச்சிடுகிறது. எதனால் அல்லது எந்த முறையால் இது நிகழ்கிறது என்பதை உறுதி செய்ய முடியாது. ஆனால் அது நிகழ்கிறது; நிகழ்வதை நான் பார்த்திருக்கிறேன்.

'ஸ்ரீகிருஷ்ணர் தம்மை ஆன்மாவில் நிலைநிறுத்திக் கொண்டே கீதையை உபதேசித்திருக்கிறார். ''நான்'' என்று அதில் அவர் கூறும் பகுதிகள் ஆன்மாவையே குறிக்கின்றன. ''மாமேகம் சரணம் வ்ரஜ—'என்னிடமே சரண்புகு''[2] என்பதன் பொருள், ''ஆன்மாவில் நிலைத்து நில்'' என்பதாகும். இந்த ஆன்ம ஞானம்தான் கீதையின் முடிவான குறிக்கோள். யோகம் முதலியவைபற்றிக் குறிப்பிடப்பட்டிருப்பதெல்லாம் ஆன்ம ஞானப் பாதையில் தற்செயலாகக் கூறப்பட்டவை மட்டுமே. இந்த ஆன்மஞானத்தை அடையாதவர்கள் தற்கொலை செய்து கொண்டவர்களுக்குச் சமமே. அவர்கள் ''விநிஹந்தி அஸத் க்ரஹாத்—உண்மையல்லாததைப் பற்றிக்கொண்டு தங்களைத்

---

1. முண்டக உபநிடதம், 3. 2. 9.
2. கீதை, 18. 66.

நாங்களே கொன்று விடுகிறார்கள்.''[1] புலனின்பங்களாகிய வலையில் சிக்கித் தங்கள் உயிரை விடுகிறார்கள். நீங்கள் மனிதர்கள் அல்லவா! இரண்டு நாட்களுக்குக்கூட நிலைக்காத இந்தப் புலனின்பங்களாகிய குப்பையை உங்களால் ஒதுக்கித் தள்ள முடியாதா? இறப்பதற்காக மட்டுமே பிறக்கின்றவர்களுள் ஒருவனாகப் போகிறாயா? பயன் தருபவற்றை ஏற்றுக்கொள்; இனிமையானவற்றை ஒதுக்கித் தள்ளு. ஆன்மாவைப்பற்றி எல்லோரிடமும், மிகமிகத் தாழ்ந்தவர்களிடமும் சொல். இதைத் தொடர்ந்து பேசுவதன் மூலம் உன் மனமும் தூய்மை பெறும்; அதோடு ''தத்வமஸி—நீ அதுவாகவே இருக்கிறாய்''; ''ஸோஹமஸ்மி—நானே அது''; ''ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம—எல்லாமே பிரம்மம்'' என்னும் மகத்தான மந்திரங்களை எப்போதும் ஜெபி. ஒரு சிங்கத்தின் வலிமையை எப்போதும் மனத்தில் இருத்து. பயப்படுவதற்கு என்ன இருக்கிறது? பயமே மரணம், பயமே மிகக் கொடிய பாவம். மனிதனான அர்ஜுனன் அச்சம் கொண்டான், அதனால் ஆன்மாவில் நிலைபெற்றவரான ஸ்ரீகிருஷ்ணர் அவனுக்குக் கீதையை உபதேசித்தார். அப்படியும் அவனிடமிருந்து பயம் விலகியதா என்ன? பின்னர் அவன் ஸ்ரீகிருஷ்ணரின் விசுவரூப தரிசனத்தைப் பார்த்ததும் ஆன்மாவில் நிலைத்து நின்றான். அந்த ஞானத்தீயால் அவனது கர்மத் தளைகள் எல்லாம் எரிக்கப் பட்டன; அவன் முனைந்து போர் செய்தான்.'

சீடர்: 'பிரம்மஞானத்தை அடைந்த பிறகும் ஒருவனால் செயல் புரிய முடியுமா?'

சுவாமிஜி: 'பிரம்மஞானத்தை அடைந்த பிறகு, செயல் என்ற பெயரில் நாம் சாதாரணமாகச் சொல்கின்ற ஒன்று நிகழாது. அந்த நிலையில் ஞானி செய்யும் செயல்கள் எல்லாம் உலகின் நன்மைக்காகவே அமையும். அவர் நடப்பது, பேசுவது போன்ற செயல்கள்கூட உலக நன்மைக்காகவே. ஸ்ரீராமகிருஷ்ணரிடம் நாங்கள் அதைக் கண்டோம். அவர் ''தேஹஸ்தோऽபி ந தேஹஸ்த:—உடம்பை உடையவராக இருந்தும் உடம்புடன் ஒன்றாதவராக'' இருந்தார். அப்படிப்பட்ட ஒருவரின் செயல்களின் நோக்கம் ''லோகவத் து லீலா கைவல்யம்[2]—மனிதர்களைப்போல் அவர்கள் செய்யும் ஒவ்வொன்றும் ஒரு விளையாட்டாகவே இருக்கும்'' என்பதே ஆகும்.

---

1. விவேக சூடாமணி, 4.
2. பிரம்ம சூத்திரம், 2. 1. 33.

## 33

பேலூர் மடம், 1901

இன்று சீடர் திரு. ரநாத பிரசாத் தாஸ் குப்தருடன் மடத்திற்கு வந்தார். ரநாத பாபு கல்கத்தாவில் உள்ள ஜூப்லி கலைக் கழகத்தை உருவாக்கியவர்; சிறந்த ஓவியர்; நன்கு படித்தவர்; சுவாமிஜியிடம் மிகுந்த மதிப்புக் கொண்டவர். சுவாமிஜியும் அவரும் ஒருவருக்கொருவர் வணக்கம் கூறிக்கொண்டு அமர்ந்தனர். சுவாமிஜி அவருடன் கலையைப்பற்றிப் பேச ஆரம்பித்தார்.

சுவாமிஜி: 'உலகம் முழுவதிலும் நாகரீகத்தில் சிறந்ததாகக் கூறப்படும் நாடுகளுள் ஏறக்குறைய அனைத்திலும் உள்ள கலைப் பொக்கிஷங்களைக் காணும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. ஆனால் நம் நாட்டில் பௌத்தர் காலத்தில் கலை வளர்ந்ததுபோல் வேறு எந்த நாட்டிலும் வளரவில்லை. மொகலாயர்கள் காலத்தில்கூடக் கலையின் வளர்ச்சி குறிப்பிடும்படியாக இருந்தது. தாஜ்மகால், ஜும்மா மசூதி முதலியவை இன்றும் அதன் சின்னங்களாக விளங்குகின்றன.

'மனிதன், தான் படைப்பதிலெல்லாம் ஏதாவது ஒரு கருத்தை வெளிப்படுத்துவதே கலை. எங்குக் கருத்தின் வெளிப்பாடு இல்லையோ, அது எவ்வளவுதான் பற்பல வண்ணங்களுடன் அழகுறப் பொலிந்தாலும் அதைக் கலையென்று சொல்ல முடியாது. அன்றாடம் பயன்படுத்தப்படும் குடம், கூஜா, கிண்ணம் முதலியவற்றைக்கூட ஒரு கருத்தை விளக்கும் வகையில் உருவாக்க வேண்டும். பளிங்கில் செதுக்கியிருந்த அற்புதமான சிலை ஒன்றை நான் பாரீஸ் கண்காட்சியில் பார்த்தேன். அதன் கீழ், ''இயற்கையின் திரையை அகற்றுவதே கலை'' என்று எழுதப்பட்டிருந்தது. அதாவது இயற்கையில் மறைந்திருக்கும் அழகைக் காண்பதற்காக, கலை தன் கைகளால் இயற்கையை மறைத்திருக்கும் திரைகளை அகற்றிவிடுவது என்பதே. இயற்கைத் தாயின் அழகு இதுவரை இதுபோல் முழுமையாக வெளிப்படுத்தப்படவில்லை என்று கூறுமளவிற்கு அந்தச் சிலை அழகாக உருவாக்கப்பட்டிருந்தது. வெளிப்பட்ட அந்த அழகைக் கண்டே அந்தக் கலைஞன் தன்னை மறந்துவிட்டது போல் தோன்றியது. இந்த இணையற்ற கருத்தைச் சிலையில் வெளிப்படுத்திய அந்தக் கலைஞரின் ஆற்றலைப் பார்த்தவர்கள் பாராட்டாமல் இருக்க முடியாது. நீங்களும் அதுபோன்று

ஏதாவது ஒன்றை உங்கள் சொந்தச் சிந்தனையிலிருந்து உருவாக்குங்கள்.'

ரநாத பாபு: 'ஆமாம். நேரம் கிடைக்கும்போது புதுமையான சிலை ஒன்றை வடிக்க வேண்டுமென்றுதான் நானும் விரும்புகிறேன். ஆனால் இந்த நாட்டில் அதற்கெல்லாம் உற்சாகமும் ஆதரவும் கிடைக்கவில்லை. இது ஓர் ஏழை நாடு. அதனுடன் இங்கே கலைக்குப் பாராட்டும் கிடையாது.'

சுவாமிஜி: 'உங்கள் உள்ளம் முழுவதையும் குவித்து மிகச் சிறந்த, உண்மையான ஒன்றை உருவாக்கினால், ஒரே ஒரு கருத்தையானாலும் சரியான முறையில் நீங்கள் வெளிப்படுத்தினால் நாளடைவில் அது நிச்சயம் பாராட்டைப் பெறும். இந்த உலகத்தில் உண்மையான பொருள் பாராட்டு பெறாமல் போனதே இல்லை. சில கலைஞர்களின் விஷயத்தில் அவர்கள் இறந்த ஆயிரம் ஆண்டுகள் கழித்துத்தான் பாராட்டு கிடைத்ததாகக் கேள்விப்படுகிறோம்.'

ரநாத பாபு: 'அது உண்மைதான். ஆனால் நாம் எந்தக் காரியத்தையும், தொடர்ந்து அதிகச் சக்தியைச் செலவழித்துச் செய்வதற்குரிய ஆற்றல் இல்லாதவர்களாகிவிட்டோம். ஐந்து ஆண்டுகள் தொடர்ந்து முயன்று, அப்படிப்பட்ட ஒன்றை உருவாக்குவதில் நான் ஓரளவு வெற்றி பெற்றிருக்கிறேன். என் முயற்சி வீணாகாமல் இருக்க வாழ்த்துங்கள்.'

சுவாமிஜி: 'சரியான முறையில் வேலை செய்தீர்களானால் நிச்சயம் வெற்றி பெறுவீர்கள். மனமும் ஆற்றலும் ஒருங்கிணைந்து ஒரு வேலையில் ஈடுபட்டால் வெற்றி நிச்சயம். அது மட்டுமல்ல, அந்த வேலையில் ஒன்றிவிடுவதன் காரணமாக பிரம்மஞானத்தையும் அடைய முடியும். முழுமனத்துடன் செயலில் முனைபவனுக்கு இறைவனும் உதவுகிறார்.'

ரநாத பாபு: 'மேலை நாடு மற்றும் இந்தியக் கலைகளுக்கு இடையில் என்ன வேறுபாட்டைக் கண்டீர்கள்?'

சுவாமிஜி: 'பெரும்பாலும் ஒரேமாதிரியாகத்தான் இருக்கின்றன; தனித்தன்மை என்பது இல்லை என்றே சொல்லிவிடலாம். அந்த நாடுகளில் புகைப்படங்களை மாதிரியாகக் கொண்டு படம் வரைகின்றனர். எந்திரங்களின் துணையை நாடும்போது தனித்தன்மை அழிந்துவிடுகிறது; சொந்தக் கருத்தை வெளிப்படுத்துவதற்கான வாய்ப்பு இல்லாமல் போய்விடுகிறது. பழங்காலக் கலைஞர்கள் தங்கள் மனத்தில் ஆழ்ந்து சிந்தித்து, புதுப்புதுக் கருத்துக்களைக் கண்டுபிடித்தார்கள்.

அவற்றைத் தங்கள் ஓவியங்களில் வெளிப்படுத்தவும் முயன் றார்கள். இப்போதுள்ள ஓவியங்களோ புகைப்படங்களை மாதிரியாகக் கொண்டிருப்பதால், சொந்த அறிவோ முயற்சியோ அங்கே அவ்வளவு தேவைப்படுவதில்லை.

'ஆனால் ஒவ்வொரு நாட்டிற்கும் சிறப்புத் தன்மை ஒன்று உள்ளது. அந்தச் சிறப்புப் பண்பை அவர்களின் பழக்க வழக் கங்கள், நடை, உடை, பாவனை, வாழ்க்கை முறை, ஓவியங்கள், சிற்பங்கள் அனைத்திலும் காண முடியும். உதாரணமாக மேலை நாட்டு இசையும் பாட்டும் நடனமும் மிகவும் கூர்த்தவையாக (*pointed*) உள்ளன. நடனத்தைப் பார்த்தால், கைகால்களெல்லாம் ஏதோ வெட்டியிழுப்பதுபோல் தோன்றும். இசைக் கருவிகளோ காதுகளில் சூலத்தால் குத்துவதுபோல் ஒலிக்கும். பாட்டிலும் இதே நிலைதான். இந்த நாட்டு நடனத்தில் விழுந்து எழுந்து செல்லும் அலையின் சுழற்சி காணப்படுகிறது. பாடலிலும் இசைக் கருவிகள் இசைப்பதிலும் அந்தச் சுழற்சியைக் காண முடியும்.

'எனவே கலையைப் பொறுத்தவரை பல்வேறு மக்களிடையே அது பல்வேறு விதமாக வெளிப்படுகிறது. உல கியல் சார்ந்த இன மக்கள் இயற்கையை லட்சியமாகக் கொண்டு அதற்கேற்ற கருத்துக்களைத் தங்கள் கலைகளில் வெளிப்படுத்த முயற்சிக்கிறார்கள்; இயற்கையைக் கடந்த ஒன்றை லட்சியமாகக் கொள்பவர்கள் அந்தக் கருத்தை இயற்கைச் சக்தியின் துணையுடன் வெளிப்படுத்த முயற்சிக்கிறார்கள். முன்னவர் களுக்கு இயற்கைதான் கலையின் முக்கிய அடிப்படை; இரண் டாமவர்களுக்குக் கருத்துக்கள்தான் கலையின் மூலக்காரணம்.

'இவ்வாறு இருசாராரும் இருவேறான அடிப்படையில் கலை பற்றிய கருத்துக்களைத் தொடங்கினாலும், இறுதி விளை வைப் பொறுத்தவரையில் ஏறக்குறைய ஒரே படியிலேயே நிற்கிறார்கள். இருசாராரும் தங்கள் கலைகளில் மிகச் சிறந்த வளர்ச்சியை அடைந்துள்ளனர். மேலை நாடுகளின் சில ஓவியங் களைப் பார்த்தால் அவை உண்மைக் காட்சியென்றே நினைத்து விடுவீர்கள். இந்த நாட்டில்கூடப் பழங்காலத்தில் சிற்பக்கலை மகத்தான வளர்ச்சியை அடைந்திருந்தது. அந்தக் காலத்தின் சில விக்கிரகங்களைப் பார்த்தால், அவை இந்த உலகத்தையே மறக்கச் செய்து, புத்தம்புதிய கருத்துலகிற்கே உங்களை அழைத்துச் சென்றுவிடும். முற்கால ஓவியங்கள்போல் இப் போது மேலை நாடுகளில் இல்லை. நம் நாட்டிலும் புதுப்புதுக்

கருத்துக்களுக்கு வடிவம்தரும் சிற்பக் கலையைக் காண முடிவதில்லை. உதாரணமாக, உங்கள் ஓவியப் பள்ளிகளில் தீட்டப்படும் ஓவியங்களில் உணர்ச்சிகளே இல்லை. இந்துக்களின் தினசரி தியான மூர்த்திகளான கடவுளர் வடிவங்களை, பழங்காலக் கருத்துக்களுக்கு ஏற்ற உணர்வோடு நீங்கள் வரைய முயன்றால் நல்லது.'

ரநாதபாபு: 'உங்கள் வார்த்தைகள் எனக்கு உற்சாகம் அளிக்கின்றன. உங்கள் கருத்துப்படி வரைய முயல்கிறேன்.'

சுவாமிஜி: 'உதாரணமாக, காளியின் வடிவத்தைப் பாருங்கள். ஆனந்தமும் பயங்கரமும் சேர்ந்த வடிவம் அது. ஆனால் எந்தச் சித்திரத்திலும் இந்த இரண்டு உணர்ச்சிகளின் சரியான வெளிப்பாட்டைக் காண முடியவில்லை. ஏன், இந்த இரண்டுள் ஒன்றுகூடப் போதுமான அளவில் வெளிப்படுத்தப் படவில்லை. நான் எழுதிய ''அன்னை காளி'' என்ற ஆங்கிலப் பாடலில் சில கருத்துக்களை வெளிப்படுத்த முயன்றிருக்கிறேன். அவற்றை ஓர் ஓவியத்தில் உங்களால் கொண்டுவர முடியுமா?'

ரநாதபாபு: 'அதைப்பற்றிக் கூறுங்கள்.'

சுவாமிஜி அந்தப் பாடலைக் கொண்டுவரச் செய்து மிக ஆழ்ந்த உணர்வோடு அதை ரநாத பாபுவிற்குப் படித்துக் காட்டினார். ரநாத பாபு ஆழ்ந்த அமைதியில் மூழ்கியபடி அதைக் கேட்டார். சுவாமிஜி பாடிய பாடலில் விரிந்த, பயங்கர வடிவத்தைத் தன் மனக்கண்ணால் பார்த்துக் கொண்டிருப்பவர் போல் சிறிதுநேரம் அமர்ந்திருந்த அவர் பிறகு சிறிது பயம் கலந்த பார்வையுடன் சுவாமிஜியின் பக்கம் திரும்பினார்.

சுவாமிஜி: 'நல்லது, இந்தக் கருத்தை நீங்கள் ஓவியத்தில் கொண்டு வருவீர்களா?'

ரநாதபாபு: 'முயற்சி செய்கிறேன். ஆனால் இந்தக் கருத்தைக் கற்பனை செய்தாலே தலைசுற்றுவதுபோலிருக்கிறது.'

சுவாமிஜி: 'அந்தப் படத்தை வரைந்தபிறகு என்னிடம் காட்டுங்கள்.[1] நான் அது முழுமை பெறுவதற்குச் சில திருத்தங்களைச் சொல்கிறேன்.'

ராமகிருஷ்ண மிஷனின் சின்னமாக அமைப்பதற்கான ஓவியத்தை சுவாமிஜி வரைந்து வைத்திருந்தார்.[2] அதைக்

---

1. ரநாத பாபு மறுநாளே அந்தப் படத்தை வரையத் தொடங்கினார் ஆனால் அது முடிக்கப்படவும் இல்லை; சுவாமிஜிக்குக் காட்டப்படவும் இல்லை.
2. தற்போது ராமகிருஷ்ண மிஷனின் சின்னமாக இதுவே உள்ளது. இந்த நூலில் ஆரம்பப் பக்கத்தில் (Title Page) இதனைக் காணலாம்.

கொண்டுவரச் செய்து ரநாத பாபுவிடம் காட்டி அவருடைய கருத்தைக் கேட்டார். அந்த ஓவியத்தில் ஓர் ஏரி வரையப் பட்டிருந்தது; தாமரை ஒன்று மலர்ந்திருந்தது; உதித்தெழும் சூரியன் ஒன்றிருந்தது; அன்னம் ஒன்று இருந்தது. முழுவதையும் பாம்பு ஒன்று வட்டவடிமாகச் சுற்றிக் கொண்டிருந்தது. ரநாத பாபுவால் அதன் பொருளைப் புரிந்துகொள்ள முடியவில்லை. எனவே சுவாமிஜியிடம் அதனை விளக்கும்படிக் கூறினார். சுவாமிஜி சொன்னார்:

'அலைவீசும் தண்ணீர் கர்மத்தையும், தாமரை பக்தியையும், உதய சூரியன் ஞானத்தையும், சுற்றிக் கொண்டிருக்கும் பாம்பு யோகத்தையும் எழுப்பப்பட்ட குண்டலினி ஆற்றலையும் அன்னம் பரமாத்மாவையும் குறிக்கிறது. எனவே இந்தப் படத்தின் திரண்ட கருத்து, கர்மம், ஞானம், பக்தி, யோகம் ஆகிய நான்கின் இணைப்பால் பரமாத்மாவின் காட்சியைப் பெறுவதாகும்.'

சுவாமிஜியின் விளக்கத்தைக் கேட்ட ரநாத பாபு பிரமித்துப் போய் அமர்ந்திருந்தார். சிறிது நேரத்திற்குப் பிறகு சுவாமிஜியிடம், 'உங்களிடம் சிறிது காலம் கலையைப்பற்றிக் கற்றுக் கொள்ள முடியுமானால் உண்மையிலேயே நான் மிகுந்த பயனடைவேன்' என்றார்.

பிறகு சுவாமிஜி எதிர்காலத்தில் தாம் கட்டப்போகின்ற ஸ்ரீராமகிருஷ்ணர் கோயில் பற்றிய வரைபடத்தைக் காட்டி விட்டுக் கூறினார்: 'இந்தக் கோயிலில் மேலை மற்றும் கீழைநாடுகளில் உள்ள சிறந்த கலை அம்சங்கள் அனைத்தையும் அமைக்க விரும்புகிறேன். உலகம் முழுவதிலும் நான் பார்த்துச் சேகரித்த கட்டிடக் கலை விவரங்கள் அனைத்தையும் இந்தக் கோயிலின் அமைப்பில் உட்படுத்த முயல்வேன். பல தூண்களுடன் கூடிய ஒரு விசாலமான பிரார்த்தனை மண்டபம் இருக்கும். அதன் சுவர்களில் நூற்றுக்கணக்கான மலர்ந்த தாமரைகள் செதுக்கப் படும். ஆயிரம் பேர் உட்கார்ந்து தியானம் செய்யும் அளவு மண்டபம் பெரியதாக இருக்கும். தொலைவிலிருந்து பார்ப்பவர்களுக்குக் கோயிலும் பிரார்த்தனை மண்டபமும் இணைந்து ஓம் என்ற வடிவில் தெரியும்படிக் கட்டப்படும். கோயிலுக்குள் அன்னத்தின்மீது அமர்ந்ததுபோல் ஸ்ரீராமகிருஷ்ணரின் திருவுருவம் இருக்கும். கதவின் இரண்டு பக்கங்களிலும் சிங்கமும் ஆடும் ஒன்றின் உடம்பை ஒன்று அன்போடு நக்கிக்கொண்டு இருப்பது போன்ற சித்திரங்கள் காணப்படும்; பேராற்றலும்

மென்மையும் அன்பினால் இணைந்திருப்பதைக் குறிப்பதே அதன் நோக்கம்.

'இத்தகைய கருத்துக்கள் எல்லாம் என் மனத்தில் இருக்கின்றன. நான் உயிரோடு இருந்தால் நானே இதை அமைப்பேன். இல்லையென்றால் எதிர்காலச் சந்ததிகள் முயன்றால் சிறிது சிறிதாக இதை அமைக்கலாம். நாட்டின் எல்லா கலைகளையும் பண்பாடுகளையும் உயிர்பெறச் செய்வதற்காக ஸ்ரீராமகிருஷ்ணர் தோன்றினார் என்று எனக்குத் தோன்றுகிறது. அந்த வகையில் தர்மம், கர்மம், கல்வி, ஞானம், பக்தி ஆகிய அனைத்தையும் உலகம் முழுவதற்கும் பரப்பும் மையமாக இருக்கின்ற வகையில் இந்த மடம் கட்டப்பட வேண்டும். நீங்கள் இந்த வேலையில் எனக்குத் துணையாக இருங்கள்.'

சுவாமிஜியைச் சுற்றி அமர்ந்திருந்த ரநாத பாபுவும் சன்னியாசிகளும் சுவாமிஜி கூறுவதை வியப்போடு கவனித்தபடி இருந்தார்கள். சிறிது நேரம் கழித்து சுவாமிஜி ரநாத பாபுவைப் பார்த்தபடி தமது பேச்சைத் தொடர்ந்தார்: 'நீங்கள் இந்தத் துறையில் மிக ஆழ்ந்த அறிவு உடையவராதலால் உங்களோடு இவ்வளவு நேரம் அதைப்பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறேன். கலையைப்பற்றி நீங்கள் இவ்வளவு நீண்ட காலமாக ஆராய்ந்து வருகிறீர்கள். அதன் சாரம் என்ன, அதன் முடிவான கருத்து என்ன என்பதைச் சொல்லுங்களேன்.'

ரநாதபாபு: 'சுவாமிஜி, நான் என்ன புதிய செய்தியை உங்களுக்குச் சொல்லப் போகிறேன்? நீங்கள்தான் இந்தத் துறையில் எனக்கு ஒரு புதிய கண்ணோட்டத்தையே அளித்திருக்கிறீர்கள். கலையைப்பற்றி இதுபோன்ற கருத்து செறிந்த பேச்சை என் வாழ்க்கையில் நான் கேட்டதில்லை. உங்களிடம் பெற்ற கருத்துக்களை என் பணியில் வெளிப்படுத்தும் திறமை எனக்கு ஏற்படும்படி ஆசீர்வதியுங்கள்.'

சுவாமிஜி தன் இருக்கையிலிருந்து எழுந்து புல் தரையில் நடந்தபடிச் சீடரிடம், 'துடிப்பான பையன்' என்றார்.

சீடர்: 'சுவாமிஜி! அவர் உங்கள் வார்த்தைகளைக் கேட்டு ஆச்சரியப்பட்டுப் போனார்.'

சுவாமிஜி சீடருக்கு எந்தப் பதிலும் கூறாமல் ஸ்ரீராமகிருஷ்ணர் வழக்கமாகப் பாடும் பாடல்களில் ஒன்றான, 'ஒருமுகப்படுத்தப் பட்ட மனம் என்பது பெரிய புதையல், ரசவாதக் கல். நீ எதைக் கேட்கிறாயோ அதனை அது தரும்' என்னும் பாடலை முணுமுணுத்தவாறே பாடினார்.

சிறிதுநேரம் உலவிய பிறகு சுவாமிஜி முகம் கழுவிக் கொண்டு தமது அறைக்குள் சென்று கலைக் களஞ்சியத்தில் (Encyclopaedia Britanica) 'கலை' பற்றிய பகுதியைச் சற்றுநேரம் படித்தார். பிறகு சீடரின் சொந்தப் பகுதியான கிழக்கு வங்காள மக்கள் பேசும் சில சொற்களையும் உச்சரிப்பையும் அது போலவே பேசியும் உச்சரித்தும் சீடரைக் கேலி செய்தார்.

## 34

பேலூர் மடம், 1901

சுவாமிஜி கிழக்கு வங்காளத்திற்கும் அசாமிற்கும் சென்று சில நாட்களுக்கு முன்புதான் திரும்பியிருந்தார். அவருக்கு உடல்நிலை சரியில்லை. கால்கள் வீங்கி இருந்தன. மடத்திற்கு வந்ததும் சீடர் மாடியில் உள்ள அவரது அறைக்குச் சென்று அவர்முன் வீழ்ந்து வணங்கினார். உடல்நிலை சரியில்லாமல் இருந்தும் சுவாமிஜி தமக்குரிய வழக்கமான புன்சிரிப்போடும் அன்பான தோற்றத்தோடும் விளங்கினார்.

சீடர்: 'சுவாமிஜி எப்படி இருக்கிறீர்கள்?'

சுவாமிஜி: 'சொல்ல என்ன இருக்கிறது மகனே? உடம்பு நாளுக்குநாள் பலவீனமாகிக் கொண்டேயிருக்கிறது. வங்க மண்ணில் உடலெடுக்க வேண்டியதாயிற்று. எனவே எப்போதும் ஏதாவது ஒரு நோய் வந்துகொண்டே இருக்கிறது. இந்த வங்காளத்தில் உடலமைப்பு சிறிதும் நல்லதல்ல. கடினமான வேலை எதையும் இந்த உடம்பு தாங்காது. ஆனால் எத்தனை நாட்கள் உடம்பு இருக்குமோ அதுவரை உங்களுக்காகப் பாடு படுவேன்; பாடுபட்டபடியே இறந்து போவேன்.'

சீடர்: 'சிறிது நாட்கள் வேலை செய்வதை விட்டுவிட்டு ஓய்வு எடுத்துக்கொண்டால் உங்கள் உடம்பு நன்றாகிவிடும். உங்கள் உடம்பு நன்றாக இருந்தால் இந்த உலகத்திற்கு எவ்வளவோ நல்லது.'

சுவாமிஜி: 'அமைதியாக ஓய்வெடுத்துக் கொண்டிருக்க என்னால் முடியுமா மகனே? ஸ்ரீராமகிருஷ்ணர் யாரைக் காளி என்று அழைத்தாரோ அந்தக் காளி அவர் காலமாவதற்கு இரண்டு நாட்களுக்கு முன்பு இந்த உடம்பிற்குள் புகுந்து கொண்டாள். அவள்தான் என்னை ஓய்வெடுக்கவிடாமல், என்னுடைய உடல் வசதிகளையும் கவனிக்கவிடாமல், எப்போதும் இங்கும் அங்குமாக அலைய வைத்து எந்த நேரமும் செயல் புரிய வைக்கிறாள்.'

சீடர்: 'உங்களிடம் ஆற்றல் புகுந்தது என்பதை உருவக மாகச் சொல்கிறீர்களா?'

சுவாமிஜி: 'இல்லையப்பா இல்லை. ஸ்ரீராமகிருஷ்ணர் காலமாவதற்கு இரண்டுமூன்று நாட்களுக்கு முன்பு ஒருநாள் தனியாக என்னை அழைத்து அருகில் அமரச் சொன்னார். பின்னர் அவர் என் எதிரில் அமர்ந்து என்னைக் கூர்ந்து பார்த்த படியே சமாதியில் ஆழ்ந்தார். அப்போது சரியாக மின்சாரம் போன்ற சக்தி ஒன்று என்னுள் புகுவதை உணர்ந்தேன்! சிறிது நேரத்தில் நானும் வெளி உணர்வை முற்றிலும் இழந்து அசை யாமல் உட்கார்ந்துவிட்டேன். எவ்வளவு நேரம் அப்படியே இருந்தேன் என்பது எனக்கு நினைவில்லை. நினைவு வந்தபோது அவர் அழுது கொண்டிருப்பதைக் கண்டேன். அதற்கான காரணம் கேட்டபோது அவர் மிகுந்த அன்புடன், ''இன்று என்னிடமிருந்ததை எல்லாம் உனக்குக் கொடுத்துவிட்டு நான் ஓட்டாண்டியாகிவிட்டேன். இந்தச் சக்தியை வைத்துக் கொண்டு, உலகத்திற்குப் பல பணிகளைச் செய்வாய். அதன் பிறகே திரும்புவாய்'' என்றார். இப்போது இடைவிடாமல் என்னை, ''இதைச் செய், அதைச் செய்'' என்று துரத்திக்கொண் டிருப்பது அந்தச் சக்திதான் என்று தோன்றுகிறது. இந்த உடம்பு சும்மா இருப்பதற்காகச் செய்யப் படவில்லை மகனே!'

இந்த வார்த்தைகளைக் கேட்டுச் சீடர் திகைத்துப்போனார். தனக்குள், 'சாதாரண மக்கள் இவற்றையெல்லாம் எப்படிப் புரிந்துகொள்வார்கள்?' என்று நினைத்தார். பின்னர் பேச்சை மாற்றி, 'சுவாமிஜி, எங்கள் கிழக்கு வங்காளம் உங்களுக்குப் பிடித்திருக்கிறதா?' என்று கேட்டார்.

சுவாமிஜி: 'பரவாயில்லை. நிலங்களில் நல்ல விளைச்சல் காணப்படுகிறது. தட்பவெப்ப நிலையும் நன்றாக இருக்கிறது. மலைக் காட்சிகள் பிரமாதம். பிரம்மபுத்திரா பள்ளத்தாக்கின் அழகு இணையற்றதாக இருக்கிறது. கிழக்கு வங்காள மக்கள் இங்குள்ள மக்களைவிட வலிமையானவர்கள்; அதிகமாக உழைப்பவர்களாகவும் இருக்கிறார்கள். இது, அவர்கள் மீனும் இறைச்சியும் அதிகமாக உண்பதால் இருக்கலாம். எந்த வேலை யையும் விடாமுயற்சியோடு செய்கிறார்கள். அவர்கள் தங்கள் உணவில் மிக அதிகமாக எண்ணெயையும் கொழுப்பையும் சேர்த்துக் கொள்கிறார்கள். இது நல்லதல்ல. எண்ணெயும் கொழுப்பும் நிறைந்த உணவுவகைகள் உடம்பில் கொழுப்பை அதிகமாக்குகின்றன.'

சீடர்: 'அவர்களது மத உணர்வு எப்படி இருக்கிறது?'

சுவாமிஜி: 'மதத்தைப் பொறுத்தவரையில் சற்று பழமை வாதிகளாகவே உள்ளனர். பலர் தாராள மனப்பான்மை உடையவர்களாக இருக்க முயன்று, கொள்கைவெறியர்களாகி விட்டனர். ஒருநாள் நான் மோகினி பாபுவின் வீட்டில் இருந்தபோது, ஓர் இளைஞன் புகைப்படம் ஒன்றை என்னிடம் கொண்டு வந்து, ''சுவாமிஜி, அருள்கூர்ந்து இவர் யார் என்று சொல்லுங்கள்? இவர் ஓர் அவதார புருஷரா?'' என்று கேட்டான். நான் பல முறை அவனிடம், ''அவரைப்பற்றி எனக்கு ஒன்றும் தெரியாதப்பா'' என்றேன். மூன்று நான்கு முறை இப்படிச் சொல்லியும் அவன் விடவில்லை. மேலும்மேலும் அதே கேள்வியைக் கேட்டுக்கொண்டிருந்தான். இறுதியில் நான் அவனிடம், ''இதோ பார்! இனிமேல் கொஞ்சம் சத்துள்ள உணவாகச் சாப்பிடு. அப்போதுதான் உன் மூளை வளரும். சத்தான உணவு இல்லாததால் மூளையே வறண்டு போய் விட்டது'' என்று சொல்ல வேண்டியதாயிற்று. இதைக் கேட்டு அந்த இளைஞன் மிகவும் வருந்தி இருக்கலாம். ஆனால் நான் என்ன செய்ய முடியும்? நான் இப்படிக் கடுமையாகப் பேசா விட்டால் இந்த இளைஞர்கள் சிறிதுசிறிதாகப் பைத்தியங்களாகி விடுவார்கள்.'

சீடர்: 'கிழக்கு வங்காளத்தில் இப்போது பெரியபெரிய அவதார புருஷர்கள் எல்லாம் தோன்றிக் கொண்டிருக்கிறார்கள்.'

சுவாமிஜி: 'ஒருவர் தங்கள் குருவை அவதாரம் என்று கூறலாம்; வேறு எப்படி வேண்டுமானாலும் எண்ணிக் கொள்ளலாம். ஆனால் கடவுள் அவதாரம் செய்வது என்பது எல்லா இடங்களிலும் எல்லா காலங்களிலும் நிகழ்வதில்லை. டாக்காவில் மட்டும் மூன்று நான்கு அவதாரங்கள் இருப்பதாகக் கேள்விப்பட்டேன்!'

சீடர்: 'அந்தப் பக்கத்துப் பெண்கள் எப்படி இருக்கிறார்கள்?'

சுவாமிஜி: 'பெண்கள் ஏறக்குறைய எங்கும் ஒரே மாதிரி தான் இருக்கிறார்கள். டாக்காவில் வைணவம் ஓங்கியிருப்பதைக் கண்டேன். ஹ-வின் மனைவி மிகவும் புத்திசாலி. கவனத்தோடு எனக்கு உணவு சமைத்து அனுப்பினாள்.'

சீடர்: 'நீங்கள் நாகமகாசயரின் வீட்டிற்குப் போனதாகக் கேள்விப்பட்டேன்?'

சுவாமிஜி: 'ஆ, அவர் எவ்வளவு பெரிய மகான்! அவ்வளவு தூரம் போய் அவரது வீட்டிற்குப் போகாமல் இருப்பேனா? அவரது மனைவி தம் கைகளாலேயே உணவு சமைத்து எனக்குப் பரிமாறினார். அவரது வீடு சாந்தி ஆசிரமம்போல், அவ்வளவு அமைதியாக இருந்தது. அங்கே ஒரு கிராமக் குளத்தில் நீந்திக் களித்தேன். அதன்பிறகு உறங்கினேன். படுத்தவன் இரண்டரை மணிக்கே எழுந்தேன். என் வாழ்க்கையில் சில முறையே மிகவும் ஆழ்ந்து தூங்கி இருக்கிறேன். அதில் நாகமகாசயர் வீட்டில் தூங்கியதும் ஒன்று. தூங்கி எழுந்ததும் நன்றாகச் சாப்பிட்டேன். நாகமகாசயரின் மனைவி எனக்கு ஒரு துணியை அன்பளிப்பாகத் தந்தார். அதைத் தலையில் கட்டிக்கொண்டு டாக்காவை நோக்கிப் புறப்பட்டேன். அங்கே நாகமகாசயரின் புகைப்படம் வழிபடப்படுவதைக் கண்டேன். அவரது சமாதித் தலத்தை நன்றாகப் பாதுகாக்க வேண்டும். இப்போது அது உரிய முறையில் பாதுகாக்கப்படவில்லை.'

சீடர்: 'அந்தப் பகுதி மக்களால் அவரைப் புரிந்துகொள்ள முடியவில்லை.'

சுவாமிஜி: 'சாதாரண மக்களால் ஒரு மகானை எப்படிப் புரிந்துகொள்ள முடியும்? அவருடைய தொடர்பு கிடைக்கப் பெற்றவர்கள் உண்மையில் பேறுபெற்றவர்கள்.'

சீடர்: 'காமாக்யாவில் என்ன பார்த்தீர்கள்?'

சுவாமிஜி: 'ஷில்லாங் மலைத்தொடர்கள் மிக அழகானவை. அங்கு அசாமின் முதன்மை கமிஷனரான சர் ஹென்றி காட்டனைச் சந்தித்தேன். அவர் என்னிடம், ''சுவாமிஜி, ஐரோப்பா அமெரிக்கா இங்கெல்லாம் பயணம் செய்த நீங்கள் இவ்வளவு தொலைவிலுள்ள மலைப் பகுதியில் எதைக் காண வந்தீர்கள்?'' என்று கேட்டார். ஹென்றி காட்டனைப்போல் அவ்வளவு நல்ல அன்பான மனிதர்களைக் காண்பது அரிது. எனக்கு உடல் நலமில்லாததை அறிந்து அரசாங்க மருத்துவரை அனுப்பினார். எனது உடல்நிலை விவரங்களையும் இரு முறை கேட்டறிந்தார். உடல்நிலை மிக மோசமாக இருந்ததால் என்னால் அங்கே அதிகம் சொற்பொழிவுகள் செய்ய முடியவில்லை. நிதாய் எனக்குச் சேவை செய்து என்னை நல்ல முறையில் கவனித்துக் கொண்டார்.'

சீடர்: 'அங்கே மத நம்பிக்கை எப்படி உள்ளது?'

சுவாமிஜி: 'அது தாந்திரீக பூமி. ''ஹங்கர தேவர்'' எனப்படும் ஒருவரை அவதாரம் என்று மக்கள் வழிபடுகிறார்கள்.

அவரது நெறி மிகவும் பரவி இருப்பதாகக் கேள்விப்பட்டேன். ஹங்கர தேவர் என்பது ஆதிசங்கரர் என்னும் பெயரின் மறு வடிவமா என்பது புரியவில்லை. அவர்கள் சன்னியாசிகள். பெரும்பாலும் தாந்திரீகச் சன்னியாசிகளாக இருக்கலாம். ஒரு வேளை சங்கரரின் நெறியில் ஒரு பிரிவினராகவும் இருக்கலாம்.'

சீடர்: 'கிழக்கு வங்க மக்கள் நாகமகாசயரை அறிந்து மதிக்க முடியாதவர்களைப் போலவே உங்களையும் புரிந்து கொள்ளவில்லை என்றே தோன்றுகிறது.'

சுவாமிஜி: 'என்னைப் புரிந்துகொள்ளட்டும், புரிந்துகொள் ளாமல் போகட்டும்! ஆனால் அவர்கள் இங்குள்ளவர்களைவிட ரஜோ குணம் மிக்கவர்களாக இருக்கிறார்கள். நாளடைவில் அது இன்னும் வெளிப்படும். இப்போது நாகரீகம் என்று எது சொல்லப் படுகிறதோ அந்த வாழ்க்கை இன்னும் முழுமையாக அங்கே நுழையவில்லை. படிப்படியாக அதுவும் வந்துவிடும். எப்போதுமே தலைநகரிலிருந்துதான் நாகரீகமும், புதிய நடை உடை பாவனைகளும் நாட்டின் மற்ற பகுதிகளுக்குப் பரவும். கிழக்கு வங்காளத்திலும் அது இப்போது பரவிக் கொண்டிருக் கிறது. நாகமகாசயரைப் போன்ற மகானைத் தோற்றுவித்த பூமியைப் பற்றி வேறென்ன சொல்ல இருக்கிறது? அவரது ஒளி யால் கிழக்கு வங்காளமே பிரகாசித்துப் பொலிகிறது.

சீடர்: 'ஆனால் சுவாமிஜி, சாதாரண மக்களால் அவரது மகோன்னத நிலையை அறிய முடியாது. அவர் தம்மைப் பேரளவிற்கு மறைத்திருந்தார்.'

சுவாமிஜி: 'அங்கே அவர்கள் என் உணவைப்பற்றிப் பெரிய குழப்பத்தை உண்டாக்கினார்கள். ''ஏன் அதைச் சாப்பிடு கிறீர்கள்? குறிப்பிட்ட அந்த ஆளிடம் ஏன் சாப்பிடுகிறீர்கள்?'' என்றெல்லாம் கேள்விகள். அதற்கு நான், ''நான் ஒரு சன்னியாசி, ஒன்றுமில்லாத பக்கிரி. புற ஆசாரங்களைப் பின்பற்றும் அவ சியம் எனக்கு இல்லை'' என்று சொன்னேன். சாஸ்திரங்களும் ''சரேன்மாதுகரீம் வ்ருத்திமபி ம்லேச்ச குலாதபி—தேனீ பல மலர்களிலிருந்து தேனைச் சேகரிப்பதுபோல், சன்னியாசி பல வீடுகளிலிருந்து, தாழ்ந்த குலத்தினரிடமிருந்தும்கூட, உணவு பெற வேண்டும்'' என்று தெளிவாகச் சொல்லவில்லையா? ஆனால் சாஸ்திரங்கள் கூறும் உண்மைகளை நடைமுறையில் பின்பற்றவும் அதன் உட்கருத்தை உணரவும் ஆரம்பத்தில் புற ஆசாரங்களைப் பின்பற்ற வேண்டியதுதான். ''இந்த வருடம் இவ்வளவு மழை பெய்யும் என்று பஞ்சாங்கத்தில் எழுதப்

பட்டிருக்கும், அதற்காகப் பஞ்சாங்கத்தைப் பிழிந்தால் தண்ணீர் வருமா?'' என்று கேட்பார் ஸ்ரீராமகிருஷ்ணர். புற ஆசாரங்கள், அது இது எல்லாமே மனிதனின் அகத்தே உள்ள மகத்தான சக்தியை வெளிப்படுத்துவதற்கு உதவுகின்ற கருவிகள் மட்டுமே. சாஸ்திரங்களின் நோக்கமே நம்மிடமுள்ள அந்த உள்சக்தியை எழுப்புவது, நமது உண்மை இயல்பை நாம் புரிந்து கொள்ளச் செய்வதுதான். ஆசாரங்களாகிய கருவிகள் விதிவிலக்குகளின் உருவில் இருக்கின்றன. லட்சியத்தை விட்டுவிட்டு வழிமுறை களைப்பற்றிச் சண்டையிடுவதால் என்ன பயன்? எந்த நாடானாலும் சரி, சண்டையெல்லாம் வழிமுறைகளைக் குறித்தே. லட்சியத்தைப்பற்றி யாரும் கவலைப்படுவதாக இல்லை. அதை உணர்த்தவே ஸ்ரீராமகிருஷ்ணர் அவதரித்துள்ளார்.

'அனுபூதிதான் சாரம். ஆயிரம் ஆண்டுகள் கங்கையில் குளி. ஆயிரம் ஆண்டுகள் அசைவ உணவைச் சாப்பிடு. ஆன்ம வெளிப்பாட்டிற்குத் துணை செய்யவில்லையென்றால் அவையெல்லாம் வீண் என்பதைத் தெரிந்துகொள். ஒருவன் இந்தப் புற ஆசாரங்கள் எதுவும் இன்றியே ஆன்மதரிசனம் பெற முடியுமானால் அந்த ஆசாரமின்மைதான் மிகச் சிறந்த ஆசாரம்! ஆனால் ஆன்மதரிசனம் பெற்றபிறகும் மற்றவர்களுக்கு வழி காட்டுவதற்காகச் சில புற ஆசாரங்களைப் பின்பற்றுவது நல்லது.

'முக்கியம் என்னவென்றால் உன் மனத்தை ஏதாவது ஒன்றின்மீது உறுதியாக நிலைக்கச் செய்ய வேண்டும். மனம் ஒரு பொருள்மீது உறுதியாக நிலைபெற்றால், அது ஒருமுகப் பட்ட நிலையை அடையும், அதாவது மனத்தின் அலைவுகள் அழியும், ஒரே திசையில் ஒரே மாதிரியாக மன அலைகள் பாய்ந்து செல்லும். பலர் வெறும் புற ஆசாரங்களில் மட்டும் ஈடுபட்டு ஆன்ம சிந்தனையையே விட்டுவிடுகிறார்கள். இரவும் பகலும் எந்த நேரமும் விதிவிலக்குகளின் எண்ணத்திலேயே ஆழ்ந்திருந்தால் ஆன்மா எப்படி வெளிப்பட முடியும்? ஒருவன் ஆன்மாவை நோக்கி முன்னேறும் அளவிற்குப் புறச் சடங்குகள் அவனிடமிருந்து விலகுகின்றன. சங்கரர்கூட இந்த நிலையைப் பற்றி, ''நிஸ்த்ரைகுண்யே பதி விசரதாம் கோ விதி: கோ நிஷேத:?—முக்குணங்களைக் கடந்தநிலையில் இருப்பவனுக்கு விதி எது? விலக்கு எது?'' என்று கூறுகிறார். எனவே அனுபூதியே முக்கியமானது. அதுவே லட்சியம் என்பதை அறிந்துகொள். மதம் என்பது வழி, பாதை அவ்வளவுதான்.

'யார் எவ்வளவு முன்னேறியிருக்கிறார் என்பதற்கான சோதனை அவனிடமுள்ள தியாகத்தின் அளவைப் பொறுத்தது. ஒருவன் எந்த மதத்தைச் சேர்ந்தவனாக இருந்தாலும் அவனிடம் காமம் மற்றும் பணத்தாசை குறைந்திருக்குமானால் அவனிடம் சக்தி விழிப்புற்றுவிட்டது, ஆன்ம ஞானத்திற்கான கதவு அவனுக்காகத் திறந்துவிட்டது என்பதைத் தெரிந்துகொள். இதற்கு மாறாக, நீ ஆயிரம் ஆசாரங்களைப் பின்பற்றினாலும், ஆயிரக்கணக்கான சுலோகங்களை மனப்பாடம் செய்து ஒப்பித்தாலும், தியாக மனப்பான்மை வரவில்லையென்றால் உன் வாழ்க்கை வீண் என்பதைத் தெரிந்துகொள். ஆன்மஞானம் பெறுவதில் ஊக்கத்தோடும் உறுதியோடும் முழுமனத்தோடும் ஈடுபடு! போதுமான அளவு சாஸ்திரங்களைப் படித்துவிட்டாய். அதனால் உனக்குக் கிடைத்த நன்மை என்ன? சொல் பார்க்கலாம். சிலர் எப்போதும் பணத்தை நினைத்துக் கொண்டிருந்ததால் லட்சாதிபதி ஆனார்கள். நீ அதைச் செய்யாமல், சாஸ்திரங்களை நினைத்துக் கொண்டிருந்து பண்டிதனாகி இருக்கிறாய். இரண்டுமே பந்தங்கள்தான். உயர் ஞானம் வேண்டுமானால் அறிவு, அறியாமை இரண்டையும் கடந்து செல்.'

சிடர்: 'தங்கள் அருளால் எனக்கு எல்லாம் புரிகிறது. ஆனால் அந்தப் போதனையைப் பின்பற்றவிடாமல் வினைப் பயன் என்னைத் தடுக்கிறது.'

சுவாமிஜி: 'முன்வினை, அது இது என்பதையெல்லாம் தூக்கி எறி. வினைப்பயனால் இப்போது நீ இந்தப் பிறவியை எடுத்திருப்பது உண்மையானால், அதே வினை அல்லது செயலின் மூலம் முற்பிறவி வினைகளை அழித்து, இந்தப் பிறவியிலேயே நீ ஏன் ஜீவன்முக்தனாகக் கூடாது? முக்தி அல்லது ஆன்மஞானம் உன் கைகளிலேயே இருக்கிறது என்பதைத் தெரிந்துகொள். ஞானத்தில் கர்மம் அல்லது செயலின் நிழல்கூட இல்லை. ஜீவன் முக்தர்களான பிறகும் யாராவது செயல் புரிவார்களானால் அது பிறரின் நன்மைக்காகவே. நல்லதானாலும் கெட்டதானாலும், செயல்களுக்கான பலன்களை அவர்கள் எதிர்பார்ப்பதில்லை. அவர்கள் மனத்தில் ஆசை என்பது சிறிதும் இருக்காது. ஒருவிதத்தில் சொல்லப்போனால் இல்லறத்தில் இருந்துகொண்டு, உண்மையில் பிறரது நன்மைக்காக எதுவும் செய்ய முடியாதுதான். இல்லறத்தில் இருந்தும் உண்மையான நன்மை செய்தவராக இந்து சாஸ்திரங்கள் முழுவதிலுமே ஜனகர் ஒருவர்தான் கூறப்படுகிறார். நீங்களோ வருடாவருடம்

குழந்தைகளைப் பெற்றுக்கொண்டு 'நாங்களும் ஜனகர்' என்று பேசிக் கொண்டிருக்கிறீர்கள்.'[1]

சீடர்: 'இந்தப் பிறவிலேயே நான் ஆன்மஞானம் பெற என்னை ஆசீர்வதியுங்கள்.'

சுவாமிஜி: 'ஏன் பயப்படுகிறாய்? மனத்தின் ஒருமுகப்பட்ட முயற்சி இருக்குமானால் நிச்சயமாக நீ இந்தப் பிறவியிலேயே பிரம்ம ஞானத்தை அடைவாய். ஆனால் புருஷகாரம் வேண்டும். அது என்ன தெரியுமா? ''நான் நிச்சயம் ஆன்மஞானம் பெறு வேன். என்ன தடைகள் வந்தாலும் சரி, அவற்றை எதிர்த்து வெல்வேன்''—இத்தகைய திட சங்கல்பமே புருஷகாரம். ''என் தாய், தந்தை, நண்பர்கள், சகோதரர்கள், மனைவி, பிள்ளைகள் எல்லாம் உயிரோடு வாழட்டும் அல்லது செத்துப் போகட்டும். இந்த உடம்பு இருக்கட்டும் அல்லது அழியட்டும், ஆன்மாவை அடையாமல் நான் திரும்ப மாட்டேன்'' என்று கூறி எல்லா வற்றையும் உதறிவிட்டு லட்சியத்தை அடைவதற்கான முயற்சி யில் ஈடுபடுவதே புருஷகாரம். வேறு விஷயங்களுக்கான புருஷ காரத்தை விலங்குகளும் பறவைகளும்கூடச் செய்கின்றனவே!

'மனிதன் இந்த உடம்பைப் பெற்றிருப்பது ஆன்ம ஞானத்தை அடைவதற்காக மட்டுமே. சராசரி மனிதர்களைப் போலவே வாழ்க்கையில் மிதந்து செல்லப் போகிறாயா? அப்படி யானால் புருஷகாரம் உன்னிடம் எங்கே இருக்க முடியும்? எல்லோரும் சாகவே செய்கிறார்கள். ஆனால் நீ சாவை வெற்றி கொள்ளப் பிறந்திருக்கிறாய். மகாவீரனைப்போல் முன்னேறு! அங்கும்இங்கும் பார்க்காதே! இந்த உடம்புதான் எத்தனை நாளைக்கு! சுகதுக்கங்கள்தாம் எத்தனை நாளைக்கு! நீ மனித உடலைப் பெற்றிருக்கிறாய், உனக்குள் இருக்கும் ஆன்மாவை விழித்தெழச் செய். ''நான் பயமற்ற நிலையை அடைந்து விட் டேன்'' என்று சொல். ''நான் ஆன்மா. அதில் என் அகந்தை எல்லாம் கரைந்துவிட்டது'' என்று சொல். இந்த வழியில் நிறைநிலையை அடை. அதன்பிறகு, உன் உடம்பு நிலைத் திருக்கும்வரை ''நீ அதுவாக இருக்கிறாய்'', ''எழுந்திரு, விழித் திரு. லட்சியத்தை அடையும்வரை நில்லாமல் செல்'' என்று அச்சத்தை உதறித் தள்ளுவதற்கான போதனைகளை உபதேசி. இதை அடைய முடியுமானால்தான், நீ ஒரு வங்காளி என்று உறுதி கொள்வேன்.'

---

1. ஜனகர் என்ற சொல் தந்தை என்றும் பொருள்படும்.

## 35

பேலூர் மடம், 1901

ஷில்லாங்கிலிருந்து வந்ததிலிருந்து சுவாமிஜிக்கு உடல்நிலை சரியில்லை. அவரது கால்கள் வீங்கியிருந்தன. அவரது உடல் நிலை சகோதரச் சீடர்களை மிகுந்த கவலையில் ஆழ்த்தியது. சுவாமி நிரஞ்ஜனானந்தரின் வேண்டுகோளுக்கிணங்கி சுவாமிஜி ஆயுர்வேதச் சிகிச்சை செய்துகொள்ள இணங்கி இருக்கிறார். அடுத்த செவ்வாய்க் கிழமையிலிருந்து சிகிச்சை துவங்குகிறது. அப்போது சிறிதுகூடத் தண்ணீரோ உப்போ அவர் சாப்பிடக் கூடாது. இன்று ஞாயிற்றுக் கிழமை. சீடர் சுவாமிஜியிடம், ‘சுவாமிஜி, இப்போது வெயில் கொளுத்துகிறது. அடிக்கடித் தண்ணீர் குடிக்கும் வழக்கம் உடையவர் நீங்கள். இந்தச் சிகிச்சைக்காகத் தண்ணீரே குடிக்காமல் நீங்கள் இருப்பது என்பது பொறுக்க முடியாததாக இருக்கும்.’

சுவாமிஜி: ‘நீ என்ன பேசுகிறாய்? சிகிச்சை துவங்கும் நாள் காலையில், ‘‘நான் இனித் தண்ணீரே அருந்துவதில்லை’’ என்று திட சங்கல்பம் செய்துகொள்வேன். அதன்பிறகு தண்ணீர் என் தொண்டைக்குள் இறங்காது. மூன்று வாரங்களும் அப்படியே நீடிக்கும். உடம்பு என்பது மனத்தின் சட்டை மட்டுமே. எதை மனம் கட்டளையிடுகிறதோ அதை உடம்பு நிறைவேற்ற வேண்டும். வேறென்ன? நிரஞ்ஜனுடைய வேண்டுகோளுக்கு இணங்கி நான் இந்தச் சிகிச்சையை மேற்கொள்கிறேன். சகோதரச் சீடர்களின் வேண்டுகோளை என்னால் புறக்கணிக்க முடியாது.’

அப்போது மணி சுமார் பத்து. சுவாமிஜி எதிர்காலத்தில் பெண்களுக்காகத் தாம் அமைக்கவிருக்கும் மடத்தைப்பற்றிப் பேச ஆரம்பித்தார்: ‘அன்னை ஸ்ரீசாரதாதேவியை உற்சாகம் தரும் மையமாகக் கொண்டு கங்கையின் கிழக்குக் கரையில் ஒரு மடம் அமைக்கப்பட வேண்டும். இங்கே பிரம்மச்சாரிகளும் சன்னியாசிகளும் பயிற்றுவிக்கப்படுவது போல் அங்கே பிரம்மச்சாரிணிகளும் சன்னியாசிகளும் பயிற்றுவிக்கப்பட வேண்டும்.’[1]

---

1. சுவாமிஜியின் இந்தத் தீர்க்க தரிசனம் பின்னாளில் மெய்யாகியது. கங்கைக் கரையில் தட்சிணேசுவரத்தில் 1954-ஆம் ஆண்டு பெண்களுக்கான மடம் நிறுவப்பட்டது. ‘ஸ்ரீசாரதா மடம் & ராமகிருஷ்ண சாரதா மிஷன்’ என்ற பெயரில் இன்று அது பல்வேறு கிளைகளுடன் சிறப்பாகச் செயல்பட்டு வருகிறது.

சீடர்: 'பண்டைய இந்தியாவில் பெண்களுக்கான மடங்கள் இருந்ததாக வரலாறு கூறவில்லையே! புத்தர் காலத்தில்தான் அதுபற்றிக் கேள்விப்படுகிறோம். காலப்போக்கில் அதிலிருந்து சீர்கேடுகள் பல தோன்றி, நாடு முழுவதுமே வாமாச்சாரத்தில் மூழ்க நேர்ந்ததே!'

சுவாமிஜி: 'எல்லா உயிர்களிலும் ஒரே ஆன்மாதான் உள்ளது என்று வேதாந்தம் கூறுகிறது. எனினும் இந்த நாட்டில் பெண்களுக்கும் ஆண்களுக்கும் இடையில் இவ்வளவு அதிகமான வேறுபாடுகள் ஏன் என்பதைப் புரிந்துகொள்வது கடினமாக இருக்கிறது. எப்போதும் பெண்களைக் குறை கூறுகிறீர்கள். அவர்களுடைய நன்மைக்காக ஏதாவது செய்திருக்கிறீர்களா? ஸ்மிருதி அதுஇது என்று சாஸ்திரங்களை எழுதியும் கடுமையான சட்டங்களின் மூலமும் அவர்களை அடக்கி வைத்து, வெறும் பிள்ளை பெறும் எந்திரங்களாக ஆக்கிவிட்டீர்கள். ஆதிபராசக்தியின் தோற்றங்களான அவர்களை இப்போதேனும் உயர்வு பெறச் செய்யவில்லை என்றால், உங்களுக்கு வேறு எந்த வழிதான் உள்ளது!'

சீடர்: 'பெண்கள் மாயையின் வடிவங்கள். ஆண்களைச் சீரழிப்பதற்காகவே அவர்கள் படைக்கப்பட்டிருப்பதுபோல் தோன்றுகிறது. தங்கள் மாயையால் அவர்கள் ஆண்களின் ஞானத்தையும் வைராக்கியத்தையும் அழித்துவிடுகிறார்கள். அதனால்தான் சாஸ்திரங்களை எழுதியவர்கள் பெண்களால் பக்தியும் ஞானமும் அடைவது கடினம் என்று எழுதினார்கள் என்று நினைக்கிறேன்.'

சுவாமிஜி: 'பெண்கள் பக்தியும் ஞானமும் அடைவதற்குத் தகுதியில்லாதவர்கள் என்று நீ எந்தச் சாஸ்திரத்தில் படித்தாய்? இந்தியா நலிவுற்றிருந்த காலத்தில் புரோகிதர்கள் செய்த வேலை அது. மற்ற ஜாதியினருக்கு வேதங்களைப் படிக்கும் உரிமையை மறுத்த காலத்தில், பெண்களின் உரிமைகளையும் அவர்கள் பறித்துக் கொண்டார்கள். வேத, உபநிடத காலங்களில் மைத்ரேயி, கார்க்கி முதலான பெண்கள் பிரம்மஞானத்தைப்பற்றி விவாதிக்கும் தங்கள் திறமையின் காரணத்தால் ரிஷிகளுக்குரிய சிறந்த இடத்தைப் பெற்றிருந்ததை நாம் காண்கிறோம். இன்றும் அவர்களை அதிகாலையில் நாம் நினைவுகூர்கிறோம். வேதங்களில் ஆழ்ந்த புலமை உடைய ஆயிரம் பிராமணர்கள் கூடியிருந்த சபையில், பிரம்மத்தைப் பற்றிய விவாதத்திற்காக யாஜ்ஞவல்கியரையே அழைக்கிறார்

கார்க்கி.[1] அவர்கள் அந்தக் காலத்தில் ஆன்மீக வாழ்வில் அனுமதித்துப் போற்றப்பட்டபோது, இந்தக் காலத்தில் ஏன் அந்த உரிமையை மறுக்க வேண்டும்? ஒரு காலத்தில் நடந்தது மற்றொரு காலத்திலும் நிச்சயம் நடக்கும். அதையே வரலாறு காட்டுகிறது. பெண்களுக்குத் தர வேண்டிய, முறையான மதிப்பைக் கொடுத்ததாலேயே எல்லா இனங்களும் மகத்தான நிலையை அடைந்துள்ளன. எந்த நாடு, எந்த இனம், பெண்களை மதிக்கவில்லேயோ அவை ஒருபோதும் சிறந்த நிலையை அடைந்ததில்லை; அடையவும் செய்யாது. உங்கள் இனம் இவ்வளவு இழிந்துள்ளதன் முக்கியக் காரணம், பராசக்தியின் வடிவங்களான பெண்களுக்கு நீங்கள் மரியாதை அளிக் காததுதான்.

''யத்ர நார்யஸ்து பூஜ்யந்தே ரமந்தே தத்ர தேவதா: |
யத்ரைதாஸ்து ந பூஜ்யந்தே ஸர்வாஸ்தத்ரா பலா: க்ரியா: ||

—எங்குப் பெண்கள் மதிக்கப்படுகிறார்களோ அங்கே தேவதைகள் மகிழ்ச்சி அடைகின்றனர். எங்கே அவர்கள் மதிக்கப் படவில்லையோ அங்கே எல்லா காரியங்களும் முயற்சி களும் நாசமாகின்றன'' என்று மனு கூறுகிறார் (3.56). எந்த நாட்டில், எந்தக் குடும்பத்தில் பெண்களுக்கு மதிப்பு இல் லையோ, எங்கே அவர்கள் துயரத்தோடு வாழ்கிறார்களோ, அந்த நாடும் குடும்பமும் உயர்வடைவதற்கான நம்பிக்கையே இல்லை. எனவே அவர்களை முதலில் உயர்த்த வேண்டும். அதற்காக மாதிரி–மடம் ஒன்று அமைக்கப்பட வேண்டும்.'

சீடர்: 'நீங்கள் முதன்முறை அமெரிக்காவிலிருந்து திரும்பியதும் ஸ்டார் தியேட்டரில் செய்த சொற்பொழிவில் தாந்திரீக நெறியைத் தாக்கிப் பேசினீர்கள். இப்போது அதே தாந்திரீக நெறி கூறும் பெண்வழிபாட்டை ஆதரித்துப் பேசு வதன்மூலம் முன்பு சொன்னதற்கு முரணாகச் சொல்கிறீர்களே!'

சுவாமிஜி: 'தாந்திரீகத்தின் தற்போதைய சீரழிந்த நிலை யான வாமாச்சாரத்தைத்தான் நான் தாக்கிப் பேசினேன். பெண் களைத் தாயாக வழிபடுவதையோ உண்மையான வாமாச்சாரத் தையோ நான் எதிர்க்கவில்லை. தாந்திரீகத்தின் அடிப்படையே பெண்களைத் தேவியாக வழிபட வேண்டும் என்பதுதான். புத்த மதம் வீழ்ச்சி அடைந்தபோது வாமாச்சாரம் மிகவும் கெட்டுவிட்டது. அந்தக் கெட்டுப்போன முறை இப்போதும்

1. பார்க்க: பிருஹதாரண்யக உபநிடதம், 3. 6. 1.

நடைமுறையில் உள்ளது. இன்றும் தந்திர சாஸ்திரத்தில் அதன் தாக்கம் இருக்கவே செய்கிறது. நான் அந்தக் கீழான பயிற்சிகளையே தாக்கினேன்; இப்போதும் தாக்குகிறேன்.

'எந்த மகாமாயையின் புறத் தோற்றம் மனிதனின் உணர்ச்சிகளைத் தூண்டி அவனைப் பைத்தியமாக்குகிறதோ, எந்தத் தேவியின் அக வெளிப்பாடுகளான ஞானம், பக்தி, விவேகம், வைராக்கியம் முதலியவை மனிதனை எல்லாம் அறிந்தவனாக, நினைப்பது நிறைவேறப் பெறுபவனாக, பிரம்மஞானியாக ஆக்குகிறதோ, அந்த அன்னையின் வடிவங்களான பெண்களை வழிபடுவதை நான் ஒருபோதும் எதிர்த்ததில்லை. ''ஸைஷா ப்ரஸன்னா வரதா ந்ருணாம் பவதி முக்தயே—அவள் மகிழும் போது நலம் செய்பவளாகிறாள்; மனிதனின் முக்திக்கும் காரணமாகிறாள்.''[1] பூஜை முதலியவற்றால் அவளை மகிழ்விக்காமல் பிரம்மாவும் விஷ்ணுவும்கூட அவளது பிடியிலிருந்து விடுபட்டு முக்தி பெற முடியாது. எனவே வீட்டில் வாழும் இந்த லட்சுமிகளான பெண்களின் வழிபாட்டிற்காகவும், அவர்களிடம் பிரம்மஞானம் வெளிப்படுவதற்காகவும் பெண்களுக்காக மடம் அமைக்க விரும்புகிறேன்.'

சீடர்: 'இது நல்ல யோசனையாக இருக்கலாம். ஆனால் அதில் சேரப் பெண்கள் வருவார்களா? தற்காலச் சமுதாயத்தின் கடுமையான சட்டதிட்டங்களுக்கு இடையில் பெண்கள் மடத்தில் சேர யார் அனுமதிப்பார்கள்?'

சுவாமிஜி: 'ஏன், இன்றுகூட ஸ்ரீராமகிருஷ்ணரின் சிஷ்யைகள் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களின் உதவியோடு மடத்தை ஆரம்பிப்பேன். அன்னை ஸ்ரீசாரதாதேவி அதன் மையமாக விளங்குவார். ஸ்ரீராமகிருஷ்ண பக்தர்களின் மனைவிகளும் மகள்களும் முதலில் அதில் வசிப்பார்கள். அவர்களால் மடத்தின் நோக்கத்தைச் சுலபமாகப் புரிந்து கொள்ள முடியும். அவர்களைப் பார்த்து மற்ற இல்லறத்தார்களும் இந்தப் புனிதமான பணிக்கு உதவி செய்வார்கள்.'

சீடர்: 'ஸ்ரீராமகிருஷ்ணரின் பக்தர்கள் இந்த வேலையில் நிச்சயம் சேருவார்கள். ஆனால் பொது மக்களிடமிருந்து உங்களுக்கு உதவி கிடைக்குமென்று எனக்குத் தோன்றவில்லை.'

சுவாமிஜி: 'தியாகங்கள் இல்லாமல் இந்த உலகத்தில் எந்தப் பெரிய காரியமும் நடக்காது. ஆலமரத்தின் மிகச் சிறிய

---

1. தேவீ மாஹாத்மியம், 1. 56.

விதையைப் பார்க்கும்போது அதிலிருந்து இவ்வளவு பெரிய மரம் வளரப் போகிறது என்று யார்தான் கற்பனை செய்ய முடியும்? முதலில் இப்படி இந்த மடத்தை நான் ஆரம்பிக்கிறேன். ஓரிரு தலைமுறைகளுக்குப் பிறகு மக்கள் இந்த மடத்தின் பெருமையைப் பாராட்டுவதை நீ பார்க்கலாம். என் மேலை நாட்டு சிஷ்யைகள் இதற்காகத் தங்கள் உயிரையும் கொடுப் பார்கள். பயத்தையும் கோழைத்தனத்தையும் தூக்கி எறிந்து விட்டு நீங்களும் இந்த உன்னதமான காரியத்தில் உதவி செய் யுங்கள். இதன் உயர்ந்த லட்சியத்தை எல்லோரிடமும் சொல்லுங்கள். இந்த மடம் ஒரு காலத்தில் நாடு முழுவதற்குமே ஒளி வழங்கப்போவதைக் காண்பீர்கள்.'

சீடர்: 'சுவாமிஜி, இந்த மடத்தைப் பற்றிய உங்கள் எண்ணங்களை எல்லாம் தயவுசெய்து சொல்லுங்கள்.'

சுவாமிஜி: 'கங்கையின் அந்தப் பக்கத்தில் ஒரு பெரிய இடம் வாங்கி மடம் கட்டப்படும். அதில் திருமணமாகாத பெண்களும், விதவைகளான பிரம்மச்சாரிணிகளும் வாழ் வார்கள். பக்தைகளான குடும்பப் பெண்களும் அவ்வப்போது அங்குத் தங்க அனுமதிக்கப்படுவர். ஆண்களுக்கு அந்த மடத் துடன் எந்தத் தொடர்பும் இருக்காது. ஆண்களுக்கான மடத் தின் மூத்த சன்னியாசிகள் தொலைவில் இருந்தபடியே அந்த மடத்தின் காரியங்களைக் கவனிப்பார்கள். அங்கே பெண் களுக்கான ஒரு பள்ளி நடத்தப்படும். அதில் தர்ம சாஸ்திரம், இலக்கியம், சம்ஸ்கிருதம், இலக்கணம், அதோடு ஓரளவு ஆங்கிலமும் கற்பிக்கப்படும். மற்றும் தையல், சமையல், வீட்டு வேலை, குழந்தை வளர்த்தல் முதலியவை சொல்லித் தரப்படும். ஜபம், தியானம், பூஜை முதலியவை கட்டாயமாகச் சொல்லித் தரப்படும். யார் குடும்பத்தைத் துறந்து, அங்கே நிலையாக வாழ் கிறார்களோ அவர்களுக்கு உணவும் உடையும் தரப்படும். அப்படி இருக்க முடியாதவர்கள், தினந்தோறும் இங்கு வந்து வீட்டிற்குத் திரும்பும் மாணவிகளாகச் சேர்த்துக்கொள்ளப் படுவார்கள். அவர்களும் மடத்தினுடைய தலைவியின் அனுமதி பெற்று, வேண்டுமானால் ஓரிரு நாட்கள் தங்கலாம்; அப்படித் தங்கும்போது அவர்களுக்கு உணவை மடம் தரும். மாணவி களுக்குப் பிரம்மச்சரியத்தில் பயிற்சிதரும் பொறுப்பை மூத்த பிரம்மச்சாரிணிகள் ஏற்றுக் கொள்வார்கள். ஐந்தாறு ஆண்டு கள் இந்த மடத்தில் பயிற்சி பெற்ற பிறகு, பெற்றோர் அவர்களுக் குத் திருமணம் செய்து வைக்கலாம். தகுதி படைத்தவர்களாக

இருந்து, பெற்றோர்களும் அனுமதித்தால் அவர்கள் மடத்திலேயே தங்கி பிரம்மச்சரிய விரதத்தை ஏற்கலாம். அப்படி விரதம் ஏற்ற பெண்கள் மட்டுமே மடத்தின் ஆசிரியையாகவும் மத போதனையாளராகவும் ஆவார்கள். அவர்கள் கிராமங்களிலும் நகரங்களிலும் மடத்தின் மையங்களைத் துவக்கி, பெண்கல்வியைப் பரப்புவார்கள். பண்பாடும் ஒழுக்கமும் மிக்க அத்தகையோரால் நாட்டில் பெண்கல்வி வளரும்.

'ஆன்மீகம், தியாகம், புலனடக்கம் ஆகியவை மடத்து மாணவிகளின் லட்சியமாக விளங்க வேண்டும். சேவை அவர்களது வாழ்வின் விரதமாக இருக்க வேண்டும். இத்தகைய லட்சிய வாழ்க்கை வாழ்ந்தால் யார்தான் அவர்களை மதிக்க மாட்டார்கள்? யார்தான் அவர்களிடம் நம்பிக்கை வைக்க மாட்டார்கள்? பெண்களின் வாழ்க்கை இந்த முறையில் அமைக்கப்பட்டால், அதன் பிறகுதான் சீதை, சாவித்திரி, கார்க்கியைப் போன்ற பெண்கள் மறுபடியும் தோன்ற முடியும். மூடப் பழக்கவழக்கங்களால் இந்த நாட்டுப் பெண்கள் எவ்வளவு தூரம் உயிரற்றவர்களாக, உணர்ச்சியற்றவர்களாக மாறி விட்டார்கள் என்பதை நீ மேலை நாடுகளில் சென்று, அந்தப் பெண்களுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் அறிந்து கொள்வாய். நமது பெண்களின் இந்த இழிநிலைக்குக் காரணம் நீங்களே. அவர்களை மீண்டும் உயர்த்துவதும் உங்கள் கைகளிலேயே உள்ளது. அதனால் அவர்களுக்காக வேலை செய்யத் தொடங்கு என்று உன்னிடம் சொல்கிறேன். வேத, வேதாந்தங்களை மனப்பாடம் செய்வதால் என்ன பலன்?'

சீடர்: 'மடத்தில் பயிற்சி பெற்றும் அவர்கள் திருமணம் செய்து கொண்டால் அவர்களிடம் லட்சிய வாழ்வை எப்படிக் காண முடியும்? மடத்தில் பயிற்சி பெறுபவர்கள் திருமணமே செய்துகொள்ளக் கூடாது என்று ஏன் விதி வகுக்கக் கூடாது?'

சுவாமிஜி: 'உடனடியாக அதைச் செய்ய முடியுமா, என்ன? கல்வியளித்து அவர்களை விட்டுவிட வேண்டும். அவர்களே சிந்தித்து, தங்களுக்கு நன்மை அளிப்பதைத் தேர்ந்தெடுக்கட்டும். இங்குக் கல்வி பெற்ற பெண்கள் குடும்ப வாழ்வில் ஈடுபட்டாலும் தங்கள் கணவர்களைச் சிறந்தவர்களாக்குவார்கள்; வீரம் மிக்க பிள்ளைகளுக்குத் தாயாக விளங்குவார்கள். ஆனால் மடத்தில் படிக்கும் பெண்களுக்குப் பதினைந்து வயதாகும்வரை, பெற்றோர் அவர்களின் திருமணம்பற்றி நினைக்கவும் கூடாது என்பது கட்டாய நியதியாக இருக்க வேண்டும்.'

சீடர்: 'அப்படியென்றால் அந்தப் பெண்களுக்குச் சமுதாயத்தில் மதிப்பு இருக்காது. அவர்களை யாரும் திருமணம் செய்து கொள்ளவும் மாட்டார்கள்.'

சுவாமிஜி: 'ஏன் மாட்டார்கள்? நீ இன்னும் நம் சமுதாயத்தின் போக்கைப் புரிந்துகொள்ளவில்லை. படித்த, நல்ல பண்புகளோடுகூடிய இந்தப் பெண்களுக்குக் கணவன் கிடைக்கவில்லை என்று ஒருபோதும் வராது. ''தசமே கன்யகாப்ராப்தி:— பத்து வயதில் பெண்ணைத் திருமணம் செய்ய வேண்டும்'' என்றெல்லாம் சாஸ்திரங்கள் கூறுவதை இப்போதும் யாரும் பின்பற்றவில்லை. இனியும் பின்பற்ற மாட்டார்கள். நீ அதைப் பார்க்கவில்லையா?'

சீடர்: 'நீங்கள் என்ன சொன்னாலும் ஆரம்பத்தில் இதற்கு நிச்சயமாகப் பயங்கர எதிர்ப்பு இருக்கும்.'

சுவாமிஜி: 'இருக்கட்டுமே! அதற்கு ஏன் பயப்பட வேண்டும்? உண்மையான துணிவோடு துவக்கப்படும் நல்ல காரியங்களுக்கு ஏற்படும் எதிர்ப்புகள், அதை ஆரம்பிப்பவர்களின் ஆற்றலைத்தான் அதிகமாக்கும். தடைகளையோ எதிர்ப்புகளையோ சந்திக்காத காரியங்கள், மனிதர்களை மரணத்தின் பாதைக்கே அழைத்துச் செல்லும். போராட்டம்தான் வாழ்க்கையின் அடையாளம், புரிகிறதா?'

சீடர்: 'ஆம் சுவாமிஜி.'

சுவாமிஜி: 'பரப்பிரம்மத்தில் பால்வேறுபாடு இல்லை. இந்த ''நான்-நீ'' என்ற நிலையில்தான் பால்வேறுபாட்டைக் காண்கிறோம். மனம் அகமுகமாகச் செல்லச்செல்ல இந்த வேறுபாடு மறைந்துவிடும். இறுதியாக வேறுபாடற்றதான பிரம்மத்தில் மனம் ஒன்றும்போது ஆண், பெண் என்னும் எண்ணம் இருக்கவே இருக்காது. ஸ்ரீராமகிருஷ்ணரின் வாழ்க்கையில் நாங்கள் இதைத் தெளிவாகக் கண்டோம். புறத்தோற்றத்தில் ஆணுக்கும் பெண்ணுக்கும் வித்தியாசம் இருந்தாலும் அவர்களின் உண்மையான இயல்பில் வேற்றுமை எதுவும் இல்லை. எனவே, ஆண்கள் பிரம்மஞானம் பெறலாம் என்றால் பெண்ணால் ஏன் முடியாது? அதனால்தான் நான் சொல்கிறேன்: ஒரே ஒரு பெண் பிரம்மஞானத்தை அடைந்தால்கூட, அவளிடம் தோன்றிப் பரவும் அந்த ஒளியால் ஆயிரக்கணக்கான பெண்கள் உற்சாகம் கொண்டு, பிரம்மஞானத்தை அடைய முயல்வார்கள். அப்போது இந்த நாட்டிற்கும் சமுதாயத்திற்கும் மகத்தான நன்மை ஏற்படும், புரிந்துகொண்டாயா?'

சீடர்: 'உங்கள் உபதேசம் இன்று என் கண்களைத் திறந்தது.'

சுவாமிஜி: 'இப்போதுகூடத் திறந்துவிட்டதா என்ன! எல்லாவற்றையும் ஒளிமயமாகச் செய்யும் பிரம்மத்தை உணரும் போது, இந்த ஆண்பெண் வேறுபாடு ஒரேயடியாக உன்னிட மிருந்து மறைந்து போவதைக் காண்பாய். அதன்பிறகே நீ பெண்களைப் பிரம்ம ரூபிணியாகிய தேவியாகக் காண்பாய். ஸ்ரீராமகிருஷ்ணரிடம் நாங்கள் கண்டோம்—எந்த ஜாதியைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும், யாராக இருந்தாலும், பெண்கள் என்றால் அவருக்கு ஆதிபராசக்திதான். இதை நானும் நேரில் கண்டேன். அதனால்தான் அந்த நிலையை அடையும்படி உங் களை இவ்வளவு வற்புறுத்திக் கூறுகிறேன்; ஒவ்வொரு கிராமத் திலும் பெண்களுக்கான பள்ளிகளைத் திறக்கச் சொல்கிறேன்; அவர்களையும் மனிதப் பிறவிகளாக்கும்படிச் சொல்கிறேன். அவர்களின் நிலை உயர்ந்தால் அவர்களுக்குப் பிறக்கும் பிள்ளை கள் மகத்தானவர்களாக வளருவார்கள். அவர்களின்மூலம் நாடு மேன்மையுறும்; கல்வி, ஞானம், ஆற்றல், பக்தி ஆகியவற்றில் எழுச்சி ஓங்கும்.'

சீடர்: 'ஆனால் இன்றைய கல்வியின் பலன் மாறாக இருப்பதாகவே தோன்றுகிறது. பெண்கள் ஏதோ சிறிது கல்வி பெற்ற உடனே கௌனைப் (Gown) போட்டுக்கொள்ளக் கற்றுக் கொள்கிறார்கள். பிரம்மஞானத்தை அடைவதற்குச் சாதகமான தியாகம், புலனடக்கம், தவம், பிரம்மச்சரியம் போன்ற குணங் களில் அவர்கள் முன்னேறுகிறார்களா என்பது சந்தேகமாகவே இருக்கிறது.'

சுவாமிஜி: 'ஆரம்பத்தில் அப்படித்தான் இருக்கும். ஒரு புதிய கருத்தைப் பிரச்சாரம் செய்யும்போது ஆரம்பத்தில் அதைச் சரியாகப் புரிந்துகொள்ளாமல், சிலதவறுகள் நேரலாம். அதனால் இந்தப் பரந்த சமுதாயத்திற்கு ஏதாவது நேர்ந்துவிடுமா என்ன? இப்போது நாட்டில் உள்ள பெண்கல்வியை வளர்ப்ப தற்கு முன்வந்தவர்கள் பரந்தநோக்கு உடையவர்கள் என்பதில் சந்தேகமே இல்லை. ஆனால் ஒன்று தெரிந்துகொள்: கல்வி யாகட்டும் எதுவுமாகட்டும், தர்மத்தை அடிப்படையாகக் கொள்ளவில்லை என்றால் அதில் சில குற்றங்களும் குறைகளும் நேர்வது இயல்பே. இப்போது தர்மத்தை மையமாகக் கொண்டே பெண்கல்வியைப் பரப்ப வேண்டும். மற்ற பயிற்சி களெல்லாம் இரண்டாம் பட்சமாகவே இருக்க வேண்டும்.

மதக் கல்வி, நல்லொழுக்கம், பிரம்மச்சரியம்—இவற்றைச் சிறப்பாகக் கவனிக்க வேண்டும். இந்தியாவில் நடைமுறையிலுள்ள பெண்கல்வி, தர்மத்தை இரண்டாம் பட்சமாகவே கொண்டுள்ளது. அதனால்தான் நீ சொன்ன குறைகள் ஏற்பட்டுவிட்டன. அதில் பெண்களின் குற்றம் என்னவென்று சொல் பார்க்கலாம். பெண்கல்வியை ஆரம்பித்த சீர்திருத்தவாதிகள் பிரம்மச்சாரிகள் அல்ல. ஆதலால் இத்தகைய தவறுகள் நேர்ந்துவிட்டன. எந்த நற்பணியைச் செய்பவர்களும், தாங்கள் விரும்பிய செயலைத் தொடங்குமுன் கடினமான தவத்தில் ஈடுபட்டு ஆன்மஞானம் பெற வேண்டும். இல்லாவிடில் அவர்கள் செயலில் தவறுகள் ஏற்படத்தான் செய்யும். புரிகிறதா?'

சீடர்: 'ஆம், கல்வி கற்ற பெண்களுள் பலரும் நாவல்களையும் நாடகங்களையும் படிப்பதிலேயே தங்கள் நேரத்தைச் செலவிடுகின்றனர். கிழக்கு வங்காளத்திலோ, கற்ற பெண்களும் விரதங்களையும் ஆசாரங்களையும் கைவிடுவதில்லை. இந்தப் பக்கங்களில் அப்படி உண்டா?'

சுவாமிஜி: 'எல்லா நாடுகளிலும் எல்லா இனங்களிலும் நன்மை, தீமை இரண்டும் உண்டு. நமது வாழ்வில் நல்லவற்றைச் செய்து பிறருக்கு முன்மாதிரியாக இருக்க வேண்டும். இதுவே நமது கடமை. நிந்திப்பதால் எந்தச் செயலும் வெற்றி பெறுவதில்லை; அது மனிதர்களின் மனத்தில் வெறுப்பை உண்டாக்கவே வழிவகுக்கும். யாரும் எதுவும் சொல்லட்டும்; மறுத்துப் பேசாதே. இந்த மாய உலகத்தில் எந்த முயற்சியைச் செய்தாலும், அதில் சில குறைகள் இருப்பது இயல்பே. ''ஸர்வாரம்பா ஹி தோஷேண தூமேனாக்னிரிவாவ்ருதா:—நெருப்பைப் புகை மூடியிருப்பதுபோல், எல்லா முயற்சிகளையும் குறைகள் மூடியுள்ளன.'[1] நெருப்பு இருந்தால் புகை எழவே செய்யும். ஆனால், அதற்காக நீ சும்மா இருப்பதா? உன்னால் இயன்றவரை நற்செயல்களைச் செய்.'

சீடர்: 'நற்செயல் என்பது என்ன?'

சுவாமிஜி: 'பிரம்மத்தை வெளிப்படுத்த உதவும் எதுவும் நற்செயலே. எந்தச் செயல் ஆனாலும், நேராக இல்லாவிட்டாலும் மறைமுகமாகவாவது ஆன்ம வெளிப்பாட்டிற்கு உதவும்படி அதனைச் செய்ய முடியும். ஆனால் ரிஷிகளால் வகுத்தளிக்கப்பட்ட வழியில் சென்றால் ஆன்மஞானம் விரைவில்

1. கீதை, 18. 48.

ஏற்படும். மாறாக, சாஸ்திரங்களை எழுதியவர்கள் தவறெனக் கூறியவற்றைச் செய்வதால் பந்தமே உண்டாகிறது; சிலவேளைகளில் அந்த மோக பந்தம் பல பிறவிகளிலும் விலகுவதில்லை. எக்காலத்திலும் எந்த நாட்டிலும் உயிர்கள் முக்தி பெறுவது உறுதி. ஏனெனில் ஆன்மாவே உயிரின் உண்மை இயல்பு. சொந்த இயல்பை யாராலாவது விட முடியுமா? நீ உன் நிழலுடன் ஆயிரம் வருடங்கள் சண்டையிட்டாலும், அதை விலக்க முடியுமா? அது உன்னுடனேயே இருக்கும்.'

சீடர்: 'ஆனால் சங்கரரின் கருத்துப்படி செயல், ஞானத்திற்கு எதிராயிற்றே! ஞானத்தையும் செயலையும் இணைப்பதை அவர் பலவாறாகக் கண்டிக்கிறார். எனவே செயல் எப்படி ஞானத்தை வெளிப்படுத்த உதவும்?'

சுவாமிஜி: 'சங்கரர் அப்படிக் கூறிய பின்னர் ஞானத்தை வெளிப்படுத்துவதற்கு, செயல் மறைமுகமாகத் துணை செய்கிறது என்றும் செயல் மனத்தைத் தூய்மைப்படுத்தும் என்றும் கூறுகிறார். தூய தனி ஞானத்தில் செயலின் நிழல்கூட இருக்க முடியாது என்னும் அவரது முடிவை நான் கண்டிக்கவில்லை. செயல், செயல்புரிபவன், விளைவு என்ற உணர்வு இருக்கும் வரை, ஏதாவது செயல் புரியாமல் சும்மா இருக்க முடியுமா என்ன? செயல் என்பது மனித இயல்புடன் ஒன்றுபட்டிருக்கும் போது ஆன்மஞானத்தை வெளிப்படுத்துவதற்கு உதவுகின்ற செயல்களை ஏன் செய்யக் கூடாது? எல்லா செயல்களும் அறியாமையின் விளைவு என்பது பாரமார்த்திக நிலையில் உண்மையாக இருக்கலாம், ஆனால் வியாவகாரிக நிலையில் அதற்கு மிகுந்த பயன் உள்ளது. நீ ஆன்ம ஞானத்தை அடைந்துவிட்டால், செயல்புரிவதும் புரியாமலிருப்பதும் உன் விருப்பம். அந்த நிலையில் நீ செய்பவை அனைத்தும் நற்செயல் ஆகிவிடும்; உலகிற்கும் உயிர்களுக்கும் நன்மையே தரும். பிரம்மஞானம் பெற்ற பின்பு, நீ சுவாசிப்பதுகூட உயிர்களுக்கு உதவியாகவே அமையும். அதன்பின்பு நீ திட்டமிட்டுச் செயல்புரிய வேண்டுவதில்லை, புரிகிறதா?'

சீடர்: 'செயலையும் ஞானத்தையும் சமரசப்படுத்தி வேதாந்த நிலையிலிருந்து கூறும் இந்த முடிவு சிறப்பானது.'

அப்போது இரவு உணவுக்கான மணி அடித்தது. சுவாமிஜி சாப்பிடப் போகுமுன்னர், சீடர் கைகளைக்கூப்பி வணக்கத்துடன், 'சுவாமிஜி இந்தப் பிறவியிலேயே நான் பிரம்ம ஞானத்தை அடையும்படி அருளுங்கள்' என்றார்.

சுவாமிஜி சீடரின் தலையில் கையை வைத்து, 'மகனே, பயப்பட வேண்டாம்; நீ லௌகீக மனிதன் அல்லவே! நீ இல்லறத்தானும் அல்ல, சன்னியாசியும் அல்ல; ஒரு புதிய ரகமாக இருக்கிறாய்' என்றார்.

## 36

பேலூர் மடம், 1901

சுவாமிஜியின் உடல்நிலை சரியில்லை. சுவாமி நிரஞ்ஜனானந்தர் வருந்திக் கேட்டதால், அவர் ஆறேழு நாட்களாக ஆயுர்வேத மருந்து உட்கொண்டு வருகிறார். பத்தியத்திற்காக, தண்ணீர் குடிப்பது விலக்கப்பட்டிருந்தது. தாகத்தைத் தணிப்பதற்காகப் பால் மட்டும் குடிக்கலாம்.

சீடர் அதிகாலையில் மடத்திற்கு வந்தார். சுவாமிஜி அவரைப் பார்த்ததும் அன்புடன், 'நீ வந்துவிட்டாயா?மிக நல்லது. உன்னைத்தான் நினைத்துக் கொண்டிருந்தேன்' என்றார்.

சீடர்: 'நீங்கள் ஆறேழு நாட்களாகப் பால் மட்டுமே உண்டு வருவதாகக் கேள்விப்பட்டேன்.'

சுவாமிஜி: 'ஆம், நிரஞ்ஜனுடைய வேண்டுகோளின்படி நான் இந்த மருந்தை உண்கிறேன். நான் அவர்களின் வேண்டுகோளை மறுக்க முடியாது அல்லவா!'

சீடர்: 'நீங்கள் ஒரு மணிநேரத்தில் ஐந்தாறு முறை தண்ணீர் குடிப்பவர் ஆயிற்றே, அதை எப்படி முழுவதுமாக விட முடிந்தது?'

சுவாமிஜி: 'இந்த மருந்து சாப்பிட்டால் தண்ணீர் குடிக்கக் கூடாதென்று கேள்விப்பட்ட உடனே ''தண்ணீர் குடிக்க மாட்டேன்'' என்று திட சங்கல்பம் செய்து கொண்டேன். அதன்பிறகு தண்ணீர் பற்றிய எண்ணம் மனத்தில் எழுவதே இல்லை.'

சீடர்: 'இந்தச் சிகிச்சை உங்களுக்கு நன்மை தருகிறதென்று நம்புகிறேன்.'

சுவாமிஜி: 'நன்மையோ, நன்மையில்லையோ அது எனக்குத் தெரியாது. நான் குருபாயிக்களின் கட்டளைக்கு உட்பட்டு நடக்கிறேன்.'

சுவாமிஜி: 'நாட்டு வைத்தியர்களின் மருந்துகள் நமது உடல்நிலைக்கு மிகவும் பொருத்தமானது என்று நினைக்கிறேன்.'

சுவாமிஜி: 'ஆனால் என் கருத்து வேறு. விஞ்ஞானபூர்வமாகச் சிகிச்சை செய்பவனின் கையில் இறந்துபோனால்கூட

நல்லதுதான். இந்த நாட்டு வைத்தியர்களுக்குத் தற்கால விஞ்ஞான முறைகள் எதுவும் தெரியாது. ஏதோ பழைய ஏடுகளில் எழுதப் பட்டிருப்பதைக் கண்மூடித்தனமாகப் பின்பற்றுவார்கள். இவர்கள் ஓரிருவரைக் குணப்படுத்தியிருக்கலாம். ஆனால் இவர்களின் சிகிச்சையால் உடல்நிலை தேறும் என்று எனக்கு என்னவோ தோன்றவில்லை.'

சுவாமிஜி சில உணவுவகைகளைச் சமைத்தார். அவற்றில் ஒன்று சேமியா சேர்த்துச் செய்யப்பட்டிருந்தது. சீடர் அதுவரை சேமியாவைக் கண்டதில்லை. எனவே அதென்ன என்று அவர் கேட்டார். அதற்கு சுவாமிஜி, 'அவை மேலைநாட்டுப் புழுக்கள். லண்டனிலிருந்து வரும்போது உலரவைத்துக் கொண்டு வந்தேன்' என்றார். கூடியிருந்த அனைவரும் கொல்லென்று சிரித்தனர். உணவும் உறக்கமும் குறைந்திருந்தும் சுவாமிஜி உற்சாகம் குன்றாமலேயே இருந்தார். சில தினங்களுக்கு முன்பு மடத்திற்குக் கலைக்களஞ்சியப் புத்தகங்களின் தொகுதி வாங்கப்பட்டிருந்தது. அழகான அந்தப் புத்தகங்களைக் கண்ட சீடர் சுவாமிஜியிடம், 'இந்தப் புத்தகங்கள் எல்லாவற்றையும் ஒரு பிறவியில் வாசித்து முடிப்பது இயலாத காரியம்' என்றார். சுவாமிஜி ஏற்கனவே பத்துப் பகுதிகளை முடித்துவிட்டுப் பதினோராம் பகுதியைப் படித்துக் கொண்டிருக்கிறார் என்பது சீடருக்குத் தெரியாது.

சுவாமிஜி: 'என்ன சொல்கிறாய் நீ? முதல் பத்துப் பகுதிகளில் என்ன கேள்வி வேண்டுமானாலும் கேள். நான் பதில் சொல்கிறேன்.'

சீடர் (திகைப்புடன்): 'என்ன, இந்த நூல்களை எல்லாம் வாசித்துவிட்டீர்களா?'

சுவாமிஜி: 'வாசிக்காமல் கேள்வி கேட்கச் சொல்வேனா?'

சுவாமிஜியைச் சோதித்துப் பார்த்தபோது, விடைகளைச் சரியாகச் சொன்னது மட்டுமின்றி, புத்தகங்களிலுள்ள அதே மொழியையே ஆங்காங்கு பயன்படுத்தவும் செய்தார். சீடர் புத்தகங்களை வைத்துவிட்டு ஆச்சரியத்துடன், 'இது மனித ஆற்றலால் முடியாத காரியம்!' என்றார்.

சுவாமிஜி: 'இதோ பார். பிரம்மச்சரியத்தை ஒழுங்காகக் கடைப்பிடிப்பது ஒன்றால் மட்டுமே எல்லா கலைகளும் கண நேரத்தில் கைவசப்படும்; ஒருமுறை கேட்பவற்றைத் தவறின்றி நினைவில் கொள்ளவும், மீண்டும் அதை அப்படியே ஒப்பிக்கவும் முடியும். இத்தகைய பிரம்மச்சரியம் இல்லாமையால்

தான் நமது நாட்டில் எல்லாம் அழிவின் எல்லைக்கே வந்துவிட்டன.'

சீடர்: 'நீங்கள் என்ன வேண்டுமானாலும் சொல் லுங்கள். ஆனால் வெறும் பிரம்மச்சரியத்தால் மட்டும் அதி மானுட ஆற்றல் வருவது சாத்தியமே இல்லை. வேறு சிலவும் தேவை.'

சுவாமிஜி பதில் ஒன்றும் சொல்லவில்லை.

அதன்பின்பு சுவாமிஜி எல்லா தத்துவ நெறிகளிலும் உள்ள கடினமான வாதங்களையும் முடிவுகளையும் சீடருக்குத் தெளிவு படுத்தினார். அப்போது சுவாமி பிரம்மானந்தர் அங்கு வந்து சீடரிடம், 'நீ நல்ல மனிதன்தான். சுவாமிஜிக்கு உடல்நலம் சரி யில்லை. எளிய விஷயங்களைப் பேசி அவரது மனத்தை மென்மையாக வைத்திருப்பதற்குப் பதிலாக இதையெல்லாம் ஆரம்பித்து அவரை இடைவிடாமல் பேசச் செய்கிறாயே' என்றார். சீடர் தமது செயலுக்காக வருந்தினார். ஆனால் சுவாமிஜி, சுவாமி பிரம்மானந்தரிடம், 'உங்கள் ஆயுர்வேதத்தை யும் சிகிச்சையையும் நீங்களே வைத்துக் கொள்ளுங்கள். இவர்கள் என் பிள்ளைகள். இவர்களுக்குப் போதிப்பதில் என் உடலே வீழ்ந்துபோனாலும் பரவாயில்லை' என்றார்.

அதன்பின்பு எளிய உரையாடல் நடந்தது. வங்காள இலக் கியத்தில் பாரத் சந்திரரின் இடம் எது என்பதைப் பற்றிய கேள்வி எழுந்தது. ஆரம்பத்திலிருந்தே, சுவாமிஜி பாரத் சந்திரரைப் பற்றியும் அவர் காலத்தில் இருந்த சமுதாய வாழ்க்கை, பழக்க வழக்கம், திருமண முறைகள் இவற்றைப் பற்றியும் பலவாறாகக் கேலி செய்தார். 'பாரத் சந்திரர் இளமை மணத்தை ஆதரித்தவர். அவரது நூல்களும் தரம் குறைந்தவை யாக, ஆபாசமானவையாக இருந்தன. வங்காளத்திற்கு வெளியே யுள்ள நாகரீகமுள்ள யாரும் அவற்றை ஏற்றுக் கொள்வதில்லை. அத்தகைய நூல்கள் சிறுவர்களின் கைகளில் கிடைக்காதவாறு பார்த்துக்கொள்ள வேண்டும்' என்றார் அவர்.

பின்பு மைக்கேல் மதுசூதன தத்தரைப்பற்றிப் பேச ஆரம் பித்து, 'உங்கள் மாகாணத்தில் பிறந்தவர்களுள் அற்புதமான அறிஞர் அவர். அவரது ''மேகநாத வதம்'' போன்ற இன்னொரு காவியம் வங்கமொழியில் மட்டுமல்ல, ஐரோப்பியக் காவியங்களுள்ளும் இல்லை' என்றார்.

சீடர்: 'ஆனால் சுவாமிஜி, அவர் ஆடம்பர நடையில் எழுதுவதில் அதிக விருப்பம் உடையவர் என்று எண்ணுகிறேன்.'

சுவாமிஜி: ‘உங்கள் நாட்டில் ஒருவர் புதுமையாக ஏதாவது செய்துவிட்டால் போதும், உடனே கூக்குரல் எழுப்புகிறீர்கள். முதலில் அவன் என்ன சொல்கிறான் என்பதைக் கேளுங்கள். அதைச் செய்ய மாட்டீர்கள். பழைய பாணியிலிருந்து சிறிது மாறுபட்டிருந்தால்போதும், மக்கள் திரண்டெழுந்து விடுவார்கள். இலக்கியத்தின் மணிமகுடம்போல் விளங்கும் மேகநாதவத காவியத்தைப் பரிகசிப்பதற்காக, ‘சூச்சுந்தரி வதம்’ (சுண்டெலி வதம்) என்று ஒருவர் ஒரு நூலை எழுதினார். இயன்றவரை கேலி செய்யலாம், அதனால் என்ன நடந்துவிடும்? மேகநாத வத காவியம் இமயத்தைப்போல் இன்றும் உயர்ந்தோங்கி நிற்கிறது. ஆனால் அதை விமர்சித்துக் கேலி செய்தவர்களின் எண்ணங்களும் எழுத்துக்களும் எங்கேயோ மாய்ந்து மறைந்து போய்விட்டன. உத்வேகம் நிறைந்த மொழியில், புதிய நடையில் மைக்கேல் செய்த காவியத்தைப் பற்றிச் சாதாரண ஜனங்கள் என்ன அறிந்துகொள்ள முடியும்? இதோ கிரீஷ்பாபு புதுமையாக எத்தனையோ அற்புதமான நூல்களை எழுதிக் கொண்டிருக்கிறார். அதிபுத்திசாலிகளான உங்கள் பண்டிதர்கள் அவற்றையும் குறை கூறுகிறார்கள். அதை அவர் பொருட்படுத்துகிறாரா என்ன? எதிர்காலத்தில் மக்கள் அவற்றை ஏற்றுக்கொள்வார்கள்.’

மைக்கேலைப்பற்றிப் பேசிக் கொண்டிருக்கும்போது சுவாமிஜி சீடரிடம், ‘கீழேயுள்ள நூல்நிலையத்திற்குப் போய் மேகநாத வத காவியத்தை எடுத்து வா’ என்று கூறினார். கொண்டு வந்ததும், ‘இப்போது வாசி; நீ எப்படி வாசிக்கிறாய் என்று பார்ப்போம்’ என்றார்.

சீடர் ஒரு பகுதியைப் படித்தார். சுவாமிஜிக்கு அது பிடிக்கவில்லை. எனவே தாமே படித்துக் காட்டினார். பின்னர் சீடரை நோக்கி, ‘காவியத்தில் எந்தப் பகுதி மிகவும் சிறந்தது? சொல் பார்க்கலாம்’ என்றார். சீடர் பதில் எதுவும் கூறவில்லை, சுவாமிஜி அவரை நோக்கிப் பின்வருமாறு கூறினார்:

‘இந்திரஜித் போரில் கொல்லப்பட்டான். சோகத்தில் மூழ்கிய மண்டோதரி ராவணனை யுத்தத்திற்குப் போக வேண்டாம் என்று தடுக்கிறாள். மகனின் நினைவால் ஏற்பட்ட துன்பத்தை மனத்திலிருந்து வலிந்து அகற்றிவிட்டு, பெரிய வீரனைப்போல் ராவணன் போர்க்களத்திற்குப் போக முற்படுகிறான். கோபத்தாலும் பழிக்குப்பழி வாங்க வேண்டுமென்னும் உணர்ச்சியாலும் உந்தப்பட்டு, மனைவிமக்களை மறந்து

போருக்குச் செல்வதற்கு ஆயத்தமாக நிற்கிறான். இதுவே அந்தக் காவியத்தின் சிறப்பான பகுதி. ''எதுவும் வரட்டும். உலகம் இருந்தாலும் சரி, அழிந்தாலும் சரி; நான் என் கடமையை மறக்க மாட்டேன்.''—இவை பெரும் வீரனின் வார்த்தைகள். அத்தகைய உணர்ச்சியில் தோய்ந்து மைக்கேல் இந்தப் பகுதியை எழுதியுள்ளார்.'

பின்னர் சுவாமிஜி அந்தப் பகுதியை மிகவும் அழகாகப் படித்தார்.

## 37

பேலூர் மடம், 1901

ஆயுர்வேத சிகிச்சையால் சுவாமிஜி குணம் அடைந்திருந்தார். சீடர் மடத்திற்கு வந்தார். சுவாமிஜிக்குச் சேவை செய்யும்போது சீடர் அவரிடம், 'சுவாமிஜி, ஆன்மா எங்கும் நிறைந்தது; எல்லா உயிர்களுக்கும் உயிரானது, மிகவும் அருகிலிருப்பது, அப்படி இருந்தும், அது ஏன் உணரப்படுவதில்லை?' என்று கேட்டார்.

சுவாமிஜி: 'உன் கண்களை நீ பார்க்கிறாயா? பிறர் கூறும் போது, உனக்குக் கண்கள் உண்டென்ற எண்ணம் வருகிறது. தூசியோ மணலோ பட்டு உறுத்தும்போது, உனக்குக் கண்கள் உண்டு என்பதை உறுதியாக உணர்கிறாய். அனைத்திற்கும் உள்ளே விளங்கும் எங்கும் நிறைந்த ஆன்மாவையும் எளிதில் உணர முடிவதில்லை. சாஸ்திரங்கள் மற்றும் குருவின்மூலம் அதைப் பற்றிய சூசகம் கிடைக்கிறது. ஆனால் வாழ்வின் கடுந் துன்பங்களும் சோகங்களும் இதயத்தைப் புண்ணாக்கும் போது, அன்பு கொண்டவர்களோ உறவினர்களோ இறந்துபோய் நிராதரவாய் நிற்கும்போது, உள்நுழைந்து பார்க்க முடியாத, என்னவென்று அறிய முடியாத, இருள்மயமான எதிர் காலத்தை எண்ணி இதயம் குழம்பித் தவிக்கும் போது—அப் போதுதான் மனிதன் ஆன்மாவை அடையத் துடிக்கிறான். எனவே துக்கம் ஆன்மஞானத்திற்கு மிகவும் அனுகூலமானது. ஆனால் இந்தத் துயர அனுபவங்களையெல்லாம் நினைவில் வைத்திருக்க வேண்டும். துன்பங்கள் தாக்கும்போது பூனை போல் நாய்களைப்போல் செத்துப் போகிறார்களே, அவர்கள் மனிதர்களா என்ன? இன்பமோ துன்பமோ வரும்போது நிலை குலையாமல், அவை இரண்டுமே நிலையற்றவை என்பதை விவேகத்தின் உதவியால் புரிந்துகொண்டு, ஆன்மாவை அறிவ தில் ஈடுபடுபவனே மனிதன். இதுவே மனிதர்களுக்கும் பிற உயிர்களுக்கும் உள்ள வேறுபாடு. எது மிக அருகில்

இருக்கிறதோ அது மிகக் குறைவாகக் கவனிக்கப்படுகிறது. ஆன்மா அருகிலுள்ள அனைத்திற்கும் அருகில் அகத்தே இருக்கிறது. சஞ்சலம் மிக்க மனித மனம் அதை அறியவில்லை. யார் விழிப்புடையவனாகவும், அமைதியானவனாகவும், சுயக் கட்டுப்பாடு உடையவனாகவும், நிலையானது மற்றும் நிலை யற்றது பற்றிச் சிந்தனை செய்பவனாகவும், புற உலகத்தைவிட்டு அக உலகத்துள் ஆழ்ந்து செல்பவனாகவும் இருக்கிறானோ அவன் ஆன்மாவின் மகிமையை அறிந்துகொள்கிறான்; மகத் தானவனாக மாறுகிறான். அப்போதுதான் அவன் ஆன்ம ஞானத்தை அடைகிறான்; சாஸ்திரங்களில் ஆன்மாவைப் பற்றிக் கூறப்படும், ''நானே ஆன்மா'' மற்றும் ''ஓ சுவேதகேது! நீயே அதுவாக இருக்கிறாய்'' முதலான உண்மைகளைப் புரிந்து கொள்கிறான். புரிகிறதா?

சீடர்: 'புரிந்துகொண்டேன். ஆனால் சுவாமிஜி, ஆன்மாவை அடைவதற்கான பாதை ஏன் துன்பங்களும் துயரங் களும் நிறைந்ததாக இருக்க வேண்டும்? படைப்பு என்பதே இல்லாதிருந்தால் இதைவிட நன்றாக இருக்கும். நாம் அனை வரும் ஒருகாலத்தில் பிரம்மத்துடன் ஐக்கியமாக இருந் தோம். இந்த உலகத்தைத் தோற்றுவிக்க வேண்டும் என்னும் ஆசை எப்படி பிரம்மத்தில் எழுந்தது? பிரம்மத்திலிருந்து வேறாகாத இந்த உயிர்களுக்கு இன்பம் துன்பம் ஆகியவற்றின் வழியாகப் பிறப்பு இறப்புகளுக்குச் செல்லும் நிலை எப்படி ஏற்பட்டது?'

சுவாமிஜி: 'போதையில் இருக்கும் ஒருவன் என்னென்ன காட்சிகளையெல்லாம் காண்கிறான்! போதை தெளிந்ததும் அவையெல்லாம் பொய்த் தோற்றங்கள் என்பதை அறிகிறான். ஆரம்பமற்ற ஆனால் முடிவு உள்ள, நீ காண்பதான இந்தப் படைப்பும் உன் போதையின் காரணமாகவே. போதை தெளிந் தால் இத்தகைய கேள்விகளே எழாது.'

சீடர்: 'அப்படியென்றால் படைத்தல், காத்தல் என்பவை எல்லாம் உண்மையில் இல்லையா?'

சுவாமிஜி: 'ஏன் இருக்கக் கூடாது? நீ தேகவுணர்வுடன் ''நான்'', ''நான்'' என்று சொல்லும்வரை எல்லாமே இருக்கிறது. எப்போது உடலுணர்வைக் கடந்து, ஆன்மாவில் நிலைபெற்று ஆன்மாவிலேயே இன்பம் காண்பாயோ அப்போது உன்னைப் பொறுத்தவரையில் இந்தப் படைப்பு, அதுஇது என்று எதுவும் இருக்காது; இருப்பதற்கு வழியும் இல்லை. பிறகு நீ,

''க்வ கதம் கேன வா நீதம் குத்ர லீனமிதம் ஜகத் |
அதுனைவ மயா த்ருஷ்டம் நாஸ்தி கிம் மஹதத்புதம் ||[1]

—இந்த உலகம் எங்கே போய்விட்டது? யாரால் எடுத்துச்செல்லப்பட்டது? எங்கே ஒடுங்கியது? இப்போது தான் பார்த்தேன்! அதற்குள் இல்லாமல் போய்விட்டதா, என்ன ஆச்சரியம்!'' என்று சொல்ல வேண்டியிருக்கும்.'

சீடர்: 'உலகம் பற்றிய அறிவே இல்லையென்றால் ''இந்த உலகம் எங்கே ஒடுங்கியது?'' என்று எப்படிக் கேட்க முடியும்?'

சுவாமிஜி: 'அந்தக் கருத்தை மொழியின் மூலம்தானே சொல்ல வேண்டியிருக்கிறது. அதனால்தான் இவ்வாறு சொல்ல நேர்ந்தது. சிந்தனையோ மொழியோ எட்ட முடியாத நிலையை நூலாசிரியர் மொழியின்மூலம், கருத்தின்மூலம் வெளிப்படுத்த முயல்கிறார். அதனால்தான் உலகம் என்பது முழுக்கமுழுக்கப் பொய் என்பதைத் தொடர்பறிவு மூலம் சொல்கிறார். பாரமார்த்திக நிலையில் இந்த உலகத்திற்கு இருப்பே இல்லை. மனம், மொழி இவற்றைக் கடந்த அந்த நிலை பிரம்மத்திற்கு மட்டுமே உள்ளது. இனி நீ வேறு என்ன கேட்க முடியும்? இன்று உன் வாதங்கள் அனைத்திற்கும் முற்றுப்புள்ளி வைத்து விடுவேன்.'

அப்போது மாலை வழிபாட்டிற்கான மணி ஒலித்தது. எல்லோரும் வழிபாட்டிற்குப் புறப்பட்டார்கள். சீடர் சுவாமிஜியின் அறையிலேயே இருந்தார். அதைக் கவனித்த சுவாமிஜி அவரிடம், 'நீ கோயிலுக்குப் போகவில்லையா?' என்று கேட்டார்.

சீடர்: 'நான் இங்கேயே இருக்க விரும்புகிறேன்.'

சுவாமிஜி: 'சரி, இரு.'

சிறிதுநேரம் கழித்துச் சீடர் அறைக்கு வெளியே பார்த்தபடி, 'இன்று அமாவாசை. எல்லா திசைகளிலும் இருள் பரவியிருக்கிறது. காளி பூஜைக்குரிய நேரம் இது' என்று கூறினார்.

சுவாமிஜி எதுவும் சொல்லாமல் கீழ்வானத்தையே பார்த்தபடி சிறிதுநேரம் இருந்தார். பிறகு, 'இந்த இருட்டின் கம்பீரமான அற்புத அழகைப் பார்' என்றார். இவ்வாறு சொல்லிவிட்டு, கவிந்திருக்கும் அந்தக் காரிருளைப் பார்த்தபடியே இருந்தார். சில நிமிடங்கள் கழிந்ததும், 'ஓ தாயே! இந்தக் காரிருளில் உன் உருவமற்ற அழகு பளிச்சிடுகிறது' எனத் துவங்கும் வங்கப்

---

1. விவேக சூடாமணி, 484.

பாடலைப் பாடினார். பாட்டு முடிந்ததும் அறைக்குள் வந்து அமர்ந்தார். அறையில் மௌனம் நிலவியது. அவ்வப்போது அவரது திருவாய், 'அம்மா, அம்மா, காளி, காளி' என்று கூறியது.

நெடுநேரம் சுவாமிஜி இப்படி ஆழ்ந்த அமைதியில் உட்கார்ந்திருந்தது சீடருக்குச் சங்கடமாக இருந்தது. எனவே அவரிடம், 'சுவாமிஜி! தயவுசெய்து பேசுங்கள்' என்றார்.

சுவாமிஜி புன்முறுவலித்தபடி, 'எந்த ஆன்மாவின் திருவிளையாடல் இவ்வளவு அழகாக இருக்கிறதோ, அந்த ஆன்மாவின் அழகையையும் கம்பீரத்தையும் உன்னால் அளக்க முடியுமா?' என்றார். பின்னர் 'ஓ அன்னையே! நீ பொங்கும் அமுத நீரூற்று. எத்தனை வடிவங்களிலும் நிலைகளிலும் உன் விளையாடல்கள் வெளிப்படுகின்றன' என்னும் மற்றொரு பாடலைப் பாடினார். பாட்டு முடிந்ததும் கூறினார்: 'பிரம்மத்தின் ஆடல்மயமான உருவமே இந்தக் காளி. ஸ்ரீராமகிருஷ்ணர் இதுபற்றிக் கூறியுள்ள ''ஓடுகின்ற பாம்பு, நிலையான பாம்பு''[1] பற்றிய உவமையை நீ கேட்டதில்லையா?'

சீடர்: 'கேட்டிருக்கிறேன்.'

சுவாமிஜி: 'இந்தமுறை நான் குணமடைந்ததும், என் இதயத்தின் ரத்தத்தாலேயே தேவியை வழிபட வேண்டும். அப்போதுதான் அவள் மகிழ்ச்சி அடைவாள். ரகுநந்தனர்கூட, ''நவம்யாம் பூஜயேத் தேவீம் க்ருத்வா ருதிர கர்தமம்—நவமி நாளில் தேவியை ரத்தத்தால் வழிபட வேண்டும்'' என்கிறார். இப்போது நான் அதையே செய்யப் போகிறேன். நெஞ்சத்தின் ரத்தத்தால் பூஜித்தால்தான் தேவி மகிழ்வாள் என்றால் அதையும் செய்ய வேண்டும். காளியின் மகன் வீரனாக இருக்க வேண்டும். துயரத்தில், துன்பத்தில், சாவில், அழிவில் எப்போதும், காளியின் மகன் பயப்படாமல் இருக்க வேண்டும்.'

## 38

பேலூர் மடம், 1901

அப்போதெல்லாம் சுவாமிஜி மடத்திலேயே தங்கி இருக்கிறார். அவரது உடல்நலம் சரியில்லை. காலையிலும் மாலையிலும் உலவுவதற்குச் செல்கிறார். சீடர் அவர் காலில் வீழ்ந்து வணங்கிய பிறகு அவரது உடல்நலத்தை விசாரித்தார்.

---

1. நிலையாக இருக்கும்போதும் ஓடுகின்றபோதும் பாம்பு ஒன்றே. அது போலவே ஒரே உண்மைப் பொருள் இயக்கமற்ற நிலையில் பிரம்மமாகவும், இயங்கும் நிலையில் காளியாகவும் உள்ளது.

சுவாமிஜி: 'உடம்பின் நிலையோ இப்படி உள்ளது. ஆனால் நீங்கள் யாருமே என் வேலையில் உதவ முன்வரவில்லை. தன்னந்தனியாக நான் என்ன செய்ய முடியும்? இந்தமுறை இந்த உடம்பு வங்க மண்ணில் தோன்றியிருக்கிறது. இதனால் அதிக வேலைப் பளுவை தாங்க முடியுமா? இங்கே வருகின்ற நீங்கள் எல்லாம் தூயவர்கள். நீங்களே எனக்கு உதவாவிட்டால் நான் தனியாக என்ன செய்வேன்?'

சீடர்: 'இதோ இந்த மடத்திலுள்ள பிரம்மச்சாரிகளும் சன்னியாசிகளும் உங்கள் பின்னால் இருக்கிறார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் வாழ்வை உங்கள் திருப்பணிக்காக அர்ப்பணிக்க முடியும். அப்படியிருந்தும் நீங்கள் ஏன் இப்படிப் பேசுகிறீர்கள்?'

சுவாமிஜி: 'நல்லது, எனக்கு ஒரு வங்க இளைஞர் கூட்டம் வேண்டும். அவர்களே இந்த நாட்டின் நம்பிக்கை. ஒழுக்கமும், அறிவுத் திறனும், மற்றவர்களின் சேவைக்காக எல்லாவற்றையும் துறக்கும் மனமும், கீழ்ப்படிதலும், என் கருத்தைச் செயல் படுத்தத் தங்கள் வாழ்வையே அர்ப்பணிக்கின்ற மனமும், அதன் மூலமாகத் தங்களுக்கும் இந்த நாட்டிற்கும் நன்மை செய்து கொள்ளும் இளைஞர்களிடம்தான் என் எதிர்கால நம்பிக்கை இருக்கிறது. மற்றபடிச் சாதாரண இளைஞர்கள் கூட்டம்கூட்ட மாக வரவே செய்கிறார்கள், இனியும் வருவார்கள். மந்த குணம் அவர்கள் முகங்களிலேயே எழுதப்பட்டிருக்கிறது; இதயத்தில் சக்தியே இல்லை; உடம்பு நொறுங்கிப்போய் வேலை செய் வதற்குத் தகுதியற்றதாக இருக்கிறது; மனத்திலோ தைரியம் இல்லை. இவர்களால் என்ன வேலை நடக்கும்? நசிகேதனுக்கு இருந்த நம்பிக்கையோடு, எனக்கு ஒரு பத்துப் பன்னிரண்டு இளைஞர்கள் கிடைத்தால் போதும், இந்த நாட்டின் லட்சியத் தையும் போக்கையும் ஒரு புதிய பாதையில் திருப்பிவிடுவேன்.'

சீடர்: 'உங்களிடம் எத்தனையோ பேர் வருகிறார்கள். அவர்களுள் யாரும் அதுபோன்ற இயல்புடையவர்களாக இல்லையா?'

சுவாமிஜி: 'அப்படிப்பட்ட நல்ல இயல்பு கொண்டவர் களாகத் தோன்றுகின்ற பலர் திருமணம் செய்தவர்களாக இருக் கிறார்கள். சிலர் உலகில் பேருக்கும் புகழுக்கும் பணத்திற்கும் தங்களை விற்றுவிட்டவர்களாக இருக்கிறார்கள். சிலர் வலுவற்ற உடல் கொண்டவர்களாக இருக்கிறார்கள். பெரும்பான்மை யாக இருக்கின்ற மற்றவர்கள் உயர்ந்த கருத்துக்களைப் புரிந்து

கொள்ள முடியாதவர்களாக இருக்கிறார்கள். நீங்கள் என் கருத்துக்களைப் புரிந்துகொள்ளும் ஆற்றல் பெற்றிருக்கிறீர்கள். அதில் சந்தேகமே இல்லை. ஆனால் அவற்றைச் செயல்படுத்த உங்களால் முடியவில்லை. இதையெல்லாம் பார்க்கும்போது மனம் அவ்வப்போது வேதனையில் மூழ்குகிறது. மனிதனாகப் பிறந்தும் பெரிய வேலைகள் எதுவும் செய்ய முடியாமல் போவதுதான் என் விதியோ என்று வருந்துகிறேன். ஆனால் என் நம்பிக்கை முழுவதும் அழிந்து போய்விடவில்லை. குரு தேவரின் திருவுளம் கனியுமானால் உரிய காலத்தில் இதோ இந்தப் பிள்ளைகளிடமிருந்து செயல்திறனும் ஆன்மீக உயர்வும் கொண்ட மகத்தான வீரர்கள் உருவெடுப்பார்கள். என் லட்சியங் களைச் செயல்படுத்துவார்கள்.'

சீடர்: 'தங்கள் பரந்த கருத்துக்களை இன்றோ நாளையோ எல்லோரும் ஏற்றுக்கொள்வார்கள் என்றே நான் திடமாக எண்ணுகிறேன். அவை வாழ்வின் எல்லா துறைகளையும் எல்லா திசைகளையும் தழுவியபடிப் பரவுவதை நான் காண்கிறேன். இந்த நாட்டு மக்கள் உங்கள் பெயரிலேயே வெளிப்படை யாகவோ, சொந்தப் பெயரில் மறைமுகமாகவோ உங்கள் கருத்துக்களை ஏற்றுக்கொள்கிறார்கள். பொதுமக்களுக்கு உபதேசிக்கிறார்கள்.'

சுவாமிஜி: 'என் பெயரை ஏற்றுக்கொள்ளாவிட்டால் என்ன? என் கருத்துக்களை ஏற்றுக்கொண்டால் அது போதும். தொண்ணூறு சதவீதத் துறவிகள் காமத்தையும் பணத்தாசை யையும் துறந்த பிறகும், பெயர்புகழில் பந்தப்பட்டுக் கிடக் கிறார்கள். ''புகழ், உன்னதமான மனங்கள் இறுதியில் அடிமை யாகும் ஒன்று''[1] என்பதை நீ படித்ததில்லையா? பலனைப் பற்றிய நினைவு அடியோடு இன்றிச் செயல் புரிந்துகொண்டே போக வேண்டும். மக்கள் நம்மைப்பற்றி நல்லது, கெட்டது இரண்டையும் சொல்வார்கள். ஆனால் பிறர் நம்மைப் புகழ் கிறார்களா, இகழ்கிறார்களா, என்பதைப்பற்றிக் கவலைப்படா மல், லட்சியத்தை நம் முன்னால் வைத்துக்கொண்டு சிங்கம் போல் நாம் செயல்பட வேண்டும்.'

சீடர்: 'நாம் எந்த லட்சியத்தைப் பின்பற்ற வேண்டும்?'

சுவாமிஜி: 'மகாவீரராகிய அனுமனின் வாழ்வையே. ராம னின் கட்டளையால் அவர் எப்படிக் கடலையே தாண்டினார்

---

1. 'Fame—that last infirmity of noble minds.' —Milton, *lycidas*

என்பதைப் பார். வாழ்வு பற்றியோ சாவு பற்றியோ அவர் கவலைப்படவே இல்லை. அவர் முழுக்கமுழுக்கப் புலன்களை அடக்கி வென்றவர்; ஆச்சரியப்படும் வகையில் அறிவுக் கூர்மை வாய்ந்தவர். மகத்தான சேவையின் வடிவான அவரைப் பின்பற்றி உன் வாழ்வை உருவாக்கிக்கொள்ள வேண்டும். இதை நீ செய்தாலே மற்ற லட்சியங்கள் படிப்படியாகத் தாமாகவே உன் வாழ்வில் வெளிப்படும். எதிர்த்துப் பேசாமல் குருவின் கட்டளைகளை ஏற்றல், பிரம்மச்சரியம் இந்த இரண்டும்தான் வெற்றியின் ரகசியம். வேறு வழியே இல்லை. அனுமன் ஒரு பக்கம் சேவையின் லட்சியம், மறுபக்கமோ மூவுலகையும் நடுங்கச் செய்கின்ற சிங்கத்தினுடைய வலிமையின் வடிவம்! ராமனின் நலனுக்காகத் தம் உயிரைத் தியாகம் செய்வதில்கூட அவருக்குத் தயக்கம் இல்லை. ராமசேவையைத் தவிர, பிரம்மா, சிவபெருமான் போன்ற தெய்வநிலை கிடைப்பதென்றாலும் அவர் அதைப் பொருட்படுத்தவில்லை. ராமரின் கட்டளையை நிறைவேற்றுவது ஒன்றே அவரது வாழ்க்கை லட்சியம். அதைத் தவிர வேறு எதுவுமே இல்லை. இத்தகைய ஒருமித்த ஈடுபாடுதான் இப்போது வேண்டுவது.

'கோல் வாத்தியமும் தாளமும் தட்டிக்கொண்டு, வெறிபிடித்தவர்கள்போல் ஆடிப்பாடி, நாடே குட்டிச்சுவராகிவிட்டது. ஏற்கனவே அஜீரணம், இந்த லட்சணத்தில் எகிறிக் குதித்து ஆடினால் உழைப்பை எப்படித் தாங்குவார்கள்? காமத்தின் நிழல்கூடப் படியாத சாதனைகளில் ஈடுபடுவதாக எண்ணி, நாடே தமோகுணத்தில் மூழ்கிக் கிடக்கிறது. கிராமம்தோறும் ஊர்ஊராகச் சென்று பார். கோல் வாத்தியம் மற்றும் பஜனையின் முழக்கம்தான் கேட்கும். அதிர வைக்கும் மேளங்கள் இந்த நாட்டில் செய்யப்படுவதில்லையா? பறைகளும் பேரிகைகளும் இந்தியாவில் கிடைப்பதில்லையா? இந்த வாத்தியங்களின் கம்பீர நாதத்தை நம் சிறுவர்கள் கேட்குமாறு செய்யுங்கள். சிறு வயதிலிருந்தே பெண்தன்மை மிக்க இசையையும் கீர்த்தனைகளையும் கேட்டுக்கேட்டு நாடே பெண்களின் நாடாக மாறிவிட்டது. இதைவிட இழிவு வேறென்ன வேண்டும்? ஒரு கவிஞன் தன் கற்பனை முழுவதையும் பயன்படுத்தினால்கூட உங்கள் சீரழிவை முழுமையாக எழுத முடியாது.

'உடுக்கையும் ஊதுகொம்புகளும் ஒலிக்கட்டும்! பேரிகைகள் முழங்கட்டும்! பறைகள் ஒலிக்கட்டும்! ''மகாவீர மகாவீர, ஹர ஹர, வ்யோம் வ்யோம்'' என்ற ஒலியால் திசைகள்

நிறையட்டும். மனிதனின் மென்மையான இயல்புகளை எழுப்பும் மெல்லியல் மெட்டுகளை எல்லாம் சிறிது காலத்திற்கு நிறுத்தி விடுங்கள்! மென்மையான உணர்ச்சிகளை எழுப்பும் பாடல் களை விட்டுவிட்டு உயிர்த்துடிப்பு மிக்க பாடல்களை எல்லோ ரும் கேட்கச் செய்யுங்கள். வேத சந்தங்களின் இடி முழக்கத் தால் நாட்டிற்கு மறுபடியும் உயிரூட்ட வேண்டும். ஒவ்வொரு துறையிலும் வீரம் ததும்பும் உணர்வுப் பொலிவைக் கொண்டு வர வேண்டும். இத்தகைய லட்சியங்களைப் பின்பற்றுவதில்தான் இந்த நாட்டின், நாட்டு மக்களின் நன்மை அடங்கி இருக்கிறது. நீ ஒருவன் இவ்வாறு உன் வாழ்வை அமைத்துக் கொண்டாயா னால், ஆயிரக்கணக்கானோர் அவ்வாறு செய்யத் தொடங்கு வார்கள். ஆனால் லட்சியத்திலிருந்து ஓர் அங்குலம்கூட விலகக் கூடாது. எந்தக் காலத்திலும் தைரியத்தை இழக்காதே. உண் ணும்போதும், உடுத்தும்போதும், படுக்கும்போதும், பாடும் போதும், விளையாடும்போதும், மகிழ்ச்சியிலும், நோயிலும் எப்போதும் உண்மை தைரியத்தை வெளிப்படுத்து. அதன் பிறகுதான் மகாசக்தியான தேவியின் கருணையைப் பெறுவாய்.'

சீடர்: 'சிலவேளைகளில், நான் தைரியம் இழந்து விடுகிறேன்.'

சுவாமிஜி: 'அப்போதெல்லாம், ''நான் யாருடைய பிள்ளை? அவரிடம் சென்றும் இத்தகைய பலவீனமான எண்ணமா, பலமின்மையா?'' என்று நினை. பலவீன மனத்தை, அதைரியத்தை உதைத்துக் கீழே தள்ளி எழுந்து நின்று, ''நான் வீரன். நான் தீரன், நான் பிரம்மத்தை அறிந்தவன், நான் உணர் வொளி பெற்றவன்'' என்று சொல். ''காமத்தையும் பணத்தாசை யையும் வென்ற ஸ்ரீராமகிருஷ்ணருக்குத் துணையாக வந்தவரின் சீடன் நான்'' என்பது போன்ற எண்ணங்களை நினைத்து உன் னுடைய மகோன்னதத்தைத் திரும்பத்திரும்ப நினைவிற்குக் கொண்டு வா. இது நன்மையை உண்டாக்கும். இந்தப் பெருமிதம் இல்லாதவனுக்கு அவனுள்ளிருக்கும் பிரம்மம் விழிப்படையாது. ராம பிரசாதரின் பாடலை நீ கேட்டதில்லையா? ''உலக அன்னையை அரசியாகக் கொண்ட இந்த உலகில் நான் யாருக் காகப் பயப்பட வேண்டும்?'' என்று கேட்கிறார் அவர். அத் தகைய பெருமிதத்தை எப்போதும் மனத்தில் நிலைத்திருக்கச் செய். அப்போது மன பலவீனமோ, வேறு எந்த பலவீனமோ உன் அருகில் வராது. எந்தக் காலத்திலும் பலவீனம் உன் மனத்தை வெல்லாதபடி பார்த்துக்கொள். மகாவீரரான

அனுமனை நினை. மகா மாயையான ஆதிபராசக்தியை நினை. உன்னிடம் இருக்கும் எல்லா பலவீனங்களும் எல்லா கோழைத் தனங்களும் மறைந்து போய்விடுவதைக் காண்பாய்.'

இவ்வாறு சொல்லியபடி சுவாமிஜி படிகளின் வழியாக இறங்கி, முற்றத்தில் வழக்கமாக அமரும் கட்டிலில் அமர்ந்தார். அவர் அந்த மகாவீரரான ஆஞ்சநேயரின் உணர்வுகளிலேயே மூழ்கித் திளைப்பது போலிருந்தது. அந்த நிலையிலேயே அங்குக் கூடியிருந்த சன்னியாசிகளையும் பிரம்மச்சாரிகளையும் பார்த்துக் கூறினார்:

'இதோ பிரத்தியட்ச பிரம்மம். இதை ஒதுக்கிவிட்டு மற்ற விஷயங்களில் மனத்தைச் செலுத்துவார்களா? சீ! சீ! இதோ பிரம்மம் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெளிவாகத் தெரி கிறது. நீங்கள் பார்க்கவில்லையா? இதோ...இதோ....'

இந்த வார்த்தைகளைக் கேட்ட அனைவரும் ஓவியத்தில் எழுதிய உருவங்கள்போல் அசையாமல் நின்றார்கள். திடீ ரென்று தியானத்தின் ஆழத்திற்குள் இழுக்கப்பட்டு விட்டதைப் போல் அனைவரும் உணர்ந்தார்கள். அவர்களால் பேச முடிய வில்லை. சிறிதுநேரம் அப்படியே கழிந்தபிறகு சாதாரண உணர்வைப் பெற்றார்கள்.

பிறகு சுவாமிஜி உலவிக்கொண்டே சீடரிடம் பேசினார்: 'இன்று என்ன நடந்தது பார்த்தாயா? எல்லோரும் தியான நிலையில் மூழ்க வேண்டியதாயிற்று. ஸ்ரீராமகிருஷ்ணரின் பிள்ளைகள் அல்லவா, அதனால்தான் சொன்ன உடனே அனுபூதி கைகூடிற்று.'

சீடர்: 'சுவாமிஜி, என் இதயமே அமைதியுணர்வில் ஆழ்ந்தது என்றால் அவர்களைப்பற்றிச் சொல்ல என்ன இருக் கிறது? ஆனால் அந்த ஆனந்தம் இப்போது கலைந்துபோன கனவுபோல் ஆகிவிட்டது.'

சுவாமிஜி: 'எல்லாம் உரிய காலத்தில் நடக்கும். இப்போது வேலையில் ஈடுபடு. மகாமோகத்தில் அழுந்திக் கிடக்கின்ற மக் களுக்கு நன்மை தருகின்ற ஏதாவது செய். அப்போது அந்த அனுபவங்கள் எல்லாம் தானாகக் கைகூடுவதைக் காண்பாய்.'

சீடர்: 'அந்தக் கர்மப் பாதையில் செல்ல பயமாக இருக் கிறது. அதற்கான திறமையும் என்னிடம் இல்லை. சாஸ்திரங் களும், ''கர்மத்தின் பாதை எளியதல்ல'' என்று கூறுகின்றன.

சுவாமிஜி: 'அப்படியானால் நீ என்ன செய்ய விரும்பு கிறாய்?'

சீடர்: 'சாஸ்திரங்கள் அனைத்தின் உண்மைகளையும் அனுபவபூர்வமாகக் கண்ட உங்களைப் போன்றவர்களுடன் வாழவும், தத்துவ ஆராய்ச்சி செய்யவும், சிரவணம் (கேட்டல்), மனனம் (சிந்தித்தல்), நிதித்யாசனம் (தியானித்தல்) போன்ற சாதனைகளின் மூலம் இந்தப் பிறவியிலேயே பிரம்மத்தை அறியவும் விரும்புகிறேன். இதைத் தவிர வேறு எதையும் செய்ய எனக்கு உற்சாகமோ வலிமையோ இல்லை.'

சுவாமிஜி: 'நீ அதை விரும்பினால் அப்படியே செய். அத்துடன் உன் சாஸ்திர அறிவை மற்றவர்களுக்கும் கொடு. இதனால் பலருக்கு நன்மை ஏற்படும். உடம்பு இருக்கும்வரை ஏதாவது வேலை செய்வது தவிர்க்க முடியாதது. எனவே மற்றவர்களுக்கு நன்மை தருபவற்றைச் செய்வது நல்லது. உன் சொந்த அனுபவங்களும் சாஸ்திர அறிவும் பிரம்ம ஞானத்தை நாடுகின்ற மற்றவர்களுக்கு உதவும். அவற்றை நூல் வடிவில் வெளியிட்டால் மேலும் பலருக்கு நன்மை கிடைக்கும்.'

சீடர்: 'முதலில் நான் உண்மையை அறிகிறேன். பிறகு நூல் எழுதுகிறேன். ''அதிகார முத்திரை இல்லாமல் உன் பேச்சை யாரும் கேட்க மாட்டார்கள்'' என்று குருதேவர் கூறுவாரே!'

சுவாமிஜி: 'நீ இப்போது இருக்கின்ற நிலையில்—ஆன்மீகப் பாதையில் அந்த அளவே சென்று, அதற்கு அப்பால் செல்ல முடியாமல் அதிலேயே—பலர் தடுமாறி நிற்கிறார்கள். உன் அனுபவத்தையும் சிந்தனைப் போக்கையும் நீ எழுதி வைத்தால், குறைந்தபட்சம் அவர்களுக்காவது பயன்படும். மடத்தின் சாதுக்களோடு நீ நிகழ்த்தும் உரையாடல்களை எழுத்து வடிவில் கொண்டு வந்தால் அது பலருக்கு உதவி செய்யும்.'

சீடர்: 'நீங்கள் விரும்புவதால் அதை நான் எழுத முயல்கிறேன்.'

சுவாமிஜி: 'மற்றவர்களுக்குப் பயன்படாத, மகாமோகத்தில் அழுந்திக் கிடக்கின்ற மக்களுக்கு நன்மை தராத, அவர்களைக் காமம், பணத்தாசை இவற்றின் பிடியிலிருந்து விடுவிக்க உதவாத ஆன்மீக சாதனையாலோ அனுபூதியாலோ என்ன நன்மை இருக்கிறது? ஒரே ஒரு உயிர்கூட பந்தத்தில் சிக்கிக் கிடக்கும் வரை, நீ முக்தியை அடைய முடியும் என்று நினைத்துக் கொண்டிருக்கிறாயா? அவன் முக்தி பெறாதவரை அவனுக்கு உதவுவதற்காக, அவன் பிரம்ம அனுபூதி பெற உதவுவதற்காக நீ பிறந்தேயாக வேண்டும். ஒவ்வோர் உயிரும் உன்னில் ஒரு

பகுதிதான். மற்றவர்களுக்காக நீ செயல்புரிய வேண்டுமென் பதற்கு அதுவே காரணம். உன் மனைவிமக்களுக்கு மனப்பூர்வ மான நன்மையை விரும்புவதைப் போல், எல்லா உயிர்களுக் காகவும் உன் மனத்தில் அன்பு எழுமானால், அப்போதுதான் உன்னிடம் பிரம்மம் விழித்தெழுந்துள்ளது என்பது உண்மை யாகும். அதற்கு ஒருகணம் முன்புகூட அப்படிச் சொல்ல முடியாது. ஜாதி, மதம், இனம் என்ற வேற்றுமை எதுவும் இல்லாமல் எல்லோரிடமும் எல்லா நிலையிலும் நன்மையை விரும்பும் இத்தகைய உணர்வு உன் உள்ளத்தில் எழுமானால் நீ உன் லட்சியத்தை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறாய் என்பது உறுதி.'

சீடர்: 'எல்லோருக்கும் முக்தி கிடைக்காமல் தனி மனிதன் முக்தி பெற முடியாது என்ற கருத்து பயம் தருகிறது. இத்தகைய கருத்தை நான் கேட்டதே இல்லை.'

சுவாமிஜி: 'வேதாந்திகளுள் ஒரு பிரிவினர் இத்தகைய கருத்தைக் கொண்டிருக்கிறார்கள். ''தனியொருவனின் முக்தி என்பது முக்தியின் உண்மையான இயல்பு அல்ல; எல்லோ ருக்கும் முக்தி கிடைக்குமானால் அதுதான் முக்தி'' என் கிறார்கள் அவர்கள். ஆனால் இந்தக் கருத்திலும், நன்மை தீமை இரண்டும் உண்டு என்பதைக் காட்டலாம்.'

சீடர்: 'வேதாந்தத்தின்படி, இந்தத் தனித்துவம்தான் பந்தத்திற்குக் காரணம். வரையறையே இல்லாத ஞானம் ஆசை களாலும் கர்மத்தாலும் பந்தப்பட்டதுபோல் தோன்றுகிறது. விவேகத்தின்மூலம் அந்தப் பந்தம் ஒழிந்துவிட்டால், இயல் பாகவே உணர்வுமயமான ஆன்மாவிற்கு எப்படித் தளைகள் இருக்க முடியும்? உயிர்களும் இந்த உலகமும் இருக்கிறது என்ற உணர்வு யாருக்கு இருக்கிறதோ, அவன், எல்லோருக்கும் முக்தி கிடைக்காமல் முக்தி இல்லை என்று நினைப்பான். ஆனால் சாதனைகளின்மூலம் மனம் பிரம்மத்தில் ஒன்றிப்போனால் அவனிடம் உயிர், உலகம் போன்ற எண்ணங்களே இருக்காதே. எனவே அவன் முக்தி அடைவதை எதுவும் தடை செய்ய முடியாது அல்லவா?'

சுவாமிஜி: 'ஆமாம். நீ சொல்கின்ற கருத்தைத்தான் பெரும் பாலான வேதாந்திகள் கொண்டிருக்கிறார்கள். அதில் தவறும் இல்லை. அதில் தனிப்பட்டவர்களின் முக்தி தடுக்கப் படுவ தில்லை. ஆனால் பிரம்மா முதல் அனைவரையும் தன்னுட னேயே முக்தி பெறச் செய்ய வேண்டுமென்று விரும்புபவனின்

மகத்தான மனத்தை நினைத்துப் பார். அந்த இதயத்தின் ஆழத்தை ஒருமுறை சிந்தித்துப் பார்.'

சீடர்: 'அது தாராள மனத்தைக் காட்டலாம், ஆனால் சாஸ்திரங்களுக்கு எதிராக உள்ளதே!'

சுவாமிஜி தம்மை மறந்த நிலையில் இருந்ததால் சீடர் சொன்னதை அவர் கவனிக்கவில்லை. பிறகு சிறிது நேரம் பொறுத்துச் சொன்னார்: 'இரவும் பகலும் பிரம்ம சிந்தனை செய். ஒருமுகப்பட்ட மனத்துடன் தியானம் செய். அந்த நிலையிலிருந்து கீழே வரும்போது, பிறரது நன்மைக்காக ஏதாவது காரியங்களில் ஈடுபடு; அல்லது ''உலகிற்கும் உயிர்களுக்கும் நன்மை உண்டாவதாக'', ''அனைவரின் மனமும் பிரம்மத்தை நோக்கிச் செல்வதாக'' என்று மீண்டும் மீண்டும் சிந்தனை செய். அத்தகைய தொடர்ந்த சிந்தனையால் உலகிற்கு நன்மை உண்டாகும். நல்லதை நாடிச் செய்கின்ற எதுவும், செயலானாலும் நினைப்பானாலும் பயன் தராமல் போவதில்லை. உன்னுடைய சிந்தனைவேகம் அமெரிக்காவில் உள்ள ஒருவரது உணர்வைத் தட்டியெழுப்ப முடியும்.'

சீடர்: 'என் உள்ளம் உண்மையில் நிலைக்குமாறு அருள் புரியுங்கள்!'

சுவாமிஜி: 'அது நடக்கவே செய்யும். நீ அதை மனப்பூர்வமாக விரும்பினால் நிச்சயமாக நடக்கும்.'

## 39

பேலூர் மடம், 1901

பேலூரில் ராமகிருஷ்ண மடம் துவக்கப்பட்டபோது வைதிக இந்துக்களில் பலர் மடத்து வாழ்க்கை முறையை மிகவும் கடுமையாக விமர்சித்தார்கள். சீடரிடமிருந்து அவற்றைக் கேட்கும்போது சுவாமிஜி, 'யானை கடைத்தெரு வழியாகப் போகிறது. ஆயிரம் நாய்கள் அதன் பின்னால் குரைத்துக் கொண்டு ஓடுகின்றன. அதுபோல் உலக மக்கள் இழித்துப் பேசினாலும் சாதுக்கள்அவர்கள்மீது கோபம் கொள்ள மாட்டார்கள்' என்ற பொருள் தரும் துளசிதாசரின் பாடலைப் பாடுவார். அல்லது 'புதிய எந்தக் கருத்தையும் பிரச்சாரம் செய்யும்போது, பழைய கருத்துக்களைப் பற்றிப்பிடித்துக் கொண்டிருப்பவர்களிடமிருந்து எதிர்ப்பு வருவது இயல்பே. உலகில் அறத்தை நிலைநாட்ட வருபவர்கள் இந்தப் பரீட்சையைக் கடந்தேயாக வேண்டும்' என்பார். சிலவேளைகளில், 'நன்மை தருகின்ற எந்தக் கருத்தும், கண்டனங்களும்

கொடுமையும் இல்லாமல் சமுதாயத்தினுள் நுழைய முடியாது' என்பார். இன்னும் சில நேரங்களில், 'பலனைப்பற்றிக் கவலைப் படாமல் செயல் புரிந்துகொண்டே செல்லுங்கள். ஒருநாள் நிச்சயமாக அந்த வேலைகளின் பலன் கிடைக்கும்' என்று ஒவ்வொருவரையும் உற்சாகப்படுத்துவார். சில நேரங்களில், 'ந ஹி கல்யாண க்ருத் கச்சித் துர்கதிம் தாத கச்சதி—மகனே, நல்லது செய்பவன் துன்பப்பட மாட்டான்' என்ற கீதையின் சுலோகத்தைக்(6. 40) கூறுவார்.

1901 மே—ஜூன் மாதத்தில் சுவாமிஜி ஒருநாள் சீடரிடம், 'ரகுநந்தனரின் அஷ்டாவிம்சதி தத்துவம்' (இருபத்தெட்டு தத்துவம்) என்னும் நூலை விரைவில் கொண்டுவந்து கொடு' என்றார்.

சீடர்: 'கொண்டு வருகிறேன். ஆனால் சுவாமிஜி, படித்த இன்றைய இளைஞர்கள் ''மூடத்தனங்களின் குவியல்'' என்று ஒதுக்கும் ரகுநந்தனரின் அந்தப் புத்தகத்தை வைத்துக்கொண்டு என்ன செய்யப் போகிறீர்கள்?'

சுவாமிஜி: 'ஏன், ரகுநந்தனர் அவரது காலத்தில் ஒரு பெரிய பண்டிதராக இருந்தார். பழங்கால ஸ்மிருதிகளையெல்லாம் தொகுத்து, தற்காலச் சூழலுக்கு ஏற்ற விதிமுறைகளாக எழுதினார். அந்த விதிகளைத்தான் வங்காளம் முழுவதும் பின்பற்றுகிறது. ஆனால் இந்துக்களின் வாழ்க்கை, பிறப்பிலிருந்து இறப்புவரை, அவருடைய இரும்புப்பிடியான ஆசார நியதிகளில் மாட்டிக்கொண்டு, சமுதாயம் நெரிந்து கொண்டிருக்கிறது. முக்கியமான காரியங்களின் விஷயம் இருக்கட்டும்; சாப்பிடுவது, தூங்குவது, இயற்கைக்கடன்களைக் கழிப்பது போன்ற சாதாரண விஷயங்களுக்குக்கூட அவர் கட்டுப்பாடுகளை விதிக்க முயல்கிறார். இந்த மாறுபட்ட காலச் சூழ்நிலையில் அந்த விதிகள் நிலைத்து நிற்க முடியவில்லை. எல்லா நாடுகளிலும் எல்லா காலங்களிலும் சமூகப் பழக்கங்களையும் சடங்குகளையும் உள்ளடக்கிய கர்மகாண்டம் மாறிக்கொண்டே இருக்கிறது; ஞானகாண்டம் மட்டுமே மாறாமல் இருக்கிறது. வேத காலத்தில் கூடச் சடங்குகள் இப்படிச் சிறிதுசிறிதாக மாறியுள்ளதைக் காணலாம். உபநிடதங்களின் தத்துவப் பகுதி மாறாமல் அப்படியே உள்ளது. அதற்குப் பல்வேறான உரைகள் இருக்கின்றன. அவ்வளவுதான்.'

சீடர்: 'ரகுநந்தனரின் ஸ்மிருதியை வைத்துக்கொண்டு என்ன செய்யப் போகிறீர்கள்?'

சுவாமிஜி: 'இந்த முறை மடத்தில் துர்க்கா பூஜை[1] செய்ய எண்ணுகிறேன். செலவுக்கு வேண்டிய பணம் கிடைத்தால் மகாமாயையின் பூஜை நடைபெறும். அதனால் துர்க்கா பூஜை விதியைப் படிக்க விரும்புகிறேன். எனவே அடுத்த ஞாயிற்றுக் கிழமை வரும்போது அந்த நூல் ஒன்றைக் கொண்டு வா!'

சீடர்: 'அப்படியே செய்கிறேன்.'

சீடர் அந்த நூலை அடுத்த ஞாயிற்றுக்கிழமை கொண்டு வந்தார். அதைக் கண்ட சுவாமிஜி மிகவும் மகிழ்ச்சி அடைந்தார். ஒரு வாரத்திற்குப் பிறகு சீடரைச் சந்தித்த சுவாமிஜி, 'நீ கொடுத்த ரகுநந்தன ஸ்மிருதியைப் படித்து முடித்துவிட்டேன். முடியுமானால் மடத்தில் துர்க்கா பூஜை கொண்டாடப் போகிறேன்' என்றார்.

துர்க்கா பூஜை உரிய காலத்தில் மிகுந்தச் சிறப்போடு கொண்டாடப்பட்டது.

சில நாட்கள் கழித்து சுவாமிஜி கல்கத்தாவில் உள்ள காளிகாட் காளி கோயிலில், காளிதேவியின் முன்னர் ஹோமம் செய்தார். அதைக் குறிப்பிட்டுச் சீடரிடம், 'காளிகாட் காளி கோயில் அதிகாரிகளிடம் பரந்த மனப்பான்மை இருப்பதைக் கண்டு மகிழ்ந்தேன். நான் கடல் கடந்து வெளிநாடு சென்று திரும்பியவன் என்பது தெரிந்தும் நான் கோயிலுக்குள் செல்வதை அவர்கள் தடுக்கவில்லை. தடுக்காதது மட்டுமல்ல, என்னை மிகுந்த அன்புடன் கருவறைக்குள் அழைத்துச் சென்று, மிகுந்தத் திருப்தி ஏற்படும் வகையில் நான் தேவியை வழிபடவும் உதவி செய்தார்கள்' என்றார்.

## 40

பேலூர் மடம், 1902

அன்று ஸ்ரீராமகிருஷ்ணரின் பிறந்தநாள் விழா. இதுவே சுவாமிஜி கடைசியாகக் கண்ட விழா. சீடர் ஸ்ரீராமகிருஷ்ணரைப் பற்றிய பாடல் ஒன்றை சுவாமிஜியிடம் கொடுத்துவிட்டு, அவரது திருப்பாதங்களை மெல்ல வருடிக் கொண்டிருந்தார். அந்தப் பாடலை வாசிக்குமுன் சீடரிடம், 'கால்கள் மிகவும் மென்மையாகிவிட்டன, மெல்ல வருடு' என்றார். பின்னர் பாடலைப் படித்துவிட்டு, 'நன்றாக உள்ளது' என்றார்.

---

1. தென்னிந்தியாவில் நவராத்திரி விழாவாகக் கொண்டாடப் படுகின்ற ஒன்பது நாட்களும் வங்காளத்தில் துர்க்கா பூஜையாக வெகு விமரிசையாகக் கொண்டாடப்படுகிறது.

சுவாமிஜியின் நோய் மிகவும் அதிகரித்துவிட்டது. சீடர் அதையெண்ணி மிகவும் வருந்தினார். சுவாமிஜி அவரது உள்ளத்தை அறிந்து, 'ஏன் வருந்துகிறாய்? உடம்பு பிறந்தது, இறந்தேயாக வேண்டும். எனது கருத்துக்கள் சிலவற்றையாவது உங்கள் உள்ளத்தில் பதித்திருந்தேனானால் எனது பிறவி வீணாக வில்லை என்று நான் கொள்வேன்' என்றார்.

சீடர்: 'நாங்கள் உங்கள் அருளைப் பெறத் தகுதியான வர்களா? தகுதி பாராமல் நீங்கள் ஆசீர்வதித்தால் நான் பேறு பெற்றவன் என்பதை அறிவேன்.'

சுவாமிஜி: 'தியாகம்தான் மூலமந்திரம் என்பதை மறக் காதே. இந்த மந்திரத்தை மனத்தில் பதிக்காவிட்டால், பிரம்ம தேவனாக இருந்தாலும் முக்தி பெற முடியாது.'

சீடர்: 'இதனை உங்களிடமிருந்து ஏறக்குறைய ஒவ்வொரு நாளும் கேட்டாலும், இதன் உண்மையை நான் உணர்ந்து கொள்ளாதது எனக்குப் பெரும் வருத்தத்தைத் தருகிறது.'

சுவாமிஜி: 'தியாகம் வரவே செய்யும். ஆனால், உரிய காலத் தில்தான் வரும். ''காலேனாத்மனி விந்ததி—உரிய காலத்தில் தன்னுள்ளே அடையலாம்''. எவ்வளவோ முற்பிறவி சம்ஸ்காரங் கள் செயல்பட்டுத் தீர்ந்த பின்பே தியாக எண்ணம் எழுகிறது.'

சிறிது நேரம் கழித்து சுவாமிஜி, 'நீ அங்கே அந்தக் கூட் டத்தில் ஏன் போக வேண்டும்? இங்கேயே இரு. இன்று என்னை ஒருவரும் தொல்லைப் படுத்தாமல் இருப்பதற்காகக் கதவினரு கில் இருக்கும்படி நிரஞ்ஜனிடம் சொல்' என்றார்.

அதன்பின்பு சுவாமிஜிக்கும் சீடருக்கும் இடையே பின்வரு மாறு உரையாடல் நிகழ்ந்தது.

சுவாமிஜி: 'இனிமேல் குருதேவரின் பிறந்தநாள் விழா வேறுவிதமாகக் கொண்டாடப்படுவது நல்லதென நினைக் கிறேன். ஒருநாள் போதாது, நான்கு ஐந்து நாட்கள் விழா நடை பெற வேண்டும். முதல் நாளில் சாஸ்திரப் பாடங்களும் விளக்கங் களும் நடைபெறும். இரண்டாம் நாளில் வேத வேதாந்தங் களைப் பற்றிய வாதப் பிரதிவாதங்களும், மூன்றாம் நாளில் வினாவிடைகளும் நடைபெற வேண்டும். நான்காம் நாள் தேவை யானால் சொற்பொழிவுகள் நடைபெறலாம். கடைசி நாளில் இப்போது நடக்கும் முறையில் விழா நடக்கலாம். துர்க்கா பூஜை நான்கு நாட்கள் நடப்பதுபோல் இதுவும் நடக்கலாம். இப்படிக் கொண்டாடினால் கடைசி நாளைத் தவிர மற்ற நாட் களில் ஸ்ரீராமகிருஷ்ணரின் பக்தர் அல்லாதவர்கள் அதிகமாகப்

பங்கெடுக்க முடியாமல் போகலாம். அவர்கள் வரட்டும், வராமல் இருக்கட்டும். கூட்டம் பெரிதாக இருந்துவிட்டால் ஸ்ரீராமகிருஷ்ணரின் செய்திப் பெரிதாகப் பரவுகிறதென்பது பொருளல்ல.'

சீடர்: 'இது மிக நல்ல யோசனை. அடுத்த முறை தங்கள் விருப்பப்படியே கொண்டாடலாம்.'

சுவாமிஜி: 'என் மகனே, நீங்கள் இவற்றையெல்லாம் நடத்தி வைப்பீர்கள். இந்த விஷயங்களில் எனக்கு உற்சாகம் இல்லை.'

சீடர்: 'இந்த ஆண்டில் பல கீர்த்தனைக் கூட்டங்கள் வந்திருக்கின்றன.'

இதைக் கேட்டவுடன் சுவாமிஜி எழுந்து சாளரத்தின் இரும்புக் கம்பிகளைப் பிடித்துக்கொண்டு, வெளியே கூடியிருக்கும் பக்தர் கூட்டத்தைப் பார்த்தார்; சிறிது நேரம் கழித்து உட்கார்ந்தார்.

சுவாமிஜி: 'ஸ்ரீராமகிருஷ்ணரின் தெய்வீக லீலையில் நீங்கள் ஒவ்வொருவரும் நடிகர்கள். பிற்காலத்தில் எங்கள் பெயரை மட்டுமல்லாமல் உங்கள் பெயரையும் மக்கள் நினைவு கூர்வார்கள். பக்தியும் முக்தியும் பெற விரும்புபவர்கள் நீ எழுதிய இந்தப் பாடல்களைப் படிப்பார்கள். ஆன்மஞானம் பெறுவதுதான் மேலான குறிக்கோள் என்பதை அறிந்துகொள். அவதார புருஷர்களாகிய உலகக் குருமார்களிடம் பக்தி செலுத்தினாலே உரிய காலத்தில் ஞானம் தானாக வெளிப்படும்.'

சீடர்: 'சுவாமிஜி, எனக்கு அந்த ஞானம் கிடைக்குமா?'

சுவாமிஜி: 'ஸ்ரீராமகிருஷ்ணரின் அருளால் நீ ஞானமும் பக்தியும் பெறுவாய். இல்லறத்தில் நீ அதிக இன்பம் காண மாட்டாய்.'

சீடர்: 'என் மனத்தின் பந்தங்களை நீங்கள் அழிக்காவிட்டால் எனக்கு எந்தக் கதியும் இல்லை.'

சுவாமிஜி: 'என்ன பயம்! நீ இங்கு வந்துவிட்டாய். உனக்கு எல்லாம் கிடைக்கும்.'

சீடர் (சுவாமிஜியின் திருப்பாதங்களைப் பற்றியபடி): 'இந்தப் பிறவியிலேயே என்னை நீங்கள் காப்பாற்ற வேண்டும்.'

சுவாமிஜி: 'யாராவது யாரையாவது காப்பாற்ற முடியுமா? குரு சில திரைகளை அகற்றலாம். அவை அகன்றால் ஆன்மா தன் சொந்த ஒளியுடன் சூரியன்போல் வெளிப்பட்டுத் துலங்கும்.'

சீடர்: 'அப்படியானால் சாஸ்திரங்களில் அருளைப்பற்றிக் கூறப்பட்டுள்ளதே! அது ஏன்?'

சுவாமிஜி: 'அருள் என்றால் என்ன தெரியுமா? ஆன்மாவை அறிந்தவர்களின் உள்ளே ஒரு பெரிய ஆற்றல் விளையாடுகிறது. அவரை மையமாகக் கொண்டு வட்டமொன்று உண்டாகிறது. அந்த வட்டத்தினுள் வந்தவர்கள் அவரது எண்ணங்களுக்கு ஆட்படுகின்றனர்; அதிகச் சாதனைகளோ கஷ்டங்களோ இல்லாமல் ஆன்மீக வாழ்வின் பயனை அனுபவிக்கின்றனர். இதனை வேண்டுமானால் அருள் என்று சொல்லலாம்.'

சீடர்: 'இதைத் தவிர அருள் என்பது வேறு இல்லையா?'

சுவாமிஜி: 'உண்டு. ஓர் அவதார புருஷர் தோன்றும்போது, அவரது லீலையில் அவருக்கு உதவ நித்திய முக்தராக உள்ளவர்கள் வந்து பிறக்கின்றனர். கோடிப் பிறவிகளாகத் தொடர்கின்ற இருளை அகற்றி ஒரு பிறவியிலேயே முக்தியை அளிக்கும் ஆற்றல் அவதார புருஷர்களுக்கு மட்டுமே உண்டு. இது அருள் எனப்படும். புரிகிறதா?'

சீடர்: 'ஆம். அவரைக் காணும் பேறு பெறாதவர்களுக்கு என்ன வழி?'

சுவாமிஜி: 'அவர்களுக்கும் வழி உண்டு. அது இறைவனை அழைப்பதே. அவரை அழைப்பதால் பலர் அவரது காட்சியைப் பெறுகின்றனர். நம்மைப் போன்ற மனித உருவத்தில் அவரைக் காணலாம். அவரது அருளைப் பெறலாம்.'

சீடர்: 'ஸ்ரீராமகிருஷ்ணர் இவ்வுலக வாழ்வை நீத்த பிறகு அவருடைய காட்சியை நீங்கள் பெற்றதுண்டா?'

சுவாமிஜி: 'அவர் உடலை விட்ட பின்பு நான் காசிப்பூரில் பவஹாரி பாபாவுடன் சில காலம் வாழ்ந்தேன். அவரது ஆசிரமத்திற்கு அருகில் உள்ள ஒரு தோட்டத்தில் நான் வசித்துவந்தேன். அதனைப் பேய்த் தோட்டம் என்று மக்கள் சொல்வதுண்டு. எனக்கொன்றும் அதனால் பயமில்லை. நான் பேய்களுக்கும் பேய் அல்லவா! பேய்களையோ பூதங்களையோபற்றி நான் பயப்படுவதில்லை என்பதுதான் உனக்குத் தெரியுமே! அந்தத் தோட்டத்தில் ஏராளம் பழங்களையுடைய எலுமிச்ச மரங்கள் பல இருந்தன. அக்காலத்தில் நான் வயிற்று நோயால் மிகவும் வருந்தினேன்; அத்துடன் சப்பாத்தியைத் தவிர வேறெதுவும் பிச்சையாகக் கிடைப்பதும் இல்லை. எனவே ஜீரண சக்தியை வளர்க்க ஏராளமான எலுமிச்சம் பழங்களை உட்கொள்வேன்.

'பவஹாரி பாபாவை நான் மிகவும் நேசித்தேன். அவரும் என்னிடம் ஆழ்ந்த அன்பு காட்டினார். ஒருநாள் எனக்கு ஓர் எண்ணம் தோன்றியது. ஸ்ரீராமகிருஷ்ணருடன் பல ஆண்டுகள் வாழ்ந்தும், பலவீனமான உடலை பலப்படுத்திக் கொள்வதற்கான எந்த வழியையும் நான் கற்றுக் கொள்ளவில்லை. பவஹாரி பாபா ஹடயோக சாஸ்திரம் அறிந்தவர். அவரிடமிருந்து ஹடயோகப் பயிற்சிகளைக் கற்று உடலைப் பலப்படுத்த எண்ணினேன். நான் பிடிவாதக்காரன் என்பது உனக்குத் தெரியும். விரும்புவதைச் செய்தே தீர்வேன்.

'அவ்வாறு தீட்சை பெற எண்ணியதற்கு முந்தின நாள் இரவில் கட்டிலில் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தவாறு படுத்திருந்தேன். அப்போது ஸ்ரீராமகிருஷ்ணர் கவலையுடன் என்னை உற்று நோக்கியபடி எனது வலதுபுறத்தில் நிற்பதைக் கண்டேன். நான் என்னை அவருக்கு அர்ப்பணம் செய்திருந்தேன். வேறொருவரைக் குருவாகக் கொள்ள எண்ணியதை நினைத்தபோது வெட்கம் என்னைப் பிடுங்கியது. நான் அவரைப் பார்த்தபடியே இருந்தேன். இரண்டு மூன்று மணி நேரம் கழிந்தது. என் வாயிலிருந்து ஒரு சொல்லும் வெளிவரவில்லை. திடீரென அவர் மறைந்துவிட்டார். ஸ்ரீராமகிருஷ்ணரை அன்றிரவு கண்டது என் உள்ளத்தைக் கரைத்துவிட்டது. பவஹாரி பாபாவிடம் தீட்சை பெறும் எண்ணத்தை நிறுத்தி வைத்தேன்.

'ஓரிரு நாட்களுக்குப் பின்னர் மீண்டும் அந்த எண்ணம் எழுந்தது; அப்போதும் முன்போலவே ஸ்ரீராமகிருஷ்ணரைக் கண்டேன். இவ்வாறு மேலும்மேலும் இருபத்தொரு நாட்கள் ஸ்ரீராமகிருஷ்ணரின் தரிசனம் எனக்குக் கிடைத்தது. தீட்சையைப் பற்றி முடிவு செய்யும் போதெல்லாம் அந்தக் காட்சி தோன்றியது. அந்த முடிவு தீமையைத் தவிர நன்மை எதுவும் தராது என்பதை அறிந்த நான் தீட்சையைப் பற்றிய எண்ணத்தையே விட்டுவிட்டேன்.'

சிறிது நேரம் கழித்து சுவாமிஜி சீடரிடம் மீண்டும் கூறினார்: 'ஸ்ரீராமகிருஷ்ணரைக் கண்டவர்கள் பேறு பெற்றவர்கள். அவர்களின் குலம் புனிதம் அடைகிறது; தாய் பேறு பெற்றவள் ஆகிறாள். நீங்களும் அவரது காட்சியைப் பெறுவீர்கள். இங்கு வந்துவிட்டதால் நீங்கள் இந்த இடத்தைச் சேர்ந்தவர்களாகிவிட்டீர்கள். ''ராமகிருஷ்ணர்'' என்று பெயர் தரித்து வந்தவர் யார் என்பதை ஒருவரும் அறிந்து கொள்ளவில்லை. அவருடைய

நெருங்கிய பக்தர்களுக்கோ, அந்தரங்க பக்தர்களுக்கோ அதன் சூசகம்கூடக் கிடைக்கவில்லை. சிலர் ஏதோ சிறிது அறிந்திருக்கின்றனர். பின்னர் எல்லோரும் அறிந்து கொள்வார்கள். அவருடன் வந்தவர்களான ராக்கால் போன்றோர்களுக்குக்கூட இந்த விஷயத்தில் தவறு நேர்ந்துள்ளது. மற்றவர்களைப்பற்றிச் சொல்ல என்ன இருக்கிறது?'

இவ்வாறு பேசிக் கொண்டிருக்கும்போது சுவாமி நிரஞ்ஜனானந்தர் வந்து கதவைத் தட்டினார். 'யார்?' என்று சீடர் கேட்டபோது, சகோதரி நிவேதிதையும் சில ஆங்கிலேயப் பெண்களும் வந்திருப்பதாக சுவாமி நிரஞ்ஜனானந்தர் சொன்னார். அவர்கள் உள்ளே வந்து தரையில் உட்கார்ந்து, சுவாமிஜியின் உடல்நலத்தை விசாரித்தார்கள். சிறிதுநேரம் உரையாடி விட்டுப் போய்விட்டார்கள். சுவாமிஜி சீடரை நோக்கி, 'பார்த்தாயா, அவர்கள் எவ்வளவு பண்பாடு உடையவர்களாக இருக்கிறார்கள்! வங்காளிகளாயிருந்தால் நான் உடல்நலமில்லாமல் இருப்பதைப்பற்றிச் சிறிதும் எண்ணாமல் அரைமணி நேரம் என்னைப் பேச வைத்திருப்பார்கள்' என்றார்.

அப்போது இரண்டரை மணி இருக்கும். வெளியே மக்கள் கூட்டம் நிறைந்திருந்தது. சுவாமிஜி சீடரின் மனத்தை அறிந்து, 'வெளியே போய்ச் சுற்றிப் பார்த்துவிட்டு விரைவில் திரும்பி வா' என்றார்.

## 41

பேலூர் மடம், 1902

கிழக்கு வங்காளத்திலிருந்து திரும்பிய சுவாமிஜி மடத்திலேயே இருந்துவருகிறார். அவரது வாழ்வு சிறு குழந்தையின் வாழ்வு போல் எளியதாக உள்ளது.

ஒவ்வோராண்டும் சந்தால் இனத்தினர் சிலர் மடத்தில் வந்து வேலை செய்வது வழக்கம். தங்கள் சுகதுக்கங்களைப் பற்றி அவர்கள் கூறுபவற்றை சுவாமிஜி பரிவுடன் கேட்பார்; நகைச்சுவையுடன் பேசிக் கொண்டிருப்பார். ஒருநாள் கல்கத்தாவிலிருந்து பிரமுகர்கள் சிலர் சுவாமிஜியைக் காண வந்தனர். சுவாமிஜி அப்போது சந்தால்களுடன் பேசிக் கொண்டிருந்தார். பிரமுகர்கள் வந்ததைப்பற்றித் தெரிவித்தபோது சுவாமிஜி, 'நான் இப்போது வர முடியாது; இவர்களுடன் நான் பேசிக் கொண்டிருக்கிறேன்' என்று கூறிவிட்டார். ஏழைகளாகிய சந்தால்களைவிட்டுப் போக விரும்பாததால் சுவாமிஜி அன்று பிரமுகர்களைப் பார்க்கவில்லை. சந்தால்களுள் ஒருவன்

கேஷ்டா. சுவாமிஜி கேஷ்டாவை மிகவும் நேசித்தார். சுவாமிஜி பேச வரும்போது கேஷ்டா அவரிடம், 'சுவாமிஜி, நாங்கள் வேலை செய்யும்போது எங்களிடம் வர வேண்டாம். உங்களிடம் பேசிக் கொண்டிருப்பதால் வேலை முடிவதில்லை. மேற்பார்வை யிடுகின்ற சுவாமி பிறகு எங்களை ஏசுவார்' என்றான். இதைக் கேட்ட சுவாமிஜி மனமுருக, 'இல்லை இல்லை, அவர் ஒன்றும் சொல்ல மாட்டார். உங்கள் ஊரைப்பற்றி கொஞ்சம் சொல்' என்று கூறி விசாரிப்பார்.

ஒருநாள் சுவாமிஜி கேஷ்டாவிடம், 'நல்லது, ஒருநாள் நீ இங்கு சாப்பிடுவாயா?' என்று கேட்டார். அதற்குக் கேஷ்டா, 'நீங்கள் தொட்ட உணவைச் சாப்பிட மாட்டோம்; ஏனெனில் நீங்கள் தரும் உணவில் உப்புப் போடப்பட்டிருந்தால், அதனைச் சாப்பிடும் நாங்கள் ஜாதியை இழந்துவிடுவோம்' என்றான். அதற்கு சுவாமிஜி, 'நீங்கள் உப்பைச் சேர்த்துக்கொள்ள வேண்டாம். உப்பில்லாமல் சமைக்கிறோம், அப்போது உண்பீர்களா?' என்றார். கேஷ்டாவும் சம்மதித்தான். அவ்வாறே சுவாமிஜியின் விருப்பப்படி சப்பாத்தி, குழம்பு, இனிப்பு, தயிர் முதலியனவெல்லாம் தயார் செய்யப்பட்டன. சந்தால்கள் தம் மோடு உண்ணும்படி சுவாமிஜி ஏற்பாடு செய்திருந்தார். உண் ணும்போது கேஷ்டா அவரிடம், 'இப்படி அருமையான உணவு எங்கிருந்து கிடைத்தது? இதுபோன்ற உணவை இதுவரை நாங்கள் உண்டதில்லை' என்றான். சுவாமிஜி அவர்களுக்குத் திருப்தியாக உணவளித்து, 'நீங்கள் எல்லாம் நாராயணர்கள்; இறைவனின் திருவுருவங்கள். இன்று நான் நாராயணனுக்கு உணவளித்தேன்' என்றார். தாம் அடிக்கடிக் கூறும், 'தரித்திர நாராயண' சேவையைத் தாமே இவ்வாறு ஒரு தினம் அவர் செய்து முடித்தார்.

உணவு முடிந்தபிறகு சந்தால்கள் இளைப்பாறச் சென் றார்கள். சுவாமிஜி சீடரிடம், 'அவர்களை சாட்சாத் நாராயண னைப் போலவே கண்டேன். இத்தகைய வஞ்சமற்ற நெஞ்சையும் கபடம் கலவாத அன்பையும் எளிமையையும் வேறெங்கும் நான் காணவில்லை' என்றார். பின்பு சன்னியாசிகளை நோக்கிப் பின்வருமாறு கூறினார்:

'இவர்கள் எவ்வளவு களங்கம் அற்றவர்களாக இருக் கிறார்கள்; இவர்களின் துன்பத்தைச் சிறிது குறைக்க முடியுமா? அதைச் செய்யாமல் காவியை உடுத்தி என்ன பயன்? பிறர்நலத் திற்காக அனைத்தையும் தியாகம் செய்வதே உண்மைச்

சன்னியாசம். இவர்கள் தங்கள் வாழ்நாளில் நல்லது என்று எதையும் அனுபவித்ததே இல்லை. இந்த மடத்தையும் பிறவற்றை யும் விற்று அனைத்தையும் ஏழைகளுக்கும் திக்கற்றவர்களுக்கும் கொடுத்து விடலாமென்று சிலவேளைகளில் எனக்குத் தோன்று கிறது. நாம் வசிக்க வேண்டியது மரநிழலிலேயே. ஐயோ! இந்த நாட்டு மக்கள் உண்ணவும் உடுக்கவும் இல்லாமல் வாடுகிறார் களே! நாம் எப்படி உணவை உண்கிறோம்! மேலை நாடுகளில் இருந்தபோது தேவியிடம், ''அம்மா! இங்குள்ள மக்கள் மலர்ப் படுக்கையில் புரள்கிறார்கள்; உயர்ந்தஉணவை உண்கிறார்கள். இவர்கள் அனுபவிக்காதது எதுவுமில்லை. என் நாட்டு மக்களோ பட்டினியால் மடிகிறார்கள். தாயே, இதை மாற்ற ஒரு வழியும் இல்லையா?'' என்று வேண்டிக் கொண்டேன். நம் நாட்டு மக்களின் உணவிற்கு ஒரு வழி காண வேண்டும் என்பதும் நான் மேலைநாட்டிற்கு மதத்தைப் பரப்பச் சென்றதன் காரணங்களுள் ஒன்றாகும்.

'நமது நாட்டு ஏழைகள் உணவில்லாமல் பட்டினி கிடப் பதைக் காணும்போது உங்கள் பூஜை புனஸ்காரங்களையும், உங்கள் கல்வி படாடோபங்களையும், உங்கள் சொந்த முக்திக் கான முயற்சிகளையும் தூர எறிந்துவிட்டு, சாதனையாலும் புலனடக்கத்தால் வந்த ஆற்றலாலும் பணக்காரர்களின் மனத்தைத் திருப்பி, பணம் திரட்டி, ஊர்ஊராகச் சென்று ஏழைகளுக்குத் தொண்டு புரிவதில் வாழ்நாள் முழுவதையும் கழிக்க வேண்டுமென்னும் எண்ணம் எனக்கு அவ்வப்போது உண்டாகிறது.

'ஐயோ! இந்த நாட்டிலுள்ள ஏழைகளைப்பற்றி நினைக்க யாருமில்லையே! அவர்களே நாட்டின் முதுகெலும்பு! அவர் களின் தொழிலால்தான் உணவு கிடைக்கிறது. தெருவைச் சுத்தம் செய்பவர்களும் கூலியாட்களும் ஒருநாள் தங்கள் வேலையை நிறுத்திவிட்டால் நகரமே கதிகலங்கிவிடும். ஆனால் இவர்களுக்காக இரங்குபவர்கள் இல்லை! துன்பத்தில் ஆறுதல் சொல்ல யாருமில்லை. இந்துக்களின் அனுதாபம் இல்லாததால், சென்னையிலுள்ள ஆயிரக்கணக்கான தாழ்ந்த ஜாதியினர் கிறிஸ் தவர்களாகி விட்டார்கள். இதற்குக் காரணம் பசிக்கொடுமை மட்டுமல்ல, நமது இரக்கமின்மையும் ஒரு காரணம்தான். நாம் இரவுபகலாக அவர்களிடம், ''எங்களைத் தொடாதீர்கள்! தொடாதீர்கள்!'' என்று கூவிக் கொண்டிருக்கிறோம். இந்த நாட்டில் இரக்கம் எங்கே உள்ளது? அன்பு எங்கே உள்ளது?

வெறும் திண்டாமைக் கும்பல்கள்! இந்த வழக்கங்களை உதைத்துத் தள்ளுங்கள். இந்தக் கட்டுக்களை உடைத்தெறிந்து வெளியேறி, ''ஏழைகளே, துன்புறுபவர்களே, கவலையால் நைந்தவர்களே, தாழ்த்தப் பட்டவர்களே, எல்லோரும் வாருங்கள்!'' என்று கூறி, ஸ்ரீராமகிருஷ்ணரின் திருப்பெயரால் அனைவரையும் ஒன்றுசேர்க்க வேண்டும் என்னும் எண்ணம் இடையிடையே என் உள்ளத்தில் எழுகிறது. இவர்கள் விழித்தெழாமல் பாரதமாதா தூக்கத்திலிருந்து எழ மாட்டாள். இவர்களின் உணவுக்கும் உடைக்கும் ஏற்பாடு செய்யாமல் இருக்கிறோம். நாம் இவர்களுக்கு என்னதான் செய்துள்ளோம்? ஐயோ! உலக விவகாரம்பற்றி இவர்களுக்கு எதுவும் தெரியவில்லை. எனவே இரவுபகலாக வேலை செய்தும், உணவிற்கும் உடைக்கும் வழியில்லாமல் துன்புறுகிறார்கள். எல்லோரும் சேர்ந்து இவர்களின் கண்களைத் திறப்போம்! என்னிடமும் இவர்களிடமும் ஒரே பிரம்மமே, ஒரே மகாசக்தியே உள்ளது; தோற்ற அளவில்தான் வேறுபாடு என்பதை நான் என் ஞானக்கண்களால் தெளிவாகக் காண்கிறேன். ஒவ்வோர் அங்கத்திலும் ரத்தம் நிறைந்து ஓடாமல் எந்த நாடாவது எப்போதாவது உயர்வடைந்ததுண்டா? ஓர் உறுப்பு செயலற்றுப் போனால், பிற உறுப்புகள் நன்றாக இருந்தாலும், அந்த உடலால் அதிகம் வேலை நடக்காது. இதை நிச்சயமாக உணர்ந்துகொள்.'

சீடர்: 'சுவாமிஜி, இந்த நாட்டு மக்களிடையே பல்வேறு மதக் கொள்கைகளும் கருத்துக்களும் பரவியிருக்கின்றன; அவர்களிடையே சமரசம் ஏற்படுத்துவது மிகவும் கடினம்.'

சுவாமிஜி (கோபத்துடன்): 'எந்த வேலையாவது கடினம் என்று நினைப்பதானால் இனி இங்கு வராதே. இறையருளால் எல்லாம் எளிதாகும். ஏழைகளுக்கும் திக்கற்றவர்களுக்கும் ஜாதி மத வேறுபாடின்றித் தொண்டு செய்வதே உன் கடமை. என்ன பலன் வரும் என்றெல்லாம் நினைப்பதற்கு என்ன அவசியம் இருக்கிறது? வேலை செய்துகொண்டே போவது உனது கடமை; மற்றவை தாமாக வந்து சேரும். ஆக்குவதே தவிர அழிப்பது எனது வேலைமுறையல்ல. உலக வரலாற்றைப் படித்துப் பார். ஒவ்வொரு நாட்டிலும், குறிப்பிட்ட காலத்தில் ஒரு மகாபுருஷர் நடுநாயகமாக இருப்பதைக் காண்பாய். அவரது கருத்துக்களால் கவரப்பெற்று நூற்றுக்கணக்கான மக்கள் உலகிற்கு நன்மை செய்வார்கள். நீங்கள் எல்லாம் புத்திசாலி இளைஞர்கள். நீண்ட

நாட்களாக இங்கு வருகிறீர்கள். இதுவரை என்ன செய்திருக்கிறீர்கள்? சொல்லுங்கள். இந்த ஒரு பிறவியையாவது பிறரது சேவைக்காகப் பயன்படுத்தக் கூடாதா? இனி வரும் பிறவிகளில் வேதாந்தத்தையும் மற்ற எல்லாவற்றையும் படிக்கலாம். இந்தப் பிறவியைப் பிறர் சேவைக்குச் செலவிட்டாயானால் நீ இங்கு வந்தது வீண்போகவில்லை என்பதை நான் உணர்வேன்.'

இவ்வாறு கூறி, சுவாமிஜி ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கி மௌனமாக இருந்தார். சிறிதுநேரம் கழித்துக் கூறினார்: 'எவ்வளவோ தவங்களுக்குப் பிறகு நான் இந்த ஓர் உண்மையை உணர்ந்தேன்—கடவுள் ஒவ்வோர் உயிரிலும் நிறைந்துள்ளார். அதைத் தவிர வேறு கடவுள் இல்லை. உயிர்களுக்குச் சேவை செய்பவன் உலக நாயகனுக்குச் சேவை செய்தவனாகிறான்.'

சிறிது நேரத்திற்குப் பின்னர், 'நான் இன்று சொல்லியவற்றை இதயத்தில் பொறித்துக்கொள், மறந்துவிடாதே!' என்றார்.

## 42

பேலூர் மடம், 1902

சனிக்கிழமை. மாலை நேரத்திற்குச் சற்று முன்பு சீடர் மடத்திற்கு வந்தார். இப்போது மடத்தில் ஆன்மீக சாதனைகள் தீவிரமாகப் பின்பற்றப்பட்டு வருகின்றன. எல்லா பிரம்மச்சாரிகளும் சன்னியாசிகளும் அதிகாலையில் எழுந்து, கோயிலில் ஜபம், தியானம் செய்ய வேண்டுமென்று சுவாமிஜி நியதி வகுத்திருந்தார். அந்த நாட்களில் சுவாமிஜி தூங்குவது மிகவும் குறைவு. காலையில் மூன்று மணிக்கே எழுந்து விடுவார்.

சீடர் சுவாமிஜியை வணங்கியபோது சுவாமிஜி அவரிடம், 'பார்த்தாயா, மடத்தில் எப்படி சாதனைகள் நடைபெறுகின்றன? காலையிலும் மாலையிலும், ஜபத்திலும் தியானத்திலும் ஒவ்வொருவரும் அதிக நேரம் செலவழிக்கின்றனர். இதோ பார்! எல்லோரையும் துயில் எழுப்ப ஒரு மணி வாங்கப்பட்டுள்ளது. விடியுமுன் அனைவரும் எழுந்திருக்க வேண்டும். ''காலையிலும் மாலையிலும் மனம் சத்வகுணம் மேலிட்டதாக இருக்கும். அந்த வேளைகளில் ஒருமுகப்பட்ட மனத்துடன் தியானம் செய்ய வேண்டும்'' என்று குருதேவர் கூறுவதுண்டு' என்றார்.

சுவாமிஜி மீண்டும் தொடர்ந்தார்: 'குருதேவர் இவ்வுலக வாழ்வை நீத்த பிறகு வராக நகர் மடத்தில் நாங்கள் தீவிரமான சாதனைகள் செய்தோம். காலை மூன்று மணிக்கு எழுவோம்.

குளித்து அல்லது முகத்தை மட்டும் கழுவிக்கொண்டு பூஜை யறையில் ஜபதியானத்தில் மூழ்குவோம். அந்த நாட்களில் எவ்வளவு வைராக்கியத்துடன் இருந்தோம்! உலகம் இருந்ததா இல்லையா என்ற நினைப்பே எங்களிடம் இருக்கவில்லை. சசி (சுவாமி ராமகிருஷ்ணானந்தர்) இரவும்பகலும் ஸ்ரீராமகிருஷ்ண ரின் பூஜையிலும் சேவையிலும் ஈடுபட்டிருந்தான். இல்லத் தலைவியைப் போல் செயல்பட்டான் அவன். ஸ்ரீராமகிருஷ்ண ரின் பூஜைக்கான பொருட்களையும் எங்களுக்கு வேண்டிய உணவையும் பிச்சை எடுத்தாவது தேடி வைப்பான். காலை முதல் மாலை நான்கு ஐந்து மணிவரை ஜபமும் தியானமும் நடந்த நாட்கள்கூட உண்டு. சசி உணவைத் தயார் செய்து வைத்துக்கொண்டு எங்களுக்காகக் காத்திருந்து, இறுதியில், தியானித்துக் கொண்டிருக்கும் எங்களை இழுத்துச் சென்று உணவூட்டுவான். அவனது ஒருமைப்பட்ட ஈடுபாடுதான் எவ்வளவு அற்புதமானது!'

சீடர்: 'சுவாமிஜி, அந்த நாட்களில் செலவை எவ்வாறு சமாளித்தீர்கள்?'

சுவாமிஜி: 'எப்படிச் சமாளித்தோமா? நாங்கள் சாதுக்கள். பிச்சையெடுப்பதால் கிடைத்ததை வைத்துத்தான். சுரேஷ் பாபுவும், பலராம் பாபுவும் இப்போது உயிருடன் இல்லை; இருந்திருந்தால், இந்த மடத்தைக் கண்டு எவ்வளவு மகிழ்ந் திருப்பார்கள்! சுரேஷ் பாபுவைப்பற்றிக் கேள்விப் பட்டிருப்பாய். ஒருவகையில் இந்த மடத்தை நிறுவியவர் அவரே. வராக நகர் மடத்துச் செலவுகளை ஏற்றுக்கொண்டவர் அவரே. அந்த நாட்களில் அவர்தான் எங்களைப்பற்றிக் கவலைப்பட்டவர். அவரது பக்திக்கும் நம்பிக்கைக்கும் ஈடிணையில்லை.'

சீடர்: 'சுவாமிஜி! அவர் மரணப்படுக்கையில் கிடந்தபோது நீங்களெல்லாம் அவரை அடிக்கடிச் சென்று பார்க்கவில்லை என்று நான் கேள்விப்பட்டேன்.'

சுவாமிஜி: '(அவரது உறவினர்கள்) அனுமதித்திருந்தால் நாங்கள் பார்த்திருப்போம். போகட்டும், அது பெரிய கதை. உலகப் பற்றுள்ள உறவினர்களுக்கு நீ இருந்தாலும் இறந்தாலும் ஒன்றுதான். இதை நினைவில் வைத்துக்கொள். உன்னிடம் சிறிது பணம் மட்டும் இருந்தால் போதும். அதற்காக அடிதடி நடப்பதை நீ வாழும்போதே காண்பாய். மரணப்படுக்கையில் கிடந்தால்கூட உன் மனைவிமக்களும், மற்ற யாரும் உனக்கு ஆறுதல் சொல்ல வர மாட்டார்கள். இதன் பெயர்தான் உலகம்.'

மடத்தின் கடந்த கால நிலைமையைப்பற்றி சுவாமிஜி பின்வருமாறு கூறினார்: 'பணம் இல்லாததால் மடத்தையே மூடிவிடலாம் என்றுகூட நான் நினைத்தது உண்டு. ஆனால் சசியை அதை ஏற்றுக்கொள்ளுமாறு செய்ய முடியவில்லை. அவனே இந்த மடத்திற்கு நடுநாயகமானவன். மடத்தில் ஒன்றுமே இல்லாத நாட்கள்கூட இருந்தன; பிச்சையெடுத்துச் சிறிது அரிசி கொண்டு வந்தால் உப்பு இருக்காது. பல நாட்கள் உப்பிட்டச் சோறுதான் எங்கள் உணவு. ஆனால் சாப்பாட்டைப் பற்றி நாங்கள் யாரும் கவலைப் படவில்லை. ஜபம், தியானம் என்னும் சாதனைவெள்ளத்தில் நாங்கள் அடித்துச் செல்லப் பட்டோம். வேகவைத்த கீரையும் உப்பிட்ட சோறுமே ஒரு மாதத்திற்கு உணவாக இருந்ததும் உண்டு. ஆகா, அவை எத்தனை அற்புதமான நாட்கள்! அன்றைய எங்கள் தீவிர தவம், பேய்களையே நடுங்கச் செய்திருக்கும். மனிதர்களைப்பற்றி என்ன சொல்ல இருக்கிறது! அறுதி உண்மை என்ன தெரியுமா? உன்னுள் சாரம் இருக்குமானால், தடைகள் அதிகமாகும் அளவிற்கு அந்தச் சக்தி வெளிப்படும்.

'ஆனால் துறவிகள் ஆவதற்காக இப்போது வருவோரால் எங்களைப்போல் அவ்வளவு துன்பங்களைச் சகிக்க முடியாது. ஆதலால், இப்போது கட்டில், படுக்கை, நல்ல உணவு என்று வசதியை ஏற்படுத்தியுள்ளோம். நாங்கள் ஸ்ரீராமகிருஷ்ணரின் பெரு வாழ்க்கையைக் கண்டோம். ஆதலால் துன்பம், துயரம் எதுவுமே எங்களுக்கு ஒரு பொருட்டாக இருக்கவில்லை. இக்கால இளைஞர்கள் அத்தகைய துன்பங்களைச் சகிக்க மாட்டார்கள். ஆதலால் தங்க இடம், ஒருபிடி உணவு என்று சிறிது வசதிகளைச் செய்து வைத்திருக்கிறேன். கட்டுவதற்குத் துணியும் பசிக்கு உணவும் இருந்தால், இந்த இளைஞர்கள் சாதனைகளில் மனத்தைச் செலுத்துவார்கள். உயிர்க்குலச் சேவைக்காகத் தங்கள் உயிரையும் தியாகம் செய்யப் பழகு வார்கள்.'

சீடர்: 'ஆனால் படுக்கை முதலிய இத்தகைய வசதிகளை வெளியிலுள்ளோர் பழிக்கிறார்கள்.'

சுவாமிஜி: 'பழிக்கட்டுமே! கேலி செய்யும்போதாவது இந்த இடத்தைப்பற்றி ஒருமுறை நினைப்பார்கள் அல்லவா? எதிர் மறை எண்ணத்தின் மூலம் எளிதாக முக்தி கிடைக்கும்! ''மனித ரைப் புழுக்கள் என்ற அளவிற்கே மதிக்க வேண்டும்'' என்று ஸ்ரீராமகிருஷ்ணர் சொல்வதுண்டு. இவன் என்ன சொல்கிறான்,

அவன் என்ன பேசுகிறான் என்றெல்லாம் பார்த்து நாங்கள் நடந்துகொள்ள வேண்டுமா என்ன? சீ! சீ!'

சீடர்: 'சிலவேளைகளில் ''எல்லோரும் நாராயணர்கள்; ஏழைகளும் வறியவர்களும் நாராயணர்களே'' என்று கூறுகிறீர்கள். சிலவேளைகளில் ''மனிதர்களைப் புழுபோல் மதிக்க வேண்டும்'' என்கிறீர்கள். எனக்கு இதன் பொருள் புரியவில்லை.'

சுவாமிஜி: 'எல்லோரும் நாராயணர்களே. அதில் துளி கூடச் சந்தேகமில்லை. ஆனால் எல்லா நாராயணர்களும் குறை கூறுவதில்லை. ஏழைகளும் எளியவர்களும் வந்து மடத்திலுள்ள கட்டிலையும் மெத்தையையும் பற்றி விமர்சனம் செய்வதில்லை. நான் நற்பணி செய்துகொண்டே போவேன். குறை சொல்லிக் கொண்டிருப்பவர்களைப் பொருட்படுத்த மாட்டேன். மக்களைப் புழுக்களாக மதிக்க வேண்டும் என்று அந்தக் கருத்தில்தான் கூறினேன். இதுபோன்ற விடாப்பிடியுள்ள மனிதன், வேண்டியவை அனைத்தையும் பெறுவான்; சிலருக்கு விரைவில் கிடைக்கும், வேறு சிலருக்குத் தாமதமாகக் கிடைக்கும். அவ்வளவுதான் வேற்றுமை. ஆனால் எல்லோருக்கும் கிடைத்தே தீரும் என்பது உறுதி. எங்களுக்கு அத்தகைய உறுதி இருந்ததால்தான் இன்று ஏதோ சிறிது கிடைத்திருக்கிறது. நாங்கள் எவ்வளவு இன்னல்களைக் கடக்க வேண்டியிருந்தது! பசி காரணமாக ஒரு நாள் ஒரு வீட்டின் முன் ரோட்டிலேயே மூர்ச்சையாகி விழுந்துவிட்டேன். நல்ல மழை ஒன்று பெய்து நனைந்த பிறகுதான் உணர்ச்சி பெற்றெழுந்தேன். ஒருநாள் பகல் முழுவதும் உணவில்லாமல் கல்கத்தாவிலேயே பல வேலைகளும் செய்து திரிந்தேன். இரவு பத்துப் பதினொரு மணிக்கு மடத்திற்கு வந்தபின்தான் உண்ண ஏதோ கிடைத்தது. இப்படி ஒருமுறை இருமுறை அல்ல, பல முறை நடந்திருக்கிறது.'

இதைச் சொல்லிய பின்னர், சுவாமிஜி சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். பின்னர் தொடர்ந்தார்:

'உண்மைத் துறவு என்பது எளிதா என்ன? அதைவிடக் கடுமையான வேறொன்று இல்லை. சிறிது கால் தவறினால் போதும், மலையின் உச்சியிலிருந்து நேராகக் கீழேதான்; கை கால் உடைந்து எல்லாம் பொடிப் பொடியாகிவிடும். ஒருநாள் நான் ஆக்ராவிலிருந்து பிருந்தாவனத்திற்கு நடந்து போய்க் கொண்டிருந்தேன். கையில் ஒரு தம்பிடி இல்லை. பிருந்தாவனத்திற்கு இரண்டு மைல் இருக்கும். அங்கே ஒருவன் அமர்ந்து

புகைபிடித்துக் கொண்டிருந்தான். எனக்கும் புகைபிடிக்கும் ஆசை எழுந்தது. அவனிடம் போய், ''நானும் ஒரு முறை புகை பிடிக்கலாமா?'' என்று கேட்டேன். அவன் பெரிதும் திகைப் படைந்து, ''சுவாமிஜி, நான் ஒரு தோட்டியாயிற்றே!'' என்றான். பழைய சம்ஸ்காரங்கள் விடுமா என்ன? அவனிடமிருந்து புகை பிடிக்காமலே நடக்கத் தொடங்கினேன். சிறிது தூரம் போன போது தோன்றியது—''ஆகா, நான் சன்னியாசம் ஏற்றவன், குல உயர்வு முதலியவற்றைத் துறந்தவன். ஒரு தோட்டி என்று அவன் சொன்னவுடனே, பின்வாங்கி விட்டேனே! அவன் தொட்ட ஹுக்காவைத் தொட மறுத்துவிட்டேனே!'' இந்த எண்ணம் என் நெஞ்சைக் குடைந்தது. அதற்குள் அரை மைல் தூரம் சென்றிருப்பேன். உடனே திரும்பி நடக்கலானேன். நான் சென்றபோது அவன் அங்கே இருந்தான். நான் விரைந்து அவனிடம் சென்று, ''என்னருமை நண்பனே, எனக்காகச் சிறிது புகையிலை தயார் செய்'' என்றேன். அவன் இணங்க வில்லை. நான் விடாமல் அவனைக் கட்டாயப்படுத்தினேன். இறுதியில் அவன் அப்படியே செய்தான். நான் மகிழ்ச்சியுடன் புகைபிடித்துவிட்டுப் பிருந்தாவனத்திற்குப் போனேன். துறவு பூண்ட ஒருவன் ஜாதி மற்றும் குலப் பெருமைகளைத் துறந் தோமா என்று தன்னைத் தானே சோதித்துப் பார்க்க வேண்டும். துறவு நெறியைச் சரியாகக் கடைப்பிடிப்பது மிகக் கடினம். சொல்லும் செயலும் நூலிழைகூடப் பிசகாமல் பொருந்தி யிருக்க வேண்டும்.'

சீடர்: 'சுவாமிஜி, நீங்கள் இல்லறம் துறவறம் இரண்டைப் பற்றியும் கூறுகிறீர்கள். நாங்கள் எதைப் பின்பற்றுவது?'

சுவாமிஜி: 'எல்லாவற்றையும் கேட்டுக்கொள். உனக்கு நல்லதென்று தோன்றுவதை உடும்புப்பிடியாகப் பிடித்துக் கொள்.'

சுவாமிஜி கீழிறங்கி வந்து சீடருடன் பேசியபடியே, உலவிக் கொண்டிருந்தார்; இடையிடையே சிவநாமத்தைச் சொன்னார். 'அன்னையே, அமுததாரையே, நீ எத்தனை விதமாக விளையாடு கிறாய்!' என்ற பாடலையும் மெல்லப் பாடினார்.

## 43

பேலூர் மடம், 1902

சீடர் நேற்றைய இரவை சுவாமிஜியின் அறையிலேயே கழித்தார். காலை நான்கு மணிக்கு சுவாமிஜி அவரை எழுப்பி,

‘நீ இந்த மணியை அடித்துச் சாதுக்களையும் பிரம்மச்சாரிகளையும் எழுப்பு’ என்றார். சீடரும் சாதுக்கள் தூங்கும் இடத்திற்குப் போய் மணியை அடித்தார். அவர்கள் எழுந்து, கைகால் அலம்பி, தியானம் செய்யக் கோயிலுக்கு விரைந்து சென்றார்கள்.

சுவாமிஜி கூறியதன்படி சீடர் சுவாமி பிரம்மானந்தரின் படுக்கைக்கு அருகில் மணியைப் பலமாக அடித்தார். திடுக்கிட்டு எழுந்த அவர், ‘அடக் கடவுளே! இந்த வங்காளி எங்களை மடத்தில் இருக்க விடமாட்டான் போலிருக்கிறதே!’ என்றார். இதை சுவாமிஜியிடம் சீடர் வந்து சொன்னபோது அவர் விழுந்துவிழுந்து சிரித்தபடியே, ‘நன்றாகச் செய்தாய்!’ என்றார். பின்னர் முகம் கழுவி, சீடரையும் அழைத்துக் கொண்டு கோயிலுக்குச் சென்றார்.

சுவாமி பிரம்மானந்தரும் பிற துறவிகளும் தியானத்திற்காக அமர்ந்திருந்தார்கள். சுவாமிஜிக்காகத் தனி ஆசனம் இடப்பட்டிருந்தது. அவர் அதன்மீது கிழக்கு நோக்கி அமர்ந்துகொண்டு, முன்னாலிருந்த மற்றோர் ஆசனத்தைக் காட்டிச் சீடரிடம், ‘நீ அதன்மீது அமர்ந்து தியானம் செய்’ என்றார்.

சுவாமிஜி சிறிது நேரத்தில் பூரண அமைதியை அடைந்து, சித்திரப் பதுமைபோல் அசைவற்றிருந்தார். அவருடைய மூச்சு மிக மெல்ல வந்தது. ஏறக்குறைய ஒன்றரை மணி நேரம் கழித்து, ‘சிவ சிவ’ என்று சொல்லிக்கொண்டு தியானத்திலிருந்து எழுந்தார். அவரது கண்கள் சிவந்திருந்தன; தோற்றம் அமைதியாகவும் கம்பீரமாகவும் ஒளியுடனும் விளங்கியது. ஸ்ரீராமகிருஷ்ணரின் திருமுன்னர் வணங்கி எழுந்து கீழே சென்று முற்றத்தில் உலவினார். சிறிது நேரம் கழித்துச் சீடரிடம் பின்வருமாறு கூறினார்:

‘இப்போதெல்லாம் சாதுக்கள் எப்படி ஜபம் தியானம் முதலியவற்றைச் செய்கிறார்கள் பார்த்தாயா? தியானத்தில் மூழ்கும்போது எத்தனையோ அற்புதங்களைக் காணலாம். வராக நகர் மடத்தில் தியானிக்கும்போது ஒரு நாள் இடை பிங்கலை நாடிகளைக் கண்டேன். சிறிது முயன்றாலே அவற்றைக் காண முடியும். பின்னர் சுழுமுனையின் காட்சி கிடைக்கும். அதன்பிறகு நீ விரும்பியதைக் காணலாம். குருவிடம் திடமான பக்தி இருக்குமானால், ஜபம், தியானம், சாதனைகள் எல்லாம் இயல்பாகக் கைகூடுகின்றன; சிரமப்பட வேண்டியதில்லை. குருர்ப்ரஹ்மா குருர்விஷ்ணு குருர்தேவோ மஹேச்வர:— குருவே பிரம்மம்; குருவே விஷ்ணு; குருவே சிவபெருமான்.’

சீடர் சுவாமிஜிக்காகச் சிறிது புகையிலை தயாரித்துக் கொண்டு வந்தார். சுவாமிஜி புகையை இழுத்துக்கொண்டே பின்வருமாறு கூறினார்:

‘என்றும் தூயதான, தன்னொளி மிக்கதான, என்றும் சுதந்திரமான ஆன்மா என்னும் சிங்கம் உள்ளே இருக்கிறது. தியானத்தாலும், ஒருமுகப்பட்ட மனத்தாலும் ஆன்ம தரிசனம் பெற்றுவிட்டால் இந்த மாய உலகம் மறைந்து போகிறது. ஆன்மா எல்லோருள்ளும் சமமாக இருக்கிறது. சாதனைகள் செய்யும் அளவிற்கு விரைவாக, உள்ளே குண்டலினி சக்தி விழித்தெழுகிறது. இந்தச் சக்தி தலையை அடையும்போது காட்சி தடையற்றதாகிறது; ஆன்ம தரிசனம் கிடைக்கிறது.’

சீடர்: ‘இவற்றையெல்லாம் நான் சாஸ்திரங்களில் படித்த தோடு சரி. ஆனால் அனுபவத்தில் எதையும் காணவில்லை.’

சுவாமிஜி: ‘காலேனாத்மனி விந்ததி:—உரிய காலத்தில் கட்டாயம் வந்தே தீரும். சிலர் விரைவில் பெறுகின்றனர்; வேறு சிலர் சற்றுத் தாமதித்துப் பெறுகின்றனர். உடும்புப்பிடியாகப் பிடிக்க வேண்டும். இதுவே உண்மையான ஈடுபாட்டுடன் கூடிய சுயமுயற்சி. எண்ணெய் ஒழுக்குப்போல் மனத்தை ஒரு பொருளில் செலுத்த வேண்டும். மனித மனம் பல்வேறு விஷயங் களில் சிதறுண்டு கிடக்கிறது. தியான காலத்திலும் ஆரம்பத்தில் மனம் அலைபாயலாம். மனத்தில் எந்த எண்ணம் எழுந்தாலும் சரி, நீ அமைதியாக இருந்து எவ்வகை எண்ணங்கள் எழுகின்றன என்று விழிப்போடு பார். தொடர்ந்து இந்த முறையில் ஆராய்ந் தால் மனம் அடங்குகிறது. எண்ண அலைகள் அதில் எழுவ தில்லை. இந்த அலைகள் மனத்தின் சங்கல்பங்களாகும். நீ முன்பு எந்த விஷயங்களைப்பற்றி ஊன்றி ஆலோசித்தாயோ, அவை மனப் பிரவாகமாகமாறியுள்ளன. தியானத்தின்போது அவை மேலே எழுகின்றன. அவற்றின் எழுச்சி உன் மனம் மேலும்மேலும் அமைதி நிலையை அடைகிறது என்பதற்கு அறிகுறி. மனம் சிலவேளைகளில் எண்ணத்தில் ஆழ்ந்து ஒரே எண்ண அலையுடன் இருக்கிறது. இதுவே சவிகல்ப சமாதி. மனம் எந்த அலைகளுமே இல்லாத நிலையை அடையும்போது, எதையும் சாராத, ஒன்றேயான, எல்லையற்ற உணர்வுமயமான சைதன்யத்தில் ஒடுங்குகிறது. இது நிர்விகல்ப சமாதி. இந்த இருவகைச் சமாதிகளையும் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் நாங்கள் பலமுறை கண்டதுண்டு. இவற்றை அடைய அவர் சிரமப்பட வேண்டியிருக்கவில்லை. தாமாகவே அவருக்கு அவை கைகூடின.

அது ஓர் அற்புதம்! அவரைக் கண்டதால்தான் இந்த விஷயங்களை நாங்கள் சரியாக அறியமுடிந்தது.

'ஒவ்வொரு நாளும் தனித்திருந்து தியானம் செய். எல்லாம் தானாகவே திறக்கும். ஞானத்தின் வடிவமாகிய மகா மாயை உள்ளே உறங்குகிறாள். அதனால்தான் எதையும் அறிந்து கொள்ள முடியவில்லை. அவள் குண்டலினி சக்தி. தியானம் செய்யுமுன் நாடிசுத்தி[1] செய்வாய் அல்லவா? அப்போது மூலாதாரத்திலுள்ள குண்டலினியை மனத்தால் உரக்கத் தாக்கி, ''அம்மா எழுந்திரு, எழுந்திரு'' என்று சொல்ல வேண்டும்.

'இவற்றை எல்லாம் மெள்ளமெள்ளப் பயில வேண்டும்.' தியானத்தின்போது உணர்ச்சிகளை மிகவும் அடக்க வேண்டும். அவை மிகவும் தீமை பயப்பவை. உணர்ச்சிப்பெருக்கினால் குண்டலினி சக்தி விரைந்து மேலே செல்லும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. ஆனால் மேலே போனதுபோல் விரைவாகக் கீழ்நோக்கியும் வந்துவிடும். அப்படிக் கீழ்நோக்கி வரும்போது சாதகனையும் மிகக் கீழான நிலைக்கு இழுத்து வந்துவிடும். ஆதலால்தான் உணர்ச்சிப்பெருக்கிற்குத் துணையாக இருக்கும் பாடல்கள், பஜனை, போன்றவற்றில் பெரிய தீமையும் உள்ளது. குதித்துக் கூத்தாடுவதால் ஒரு கணப்பொழுதில் இந்தச் சக்தி மேல் நோக்கிச் செல்லும். ஆனால் அங்கே அது நிலைத்திருப்பதில்லை; மீண்டும் திரும்பும்போது சாதகனிடம் தீவிரமான காம எண்ணங்களை அது எழுப்புகிறது.

'அமெரிக்காவில் என் சொற்பொழிவுகளைக் கேட்ட பலர் அந்த வேளையில் ஒருவிதமான பரவச நிலையை அடைந்ததுண்டு. சிலர் ஜடம்போல் அசைவற்றிருந்ததும் உண்டு. நான் விசாரித்த போது அவர்களுள் பலர் பின்னர் காம நாட்டத்தால் அலைகழிக்கப்பட்டனர் என்பதை அறிந்தேன். தியானத்திலும் மன ஒருமைப்பாட்டிலும் சரியான பயிற்சியின்மையாலேயே இது உண்டாகிறது.'

சீடர்: 'சுவாமிஜி, சாதனைகளைப் பற்றிய இந்த ரகசியங்களை நான் எந்தச் சாஸ்திரத்திலும் படிக்கவில்லை. முற்றிலும் புதிய விஷயங்கள் பலவற்றை இன்று கேட்கிறேன்.'

சுவாமிஜி: 'சாதனையைப் பற்றிய எல்லா ரகசியங்களும் சாஸ்திரங்களில் இருப்பதாக எண்ணுகிறாயா? இவை குரு-சிஷ்ய பரம்பரை வழியாக வருகின்றன. மிகவும் கவனமாக

---

1. பிராணாயாமத்திற்கான ஆரம்பப் பயிற்சி.

தியானத்தையும் மன ஒருமைப்பாட்டையும் பயிற்சி செய். பயிற்சி வேளையில் உன் முன் நறுமணம் கமழும் மலர்களை வை. நல்ல பத்தி கொளுத்தி வை. மனத்தைப் புனிதப்படுத்து வதற்கு வேண்டியவற்றை ஆரம்பத்தில் செய். குருவின் நாமத்தையும் இஷ்டதெய்வத்தின் திருநாமத்தையும் ஜபிக்கும் போது, ''பிரபஞ்சத்திலுள்ள எல்லா உயிர்களுக்கும் மங்கலம் உண்டாகட்டும்!'' என்று சொல். வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு, கீழே, மேலே என்று எல்லா திசைகளிலும் நல்லெண் ணங்களை முதலில் பரப்பு. பின்பு தியானத்தில் அமர். ஆரம்பத் தில் இவ்வாறு செய்ய வேண்டும்; அதன் பின்னர் அமைதியாக இருந்து (எந்தத் திசையையாவது நோக்கி) நான் தீட்சையின் போது உனக்குக் கூறிய முறையில் தியானம் செய். ஒருநாள் கூட விட்டுவிடாதே. வேலை நெருக்கடிகள் இருந்தால்கூட கால்மணி நேரமாவது சாதனை செய்யத் தவறாதே. ஒருமுகப் பட்ட ஈடுபாட்டுடன் கூடிய முயற்சி இல்லாமல் எதை அடைய முடியும் மகனே?'

பின்னர் சுவாமிஜி மாடிக்குப் போகும்போது, பின்வரு மாறு கூறினார்:

'உங்களுக்கெல்லாம் எளிதில் ஆன்ம விழிப்பு உண்டாகும். எப்போது இங்கே வந்துவிட்டீர்களோ அப்போது முக்தியும் பிற எல்லாமும் உங்கள் கையில்தான். எனவே இப்போது தியானம் முதலியவை செய்வதுடன், துயரக் குரல் நிறைந்து நிற்கின்ற இந்த உலகின் துன்பத்தை நீக்க முழுமனத்துடன் சிறிது பாடுபடு, பார்க்கிறேன். கடின சாதனைகளால் நான் என் உடம்பை ஏறக்குறைய கெடுத்துவிட்டேன். எலும்பும் தோலும் சேர்ந்த இந்தக் கூட்டில் எதுவுமே இல்லாததுபோல் தோன்று கிறது. இனி, நீங்கள் வேலை செய்யுங்கள். நான் சற்று ஓய் வெடுக்கிறேன். வேறொன்றும் செய்யாவிட்டாலும், இத்தனை நாளும் சாஸ்திரம் அதுஇது என்றெல்லாம் படிக்கிறாயே, அவற்றைப் பிறருக்கு எடுத்துச் சொல். இதைவிட உயர்ந்த தானம் இல்லை. ஞானதானமே எல்லா தானங்களிலும் சிறந்தது.'

## 44

பேலூர் மடம், 1902

**சு**வாமிஜி மடத்திலேயே இருந்துவருகிறார். சீடர் மடத்திற்கு வந்து, சுவாமிஜியுடனும் சுவாமி பிரேமானந்தருடனும் மாலை

வேளையில் உலவுவதற்குச் சென்றார். சுவாமிஜி சிந்தனையில் ஆழ்ந்திருந்ததைக் கண்ட சீடர், சுவாமிஜியின் உயர்வைப்பற்றி ஸ்ரீராமகிருஷ்ணர் சொன்ன விஷயங்களைக் குறித்து சுவாமி பிரேமானந்தருடன் பேசத் தொடங்கினார். சிறிது தூரம் நடந்த பின்பு சுவாமிஜி மடத்தை நோக்கித் திரும்பினார். சீடரும் சுவாமி பிரேமானந்தரும் அருகிலிருப்பதைக் கண்டு, 'நல்லது, என்ன பேசினீர்கள்?' என்று கேட்டார். அதற்குச் சீடர், 'ஸ்ரீராம கிருஷ்ணரையும் அவரது உபதேசங்களையும்பற்றிப் பேசினோம்' என்றார்.

இதைக் கேட்டுவிட்டு, சுவாமிஜி மீண்டும் சிந்தனையில் ஆழ்ந்தவாறே நடந்து மடத்தை அடைந்தார். மாமரத்தின் கீழே சிறிய கட்டிலில் சிறிதுநேரம் இளைப்பாறிவிட்டு, முகம் கழுவினார். பின்னர், மாடியில் உலவிக் கொண்டிருக்கும்போது சீடரிடம் பின்வருமாறு கூறினார்:

'நீ உன் ஊர்ப்பக்கங்களில் வேதாந்தத்தை ஏன் பரப்பத் தொடங்கவில்லை? அங்கே தாந்திரீக நெறி அஞ்சத்தக்க அளவுக்குப் பரவி இருக்கிறது. அத்வைதத்தின் சிங்க கர்ஜனை யால் நாட்டை விழித்தெழும்படிச் செய். அப்போதுதான் நீ ஒரு வேதாந்தி என்பதை நான் ஏற்றுக்கொள்வேன். முதலில் சம்ஸ்கிருதப் பாடசாலை ஒன்று தொடங்கி உபநிடதங்கள், பிரம்மசூத்திரம் போன்றவற்றைக் கற்பி. பிள்ளைகள் பிரம்மச் சரியத்தைக் கடைப்பிடிக்கச் செய். வாதம் செய்து தாந்திரீக பண்டிதர்களைத் தோற்கடி. நியாய முறையைப் பற்றிய வீண் வாதங்கள் உன் ஊரில் அதிகம் நடைபெறுவதாகக் கேள்விப் பட்டேன். அதில் என்ன இருக்கிறது? வியாப்தி, அனுமானம் இவற்றைத்தானே அந்த நையாயிக பண்டிதர்கள் மாதக்கணக் காக வாதிப்பார்கள்! ஆன்மஞானம் பெற அது வழியாகுமா என்ன? வேதாந்தத்தின் முடிந்த முடிவாகிய பிரம்ம தத்துவ ஆராய்ச்சி இல்லாமல் நாட்டிற்கு நற்கதி உண்டா? சொல். உன் ஊரிலோ நாகமகாசயரின் வீட்டிலோ ஒரு திண்ணைப்பள்ளி யைத் தொடங்கு. இந்தச் சாஸ்திரங்களையும், ஸ்ரீராமகிருஷ்ண ரின் வாழ்க்கை வரலாற்றையும் அங்கே சொல்லிக் கொடு. இந்த முறையில் உனது நன்மையுடன் பிறருக்கும் நன்மை உண்டாகும். நீ புகழ் பெறவும் செய்வாய்.'

சீடர்: 'பெயர் புகழில் எனக்கு நாட்டம் இல்லை. நீங்கள் கூறுவதுபோல் செய்ய வேண்டும் என்னும் விருப்பம் சிலவேளை களில் உண்டாகிறது. ஆனால் திருமண பந்தத்தில் சிக்கிக்

கொண்டதால் எனது ஆர்வம் மனத்தளவில்தான் இருக்கு மென்று அஞ்சுகிறேன்.'

சுவாமிஜி: 'திருமணம் செய்தால் என்ன? பெற்றோருக்கும் சகோதர சகோதரிகளுக்கும் உணவும் உடையும் கொடுத்துப் பராமரிப்பதுபோல் மனைவியையும் கவனித்துக்கொள். அவளுக்கும் ஆன்மீகம்பற்றிக் கூறி உன் வழிக்கு இழுத்துக் கொள். அவளை ஆன்மீக வாழ்க்கையில் ''வாழ்க்கைத் துணைவி''யாக எண்ணிக்கொள். மற்ற வேளைகளில் பொதுவாகப் பிறரைப் போல் பார். அப்படி நினைத்து வருவாயானால் மனச் சஞ்சலம் ஒரேயடியாக அழிந்துவிடும். பயம் எதற்கு?'

இதனைக் கேட்டுச் சீடர் புதிய ஊக்கம் பெற்றார். சாப்பிட்ட பின்னர், சுவாமிஜி படுக்கையில் அமர்ந்தார். சீடர் அவரது திருப்பாதங்களை நீவிவிடத் தொடங்கினார்.

மடத்து அங்கத்தினர்களிடம் பணிவாக நடந்து கொள்ள வேண்டுமென்று சீடரிடம் கூறிவிட்டு சுவாமிஜி தொடர்ந்தார்:

'ஸ்ரீராமகிருஷ்ணரின் இந்தப் புதல்வர்கள் அற்புதமான தியாகிகள். இவர்களுக்குச் சேவை செய்வதால் மனம் தூய்மையுறும்; ஆன்ம தரிசனம் கிடைக்கும். ''பரிப்ரச்னேன ஸேவயா—சந்தேகங்களைக் கேட்டுத் தெளிவதன் மூலமும் சேவை செய்வதாலும்'' என்று கீதை (4.34) கூறுவதை எண்ணிக்கொள். அவர்களுக்குச் சேவை செய், உனக்கு எல்லாம் கிடைக்கும். அவர்கள் உன்னை எவ்வளவு நேசிக்கிறார்கள் என்பது உனக்குத் தெரியாதா?'

சீடர்: 'ஆனால் சுவாமிஜி, அவர்களைப் புரிந்துகொள்வது மிகவும் கடினம். ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாக உள்ளனர்.'

சுவாமிஜி: 'ஸ்ரீராமகிருஷ்ணர் ஓர் அற்புதமான தோட்டக்காரராக இருந்தார். பல்வேறு மலர்களைக் கொண்டு இந்தச் சங்கம் என்னும் பூச்செண்டை அவர் அமைத்துள்ளார். இங்கே எல்லாமே ஒத்துச் சேரும். பல்வேறு வகையினர் வந்திருக்கின்றனர். இன்னும் பலர் வருவார்கள். ''இறைவனை உண்மையான மனத்துடன் ஒரு நாளாவது அழைத்தவர்கள் இங்கு வந்தே தீரவேண்டும்'' என்று அவர் சொல்வார். இங்கிருக்கும் ஒவ்வொருவரும் மகா சிங்கங்கள். என் முன்னர் அவர்கள் ஒடுங்கி இருப்பதால், அவர்களைச் சாதாரணமாக எண்ணிவிடாதே. அவர்கள் களத்தில் இறங்கும்போது, அவர்களைக் கண்டே

மக்கள் ஆன்மீக விழிப்புப் பெறுவார்கள். எல்லையற்ற கருத்துக்களின் திரண்ட வடிவமான ஸ்ரீராமகிருஷ்ணரின் அம்சங்கள் அவர்கள் என்பதை அறிந்துகொள். நான் அவர்களை அப்படித்தான் பார்க்கிறேன். அதோ இருக்கும் ராக்காலைப் (சுவாமி பிரம்மானந்தர்) பார். அவனளவு ஆன்மீகம் எனக்குக்கூட இல்லை. ஸ்ரீராமகிருஷ்ணர் அவனைத் தம் மகனாகக் கருதினார், அவனுக்கு உணவூட்டுவார், பக்கத்தில் தூங்க வைப்பார், மடியில் வைத்துக் கொள்வார். அவன் எங்கள் மடத்திற்கு ஓர் அணிகலன், எங்கள் அரசன். பிரேமானந்தர், துரீயானந்தர், திரிகுணாதீதானந்தர், அகண்டானந்தர், சாரதானந்தர், ராமகிருஷ்ணானந்தர், சுபோதானந்தர் போன்றவர்களும் அப்படியே. நீ இந்த உலகம் முழுவதையும் சுற்றி வரலாம். ஆனால் இவர்களைப் போல் இறை நம்பிக்கை உடையவர்களை எங்கேயும் காண முடியாது என்பது உறுதி. இவர்கள் ஒவ்வொருவரும் ஆன்மீக ஆற்றலின் நிலையம். காலப்போக்கில் இவர்களின் சக்தி வெளிப்படும்.'

சீடர் வியப்புடன் கேட்டுக் கொண்டிருந்தார். சுவாமிஜி தொடர்ந்தார்: 'உங்கள் ஊர்ப்பக்கத்திலிருந்து நாகமகாசயரைத் தவிர வேறு யாரும் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் வரவில்லை. வந்து கண்ட சிலரும் அவரை அறிந்து கொள்ளவில்லை.'

நாகமகாசயரின் எண்ணம் வந்ததும் சுவாமிஜி சிறிது நேரம் மௌனமாக இருந்தார். மகாசயர் இவ்வுலக வாழ்வை நீத்து நான்கைந்து மாதங்கள் கழிந்துவிட்டன. நாகமகாசயரின் வீட்டில் ஒருசமயம் கங்கை நீரூற்று தோன்றியதைப்பற்றி சுவாமிஜி கேள்விப்பட்டிருந்தார். அதை எண்ணியதும், 'அது எப்படி நடந்தது? சொல்' என்றார்.

சீடர்: 'நான் கேள்விப்பட்டிருக்கிறேனே தவிர நேரில் காணவில்லை. ஒரு மஹாவாருணீ யோகத்தில்[1] நாகமகாசயர் தம் தந்தையுடன் கல்கத்தாவிற்குப் புறப்பட்டார். வண்டியில் இடம் கிடைக்காததால் மூன்று நாட்கள் நாராயணகஞ்ச் என்னும் இடத்தில் தங்கிவிட்டு வீடு திரும்பினார். பின்னர் தந்தையிடம், ''மனம் தூய்மையாக இருந்தால் கங்கா மாதா இங்கேயே தோன்றுவாள்'' என்றார். நீராடுவதற்காகக் குறிப்பிட்ட அந்தப் புனித வேளையில் அவருடைய வீட்டு முற்றத்தில்

1. சைத்ர மாத கிருஷ்ணபட்ச திரயோதசி; அதாவது பங்குனி மாதத் தேய்பிறை பதின்மூன்றாம் நாள், கங்கா ஸ்நானத்திற்கு உகந்த நாள்.

நிலத்தைப் பிளந்துகொண்டு ஒரு நீரூற்று பொங்கியது. அதைக் கண்டவர்கள் பலர் இப்போதும் இருக்கின்றனர். நான் அவரைக் காண்பதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்பு இது நிகழ்ந்தது.'

சுவாமிஜி: 'இதில் அதிசயம் என்ன இருக்கிறது? நினைப்பது நிறைவேறப் பெறுகின்ற சித்த புருஷர் அவர். அவரது விஷயத்தில் இது புதுமையென்று எனக்குத் தோன்றவில்லை.'

சுவாமிஜி இதைச் சொல்லிவிட்டுப் படுத்துக்கொண்டார். சீடரும் இரவு உணவிற்காக மாடியிலிருந்து கீழே வந்தார்.

## 45

கல்கத்தாவிலிருந்து மடத்திற்கு வரும் ஒரு படகு. 1902

ஒருநாள் மாலை சீடர் கல்கத்தாவில் கங்கைக்கரையில், நடந்து கொண்டிருக்கும்போது அஹ்ரிதோலா படித்துறையை நோக்கி ஒரு துறவி நடந்து வருவதைக் கண்டார். அருகில் வந்ததும், அந்தத் துறவி தமது குருவாகிய சுவாமி விவேகானந்தரே என்பது தெரிந்தது. தாளித்த பொரி நிறைந்த ஒரு தொன்னை அவரது இடது கையில் இருந்தது. ஒரு சிறுவனைப்போல் அதை மென்றபடியே நடந்து கொண்டிருந்தார் அவர். சீடர் அவரது திருப்பாதங்களில் விழுந்து வணங்கி, திடீரென அவர் கல்கத்தா வந்த காரணத்தை வினவினார்.

சுவாமிஜி: 'நான் ஒரு வேலை நிமித்தமாக வந்தேன். மடத்திற்கு வருகிறாயா? சிறிது பொரி எடுத்துக்கொள். உப்பும் காரமும் சேர்ந்து மிகவும் நன்றாக இருக்கிறது.'

சீடர் மகிழ்ச்சியுடன் பெற்றுக்கொண்டார்; மடத்திற்குப் போகச் சம்மதித்தார்.

சுவாமிஜி: 'அப்படியானால் ஒரு படகை ஏற்பாடு செய்.'

சீடர் படகிற்காக விரைந்து சென்றார். படகோட்டி எட்டணா கேட்டான். சீடர் அதைக் குறைக்குமாறு கூறினார். அப்போது சுவாமிஜி அங்கே வந்து, 'அவனுடன் ஏன் பேரம் பேசுகிறாய்?' என்று சீடரிடம் கூறிவிட்டுப் படகோட்டியிடம், 'நல்லது, உனக்கு எட்டணா தருகிறேன்' என்று சொல்லிப் படகில் ஏறினார். படகு நீரோட்டத்திற்கு எதிராக மெல்லச் சென்றது. மடத்தைச் சேர ஒன்றரை மணி நேரம் ஆயிற்று. சுவாமிஜியுடன் படகில் தனியாக இருந்ததால் பல விஷயங்களைப்பற்றிப் பேசுவதற்குச் சீடருக்கு வாய்ப்புக் கிடைத்தது. சமீபத்தில் சீடர் ஸ்ரீராமகிருஷ்ணருடைய பக்தர்களின் பெருமையைக் குறிப்பிடும் பாடல் ஒன்றை எழுதியிருந்தார். சுவாமிஜி

சீடரிடம், 'நீ உன் பாடலில் குறிப்பிட்டவர்கள் ஸ்ரீராமகிருஷ்ண ரின் அந்தரங்கச் சீடர்கள் என்பது உனக்கு எப்படித் தெரியும்?' என்று கேட்டார்.

சீடர்: 'நான் பல ஆண்டுகளாக ஸ்ரீராமகிருஷ்ணரின் துறவற, இல்லறச் சீடர்களுடன் பழகியிருக்கிறேன். நான் குறிப் பிட்டவர்கள் எல்லோரும் ஸ்ரீராமகிருஷ்ணரின் பக்தர்கள் என்பதை அவர்களிடமிருந்துதான் கேள்விப்பட்டேன்.'

சுவாமிஜி: 'ஸ்ரீராமகிருஷ்ணரின் பக்தர்களாக இருக்கலாம். ஆனால் எல்லோரும் அந்தரங்கச் சீடர்கள் அல்ல. காசிப்பூர்த் தோட்டத்தில் இருக்கும்போது ஸ்ரீராமகிருஷ்ணர் எங்களிடம், ''அனைவரும் என் அந்தரங்கச் சீடர்கள் அல்ல என்பதை தேவி எனக்குக் காட்டினாள்'' என்றார். ஆண் பெண் இருசாராரை யுமே அவர் அன்று குறிப்பிட்டார்.'

பின்னர் சுவாமிஜி, ஸ்ரீராமகிருஷ்ணர் தம் பக்தர் களிடையே பல படித்தரங்கள் இருப்பதை எடுத்துக் காட்டி யதைப் பற்றியும் இல்லற மற்றும் துறவற வாழ்க்கைக்கு இடை யில் உள்ள பெரிய வேறுபாட்டைப் பற்றியும் நீண்ட நேரம் தெளிவாக விளக்கினார்.

சுவாமிஜி: 'காமம், பணத்தாசை இரண்டையும் வைத்துக் கொண்டே ஸ்ரீராமகிருஷ்ணரையும் அறிவதென்பது முடிகிற காரியமா? அது முடியும் என்று ஒருபோதும் நம்பாதே. ஸ்ரீராமகிருஷ்ணரின் பக்தர்களுள் பலர் தங்களை ஈசுவர கோடிகள், அந்தரங்கச் சீடர்கள் என்றெல்லாம் சொல்லித் திரி கிறார்கள். அவரது தியாகத்தையும் வைராக்கியத்தையும் கைக் கொள்ள முடியாத இவர்கள், அவருக்கு அந்தரங்கச் சீடர் என்று சொல்லிக்கொள்வது வேடிக்கையாக இருக்கிறது! இந்தக் கதைகளையெல்லாம் தூக்கியெறிந்து விடு. அவர் தியாகிகளின் சக்கரவர்த்தியாக இருந்தார். அவரது அருளைப் பெற்றவர்கள் காமம் மற்றும் பணத்தாசையில் மூழ்கிக் கிடக்க முடியுமா?'

சீடர்: 'அப்படியானால் தட்சிணேசுவரத்தில் அவரிடம் வந்தவர்கள் அனைவரும் அவரது பக்தர்கள் இல்லையா?'

சுவாமிஜி: 'யார் அப்படிச் சொன்னது? அவரிடம் வந்த ஒவ்வொருவரும் ஆன்மீக வாழ்க்கையில் முன்னேறினார்கள். முன்னேறுகிறார்கள், முன்னேறுவார்கள். அவர்கள் எல்லோரும் அவரது பக்தர்களே. ''முந்திய கல்பத்தில் நிறைநிலையை அடைந்த ரிஷிகள், மனித உடலை எடுத்து அவதார புருஷர் களுடன் உலகத்தில் பிறக்கிறார்கள். அவர்கள்தான் இறைவனின்

அணுக்கத் தொண்டர்கள். இறைவன் அவர்கள்மூலமாகச் செயல்புரிகிறார்; உலகில் ஆன்மீகத்தை பரப்புகிறார்'' என்று ஸ்ரீராமகிருஷ்ணர் சொல்வதுண்டு. யார் பிறருக்காக எல்லா வற்றையும் துறந்தவர்களோ, யார் சுகபோகங்களை மலத்திற்குச் சமமாகக் கண்டு, அவற்றை விலக்கி உலக நன்மைக்காக, மக்களின் நலத்திற்காக வாழ்கிறார்களோ அவர்கள் மட்டுமே அவதார புருஷரின் அந்தரங்க பக்தர்களாக இருக்க முடியும். ஏசுவின் சீடர்கள் எல்லோரும் துறவிகள். சங்கரர், ராமானுஜர், சைதன்யர், புத்தர் இவர்கள் அனைவருடையவும் கருணையை நேரில் பெற்றவர்கள் அனைத்தையும் துறந்த சன்னியாசிகளே. அனைத்தையும் துறந்த இந்தத் துறவியரின் குரு பரம்பரைதான் பிரம்மவித்யையை உலகில் பரப்பி வருகிறது. காமம் மற்றும் பணத்தாசையில் தானே மூழ்கிக் கிடக்கின்ற ஒருவன் மற்றொரு வனைக் கைதூக்கி விட்டான், கடவுளை அடையும் வழியைக் காட்டினான் என்று நீ எங்கே எப்போது கேள்விப் பட்டாய்? நீயே முக்தி பெறாமல் பிறரை எப்படி முக்திபெறச் செய்வாய்? வேதம், வேதாந்தம், இதிகாசம், புராணம் என்று எதை வேண்டு மானாலும் பார்—எல்லா காலங்களிலும், எல்லா நாடுகளிலும் சன்னியாசிகளே ஆன்மீக போதகர்களாக இருந்ததைக் காண் பாய். முன்பு நடந்தது போலவே இப்போதும் நடக்கப்போகிறது. சர்வசமய சமரசத்தைக் காட்டிய ஸ்ரீராமகிருஷ்ணரின் துறவிச் சீடர்களே உலகின் குருமார்களாக எங்கும் மதிக்கப்படு கிறார்கள், மதிக்கப் படுவார்கள். தியாகிகள் அல்லாதவர்களின் உபதேசங்கள் பொருளற்ற ஒலிபோல் காற்றில் கரைந்துவிடும். இந்த மடத்திலிருக்கும் உண்மைத் தியாகிகளாகிய துறவிகள் தர்மத்தைப் பாதுகாப்பதற்கும் பரப்புவதற்குமான நிலையங் களாக இருப்பார்கள், புரிகிறதா?'

சீடர்: 'அப்படியானால் ஸ்ரீராமகிருஷ்ணரின் இல்லற பக்தர்கள் அவரைப்பற்றிப் பலவிதமாகச் சொல்கிறார்களே! அவை எல்லாம் உண்மை இல்லையா?'

சுவாமிஜி: 'அவை பொய்யென்று ஒரேயடியாகச் சொல்வ தற்கில்லை. ஸ்ரீராமகிருஷ்ணரைப்பற்றி அவர்கள் கூறுபவை எல்லாம் ஒருபக்க உண்மைகள். தாங்கள் புரிந்து கொண்டதற் கேற்பப் பேசுகிறார்கள். ஆனால் இவர்களுள் யாராவது, தான் அறிந்துகொண்டது அல்லது தான் பேசுவது மட்டும்தான் உண்மை என்று எண்ணினால், அது வெறும் பேச்சு. அவர் களுக்காக நாம் இரக்கம்தான் கொள்ள வேண்டியுள்ளது.

சிலர் ஸ்ரீராமகிருஷ்ணரைத் தாந்திரீக கௌலர் என்றும், வேறு சிலர் நாரத பக்தியைப் போதிக்க ஸ்ரீசைதன்யரே உலகில் அவதரித்தார் என்றும் கூறுகிறார்கள். இன்னும் சிலர், அவர் அவதார புருஷர் என்பதும் அதேவேளையில் சாதனை செய்தாரென்பதும் முரண்பாடாக உள்ளது என்கிறார்கள். மற்றும் சிலர், சன்னியாச வாழ்க்கை என்பது அவர் போதிக்காத ஒன்று என்று கருதுகிறார்கள். இப்படி இல்லற பக்தர்களிட மிருந்து விதவிதமாகக் கேட்பாய். ஆனால் அவற்றைக் கருத்தில் கொள்ளாதே.

'எத்தனையோ அவதாரங்கள் ஒன்றுசேர்ந்து உருவெடுத் தவர் ஸ்ரீராமகிருஷ்ணர். ஆன்மீக உலகின் மன்னர் அவர். வாழ்க்கை முழுவதையும் தவத்தில் கழித்தும் எங்களால் அவர் யார் என்பதைச் சிறிதும் உணர முடியவில்லை. அவரைப்பற்றிப் பேசும்போது சிந்தித்துப் பேச வேண்டியிருக்கிறது. ஒவ்வொரு வரின் தகுதிகேற்றபடி அவர் தம்மை அவர்களுக்குக் காட்டி யருளியிருந்தார். அவரது ஆன்மீக வாழ்வென்னும் நிறை கடலி லிருந்து ஒரு துளியைப் பெற்றிருந்தால்கூட, அதனால் அந்தக் கணமே மக்கள் தேவர்கள் ஆவார்கள். எல்லா கருத்துக்களின் இத்தகைய சமரசத்தை உலகச் சரித்திரத்தில் வேறு எங்கேயாவது காண முடியுமா? ஸ்ரீராமகிருஷ்ணராக அவதரித்தவர் யார் என்பதை இதிலிருந்தாவது உணர்ந்துகொள்.

'அவதாரமாக அவரைக் குறிப்பிடுவது அவரைச் சிறுமைப் படுத்துவதே ஆகும். அவ்வளவு உயர்ந்தவர் அவர். அவர் தமது துறவறச் சீடர்களுக்குப் போதிக்கும்போது, இல்லறத்தார் யாராவது இருக்கிறார்களா என்று சுற்றுமுற்றும் பார்த்து விட்டு, அதன்பிறகே தியாகம், தவம் இவற்றின் மகிமையைப் பற்றி யெல்லாம் உணர்ச்சி பொங்கப் பேசுவார். அத்தகைய வைராக்கியத்தின் வலிமையால் அல்லவா நாங்கள் உலகத்தைத் துறந்து துறவியானோம்!'

சீடர்: 'இல்லறத்தாருக்கும் துறவிகளுக்கும் இடையே அவர் அவ்வளவு வேறுபாடு காட்டினாரா?'

சுவாமிஜி: 'இதைப்பற்றி அவரது இல்லறச் சீடர்களிடமே கேட்டுப் பார். இறையனுபூதிக்காக, உலக வாழ்வின் இன்பங்கள் அனைத்தையும் துறந்து, மலைகளிலும் காட்டிலும் புண்ணியத் தலங்களிலும் ஆசிரமங்களிலும் தவம் புரிவதில் நாட்களைச் செலவிடுகின்ற அவரது பிள்ளைகள் உயர்ந்தவர்களா, அல்லது அவரை எண்ணியும் அவரது திருநாமத்தைக் கூறியும்

உலகத் தளைகளிலிருந்தும் மாயையிலிருந்தும் விடுபட முடியாமல் இருப்பவர்கள் உயர்ந்தவர்களா? நீயே சிந்தித்துப் பார். யார் மனித குலத்தைச் சொந்த ஆன்மாவாக எண்ணி அவர்களுக்குச் சேவை செய்வதற்காகத் தங்கள் வாழ்க்கையையே அர்ப்பணித்துள்ளார்களோ, யார் இளவயதிலிருந்தே வழுவாத பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடித்து வருகிறார்களோ, யார் தியாகம், வைராக்கியம் இவற்றின் திரண்ட வடிவமாகத் திகழ்கிறார்களோ, அவர்களா? அல்லது, இப்போது பூவின்மீது அடுத்தக் கணம் மலக்குவியலின்மீது என்று அமரும் ஈயைப் போல் வாழ்பவர்களா? யார் உயர்ந்தவர்கள் நீயே சிந்தித்து முடிவு செய்துகொள்.'

சீடர்: 'ஆனால் சுவாமிஜி, அவரது அருளைப் பெற்றவர்களுக்கு இந்தச் சம்சார வாழ்க்கை ஒரு பொருட்டா என்ன? அவர்கள் இல்லறத்தில் இருந்தாலும் சரி துறவியானாலும் சரி, எல்லாம் ஒன்றே என்றுதான் எனக்குத் தோன்றுகிறது.'

சுவாமிஜி: 'உண்மையில் அவரது அருள் பெற்றவர்களின் மனம் உலகியலில் பற்றுக் கொள்ளாது. ஆனால் அந்த அருளுக்கான உரைகல் எது? காமம், பணத்தாசை இவற்றில் பற்றின்றி இருப்பதே அது. அந்தப் பற்றற்ற நிலையை அடையாதவன் உண்மையில் அவரது அருளைப் பெறவில்லை.'

பிறகு சீடர் இன்னொரு விஷயத்தைத் துவக்கினார்: 'அயல் நாடுகளில் நீங்கள் செய்த வேலையால் என்ன பயன் விளைந்துள்ளது?'

சுவாமிஜி: 'என்ன விளைந்துள்ளது என்பதை நீங்கள் சிறிது மட்டுமே இப்போது காண முடியும். காலப்போக்கில் ஸ்ரீராமகிருஷ்ணரின் பரந்த கருத்துக்களை உலகம் முழுவதும் ஏற்றுக்கொண்டே தீரும். அதற்கான அறிகுறி காணப்படுகிறது. இந்த வெள்ளத்தில் அனைவரும் அடித்துச் செல்லப் படுவார்கள்.'

சீடர்: 'குருதேவரைப்பற்றி இன்னும் கூறுங்களேன். உங்களிடமிருந்து கேட்க நான் மிகவும் விரும்புகிறேன்.'

சுவாமிஜி: 'இரவுபகலாக அதைத்தானே கேட்டுக் கொண்டிருக்கிறாய்? அவருக்கு இணை அவரே. அவரைப்போல் மற்றொருவர் உண்டா?'

சீடர்: 'அவரைக் காணாத எங்களுக்கு என்ன வழி?'

சுவாமிஜி: 'அவரது திருவருளைப் பெற்ற சாதுக்களின் தொடர்பைப் பெற்றிருக்கிறாய். அப்படி இருக்கும்போது

அவரைப் பார்க்கவில்லை என்று எப்படிச் சொல்லலாம்? அவர் தமது துறவறச் சீடர்களில் வாழ்கிறார். அவர்களுக்குச் சேவை செய்தால், போற்றிப் பணிந்தால், உரிய காலத்தில் அவர் வெளிப்படுவார். உரிய காலத்தில் நீ எல்லாவற்றையும் காண்பாய்.'

சீடர்: 'அவரது அருள் பெற்ற பிறரைப்பற்றிச் சொல் கிறீர்கள்; உங்களைப் பற்றிய அவரது கருத்தைச் சொல்லவே இல்லையே!'

சுவாமிஜி: 'என்னைப்பற்றி என்ன சொல்வேன்? நான் அவரது பூதகணங்களுள் ஒருவன் என்றெண்ணுகிறேன். அவ ரிடமே அவரைப்பற்றி எதையாவது உளறுவேன், அதைக் கேட்டு அவர் சிரிப்பார்.'

இதைச் சொல்லும்போது சுவாமிஜி தம்முள் ஆழ்ந்தவர் போல் அசைவின்றிக் காணப்பட்டார். கங்கையைப் பார்த் தபடியே சிறிது நேரம் பேசாதிருந்தார். மாலை வந்தது. படகு மடத்தை அடைந்தது. 'அந்திவேளையாகிவிட்டது. இந்தப் பிள்ளையை அவனது சொந்த வீட்டிற்கு அழைத்துச் செல்' என்னும் பாடலை சுவாமிஜி மெல்லப் பாடினார்.

பாட்டு முடிந்ததும் சீடரிடம், 'உங்கள் கிழக்கு வங்காளத் தில் இனிய குரல் உடைய பாடகர்கள் பிறக்கவில்லை; கங்கைத் தாயின் நீரைக் குடிக்காமல் இனிய குரல் கிடைக்காது' என்றார்.

படகிற்கான வாடகையை கொடுத்த பின்னர், சுவாமிஜி படகிலிருந்து இறங்கி மடத்தில் சென்று மேற்குத் திண்ணையில் அமர்ந்தார். அவருடைய வெண்ணொளி தவழும் மேனியும் காவி உடையும் கண்களைக் கவர்ந்தன.

## 46

பேலூர் மடம், 1902

மாலை நேரத்திற்குச் சற்று முன்பாக பாலி என்னும் இடத் திலிருந்து சீடர் மடத்திற்கு வந்தார். அலுவல் உடையை மாற்ற நேரமின்றி, அந்த உடையுடனேயே வந்திருந்தார். நேராகச் சென்று சுவாமிஜியின் திருப்பாதங்களில் வீழ்ந்து வணங்கி அவரது உடல்நலத்தை விசாரித்தார். சுவாமிஜி தாம் நன்றா யிருப்பதாகக் கூறிவிட்டுச் சீடர் உடுத்தியிருக்கும் உடை யைக் கவனித்து, 'நீ காற்சட்டையும் கோட்டும் அணிந்திருக் கிறாய். ஏன் காலர் அணிந்து கொள்ளவில்லை?' என்று

கேட்டார். பின்னர் அருகிலிருந்த சுவாமி சாரதானந்தரிடம், 'என்னிடமுள்ளவற்றுள் இவனுக்கு இரண்டு காலர்களை நாளை கொடுங்கள்' என்றார். சுவாமி சாரதானந்தரும் சம்மதித்தார்.

சீடர் அலுவல் உடையை மாற்றிவிட்டு வந்ததும் சுவாமிஜி அவரிடம், 'சுதேச உடையையும், உணவையும், வாழ்க்கை முறையையும் விடுவதால் ஒருவன் படிப்படியாக தேசியத்தை இழந்துவிடுகிறான். எல்லோரிடமிருந்தும் ஒருவன் கற்றுக் கொள்ளலாம். ஆனால் தேசியத்திற்குப் பாதகமான கல்வியால் உன்னதி இல்லை. அது தாழ்வையே தரும்' என்றார்.

சீடர்: 'இன்று ஐரோப்பியர்கள் ஏற்றுக்கொள்ளாத உடையுடன் ஒருவன் வேலைக்குப் போக முடியாதே!'

சுவாமிஜி: 'அதை யாரும் தடுக்கவில்லை. வேலைக்கு, அதற்கு வேண்டிய உடையுடன் போ. திரும்பி வந்ததும் வேட்டி சட்டை என்று பூரணமான வங்காளி பாபுவாகத் திகழ வேண்டும். புரிகிறதா?'

சீடர்: 'ஆம், சுவாமிஜி.'

சுவாமிஜி: 'நீங்கள் சட்டையை மட்டும் அணிந்துகொண்டு வீடுவீடாகப் போகிறீர்கள். மேலை நாட்டில் இது பெரிய தவறு—நிர்வாணமாக இருப்பதாகவே கருதப்படுகிறது. சட்டைக்கு மேல் கோட் அணியாமல் எந்த வீட்டிலும் நீ நுழைய முடியாது. உடை விஷயத்தில் உங்கள் பொருத்த மில்லாத முறை முட்டாள்தனமாக அல்லவா இருக்கிறது! இக்காலச் சிறுவர்களும் வாலிபர்களும் அணியும் உடை இந்திய உடையுமல்ல, மேலை நாட்டு உடையுமல்ல; இரண்டும் சேர்ந்த ஒருவகைக் கலப்பு உடை.'

இவ்வாறு கூறிவிட்டு சுவாமிஜி எழுந்து கங்கைக் கரையில் நடக்கத் துவங்கினார். சீடர் சாதனைபற்றி ஒரு விஷயம் கேட்க எண்ணினார்.

சுவாமிஜி: 'என்ன யோசித்துக் கொண்டிருக்கிறாய்?'

சீடர் சற்று வெட்கத்துடன் கூறினார்: 'சுவாமிஜி, குறுகிய நேரத்தில் மனம் அமைதியாகவும், விரைவில் தியானத்தில் ஆழ்ந்துவிடவும் ஒரு முறையை நீங்கள் எனக்குச் சொல்லித் தந்தால் மிகவும் நல்லது என்று எண்ணிக் கொண்டிருந் தேன். சம்சாரக் குழப்பத்தில் மூழ்கிக் கிடப்பதால் சாதனை களின்போது மனத்தை ஒருநிலைப்படுத்துவது சிரமமாக உள்ளது.'

சீடரின் இயலாமையைக் கண்ட சுவாமிஜி அன்புடன், 'சிறிது நேரங்கழித்து நான் தனித்திருக்கும்போது மாடிக்கு வா; அதைப்பற்றி நான் உனக்குச் சொல்கிறேன்' என்றார்.

சிறிது நேரத்திற்குப் பின்னர், சீடர் சென்றபோது சுவாமிஜி மேற்குமுகமாகத் தியானத்தில் இருப்பதைக் கண்டார். அவர் முகத்தில் ஓர் அற்புதமான அழகு காணப்பட்டது. உடல் அசைவற்று இருந்தது. வியப்பினால் பேச்சற்று, சீடர் அருகில் நின்றார். நீண்ட நேரம் நின்றும் சுவாமிஜியிடம் அசைவுக்குரிய எவ்வித அடையாளமும் இல்லை. அரை மணி நேரங்கழித்து வெளியுணர்வுக்குரிய அடையாளங்கள் தோன்றலாயின. மூடியிருந்த கரங்கள் மெல்ல அசைந்தன. சில நிமிடங்களில் சுவாமிஜி கண்களைத் திறந்து, 'எப்போது வந்தாய்?' என்று கேட்டார்.

சீடர்: 'சற்று முன்தான்.'

சுவாமிஜி: 'நல்லது, ஒரு டம்ளர் தண்ணீர் கொண்டு வா.'

சீடர் சென்று தண்ணீர் கொண்டு வந்தார். சுவாமிஜி சிறிது அதைக் குடித்துவிட்டு, டம்ளரை உரிய இடத்தில் வைக்கும்படிக் கூறினார். சீடர் வைத்துவிட்டு வந்தார்.

சுவாமிஜி: 'இன்று மிக ஆழ்ந்த தியானம் கைகூடியது.'

சீடர்: 'சுவாமிஜி, தயவுசெய்து என் மனமும் தியானத்தில் ஆழ்ந்திருக்க கற்பியுங்கள்.'

சுவாமிஜி: 'எல்லா முறைகளையும் முன்பே உனக்குக் கற்பித்திருக்கிறேன். முறைப்படி ஒவ்வொரு நாளும் தியானம் செய். நாளடைவில் நீ அதை உணர்வாய். நல்லது, உனக்கு எது பிடித்திருக்கிறது?'

சீடர்: 'நீங்கள் கூறியதுபோல் தினமும் செய்கிறேன். ஆனாலும் ஆழ்ந்த தியானம் கைகூடவில்லை. தியானத்தால் என்ன பயன் என்றுகூடச் சிலவேளைகளில் தோன்றுகிறது. எனக்குத் தியானம் கைகூடாது என்றே நினைக்கிறேன். எனவே உங்கள் அருகில் என்றென்றும் இருப்பதை விரும்புகிறேன்.'

சுவாமிஜி: 'இவையெல்லாம் பலவீனத்தின் அடையாளங்கள். உன்னுள் என்றென்றும் இருக்கின்ற ஆன்மாவில் ஆழ்ந்திருக்க முயற்சி செய். ஒருமுறை ஆன்மதரிசனம் கிடைத்துவிட்டால் எல்லாம் சரியாகிவிடும்; பிறப்பு இறப்பு வலை அற்றுப் போய்விடும்.'

சீடர்: 'அந்த நிலையை நான் அடைய ஆசீர்வதியுங்கள். நீங்கள் தனியாக வரச் சொன்னதால் வந்துள்ளேன். எப்படியாவது என் மனத்தை நிலைப்படுத்திவிடுங்கள்.'

சுவாமிஜி: 'நேரம் கிடைக்கும் போதெல்லாம் தியானம் செய். மனம் ஒருமுறை சுழுமுனை வழியாகச்செல்லத் தொடங்கி விடுமானால் எல்லாம் சரியாகிவிடும். அதன்பிறகு நீ அதிகம் ஒன்றும் செய்ய வேண்டுவதில்லை.'

சீடர்: 'பல வழிகளில் நீங்கள் எனக்கு ஊக்கமளிக்கிறீர்கள். ஆனால் நான் உண்மையை என்றாவது காண்பேனா?'

சுவாமிஜி: 'கண்டேயாக வேண்டும். புழு முதல் பிரம்மா வரை அனைவரும் முக்தி பெறும்போது நீ மட்டும் பெறா மலிருக்க முடியுமா? பலவீனங்களுக்கு உன் மனத்தில் இடம் கொடுக்காதே. சிரத்தையுடன் விளங்கு! வீரியசாலியாக இரு! ஆன்மஞானத்தைப் பெறு! பிறர் நலத்துக்காக உன் வாழ்வைத் தியாகம் செய்! இதுவே நான் விரும்புவது, இதுவே என் ஆசீர்வாதம்.'

உணவுக்கான மணி அடித்தது; சீடரையும் உண்ணும்படி சுவாமிஜி கூறினார். சீடர் சுவாமிஜியின் திருவடிகளில் வீழ்ந்து, ஆசீர்வதிக்கும்படி வேண்டினார். சுவாமிஜி தமது கையைச் சீடரின் தலையில் வைத்து, 'என் ஆசீர்வாதம் உனக்குப் பயன் தருவதானால், பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் உன்மீது திருவருள் பொழிவாராக! இதைவிட உயர்ந்த ஆசீர்வாதம் எனக்குத் தெரியாது' என்றார்.

உண்டபின் சீடர் மாடிக்குப் போகவில்லை. ஏனெனில் அன்றிரவு சுவாமிஜி முன்னதாகவே தூங்கிவிட்டார். மறுநாள் காலை, சீடர் வேலை விஷயமாகக் கல்கத்தா திரும்ப வேண்டி யிருந்ததால் மாடிக்கு சுவாமிஜியிடம் சென்றார்.

சுவாமிஜி: 'நீ இப்போதே போகிறாயா?'

சீடர்: 'ஆம்.'

சுவாமிஜி: 'அடுத்த ஞாயிற்றுக்கிழமை வருவாய் அல்லவா?'

சீடர்: 'ஆம். நிச்சயம் வருவேன்.'

சுவாமிஜி: 'நல்லது, அதோ ஒரு படகு வருகிறது.'

சீடர் சுவாமிஜியிடம் விடைபெற்றுக் கொண்டார். தமது இஷ்டதெய்வத்தை மனித உடம்பில் காண்பது அதுவே கடைசி முறை என்பதை அப்போது அவர் அறியவில்லை. சுவாமிஜி அன்பு நிறைந்த உள்ளத்துடன் 'ஞாயிற்றுக்கிழமை வா' என்று கூறி விடை கொடுத்தார். சீடரும் 'சரி, வருகிறேன்' என்று சொல்லிவிட்டுக் கீழே வந்தார். படகோட்டி கூப்பிட்டதால் விரைந்து வந்து படகிலேறும்போது சுவாமிஜி மாடியில்

உலவிக் கொண்டிருப்பதைப் பார்த்து வணங்கிவிட்டுப் படகில் ஏறினார்.

தொடர்ந்த ஏழாம் நாள், சுவாமிஜி இவ்வுலக வாழ்க்கையை நீத்துவிட்டார். இப்படி நிகழப்போவதைச் சீடர் அறியவில்லை. சுவாமிஜி உலக வாழ்வை நீத்ததற்கு இரண்டாம் நாள்தான் சீடர் மடத்திற்கு வர முடிந்தது. எனவே சுவாமிஜியைக் காணும் பேறு அவருக்குக் கிடைக்கவில்லை. ❑

# II

## 1

ஸ்வாமிஜி மேலைநாடுகளில் வெற்றிக்கொடி நாட்டிவிட்டு வந்தபின் அவரை ஒருநாள் தனித்துக் காண வேண்டுமென்றும் சிறுவயதில்போல் அவருடன் கலந்து பேச வேண்டுமென்றும் விரும்பினேன். ஆனால் மக்கள் எப்போதும் கூட்டமாக இருந்ததால் வாய்ப்பு கிடைக்கவில்லை. பல நாட்களுக்குப் பின் ஒருநாள் கங்கைக் கரையிலுள்ள தோட்டத்தில் அவரைச் சந்திக்க முடிந்தது. இளமை நாட்களைப் போலவே அவர் இப்போதும் பேசிக் களித்தார். சிறிது நேரத்தில் ஒருவர் வந்து அவரைச் சந்திக்கச் சிலர் வந்திருப்பதாகக் கூறினார். சுவாமிஜி அவரிடம், 'அப்பா, சற்று நேரம் என்னை இங்கிருக்க விடு. இவர் என் இளமை நண்பர்; இவருடன் சிறிது நேரம் பேசவும், தூய காற்று வீசும் இந்த இடத்தில் நிற்கவும் விரும்புகிறேன். வந்தவர்களை வரவேற்று அமரச் சொல்லி, தாம்பூலம் முதலியவை கொடுத்து, சற்று காத்திருக்கும்படிச் சொல்' என்றார்.

அவர் போன பின்னர், நான் சுவாமிஜியைப் பார்த்து, 'சுவாமிஜி, நீங்கள் ஒரு சாது, உங்கள் வரவேற்பு உபச்சாரத்திற்காகப் பணம் வசூலித்தோம். நீங்கள் கல்கத்தா வருமுன் அங்கிருந்து தந்தியடித்து, ''நம் நாட்டில் இப்போது பஞ்சம் தலைவிரித்தாடுகிறது. எனவே எனது வரவேற்பிற்கு ஒரு காசு கூடச் செலவிட வேண்டாம். மொத்தப் பணத்தையும் பஞ்ச நிவாரண நிதிக்காகக் கொடுத்துவிடுங்கள்'' என்று கூறுவீர்கள் என எண்ணினேன். ஆனால் நீங்கள் அப்படி எதுவும் செய்யவில்லை. ஏன்?'

*சுவாமிஜி:* 'வேண்டுமென்றேதான் நான் அப்படிச் செய்யவில்லை. ஓர் எழுச்சி உண்டாக வேண்டுமென்று விரும்பினேன். ஏன் தெரியுமா? எழுச்சி இல்லாவிட்டால் மக்கள் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரை எப்படி அறிவார்கள்? இது எனக்காகவா ஏற்பட்டது? அவரல்லவா இவற்றால் பெருமை பெறுகிறார்! அவரைப்பற்றி அறிய மக்களின் உள்ளத்தில் எவ்வளவு ஆவல் உண்டாகியிருக்கிறது! இப்போது படிப்படியாக அவரைப்பற்றி அறிவார்கள். அதனால் நாட்டிற்கு நன்மை உண்டாகாதா?

உலகின் நன்மைக்காக வந்த அவரை அறியாமல் மக்களுக்கு எப்படி நன்மை உண்டாகும்? அவரைச் சரியாக அறிந்து கொண்டால் மனிதர்கள் உருவாக்கப்படுவார்கள். அத்தகைய மனிதர்கள் இருக்கும் நாட்டில் பஞ்சத்தையும் பட்டினியையும் விரட்ட எவ்வளவு நேரமாகும்? இதனால்தான் எனக்காகக் கல்கத்தாவில் எழுச்சி உண்டாக வேண்டுமென்று விரும்பினேன். அதன்மூலம் மக்கள் முதலில் ஸ்ரீராமகிருஷ்ணரின் செய்தியை அறிந்து கொள்வார்கள். இல்லாவிடில் இத்தனை ஆடம்பரங்கள் எனக்கு எதற்கு? ஒருகாலத்தில் உன் வீட்டில் வந்து எல்லோருமாக விளையாடுவோமே, அதைவிட நான் பெரியவனாகிவிட்டேனா என்ன? அன்று இருந்ததைப் போல்தான் இன்றும் இருக்கிறேன். ஏன்? என்னிடம் ஏதாவது வேறுபாடு உள்ளதா? சொல்.'

'வேறுபாடு இல்லை' என்று நான் வெளியில் கூறினாலும் உள்ளத்தில், 'நீங்கள் இப்போது தெய்வத் தன்மை பெற்று விட்டீர்கள்' என்று எண்ணிக் கொண்டேன்.

சுவாமிஜி தொடர்ந்தார்: 'பஞ்சம் என்பது நமது நாட்டைப் பொறுத்தவரை ஒரு தீராத வியாதியாகவே ஆகிவிட்டது. வெளிநாடுகளில் எங்காவது இதுபோல் இருக்கிறதா? இல்லை. ஏன்? ஏனெனில் அங்கெல்லாம் மனிதர்கள் வாழ்கிறார்கள்; இங்கோ நடைப்பிணங்கள்தாம் வாழ்கின்றன. ஸ்ரீராமகிருஷ்ணரைப் படித்து, அவரை அறிந்து, தன்னலத்தைத் துறக்க அவர்கள் முதலில் கற்றுக் கொள்ளட்டும். அதன்பிறகே பஞ்ச நிவாரணத்திற்கான சரியான முயற்சிகள் செய்யப்படும். நானும் மெள்ள மெள்ள அந்த முயற்சியில் ஈடுபட எண்ணியுள்ளேன். அதை நீங்களே பார்ப்பீர்கள்.'

நான்: 'நல்லது. நீங்கள் இங்கே பல சொற்பொழிவுகள் ஆற்றுவீர்கள் என்று நம்புகிறேன். இல்லாவிடில் அவரது பெயர் எப்படிப் பரவும்?'

சுவாமிஜி: 'என்ன முட்டாள்தனம்! அவருடைய திருப்பெயர் பரவுவதற்கு இனி ஏதாவது முயற்சிகள் பாக்கியிருக்கிறதா என்ன? சொற்பொழிவால் இந்த நாட்டில் எதுவும் நடக்காது. பெரிய மனிதர்கள் வந்து கேட்பார்கள். ''ஆகா அற்புதம்'' என்பார்கள். பிரமாதமாகக் கைதட்டுவார்கள். பின்னர் நேராக வீடு சென்று, கேட்ட அனைத்தையும் உண்ணும் உணவுடன் ஜீரணித்து விடுவார்கள். துருப்பிடித்த பழைய இரும்பை மீண்டும்மீண்டும் சுத்தியலால் அடிப்பதால் என்ன பயன்? அது

நொறுங்கிப் பொடிப்பொடியாகப் போகும். முதலில் பழுக்கக் காய்ச்ச வேண்டும். அதன்பிறகு சுத்தியலால் அடித்தால் நாம் வேண்டிய உருவத்தைச் செய்யலாம். அற்புதமான ஒரு வாழ்வை மக்களின் கண் முன்னால் காண்பிக்காமல் இந்த நாட்டில் ஒரு பயனும் விளையப் போவதில்லை. நாட்டிற்காகத் தங்கள் வாழ்வையும் மற்றும் அனைத்தையும் துறக்கத் தயாரான சில இளைஞர்கள் இப்போது வேண்டும். முதலில் நாம் அவர்களின் வாழ்க்கையை உருவாக்க வேண்டும். அதன் பின்னரே உண்மையான முன்னேற்றம் உண்டாகும்.'

நான்: 'சுவாமிஜி, நமது நாட்டினர் சொந்த மதத்தின் உண்மையைப் புரிந்துகொள்ளாமல் கிறிஸ்தவம், இஸ்லாம் போன்ற பிற மதங்களைத் தழுவுகிறார்களே? அவர்களுக்காக ஏதாவது செய்வதை விட்டுவிட்டு நீங்கள் அமெரிக்காவிலும் இங்கிலாந்திலும் இந்து மதத்தைப் பிரச்சாரம் செய்தது ஏன்?'

சுவாமிஜி: 'உண்மையான மதத்தைப் பின்பற்ற உங்கள் மக்களிடம் ஏதாவது ஆற்றல் எஞ்சியிருக்கிறதா என்ன? நாங்கள் பெரிய சாத்வீகர்கள் என்னும் வீண் கர்வம் மட்டுமே அவர்களிடம் உள்ளது. ஒருகாலத்தில் அவர்கள் உண்மையில் சாத்வீகர்களாக இருக்கவே செய்தார்கள். அதில் சற்றும் ஐயமில்லை. ஆனால் இப்போது மிகவும் கீழ்நிலைக்குப் போய் விட்டார்கள். சத்வ நிலையிலிருந்து விழுபவர்கள் சென்று சேர்வது நேராகத் தமோ குணத்திலேயே. அதுதான் இவர்களுக்கும் நடந்திருக்கிறது. வெறுமனே தன்னை ஓர் அறைக்குள் அடைத்துக்கொண்டு, ஹரி நாமத்தைச் சொல்லிக்கொண்டு, வெளியில் நடக்கும் தவறுகளையும் அராஜகங்களையும் தடுக்கச் சற்றும் முயற்சி செய்யாமல் இருந்துவிட்டால் அவன் சத்வ குணம் நிறைந்தவன் என்று நீ நினைப்பதாகத் தோன்றுகிறது. இல்லவே இல்லை. அவன் ஆழ்ந்த தமோ குண இருளில் மூழ்கிக் கிடக்கிறான்.

'பசிக்கே உணவில்லாத ஒரு நாட்டு மக்கள் மதத்தை எவ்வாறு கடைப்பிடிக்க முடியும்? போகங்களுக்காக ஆசைப் பட்டு, அதைச் சற்றும் திருப்திப்படுத்த முடியாத மக்களிடம் துறவு என்பதை எப்படி எதிர்பார்க்க முடியும்? எனவே முதலில் மனிதன் உண்ணவும் வாழ்வின் இன்பங்களைச் சற்று அனுபவிக்கவும் வழி செய்யுங்கள். அப்போதுதான் படிப்படியாக வைராக்கியம் வரும். அதன்பிறகே அவர்கள் ஆன்மீக வாழ்வில் ஈடுபட முடியும். ஆங்கிலேயரும் அமெரிக்கரும் எவ்வளவு

ரஜோ குணம் பொருந்தியவர்களாக இருக்கிறார்கள்! உலகின் எல்லாவிதமான இன்ப நுகர்ச்சியிலும் அவர்கள் எல்லை கண்டு விட்டார்கள். அவர்களுடைய மதம் கிறிஸ்தவ மதம்; வெறும் மூட நம்பிக்கையும் பக்தியும் நிறைந்ததே அந்த மதம். அது நமது புராண மதத்தைப் போன்றதே. கல்வி வளர்ந்ததால் அவர்கள் அமைதி பெற்றுவிடவில்லை. ஒரு குதி குதித்தாலே சத்துவத்தை அடையும் நிலையில் அவர்கள் இருக்கிறார்கள். வெள்ளைத் தோலுடைய ஒருவன் வந்து சொன்னால், அவன் சொல்வதை ஆமோதிப்பதுபோல், ஒரு கிழிந்த கந்தையணிந்த துறவி சொல்வதை ஆமோதிப்பார்களா என்ன?'

நான்: 'என்.என்.கோஷும்![1] அப்படித்தான் சொல்கிறார்.'

சுவாமிஜி: 'எனது மேலைநாட்டுச் சீடர்கள் தகுந்த பயிற்சி பெற்று இங்கு வந்து உங்களிடம் ''நீங்களெல்லோரும் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? உங்கள் மதம், சடங்குகள், பழக்க வழக்கங்கள் இவை எந்த விதத்தில் தாழ்ந்தவை? நாங்கள்கூட உங்கள் மதத்தை உயர்ந்ததாக எண்ணுகிறோமே!'' என்று கேட்கும்போதுதான் நமது பெரிய மனிதர்கள் அதைக் கேட்பார்கள். இவ்வாறு அவர்கள்மூலம் இந்த நாட்டிற்கு மிகுந்த நன்மை உண்டாகும். அவர்கள் மதகுருக்களாக ஆவதற்காகத் தான் இங்கே வருவதாக எண்ணிவிடாதீர்கள். விஞ்ஞானம் முதலிய உலக விஷயங்களைப் பொறுத்தவரையில் அவர்கள் உங்கள் குருவாக இருப்பார்கள். மதத்தைப் பொறுத்த வரையில் நம்மவர்களே அவர்களின் குரு. இந்தியா மற்றும் பிற நாடுகளின் இந்த குரு-சீடர் தொடர்பு என்றென்றும் நின்று நிலவும்.'

நான்: 'அது எப்படி முடியும் சுவாமிஜி? அவர்கள் நம்மை வெறுப்பதைப் பார்த்தால், சுயநலமின்றி அவர்கள் நமக்கு நன்மை செய்வார்கள் என்று எண்ணச் சிறிதும் இடம் இல்லை.'

சுவாமிஜி: 'அவர்கள் நம்மை வெறுப்பதற்குப் பல காரணங்கள் உள்ளன. அதனால்தான் வெறுக்கிறார்கள். முதலில் நாம் ஒரு வெல்லப்பட்ட இனம். மேலும் நம்மைப் போன்ற ஒரு பிச்சைக்காரக் கூட்டத்தை வேறு எங்கும் காண முடியாது. உயர்ந்த ஜாதியினரின் அராஜகத்தால் தாழ்ந்த ஜாதியினர் காலங்காலமாக அடியும் உதையும்பட்டு, மனிதத் தன்மையை அறவே இழந்து, கையேந்துவதையே வாழ்க்கையாகவும்

---

1. கல்கத்தாவின் பிரபல வழக்கறிஞரும், பத்திரிகை ஆசிரியரும், கல்வியாளருமான ஒருவர்.

தொழிலாகவும் கொண்டுவிட்டனர். அதற்கு மேல்படியிலுள்ள வர்களோ ஆங்கிலத்தில் ஓரிரு வரிகளை அங்குமிங்கும் படித்து விட்டு, விண்ணப்பங்களைக் கையில் வைத்துக்கொண்டு எல்லா வாசல்களிலும் காத்துக் கிடக்கிறார்கள். இருபது ரூபாய் வரு மானம் உள்ள ஒரு வேலை காலியானால் ஐநூறு பி.ஏ.க்களும் எம்.ஏ.க்களும் விண்ணப்பிக்கிறார்கள். அந்தோ! அந்த விண்ணப் பங்களிலுள்ள விவரங்களைப் படிக்கவே கூசும்: ''ஐயா, வீட்டில் சாப்பிட எதுவும் இல்லை. மனைவியும் மக்களும் பட்டினியாகக் கிடக்கிறார்கள். மிகவும் பணிவன்புடன் உங்களிடம் மன்றாடு கிறேன். என்னையும் என் குடும்பத்தினரையும் கருணை கூர்ந்து காப்பாற்றுங்கள். இல்லாவிட்டால் நாங்கள் தொலைந்தோம்.'' வேலையில் சேர்ந்துவிட்ட உடனே சுயமரியாதையைச் சுத்த மாகக் காற்றில் பறக்க விடுகிறார்கள். அடிமையைவிடக் கேவல மான நிலை! உயர்ந்த கல்வி பெற்றவர்களோ சில சங்கங்களைக் கூட்டி, ''ஐயோ, இந்தியா நாளுக்கு நாள் அழிந்து கொண்டிருக் கிறது. ஓ ஆங்கிலேயர்களே, எங்கள் நாட்டினருக்கு வேலை கொடுங்கள். எங்களை இந்த இக்கட்டிலிருந்து விடுவியுங்கள்'' என்றெல்லாம் ஓலமிடுகிறார்கள். தா, தா என்பதே இரவும் பகலும் விண்ணையும் மண்ணையும் அதிரச் செய்யும் கூச்சல்— ''ஆங்கிலேயர்களே! கொடுங்கள், இன்னும் கொடுங்கள்!'' அடக் கடவுளே! இன்னும் உங்களுக்கு அவர்கள் என்ன தர வேண்டும்? ரயிலைத் தந்துள்ளார்கள், தந்தி தந்துள்ளார்கள், நாட்டை உறுதிப்படுத்தியுள்ளார்கள், கொள்ளைக்காரர்களை ஏறக் குறைய ஒழித்துவிட்டார்கள், விஞ்ஞானக் கல்வி தந்துள்ளார் கள். இன்னும் என்ன தர வேண்டும்? தன்னலமேயில்லாமல் யாராவது கொடுத்துக்கொண்டே இருப்பார்களா? நல்லது, அவர்கள் இவ்வளவையும் கொடுத்து விட்டார்கள். இப்போது நான் கேட்கிறேன். அவர்களுக்கு நீங்கள் என்ன கொடுத்ீர்கள்?'

நான்: 'நம்மிடம் கொடுப்பதற்கு என்ன இருக்கிறது சுவாமிஜி? வரிப்பணம் கொடுக்கிறோம்.'

சுவாமிஜி: 'உண்மையாகவா? நீங்களே மனம் உவந்து கொடுக்கிறீர்களா? நாட்டைக் காப்பதற்காக, அவர்களே உங் களைச் செருப்பால் அடித்தல்லவா வாங்குகிறார்கள்! அவர்கள் தந்த அனைத்திற்கும் பிரதியாக நீங்கள் எதைத்தான் கொடுத் தீர்கள்? சொல்லுங்கள். அவர்களிடம் இல்லாத, அதேவேளை யில், நீங்கள் கொடுக்கத் தக்க ஒன்று உங்களிடம் உள்ளது. நீங்கள் இங்கிலாந்திற்குப் போவீர்கள். எதற்காக? கையேந்தத்

தான்; கல்வி கொடுங்கள் என்று பிச்சை கேட்கத்தான். சிலர் அங்கே போகிறார்கள். ஆங்கிலேயர்களுடைய மதமே சிறந்த தென்று பிரமாதமாகப் பேசிவிட்டு வருகிறார்கள், பெரிய மனிதர்களாகிவிடுகிறார்கள். அப்பப்பா, என்ன சாதனை! ஏன், உங்களிடம் கொடுக்க ஒன்றுமே இல்லையா? விலைமதிப்பற்ற செல்வம் உங்களிடம் உள்ளது. மதத்தைக் கொடுங்கள்! மன இயலைக் கொடுங்கள்! உலக வரலாற்றைப் படித்துப் பாருங்கள். உலகின் உன்னதமான லட்சியங்கள் எல்லாமே இந்தியாவி லிருந்தே சென்றிருப்பதைக் காண்பீர்கள். நீண்ட நெடுங் காலம் முதலே மனித சமுதாயத்திற்கான அறிவுச் சுரங்கமாக இந்தியாவே இருந்து வந்திருக்கிறது. உன்னதமான லட்சியங் களை உருவாக்கி, உலகம் முழுவதற்கும் அவற்றை வழங்கி வந்திருக்கிறது. அந்த உயர்ந்த லட்சியங்களை, வேதாந்த ஞானத்தை, உங்கள் சனாதன தர்மத்தின் ஆழ்ந்த ரகசியங்களை அறிவதற்காக ஆங்கிலேயர்கள் இப்போது இந்தியாவிற்கு வந்துள்ளனர். அவர்களிடமிருந்து பெற்றதற்குப் பிரதியாக இந்த விலைமதிப்பிட முடியாத ரத்தினங்களை அளியுங்கள்.

'உங்கள்மீதுள்ள பிச்சைக்கார முத்திரையை அழிக்கவே இறைவன் என்னை அந்த நாட்டிற்கு அழைத்துச் சென்றான். வெறுமனே கையேந்துவதற்காக மேலைநாடு செல்வது சரியல்ல. அவர்கள் ஏன் நமக்குத் தந்துகொண்டே இருக்க வேண்டும்? அப்படி யாராவது கொடுத்துக்கொண்டே இருப்பார்களா என்ன? பிச்சைக்காரனைப்போல் எப்போதும் நீட்டிய கைகளுடன் இருப்பது உலகின் நியதியல்ல; கொடுக்கல்-வாங்கல் என்பதே உலகின் நியதி. இந்த நியதியைப் பின்பற்றாத தனி மனிதனோ சமுதாயமோ நாடோ முன்னேறுவதில்லை. நாமும் அந்த நியதியைக் கடைப்பிடித்தாக வேண்டும். அதனால்தான் நான் அமெரிக்கா சென்றேன். என்னைப்போல் ஆயிரக்கணக் கானோர் சென்றாலும் தணிக்க முடியாத அளவுக்கு இப்போது அவர்களிடம் ஆன்மீக தாகம் உள்ளது. அவர்களிடம் இருக்கும் செல்வத்தை நீண்ட நாட்களாக நமக்குத் தந்து கொண்டிருக் கிறார்கள். இப்போது நீங்கள் உங்களிடமுள்ள விலைமதிப்பற்ற ரத்தினத்தை அவர்களுக்குக் கொடுக்க வேண்டும். அப்போது அவர்களுக்கு உங்களிடமிருந்து வெறுப்பு விலகி மரியாதையும் பக்தியும் ஈடுபடும் உண்டாகும். கேட்காமலேயே அவர்கள் உங்களுக்கு நன்மை செய்வார்கள். அவர்கள் வீரர்களின் இனம்—செய்நன்றி மறக்க மாட்டார்கள்.'

நான்: 'மேலைநாட்டில் நமது குணநலன்களைப் புகழ்ந்து கூறியுள்ளீர்கள். நமது மதச் சார்பை எடுத்துக் காட்டியுள்ளீர்கள். இப்போதோ நாம் தமோ குணத்தில் ஆழ்ந்திருக்கிறோம் என்கிறீர்கள். அதேவேளையில், நாம் ரிஷிகள் தந்த சனாதன தர்மத்தை உலகிற்கு வழங்குகின்ற ஆசிரியர் என்றும் புகழ்கிறீர்கள். அது எப்படி?'

சுவாமிஜி: 'நான் நாடுநாடாகச் சென்று உங்கள் குறைபாடுகளைக் கூற வேண்டுமா, இல்லை உங்களிடம் உள்ள குணங்களை எடுத்துக்காட்ட வேண்டுமா? என்ன சொல்கிறீர்கள்? ஒருவனிடமுள்ள குறைபாடுகளை நேராக அவனிடம் கூறி, அவனை உணரச் செய்ய வேண்டும். அவனது நல்ல குணங்களைப் பிறர்முன் புகழவும் வேண்டும். ''தீயவனை நல்லவன், நல்லவன் என்று பலமுறை கூறுவதால் அவன் நல்லவன் ஆகிறான். அதுபோல் நல்லவனைப் பலமுறை தீயவன், தீயவன் என்று சொன்னால் அவன் தீயவன் ஆகிறான்' என்று குருதேவர் கூறுவது வழக்கம். மேலை நாட்டினரின் குறைகளை வேண்டிய அளவிற்கு நான் அவர்களிடமே கூறிவிட்டேன். ஒன்றை நன்றாக நினைவில் கொள்ளுங்கள்—எனக்குமுன் மேலை நாடு சென்ற அனைவரும் அவர்களைப் புகழ்ந்து பாராட்டிவிட்டே வந்தார்கள். அது மட்டுமல்லாமல் நமது குறைகளை வேண்டிய மட்டும் தம்பட்டமடித்தும் விட்டார்கள். அதன் விளைவாக மேலைநாட்டினர் நம்மை வெறுக்கக் கற்றுக் கொண்டார்கள். நான் சென்று உங்களிடமுள்ள நற்குணங்களையும் அவர்களிடமுள்ள தீய குணங்களையும் எடுத்துக் காட்டினேன். நீங்கள் எவ்வளவுதான் தமோ குணத்தில் ஆழ்ந்திருந்தாலும் புராதன ரிஷிகளின் இயல்பு உங்களிடம் சிறிதளவேனும் இருக்கவே செய்கிறது—ஒன்றுமில்லாவிட்டால் வெறும் வெளிப்பூச்சாவது இருக்கிறது. அதற்காக, நாம் உடனே குருவாகி மேலை நாடுகளுக்குச் சென்று போதிக்க முடியும் என்பது பொருளல்ல. முதலில் தனிமையில் வாழ்ந்து தன்னை ஆன்மீக வாழ்வில் நிலைநிறுத்திக்கொள்ள வேண்டும்; பரிபூரணத் தியாகியாக வேண்டும்; வழுவாத பிரம்மச்சரியம் வேண்டும். உங்களிடம் தமோ குணம் புகுந்துவிட்டது. அதனால் என்ன? அதை அழிக்க முடியாதா? ஒரு நிமிடத்தில் அதை அழித்துவிடலாம். இந்தத் தமோ குணத்தை அழிப்பதற்காகவே அல்லவா ஸ்ரீராம கிருஷ்ணர் தோன்றினார்!'

நான்: 'உங்களைப்போல் ஆக முடியுமா என்ன?'

சுவாமிஜி: 'நான் இறந்துவிட்டால் விவேகானந்தர்களே இல்லாமல் போய்விடுவார்கள் என்று எண்ணுகிறீர்களா? போதைப் பொருட்களையும் மருந்துகளையும் சாப்பிட்டுவிட்டு, போதை தலைக்கேறிய ஓர் இளைஞர்கள் கூட்டம், சற்று முன்பு இங்கே வந்து வெறியுடன் ஆட்டம் போட்டுச் சென்றதே, அந்த உதவாக்கரைகள் ஒவ்வொன்றும், இறைவனின் விருப்பம் இருந்தால், ஒவ்வொரு விவேகானந்தராகி விடுவார்கள். தேவையிருந்தால் விவேகானந்தர்களுக்குப் பஞ்சமே இருக்காது—ஆயிரக்கணக்கில் லட்சக்கணக்கில் தோன்றுவார்கள். எங்கிருந்து தோன்றுவார்கள்? அது யாருக்குத் தெரியும்? நான் செய்த வேலைகளெல்லாம் வெறும் விவேகானந்தனின் வேலையல்ல; அது அவரது வேலை. மன்னாதி மன்னனான குருதேவரின் சொந்த வேலை! ஒரு கவர்னர் ஓய்வு பெற்றால் இன்னொரு கவர்னர் கண்டிப்பாக அந்த இடத்திற்கு வரவே செய்வார். நீங்கள் எவ்வளவுதான் தமோ குணத்தில் மூழ்கிக் கிடந்தாலும் அவரது திருப்பாதங்களில் இதயபூர்வமாகச் சரணடைந்து விட்டீர்களானால், அவையெல்லாம் ஒழிந்துவிடும். காலம் இப்போது கனிந்துள்ளது. உலகியல் நோயைத் தீர்க்கும் மருத்துவர் வந்துள்ளார். அவரது திருநாமத்தைச் சொல்லி நீங்கள் வேலையை ஆரம்பித்தால் அவரே அனைத்தையும் நிறைவேற்றுவார். தமோ குணமே சத்வ குணமாக மாற்றப் பட்டுவிடும்.'

நான்: 'நீங்கள் என்ன சொன்னாலும் சரி. இதை என்னால் நம்ப முடியாது. தத்துவ உண்மைகளைச் சொல்வன்மையுடன் உங்களைப்போல் கூற யாரால் முடியும்?'

சுவாமிஜி: 'உங்களுக்குத் தெரியாது. அந்தத் திறமை எல்லோருக்கும் வர முடியும். இறையனுபூதிக்காகப் பன்னிரண்டு வருடங்கள் பிரம்மச்சரியம் காக்கும் யாருக்கும் இந்த ஆற்றல் வரும். நான் அத்தகைய பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடித்தேன். அதனால் என் மனத்திலிருந்து ஒரு திரை விலகிவிட்டது. அதனால்தான் தத்துவம் போன்ற நுட்பமான விஷயங்களைப் பற்றிச் சொற்பொழிவாற்ற நான் பெரிதாகச் சிந்திக்க வேண்டுவதில்லை. நாளை சொற்பொழிவாற்ற வேண்டுமென்றிருந்தால், எனது சொற்பொழிவுக்கான பொருள் சித்திரங்கள்போல் இன்றிரவு என் கண்முன் தோன்றும். அவற்றை மறுநாள் பேசுவேன், அவ்வளவுதான். இந்த விஷயத்தில் எனது சொந்தப் பெருமை எதுவுமில்லை என்பதை இதிலிருந்து புரிந்து

கொண்டிருப்பீர்கள். பன்னிரு வருடங்கள் வழுவாத பிரம்மச் சரியம் காக்கும் யாருக்கும் இந்த ஆற்றல் வந்தே தீரும். நீங்கள் காத்தால் உங்களுக்கும் வரும். இவர் மட்டும்தான் அடைவார், அவர் அடைய மாட்டார் என்று நமது சாஸ்திரங்கள் கூறவே இல்லை.'

நான்: 'சுவாமிஜி, நீங்கள் துறவியாகுமுன்னர் ஒரு நாள் ஒருவரின் வீட்டில் நாம் அமர்ந்திருந்தோம். அப்போது சமாதி நிலையைப்பற்றி எங்களுக்குக் கூறினீர்களே, நினைவிருக்கிறதா? அதை நம்பாமல் நான், ''இந்தக் கலியுகத்தில் அதையெல்லாம் அடைய முடியாது'' என்று கூறியதும் நீங்கள், ''உனக்குச் சமாதி நிலையை அடையவேண்டுமா? நான் அதை அடைந் திருக்கிறேன். நீயும் அதைப் பெறுமாறு செய்ய என்னால் முடியும்'' என்று சொன்னீர்கள். நீங்கள் அதைக் கூறி முடிக்கு முன் யாரோ ஒருவர் அங்கு வந்தார், எனவே மேலே தொடர முடியவில்லை.'

சுவாமிஜி: 'ஆம் எனக்கு நினைவுள்ளது.'

நான் மீண்டும் ஒருமுறை சமாதி நிலையை அருளும்படி வற்புறுத்திக் கேட்டபோது அவர், 'நண்பா, பல ஆண்டுகளாக இடைவிடாமல் சொற்பொழிவாற்றியதாலும், வேலை செய்த தாலும் என்னிடம் ரஜோகுணம் மேலோங்கிவிட்டது. எனவே அந்த ஆற்றல் தற்போது மூடிக்கிடக்கிறது. இந்த வேலைகள் அனைத்தையும் விட்டுவிட்டு இமாலயத்தில் சென்று அமர்ந் தேனானால் அந்த ஆற்றல் வெளிப்படும்' என்று கூறினார்.

2

'ஓரிரு நாட்களுக்குப் பின், சுவாமிஜியைத் தரிசிப்பதற்காக நான் வீட்டிலிருந்து புறப்பட்டபோது, சுவாமிஜியிடமிருந்து பிராணாயாமத்தைக் கற்றுக் கொள்வதற்காகச் செல்லும் எனது நண்பர்கள் இருவரைக் கண்டேன். கோயிலுக்கோ, துறவிகளைப் பார்க்கவோ செல்லும்போது வெறுங்கையுடன் செல்லக் கூடாது என்பதை நான் கேள்விப்பட்டிருந்தேன். எனவே நாங் கள் சில பழங்களையும் இனிப்பையும் எடுத்துச் சென்றோம். சுவாமிஜி அதைக் கைகளில் வாங்கி, தலைக்குமேல் உயர்த் தினார். நாங்கள் அவரை வணங்குமுன் அவர் எங்களை வணங் கினார். என்னுடன் வந்த நண்பர்களுள் ஒருவர் சுவாமிஜியுடன் படித்தவர். சுவாமிஜி உடனே அவரைத் தெரிந்துகொண்டு நலம் விசாரித்தார். பின்னர் அருகில் அமரச் செய்தார். சுவாமிஜியைப் பார்க்கவும் அவரது பேச்சைக் கேட்கவும் பலர் வந்திருந்தனர்.

யாரோ ஒருவர் கேட்ட சில கேள்விகளுக்குப் பதில் அளித்த பின் பிராணாயாமத்தைப்பற்றித் தாமாகவே பேச ஆரம்பித்தார் சுவாமிஜி. முதலில் மனத்திலிருந்தே ஜடப் பொருள் தோன்றியதை நவீன விஞ்ஞானத்தின்மூலம் விளக்கி, பின்னர் பிராணாயாமத்தை விளக்கினார். நாங்கள் மூவரும் அவரது ராஜயோகம் என்ற நூலை நன்றாகப் படித்திருந்தோம். ஆனால் அன்று அவர் பேசியதைக் கேட்ட பிறகு, அவரது சிந்தனைக் கருவூலத்தின் ஏதோ சிறு பகுதி மட்டுமே அந்த நூலில் உள்ளது என்றே எனக்குத் தோன்றியது.

பிற்பகல் மூன்றரை மணிமுதல் மாலை ஏழரை வரையில் பிராணாயாமம் பற்றிய பேச்சே நிகழ்ந்தது. கூட்டம் கலைந்ததும் நாங்களும் திரும்பிவிட்டோம். வழியில் நண்பர்கள் என்னிடம், 'எங்கள் மனத்திலிருந்த கேள்விகளை சுவாமிஜி எவ்வாறு அறிந்தார்? நீங்கள் ஏற்கனவே அவருக்குக் கூறியிருந்தீர்களா?' என்று கேட்டார்கள்.

சில நாட்களுக்குப் பிறகு நான் சுவாமிஜியை பாக்பஜாரில் காலம் சென்ற பிரியநாத் முகர்ஜியின் வீட்டில் சந்தித்தேன். சுவாமி பிரம்மானந்தர், சுவாமி யோகானந்தர், கிரீஷ் சந்திர கோஷ், அதுல் பாபு மற்றும் ஓரிரு நண்பர்கள் அங்கிருந்தனர். நான் சுவாமிஜியிடம், 'அன்று உங்களைச் சந்தித்தவர்கள் இருவரும் உங்கள் ராஜயோகம் என்னும் நூலைப் படித்தவர்கள். பிராணாயாமம் பற்றிய சில கேள்விகளை உங்களிடம் கேட்க எண்ணியிருந்தார்கள். என்னிடம் அதைப்பற்றிக் கூறினார்கள். ஆனால் அன்று அவர்கள் கேட்குமுன் நீங்களே அதை ஆரம்பித்து அவர்களின் பிரச்சினைகளைத் தீர்த்துவிட்டீர்கள். அவர்கள் மிகவும் ஆச்சரியப்பட்டார்கள். நான் அதை ஏற்கனவே உங்களிடம் தெரிவித்திருந்தேனா என்று கேட்டார்கள், என்றேன்.'

சுவாமிஜி: நான் மேலை நாட்டில் இருந்தபோது இதே போல் பலமுறை நிகழ்ந்தது. மக்கள் பலமுறை என்னிடம், ''எங்கள் மனத்திலுள்ள கேள்விகளை நீங்கள் எப்படி அறிந்தீர்கள்?'' என்று கேட்பார்கள். இது என்னிடம் அடிக்கடி நிகழ்வதில்லை; ஆனால் குருதேவரிடம் எப்போதும் நடந்தது.'

அதுல் பாபு: 'ராஜயோகம் என்னும் நூலில் ஒருவன் தனது பழைய பிறவிகளையெல்லாம் அறிய முடியும் என்று கூறியுள்ளீர்கள். உங்கள் பழைய பிறவிகள் உங்களுக்குத் தெரியுமா?'

சுவாமிஜி: 'ஆம், தெரியும்.'

அதுல் பாபு: 'எங்களுக்கு அதைச் சொல்வதில் தடை ஏதாவது உண்டா?'

சுவாமிஜி: 'நான் அவற்றை அறிய முடியும். அறியவும் செய்கிறேன். ஆனால் விவரங்களைச் சொல்ல மாட்டேன்.'

3

ஜூலை 1898. ஒரு நாள் மாலை. பேலூரில் நீலாம்பர் முகர்ஜியின் தோட்ட மாளிகையிலுள்ள மடம். சுவாமிஜி தமது சீடர்களுடன் தியானத்தில் ஆழ்ந்திருந்தார். தியானம் முடிந்ததும் அனைவரும் ஓர் அறையில் வந்து அமர்ந்தார்கள். பலத்த மழை பெய்தது. சில்லென்ற காற்று வீசியது. சுவாமிஜி கதவை மூடி விட்டு, தம்புராவை மீட்டிப் பாட ஆரம்பித்தார். பாடல் முடிந்ததும் இசையைப்பற்றி நீண்ட உரையாடல் நிகழ்ந்தது. சுவாமி சிவானந்தர், 'மேலை நாட்டு இசை எப்படி இருக்கும்?' என்று கேட்டார்.

சுவாமிஜி: 'ஓ, அது மிகவும் நன்றாக இருக்கும். நம்மிடம் இல்லாத ஓர் இயைபின் (Harmony) நிறைவு அதில் இருக்கும். ஆனால் அதில் பழக்கப்படாத நம் காதுகளுக்கு அது இனிமையாக இருக்காது. அவர்கள் வெறுமனே நரிபோல் ஊளையிடுவதாகவே நானும் எண்ணியிருந்தேன். அதை நுட்பமாகக் கவனித்துக் கேட்டுப் புரிந்துகொள்ள ஆரம்பித்தபோது திகைத்துப் போனேன். மெள்ளமெள்ள அதனால் மிகவும் கவரப் பட்டுவிட்டேன். எல்லா கலைகளின் விஷயமும் இப்படியே. மேலோட்டமாக ஒருமுறை பார்ப்பதால், உன்னதமான ஓவியங்களில் எதுவும் புரிந்துகொள்ள முடியாது. கண்கள் அந்த வழியில் சிறிதேனும் பழக்கப்படாமல், அதன் நெளிவுசுளிவுகள் எதனையும் அறிய இயலாது.

'நமது நாட்டின் உண்மையான இசை கீர்த்தனத்திலும் துருபதத்திலும்தான் உள்ளது, மற்றவை முகமதிய முறைகளைப் பின்பற்றி உருக்குலைந்துவிட்டன. நாசியிலிருந்து எழும் ஓசையுடன் ஒரு சுவரத்திலிருந்து மற்றொன்றிற்குக் குதித்துக்குதித்துப் பாய்கிற ''தப்பா'' பாடல்கள்தான் முதல்தரமான சங்கீதம் என்று நீங்கள் எண்ணுகிறீர்கள். அப்படி இல்லை. ஒவ்வொரு சுவரத்திற்கும் பூரண எழுச்சி கொடுத்துப் பாடாவிட்டால் சங்கீதம் ஒரு விஞ்ஞானமாக இல்லாமல் போய்விடும். இயற்கையுடன் இயைந்திருக்கும் வண்ணம் நீங்கள் ஓவியங்களை எப்படி வரைந்தாலும் அவை நன்றாகவே இருக்கும், மோசமாக

இருக்காது. அதைப் போலவே இசையும், சாஸ்திரப் பாதையிலிருந்து விலகாத வண்ணம் எப்படிப் பாடினாலும் கேட்க இன்பமாகவே இருக்கும். முகமதியர்கள் இந்தியாவிற்கு வந்த பின்னரே ராகங்களையும் ராகினிகளையும் கற்றுக்கொண்டனர். ஆனால் தப்பா பாடல்களை அவர்களுக்கே உரிய முறையில் அமைத்ததால் அதன் விஞ்ஞானம், அந்தச் சாஸ்திரம் சீர் குலைந்து விட்டது.'

கேள்வி: 'சங்கீத சாஸ்திரம் சீர்குலைந்து விட்டது என்றா சொல்கிறீர்கள்? ஏன், தப்பா பாடலை எல்லோரும் விரும்பத் தானே செய்கிறார்கள்!'

சுவாமிஜி: 'சில்வண்டின் ரீங்காரம்கூட நன்றாகத் தானிருக்கிறது. சந்தால்களைப் பொறுத்தவரை அவர்களின் இசையே உலகில் முதல்தரமானது. மிகவும் விரைவாக ஒரு சுவரம் மற்றொன்றைத் தொடரும்போது இசையின் இனிமை கெடுவது மட்டுமின்றி முரண்பட்ட ஓசைகளையும் எழுப்புகிறது. ஏழு சுவரங்களின் பல்வேறுவிதமான சேர்க்கையால்தானே ராகங்களும் ராகினிகளும் பிறக்கின்றன. அப்படியிருக்கும்போது, தப்பா முறையில் ஒரு சுவர வரிசையில் பொருந்தாத புதிய ராகத்தை எழுப்பி, வீணாக இழுத்து, குரலையும் மிக உயர்த்துவதால் ராகம் எவ்வாறு கலப்பின்றித் தோன்ற முடியும்? மேலும், இனிமை பயக்குமென்று எண்ணி, தொடர்ந்து, பெரிய மற்றும் சிறிய சுவரங்களை மாற்றிப் பாடுவதால் இசையின் நயம் கெட்டு விடுகிறது. தப்பா முறை வந்தது முதல், உயர்ந்த எண்ணங்களை வெளிப்படுத்திப் பாடும் இசை நம் நாட்டிலிருந்தே மறைந்து விட்டது. தற்போது நாடக அரங்குகளில் வருகின்ற திருத்தங்களால் சற்று முன்னேறியுள்ளது. ஆனால் ராக ராகினிகளில் கவனம் செலுத்துவது மறைந்து வருகிறது. துருபத முறையில் பாடுபவர்களுக்கு தப்பா முறையைக் கேட்பதே துன்பம் தரும். நமது இசையிலுள்ள ஆரோகண, அவரோகண முறைகள் மிகவும் சிறந்தவை. பிரான்சு நாட்டினர் முதலில் இதைப் புரிந்துகொண்டு தங்கள் இசையில் சேர்த்தனர். இப்போது ஐரோப்பா முழுவதும் இந்த முறைகளைப் பின்பற்றுகிறது.'

நான்: 'அவர்களின் இசை ஏதோ போர்முரசுபோல் உள்ளது. நமது மரபில் அதைக் காணவே முடிவதில்லை.'

சுவாமிஜி: 'ஏன், நமது மரபிலும் அது உண்டு. அத்தகைய இசைக்கு இயைபு மிகவும் இன்றியமையாதது. இது நமது இசைமரபில் மிகவும் குறைவு. அதனால்தான் அது அவ்வளவு

தெரியவில்லை. நமது இசை நன்றாக முன்னேறி வந்தது. அந்த வேளையில்தான் முகமதியர் வந்து சேர்ந்தனர். அவர்களின் ஆதிக்கம் நமது இசையில் புகுந்த பிறகு நமது இசையென்னும் மரத்தின் வளர்ச்சி குறைந்துவிட்டது. மேலை நாட்டினரின் இசை மிகவும் முன்னேறிவிட்டது. அவர்களின் முறையில் போதிய அளவு கருணை ரசமும் உண்டு, வீர ரசமும் உண்டு. சுரைக்குடுவையால் செய்யப்பட்ட நமது பழைய இசைக் கருவிகள் முன்னேறவே இல்லை.'

நான்: 'வீரச்சுவை நிறைந்த ராக ராகினிகள் எவை?'

சுவாமிஜி: 'எந்த ராகத்தையும் இயைபுடன் அமைத்துக் கருவியையும் தகுதியாகச் சுருதிகூட்டினால், வீரச்சுவை பிறக்கும். சில ராகினிகளையும் அவ்வாறு செய்ய முடியும்.'

இரவு உணவிற்கான நேரமானதால் பேச்சு முடிந்தது. உணவிற்குப் பின்னர், கல்கத்தாவிலிருந்து வந்த விருந்தினர்கள் இரவில் மடத்தில் தங்குவதற்கான ஏற்பாடுகளை விசாரித்த பின்னர் சுவாமிஜியும் படுக்கச் சென்றார்.

4

புதிய மடம் கட்டி இரண்டு ஆண்டுகளுக்குப் பின் ஒரு நாள் காலையில் எனது குருவின் தரிசனத்திற்காக வந்தேன். சுவாமிஜி புன்னகையுடன் உடல்நலம் முதலியவற்றை விசாரித்த பின்னர், 'இன்று தங்குவாய் அல்லவா?' என்று கேட்டார். 'மகிழ்ச்சியுடன்' என்று நான் சொன்னேன். பின்னர் பல விஷயங்களைப் பற்றிப் பேசியபின், 'நமது சிறுவர்களுக்கான கல்வியைப்பற்றி உங்கள் கருத்து என்ன?' என்று கேட்டேன்.

சுவாமிஜி: 'குரு க்ருஹ வாஸம்—குருவுடன் வசித்தல்.'

கேள்வி: 'எவ்வாறு?'

சுவாமிஜி: 'பண்டைய நாள்போல்தான். அதனுடன் மேலை நாட்டு விஞ்ஞானமும் வேண்டும். இரண்டும் தேவை.'

கேள்வி: 'ஏன்? இப்போதுள்ள பல்கலைக் கழக முறையில் என்ன தவறு?'

சுவாமிஜி: 'ஏறக்குறைய முற்றிலும் தவறுதான். இக்காலப் பல்கலைக் கழகம் என்பது எழுத்தர் வேலைக்கான ஆட்களை உற்பத்தி செய்யும் எந்திரம், அவ்வளவுதான். அந்த அளவோடு நின்றிருந்தால்கூடப் பரவாயில்லை. ஆனால் அவை காரணமாக மனிதர்கள் சிரத்தையும் நம்பிக்கையும் அற்றவர்களாக அல்லவா ஆகின்றனர்! கீதை இடைச்செருகல் என்கிறார்கள், வேத மந்திரங்களை நாட்டுப்புறப் பாடல்கள் என்று சொல்கிறார்கள்.

இந்தியாவிற்கு வெளியேயுள்ள எல்லாவற்றின் நாடிநரம்புகளை எல்லாம் அறிந்து வைத்திருப்பார்கள். தங்கள் முன்னோர்களின் ஏழு தலைமுறை, ஏழு தலைமுறை ஏன், மூன்று தலைமுறையினரின் பெயர்கூட அவர்களுக்குத் தெரியாது.'

கேள்வி: 'அதனால் என்ன நேர்ந்துவிட்டது? முன்னோர்களின் பெயரை அறியாமலிருப்பதால் என்ன நேர்ந்துவிடும்?'

சுவாமிஜி: 'அவ்வாறு நினைக்காதே. தனக்கென ஒரு வரலாற்றுப் பரம்பரை இல்லாத நாட்டிற்கு எதுவுமே இல்லை. ''நான் இன்ன வம்சத்தில் பிறந்தவன்'' என்ற நம்பிக்கையும் பெருமிதமும் உடையவன், தீயவனாக முடியுமா? எப்படி ஆக முடியும்? அவனது நம்பிக்கையே அவனை நல்வழிப்படுத்தும். மரணமே வந்தாலும் அவனால் தீயவனாக முடியாது. அது போலவே, ஒரு நாட்டின் பண்டைய சரித்திரம் அதன் மக்களைக் கட்டுப்பாட்டுடன் இருக்கச் செய்கிறது; அவர்களைத் தாழ்ந்து போக விடுவதில்லை. நமக்கு ஒரு சரித்திரம் இல்லை என்று நீ சொல்லலாம். உன்னைப்போல் நினைப்பவர்களுக்கு இல்லாமலிருக்கலாம்; பல்கலைக் கழகப் பட்டதாரிகளுக்கு இல்லாமல் போகலாம்; ஒருமுறை மேலை நாட்டிற்குச் சென்று வந்து ஐரோப்பிய நடை உடையைப் பின்பற்றிக்கொண்டு, ''எங்களிடம் ஒன்றுமில்லை; நாங்கள் காட்டுமிராண்டிகள்'' என்று சொல்லித் திரிபவர்களுக்கு இல்லாமல் போகலாம். நானும் சொல்கிறேன்: பிற நாட்டுச் சரித்திரத்தைப் போன்ற ஒரு சரித்திரம் நமக்கு இல்லை. அதனால் என்ன? நாம் சோறு உண்கிறோம்; ஆங்கிலேயர் அதை உண்பதில்லை; அதனால் அவர்களெல்லாம் பட்டினி கிடந்து இறந்து பேயாக அலைகிறார்களா என்ன? தங்கள் நாட்டில் விளைவதை உண்டு உயிர் வாழ்கிறார்கள். அதுபோலவே நமது சரித்திரமும் எப்படியிருக்க வேண்டுமோ அப்படி இருக்கவே செய்கிறது. கண்ணை மூடிக் கொண்டு, ''இல்லை, இல்லை'' என்று அழுதால், சரித்திரம் மாயமாக மறைந்து விடுமா? கண்ணுள்ளவர்கள் அதைக் காண்பார்கள். இன்று வாழ்வதான அந்தச் சரித்திரத்தின் வலிமையிலேயே அவர்கள் உயிர்வாழ்கிறார்கள். ஆனால் அதனைப் புதிய அச்சில் வார்க்க வேண்டும். மேலை நாட்டுக் கல்வியால் மக்களுக்குக் கிட்டியுள்ள அறிவுக்கு ஏற்ற வகையில் அதனை அளிக்க வேண்டும்.'

கேள்வி: 'அது எப்படி?'

சுவாமிஜி: 'அது பெரிய விஷயம். அதற்குப் பண்டைய குருகுல வாசம் முதலியவை வேண்டும். மேலைநாட்டு விஞ்ஞானத்துடன் வேதாந்த ஞானம் வேண்டும். பிரம்மச்சரியம் என்பது மூலமந்திரமாக வேண்டும். சிரத்தை, தன்னம்பிக்கை இவை வேண்டும். ''கழுதையை அடித்துஅடித்துக் குதிரையாக்கி விடலாம் என்று யாரோ கூறியதைக் கேட்ட சிலர் ஆராயாமல் அந்த முயற்சியில் ஈடுபட்டார்களாம். அதுபோல் முட்டாள் தனமாக உள்ள இப்போதைய கல்வி முறையை ஒரேயடியாக ஒழிக்க வேண்டும்.'

கேள்வி: 'அப்படி என்றால் என்ன?'

சுவாமிஜி: 'யாரும் மற்றவருக்குக் கற்பிக்க முடியாது. கற்பிப்பதாகக் கருதி ஆசிரியர் எல்லாவற்றையும் கெடுத்து விடுகிறார். வேதாந்தத்தின்படி, மனிதனின் உள்ளேயே எல்லாம் உள்ளது. ஒரு சிறுவனிடம்கூட எல்லாம் உள்ளது. அதனை விழிப்புணர்த்த வேண்டும்—இதுவே ஆசிரியரின் வேலை. சொந்த அறிவை உபயோகித்துக் கை, கால், கண், செவி முத லியவற்றை எப்படிப் பயன்படுத்துவது என்பதைச் சிறுவர் களுக்குக் கற்பித்தாலே போதும், எல்லாம் சரியாகிவிடும். ஆனால் அடிப்படையானது ஆன்மீகமே. ஆன்மீகமே சோறு; மற்றவை அனைத்தும் கறிகளே. கறிகளை மட்டும் உண்டால் அஜீரணக் கோளாறு உண்டாகிறது; அதுபோலவே வெறும் சோற்றை உண்டாலும் அஜீரணக் கோளாறு ஏற்படும். கண்ட வற்றை எல்லாம் சிறுவர்களின் மூளைக்குள் திணித்து அவர் களைக் கெடுத்து வருகிறது ஆசிரியர் கூட்டம். ஒருவகையில் வைசிராய்க்கு நாம் நன்றி கூற வேண்டித்தான் இருக்கிறது.[1] உயர்கல்வியை ஒழித்தால் நாட்டிற்குச் சற்று மூச்சு விடவாவது நேரம் கிடைக்கும். கடவுளே, கடவுளே! பட்டம் பெறத்தான் என்ன ஆர்ப்பாட்டம்! சில நாட்களுள் எல்லாம் தணிந்துவிடு கிறது! இந்தக் கூத்தில் அவர்கள் படித்து முடித்ததுதான் என்ன? நம்முடையவை எல்லாமே தீயவை, மேலை நாட்டினருடை யவை எல்லாம் நல்லவை என்பதுதான்! முடிவு என்ன? சாப் பாட்டிற்கு வழியில்லாமல் போனதுதான். இத்தகைய உயர்கல்வி இருந்தால் என்ன, போனால் என்ன? ஏதாவது தொழிற்கல்வி அளித்தால் தொழில் செய்தாவது பிழைத்துக் கொள்வார்கள். ''வேலை, வேலை'' என்று அலைந்துதிரிய மாட்டார்கள்.'

1. கர்சன் பிரபு பல்கலைக் கழகக் கல்விக் கட்டணத்தை வெகுவாக உயர்த் தினார். இதனால் நடுத்தர வர்க்கத்தினருக்குப் படிக்க முடியாமல் போயிற்று.

கேள்வி: 'மார்வாரிகள் திறமைசாலிகள். அவர்கள் வேலை என்று அலைவதில்லை, பலர் வியாபாரமே செய்கிறார்கள்.'

சுவாமிஜி: 'முட்டாளே, அவர்கள் நாட்டை அழித்து விட்டே ஒய்வார்கள். அற்ப புத்தி படைத்தவர்கள். தொழில் முன்னேற்றத்தைக் கருதும் நீங்கள் அவர்களைவிடச் சிறந்த வர்கள். அவர்களின் முதலீட்டால் அவர்களுக்குச் சிறிதே லாபம் கிடைக்கிறது. அதனால் வெள்ளைக்காரர்களின் வயிறுதான் நிறைகிறது. அதே முதலீட்டில் தொழிற்சாலைகளோ தொழில் மையங்களோ தொடங்கியிருந்தால் நாட்டிற்கு நன்மை உண்டா யிருக்கும்; அவர்களுக்கும் அதிக லாபம் கிடைத்திருக்கும். காபூலிகள் இத்தகைய வேலையை விரும்புவதில்லை. சுதந்திர உணர்ச்சி என்பது அவர்களின் நாடிநரம்புகளில் எல்லாம் நிறைந்துள்ளது. அவர்களில் யாரிடமாவது இந்த வேலையைச் செய்யும்படிச் சொல்லிப் பாருங்கள், அப்போது புரிந்து கொள்ளலாம்.'

கேள்வி: 'சுவாமிஜி, உயர்தரக் கல்வியை நீக்கிவிட்டால் மக்கள் எப்படி மாடுகளைப்போல் இருந்தார்களோ அப்படியே தான் இருப்பார்கள்.'

சுவாமிஜி: 'என்ன முட்டாள்தனம்! நீ என்ன சொல்கிறாய்? சிங்கம் எப்போதாவது சிறுநரியாக முடியுமா? காலங்காலமாக உலகம் முழுவதற்கும் அறிவு அளித்துவந்த நாட்டின் மைந் தர்கள், கர்சன் பிரபு உயர் கல்வியை அகற்றிவிட்டதால் மாடு களாகி விடுவார்களா என்ன?'

கேள்வி: 'ஆங்கிலேயர்கள் வருவதற்கு முன் நமது மக்கள் எப்படி இருந்தார்கள், இப்போது எப்படி இருக்கிறார்கள் என்பதைப் பாருங்கள்.'

சுவாமிஜி: 'சில எந்திரங்களை இயக்கக் கற்றுக்கொள்வது உயர்கல்வியாகி விடாது. உயர்கல்வி என்பது வாழ்க்கைப் பிரச்சினையைத் தீர்க்க வேண்டும். தற்போதைய நாகரீக நாடு களின் அறிஞர்கள் அதை ஆராய்வதில் ஈடுபட்டிருக்கிறார்கள். நமது நாட்டிலோ பல்லாயிர வருடங்களுக்கு முன்பு இது ஆராய்ந்து முடிவு செய்யப்பட்டுவிட்டது.'

கேள்வி: 'ஆனால் உங்கள் வேதாந்தமே அழிந்துபோகும் நிலையில் அல்லவா இருந்தது?'

சுவாமிஜி: 'ஆம். கால வெள்ளத்தில் அவ்வப்போது வேதாந்தத்தின் ஒளி மங்குவதுபோல் தோன்றும். அதனால் தான் இறைவனே மனிதனாகப் பிறக்க நேர்கிறது. தடுக்க

முடியாத பேராற்றலுடன் இன்னும் சில காலம் தழைக்கும்படி அவர் அதற்குப் புத்துயிர் அளிக்கிறார். அத்தகைய ஒரு காலம் இப்போது வந்திருக்கிறது. உங்கள் பிரபு உயர்கல்வியை ஒழித்தால் அதுவும் நல்லதுதான்.'

கேள்வி: 'இந்தியா உலகிற்கே ஞானத்தை வழங்கியிருக்கிறது என்பதை நிரூபிக்க முடியுமா?'

சுவாமிஜி: 'அதற்கு வரலாறே சான்று. இந்தப் பிரம்மாண்டத்தில் மனத்தை உயர்த்துகின்ற கருத்துக்கள் எவை உள்ளனவோ, அறிவு என்று எவையெல்லாம் உள்ளனவோ அவை அனைத்திற்கும் மூல அடிப்படை இந்தியாவே என்பது தகுந்த ஆராய்ச்சியின் மூலம் வெளிப்படும்.'

மிகுந்த மகிழ்ச்சியுடனும் ஆர்வத்துடனும் சுவாமிஜி இதைப்பற்றிப் பேசினார். உடல்நலக் குறைவாலும் கோடைக் கால வெப்பத்தாலும் எழுந்த தாகத்தால் அவர் அடிக்கடித் தண்ணீர் குடித்துக்கொண்டே இருந்தார். இறுதியில் என்னைப் பார்த்து, 'சிங்கா, ஒரு டம்ளர் ஐஸ் தண்ணீர் கொண்டு வா, உனக்கு எல்லாம் புரியவைக்கிறேன்' என்றார். தண்ணீர் குடித்தபின் பேசத் தொடங்கினார்:

'நமக்கு இப்போது வேண்டியது என்ன தெரியுமா? அன்னியரின் கட்டுபாடுகள் இன்றி, நமது பல்வேறு துறை அறிவுகளுடன் ஆங்கிலமும் விஞ்ஞானமும் கற்பதே. தொழிற்கல்வி வேண்டும். தொழில்வளம் பெருகுவதற்கான எல்லாவற்றையும் செய்ய வேண்டும். மக்கள் வேலை தேடி அலைவதை விட்டுவிட்டு கைத்தொழிலில் ஈடுபட்டு நாலு காசு சம்பாதிக்கத் தகுதி உடையவர்களாக வேண்டும்.'

கேள்வி: 'குருகுலப் பள்ளிகளைப்பற்றிக் கொஞ்சம் சொல்லுங்கள்.'

சுவாமிஜி: 'உபநிடதக் கதைகளை நீ படித்ததில்லையா? ஒன்று சொல்கிறேன் கேள். சத்தியகாமன் குருவிடம் சென்று பிரம்மச்சாரியாக வாழ விரும்பினான்.[1] குரு அவனிடம் சில பசுக்களை மேய்ப்பதற்காகக் கொடுத்து, காட்டிற்கு அனுப்பினார். நாட்கள் கடந்தன. பசுக்களின் எண்ணிக்கை இரு மடங்கு ஆனதைக் கண்ட சத்தியகாமன் குருவிடம் திரும்ப எண்ணினான். திரும்பி வரும் வழியில் மாடு, நெருப்பு, இன்னும் பல பிராணிகள் அவனுக்குப் பிரம்மஞானத்தை உபதேசித்தன.

1. சாந்தோக்கிய உபநிடதம், 4.4–9.

அவன் திரும்பி வந்தபோது குரு அவனது முகத்தைப் பார்த்தே அவன் பிரம்மஞானம் பெற்றுவிட்டான் என்பதை அறிந்து கொண்டார். இயற்கையுடன் இயைந்து இருப்பதால் உண்மைக் கல்வி பெறலாம் என்பதே இந்தக் கதையின் உட்கருத்து.

'அந்த வழியில்தான் அறிவைப் பெற வேண்டும். பண்டிதர்களை நம்பி திண்ணைப் பள்ளியில் படித்தால், நாம் வெறும் மனிதக் குரங்குகளாக மட்டும்தான் இருக்க முடியும். நெருப்பைப் போல் களங்கமற்ற ஒழுக்கமுள்ளவர்களுடன் இளமையிலிருந்தே சிறுவர்கள் வாழ வேண்டும்; அத்தகைய உதாரண புருஷர் ஒருவரை முன்னால் வைத்துக்கொள்ள வேண்டும். பொய் சொல்வது பாவம் என்று வெறுமனே படிப்பதால் ஒன்றும் நடக்காது. வழுவாத பிரம்மச்சரிய நெறியில் நிற்பதற்கு ஒவ்வொரு சிறுவர்சிறுமியரும் பயிற்றுவிக்கப்பட வேண்டும். அப்போது, அப்போது மட்டுமே நம்பிக்கை, சிரத்தை எல்லாம் உண்டாகும். சிரத்தை இல்லாவிடில் ஒருவன் எப்படிப் பொய் சொல்லாமல் இருப்பான்! காலங்காலமாக நமது நாட்டில் துறவிகளே கல்வி கற்பித்து வந்தார்கள். பண்டிதர்கள் எல்லா அறிவையும் திண்ணைப் பள்ளிகளில் சுருக்கிவிட்டார்கள். நாட்டின் அழிவும் அதனைத் தொடர்ந்து வந்தது. துறவுமிக்கத் தியாகிகள் கல்வி கற்பித்த நாள்வரை இந்தியா எல்லா வளங்களும் பொருந்தியதாகத்தான் இருந்தது.'

கேள்வி: 'நீங்கள் என்ன சொல்கிறீர்கள்! பிற நாடுகளில் சன்னியாசிகள் இல்லை. ஆனாலும் அவர்கள் அறிவுத் திறத்தால் இந்தியாவைத் தங்கள் காலடியில் வைத்திருக்கிறார்களே!'

சுவாமிஜி: 'முட்டாள்தனமாகப் பேசக் கூடாது. நான் சொல்வதைக் கேள். கல்வி கற்பிக்கும் தொழில், தியாகிகளாகிய துறவிகளின் கைக்கு வரும்வரை இந்தியா பிற நாட்டினரின் செருப்புகளைத் தலையில் தாங்கி அடிமைகளாகத்தான் இருக்க வேண்டும். எழுத்தறிவு அற்ற சிறுவன் ஒருவன் துறவின் வலிமையால் பெரிய பண்டிதர்களின் கொட்டத்தையே அடக்கியதைப் பற்றி நீ கேள்விப் பட்டதில்லையா? ஒருமுறை தட்சிணேசுவரக் கோயிலில் விஷ்ணு கோயில் பூஜாரி அந்தத் திருவுருவின் காலை கவனக்குறைவால் உடைத்துவிட்டார். அதைப் பற்றிய கருத்துத் தெரிவிக்குமாறு பண்டிதர்கள் பலர் அழைக்கப் பட்டனர். அவர்கள் வந்து பல பழைய நூல்களையும் ஏட்டுச் சுவடிகளையும் ஆராய்ந்து, உடைந்த திருவுருவை வழிபடக்

கூடாதெனவும் புதிய ஒன்று நிறுவப்பட வேண்டுமென்றும் கூறிவிட்டார்கள். விஷயம் பெரிய பிரச்சினையாகிவிட்டது. இறுதியில் ஸ்ரீராமகிருஷ்ணர் அழைக்கப்பட்டார். அனைத்தையும் கேட்ட அவர், ''கணவனின் கால் ஒடிந்துவிட்டால், மனைவி அவனைத் தள்ளிவிடுவாளா?'' என்று கேட்டார். பண்டிதர்கள் திகைத்து நின்றுவிட்டனர். அவர்களின் சாஸ்திர முடிவுகள் எல்லாம் அந்தத் தனி மனிதன் கூறிய முடிவின் முன் நிற்க முடியாமல் மறைந்துவிட்டன. நீங்கள் சொல்வது உண்மையானால் ஸ்ரீராமகிருஷ்ணர் ஏன் பூமியில் பிறக்க வேண்டும்? புத்தகப் படிப்பை அவர் ஏன் ஒதுக்க வேண்டும்? கல்வி கற்பித்தலில் ஒரு புதிய வேகத்தைக் கொண்டுவர வேண்டும். அப்போதுதான் எல்லாம் சரியாக நடக்கும்.'

கேள்வி: 'இதைச் சொல்வது எளிது; ஆனால் செய்து முடிப்பது எப்படி?'

சுவாமிஜி: 'அதுவும் எளிதாக இருந்தால் அவர் வர வேண்டிய தேவையே இருந்திருக்காது. நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் கிராமந்தோறும் நகரந்தோறும் ஒரு மடத்தை ஆரம்பிக்க வேண்டியதுதான். உங்களால் முடியுமா? ஏதாவது செய்யுங்கள். கல்கத்தாவில் ஒரு பெரிய மடத்தை நிறுவுங்கள். நன்றாகப் படித்த ஒரு துறவி அங்குத் தலைவராக இருக்க வேண்டும். செயல்முறை விஞ்ஞானம், கலை இவற்றைக் கற்பிக்கத் தனித்துறைகளும் அந்தத் துறையில் தேர்ச்சி பெற்ற துறவிகளும் அவரின்கீழ் இயங்க வேண்டும்.'

கேள்வி: 'அத்தகைய சாதுக்களை எங்கே தேடிக் கண்டுபிடிப்பது?'

சுவாமிஜி: 'உருவாக்க வேண்டும். அதனால்தான் நாட்டுப் பற்றும் துறவும் மிக்க இளைஞர்கள் தேவை என்று கூறுகிறேன். எந்த விஷயத்தையும் அதன் ஆணிவேர்வரை சென்று, தியாகிகளைப் போல் அவ்வளவு எளிதாக யாரும் கற்றுக்கொள்ள முடியாது.'

சிறிது நேரம் அமைதியாக இருந்த பின் சுவாமிஜி கூறினார்: 'சிங்கா, ஏதாவது செய். நம் நாட்டிற்குச் செய்ய வேண்டியது எவ்வளவோ இருக்கிறது. உன்னையும் என்னையும் போன்ற ஆயிரக்கணக்கானோர் வேண்டியுள்ளது. வெறும் பேச்சால் என்ன செய்ய முடியும்? நமது நாடு எத்தகைய துன்பத்திற்கு உள்ளாகிவிட்டது! ஏதாவது செய். சிறுவர்கள் கற்கத் தகுந்த ஒரு புத்தகம்கூட இல்லை.'

கேள்வி: 'ஏன், ஈசுவர சந்திர வித்யாசாகர் எழுதிய பல நூல்கள் உள்ளனவே!'

இதை நான் கூறி முடிக்குமுன் சுவாமிஜி வாய்விட்டுச் சிரித்துவிட்டார். பின்னர், 'ஆம், ''இறைவன் உருவமற்றவர், உணர்வு வடிவானவர்''; ''கோபால் நல்ல அறிவுள்ள பையன்'' என்றெல்லாம் அவற்றில் எழுதப்பட்டுள்ளது. இவையெல் லாம் ஒன்றுக்கும் உதவாது. ராமாயணம், மகாபாரதம், உபநிடதங்கள் இவற்றிலுள்ள சிறிய கதைகளை எளிய நடையில் வங்கமொழியிலும் ஆங்கிலத்திலும் நூல்களாக வெளியிட வேண்டும். அவற்றை நம் சிறுவர்கள் படிக்குமாறு செய்ய வேண்டும்.'

அப்போது மணி பதினொன்று. வானில் திடீரென மேகங்கள் திரண்டன, சில்லென்ற காற்று வீசத் தொடங்கியது. மழை வருவதில் சுவாமிஜி மகிழ்ச்சி அடைந்தார். அவர் எழுந்து நின்று, 'சிங்கா, கங்கைக்கரையில் சற்று உலவி வரலாம்' என்று கூறினார். நாங்களும் புறப்பட்டோம். காளிதாசரின் மேகதூத காவியத்திலிருந்து பல பகுதிகளை அவர் கூறினார். அவர் கூறிய அனைத்திலும் இந்தியாவின் நலம் என்பதே உள்ளிழை யாக ஓடியது. 'சிங்கா, நமது வாலிபர்கள் சிறுவயதிலேயே திருமணம் செய்வதை நிறுத்த முடியுமா?'

நான்: 'திருமணத்தை நிறுத்துவது இருக்கட்டும். வீட்டிலுள்ள பெரியவர்கள் எப்படித் திருமணச் செலவைக் குறைப்பது என்றல்லவா யோசிக்கிறார்கள்.'

சுவாமிஜி: 'அதை விட்டுத் தள்ளு. கால வெள்ளத்தை யார் தடுக்க முடியும்? அவர்களுடைய முயற்சிகள் எல்லாம் வெறும் ஆரவாரமாகப் போய்விடும். திருமணங்கள் குறையும் அளவு நாட்டிற்கு நன்மை உண்டாகும். பரீட்சையில் தேறு வதற்கு ஓர் அவசரம், உடனே திருமணம் செய்ய அதைவிட அவசரம். திருமணம் செய்விக்காமல் ஒருவரையும் விட்டுவைக்க மாட்டார்கள் என்றுதான் தோன்றுகிறது. ஆண்டுதோறும் இப்படியே நடக்கிறது.'

சிறிது நேர அமைதிக்குப் பிறகு சுவாமிஜி மீண்டும் கூறினார்: 'திருமணம் செய்யாத பட்டதாரிகள் சிலர் எனக்குக் கிடைப்பார்களானால் அவர்களை ஜப்பானுக்கு அனுப்பித் தொழிற்கல்வி பெறச் செய்ய வேண்டும். அவர்கள் திரும்பிவந்து, தாங்கள் கற்ற கல்வியை இந்தியாவிற்காகப் பயன்படுத்துவார் களானால் எவ்வளவு நன்மை உண்டாகும்?'

கேள்வி: 'ஏன், இங்கிலாந்திற்குப் போவதைவிட ஜப்பானுக்குப் போவது சிறந்ததா?'

சுவாமிஜி: 'ஆமாம். ஆயிரம் மடங்கு சிறந்தது. இந்த நாட்டிலுள்ள படித்தவர்களும் பணக்காரர்களும் ஒரு முறையாவது ஜப்பானுக்குப் போய்வர வேண்டும். அப்போது அவர்களின் கண்கள் திறக்கும்.'

கேள்வி: 'எப்படி?'

சுவாமிஜி: 'இங்குள்ளது போல் ஜீரணிக்கப்படாத அறிவு அங்கு இல்லை. அவர்கள் ஐரோப்பியர்களிடமிருந்து எல்லாவற்றையும் எடுத்திருக்கிறார்கள். ஆனாலும் அவர்கள் ஐரோப்பியர்கள் ஆகிவிடவில்லை, ஜப்பானியர்களாகவே இருக்கிறார்கள். இங்கோ மேலை நாட்டு மோகம் கொள்ளைநோய் போல் எங்கும் பரவியிருக்கிறது.'

நான்: 'சுவாமிஜி, நான் சில ஜப்பானிய ஓவியங்களைப் பார்த்திருக்கிறேன். அவர்களின் கலைவண்ணத்தைக் கண்டு யாரும் வியக்காமல் இருக்க முடியாது. பிறரைப் பின்பற்றாமல் தங்கள் சொந்த உணர்வுகளை அவர்கள் அவற்றில் வெளிப்படுத்தியுள்ளனர்.'

சுவாமிஜி: 'உண்மைதான். தங்கள் கலைவண்ணத்தின் காரணமாகத்தான் அவர்கள் ஒரு பெரிய நாட்டினராக மதிக்கப்படுகிறார்கள். நம்மைப்போல் அவர்களும் ஆசியர்கள்தாம். நாம் ஏறக்குறைய அனைத்தையுமே இழந்து விட்டாலும், நம்மிடம் இன்னும் எஞ்சியிருப்பது ஈடு இணையற்றது. ஆசியாவின் உயிர்நாடியே கலைதான். கலைப் பண்பு இல்லாத எதையும் ஆசியன் உபயோகிப்பது இல்லை. கலை என்பது நம்மைப் பொறுத்தவரை மதத்தின் ஒரு பகுதியாகவே இருக்கிறது! கோலமிடும் பெண்கள்கூட எவ்வளவு மதிக்கப்படுகிறார்கள்! ஸ்ரீராமகிருஷ்ணர்தாம் எவ்வளவு பெரிய கலைஞராக இருந்தார்!'

கேள்வி: 'ஆங்கிலேயரின் கலையும் சிறந்ததுதானே?'

சுவாமிஜி: 'சீ, போ முட்டாளே! உன்னைக் குற்றம் சொல்லி என்ன பயன்? எல்லோரும் இப்படி எண்ணும்போது நீயும் அப்படி எண்ணுவதில் தவறு இல்லை. ஐயோ, இந்த நிலைக்கு நாம் இறங்கிவிட்டோம். தன்னிடம் இருக்கும் தங்கத்தைப் பித்தளையாகவும், வெளிநாட்டுப் பித்தளையைத் தங்கமாகவும் தான் மக்கள் நினைக்கின்றனர். இது கண்டிப்பாக நவீனக் கல்வி செய்த மாயம்தான். ஆசியாவிற்கு வந்தபிறகுதான் கலை

என்பதையே தங்கள் வாழ்வில் புகுத்த ஐரோப்பியர்கள் முயற்சி செய்து வருகிறார்கள்.'

நான்: 'நீங்கள் இப்படிப் பேசுவதைக் கேட்டால் நீங்கள் துன்பநோக்கு உடையவர் என்று அல்லவா எண்ணுவார்கள்.'

சுவாமிஜி: 'அது இயல்புதான். சுற்றுப்புறத்தையே பார்க்காமல் சென்று கொண்டிருப்பவன் வேறு எதைத்தான் நினைக்க முடியும்? ஆ, நான் காண்பது போலவே அனைத்தையும் உங்களுக்கும் காட்ட எவ்வளவோ விரும்புகிறேன். மேலை நாட்டினரின் கட்டிடங்களைப் பாருங்கள்—மிகச் சாதாரணம்! அதற்கு எந்த அர்த்தமும் இல்லை. இந்தப் பெரியபெரிய அரசாங்கக் கட்டிடங்களைப் பார். வெளியிலிருந்து பார்த்து அவை என்ன அலுவலகம் என்று ஏதாவது ஊகிக்க முடியுமா? முடியாது. ஏனெனில் அவை அவ்வளவு பொருத்தமற்றவையாக இருக்கின்றன. இனி, அவர்களின் கோட்டுகளும், உடம்பையே இறுக்கிப் பிடித்திருக்கும் கால்சட்டைகளும் நமது கண்களில் நிர்வாணம் போல் தானே தெரிகிறது! அல்லவா? இதில் என்ன கலையைக் கண்டாய் நீ? நமது தாய்நாட்டைச் சுற்றிப் பார். எந்தக் கட்டிடமாவது அதன் நோக்கத்தை வெளிப்படுத்த முடியாதபடி உள்ளதா சொல். அவைதாம் என்ன கலையழகு மிளிரக் கட்டப்பட்டிருக்கின்றன! அவர்கள் தண்ணீர் குடிக்கும் கண்ணாடி டம்ளரையும் நமது செம்பையும் ஒப்பிட்டுப் பார்—எது கலைநயம் மிக்கதாக இருக்கிறது? இந்தியாவின் பட்டுத் துணியின் அழகைக் கண்டு, அதைப்போல் நெய்ய முயன்று சீனா தோற்றது. இப்போது ஜப்பான் முயல்கிறது. நம் நாட்டுக் குடியானவர்களின் வீடுகளைக் கிராமங்களில் நீ பார்த்திருக்கிறாயா?'

நான்: 'ஆம், பார்த்திருக்கிறேன்.'

சுவாமிஜி: 'என்ன பார்த்தாய்?'

எதைச் சொல்வதென்று எனக்குப் புரியவில்லை. இருப்பினும் சமாளித்துக் கொண்டு, 'நன்றாகத் தூய்மையாக இருந்தன. தரையும் முற்றமும் நன்றாக மெழுகப்பட்டிருந்தன' என்றேன்.

சுவாமிஜி: 'அவர்களின் நெல் பத்தாயங்களைப் பார்த்தாயா? அதில்தான் எவ்வளவு கலை நயம்! மண்சுவர்களில்கூட எவ்வளவு சித்திர வேலைப்பாடுகள்! மேலை நாடுகளில் உள்ள சாதாரண மக்களின் வாழ்க்கையைச் சென்று பார்த்துவா. வேற்றுமை என்ன தெரியுமா? அவர்கள் எல்லாவற்றிலும் பயனைக் கவனிக்கிறார்கள்; நாமோ கலையைத் தேடுகிறோம்.

மேலை நாட்டுக் கல்வியால் நமது அழகிய செம்புகள் புறக் கணிக்கப்பட்டு, கண்ணாடி டம்ளர்களும் பூச்சுக் கோப்பை களும் நம் வீடுகளில் உலவத் தொடங்கிவிட்டன. அவர்களின் இந்தப் பயன்கருதும் நோக்கை, கேலிக்கூத்தாகும் அளவிற்கு நாம் ஏற்றுக்கொண்டு விட்டோம். கலையும் பயனும் இணை வதே இப்போதைய தேவை. ஜப்பான் விரைவாக இந்த உண்மையை அறிந்து பின்பற்றியதால்தான் இவ்வளவு முன் னேறியுள்ளது. இப்போது ஜப்பானியர்கள் மேலை நாட் டினருக்குக் கற்றுத் தருவார்கள்.'

கேள்வி: 'எந்த நாட்டினர் சிறப்பாக உடை உடுத்து கிறார்கள்?'

சுவாமிஜி: 'ஆரியர்கள்தாம். ஐரோப்பியர்களே அதை ஒத்துக் கொள்கின்றனர். ஆரியர்களின் உடை, மடிப்புகளுடன் எத்தனை அற்புதமாக இருக்கிறது! எல்லா நாடுகளின் அரச உடைகளும் ஏறக்குறைய ஆரியர்களைப் பார்த்து செய்யப் பட்டவையே. அதனால்தான் பிற நாடுகளில், அந்த நாட்டின் தேசீய உடைகளிலிருந்து அரச உடைகள் வேறுபட்டிருக்கின் றன. சிங்கா, நீ அந்த ஐரோப்பியச் சட்டைகளைத் தவிர்த்துவிடு.'

கேள்வி: 'ஏன், சுவாமிஜி?'

சுவாமிஜி: 'ஏனெனில் சட்டைகளை மேலைநாட்டினர் உள்ளேதான் அணிவார்கள். அவற்றை வெளியில் அணிவது அவர்களுக்குப் பிடிப்பதே இல்லை. வங்காளிகளின் நிலைதான் எவ்வளவு நலிந்துவிட்டது! எதையாவது ஒன்றை அணிந்து கொண்டால் போதும், அப்படித்தானே! அதற்கென்று எந்தச் சம்பிரதாயமோ பரம்பரை வழக்கமோ இல்லாமல் போய்விட் டதா என்ன? தாழ்ந்த ஜாதியினர் தொட்ட உணவை உண்டால் ஜாதியை விட்டு விலக்குவதுபோல், மரபுநெறி தவறிய உடையை அணிபவர்களையும் விலக்கி வைத்தால் நன்றாக இருக்கும். நமது சொந்த ரீதியில் ஏதாவது உடை உருவாக்க முடியாதா? சட்டையும் கோட்டும் அணியத்தான் வேண்டுமா என்ன?'

அப்போது மழை பெய்யத் தொடங்கியது. இரவு உணவுக் கான மணி அடித்தது. சுவாமிஜியும் நாங்களும் சாப்பிடச் சென்றோம். சாப்பிடும்போது சுவாமிஜி என்னிடம், 'சத்துள்ள உணவைச் சாப்பிடு. வெறும் சோற்றால் வயிற்றை நிரப்புவதே சோம்பல் அனைத்திற்கும் காரணம். ஜப்பானியர் தினமும் இரண்டு மூன்று வேளை சோற்றுடன் பருப்பு ரசம் உண்பார்கள். பலசாலிகள்கூட பலமுறை உண்டாலும் உணவின் அளவு

குறைவாகவே இருக்கும். வசதி உள்ளவர்கள் தினமும் மாமிசம் சாப்பிடுவார்கள். நாமோ வெறும் சோற்றைத் தொண்டைவரை இரண்டு முறை தினமும் நிரப்பிவிடுகிறோம். அதை ஜீரணிப் பதிலேயே நமது சக்தி முழுவதும் செலவாகிறது' என்றார்.

கேள்வி: 'நாம் எல்லோரும் மாமிசம் உண்ண முடியுமா என்ன?'

சுவாமிஜி: 'ஏன் முடியாது? சிறிதளவு உண்ணலாம். ஒரு நாள் கால் கிலோ போதுமானது. விஷயம் என்ன தெரியுமா? சோம்பேறித்தனமே வறுமைக்கான முக்கியக் காரணம். ஓர் எஜமான் வேலையாள் ஒருவனிடம் வெறுப்புற்று அவனது சம்பளத்தைக் குறைத்துவிட்டதாக வைத்துக் கொள்வோம். அல்லது ஒரு குடும்பத்தில் சம்பாதிக்கும் ஒருவன் திடீரென இறந்துவிட்டான் என்று வைத்துக் கொள்வோம். அப்போது அவர்கள் என்ன செய்வார்கள்? உடனே குழந்தைகளுக்குக் கொடுக்கும் பாலின் அளவைக் குறைத்து விடுவார்கள். இல்லா விடில் ஒரு வேளை மட்டும் உண்பார்கள், இரவில் சிறிது பொரி ஏதாவது சாப்பிடுவார்கள்.'

கேள்வி: 'அவர்கள் வேறென்ன செய்ய முடியும்?'

சுவாமிஜி: 'என்ன செய்ய முடியுமா? சற்று அதிகமாக உழைத்தால் உணவைச் சுருக்காமல் வாழலாம் அல்லவா! அதையெல்லாம் செய்ய மாட்டார்கள். ஆனால் தெருவில் போய் அமர்ந்து ஊர்வம்பு பேசி நேரத்தை வீணாக்குவார்கள். அதைப்பற்றி நான் அதிகம் சொல்ல என்ன இருக்கிறது?'

**5**

சுவாமிஜி கல்கத்தாவில் காலம்சென்ற பலராம் போஸின் வீட்டில் தங்கியிருந்தபோது ஒருநாள் நான் அவரைப் பார்க்கப் போயிருந்தேன். ஜப்பான் மற்றும் அமெரிக்காபற்றி நீண்ட உரையாடலுக்குப் பின் அவரிடம், 'சுவாமிஜி, உங்களுக்கு அமெரிக்காவில் எத்தனைச் சீடர்கள் உள்ளனர்?' என்று கேட்டேன்.

சுவாமிஜி: 'பலர் உள்ளனர்.'

கேள்வி: 'இரண்டாயிரம், மூவாயிரம் இருக்குமா?'

சுவாமிஜி: 'ஒருவேளை அதைவிட அதிகமாகவும் இருக்கலாம்.'

கேள்வி: 'அவர்கள் எல்லோருக்கும் நீங்கள் மந்திர உபதேசம் செய்திருக்கிறீர்களா?'

சுவாமிஜி: 'ஆம்.'

கேள்வி: 'என்ன மந்திரம் கொடுத்தீர்கள்? பிரணவம் சேர்ந்த மந்திரம் கொடுத்தீர்களா என்ன?'

சுவாமிஜி: 'ஆம்.'

கேள்வி: 'சூத்திரர்களுக்குப் பிரணவத்தை ஜபிக்கும் உரிமை இல்லை என்று கூறப்பட்டிருக்கிறதே? அவர்களோ மிலேச்சர்கள் ஆயிற்றே. பிரணவத்தை உச்சரிக்க பிராமணர்களைத் தவிர யாருக்கும் உரிமை இல்லையே?'

சுவாமிஜி: 'நான் மந்திரோபதேசம் கொடுத்தவர்கள் பிராமணர்கள் அல்ல என்று உனக்கு எப்படித் தெரியும்?'

கேள்வி: 'பாரத நாட்டைத் தவிர பிற நாடுகளில் வாழ் பவர்கள் யவனர்களும் மிலேச்சர்களுமே. அங்கெல்லாம் பிராமணர்கள் எப்படி இருக்க முடியும்?'

சுவாமிஜி: 'நான் யாருக்கெல்லாம் மந்திரதீட்சை கொடுத்தேனோ அவர்கள் எல்லோரும் பிராமணர்கள்தான். பிராமணர்கள் அல்லாதவர்களுக்குப் பிரணவத்தை ஜபிக்கும் உரிமை இல்லை என்பது உண்மையே. ஆனால் பிராமணனின் மகன்தான் பிராமணனாக இருக்க வேண்டும் என்பதில்லை. அவன் பிராமணனாக இருக்க எல்லா சாத்தியக்கூறுகளும் உண்டு. இருந்தாலும் அவன் அப்படி ஆகாமல் போகலாம். பாக்பஜாரிலுள்ள அகோர சக்கரவர்த்தியின் மருமகன் தோட்டியானான். அந்தத் தொழில்தான் செய்தான். அவன் பிராமணனின் மகன்தானே!'

கேள்வி: 'ஆமாம், உங்களுக்கு அமெரிக்காவிலும் இங்கிலாந்திலும் பிராமணர்கள் எப்படிக்கிடைத்தார்கள்?'

சுவாமிஜி: 'பிராமண ஜாதி வேறு, பிராமண குணம்வேறு. இங்கே ஒருவன் ஜாதியினால் பிராமணன், அங்கே குணத்தினால் பிராமணன். சத்வம், ரஜஸ், தமஸ் என்று மூன்று குணங்கள் இருப்பது போலவே பிராமணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன் என்று ஒருவனைப் பிரித்துக் காட்டும் குணங்கள் இருக்கின்றன. இந்த நாட்டிலிருந்து க்ஷத்திரிய குலம் அகன்று கொண்டிருப்பது போலவே பிராமணத் தன்மையும் ஏறக்குறைய மறைந்துவிட்டது. ஆனால் மேலை நாட்டினர் தற்போது க்ஷத் திரியத் தன்மையை அடைந்துவிட்டார்கள். இன்னும் ஒருபடி யில் அவர்கள் பிராமணத் தன்மையை அடைந்து விடுவார்கள். அதற்குத் தகுதியான பலர் அங்கே இருக்கத்தான் செய்கிறார்கள்.'

கேள்வி: 'அப்படியானால் அங்கே சாத்வீக நிலையை அடைந்தவர்களை பிராமணன் என்று கூறுகிறீர்களா?'

சுவாமிஜி: 'ஆம், எல்லோரிடமும் சத்வ, ரஜோ, தமோ குணங்கள் உள்ளன—சிலரிடம் கூடுதலாக இருக்கும், சிலரிடம் குறைவாக இருக்கும். அதுபோல் பிராமண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர் ஆவதற்கான தன்மைகளும் அதிகமாகவோ குறைவாகவோ ஒவ்வொருவரிடமும் இருக்கவே செய்கின்றன. ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு குணம் மேம்பட்டுத் தோன்றும். உதாரணமாக, ஒருவன் சம்பளத்திற்கு வேலை செய்யும்போது சூத்திரத் தன்மை மேலிடுகிறது. பொருளீட்டுவதற்காக வியாபாரம் செய்யும்போது வைசியத் தன்மை, உரிமைக்காகப் போர் புரியும் போது க்ஷத்திரியத் தன்மை, இறைவனைத்தியானித்து அவரைப் பற்றிப் பேசும்போது பிராமணத் தன்மை மேலிடுகிறது. ஒரு ஜாதியிலிருந்து இன்னொன்றாக மாறுவது இயல்பானதே. இல்லாவிடில் விசுவாமித்திரர் பிராமணர் ஆனதும், பரசுராமர் க்ஷத்திரியரானதும் எப்படி?'

கேள்வி: 'நீங்கள் சொல்வது சரியாகத்தான் தோன்றுகிறது, ஆனால் எங்கள் பண்டிதர்களும் குலகுருக்களும் அப்படிச் சொல்லவில்லையே!'

சுவாமிஜி: 'அதுதான் இந்த நாட்டின் பெரும் நோய்களுள் ஒன்று. அது போகட்டும். மேலை நாட்டினர் மத வாழ்க்கையைத் தொடங்கினால்கூட, எவ்வளவு ஈடுபாட்டுடன் ஜபம், தவம் முதலான சாதனைகளைச் செய்கிறார்கள்!'

கேள்வி: 'அவர்களின் ஆன்மீக ஆற்றலும் மிக விரைவில் வெளிப்படுகிறது என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அன்று, சுவாமி சாரதானந்தர் தமது மேலை நாட்டுச் சீடர் ஒருவர் எழுதிய கடிதம் ஒன்றை என்னிடம் காண்பித்தார். நான்கு மாதங்கள் மட்டும் சாதனை செய்தபோது எவ்வளவோ ஆன்மீக சக்திகள் தமக்கு உண்டாகிவிட்டதாக அதில் அந்தச் சீடர் குறிப்பிட்டிருந்தார்.'

சுவாமிஜி: 'பார்த்தாயா! அவர்கள் பிராமணர்களா இல்லையா என்பதை அதிலிருந்து புரிந்துகொள். இங்கேயும் பிராமணர்கள் இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் தங்கள் அராஜகத்தால் நாட்டையே குட்டிச்சுவராக்குகிறார்கள்; அவர்களுடைய பிராமணத் தன்மையும் விலகி வருகிறது. குரு சீடனுக்கு மந்திரோபதேசம் செய்வதுகூட ஒரு வியாபாரம் ஆகிவிட்டது. குரு-சீடர் உறவே கேலிக்கூத்தாகிவிட்டது. குருநாதரின் வீட்டில் சாப்பாட்டிற்கு ஒன்றுமில்லை. உடனே அவரது மனைவி அவரிடம் சென்று, ''பகல் முழுவதும்

சீட்டாடிக் கொண்டிருந்தால் பசி தீருமா? உங்கள் சீடனிடம் சென்று வாருங்கள்'' என்று கூறுவாள். பிராமணனும் உடனே, ''நாளைக் காலையில் ஞாபகப் படுத்து. எனது இன்ன சீடனுக்கு ஏராளமான பணம் வந்திருப்பதாகக் கேள்விப்பட்டேன். அவனிடம் சென்று பல நாட்கள் ஆகிவிட்டன'' என்று கூறுவான். இதுதான் வங்காளத்தில் உங்கள் குலகுருக்களின் நிலைமை! மேலை நாடுகளில் இவ்வளவு தூரம் தரம் தாழ்ந்துவிடவில்லை. உங்கள் நிலையைவிட நன்றாகத்தான் இருக்கிறது.'

## 6

சொற்பொழிவுக் கூடங்களிலும் சரி, சங்கீத சபைகளிலும் சரி, நம்மிடம் கட்டுப்பாடில்லை. ஒவ்வொருவனும் இடித்துத் தள்ளிக் கொண்டு முன்னே செல்லவே முயல்கிறான். ரயில் நிலையங்களிலும் துறைமுகங்களிலும் இதைச் சர்வ சாதாரணமாகக் காணலாம். சுவாமிஜியின் நண்பர் ஒருவர் ஒருநாள் மடத்தில் இதுபற்றி அவரிடம் பேசினார். அதற்கு சுவாமிஜி சொன்னார்:

'உன் மகனுக்குப் படிப்பில் ஆர்வம் இல்லையென்றால் அவனைச் சபைக்கு அனுப்பு, என்று ஒரு பழமொழி உள்ளது. அதே விஷயம்தான். இங்கே சபை என்பது வீடுகளில் நடைபெறும் சமூகக் கூட்டங்களல்ல, ராஜசபையே. வங்காளத்தில் சுதந்திர மன்னர்கள் காலத்தில் காலையிலும் மாலையிலும் சபை கூடுவது வழக்கம். காலையில் நாட்டு நடப்பை ஆராய்வார்கள். அந்தக் காலத்தில் செய்தித்தாள்கள் இல்லை. எனவே அரசன் தலைநகரிலுள்ள பிரமுகர்களுடன் பேசி மக்களைப் பற்றியும், அரசியல் நிலைமை பற்றியும் அறிந்துகொள்வான். இந்தக் கூட்டங்களுக்குப் பிரமுகர்கள் எல்லோரும் வந்தே தீர வேண்டும். வராவிட்டால், அதன் காரணத்தை அரசன் விசாரிப்பான். நமது நாட்டில் மட்டுமல்லாமல், பிற நாடுகளிலும் இத்தகைய சபைகளே நாகரீக மையங்களாக இருந்தன. இக்காலத்திலும் இந்தியாவின் மேற்குப் பகுதிகளில், சிறப்பாக ராஜபுதனத்தில் இத்தகைய சபைகள் வங்காளத்தைவிடச் சிறப்பாகக் கூட்டப்படுகின்றன.'

கேள்வி: 'அப்படியானால் அரசன் இல்லாததால்தான் நம் மக்கள் நாகரீக வாழ்விலிருந்து தவறிவிட்டார்களா?'

சுவாமிஜி: 'தன்னலத்தில் நிலைபெற்ற ஒருவிதமான சீர்கேடுற்ற நிலை இது. யாத்திரை வேளையில் விடையளிக்கும்போது, ''மாமா, உங்கள் உடம்பைக் கவனித்துக்

கொள்ளுங்கள்'' என்று பொதுவாகக் கூறுவதும், பலர் கூடும் இடங்களிலும் கேளிக்கைகளிலும் தங்களைப் பெரிதாகக் காட்டிக்கொள்வதும் இந்த நிலையின் சரியான சித்திரமாகும். தன்னல மறுப்பைச் சிறிதாவது முயலாமல் இதுபோன்ற எண்ணங்கள் போகாது. குழந்தைகளுக்கு நல்ல பழக்கவழக்கங் களைக் கற்றுக் கொடுக்காத பெற்றோரே இந்த இழிநிலைக்குக் காரணம். தன்னல மறுப்பே எல்லா நாகரீகங்களுக்கும் அடிப்படை.

'பெற்றோரின் அளவுக்கு அதிகமான கட்டுப்பாடுகளும் குழந்தைகளின் வளர்ச்சியைத் தடுக்கிறது. பாடுவது தவறு என்று பெற்றோர் எண்ணுகின்றனர். மகனோ நல்ல பாட்டு ஒன்றைக் கேட்டுவிட்டால் அதைப் பாடியே தீர வேண்டும் என்று துடிக்கிறான். அதற்காக அவன் ஏதாவது பொழுது போக்கிடத்தை நாடுவது இயல்புதானே! குடிப்பது பாவம் என்று சொல்லிவிடுகிறார்கள். எனவே வீட்டு வேலைக்கார னுடன் மறைவாக இதைப் பழகுவதைத் தவிர அவன் வேறென்ன செய்வான்? ஒவ்வொருவரிடமும் எண்ணற்ற ஆசைகள் உள்ளன. அவற்றை நிறைவேற்றத் தகுந்த வழிகள் வேண்டும். நமது நாட்டில் அது முடியாது. இப்போது உள்ள நிலையைத் திருத்த வேண்டுமானால் முதலில் பெற்றோருக்குத்தான் பயிற்சி வேண்டும். இதுதான் நமது நிலைமை. என்ன இழிவு! நாகரீகத் தில் நாம் உயர்ந்த நிலையை அடையவில்லை! அப்படி இருந்தும், நமது கற்ற பெரியவர்கள், அரசைத் தங்களிடம் கொடுத்துவிடும்படி ஆங்கிலேயரிடம் கேட்கின்றனர். இதைக் கேட்கும்போது எனக்குச் சிரிப்பும் வருகிறது, அழுகையும் வருகிறது. எப்படிச் சேவை செய்வது, பணிவு என்றால் என்ன, என்பதையெல்லாம் அறிந்து, அதைப் பின்பற்றி வாழும் வீர வாழ்க்கை எங்கே போய்விட்டது? வீரம் என்பது தன்னலத் தியாகமே தவிர பிறர்மீது ஆணை செலுத்துவதல்ல. பிறர் தனது ஆணையை ஏற்று நடக்க வேண்டுமானால், நீ முதலில் பிறர் ஆணையை மதித்து உயிரைக் கொடுக்கவும் தயாராக இருக்க வேண்டும்; முதலில் தன்னைத் தியாகம் செய்ய வேண்டும்.'

ஸ்ரீராமகிருஷ்ணரின் பக்தர் ஒருவர் தாம் எழுதிய ஒரு நூலில் ஸ்ரீராமகிருஷ்ணரை அவதார புருஷராக மதிக்காதவர் களைப் பழித்து எழுதியிருந்தார். அவரிடம் சுவாமிஜி சற்று ஆவேசமாகச் சொன்னார்:

'பிறரைப் பழித்து எழுத உனக்கு என்ன உரிமை இருக்கிறது? உன் இறைவனை அவர்கள் நம்பாவிட்டால் என்ன? நாம் ஒரு மதப் பிரிவையா உருவாக்கி இருக்கிறோம்? ஸ்ரீராமகிருஷ்ணரை வழிபடாதவர்களைப் பகைவர்களாகக் கருதவா நாம் ராமகிருஷ்ண பக்தர்கள் ஆனோம்? நீ அவரைத் தாழ்த்தி விட்டாய், சிறுமைப் படுத்திவிட்டாய். உன் ராமகிருஷ்ணர் கடவுளாயிருந்தால், யார் எந்தப் பெயரில் அழைத்தாலும், அவரையே அல்லவா அழைக்கிறார்கள்! பிறரை நிந்திக்க நீ யார்? அவர்களை நிந்தித்தால் உடனே உன் சொல்லுக்குப் பணிந்து விடுவார்கள் என்றா நினைத்தாய்? என்ன முட்டாள் தனம்! உன்னைத் தியாகம் செய்வதால் மட்டுமே பிறரின் இதயத்தை நீ வெல்ல முடியும். இல்லாவிடில் அவர்கள் ஏன் உன் பேச்சைக் கேட்க வேண்டும்.' சற்று நேரத்தில் சுவாமிஜி அமைதியடைந்து கவலை தோய்ந்த குரலில் கூறினார்:

'வீரம் இல்லாதவன் இறைவனிடம் நம்பிக்கையும் சரணாகதியும் கொள்ள முடியுமா? வீரனாக இல்லாமல் இதயத்திலிருந்து வெறுப்பும் பகையும் போக முடியாது. அவை போகாமல் நாகரீகம் எப்படி வரும்? ஆண்மை நிறைந்த அந்த வீரம் இந்த நாட்டில் எங்கே? அந்தோ! எங்கேயும் காண முடியவில்லை. எங்கெல்லாமோ தேடினேன். ஆனால் ஒரே ஓர் இடத்தில் மட்டுமே காண முடிந்தது.'

கேள்வி: 'சுவாமிஜி, அது எங்கே?'

சுவாமிஜி: 'கிரீஷ் சந்திரரிடம் மட்டுமே உண்மையான சரணாகதியைக் கண்டேன். அவர் உண்மைத் தொண்டராக இருந்தார். அவர் தம்மையே தியாகம் செய்யத் தயாராக இருந்ததால் அல்லவா, ஸ்ரீராமகிருஷ்ணர் அவருடைய பொறுப்பைத் தாமே ஏற்றுக்கொண்டார்? என்ன ஒரு சரணாகதி! அவரைப் போல் மற்றொருவரை நான் கண்டதில்லை. சரணாகதி என்னும் பாடத்தை நான் அவரிடம் கற்றேன்.'

இப்படிக் கூறிய சுவாமிஜி கைகளைத் தலைக்கு மேல் கூப்பி கிரீஷை எண்ணி வணங்கினார்.

## 7

சுவாமிஜி இரண்டாம் முறை அமெரிக்கா செல்வதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன (1899). நண்பர் ஒருவரைப் பார்க்கக் கல்கத்தாவிற்குப் போய்த் திரும்பி வரும்போது பாக்பஜாரில் பலராம் பாபுவின் வீட்டில் சுவாமிஜி சற்று தங்கினார். மடத்திற்குத் தம்முடன் வர மற்றொரு நண்பரை

அழைத்து வரும்படி ஓர் ஆளை அனுப்பினார். நண்பர் வந்ததும் அவருக்கும் சுவாமிஜிக்கும் இடையே பின்வரும் உரையாடல் நடைபெற்றது.

சுவாமிஜி: 'இன்று விசித்திரமான ஒரு காரியம் நடந்தது. நான் ஒரு நண்பரின் வீட்டிற்குப் போயிருந்தேன். அந்த நண்பர் கிருஷ்ணனும் அர்ஜுனனும் குருக்ஷேத்திரப் போர்க்களத்தில் உரையாடுவதை ஓர் ஓவியமாக வரைந்திருந்தார். ஸ்ரீகிருஷ்ணர் ரதத்தில் நின்றுகொண்டு கையில் குதிரையின் கடிவாளங் களைப் பிடித்தபடி அர்ஜுனனுக்குக் கீதையை உபதேசித்துக் கொண்டிருக்கிறார். அதை என்னிடம் காட்டி எனது கருத்தை அந்த நண்பர் கேட்டார். ''பரவாயில்லை'' என்றேன் நான். எனது மதிப்பீட்டை விரிவாகச் சொல்லும்படி வற்புறுத்திக் கேட்டார் அவர். எனவே, ''படத்தில் எனக்குப் பிடித்தது எதுவுமில்லை. முதலில், ஸ்ரீகிருஷ்ணர் காலத்தில் இருந்த ரதம் இக்கால கோபுர முகட்டை உடைய ரதம் அல்ல. மேலும், ஸ்ரீகிருஷ்ணரின் உருவம் எந்த உணர்ச்சியையும் வெளிக் காட்டவில்லை'' என்று நான் சொல்லும்படி ஆயிற்று.'

கேள்வி: 'கோபுர முகட்டை உடைய ரதங்கள் அக்காலத் தில் பயன்படுத்தப் படவில்லையா?'

சுவாமிஜி: 'பௌத்தர் காலம் முதல் நமது நாட்டில் எல் லாமே குழப்பக் குட்டையாகிவிட்டது. கோபுர முகட்டு ரதங் களில் அமர்ந்து மன்னர்கள் போர் செய்யவில்லை. ராஜபுதனத் தில் இன்றும் காணப்படுகின்ற ரதங்கள் ஏறக்குறைய அந்தப் புராதன ரதங்களைப்போல் உள்ளன. கிரேக்கப் புராணக் கதை களில் வரும் ரதங்களின் படத்தை நீ பார்த்திருக்கிறாயா? அவற் றிற்கு இரண்டு சக்கரங்கள் உண்டு. பின்புறமாக ஏற வேண்டும். அத்தகைய ரதங்களே நம்மிடம் இருந்தன. படம் வரைந்து விட்டால் போதுமா? படம் சம்பந்தப்பட்ட காலத்தைக் கணக் கில் கொண்டு ஆராய்ச்சிபூர்வமாக வரைந்தால்தான் அது நிலைக்கும். அந்தக் காலப் பொருட்கள் எப்படியிருந்தனவோ அப்படியே சித்தரிக்க வேண்டும். இல்லாவிடில் படத்திற்கு மதிப்பில்லை. பள்ளியில் வெற்றி பெறாதவர்களும், வீட்டில் உதவாக்கரை என்று ஒதுக்கப் படுபவர்களும்தான் இப்போதெல் லாம் ஓவியம் பயில்கின்றனர். இவர்கள் என்ன ஓவியம் தீட்டு வார்கள்? ஒரு நல்ல நாடகத்தை எழுத எவ்வளவு ஆற்றல் வேண்டுமோ, அவ்வளவு ஆற்றல் ஒரு நல்ல ஓவியத்தை வரை வதற்கும் வேண்டும்.'

கேள்வி: 'அப்படியானால் ஸ்ரீகிருஷ்ணரின் உருவத்தை எவ்வாறு வரைய வேண்டும்?'

சுவாமிஜி: 'கீதையே ஓர் உருவமெடுத்ததுபோல் அவரது படத்தை வரைய வேண்டும். மோகத்தாலும் கோழைத்தனத்தாலும் தளர்ந்திருந்த அர்ஜுனனுக்கு அறநெறியைப் போதிக்கும் போது, கீதையின் மையக்கருத்தே அவரது உடலிலிருந்து வெளிப்படுவதுபோல் அந்த ஓவியம் அமைய வேண்டும்.'

இவ்வாறு கூறிய சுவாமிஜி ஸ்ரீகிருஷ்ணர் நின்ற நிலையைத் தாமே நின்று காட்டியவராகப் பின்வருமாறு கூறினார்:

'இதோ பார்! குதிரையின் கடிவாளங்களை இப்படிப் பிடிக்க வேண்டும். அவற்றை இறுக்கிப் பிடித்திருப்பதால் குதிரைகள் பின்னங்காலில் மட்டும் நிற்கின்றன, முன்னங் கால்கள் தூக்கியபடி காற்றோடு போரிடுவதுபோல் நிற்க வேண்டும். அவற்றின் வாய் பிளந்திருக்கும் அளவிற்குக் கடிவாளங்கள் இறுக்கிப் பிடிக்கப்பட்டிருக்க வேண்டும். இதனால் ஸ்ரீகிருஷ்ணரின் வடிவம் தீவிரச் செயல்வேகத்துடன் கூடியதாக விளங்கும். மாபெரும் வீரனான அவரது நண்பன் வில்லையும் அம்புகளையும் எறிந்துவிட்டு, இரண்டு சேனைகளுக்கும் நடுவில் நின்ற ரதத்தில் கோழையைப்போல் அமர்ந்திருக்கிறான். ஸ்ரீகிருஷ்ணர் ஒரு கையில் சாட்டையும் மறு கையில் இழுத்துப்பிடித்த கடிவாளமுமாக, பரிவு பொங்கிப் பெருகும் தமது பால்வடியும் முகத்தை அர்ஜுனனின் பக்கமாகத் திருப்பி, கம்பீரமான நிலைத்த பார்வையுடனுடனும் பேரன்புடனும் அவனுக்குக் கீதையை உபதேசிக்கிறார். இத்தகைய படம் கீதாசாரியரைப்பற்றி என்ன எண்ணத்தைத் தருகிறது என்பதைச் சொல்.'

நண்பர்: 'செயல்திறனும் கம்பீரம் நிறைந்த அமைதியும் கலந்த ஒரு நிலையைக் காட்டுகிறது.'

சுவாமிஜி: 'ஆம், அதுவே! உடல் முழுவதிலும் தீவிரச் செயல்வேகம், முகத்திலோ நீல ஆகாயம் போன்ற ஆழ்ந்த அமைதியும் நிலைகலங்காமையும். கீதையின் மையக்கருத்து இதுவே—உடல், மனம், உயிர் எல்லாவற்றையும் இறைவனின் திருவடிகளில் சமர்ப்பித்து எல்லா நிலைகளிலும் நிலைகுலையாத கம்பீரம்.

'கர்மண்யகர்ம ய: பச்யேத் அகர்மணி ச கர்ம ய: |
ஸ புத்திமான் மனுஷ்யேஷு ஸ யுக்த: க்ருத்ஸ்ன கர்மக்ருத் ||

—தீவிரச் செயலின் போதுகூட மனத்தை அமைதியாக வைத்திருப்பவனும், புறச்செயல் எதையும் செய்யாத நிலையில்

ஆத்ம தியானம் என்ற இடையறாத செயலைச் செய்து கொண்டிருப்பவனும் ஆகிய பேரறிஞனே யோகி; அவனே செயல் வீரன்.'[1]

அப்போது படகை ஏற்பாடு செய்யச் சென்றிருந்தவர் திரும்பி வந்து, அது ஆயத்தமாயிருப்பதாகக் கூறினார். சுவாமிஜி தம் நண்பரிடம், 'வா, மடத்திற்குப் போவோம். வீட்டில் சொல்லிவிட்டு வந்திருப்பாய் என்று எண்ணுகிறேன்' என்றார். அவர் 'ஆம்' என்றார்.

வழியில் இருவரும் பேசிக்கொண்டே சென்றனர்.

சுவாமிஜி: 'வேலை, வேலை, எல்லையற்ற வேலை! பலனை நாடாமல், உள்ளம் உயிர் மற்ற அனைத்தையும் ஆண்டவனுடைய திருவடித் தாமரைகளில் எப்போதும் பதித்துச் செய்யும் வேலை—இதுவே வேண்டும். இந்தக் கருத்தை எல்லோருக்கும் எடுத்துக் கூறு.'

கேள்வி: 'இது கர்மயோகம் அல்லவா?'

சுவாமிஜி: 'ஆம், இது கர்மயோகம்தான். ஆனால் ஆன்மீகச் சாதனைகள் இன்றிக் கர்மயோகம் செய்ய முடியாது. நான்கு யோகத்தையும் சமரசப்படுத்த வேண்டும். இல்லாவிடில் மனத்தை எப்படி இறைவனிடம் எந்நேரமும் வைக்க முடியும்?'

கேள்வி: 'வைதீக யாகங்களும் அனுஷ்டானங்களுமே கர்மம், மற்றவை எல்லாம் அகர்மம் என்று கீதை சொல்கிறது என்பதுதானே பொதுவான கருத்து?'

சுவாமிஜி: 'சரியாகச் சொன்னாய். ஆனால் சற்றுப் பரந்த நோக்குடன் பார். நீ விடும் ஒவ்வொரு மூச்சிற்கும், நினைக்கும் ஒவ்வொரு நினைவிற்கும், ஒவ்வொரு செயலுக்கும் யார் பொறுப்பாளி, நீயல்லவா?'

நண்பர்: 'ஆம், இல்லை; எனக்குத் தெளிவாகப் புரியவில்லை. மனிதன் கருவி; பகவான் செய்பவர். இறைவனால் நான் வழிநடத்தப் படும்போது என் செயல்களுக்கு நான் பொறுப்பல்ல.'

சுவாமிஜி: 'அது மிகவுயர்ந்த நிலை. செயல்புரிவதால் மனம் தூய்மை அடையும்போதுதான் எல்லாவற்றையும் இறைவனே செய்விக்கிறான் என்று காண்பாய். அப்போதுதான் அப்படிப் பேசும் உரிமை உனக்கு உண்டு. இல்லாவிட்டால் அனைத்தும் வீண் பேச்சே.'

---

1. கீதை, 4. 18.

கேள்வி: 'எல்லா செயல்களையும் இறைவனே செய்விக்கிறான் என்பதை ஒருவன் ஆழ்ந்து ஆராய்ந்து தீர்மானித்திருந்தால், அது பொருத்தமாகாதா?'

சுவாமிஜி: 'ஆராயும்போது சரி. ஆனால் அந்த முடிவு ஒரு கணத்தில் அழிந்துவிடும். அதன்பின் நிலைபெற்றிராது. சற்று சிந்தித்துப் பார். அன்றாட வாழ்வில் ''நான் செய்கிறேன்'' என்ற எண்ணத்துடன்தானே நீ எல்லாவற்றையும் செய்கிறாய். இறைவனே உன்னைச் செயல்புரிய வைக்கிறான் என்பதை எவ்வளவு நேரம் நினைக்கிறாய்? ஆனால் திரும்பத்திரும்ப இவ்வாறு எண்ணும்போது ''நான்'' என்பது மறைந்துபோகும்; அந்த இடத்தில் ஆண்டவன் எழுந்தருள்வான். அப்போது இறைவனே எல்லாம் செய்விக்கிறான் என்று நீ சொல்லலாம். ஆனால் நண்பா, ''நான்'' என்பதே உன் சிந்தை முழுவதையும் நிறைத்திருந்தால் இறைவன் தங்க இடம் எங்கே? அவன் உன்னிடம் உறையவே மாட்டான்.'

கேள்வி: 'தீய எண்ணங்களையும் தருவது அவன் தானே?'

சுவாமிஜி: 'இல்லை, ஒருபோதும் இல்லை. அப்படி எண்ணுவது பெரிய தெய்வ நிந்தை. அவன் தீய வழியில் செலுத்த மாட்டான். இன்ப நுகர்ச்சிகளின் மீதுள்ள ஆசையால் நீயே தீமையைப் படைத்துக் கொள்கிறாய். அனைத்தையும் ஆண்டவனே செய்கிறான் என்று சொல்லிக்கொண்டு, வேண்டுமென்று தவறுகளையே செய்பவன் அழிந்து போகிறான். ''உணர்வு வீட்டில் திருட்டு''[1] என்பதன் பிறப்பிடம் இதுவே. ஒரு நற்செயலைச் செய்து முடித்த பின்னர் ஒருவகை உள்ளக் கிளர்ச்சி இருக்கிறது. நெஞ்சம் பூரித்துப்போகிறது; ''ஆகா, நல்லது செய்தேன்'' என்று நீயே மகிழ்கிறாய். இதைத் தவிர்க்க முடியாது; இது மனித இயற்கை. நல்லது என்றால் செய்தது நான், தீயது என்றால் அது இறைவன் செய்தது—இது எவ்வளவு தவறு! இது மிகவும் அபாயமான நிலை! கீதையையும் வேதாந்தத்தையும் சரியாகப் புரிந்துகொள்ளாததால் ஏற்படுவது. இந்த எண்ணத்தை அகற்றிவிடு. மாறாக, நன்மைகள் அனைத்திற்கும் இறைவன் காரணம் என்றும், தீமைகளுக்கு நீயே காரணம் என்றும் கொள்வது நல்லது. இதனால் பக்தியும் சிரத்தையும் உண்டாகும்; அவனது அருளை உணர முடியும். உன்னை

---

1. பக்கம் 111, அடிக்குறிப்பு 1 காண்க.

யாரும் படைக்கவில்லை; நீயே உன்னைப் படைத்துக் கொண்டாய்—இதுவே விவேகம், இதுவே வேதாந்தம். ஆனால் அனுபூதி பெறுமுன் இதனை உணர்ந்துகொள்ள முடியாது.

'ஆதலால், சாதகன் துவைதத்தில் ஆரம்பிக்க வேண்டும்—அதாவது நன்மை எல்லாம் இறைவனால் செய்யப் படுகின்றன; தீமையைச் செய்பவன் நான் என்று கொள்ள வேண்டும். மனத்தைத் தூய்மைப்படுத்த இதுவே எளிய வழி. அதனால்தான் வைணவரிடையே துவைதம் மிகவும் பின்பற்றப் படுகிறது. ஆரம்பத்திலேயே அத்வைதத்தைக் கைக்கொள்வது மிகவும் கடினம். துவைத நிலை படிப்படியாக அத்வைதத்திற்கு இட்டுச் செல்கிறது.

'கபடம் எப்போதும் தீமையையே தரும். ''உணர்வு வீட்டில் திருட்டு'' இல்லாதிருந்தால், அதாவது, ஒருவன் தீமைகளும் இறைவனாலேயே நடக்கின்றன என்று உண்மையாகவே எண்ணினால் அவன் அதிக நாட்கள் தீமையில் ஈடுபட மாட்டான் என்பது உறுதி. அவனது மனத்தின் அழுக்கனைத்தும் விரைவில் அழிந்து போகின்றன. நமது சாஸ்திரங்களை எழுதிய மகான்கள் இதனை நன்றாக அறிந்திருந்தார்கள்.

'புத்த மதத்தின் அழிவு தொடங்கியபோதுதான் தாந்திரீக நெறி உருவாயிற்று என்று நான் கருதுகிறேன். பௌத்தர்கள் கொடுத்த தொந்தரவுகளால் மக்கள் வைதீகக் கிரியைகளை ரகசியமாகச் செய்யத் தொடங்கினர். இரண்டு மாதகாலம் தொடர்ந்து செய்ய வேண்டிய கிரியைகளையெல்லாம் செய்ய முடியாமல் போயிற்று. ஆதலால் களிமண்ணால் உருவத்தைச் செய்து, இரவில் வழிபட்டு எல்லா கிரியைகளையும் முடித்துக் கொண்டு, வழிபட்ட அடையாளமே தெரியாமல் உருவத்தையும் கங்கையில் விட்டுவிட்டார்கள். வழிபடுவதற்கு ஏதாவது உருவம் மனிதனுக்கு வேண்டியிருக்கிறது. அதில்லாமல் அவன் திருப்தி அடைவதில்லை. இப்படி வீடுதோறும் ஒரே இரவில் செய்யப் படும் கிரியை தொடங்கியது. ஆனால் மக்களின் மனம் போகத்தை நாடியது. ''சிலர் கொல்லைப்புற வாசல்மூலம் வீட்டினுள் வருகிறார்கள்'' என்று ஸ்ரீராமகிருஷ்ணர் சொல்வார். அதுபோல் தீயமனம் காரணமாக ஆன்மீக சாதனைகளில் ஈடுபடாமல் இருந்தவர்களுக்காக அக்கால ஆச்சாரியர்கள் ஒரு நெறி வேண்டும் என்று எண்ணினர். அத்தகையோருக்காகத் தான் தாந்திரீக நெறி உருவாக்கப்பட்டது.'

கேள்வி: 'அவர்கள் நல்லவை என்று எண்ணி தீய செயல்களைச் செய்து வந்தார்கள். இதனால் அவர்களின் தீய ஆசைகள் எப்படி நீங்கின?'

சுவாமிஜி: 'அவர்கள் அந்தத் தீய செயல்களின் போக்கைத் திருப்பிவிட்டார்கள். இறைவனை அடையவே அவர்கள் அவற்றைச் செய்தார்கள்.'

கேள்வி: 'இது உண்மையிலேயே நடக்கக் கூடியதுதானா?'

சுவாமிஜி: 'நோக்கம் சரியாக இருக்க வேண்டும். அப்படி இருந்தால், அது எப்படி நடக்காதிருக்க முடியும்?'

கேள்வி: 'ஆனால் அதில் இருப்பவர்கள் சாதனை என்ற பெயரில் மது அருந்துதல், இறைச்சி உண்ணுதல் போன்ற பல வலைகளில் சிக்கிக் கொள்கிறார்கள்.'

சுவாமிஜி: 'அதனால்தான் ஸ்ரீராமகிருஷ்ணர் பிறந்தார். அவ்வாறு தந்திரத்தைப் பயிலும் காலம் போய்விட்டது. அவரும் தந்திர சாதனைகள் செய்தார். ஆனால் அந்த முறையில் அல்ல. மது அருந்த வேண்டும் என்ற நியதியுள்ள இடத்தில் ஒரு துளியை மட்டும் தொட்டு நெற்றியில் வைத்துக்கொள்வார். தாந்திரீக வழிபாடு வழுக்கும் தரையைப் போன்றது. இங்கு தாந்திரீகம் போதிய அளவுக்கு உள்ளது. இனி நாம் அதற்கு அப்பால் செல்ல வேண்டும். வேதங்களைப் படிக்க வேண்டும்; நான்கு யோகங்களையும் சமரசப்படுத்தி சாதனை செய்ய வேண்டும்; தூய பிரம்மச்சரியம் காக்க வேண்டும்.'

கேள்வி: 'நால்வகை யோகங்களின் சமரசம் என்பதற்கு நீங்கள் கொள்ளும் பொருள் என்ன?'

சுவாமிஜி: 'விவேகம், வைராக்கியம், பக்தி, கர்மம் இவற்றுடன் யோகப் பயிற்சி மற்றும் பெண்களிடம் வழிபாட்டு உணர்ச்சியுடன் பழகுதல்.'

கேள்வி: 'பெண்களிடம் வழிபாட்டு உணர்ச்சியுடன் நடந்துகொள்வது எப்படி?'

சுவாமிஜி: 'அவர்கள் ஆதி பராசக்தியின் வடிவங்கள். என்று சக்தி வழிபாடு தொடங்குமோ, என்று ஒவ்வொருவரும் அவளது பலிபீடத்தில் தன்னை அர்ப்பணம் செய்கிறார்களோ அன்றுதான் இந்தியாவுக்கு உண்மையான நன்மை ஏற்படும்.'

கேள்வி: 'சுவாமிஜி, நீங்கள் இளைஞராக இருக்கும்போது உங்களிடம் யாராவது திருமணம் செய்துகொள்ளும்படிக் கூறினால் அதற்கு நீங்கள், ''நான் திருமணம் செய்துகொள்ள மாட்டேன்; நான் எப்படி ஆவேன் என்பதைப் பின்னர்

பாருங்கள்'' என்று சொல்வதுண்டு. உங்கள் வார்த்தைகள் இப்போது நிறைவேறி உள்ளன.'

சுவாமிஜி: 'ஆம். சகோதரா, நான் உணவின்றி இருந்தேன்; கடினமாக வேலை செய்தேன். இன்று அமெரிக்கர்கள் எனக்கு இந்த அழகிய கட்டிலை அன்புடன் தந்திருக்கிறார்கள். எனக்கு உண்பதற்கும் சிறிது உள்ளது. ஆனால் போகம் என்பது சிறிது கூட என் தலையில் எழுதப்படவில்லை. மெத்தையில் படுத்தால், எனக்கு நோய் அதிகரிக்கிறது. மூச்சுவிட முடியாததுபோல் இருக்கிறது; பாயில் படுத்தால்தான் சரியாகிறது.' ❑

## III

### 1

ஜனவரி 22, சனிக்கிழமை, 1898

அதிகாலையில் நான் சுவாமிஜியைப் பார்க்கச் சென்றிருந்தேன். இப்போது அவர் கல்கத்தாவில் ராம்காந்த போஸ் தெருவில், 457–ஆம் எண் வீட்டில் தங்குகிறார். அது பலராம் பாபுவின் வீடு. அறை நிறைய பக்தர்கள் அமர்ந்திருந்தனர்.

சுவாமிஜி கூறினார்: 'சிரத்தை வேண்டும், தன்னம்பிக்கை வேண்டும். பலமே வாழ்வு, பலவீனம் மரணம். மரணமற்ற, சுதந்திரமான, இயல்பாகவே தூய்மையான ஆன்மாவே நாம். நாம் பாவம் செய்ய முடியுமா? முடியவே முடியாது. இத்தகைய நம்பிக்கைதான் வேண்டும். இத்தகைய நம்பிக்கையே நம்மை மனிதனாக்கும்; நம்மைத் தெய்வமாக்கும். இந்தச் சிரத்தையை இழந்ததால்தான் நாடு உருக்குலைந்து போயிற்று.'

கேள்வி: 'நாம் அந்தச் சிரத்தையை எவ்வாறு இழந்தோம்?'

சுவாமிஜி: 'இளமையிலிருந்தே நாம் பெறுவது எதிர் மறையான கல்வி. நாம் உதவாக்கரைகள் என்றே நாம் கற்று வருகிறோம். நமது நாட்டில் பெரிய மனிதர்களெல்லாம் பிறந் தார்கள் என்பது நமக்குத் தெரியாது. உடன்பாட்டு முறையிலான கல்வி எதையும் நாம் பெறவில்லை. கைகளையும் கால்களையும் எப்படிப் பயன் படுத்துவது என்பதுகூட நமக்குத் தெரியாது. ஆங்கிலேயர்களின் ஏழு தலைமுறை முன்னோர்களைப்பற்றி ஒன்றுவிடாமல் படித்தோம்; ஆனால் நமது முன்னோர்களைப் பற்றி நமக்கு ஒன்றும் தெரியாது. பலவீனத்தைக் கற்றுக் கொண் டோம். வெல்லப்பட்ட இனமான நாம் பலவீனர்கள், சுதந்திர மாக எதுவும் செய்ய முடியாதவர்கள் என்று கற்றுக் கொண் டோம். இந்த நிலையில் சிரத்தை எப்படிப் போகாமல் இருக்கும்? சிரத்தையை மீண்டும் கொண்டுவர வேண்டும்; தன்னம்பிக்கை மறுமலர்ச்சி பெற வேண்டும். அப்போது நமது நாட்டின் பிரச்சினைகள் எல்லாம் தாமாகவே படிப்படியாகத் தீர்ந்து போகும்.'

கேள்வி: 'அது எப்படி? எல்லா தீமைகளும் விலகுவது என்பது முடியக்கூடியதா என்ன? அவசரமாக விலக்க வேண்டிய

பல தீமைகள் நாட்டில் உள்ளன. இந்திய தேசிய காங்கிரஸ் போன்ற நாட்டுப்பற்றுள்ள பல சங்கங்கள் சேர்ந்து பெரிய கலவரங்களைச் செய்கிறார்கள்; ஆங்கில அரசாங்கத்திடம் கேட்கிறார்கள். நம் குறைகளைத் தெரிவிக்க இதைவிட நல்ல வழி எது? இதற்கும் சிரத்தைக்கும் என்ன தொடர்பு?'

சுவாமிஜி: 'குறை யாருடையது? அரசாங்கம் அதில் தலையிட வேண்டுமா? அல்லது நீங்களே அகற்றிக் கொள்வீர்களா?'

கேள்வி: 'அரசாங்கம்தான் அகற்றும். மன்னன் தராவிடில் மக்கள் எங்கிருந்து பெறுவார்கள்? எப்படிப் பெறுவார்கள்?'

சுவாமிஜி: 'பிச்சைக்காரனின் குறை ஒருநாளும் தீராது. நீங்கள் கேட்பதையெல்லாம் அரசாங்கம் தந்துவிட்டதாகவே வைத்துக் கொள்வோம். பெற்ற அவற்றைப் பேணிக் காக்கும் மனிதர்கள் எங்கே இருக்கிறார்கள்? எனவே முதலில் மனிதர்களை உருவாக்குங்கள். மனிதர்களே வேண்டும். சிரத்தை இல்லாமல் மனிதன் எப்படி உருவாக முடியும்?'

கேள்வி: 'ஆனால் பெரும்பான்மையினர் இப்படி நினைக்கவில்லையே?'

சுவாமிஜி: 'பெரும்பான்மையினர் என்போர் முட்டாள்களே, மந்தபுத்தியினரே. அறிவுடையோர் மிகச் சொற்பமே. அறிவுள்ள அந்தச் சிலரே எல்லா துறையிலும் தலைவர்களாக இருக்கிறார்கள். இவர்களின் கையசைவில்தான் பெரும்பான்மையினர் நடக்கிறார்கள். இவர்களின் கட்டளைப்படி நடப்பதால் எல்லாம் ஒழுங்காக நடைபெறும். அகம்பாவம் பிடித்தவர்கள்தான் தாங்களே தங்களை வழிநடத்துவதாக ஏமாற்றிக்கொண்டு தங்களையே அழித்துக் கொள்கிறார்கள். சமுதாயச் சீர்திருத்தத்தைப்பற்றி வாய்கிழியப் பேசுகிறீர்களே! இதுவரை நீங்கள் என்ன செய்திருக்கிறீர்கள்? உங்கள் சமூகச் சீர்திருத்தமெல்லாம் விதவை மறுமணம் அல்லது பெண் விடுதலை அல்லது இதுபோன்ற ஏதோ ஒன்று, அப்படித்தானே? இந்தச் சீர்திருத்தங்கள் குறிப்பிட்ட ஏதோ ஓரிரு ஜாதியினருக்கு நன்மை செய்யலாம். நாடு முழுவதற்கும் அவற்றால் என்ன பயன்? இவையெல்லாம் சீர்திருத்தங்களா அல்லது சுயநலக் கொள்கைகளா? எப்படியாவது உங்கள் அறையைத் தூய்மையாக வைத்துக்கொள்ள வேண்டும்; மற்றவர்கள் எக்கேடு கெட்டும் போகட்டும். அப்படித்தானே?'

கேள்வி: 'அப்படியானால் சமுதாயச் சீர்திருத்தமே வேண்டாம் என்கிறீர்களா?'

சுவாமிஜி: 'யார் அப்படிச் சொன்னது? அது வேண்டியது தான். நீங்கள் சீர்திருத்தம் என்று சொல்பவற்றுள் பலவும் சாதாரண மக்களை அணுகவேயில்லை. நீங்கள் பெரிதாகப் பேசும் விதவை மறுமணம், பெண் விடுதலை எல்லாம் ஏற்கனவே அவர்களிடம் உள்ளன. அதனால் இதையெல்லாம் ஒரு சீர்திருத்தம் என்றே அவர்கள் எண்ண மாட்டார்கள். சிரத்தையின்மையே நமது துன்பங்களுக்குக் காரணம்; மேலும் துன்பங்களைக் கொண்டு வருவதும் சிரத்தையின்மைதான் என்பதே என் கருத்து. நோயை அடக்கி வைப்பது அல்ல, நோயின் மூலகாரணத்தை அழிப்பதே எனது சிகிச்சை முறை. பலவிதச் சீர்திருத்தங்கள் வேண்டும். அவை வேண்டாம் என்று சொல்பவன் முட்டாள்! உதாரணமாக இந்தியாவில் கலப்புத் திருமணம் வேண்டும். அது இல்லாததால்தான் உடல் பலவீனம் ஏற்பட்டு, சமுதாயமே அழியும் நிலைக்குப் போய்க்கொண் டிருக்கிறது.'

அன்று சூரிய கிரகணம். எனவே சுவாமிஜியிடம் கேள்விகள் கேட்டுக் கொண்டிருந்தவர் அவரை வணங்கி, 'நான் கங்கையில் நீராடச் செல்ல வேண்டும். இன்னொரு நாள் வரு கிறேன்' என்று கூறி விடைபெற்றார்.

## 2

ஜனவரி 23, ஞாயிறு, 1898

இன்று மாலை பாக்பஜாரில் பலராம் பாபுவின் வீட்டில் ராமகிருஷ்ண மிஷனின் வாராந்தரக் கூட்டம் கூடும் நேரம். சுவாமி துரீயானந்தர், சுவாமி யோகானந்தர், சுவாமி பிரேமானந்தர் மற்றும் பலரும் மடத்திலிருந்து வந்திருந்தனர். சுவாமிஜி கிழக்கு வராந்தாவில் உட்கார்ந்திருந்தார். அங்கும் வடக்குத் தெற்குப் பகுதிகளிலும் மக்கள் கூடியிருந்தார்கள். சுவாமிஜி கல்கத்தாவில் இருக்கும் நாட்களில் கூட்டம் இப்படித் தான் இருக்கும்.

சுவாமிஜி இனிமையாகப் பாடுவார் என்பதை அறிந்த கூட்டத்தினர் அவரது பாடலைக் கேட்க விரும்பினர். இதை யறிந்த மாஸ்டர் மகாசயர் ஒரு சில பிரமுகர்களிடம், சுவாமிஜியிடம் பாடுமாறு வேண்டும்படிக் கூறினார். அதைக் கண்ட சுவாமிஜி, 'மாஸ்டர் மகாசயரே, உங்களுக்குள் என்ன பேசிக் கொள்கிறீர்கள்? சத்தமாகச் சொல்லுங்கள்' என்றார். மாஸ்டர் மகாசயர் கேட்டுக் கொண்டதற்கிணங்க சுவாமிஜி

தமது இனிய குரலில், 'அன்பு அன்னை சியாமாவை உனது நெஞ்சிற்குள்ளே இருத்துவாய்' என்று தொடங்கும் பாடலைப் பாடினார். வீணைநாதம் போல் அந்தப் பாடல் ஒலித்தது. அது முடிந்ததும் அவர் மாஸ்டர் மகாசயரிடம், 'இப்போது திருப்திதானே, இனி பாடல் கிடையாது. இல்லாவிடில் தெய்விக போதையில் நான் அடித்துச் செல்லப்பட்டு விடுவேன். அது மட்டுமின்றி, சொற்பொழிவு செய்துசெய்து என் குரல் தடித்துவிட்டது; அதிகமாக நடுங்கவும் செய்கிறது' என்றார்.

பிறகு சுவாமிஜி அங்குள்ள ஒரு பிரம்மச்சாரியிடம் 'முக்தியின் இயல்பு' என்பதுபற்றிப் பேசும்படிக் கூறினார். அது முடிந்த பின் மேலும் ஓரிருவர் பேசினர். அதன்பிறகு, பேசிய தலைப்பில் விவாதங்கள் நிகழ்த்தும்படி ஓர் இல்லறச் சீடரிடம் கூறினார். அந்த இல்லறச் சீடர் அத்வைதம், ஞானம் என்பவற்றிற்கு முதலிடம் கொடுத்து, துவைதம், பக்தி போன்றவற்றைத் தாழ்த்திப் பேசினார். அதற்கு இன்னொருவர் எதிர்ப்புத் தெரிவித்தார். நீண்ட நேரம் இருவரும் தர்க்கம் செய்தனர். சுவாமிஜி சிறிது நேரம் அதை கவனித்தார். சொற்போர் வலுப்பதைக் கண்டபோது அவர்களை அமைதியாக இருக்கச் சொல்லி விட்டுப் பேச ஆரம்பித்தார்:

'வாதம் செய்யும்போது ஆத்திரவசப்பட்டு ஏன் அனைத்தையும் கெடுக்கிறீர்கள்? உண்மை ஞானமும் உண்மை பக்தியும் ஒன்றே என்று குருதேவர் கூறுவது வழக்கம். பக்தி நெறியில் இறைவன் அன்பு வடிவமாகக் கொள்ளப்படுகிறான். ''நான் அவரை நேசிக்கிறேன் என்று சொல்வதுகூடப் பொருந்தாது; ஏனெனில் அவரே அல்லவா அன்பின் வடிவம்!'' உள்ளத்தில் எழும் அன்பும் அவரே அல்லவா! அதுபோலவே அனைத்து வசீகரமும் அவரே. திருடன் திருடுவது, விலைமகள் விபச்சாரம் செய்வது, தாய் குழந்தையை நேசிப்பது—எல்லாவற்றிலும் அவரே இருக்கிறார். கோளங்கள் ஒன்றை ஒன்று கவர்கின்றன, அங்கும் அவரே இருக்கிறார். எங்கும் அவரே. ஞான நெறியும் இறைவன் எங்கும் இருக்கிறார் என்றே கூறுகிறது. இங்குதான் பக்தி மற்றும் ஞான நெறிகள் சமரசப்படுகின்றன.

'தெய்வீகக் காட்சி நிலையில் அல்லது சமாதி நிலையில் இருமை எண்ணம் அழிகிறது; பக்தன், பகவான் என்ற வேறுபாடு மறைகிறது. இறைவனிடம் தொடர்புகொள்ள ஐந்து

விதமான உறவு முறைகளை பக்தி நூல்கள் கூறுகின்றன.[1] அவற்றுடன் இன்னொன்றையும் சேர்த்துக் கொள்ளலாம். இறைவனைத் தன்னிலிருந்து அபேதமானவராக, அதாவது பிரிவற்றவராகக் கொண்டு சாதனைகள் செய்வதே அது. இவ்வாறு பக்தர்கள் அத்வைதிகளை 'அபேதவாதி பக்தர்கள்' என்று அழைக்கலாம். மாயையின் வலைக்குள் இருக்கும் வரை துவைதம் அதாவது இருமை இருக்கவே செய்யும். இடம்–காலம்–காரணகாரியம் அல்லது நாமரூபம் இவையே மாயை. இந்த மாயையைக் கடந்து செல்லும்போது தான் அத்வைதம் அல்லது ஒருமை நிலை அறியப்படுகிறது. அப்போது அவன் துவைதியும் அல்ல, அத்வைதியும் அல்ல. எல்லாம் ஒன்றே என்ற உணர்வு அவனுக்கு ஏற்படுகிறது. பக்தன், ஞானி என்னும் வேற்றுமை எங்கே தெரியுமா? ஒருவன் கடவுளை வெளியே பார்க்கிறான்; இன்னொருவன் உள்ளே பார்க்கிறான்.

'இன்னொரு கருத்தும் உள்ளது. பக்தியில் பராபக்தி என்ற நிலை உள்ளதாக ஸ்ரீராமகிருஷ்ணர் கூறுவார். முக்தியை அடைந்து அத்வைதத்தில் நிலைபெற்று இறைவனிடம் செலுத்தும் பக்தியே அது. முக்தி அடைந்தவன் ஏன் பக்தி செலுத்த வேண்டும் என்று கேட்கலாம். அதற்குப் பதில் இதுதான்—முக்தன் அனைத்து நியதிகளையும் கேள்விகளையும் கடந்தவனாக இருக்கிறான். முக்தர் ஆன பின்பும் பலர் தாங்கள் விரும்பியே பக்தியை வைத்துக் கொள்கின்றனர்.'

கேள்வி: 'சுவாமிஜி, திருடன் திருடுவதிலும் விலைமகளின் விபச்சாரத்திலும் இறைவன் இருக்கிறாரா? அப்படியானால் பாவங்களுக்கும் அவர்தானே பொறுப்பாகிறார்?'

சுவாமிஜி: 'அது மிக உயர்ந்த அனுபூதி நிலை. அன்பு மற்றும் வசிகர இயல்புள்ள அனைத்துமே இறைவன்தான் என்று காண முடிகின்ற உணர்வு அனுபூதியின் மிகவுயர்ந்த நிலையிலேயே வருகிறது. அவ்வாறு காணவும் அன்றாட வாழ்வில் அதைக் கடைப்பிடிக்கவும் வேண்டுமானால் முதலில் அந்த நிலையை அடைந்திருக்க வேண்டும்.'

---

1. சாந்த பக்தி : சாதாரண பக்தி.
   தாச பக்தி : இறைவன்–எஜமான்; பக்தன்–தொண்டன்.
   வாத்சல்ய பக்தி : இறைவன்–குழந்தை; பக்தன்–தந்தை அல்லது தாய்.
   சக பக்தி : இறைவன்–தோழன்.
   மதுர பக்தி : இறைவன்–காதலன்; பக்தன்–காதலி.

கேள்வி: 'ஆனாலும் கடவுள் பாவத்திலும் இருக்கிறார் என்பதை ஒத்துக்கொள்ளத்தானே வேண்டும்!'

சுவாமிஜி: 'உண்மையில் பாவம், புண்ணியம் என்று இரண்டு இல்லை. நமது வசதிக்காக வைத்துக்கொண்ட சொற்களே அவை. ஒரே செயலின் ஒருவிதமான செயல்முறையைப் பாவம் என்கிறோம்; இன்னொரு விதமான செயல்முறையைப் புண்ணியம் என்கிறோம். உதாரணமாக, விளக்கை எடுத்துக் கொள்வோம். அது எரிவதால்தான் நாம் பார்க்கிறோம்; எத்தனையோ வேலைகளைச் செய்கிறோம். இது விளக்கின் ஒரு விதமான பயன். அதே விளக்கில் கையை வை, கை பொசுங்கி விடும். அது விளக்கின் இன்னொரு விதமான நிலை. எனவே ஒரு பொருள் நல்லதா கெட்டதா என்பதை நாம் பயன்படுத்தும் விதமே தீர்மானிக்கிறது. பாவ புண்ணியமும் அவ்வாறே. பொதுவாகச் சொன்னால் மனத்தையும் உடலையும் நற்செயல்களுக்குப் பயன்படுத்துவது புண்ணியம், தகாத செயல்களுக்குப் பயன்படுத்துவது பாவம்.'

பல கேள்விகளுக்கு சுவாமிஜி விடையளித்தார். அப்போது யாரோ ஒருவர், 'கோளங்கள் ஒன்றையொன்று கவரும் கவர்ச்சியிலும் இறைவன் இருக்கிறான் என்பது உண்மையோ பொய்யோ, ஆனால் அதில் கவிநயம் இருப்பதை யாரும் மறுக்க முடியாது' என்றார்.

சுவாமிஜி: 'இல்லை, அது வெறும் கவிதையல்ல. மெய்யுணர்வு பெற்றவனுக்கு அதைக் காண முடியும்.'

இந்தக் கருத்தை மேலும் சுவாமிஜி விரித்துக்கொண்டே போனார். அதிலிருந்து நான் புரிந்துகொண்டவை இவையே: 'ஜடப்பொருளும் உணர்வும் இரண்டாகத் தோன்றினாலும் அவை ஒரே பொருளின் இரு நிலைகளே. அதுபோல் புற அக உலகங்களில் காணும் அனைத்து சக்திகளும் ஒரே சக்தியின் வெளிப்பாடுகளே ஆகும். உணர்வு சக்தி குறைவாக வெளிப்படும் ஒன்றை ஜடப்பொருள் என்கிறோம்; அதிகமாக வெளிப்படும் ஒன்றை உயிர் வாழ்வதாகக் கருதுகிறோம். ஆனால் எல்லா நிலைகளிலும் எல்லா காலங்களிலும் பூரணமான ஜடப்பொருளாக இருக்கின்ற ஒன்று இருந்ததில்லை. புற உலகில் புவியீர்ப்பாகவும் காந்த சக்தியாகவும் தோன்றும் சக்தியே நுட்பமான நிலையில் அன்பாகத் தோன்றுகிறது; இன்னும் நுட்பமான நிலையில் அதுவே ஆன்மீக அனுபூதியின் பல நிலைகளாகத் தோன்றுகிறது.'

கேள்வி: 'நடைமுறையில் இந்த வேறுபாடு ஏன் இருக்க வேண்டும்? தன் ஆற்றலை மனிதன் ஏன் தவறான வழிகளில் செலவிட வேண்டும்?'

சுவாமிஜி: 'சொந்த வினைப்பயனாலேயே இது நிகழ்கிறது. முன்பு செய்ததற்கு ஏற்ப இப்போது நிகழ்கிறது. எனவே மனப் போக்குகளை அடக்கித் தகுந்த வழியில் செலுத்துவது மனிதனின் கைகளிலேயே உள்ளது.'

கேள்வி: 'அப்படி முன்வினைப்பயன் என்றே வைத்துக் கொண்டாலும் அதற்கு ஓர் ஆரம்பம் இருக்க வேண்டும் அல்லவா? துவக்கத்திலேயே நமது மனப்போக்குகள் நல்லது அல்லது கெட்டதாக ஏன் இருக்க வேண்டும்?'

சுவாமிஜி: 'ஆரம்பம் இருந்ததென்று உனக்கு யார் சொன்னது? படைப்பிற்குத் துவக்கமில்லை என்றே வேதங்கள் கூறுகின்றன. இறைவன் உள்ள நாள் முதலே படைப்பும் உண்டு.'

கேள்வி: 'மாயை ஏன் வந்தது? எங்கிருந்து வந்தது?'

சுவாமிஜி: 'கடவுளைப் பொறுத்தவரையில் ''ஏன்'' என்ற கேள்வியே தவறு. தேவைகளோ குறைகளோ உள்ள இடத்தில் மட்டும்தான் அதைக் கேட்க முடியும். தேவைகள் எதுவுமற்ற, பரிபூரணமான ஒருவரைப்பற்றி என்ன கேள்வி எழ முடியும்? மாயை எங்கிருந்து வந்தது என்ற கேள்வி இருக்கவே முடியாது. காலம்—இடம்—காரண காரியம் என்பதே மாயை. நீங்கள், நான் மற்ற அனைவரும் இந்த மாயைக்குள் இருக்கிறோம்; நீங்களோ மாயையைக் கடந்த பொருளைப்பற்றிக் கேட்கிறீர்கள்! மாயைக்கு உள்ளிருக்கும்போது அதைக் கடந்த ஒன்றைப்பற்றிக் கேள்வி எழ முடியுமா?'

மேலும் பல கேள்விகள் தொடர்ந்தன. மில், ஹாமில்டன், ஹெர்பர்ட் ஸ்பென்சர் முதலியவர்களின் தத்துவங்களைப்பற்றி உரையாடல் நிகழ்ந்தது. எல்லோருக்கும் திருப்தியளிக்கும் வகையில் சுவாமிஜி அவற்றைப்பற்றிப் பேசினார். மேலைத் தத்துவங்களில் அவருக்கிருக்கும் பரந்த அறிவும் பொருத்தமான பதில்களும் அனைவரையும் வியப்பில் ஆழ்த்தின.

பல விஷயங்களைப் பற்றிய ஒரு சிறிய உரையாடலுக்குப் பின் கூட்டம் கலைந்தது.

## 3

24 ஜனவரி 1898

கடந்த சனிக்கிழமை சுவாமிஜியிடம் பல கேள்விகள் கேட்டவர் அன்றும் வந்திருந்தார். கலப்புமணத்தைப்பற்றிப் பேச்சை

ஆரம்பித்து, 'பல இனங்களுக்கிடையில் கலப்புமணத்தை எப்படி நடைமுறைப்படுத்துவது?' என்று சுவாமிஜியிடம் கேட்டார்.

சுவாமிஜி: 'வேறுபட்ட மதங்களைப் பின்பற்றும் இனங்களுக்கு இடையில் கலப்புமணம் வேண்டும் என்பது எனது கருத்து அல்ல. தற்கால நிலையில் அவ்வாறு நடப்பது சமுதாயத்தின் கட்டுக்கள் குலைந்து பல்வேறு தீமைகளுக்குக் காரணமாகும் என்பது நிச்சயம். ஒரே மதத்தினரிடையே கலப்புமணம் வேண்டும் என்றே நான் கூறுகிறேன்.'

கேள்வி: 'அதுகூடப் பல குழப்பங்களை உண்டாக்கத் தானே செய்யும். வங்காளத்தில் பிறந்து, வளர்ந்த மகள் எனக்கிருப்பதாகக் கொள்வோம். அவளை மராட்டி அல்லது தமிழ் இளைஞனுக்கு மணம் செய்தால் அவள் தன் கணவனின் மொழியைப் புரிந்துகொள்ள மாட்டாள்; அவனும் மனைவியின் மொழியைப் புரிந்துகொள்ள மாட்டான். பழக்க வழக்கங்களிலும் பெரிய வேறுபாடுகள் இருக்கும். இது தம்பதிகளிடையே உள்ள பிரச்சினை. சமுதாயத்தைப் பொறுத்த வரையிலும் குழப்பங்கள் அதிகமாகவே செய்யும்.'

சுவாமிஜி: 'இத்தகைய கலப்புமணங்கள் பரவலாக நிகழும் காலம் அவ்வளவு அருகில் இல்லை. மேலும் திடீரென்று அவற்றைச் செய்வது சரியல்ல. தடைகள் மிகவும் குறைந்த வழியில் செல்வது, செயல்புரிவது பற்றிய ரகசியங்களுள் ஒன்றாகும். எனவே முதலில் ஒரே ஜாதியின் உட்பிரிவுகளுள் திருமணங்கள் நடக்கட்டும். உதாரணமாக வங்காளத்திலுள்ள காயஸ்த ஜாதியை எடுத்துக் கொள்வோம். அதில் உத்தர ராடி, தட்சிண ராடி, வங்கஜா போன்ற பல உட்பிரிவுகள் உள்ளன. அவர்கள் ஒருவருக்கொருவர் மணம் புரிந்துகொள்வதில்லை. இப்போது, உத்தர மற்றும் தட்சிண ராடி பிரிவினரிடையே கலப்புமணம் நிகழட்டும்; அது முடியாவிட்டால் வங்கஜா, தட்சிண ராடியினரிடையே நடக்கட்டும். இருப்பதை இவ்வாறு வளர்த்துக் கொள்ள வேண்டும். முழுவதையும் உடைத்துப் பொடியாக்குவது சீர்திருத்தம் ஆகாது.'

கேள்வி: 'அப்படியே இருக்கட்டும், அதனால் என்ன நன்மை விளையும்?'

சுவாமிஜி: 'ஒரு விஷயம் உன் கண்களுக்குத் தென்படவில்லையா? நமது சமுதாயத்தில் பல நூற்றாண்டுகளாக ஒரே ஜாதியின் உட்பிரிவுகளுக்கு இடையில் மணம் புரிவது தடுக்கப்

பட்டதால், தற்போது நெருங்கிய உறவினர்களிடையே திருமணம் புரிவது ஆரம்பித்துவிட்டது. இதனால் மக்களின் உடல் வலிமை குறைகிறது. நோய்களுக்கும் மற்றும் பல தீமைகளுக்கும் அவர்கள் எளிதில் ஆளாகின்றனர். குறிப்பிட்ட சிறிய சமுதாய வட்டத்திற்குள்ளேயே ரத்தம் சுழல்வதால் அது கெட்டுவிட்டது. அதனால் குழந்தை பிறக்கும்போதே பெற்றோரிடமிருந்து பெற்ற நோயுடனேயே பிறக்கிறது. நோய்க் கிருமிகளை எதிர்த்துப் போராடும் ஆற்றல் அந்த ரத்தத்தில் இருப்பதில்லை; நோய்க் கிருமிகள் உடனே தாக்கிவிடுகின்றன. திருமண வட்டத்தை விரிப்பதால் புதிய ரத்தம் உடலுள் புகுகிறது. அதனால் இன்றைய நோய்கள், அவற்றிலிருந்து வரும் பலவகைத் துன்பங்கள் இவற்றிலிருந்து நம் மக்களைக் காப்பாற்ற முடியும்; நமது சந்ததியினர் புத்துணர்வு பெற்று வளர முடியும்.'

கேள்வி: 'சிறு வயதிலேயே திருமணம் செய்வதைப்பற்றித் தங்கள் கருத்து என்ன?'

சுவாமிஜி: 'வங்காளத்தின் படித்த வகுப்பினரிடையில் மகன்களுக்கு சிறு வயதில் மணம் செய்விக்கும் வழக்கம் படிப்படியாகக் குறைந்து வருகிறது. பெண்களும் முன்னைவிட ஓரிரு வயது ஏறிய பின்னரே மணமுடித்துக் கொடுக்கப் படுகிறார்கள்—அது பணமில்லாததால்தான் என்பது வேறு விஷயம்; காரணம் எதுவுமாகட்டும். பெண்களின் திருமண வயது இன்னும் உயர்த்தப்பட வேண்டும். பாவம், தந்தைதான் என்ன செய்வான்? பெண் சிறிது வளர்ந்துவிட்டால் போதும், தாய், உறவினர், அண்டைப் பெண்கள் என்று ஒவ்வொருவரும் அவளுக்கு வரன் தேடும்படிக் கூக்குரலிடத் தொடங்கிவிடுவார்கள். தேடி முடிக்கும்வரை அவனை நிம்மதியாக இருக்கவிடமாட்டார்கள்.

'இந்த விஷயத்தில் உங்கள் தர்மக் காவலர்களான மதவாதிகளை பற்றி எதுவும் சொல்வதைவிடச் சொல்லாதிருப்பதே நல்லது. இப்போது அவர்கள் சொல்வதை யாரும் கேட்பதில்லை. எனினும் அவர்கள் தங்களைத் தாங்களே தலைவராகக் காட்டிக் கொள்கிறார்கள். பன்னிரண்டு வயதிற்குக் குறைந்த பெண்களைத் திருமணம் செய்துகொள்பவனுக்குத் தண்டனை கொடுக்க வேண்டும் என்று கூறும் திருமண வயது நிர்ணயச் சட்டம் ஒன்றை அரசாங்கம் கொண்டு வந்தபோது, ''ஐயோ மதம் தொலைந்துவிட்டது, அழிந்து போய்விட்டது'' என்று அன்று அவர்கள் இட்ட ஓலம் இருக்கிறதே! அடடா, அதனை

என்னென்று சொல்வது! பன்னிரண்டு பதின்மூன்று வயதிலேயே பெண்ணைத் தாயாக்குவதில்தான் மதமே உள்ளது போலும்! ''அடக் கடவுளே! இது என்ன மதம்! இந்த லட்சணத்தில் இவர்கள் கலவரம் செய்து அரசியல் உரிமைகளை வேறு கேட்கிறார்களே!'' என்று அரசாங்கம் எண்ணுவதும் இயல்புதானே!'

கேள்வி: 'அப்படியானால் ஆண்களும் பெண்களும் வயது ஏறிய பின்தான் மணம் செய்துகொள்ள வேண்டும் என்பதா தங்கள் கருத்து?'

சுவாமிஜி: 'ஆம். அதனுடன் கல்வியும் புகட்டப்பட வேண்டும். இல்லாவிடில் ஒழுக்கநெறி தவறுதல் போன்ற சீர்குலைவுகள் ஏற்படும். கல்வி என்றால் இக்காலக் கல்வி என்பது எனது கருத்தல்ல. உடன்பாட்டு முறையிலான கல்வியையே நான் குறிப்பிடுகிறேன். வெறும் புத்தகப் படிப்பால் எந்தப் பயனும் இல்லை. சிறந்த குணத்தை உருவாக்குகின்ற, மன வலிமையை வளர்க்கின்ற, அறிவை விரியச் செய்கின்ற, ஒருவனைச் சொந்தக் கால்களில் நிற்கச் செய்கின்ற கல்வியே தேவை.'

கேள்வி: 'பெண்களிடையே பல சீர்திருத்தங்கள் வேண்டியுள்ளது.'

சுவாமிஜி: 'இத்தகைய கல்வி பெற்றால் பெண்கள் தங்கள் பிரச்சினைகளைத் தாங்களே தீர்த்துக்கொள்ள முடியும். எதற்கெடுத்தாலும் ஒப்பாரி வைப்பதற்குத்தான் அவர்கள் இதுவரை கற்பிக்கப்பட்டிருக்கிறார்கள். ஏதாவது ஒன்றானால் போதும், அழத் தொடங்கி விடுவார்கள். வீர உணர்வை அவர்களுக்குப் போதிக்க வேண்டும். இந்தக் காலத்தில் தற்காப்பு முறைகளைக் கூட அவர்கள் அறிய வேண்டியுள்ளது. ஜான்சி ராணியின் வீரத்தை எண்ணிப் பாருங்கள்!'

கேள்வி: 'நீங்கள் சொல்வது முற்றிலும் புதிய முறையாக இருக்கிறது. இந்த முறையில் நமது பெண்களுக்குப் பயிற்சி அளிப்பதற்கு நீண்ட காலம் ஆகும் என்று எண்ணுகிறேன்.'

சுவாமிஜி: 'நம்மால் இயன்ற அளவு முயல வேண்டும். அவர்களுக்குக் கற்பிப்பது மட்டுமல்ல, நாமும் கற்க வேண்டியவை உள்ளன. தந்தையாகிவிட்டால் எல்லாம் ஆகிவிட்டதா? பல பொறுப்புகளைச் சுமக்க வேண்டும். நமது பெண்களுக்கு ஒரு விஷயத்தைச் சுலபமாகச்சொல்லிக் கொடுக்க முடியும். அது கற்பு நெறி. அது அவர்களின் பாரம்பரியப் பண்பு. அதை அவர்கள் எளிதில் புரிந்துகொள்வார்கள். அதை அவர்களிடம் வேரூன்றச் செய்து, அவர்களிடம் பண்புநலத்தை உருவாக்க

வேண்டும். அதன்மூலம், அவர்கள் இல்லறத்திலிருந்தாலும் சரி, திருமணம் செய்யாமல் இருந்தாலும் சரி, கற்பைக்காப்பதற் காக உயிரை வேண்டுமானாலும் விடத் தயங்காதவர்களாகச் செய்ய வேண்டும். ஒரு லட்சியத்திற்காக உயிரைத் தியாகம் செய்வது என்பது சாதாரண வீரமா? இன்றைய நிலைமையைப் பார்த்தால், சில பெண்களாவது துறவு வாழ்க்கையில் பயிற்சி பெற வேண்டும் என்று தோன்றுகிறது. பண்டைக்காலம் முதலே அவர்களது ரத்தத்தில் கலந்து ஓடும் கற்பு என்னும் பண்புநலத் தின் ஆற்றலால் அவர்கள் துறவு நெறியில் நிலைபெற வேண்டும். அதனுடன் அவர்களுக்கு நன்மை பயக்கின்ற விஞ்ஞானம் மற்றும் பிற விஷயங்களையும் கற்பிக்க வேண்டும். இது அவர் களுக்கு மட்டுமல்ல, பிறருக்கும் நன்மை தரும். இதை அறிந்தால் அவர்கள் ஆர்வத்தோடும் மகிழ்ச்சியுடனும் கற்பார்கள். நமது தாய்நாட்டின் நன்மைக்காகப் பாரதத் தாயின் மக்களுள் சில ராவது புனிதமான பிரம்மச்சாரிகளாகவும் பிரம்மச்சாரிணி களாகவும் வாழ வேண்டும்.'

கேள்வி: 'இவர்களால் நாட்டிற்கு எப்படி நன்மை உண்டாகும்?'

சுவாமிஜி: 'அவர்களைப் பார்ப்பதாலும் அவர்களின் முயற்சிகளாலும் தேசிய நிலைமையில் ஒரு தலைகீழ் மாற்றம் உண்டாகும். இப்போதுள்ள நிலைமை என்ன? பெண்ணுக்கு ஒன்பது அல்லது பத்து வயதானால் போதும். எப்படியாவது அவளை ஒருவனிடம் கைப்பிடித்துக் கொடுத்துவிட வேண்டும். பதின்மூன்று வயதில் ஒரு குழந்தை பிறந்துவிட்டாலோ குடும்பம் முழுவதிலுமே கொண்டாட்டமும் குதூகலமும்தான். இந்த நிலைமையைத் தலைகீழாக்கினால் போதும், நாட்டில் சிரத்தை என்பது படிப்படியாக மீண்டும் வந்துவிடும். நாம் முன்பு கூறியது போல் பிரம்மச்சரிய நெறியில் நிற்பவர்களைப் பற்றி என்ன சொல்வேன்—அவர்களிடம்தான் எவ்வளவு சிரத்தையும் தன்னம்பிக்கையும் வளரும்!'

கேள்விகள் கேட்டவர், சுவாமிஜியை வணங்கி விடை பெறத் தயாரானார். சுவாமிஜி அவரிடம் அடிக்கடி வரும்படிக் கூறினார். அவரும் அதற்கு, 'கண்டிப்பாக வருகிறேன். இங்கு வருவதால் எவ்வளவோ நன்மைகள் உண்டாகின்றன. இதுவரை எங்கும் கேட்டிராத பல புதிய விஷயங்களை உங்களிடமிருந்து கேட்டேன்' என்றார். இரவு உணவிற்கு நேரமானதால் நானும் வீடு திரும்பினேன்.'

4

அன்று பிற்பகல் நான் மீண்டும் சுவாமிஜியிடம் வந்தேன். அவரைச் சுற்றிப் பெரிய கூட்டம் இருந்தது. சைதன்யர் பற்றிய பேச்சு நடந்து கொண்டிருந்தது. சுவாமிஜியின் பேச்சைக் கேட்டு அவ்வப்போது அனைவரும் சிரித்துக் கொண்டிருந்தனர். அப்போது ஒருவர், 'சைதன்யரின் செயல்களில் இவ்வளவு சிரிப்பதற்கு என்ன இருக்கிறது? அவர் பெரிய மகான், மனித குலத்திற்காகவே ஒவ்வொன்றையும் செய்தவர். இது புரியவில்லையா?' என்று கேட்டார்.

சுவாமிஜி: 'யாரப்பா அது? நான் வெறுமனே கேலிப் பேச்சு பேசிக் கொண்டிருக்கிறேன் என்றா நினைக்கிறீர்கள். நீங்கள் இந்தப் பக்கத்தை மட்டும்தான் பார்க்கிறீர்கள். நானோ கொழுந்துவிட்டெரியும் அவரது துறவு நிலையை அடைவதற்காக என் வாழ்நாள் முழுவதும் எவ்வளவு போராடி வருகிறேன் தெரியுமா? காமம், பணத்தாசை இவற்றைத் துறக்கும் அந்த உயர்ந்த கருத்தைச் சாதாரண மக்களிடையே பரப்புவதற்கு எவ்வளவு பாடுபடுகிறேன் என்பதை நீங்கள் பார்க்கவில்லையா? அவர் ஈடிணையற்ற துறவி. பெண்களுடனோ இன்ப நுகர்ச்சிகளுடனோ அவருக்கு எந்தவிதத் தொடர்பும் இருந்ததில்லை. ஆனால் பிற்காலத்தில் அவரது சீடர்கள் அவர் பெயரைச் சொல்லிக்கொண்டு சற்றும் ஆராயாமல் பெண்களைத் தங்கள் சங்கத்தில் அனுமதித்தனர். அவர் தமது வாழ்வில் காட்டிய அன்பு சிறிதும் தன்னலமில்லாதது; காமத் தொடர்பு சிறிதும் இல்லாதது. அத்தகைய உயர்ந்த நிலையைச் சாதாரண மக்கள் பின்பற்ற முடியாது. ஆனால் பிற்காலத்தில் வந்த வைணவ குருமார்கள் சைதன்யரின் துறவை வற்புறுத்திப் போதிப்பதை விடுத்து அவரது பிரேமைக் கருத்தைச் சாதாரண மக்களிடம் பரப்பினார்கள். விளைவு? அந்த உயர்ந்த தெய்வீக அன்பின் பெருமையைச் சாதாரண மக்கள் புரிந்துகொள்ளாமல் அதை ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையிலுள்ள காமம் என்று எண்ணி இழிநிலையை அடைந்தார்கள்.'

கேள்வி: 'அவர் சண்டாளர்களுக்குக்கூட ஹரி நாமத்தைப் போதித்தார். அதைச் சாதாரண மக்கள் ஏற்றுக்கொள்ளலாமே!'

சுவாமிஜி: 'நான் அவரது உபதேசத்தைப் பற்றிப் பேசவில்லை. இரவும்பகலும் தம்மை மறந்து ராதையின் நிலையில் நின்று ஸ்ரீகிருஷ்ணரிடம் அவர் செலுத்திய ராதாபிரேமை என்னும் அன்பைப்பற்றியே கூறுகிறேன்.'

கேள்வி: 'அதை ஏன் சாதாரண மக்கள் பின்பற்ற முடியாது?'

சுவாமிஜி: 'அப்படி ஒன்றைப் பின்பற்றியதால் நாடு என்ன நிலைமைக்கு இழிந்திருக்கிறது என்பதைப் பார். அந்தப் பிரேமைக் கருத்தைப் பரப்பியதால் நாடே ''பெண்கள்'' நாடாகி விட்டது. ஒரிசா முழுவதும் கோழைகளின் பூமியாகிவிட்டது. வங்காளமோ கடந்த நானூறு வருடங்களாக இந்த ராதா பிரேமை என்பதன் பின்னால் ஓடி ஆண்மை என்பதை ஏறக் குறையே இழந்துவிட்டது. அழுவதற்கும் புரள்வதற்கும் நமது மக்களை விட்டால் வேறு ஆளே இல்லை. இலக்கியங்களைப் பாருங்கள். சென்ற நானூறு ஆண்டுகளாக வங்கக் கவிஞர்கள் அழுவதையும் ஓலமிடுவதையும்தான் ஒரே கருத்தாகக் கொண் டிருக்கிறார்கள். உண்மையான வீரச்சுவை பொங்கும் ஒரு பாடலைக்கூட வங்க இலக்கியம் தரவில்லை.'

கேள்வி: 'அப்படியானால் அந்த உயர்ந்த பிரேமையை யார்தான் அடைய முடியும்?'

சுவாமிஜி: 'காமம் இருந்தால் பிரேமை இல்லை, எள்ளளவு இருந்தால்கூட பிரேமைக்கு அங்கு இடம் இல்லை. கொழுந்து விட்டெரியும் துறவும் மகா வீரமும் பொருந்தியவர்களைத் தவிர வேறு யாரும் அந்தப் பிரேமைநெறிக்கு உரியவர்கள் அல்ல. அந்த லட்சியத்தைச் சாதாரண மக்கள் கடைப்பிடிக்கப் போனால் அது அவர்கள் மனத்தில் காமத்தையே எழுப்பிவிடும். அவர்கள் இறைவனிடம் கொள்ளும் பிரேமை, மனைவியிடம் காட்டும் அன்பையே நினைவுபடுத்தும். இதனால் என்ன நடக்கும் என்பதைச் சொல்லித் தெரிய வேண்டியதில்லை.'

கேள்வி: 'அப்படியானால் இறைவனைக் கணவனாக அல்லது காதலனாகவும் தன்னைக் காதலியாகவும் எண்ணும் மதுரபாவனை நெறியைக் கடைப்பிடித்து இல்லறத்தார்கள் இறைவனை அடைய முடியாதா?'

சுவாமிஜி: 'ஏதோ ஒரிருவரால் முடியலாம். சாதாரண இல்லறத்தார்களுக்கு அது முடியாது என்பதில் சந்தேகமில்லை. ஆனால் இந்தப் பாதையில் ஏன் அதிகக் கவனம் செலுத்த வேண்டும்? இறைவனை வழிபட மதுரபாவனையைத் தவிர வேறு வழியே இல்லையா? மற்ற நான்கு பாவனைகள் உள்ள னவே! அவற்றைப் பின்பற்றிச் சாதனைகள் செய்யலாமே! அதனால் இதயம் தூய்மை பெறும். அதன்பிறகு என்ன நடக்க வேண்டுமோ அதுதானாக நடக்கும். ஆனால் காமம் என்பது

இருக்கும்வரை பிரேம்ம தோன்றாது என்பதை மனத்தில் பதித்துக்கொள். காமத்தை விடுவதற்கு ஏன் முதலில் முயலக் கூடாது? ''அது எப்படி முடியும்? நான் இல்லறத்தான் ஆயிற்றே'' என்று நீ கேட்கலாம். இது அர்த்தமற்ற பேச்சு. இல்லறத்தான் என்பதற்காகக் காமத்தில் அழுந்திக் கிடக்க வேண்டுமா? பெண்ணிடம் காமத் தொடர்புதான் வைத்துக் கொள்ள வேண்டுமா என்ன? இனி, ஏன் மதுர பாவனையில் இந்த ஈடுபாடு? ஆணாகப் பிறந்த ஒருவன் தன்னைப் பெண்ணாக ஏன்தான் எண்ணிக்கொள்ள முயல வேண்டும்?'

கேள்வி: 'உண்மைதான். பஜனையும் சங்கீர்த்தனமும் நல்லது. சாஸ்திரங்களும் அதைப்பற்றிக் கூறுகின்றன. சைதன்யரும் மக்களுக்கு அதையே போதித்தார். கோல் வாத்தியத்தை வாசிக்கும்போது இதயம் மகிழ்ச்சியால் விம்ம நடனமாடும் எண்ணம் தானாகவே பிறக்கிறது.'

சுவாமிஜி: 'சரிதான். ஆனால் சங்கீர்த்தனம் என்றால் நடனம் மட்டும்தான் என்று எண்ணிவிடாதே. இறைவனின் பெருமைகளைப் பாடுவதே அது. வைணவர்களின் நடனம் நம்மை ஒருவிதமாகக் கிளர்ந்தெழச் செய்கிறது என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். ஆனால் அதில் பேரபாயமும் உள்ளது. அதிலிருந்து உங்களை நீங்கள் காத்துக்கொள்ள வேண்டும். உள்ளக் கிளர்ச்சிக்குப் பிறகு வரும் மனச்சோர்வே அந்த அபாயம். கண்களிலிருந்து நீர் சொரிய, கள் குடித்ததுபோல் தலை சுழல, மன உணர்ச்சிகள் எவ்வளவு உச்ச நிலைக்கு எழுப்பப்படுகின்றனவோ, சங்கீர்த்தனம் முடிந்ததும் அவ்வளவு தாழ்ந்த நிலைக்கும் இறங்கி விடுகின்றன. அலை உயர எழும் அளவிற்கு அதே வேகத்துடன் கீழேயும் விழுகின்றது. விவேகத்தின் துணை இல்லாவிட்டால், அப்போது காமம் முதலிய கீழான குணங்களுக்கு அடிமைப்பட நேரும். இதனால் சர்வநாசம் நிச்சயம். அமெரிக்காவிலும் இதே விஷயத்தைப் பார்த்திருக் கிறேன். பலர் சர்ச்சுக்குச் சென்று பக்தியுடன் பிரார்த்தனை செய்வார்கள்; உணர்ச்சிப் பெருக்குடன் பாடுவார்கள்; சொற் பொழிவைக் கேட்கும்போது கண்ணீர் வடிப்பார்கள். ஆனால் திரும்பும்போதோ விலைமகளிர் வீட்டிற்குச் சென்றுவிடு வார்கள்.'

கேள்வி: 'அப்படியானால் சைதன்யரின் எந்தக் கருத்துக்கள் வழி தவறாமல் எங்களைக் காப்பவை, எங்களுக்குப் பொருத் தமானவை என்பதைக் கூற வேண்டும்.'

சுவாமிஜி: 'ஞானமிச்ர பக்தி அதாவது ஞானம் கலந்த பக்தியை இறைவனிடம் கொள்ளுங்கள். பக்தியுடன் எப்போதும் விவேகத்தை இணைத்துக் கொள்ளுங்கள். மேலும், அவரது பரந்த இதயம், உயிர்கள் அனைத்திடமும் கருணை, இறைவனிடம் கொண்ட ஈர்ப்பு, தியாகம்—இவற்றை உங்கள் வாழ்வின் லட்சியமாக்கிக் கொள்ளுங்கள்.'

கேள்வி கேட்டவர் சுவாமிஜியை வணங்கி, கூப்பிய கைகளுடன், 'என்னை மன்னித்துவிடுங்கள். நீங்கள் கூறியதன் உண்மை இப்போதுதான் எனக்குத் தெரிகிறது. வைணவர்களின் மதுரபாவனையை நீங்கள் கேலி செய்வதாக முதலில் எண்ணினேன். அதனால் உங்கள் வார்த்தைகளைத் தவறாகப் புரிந்து கொண்டேன்' என்றார்.

சுவாமிஜி (சிரித்தவாறே): 'திட்டுவதென்றால்கூட இறைவனையே திட்டுவதுதான் நல்லது. நீங்கள் என்னை ஏசினால் எனக்குக் கோபம் வரும். நான் ஏசினால் உங்களுக்குக் கோபம் வரும். ஆனால் இறைவன் அப்படியில்லை.'

அவர் சுவாமிஜியின் திருப்பாதங்களை வணங்கி விடைபெற்றார். சுவாமிஜி கல்கத்தாவில் தங்கினால் எப்போதும் கூட்டம் சூழ்ந்திருக்கும் என்பதை ஏற்கனவே உங்களுக்குக் கூறியுள்ளேன். அதிகாலையிலிருந்து இரவு எட்டு ஒன்பது மணிவரை கூட்டம் அவரை மொய்த்த வண்ணமே இருக்கும். இதனால் சுவாமிஜி குறித்த நேரத்தில் உண்ணக்கூட முடிவதில்லை. இந்த நிலையை மாற்றுவதற்காக, குறிப்பிட்ட நேரத்தில் மட்டும் மக்களைச் சந்திக்கும்படி அவரிடம் பலர் கூறினார்கள். ஆனால் பிறர்நலத்திற்காக எப்போதும் எதையும் செய்ய ஆயத்தமாயிருக்கும் சுவாமிஜியின் அன்பு இதயம் மக்களிடம் எழுந்த ஆன்மீக தாகத்தைக் கண்டு உருகியதால் அவர் இந்த ஏற்பாட்டை ஏற்றுக்கொள்ளவில்லை; தமது உடல்நலக் குறைவுகளை அவர் சற்றும் பொருட்படுத்துவதில்லை. 'அவர்கள் எவ்வளவு சிரமத்துடன் இங்கு வருகிறார்கள். நான் எனது உடல்நலத்தை எண்ணி அவர்களுடன் பேசாமல் இருக்க முடியுமா?' என்பதே அவரது ஒரே பதிலாக இருக்கும்.

ஏறத்தாழ மாலை நான்கு மணிக்கு உரையாடல் முடிந்ததும் ஓரிருவரைத் தவிர அனைவரும் சென்றுவிட்டனர். அவர்களுடன் சுவாமிஜி இங்கிலாந்து, அமெரிக்கா பற்றிய பல விஷயங்களைப் பற்றிப் பேசினார். அப்போது அவர் கூறியதாவது:

'இங்கிலாந்திலிருந்து திரும்பி வரும்போது ஒரு வினோத மான கனவு கண்டேன். மத்தியதரைக் கடல் வழியாக எங்கள் கப்பல் வந்தபோது நான் தூங்கிக் கொண்டிருந்தேன். அப்போது வயதான ரிஷி போன்ற ஒருவர் என் கனவில் தோன்றினார். அவர் என்னிடம், ''எங்கள் பழைய நிலையை நீ எங்களுக்கு மீட்டுத் தர வேண்டும். நாங்கள் இந்தியாவின் புராதன ரிஷிகளாகிய தேரா புத்தர்களின்[1] வழிவந்தவர்கள். நாங்கள் போதித்த உண்மைகளையும் கருத்துக்களையும் கிறிஸ்தவர்கள், ஏசு என்பவரால் போதிக்கப்பட்டதாகப் பிரச்சாரம் செய் கிறார்கள். உண்மையில் ஏசு என்று ஒருவர் பிறக்கவேயில்லை. இந்த இடத்தைத் தோண்டிப் பார்த்தால் அதற்கான ஆதார உண்மைகள் கிடைக்கும்'' என்றார். உடனே நான், ''எந்த இடத்தைத் தோண்ட வேண்டும்?'' என்று கேட்டேன். உடனே அவர் துருக்கியைச் சேர்ந்த ஒரு பகுதியைக் காட்டி, ''இதோ, இங்கேதான்'' என்றார். நான் விழித்தெழுந்த உடனே கப்பலின் மேல்தளத்திற்குச் சென்று கப்பல் கேப்டனிடம், ''நாம் இப்போது எந்த இடத்தில் இருக்கிறோம்?'' என்று கேட்டேன். அதற்கு அவர், ''அதோ பாருங்கள், அங்கேதான் துருக்கியும் கிரீட் தீவும் (Crete) உள்ளன'' என்றார். இது வெறும் கனவுதானா! அல்லது இதில் ஏதாவது உண்மை இருக்கிறதா? யாருக்குத் தெரியும்?' ❑

---

1. ஒரு பௌத்தப் பிரிவினர்.

## IV

'ஒருநாள் கல்லூரி நண்பர்கள் சிலருடன் சுவாமிஜியைப் பார்க்க பேலூர் மடத்திற்குச் சென்றேன். அவரைச் சுற்றி அமர்ந்தோம். பல விஷயங்கள் அங்குப் பேசப்பட்டன. கேள்விகள் கேட்ட போது சற்றும் தாமதமின்றித் தகுந்த விடையை அவர் அளித்துக் கொண்டிருந்தார். திடீரென அவர் எங்களைப் பார்த்து, 'நீங்கள் பல்வேறு ஐரோப்பியத் தத்துவங்களையும் ஆராய்ச்சிகளையும், நாடு, மக்கள் சமுதாயம் இவற்றின் புதிய உண்மைகளையும் கற்றிருக்கிறீர்கள். வாழ்வின் மிக மேலான உண்மை எதுவென்று சொல்லுங்கள், பார்க்கலாம்' என்றார்.

நாங்கள் சிந்திக்கத் தொடங்கினோம். ஆனால் அவர்என்ன சொல்ல விரும்பினார் என்பது எங்களுக்குப் புரியவில்லை. நாங்கள் யாரும் எந்தப் பதிலையும் கூறாத உடன் அவர்தமக்கே உரிய கம்பீரத்துடன் சொல்லத் தொடங்கினார்:

'இதோ பாருங்கள், நாம் அனைவரும் இறந்துவிடுவோம். இந்த உண்மையை எப்போதும் உங்கள் மனத்தில் கொள் ளுங்கள். அப்போது உங்கள் உள்ளே உள்ள ஆன்மா விழித் தெழும். அப்போது மட்டுமே உங்கள் மனத்திலிருந்து அற்பத் தனம் விலகும்; செயல்திறன் உருவாகும்; உடலும் உள்ளமும் புத்தெழுச்சி பெறும்! உங்களுடன் தொடர்பு கொள்பவர்களும் தாங்கள் நன்மை அடைந்ததாகக் கருதுவார்கள்.'

பின்னர் எனக்கும் சுவாமிஜிக்கும் இடையில் பின்வரும் உரையாடல் நடைபெற்றது.

நான்: 'ஆனால் சுவாமிஜி, மரணத்தைப்பற்றி நினைப் பதால் மனம் உடைந்து சோகம் உண்டாகாதா?'

சுவாமிஜி: 'உண்டாகும். முதலில் மனமுடைந்து சோகமும் துயர எண்ணங்களும் எழத்தான் செய்யும். சில நாட்கள் அப்படியே கழியட்டும். பின்னர் இதயத்தில் புதிய வலிமை புகுவதைக் காண்பீர்கள். எப்போதும் மரணத்தைப்பற்றி நினைப் பது உங்களுக்கு ஒரு புதிய வாழ்வைத் தந்து உங்களை மேன் மேலும் சிந்திக்கத் தூண்டுகிறது; ''வெறுமை, வெறுமை, அனைத்தும் வெறுமை'' என்பதன் உண்மையை உங்கள் கண் முன் ஒவ்வொரு கணமும் கொண்டுவருகிறது. நாட்கள், மாதங் கள், ஆண்டுகள் கடந்து செல்லட்டும். உங்கள் ஆன்மா சிங்கத் தின் வலிமையுடன் விழித்தெழுவதைக் காண்பீர்கள். உள்ளே

யிருந்த சிறிய ஆற்றல், பேராற்றலாக மாறுவதை உணர்வீர்கள். எப்போதும் மரணத்தை நினையுங்கள். அப்போதுதான் நான் கூறும் ஒவ்வொரு வார்த்தையின் பொருளையும் நீங்கள் உணர் வீர்கள். இன்னும் நான் என்ன சொல்ல இருக்கிறது?'

என் நண்பர் ஒருவர் சுவாமிஜியை மெல்லிய குரலில் புகழ்ந்துகொண்டிருந்தார்.

சுவாமிஜி: 'என்னைப் புகழாதே. இந்த உலகத்தில் புகழ்ச்சி யும் இகழ்ச்சியும் பயனற்றவை. அவை ஊஞ்சலைப்போல் ஒரு வனை அங்குமிங்கும் அலைக்கழிக்கின்றன. வேண்டிய அளவு புகழை நான் பெற்றுவிட்டேன்; இகழ்ச்சி மழைகளிலும் நனைந்துவிட்டேன். அவற்றை நினைத்து என்ன பயன்? இதைப் பொருட்படுத்தாமல் ஒவ்வொருவரும் தனது கடமையைச் செய்ய வேண்டும். வாழ்வின் இறுதிவேளை வரும்போது எனக்கும் உனக்கும் மற்ற அனைவருக்கும் புகழ்ச்சியும் இகழ்ச்சி யும் ஒன்றாகவே தோன்றும். செயல்புரிவதற்காகவே நாம் இங்கு வந்திருக்கிறோம்; அழைப்பு வந்தால் அனைத்தையும் விட்டு விட்டுச் செல்ல வேண்டியதுதான்.'

நான்: 'நாம் எவ்வளவு சாதாரணமானவர்கள், சுவாமிஜி!'

சுவாமிஜி: 'உண்மைதான். நீ சரியாகச் சொன்னாய். கோடிக்கணக்கான அண்டங்களுடன் சுழலும் இந்த எல்லை யற்ற பிரபஞ்சம், அறியவே முடியாத அது சுழலும் எல்லையற்ற ஆற்றல், அறியாத பரம்பொருளின் பாதங்களைத் தொடுவது போல் அது செல்லும் வேகம்—இவற்றுடன் ஒப்பிடும்போது நாம் எவ்வளவு சிறியவர்கள்! இந்த நிலையில் தீமைகளிலும் அற்பத்தனங்களிலும் நாம் ஏன் ஈடுபட வேண்டும். பகையாலும் பாரபட்சங்களாலும் என்ன பயன்? நான் சொல்வதைக் கேளுங்கள்! கல்லூரியிலிருந்து வந்ததும் பிறருக்குத் தொண்டு செய்யும் முயற்சியில் முழுமையாக ஈடுபடுங்கள். பணக் குவியல் களும் மற்ற பொருட்களும் ஏராளம் வைத்திருப்பதைவிட அது உங்களுக்கு மேலான இன்பத்தைத் தரும். நான் சொல்வதை நம்புங்கள். நீங்கள் சேவை செய்துகொண்டே போவீர்களானால் ஆன்மீக வாழ்விலும் முன்னேறுவீர்கள்.'

நான்: 'ஆனால் சுவாமிஜி, நாங்கள் மிகவும் ஏழைகள் ஆயிற்றே!'

சுவாமிஜி: 'வறுமை எண்ணத்தை விட்டுவிடுங்கள். எந்த விதத்தில் நீங்கள் ஏழை? ஒரு குதிரை வண்டியும், இட்ட வேலையை உடனே செய்ய வேலையாட்களும் இல்லை

என்பதற்காகவா நீங்கள் வருந்துகிறீர்கள்? அவை இல்லா விட்டால் என்ன? உங்கள் இதய ரத்தத்தைச் சிந்தி, பிறருக்காக இரவும் பகலும் உழைப்பீர்களானால் உங்களால் எதுதான் முடியாது? உங்கள் கண்முன்னாலேயே புனித வாழ்வின் மறுகரை தோன்றும்; மரணத்திரை அகலும்; என்றும் அழியாத மரணமில்லாத நாட்டை நீங்கள் அடைவீர்கள்.'

நான்: 'ஓ, உங்கள் முன் அமர்ந்து, ஆற்றல் தரும் உங்கள் வார்த்தைகளைக் கேட்க எவ்வளவு ஆனந்தமாக இருக்கிறது!'

சுவாமிஜி: 'இத்தனை வருடங்களாக இந்தியா முழுவதும் நான் பயணம் செய்தபோது, எத்தனையோ மகான்களைக் கண் டிருக்கிறேன். அன்பும் கருணையும் பொங்கி வழியும் இதயத் துடன் வாழும் அவர்களின் திருப்பாதங்களில் அமர்வதால் என்னுள் பேராற்றல் நிறைவதை நான் உணர்ந்திருக்கிறேன். அவர்களிடமிருந்து பெற்ற அந்தப் பேராற்றலின்மூலமே நான் இப்போது உங்களிடம் பேசுகிறேன். என்னை ஏதோ பெரியவன் என்று எண்ணாதீர்கள்.'

நான்: 'ஆனால் சுவாமிஜி, நீங்கள் கடவுளை அறிந்தவர் என்றே நாங்கள் கருதுகிறோம்.'

இதைச் சொன்னதுதான் தாமதம். அவர் கண்களில் கண்ணீர் நிறைந்தது. (ஓ, அந்தக் காட்சி எவ்வளவு தெளிவாக என் கண்முன் இன்னும் நிழலாடுகிறது!) அன்பு பொங்கும் இதயத்துடன் மென்மையாக, இனிமையாக சுவாமிஜி பேசி னார்: 'எந்தத் திருவடித் தாமரைகள் ஞானிகளால் தேடப்படும் ஞானத்தின் முடிவாக இருக்கிறதோ, எந்தத் திருப்பாதங்கள் பக்தர்களால் தேடப்படும் பக்தியின் நிலைக்களனாக இருக் கிறதோ, அந்தத் தாமரைப் பாதங்களைத் தவிர வேறு எதனிடம் நாம் அடைக்கலம் புக முடியும்?'

சிறிது தாமதித்து மீண்டும் கூறினார்: 'அந்தோ! வாதங் களிலும் சண்டையிலும் நாட்களைச் செலவிட்டு மனிதர்கள் எவ்வளவு பெரிய தவறைச் செய்கிறார்கள்! எத்தனை நாட்கள் இப்படிப் பேசுவார்கள்? வாழ்வின் அந்திப்பொழுதில் எல் லோரும் தங்கள் சொந்த வீட்டிற்குப் போயே தீர வேண்டும்; அன்னையின் திருக்கரங்களில் தவழ்ந்தேயாக வேண்டும்!' ❑

# 1. மதம், நாகரீகம், அற்புதங்கள்

'அப்பீல் அவலாஞ்ச்', ஜனவரி 1894

அமெரிக்காவிலுள்ள மெம்பிஸ் நகரில் லாஸாலட் அக்காடமி கூட்டத்தில் சுவாமிஜி பேசினார். ஒரு கேள்விக்குப் பதிலாகத் தம் சுயசரிதத்தைப்பற்றி அவர் பின்வருமாறு கூறினார்.

**சு**வாமிஜி: 'நான் ஒரு துறவி, புரோகிதன் அல்ல. என் நாட்டில் இருக்கும்போது கிராமம்கிராமமாக, நகரம்நகரமாக மக்களுக்கு போதித்துக் கொண்டே போவேன். பணத்தைத் தொட எனக்கு அதிகாரமில்லை. எனவே மக்கள் உணவளித்து என்னைக் காப்பாற்றுவார்கள்.

'நான் வங்காளத்தில் பிறந்தேன். நானே விரும்பித் துறவியானேன், பிரம்மச்சாரியானேன். நான் பிறந்தவுடன் என் ஜாதகத்தை என் தந்தை குறித்து வைத்தார். அதைப்பற்றி என்னிடம் சொல்லவில்லை. தந்தை இறந்தபின், சில ஆண்டுகளுக்கு முன்பு நான் ஒருமுறை என் ஊருக்குச் சென்றேன். அப்போது என் தாயின் பெட்டியிலிருந்த ஜாதகத்தைப் பார்த்தேன். நான் உலகமெல்லாம் சுற்றித் திரியும் துறவியாகத் திகழ்வேன் என்று அதில் குறிக்கப்பட்டிருந்தது.'

சுவாமிஜியின் குரலில் கவலை தொனித்தது. கேட்டுக் கொண்டிருந்த சிறு கூட்டத்திலும் மெல்லிய அனுதாபக் குரல் எழுந்தது. அவர் புகைத்துக் கொண்டிருந்த சிகரெட் சாம்பலைத் தட்டிவிட்டு அமைதியாக அமர்ந்திருந்தார்.

ஒருவர்: 'உங்கள் மதம் பெருமை வாய்ந்தது என்று நீங்கள் சொல்வது உண்மையானால், அதுதான் உண்மையான ஒரே மதம் என்றால், உங்கள் நாடு நாகரீகத்தில் இப்போதைய நிலைமையைவிட ஏன் முன்னேறவில்லை? உலக நாடுகளுள் அது ஏன் உயர்ந்ததாக ஆகவில்லை?'

சு: 'அது மதத்தின் எல்லைக்கு உட்பட்டதல்ல. உலகில் மிகவும் ஒழுக்கசீலர்கள் எங்கள் மக்களே. மற்ற இனத்தினருக்குச் சமமாகவேனும் உள்ளவர்கள். அவர்கள் பிறருடைய

---

இந்தப் பேட்டிகள் பல பத்திரிகைகளில் வெளிவந்தவை. பத்திரிகையின் பெயரும் நாளும் தலைப்பிற்குக் கீழே தரப்பட்டுள்ளன.

உரிமைகளைக் காப்பாற்றுவதில் கருத்து உள்ளவர்கள், வாயில்லா பிராணிகளின் உரிமைகளைக்கூடப் புறக்கணிப்ப தில்லை. ஆனால் அவர்கள் வெறும் உலகாயதர்கள் அல்ல. ஒரு நாட்டின் அல்லது நாட்டு மக்களின் சிந்தனையையோ ஊக்கத்தையோ எந்த மதமும் வளர்த்ததாகத் தெரியவில்லை. உண்மையில், உலக வரலாற்றில் எந்தப் பெரிய செயலும் மதத் தின் குறுக்கீடில்லாமல் நிறைவேறியதாகத் தெரியவில்லை. நீங்கள் பெருமையடித்துக் கொள்கின்ற கிறிஸ்தவ மதம்கூட இந்த உண்மைக்கு விலக்கல்ல. உங்கள் டார்வின்கள், உங்கள் மில்கள், உங்கள் ஹ்யூம்கள் ஒருவரும் உங்கள் பாதிரிகளின் மதிப்பைப் பெறவில்லை. இந்த நிலையில் ஏன் எனது மதத்தை நீங்கள் இகழ வேண்டும்?'

ஒருவர்: 'ஆன்மீகத்திலும் உலக வாழ்விலும் மனித இனத்தை மேம்படுத்தாத ஒரு மதத்திற்கு ஒரு துரும்பின் மதிப்புக்கூட கொடுக்கமாட்டேன். நீங்கள் கூறுவதில் உண்மை இருப்பதாகத் தெரியவில்லை. என்னால் அதை ஏற்க முடியாது. கிறிஸ்தவ மதம் கல்லூரிகளையும் மருத்துவமனைகளையும் கட்டியிருக்கிறது; தாழ்த்தப்பட்டவர்களை உயர்த்தியிருக் கிறது. அந்த மதத்தினரை நல்வாழ்வு வாழும்படித் தூண்டி யிருக்கிறது.'

சு: 'நீங்கள் கூறியது ஓரளவுதான் உண்மை. ஆனால் இவை யாவும் உங்கள் கிறிஸ்தவ மதத்தின் நேர்விளைவு என் பதை நீங்கள் தெளிவுபடுத்தவில்லை. மேலைநாட்டில் வேறு பல காரணங்களும் செயல்பட்டதால்தான் இந்த விளைவுகள் ஏற்பட்டன.

'மதச் சிந்தனை மனிதனின் ஆன்மீக இயல்பை உயர்த்த வேண்டும். விஞ்ஞானம், கலை, கல்வி, தத்துவ ஆராய்ச்சி இவை அனைத்திற்கும் வாழ்வில் உரிய இடமுண்டு. ஆனால் அவற்றை இணைக்க முற்பட்டால் அவற்றின் தனித்தன்மைகள் அழிந்துவிடும். இறுதியில் மதத்திலிருந்து ஆன்மீகத்தையே விலக்கிவிடுவீர்கள். நீங்கள், அமெரிக்கர்கள் எதை வழிபடு கிறீர்கள்? பணத்தைத்தான். பணம், பணம் என்று அடித்துக் கொண்டு நீங்கள் ஓடும் பைத்தியக்கார வேகத்தில் ஆன்மீகத் தையே மறந்து, இறுதியில் உலகாயத நாடாக மாறி விட்டீர்கள். எங்கும் தலைவிரித்தாடுகின்ற இந்தப் பணத்தாசை, உங்கள் பாதிரிகளையும் சர்ச்சுகளையும்கூட விட்டுவைக்கவில்லை. எங்கள் நாட்டு மகான்கள் சிலரது பெயரைக் கூறுகிறேன்,

அவர்களைப்போல் ஆன்மீக வாழ்க்கை வாழ்ந்த ஒருவரை உங்கள் வரலாற்றில் காட்டுங்கள், பார்க்கலாம். ''ஏ மரணமே, என் சகோதரனே, வா உன்னை வரவேற்கிறேன்'' என்று கூறிய வர்களுக்கு இணையும் உண்டா? பெர்ரிஸ் சக்கரங்களை அமைப் பதற்கும் ஈபெல் கோபுரங்களை எழுப்புவதற்கும் உங்கள் மதம் உதவுகிறது. ஆனால் அது உங்கள் அக வளர்ச்சிக்கு உதவி புரிகிறதா?'

அந்தத் துறவி மிகவும் ஆர்வத்துடன் பேசினார். கணீ ரென்று அளவாக ஒலிக்கின்ற அவரது இனிய குரல் அந்த அறையில் சூழ்கின்ற இருளின்மீது மெல்ல மிதந்து வந்தது. அந்தக் குரலில் துயரமும் நிந்தனையும் இழைந்து எழுந்தன. ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே வரலாற்றில் இடம்பெற்ற நாட்டிலிருந்து வந்த அவர், பத்தொன்பதாம் நூற்றாண்டின் அமெரிக்க நாகரீகத்தைக் குறை கூறினார். அவரது பேச்சுக்களில் அறிவுக் கெட்டாத ஓர் அம்சம் இருந்தது.

ஓ: 'ஆனால் ஆன்மீக வாழ்வைத் தேடுவதில் நீங்கள் இந்த வாழ்வின் தேவைகளை மறந்துவிட்டீர்கள். உங்கள் கொள்கை மனிதன் வாழ உதவவில்லையே!'

சு: 'மரணத்தை இன்பமாக ஏற்க அது உதவுகிறதே!'

ஓ: 'இந்த வாழ்வுதான் எங்களுக்கு நிச்சயமானதாகத் தெரிகிறது.'

சு: 'உங்களுக்கு எதுவும் நிச்சயமில்லை.'

ஓ: 'ஒரு லட்சிய மதத்தின் நோக்கம் இந்த வாழ்விற்கும் உதவ வேண்டும், மறு உலகிற்கும் வழிகாட்ட வேண்டும். அதே வேளையில், மரணத்தை ஏற்க அது ஒருவனை ஆயத்தம் செய்யவும் வேண்டும்.'

சு: 'அதேதான். நாங்களும் அதையே தேடுகிறோம். இந்து மதம் மனிதனின் ஆன்மீகப் பக்கத்தை வளர்த்தது, உலக வாழ்வைப் புறக்கணித்தது. மேலைநாடு இதற்கு நேர்மாறான தைச் செய்தது. மேற்கின் உலகாயதமும் கிழக்கின் ஆன்மீகமும் இணைந்தால் பல காரியங்களைச் சாதிக்கலாம் என்று நான் நம்புகிறேன். இந்த முயற்சியில் ஒருவேளை இந்துமதம் தன் தனித்தன்மையைப் பேரளவிற்கு இழக்க நேரலாம்.'

ஓ: 'நீங்கள் நினைப்பதுபோல் நடக்க வேண்டுமானால், இந்திய சமுதாய அமைப்பையே மாற்ற வேண்டுமே?'

சு: 'ஆம். ஒருவேளை மாற நேரும். ஆனாலும் மதம் எந்தப் பழுதும் இன்றி அப்படியே இருக்கும்.'

இந்துக்களின் வழிபாட்டைப்பற்றிப் பேச்சு எழுந்தது. விவேகானந்தர் சில அரிய செய்திகளைக் கூறினார். மற்ற நாடுகளைப் போலவே இந்தியாவிலும் ஆஜ்ஞேயவாதிகளும் நாத்திகர்களும் இருக்கிறார்கள். பிரம்மத்தை நாடுபவர்களின் முக்கிய நோக்கம் அனுபூதி. நம்பிக்கை தேவையில்லை. தியாசஃபியைப் பற்றி அவருக்குப் பெரிதாக எதுவும் தெரியவில்லை. அது அவரது மதத்தின் ஒரு பகுதியல்ல. விரும்பினால் அதை ஒரு பகுதியாக ஆக்கிக்கொள்ள முடியும். மேடம் பிளாவட்ஸ்கியை அவர் நேரில் கண்டதில்லை. ஆனால் அமெரிக்க தியாசஃபி சபையைச் சார்ந்த கர்னல் ஆல்காட்டைச் சந்தித்திருக்கிறார். அன்னி பெசன்டையும் அவருக்குத் தெரியும். கழைக் கூத்தாடிகள், கண்கட்டு வித்தை செய்பவர்கள், மந்திரவாதிகள் போன்றவர்களின் அருஞ்செயல்கள் இந்தியப் பக்கிரிகளின் புகழை உலகமெங்கும் பரப்பியிருக்கின்றன. இவைபற்றித் தமக்குத் தெரிந்த சில நிகழ்ச்சிகளை அவர் குறிப்பிட்டார். நம்புவதற்கு மிகவும் கடினமானவை அவை.

சு: 'ஐந்து மாதத்திற்கு முன்பு, அதாவது நான் என் நாட்டை விட்டுப் புறப்படுவதற்குச் சுமார் ஒரு மாதத்திற்கு முன்பு, இருபத்தைந்து பேர்கொண்ட ஒரு நாடோடிக் கூட்டத்தில் இருக்க நேர்ந்தது. சற்று உட்பகுதியிலுள்ள ஓர் ஊரில் அவர்கள் சிலகாலம் தங்கினார்கள். ஊர்ஊராகத் திரியும் ஒரு மந்திரவாதியின் அற்புதச் செயல்களைப்பற்றி அப்போது கேள்விப்பட்டு அவனை வரவழைத்தோம். நாம் விரும்புவதைத் தன்னால் வரவழைக்க முடியும் என்று அவன் கூறினான். அவன் கேட்டுக் கொண்டது போலவே, உடை எதுவுமின்றி அவனை அறையின் ஒரு மூலையில் நிற்க ஏற்பாடு செய்தோம். எனது விரிப்பை அவனிடம் கொடுத்து அவனிடம் வித்தைகளைச் செய்யும்படிக் கேட்டோம். நாங்கள் விரும்புவதைக் கூறும்படி அவன் கேட்டான். கலிபோர்னியா திராட்சைக் கொத்து ஒன்று வேண்டும் என்றேன் நான். அவன் அதை அந்த விரிப்பின் அடியிலிருந்து உடனே கொண்டுவந்துவிட்டான். ஆரஞ்சுப் பழங்கள் முதலியனவும் வந்தன. சுடச்சுட அரிசிச் சோறும் பெரிய தட்டுகளில் வந்தன.'

ஆறாம் அறிவு ஒன்று உண்டென்றும், டெலிபதியில் (Telepathy) தமக்கு நம்பிக்கை உண்டென்றும் அவர் கூறினார். பக்கிர் செய்த அற்புதங்களுக்கான காரணத்தைக் கூறவில்லை. ஆனால் இவை மிகவும் வியப்பிற்கு உரியவை என்று கூறினார்.

உருவ வழிபாட்டைப்பற்றிப் பேச்சு எழுந்தது. இறைவனின் வடிவமாக வைத்து வணங்கப்படும் உருவ வழிபாட்டிற்குத் தம் மதத்தில் இடமுண்டு என்று அவர் கூறினார்.

சு: 'நீங்கள் எதை வழிபடுகிறீர்கள்? கடவுளைப் பற்றிய உங்கள் கருத்து என்ன?'

ஒரு பெண்: 'ஆவி'.

சு: 'ஆவி என்பது என்ன? ப்ராட்டஸ்டன்ட் கிறிஸ்தவர்களான நீங்கள் பைபிளில் கூறப்பட்டிருப்பதை வணங்குகிறீர்களா, அல்லது அப்பாலுள்ள ஒன்றை வணங்குகிறீர்களா? நாங்கள் உருவங்களின் வாயிலாகக் கடவுளை வழிபடுகிறோம்.'

ஒருவர்: 'அதாவது புற வழிபாட்டின்மூலம் அகப் பொருளை அடைகிறீர்கள்.'

சு: 'ஆம், அதுதான்.'

அவர் இந்த ரீதியில் பேசிக்கொண்டே போனார். பேச்சை முடிக்கும் தருணம் வந்தது. வேறு இடத்தில் அவர் சொற்பொழிவு நடத்தும் நேரம் நெருங்கியது. ❑

## 2. சமய சமரசம்

டெட்ராய்ட் ஃப்ரீ பிரஸ், 14 பிப்ரவரி 1894

**சுவாமிஜி:** 'மதத்தையும் கொள்கையையும் (Creed) நான் வேறுபடுத்துகிறேன். பிரிவுகளும் எல்லா கொள்கைகளும் ஒரே குறிக்கோளை நாடும் முயற்சிகளே என்பதைக் கண்டு, மதம் அவற்றையெல்லாம் ஏற்றுக்கொள்கிறது; கொள்கைகள் ஒன்றோடொன்று அடித்துக்கொள்கின்றன, போட்டியிடுகின்றன. பல்வேறு மக்கள் இருப்பதால் பலவிதக் கொள்கைகளும் இருக்கின்றன. பொதுமக்களுக்கு ஏற்றவாறே கொள்கையும் அமைகிறது. மக்களுக்கு எது தேவையோ அதைக் கொள்கை அளிக்கிறது. அறிவுத் துறையிலும் சரி, ஆன்மீகத் துறையிலும் சரி, பொருள் துறையிலும் சரி உலகில் எண்ணற்ற விதமான மனிதர்கள் உள்ளனர். இவர்கள் தங்களுக்குத் தகுந்ததும் மேலானதுமான ஒழுக்க நியதியை ஏற்றுக்கொள்கிறார்கள். இவை அனைத்திற்கும் பின்னால் அற்புதமான தத்துவம் இருப்பதால் மதம் இவற்றையெல்லாம் ஏற்றுக் கொள்கிறது, இப்படி எண்ணற்ற கொள்கைகள் இருப்பதில் மதம் மகிழ்கிறது. பல பாதைகள் வாயிலாக நாம் ஒரே குறிக்கோளைத்தான் அடைகிறோம். எனது பாதை மேலைநாட்டு நண்பர்களின் இயல்பிற்கு ஒத்துவராமல் போகலாம். என் போக்கிற்கும் சிந்தனைக்கும் அவர்களின் பாதை ஏற்றதாக இல்லாமல் போகலாம்.

'நான் இந்து மதத்தைச் சார்ந்தவன், இது புத்தமதக் கொள்கையல்ல. இந்து மதத்தின் பிரிவுகளில் ஒன்றே புத்த மதம். நாங்கள் ஒருபோதும் பிரச்சாரப் பணிகளில் ஈடுபடுவதில்லை. எங்கள் தத்துவங்களை யார்மீதும் நாங்கள் திணிப்பதில்லை. இத்தகையவற்றை எங்கள் மதத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் தடுக்கின்றன. நீங்கள் அனுப்பும் பிரச்சாரகர்களையும் நாங்கள் எதிர்ப்பதில்லை. உலகின் மூலைமுடுக்குகளில் அது ஊடுருவிப் பாய்வதை நாங்கள் வரவேற்கிறோம். பலர் எங்களிடம் வருகின்றனர், நாங்கள் அவர்களைப் பெரிதாக எடுத்துக் கொள்வதில்லை. எங்கள் பாதைக்கு வரும்படி நாங்கள் பிறரை வற்புறுத்துவதும் இல்லை.

'எங்கள் முயற்சிகள் இல்லாமலேயே இந்து மதம் பல வடிவங்களில் தொலைதூரங்களில்கூடப் பரவி வருகிறது. கிறிஸ்தவ விஞ்ஞானம், தியாசஃபி, எட்வின் ஆர்னால்டின் ''ஆசிய ஜோதி''—இவையெல்லாம் இந்து மதத்தின் வடிவங் களே அல்லவா! எங்கள் மதம் பெரும்பாலான மற்ற மதங்களை விடத் தொன்மை வாய்ந்தது; கிறிஸ்தவக் கொள்கையைவிடப் பழமையானது. கிறிஸ்தவத்தை ஒரு கொள்கை என்றே நான் கருதுகிறேன். அதில் எதிர்ப்பும் விரோதப்போக்கும் காணப் படுவதால், அதை மதம் என்று சொல்ல முடியாது! மேலும், கிறிஸ்தவ மதம் இந்து மதத்திலிருந்து தோன்றிய ஒரு கிளை மட்டுமே. கத்தோலிக்கர்களிடையே உள்ள பாவ மன்னிப்பு, புனிதர்களைப் போற்றுதல் போன்றவை இந்து மதத்திலிருந்து எடுக்கப்பட்டவை. இந்த இரு மதங்களின் ஒற்றுமைகளையும், கத்தோலிக்க மதம் இந்து மதத்திலிருந்து தோன்றியது என்ற உண்மையையும் உணர்ந்த ஒரு கத்தோலிக்கப் பாதிரி துணிந்து, சான்றுகளுடன் அதனை ஒரு புத்தகமாகத் வெளியிட்டார். அதற்காக அவர் தமது பதவியையே இழக்க நேர்ந்தது.'

ஒருவர்: 'உங்கள் மதத்தில் ஆஜ்ஞேயவாதிகளை அனுமதிப் பீர்களா?'

சு: 'ஆம். தத்துவத்தில் நம்பிக்கை இல்லாதவர்கள் இருக்கிறார்கள், மத நம்பிக்கையே இல்லாதவர்களும் உண்டு. நாங்கள் புத்தரை ஒரு மகானாகக் கருதுகிறோம். அவரைப் பின்பற்றியவர்களுள் ஒருவன் அவரிடம், ''கடவுள் இருக்கிறரா?' என்று கேட்டான். அதற்கு அவர், ''கடவுளா! கடவுளைப்பற்றி நான் எப்போதாவது உங்களிடம் பேசியிருக்கிறேனா? நான் உங்களுக்குச் சொல்வதெல்லாம், நல்லவர்களாக இருங்கள், நல்லதைச் செய்யுங்கள் என்பதுதான்'' என்று கூறினார். ஆஜ்ஞேயவாதிகளான தத்துவ அறிஞர்கள் பலர் உண்டு. அவர்கள் இயற்கையின் பின்னால் நிலவும் மாபெரும் ஒழுக்க நியதியையும், அறுதி நிலையையும் நம்புகிறார்கள். மக்கள் ஏற்றுக்கொண்ட கொள்கைகள் அனைத்தும், எதிர்காலத் தில் எல்லையற்ற ஆன்மாவை அடையச் செய்யும் பெரு முயற்சிகளே.'

ஒ: 'மதப் பிரச்சாரம் உங்கள் மதத்தின் கௌரவத்திற்குக் குறைந்தது என்று நினைக்கிறீர்களா?'

இதற்குப் பதில் அளிப்பதற்காக அந்தக் கீழ்த்திசை ஞானி ஒரு நூலின் பக்கங்களைச் சற்று புரட்டினார். சிறந்த பல

சாசனங்களுள் ஒன்றைக் குறிப்பிட்டு, 'இது கி.மு. 200-ஆம் ஆண்டில் எழுதப்பட்டது. உங்கள் கேள்விக்கு இதுவே தகுந்த பதிலாக இருக்கும்' என்று கூறிவிட்டு, உணர்ச்சிமிக்க இன்னிசைக் குரலில் அதைப் படித்தார்:

'தெய்வங்களின் அன்பிற்குரிய மன்னரான பியாதசி எல்லா பிரிவினரையும் துறவிகளையும் இல்லறத்தார்களையும் மதிக்கிறார்; தானங்களாலும் பரிசுகளாலும் அவர்களை மகிழ்விக்கிறார். இவற்றைவிட அவர், நற்குணங்களை வளர்க்கும் முயற்சியையே விரும்புகிறார். வெவ்வேறு பிரிவுகளில் வெவ்வேறு குணங்கள் முக்கியமானவையாகக் கொள்ளப்படுவது உண்மைதான். ஆனால் எல்லாவற்றிற்கும் அடிப்படை ஒன்று உண்டு. அதுவே மென்மை, பேச்சிலும் ஒழுக்கத்திலும் மென்மை. தங்கள் பிரிவை உயர்த்தி, பிறவற்றை இகழக் கூடாது. வாய்ப்பு கிடைக்கும்போதெல்லாம் அவற்றிடம் கனிவுகாட்ட வேண்டும், உரிய மரியாதை அளிக்க வேண்டும். இப்படி முயன்று, பிறருக்குச் சேவை செய்வதன்மூலம் ஒருவன் தன் பிரிவையே வளர்க்கிறான். இதற்கு மாறாக நடப்பது தன் கொள்கையை வளர்ப்பதும் ஆகாது, பிறருக்கு உதவுவதும் ஆகாது. தன் கொள்கையைப் பரப்புவதற்காகப் பிற கொள்கைகளைச் சிறுமைப்படுத்துவது தன் கொள்கையின் அழிவுக்கு வழிவகுப்பதே. ஆதலால் நட்புறவே போற்றுதற்குரியது, பிற கொள்கைகளையும் பரிவுடன் அரவணைத்துக் கொள்ள வேண்டும். இந்த நோக்கத்துடன்தான் இந்தச் சாசனம் பொறிக்கப் பட்டிருக்கிறது. மக்கள் எல்லோரும், அவர்கள் எந்த நிலையில் இருந்தாலும் ஒழுக்க நியதிகளையும் பிற கொள்கைகளையும் போற்ற வேண்டும். மதப் பிரச்சாரகர்களும், புரோகிதர்களும், தொண்டர்களும் இந்த நோக்கத்துடன்தான் பணியாற்ற வேண்டும்.'

அற்புதமான இந்தப் பகுதியைப் படித்த பிறகு சுவாமிஜி கூறினார்:

'இந்தச் சாசனத்தைப் பொறித்த அந்த மாமன்னரே போர் கூடாது என்ற சாசனத்தையும் அமைத்திருக்கிறார். ஏனெனில் உலகம்தழுவிய ஒழுக்க நெறிக்குப் போரின் கொடுமைகள் பொருந்தாது. இதனால் இந்தியாவின் பொருளாதார முன்னேற்றத்தில் தடை ஏற்பட்டது. மிருகத்தனமும் ரத்த வெறியும் மற்ற நாடுகளை முன்னணியில் நிறுத்தியுள்ளன. இத்தகைய மிருக இயல்புகளை இந்தியா தடுத்தது. 'வலிமையுள்ளதே வாழும்' என்ற நியதி தனி மனிதனுக்கும் பொருந்தும்,

நாட்டிற்கும் பொருந்தும்; பல நாடுகள் உலகியலில் முன்னேறியது இந்தியா பின்தங்கியது.'

ஒ: 'இந்தப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் தேவைகளைப் பூர்த்தி செய்யப் பேரூக்கமும் ஆற்றலும் வேண்டும். இப்படிப் போட்டிகளில் ஆழ்ந்து கிடக்கின்ற மேலை நாடுகளில், அமைதி நிலவுகின்ற இந்தியாவின் ஆன்மீக இயல்பைப் புகுத்துவது முடிகிற காரியமா?'

விவேகானந்தரின் ஒளிவீசும் கண்கள் சுடர்விட்டு மின்னின. அவர் முகத்தில் புன்முறுவல் தவழ்ந்தது. பின்னர் அவர், 'சிங்கத்தின் ஆற்றலையும் ஆட்டுக்குட்டியின் மென்மையையும் இணைத்தால் நன்றாக இருக்காதா?' என்று கேட்டுவிட்டுத் தொடர்ந்தார்:

'எதிர்காலத்தில் கீழை, மேலை நாடுகள் ஒருவேளை இணையும். அந்த இணைப்பால் சிறந்த விளைவுகள் உண்டாகும். மேலைநாட்டினர் பெண்களிடம் காட்டும் மரியாதையும் அன்புடன் நடந்துகொள்ளும் முறையும் போற்றுதற்கு உரியவை.'

இறுதிவேளையில் புத்தர் கூறியதை இவர் மீண்டும் சொல்கிறார்: 'உங்கள் முக்திக்கு நீங்களே வழி காணுங்கள். நான் உங்களுக்கு உதவ முடியாது. ஒருவரும் உங்களுக்கு உதவ முடியாது. நீங்களே உங்களுக்கு உதவிக் கொள்ளுங்கள்.' சண்டை வேண்டாம், சமரசமும் அமைதியும்தான் தேவை— இதுதான் அவரது கருத்தாக உள்ளது. ❑

## 3. அற்புதங்கள்

'மெம்பிஸ் கமர்ஷியல்' 15 ஜனவரி 1894

நிருபர்: 'அமெரிக்காவைப்பற்றி உங்கள் கருத்து என்ன?'

சுவாமிஜி: 'இந்த நாட்டைப்பற்றி, குறிப்பாக அமெரிக்கப் பெண்களைப்பற்றி நான் நல்ல எண்ணங்கள் கொண்டுள்ளேன். வறுமையின்மையே முக்கியமாக என் உள்ளத்தைக் கவர்ந்தது.'

பின்னர் பேச்சு மதங்களைப்பற்றித் திரும்பியது.

சு: 'சர்வமத மகாசபையால், உலகிற்குப் பெரும் நன்மை ஏற்பட்டுள்ளது. அது மக்களின் சிந்தனைகளை விரிவுறச் செய்துள்ளது.'

நி: 'உங்கள் கருத்துப்படி, இறந்தபின் கிறிஸ்தவர்களுக்கு எத்தகைய கதி கிடைக்கும்?'

சு: 'நல்லவனுக்கு நல்ல கதியுண்டு என்று நாங்கள் நம்புகிறோம். நாத்திகன்கூட, அவன் நல்லவனாக இருந்தால் நற்கதியை அடைந்தேயாக வேண்டும். இதுதான் நம்பிக்கை. ஆனால் மதத்தைப் பின்பற்றுவோர் தங்களுக்குள் அடித்துக் கொள்ளக் கூடாது.'

நி: 'கண்கட்டு வித்தை, ஆகாயத்தில் பறப்பது, இவை போன்ற இந்தியாவின் விசித்திரக் கதைகளில் உங்களுக்கு நம்பிக்கை உண்டா?'

சு: 'சித்துவேலைகளில் எங்களுக்கு நம்பிக்கையே கிடையாது. ஆனால் சித்து வேலைகள்போல் தோன்றுகின்ற அவற்றை இயற்கை நியதிகளுக்கு ஏற்பவே செய்ய முடியும். இதைப்பற்றிய விரிவான நூல்கள் இந்தியாவில் உள்ளன. அவற்றை நன்கு ஆராய்ந்துள்ளனர்.

'பிறர் எண்ணமறிதல், எதிர்காலத்தை அறிதல், போன்றவற்றை ஹடயோகிகள் நன்கு கற்றுள்ளனர்.

'ஆகாயத்தில் பறப்பதைப் பொறுத்தவரையில் பூமியின் ஈர்ப்பாற்றலை மீறி, மன வலிமையால் விண்ணில் எழுந்த ஒருவனையும் நான் பார்த்ததில்லை. ஆனால் இதில் ஈடுபட்டுள்ள பலரை நான் கண்டுள்ளேன். சிலர் நூல்களைப் படித்து இதைச் சாதிப்பதில் பல காலம் கழிக்கின்றனர். சிலர் இந்த

முயற்சிக்காகப் பசியால் வாடி, உடல் கெட்டு, வயிற்றில் விரலை வைத்தால் அது முதுகெலும்பைத் தொடுமளவுக்கு மெலிந்துள் ளனர். சில ஹடயோகிகள் நீண்ட நாட்கள் உயிர் வாழ்கின்றனர்.'

பிறகு கும்பக ஸ்தம்பம் (Suspended animation) பற்றிப் பேச்சு எழுந்தது. அடைத்து வைக்கப்பட்ட குகை ஒன்றினுள் எப்படியோ புகுந்து உணவின்றிப் பல வருடங்கள் வாழ்ந்திருந்த ஒருவரைத் தாம் கண்டிருப்பதாகக் கூறினார் சுவாமிஜி. இதைக் கேட்ட மக்களிடம் அந்த உண்மையை ஆராய வேண்டுமென்ற பரபரப்பு எழுந்தது. இந்த நிகழ்ச்சி உண்மையே என்பதைத் தாம் சந்தேகமின்றி நம்புவதாக அவர் கூறினார்.

கும்பக ஸ்தம்பம் சில காலம் வளர்ச்சியைத் தடை செய் கிறது, அவ்வளவே. இதைப்பற்றித் தாம் அறிந்த நிகழ்ச்சி ஒன்றை அவர் கூறினார். ஒருவன் புதைக்கப்பட்டான், அவனது கல்லறைமீது பார்லி வளர்க்கப்பட்டது. பின்னர் கல்லறையைத் தோண்டிப் பார்த்தபோது அவன் உயிரோடிருந்தான். குளிர் காலங்களில், தூங்கும் (Hybernation) விலங்குகளிடமிருந்து இந்த வழிமுறையை இவர்கள் கற்றிருக்கக்கூடும் என்று தாம் கருதுவதாக விவேகானந்தர் கூறினார்.

வானில் கயிற்றை எறிந்து அதில் ஏறி மறைகின்ற வித்தை நிகழக் கூடியதெனச் சிலர் கூறினாலும் அத்தகையவற்றைத் தாம் பார்த்ததில்லை என்று அவர் தெரிவித்தார்.

ஒரு பெண்: 'உங்களால் இத்தகைய சித்துவேலைகளைச் செய்ய முடியுமா? அவர் உயிருடன் புதைக்கப்பட்டாரா? துறவு நெறிக்கு இது அவசியமா?'

சு: 'இந்தச் சித்துவேலைகளுக்கும் மதத்திற்கும் என்ன தொடர்பு? இது மனிதனைத் தூய்மைப்படுத்துமா? பைபிளில் குறிப்பிட்டுள்ளதுபோல் சாத்தான் மிகுந்த பலசாலிதான், ஆனால் அவன் இறைவனிலிருந்து வேறுபடுவது தூய்மையில் தான்.'

ஹடயோகத்தைப்பற்றி கூறும்போது ஏசுவின் வாழ்க்கைச் சம்பவம் ஒன்றையும் நினைவு கூர்ந்தார் அவர்: சீடர்களுக்கு ஹடயோகிகள் தீட்சை கொடுக்கும்போது, நாற்பது நாட்கள் தனித்து அவர்கள் வாழ வேண்டுமென உபதேசிப்பார்கள். ❑

## 4. அற்புதங்கள்

'ஈவினிங் நியூஸ்', 17 பிப்ரவரி 1894

'**எ**னது மதத்தை நிரூபிப்பதற்காகச் சித்துவேலை செய்து காட்ட என்னால் முடியாது' என்று நியூஸ் பத்திரிகையின் நிருபரிடம் விவேகானந்தர் கூறினார். நியூஸின் தலையங்கம் 'அற்புதங்கள்' என்று இருந்த போதிலும் அதை அவர் ஏற்க வில்லை.

சு: 'நான் ஒரு செப்பிடுவித்தைக்காரன் அல்ல என்பதை முதன்முதலில் கூறிக் கொள்கிறேன். எனது மதமான தனி இந்து மதம் சித்துவேலைகளின்மீது நிறுவப்படவில்லை. நாங்கள் சித்துவேலைகளை ஆமோதிப்பதில்லை. ஐம்புலன்களைக் கடந்த அற்புதங்கள் உண்டு. ஆனால் அவையும் ஒரு நியதியை ஒட்டியே இயங்குகின்றன. அவற்றிற்கும் எங்கள் மதத்திற்கும் எந்தத் தொடர்பும் இல்லை. எங்கள் நாட்டில் நிகழ்வதாக வெளிநாட்டுப் பத்திரிகைகளில் வெளிவருகின்ற அற்புதச் செயல்கள் வெறும் கைஜாலங்கள் மட்டுமே, வெறும் மன மயக்கத் தோற்றங்களே. அவை சான்றோர் புரியும் செயல்கள் அல்ல. ஊர்ஊராகத் திரிந்து சந்தை கூடுமிடத்தில் காசுக்காக அற்புதங்கள் செய்யும் இனத்தைச் சார்ந்தவர்கள் அல்ல அந்தச் சான்றோர். உண்மையை நாடி அதை உணர்ந்துகொள்ள வேண்டுமென்ற ஆவல் உடையவர்கள் மட்டுமே அவர்களை அறிய முடியும்; வெறும் குழந்தைத்தனமான ஆர்வத்தால் அல்ல.' ❑

## 5. லண்டனில் ஓர் இந்து யோகி

'வெஸ்ட் மினிஸ்டர் கெஜட்', 23 அக்டோபர் 1895

நிருபர்: 'உங்கள் பெயருக்குச் சிறப்பாக ஏதாவது பொருள் இருக்கிறதா?'

சுவாமிஜி: 'நான் இப்போது அழைக்கப்படும் பெயரான சுவாமி விவேகானந்தர் என்பதில் முதல் சொல் துறவி என்பதைக் குறிக்கும். உலகைத் துறந்தவன் துறவி. மற்றொரு சொல், என் பட்டப்பெயரைக் குறிக்கும். துறவியாகும்போது இது அளிக்கப் படுகிறது. 'பகுத்தறிவால் பிறக்கின்ற ஆனந்தம்' என்பது என் பட்டப்பெயரின் பொருளாகும்.'

நி: 'பொதுவாக எல்லோரும் ஏற்றுக்கொள்கின்ற வாழ்வைத் துறக்க உங்களை எது தூண்டியது?'

சு: 'சிறு வயதிலிருந்தே மதத்திலும் தத்துவத்திலும் எனக்கு ஆழ்ந்த பற்று உண்டு. மனிதன் நாட வேண்டிய உயர்ந்த லட்சியம் துறவுதான் என்று எங்கள் சாஸ்திரங்கள் முழங்குகின்றன. நான் இறுதியாக முடிவு செய்வதற்கு ஒரு குருவைச் சந்திப்பது மட்டுமே வேண்டியிருந்தது. அத்தகையவரான ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சரை நான் சந்தித்தேன். அவர் நடந்த பாதையில் நானும் செல்ல முனைந்தேன். அவரிடம் எனது உயர்ந்த லட்சியத்தின் நிறைவைக் கண்டேன்.'

நி: 'அவர் ஏதாவது மதப்பிரிவை உருவாக்கினாரா? நீங்கள் அதன் பிரதிநிதியா?'

சு: 'இல்லை. பிரிவினைவாதம், மூடக் கொள்கைகள் போன்ற தடைகளை இடித்துத் தள்ளவே தமது வாழ்நாள் முழுவதையும் அவர் செலவிட்டார். அவர் எந்தப் பிரிவையும் உருவாக்கவில்லை, பிரிவினைகளுக்கு அவர் எதிராக இருந்தார். சிந்தனையில் முழுச் சுதந்திரத்தைப் போதிக்கவும் நிலைநாட்டவுமே அவர் முயன்றார். அவர் ஒரு மகா யோகி.'

நி: 'அப்படியானால், நீங்கள் இந்த நாட்டின் ஏதாவது சொசைட்டியையோ, பிரிவையோ சார்ந்தவரா? தியாசஃபிகல் சொசைட்டி, கிறிஸ்தவ விஞ்ஞானிகள் போன்ற எதையாவது நீங்கள் பின்பற்றுகிறீர்களா?'

சு: 'நான் எதையும் சார்ந்தவன் அல்ல. (அழுத்தமான குரலில் சுவாமிஜி பதிலளித்தார். குழந்தையின் முகம்போல் அவரது முகமும் மலர்ந்தது; உண்மை ஒளி அதில் திகழ்ந்தது; எளிமை அதில் தவழ்ந்தது.) எங்கள் முன்னோர்களின் நூல்களுக்கு எனது குருநாதர் காட்டிய வழியில் நான் கண்ட விளக்கத்தையே நான் போதிக்கிறேன். நான் போதிப்பதெல்லாம் எங்கோ வானிலிருந்து பெற்றதாக நான் உரிமை கொண்டாடவில்லை. இந்தப் போதனைகள் உயர்ந்த அறிவு நிறைந்தவை என்று அறிவாளிகளால் ஏற்றுக்கொள்ளப்படுமானால் அதுவே நான் பெறும் பரிசு.

'பக்தி, ஞான, யோக நெறிகளையே எல்லா மதங்களும் போதிப்பதற்குப் பொருளாகக் கொள்கின்றன. வேதாந்தத் தத்துவம் இந்த எல்லா முறைகளையும் தழுவி நிற்பதாக உள்ளது. இதைத்தான் நான் போதிக்கிறேன். அவரவர் தங்கள் வழியுடன் இதை இணைத்துக் கொள்ளலாம். நேரடி அனுபவத்தைப் பிரமாணமாகக் கொள்ளும்படியே நான் எல்லோரிடமும் சொல்கிறேன். சாஸ்திரங்களைப்பற்றிச் சொல்லும்போது, நீங்கள் ஒவ்வொருவரும் படிக்கக்கூடிய நூல்களையே குறிப்பிடுகிறேன். மறைந்திருந்து நடுவாளர்கள் மூலம் பேசும் ஆவிகளையோ, ரகசிய நூல்களையோ, கையெழுத்துப் பிரதிகளையோ நான் எனக்கு ஆதாரமாகக் கொள்ளவில்லை. நான் எந்த ரகசிய சங்கத்தையும் நிறுவவில்லை. அத்தகைய சங்கங்களால் நன்மை வரும் என்றும் நான் நம்பவில்லை. உண்மை, தன் சொந்த ஆதாரத்திலேயே நிற்கக்கூடியது, பகலொளியைக் கண்டு அது அஞ்சுவதில்லை.'

நி: 'சுவாமி, நீங்கள் ஒரு சங்கத்தையும் நிறுவ மாட்டீர்களா?'

சு: 'மாட்டேன். நான் எதையும் நிறுவப் போவதில்லை. ஒவ்வொருவரின் இதயத்திலும் மறைந்துள்ளதும் எல்லோருக்கும் பொதுவானதுமான ஆன்மாவை மட்டுமே நான் போதிக்கிறேன். அந்த ஆன்மாவை அறிந்து அந்தப் பேரொளியில் வாழும் சிலர் இன்றே இந்தப் பிரபஞ்சத்தை முற்றிலும் மாற்றிவிட முடியும். முன்னாளில் ஒருசிலர் இவ்வாறு செய்துள்ளனர்.'

நி: 'இப்போதுதான் நீங்கள் இந்தியாவிலிருந்து வந்தீர்களா?'

சு: 'இல்லை. 1893-ஆம் ஆண்டு சிகாகோவில் நடைபெற்ற சர்வமத மகாசபைக்கு இந்து மதத்தின் பிரதிநிதியாக நான்

வந்தேன். அப்போது முதல், அமெரிக்காவில் சொற்பொழிவுகள் செய்து கொண்டிருக்கிறேன். என் சொற்பொழிவுகளைக் கேட்பதில் அமெரிக்கர்கள் மிகுந்த ஆர்வம் காட்டினார்கள். அவற்றை அன்போடு பாராட்டினார்கள். சிறந்த நண்பர்களாகவும் இருக்கிறார்கள். எனது பணி அங்கு வேரூன்றிவிட்டது. நான் விரைவில் அங்கு திரும்பியாக வேண்டும்.'

நி: 'சுவாமி, மேலை நாட்டு மதங்களைப் பற்றிய உங்கள் கருத்து என்ன?'

சு: 'இந்த உலகில் மதங்கள் என்று கொள்ளத்தக்க எல்லா மதங்களுக்கும் ஆதாரமாக இருக்கக்கூடிய ஒரு தத்துவத்தையே நான் போதிக்கிறேன். எல்லாவற்றையும் அன்போடு ஆதரிப்பது தான் என் நோக்கம். என் உபதேசம் எதற்கும் பகை அல்ல. நான் என் கவனத்தைச் செலுத்துவது தனிமனிதனிடம். அவனை வலிமையுடையவனாக்கி அவனது தெய்வீகத் தன்மையை அவனுக்கு உணர்த்துகிறேன். தங்களுக்குள் ஒளிரும் தெய்வீகத்தை உணரும்படி ஒவ்வொருவரையும் கூவி அழைக்கிறேன். தெரிந்தோ, தெரியாமலோ ஒவ்வொரு மதத்தின் லட்சியமும் இதுதான்.'

நி: 'இந்த நாட்டில் உங்கள் செயல்கள் என்ன விளைவை ஏற்படுத்தும்?'

சு: 'நான் இப்போது கூறியவற்றைத் தனிமனிதர்களின் உள்ளங்களில் ஊன்றச் செய்வதே என் நோக்கம். அதை அவர்கள் தங்கள் முறைப்படிப் பிறருக்கு அளிப்பதற்குத் தூண்டவும் செய்வேன். அவர்கள் விரும்பினால் அதை மாற்றி அமைத்துக் கொள்ளலாம். வெறும் மூடக்கொள்கைகளை நான் அவர்களுக்குக் கற்பிக்கவில்லை. இறுதியில் உண்மை வெற்றி பெற்றே தீரும்.

'நான் ஒருசில நண்பர்கள்மூலம் செயல்படுகிறேன். அக்டோபர் 22-ஆம் தேதி மாலை எட்டரை மணிக்குப் பிக்காடிலியிலுள்ள பிரின்சஸ் ஹாலில் எனது ஒரு சொற்பொழிவுக்கு ஏற்பாடு செய்துள்ளனர். இதை விளம்பரமும் செய்துள்ளனர். எனது தத்துவங்களின் திறவுகோலாக உள்ள 'ஆன்ம ஞானம்' தான் தலைப்பு. இந்தத் துறையில் எப்படிப் பாதை விரியுமோ, அதைப் பின்பற்றிச் செல்லத் தயாராக உள்ளேன். விருந்தினர் அறைகளில் கூட்டப்படும் கூட்டங்களுக்கும் போவேன். எங்கும் போக முடிவு செய்துள்ளேன். இந்தப் பொருள்பற்றி வரும் கடிதங்களுக்கும் பதில் எழுதுவேன்; மனிதர்களுடன் தனித்து

இதைப்பற்றி ஆராய்வேன். 'பணம், பணம்' என்று பேயாய் அலையும் இந்தக் காலத்தில் பணத்திற்காக நான் எதுவும் செய்வதில்லை என்பதை உங்களிடம் துணிந்து சொல்வேன்.' ❑

## 6. இந்தியாவின் பணி

'சண்டே டைம்ஸ்', லண்டன் 1896

சுவாமிஜி: 'அமெரிக்காவில் எத்தனையோ பேட்டிகள் அளித்ததில் நிருபர்களுடன் பழகுவது எனக்கு வழக்கமாகி விட்டது. எங்கள் நாட்டில் இது அவ்வளவாகக் கிடையாது. அதற்காக மற்ற நாட்டுப் பழக்கங்களைப் பின்பற்றி எனக்குத் தெரிந்ததை நான் பரப்பக் கூடாது என்பதல்ல. சர்வமத மகாசபை 1893-ஆம் ஆண்டு சிகாகோவில் கூடியது. இந்து மதத்தின் சார்பில் நான் கலந்து கொண்டேன். மைசூர் மன்னரும் வேறு சில நண்பர்களும் என்னை அங்கே அனுப்பினார்கள். அமெரிக்காவில் எனக்கு ஏதோ வெற்றி கிடைத்தது என்று சொல்லலாம். சிகாகோவைத் தவிர வேறு பெரிய நகரங்களிலிருந்தும் எனக்கு அழைப்புகள் வந்தன. அங்கே பல காலம் தங்கினேன். சென்ற கோடைக் காலத்தில் நான் இங்கே வந்ததைத் தவிர சுமார் மூன்று ஆண்டு அங்கே இருந்தேன். இந்தக் கோடையில் மீண்டும் இங்கே வந்துள்ளேன். அமெரிக்க நாகரீகம் மிகச் சிறந்தது என்பது என் கருத்து. புதியவற்றை வரவேற்கும் உள்ளம் கொண்டவர்கள் அவர்கள். புதியது என்பதால் அதனைத் தள்ளாமல், அதன் குணங்களை அவர்கள் ஆராய்கிறார்கள். அதன் ஏற்றத்தாழ்வை இந்த ஆராய்ச்சியின் மூலம்தான் முடிவு செய்கிறார்கள்.'

நிருபர்: 'அப்படியானால் இங்கிலாந்தில் வேறுவிதமாக உள்ளதா?'

சு: 'ஆம். இங்கிலாந்தின் நாகரீகம் மிகப் பழையது. அதனால் பல நூற்றாண்டுகளாக அதன்மீது குப்பை படியத் தொடங்கிவிட்டது. விலக்கப்பட வேண்டிய பல தவறான கருத்துக்கள் உங்களிடம் உள்ளன. உங்களுடன் பழகும் யாரும் அவற்றை மனத்தில் கொண்டே பழக வேண்டியுள்ளது.'

நி: 'அப்படித்தான் சொல்கிறார்கள். அமெரிக்காவில் நீங்கள் புதிய மதத்தையோ, புதிய பிரிவையோ நிறுவவில்லையாமே?'

சு: 'ஆம். இவற்றையெல்லாம் அதிகரித்துக்கொண்டே போவது எங்கள் கொள்கைகளுக்கு நேர்மாறானது. மதங்களுக்கும் பிரிவுகளுக்கும் பஞ்சமில்லை. அமைப்புக்களை உருவாக்கினால் அவற்றைக் கவனிக்க ஆட்கள் தேவை. துறவிகளால் அதைச் செய்ய முடியாது. ஏனெனில் பதவி, புகழ், சொத்து, முதலியவற்றைத் துறந்தவர்கள் அவர்கள். மேலும், இத்தகைய வேலைகள் பிறர் கைகளில் உள்ளது.'

நி: 'உங்கள் போதனை மத ஒப்புமையா (Comparative Religion)?'

சு: 'எல்லா மதங்களிலிருந்தும் சக்கையையும் குப்பையையும் அகற்றி, சாரத்தைத் திரட்டுவதே எனது கருத்து. முற்றும் துறந்த ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சரின் சீடன் நான். அவருடைய ஆற்றலும் கருத்துக்களுமே என்னை ஆட்கொண்டிருக்கின்றன. அவர் பிற மதங்களைக் குறை கூறவில்லை, அவற்றிலுள்ள குணங்களைக் கூறி, அவற்றை வாழ்வில் எப்படிப் பின்பற்றலாம் என்பதையே அறிவுறுத்தினார். போராடுவதோ, பகையுணர்வுடன் பார்ப்பதோ அவரது போதனைக்கு முரணானது. உலகம் அன்பாலேயே இயங்குகிறது என்ற உண்மையின்மீதே அவரது போதனை அமைக்கப்பட்டுள்ளது.

'இந்து மதம் மதவெறி கொண்டு பிற மதத்தினரை விரட்டியதில்லை என்பது உங்களுக்குத் தெரியும். எல்லா மதத்தினரும் அன்போடும் அமைதியாகவும் சேர்ந்து வாழும் நாடு இந்தியா. கொலையும் உயிர் வதையும் முகமதியர்களுடன் வந்தவை. அவர்கள் வரும்வரையில் நாட்டில் அமைதியே நிலவியது. சமணர்கள் கடவுள் நம்பிக்கை அற்றவர்கள், அப்படி நம்புவது ஒருவித மனமயக்கம் என்று சொல்பவர்கள். அவர்களைக்கூட எங்கள் மதம் கொடுமைப்படுத்தவில்லை, மாறாக பொறுமையையே மேற்கொண்டது. இன்னும் சமணர்கள் எங்கள் நாட்டில் உள்ளனர். பொறுமைதான் உண்மையான பலம் என்பதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாக உள்ளது இந்தியா. தாக்குதல், போராடுதல் இவை யாவும் பலவீனம்.'

நி: 'டால்ஸ்டாயின் கொள்கை போலவே இது உள்ளது. இதில் எனக்கு நம்பிக்கை இல்லை, தனிமனிதர்கள் இதைப் பின்பற்றலாம். ஆனால் நாடுகள் செயல்படுத்த முடியுமா?'

சு: 'முடியும், கட்டாயமாக முடியும். அடிக்கடிப் பிறரால் வெல்லப்படுவது இந்தியாவின் தலைவிதி. ஆனால் தன்னை

வென்றவர்கள்மீதும் அது ஆணை செலுத்துகிறது. முகமதியர்களை அது வெற்றி கொண்டுவிட்டது.

'படித்த முகமதியர்கள் சூஃபிகளாக விளங்குகின்றனர். இந்துக்களிடமிருந்து அவர்களைப் பிரிக்க முடியாது. அப்படி ஒன்றியுள்ளனர். இந்துக் கருத்து அவர்களிடம் நன்றாக ஊடுருவியுள்ளது. எங்களிடமிருந்து கற்றுக்கொள்ளும் நிலையில் அவர்கள் உள்ளனர்.

'பிரபல மொகலாய மன்னரான அக்பர் ஏறக்குறைய இந்துவாகவே இருந்தார். வேளை வரும்போது இங்கிலாந்தும் வெல்லப்படும். இன்று அந்த நாட்டிற்கு ஆயுத பலமுள்ளது. ஆனால் அது கருத்துலகில் பயனற்றுப் போகும். இந்து மதக் கருத்தைப்பற்றி ஷோபனேர் கூறியது உங்களுக்குத் தெரியும். ''இருண்ட காலத்திற்குப் பின்னர், கிரேக்க மற்றும் லத்தீன் மொழிகள் மறுமலர்ச்சி பெற்றபோது ஐரோப்பாவில் குறிப்பிடத்தக்க கிளர்ச்சி எழுந்தது. அத்தகைய கிளர்ச்சி, இந்தியாவில் இந்து மதக் கருத்து ஆட்சிபுரிகின்றபோது தோன்றும்'' என்று முன்பே அவர் கூறினார் அல்லவா?'

நி: 'குறுக்கிடுவதற்கு மன்னிக்கவும். நீங்கள் சொல்வதற்கான அறிகுறிகள் எதுவும் தற்போது தெரியவில்லையே?'

சு: 'தெரியாமலிருக்கலாம். (சிந்தனையில் ஆழ்ந்தவராக இதைக் கூறிவிட்டு சுவாமிஜி தொடர்ந்தார்.) பழைய மறுமலர்ச்சிக் காலம் இந்தியாவில் தோன்றியும், அதன் அறிகுறிகளைப் பலர் அறியவில்லை என்று நான் துணிந்து சொல்வேன். காலத்தின் அறிகுறிகளை உணரக்கூடியவர்கள்தான் ஒரு பெரும் கிளர்ச்சியின் இயல்பை அறிய முடியும். கீழ்த்திசை ஆராய்ச்சித் துறையில் அண்மையில் சிறந்த முன்னேற்றத்தைக் காண்கிறோம். இப்போது அறிஞர்கள் சிலரிடமே அது உள்ளது. அவர்களின் சேவையோ சுவையற்றதாக, எளிதில் புரியாததாக உள்ளது. ஆனால் மெல்லமெல்ல அறிவொளி தோன்றத்தான் செய்யும்.'

நி: 'எதிர்காலத்தில் அதுதான் வெற்றி பெறவுள்ளதா? அப்படியிருந்தும் இந்தியா தன் கருத்துக்களைப் பரப்பப் பிரச்சாரகர்களை வெளிநாடுகளுக்கு அனுப்பவில்லை. உலகம் அதன் கட்டுப்பாட்டின்கீழ் வரும்வரை அது காத்திருக்கும் என்று நினைக்கலாமா?'

சு: 'முன்னொரு காலத்தில், இந்தியா ஒரு பெரிய பிரச்சார நாடாகத் திகழ்ந்தது. இங்கிலாந்து கிறிஸ்தவ மதத்தைத் தழுவு

வதற்குப் பல நூறு ஆண்டுகளுக்கு முன்னரே புத்தர் தமது கொள்கையைப் பரப்ப மதப் பணியாளர்கள் பலரை ஆசியக் கண்டத்திற்கு அனுப்பினார். கருத்துலகம் அதன் பக்கம் திருப் பப்பட்டது. நாம் அத்தகைய ஒரு பணியின் ஆரம்பக் கட்டத் தில் இருக்கிறோம். பல்வேறு மதங்களிலுள்ள சிறப்பம்சங் களை ஏற்றுக்கொள்ளாத மக்கள்தொகை வளர்ந்து கொண்டே வருகிறது. படித்தவர்களிடமே இத்தகைய கிளர்ச்சி தோன்றி யுள்ளது. அண்மையில் கிடைத்த அமெரிக்கப் புள்ளிவிவரத் திலிருந்து, தாம் எந்த மதத்தையும் சார்ந்ததாக ஒப்புக் கொள்ளப் பலர் மறுத்துவிட்டது தெரிய வருகிறது. எல்லா மதங்களும் ஒரே உண்மையின் பல்வேறு தோற்றங்களே. மதங்கள் முன்னேறு கின்றன அல்லது அழிகின்றன. அவை ஒரே உண்மையின் கதிர் களே. மாறுபட்ட உள்ளங்கள் விரும்பும் வடிவத்தில் அது வெளிப்படுகிறது.'

நி: 'இப்போது ஓரளவு புரிகிறது, மைய உண்மை எது?'

சு: 'உள்ளே விளங்கும் தெய்வீகம். எவ்வளவு தாழ்ந்த உயிரானாலும் அது அந்தத் தெய்வீகத்தின் வெளிப்பாடே. அது மூடப் பட்டுள்ளது, நமது பார்வைக்கு மறைந்து நிற்கிறது. சிப்பாய்க் கலகத்தில் நிகழ்ந்த சம்பவம் ஒன்று என் நினைவுக்கு வருகிறது. பல காலமாக மௌன விரதமிருந்த ஒரு துறவியை முகமதியன் ஒருவன் குத்திவிட்டான். கொலைகாரனைப் பிடித்த வர்கள் துறவியிடம் இழுத்துச் சென்று, ''சுவாமிகளே, ஒரு வார்த்தை சொல்லுங்கள். இவனை இப்போதே கொன்று விடுகிறோம்'' என்றனர். பல்லாண்டுகள் மௌன விரதம் பூண்ட அந்தத் துறவி, உயிர் போகும் அந்தத் தருணத்திலும், ''என் அருமைக் குழந்தைகளே, நீங்கள் உண்மையை உணரத் தவறி விட்டீர்கள். அவனும் கடவுளே!'' என்றார்.

'எல்லாவற்றிற்கும் பின்னால் இருப்பது ஒன்றே என்ற படிப்பினை மிகவும் மேலானது. அதைக் கடவுள், அன்பு, ஆன்மா, அல்லா, ஜெஹோவா என்று எப்படி அழைத்தாலும் அவை எல்லாம் ஒரே தத்துவமே. கீழான மிருகம் முதல் சிறந்த மகான் வரையிலுமுள்ள அனைத்தையும் இயங்கச் செய்வது அதுவே. பல துளைகளுள்ள பனி உறைந்த கடலை நினைத்துப் பாருங்கள். ஒவ்வொரு துளையையும் ஓர் ஆன்மாவாக, மனித னாகக் கருதுங்கள். ஒவ்வொருவனும் தன்னுடைய அறிவுக்கு ஏற்றபடி பனிக்கட்டியைத் தகர்த்துத் தள்ள முயற்சிக்கிறான். முக்தி பெற முயற்சிக்கிறான்.'

நி: 'கீழ்த்திசை, மேற்றிசை அறிவுகளுக்கு இடையே ஒரு வேறுபாடு தென்படுகிறது. துறவு, மன ஒருமைப்பாடு போன்ற வற்றால் நிறைமனிதர்களைப் படைப்பதே உங்கள் லட்சியமாக உள்ளது. சமுதாயத்தை நிறைநிலைக்குக் கொண்டு வருவது மேலை நாடுகளின் லட்சியமாக உள்ளது. எனவே அரசியல் மற்றும் சமுதாயப் பிரச்சினைகளைத் தீர்க்க நாங்கள் முயல் கிறோம். மக்கள்நலத்தை நாடியதால்தானே எங்கள் நாகரீகம் அழியாமல் நிற்கிறது?'

சு: (ஆர்வத்துடன்) 'ஆனால் சமுதாயமானாலும் அரசிய லானாலும் அதன் அமைப்புக்கு அடிப்படையாக உள்ளது மனிதனின் நற்குணமே. பாராளுமன்றம் இதை வகுத்தது, அதை வகுத்தது என்ற காரணங்களால் ஒரு நாட்டை நல்லது என்றோ, பெருமை மிக்கது என்றோ கூற முடியாது. அதன் பெருமைக்குக் காரணம் அதில் வாழும் சான்றோர்களே. நான் சீனாவிற்குச் சென்றிருந்தேன். மற்ற நாடுகளைவிட அற்புதமான இயக்க அமைப்பை உடையது அந்த நாடு. இப்போதோ அது கலைந்த சந்தைக் கூட்டம் போலுள்ளது. ஏனெனில் முற்காலத்தில் அமைக்கப்பட்ட மரபைப் பின்பற்றி, முறையாக நடக்கும் ஆற்றல் அதன் மக்களிடம் இல்லை. மதம், பிரச்சினையின் மூலத்தைத் துருவி ஆராய்கிறது. அது சரியானால் எல்லாம் சரியாக இருக்கும்.'

நி: 'நீங்கள் சொல்வது நடைமுறைக்கு ஏற்றதாகத் தோன்ற வில்லையே. ''தெய்வீகம் எல்லாவற்றிலும் உள்ளது. ஆனால் மூடப்பட்டுள்ளது'' என்கிறீர்கள். எப்போதும் அதன் உதவியை நாடி நிற்க முடியாதல்லவா?'

சு: 'ஒரே முடிவை நோக்கியே பெரும்பாலான மக்கள் செயலாற்றுகிறார்கள். ஆனால் அந்த உண்மையை அறியத் தவறி விடுகிறார்கள். சட்டம், அரசாங்கம், அரசியல் இவை யாவும் பல நிலைகள், ஆனால் இவற்றுள் எதுவும் எந்த விதத் திலும் முடிவானதல்ல. சட்டதிட்டங்களைக் கடந்து நிற்கும் ஒரு லட்சியமும் உள்ளது.

'இதற்கிடையில் சன்னியாசி என்ற சொல்லுக்கு விளக்கம் தர விரும்புகிறேன். தெய்வ நெறிக்காக உலக நியதி களைக் கடந்தவனே (Divine Outlaw) சன்னியாசி. தெய்வீக சூன்யவாதி என்ற சொல்லையும் (Divine Nihilist) பயன்படுத் தலாம். ஆனால் அந்தச் சொல் ஒருவேளை சந்தேகத்திற்கு இடம் தரலாம்.

'சிறந்த குருமார்கள் எல்லோரும் ஒரே விஷயத்தைத்தான் போதிக்கின்றனர். எல்லாவற்றிற்கும் அடிப்படை சட்டம் அல்ல; ஒழுக்கமும் தூய்மையும்தான் ஒரே பலம் என்பதை ஏசு கண்டார். கீழை நாடு உயர் ஆன்ம வளர்ச்சியைக் குறிக்கோளாகக் கொண் டுள்ளது. மேலைநாடோ சமுதாய நிறைநிலையை நாடுகிறது என்று சொன்னீர்கள். ஆனால் போலி ஆன்மா, உண்மை ஆன்மா என்று இரண்டு உள்ளதை நீங்கள் மறக்கவில்லை அல்லவா?'

நி: 'அதாவது நாங்கள் போலியை நாடுகிறோம், நீங் களோ, உண்மை ஆன்மாவை நாடுகிறீர்கள் என்பதா உங்கள் கருத்து?'

சு: 'மனம் முழுமையான வளர்ச்சி பெறப் பல நிலைகள் வழியாக முயல்கிறது. முதலில் அது தூலத்தைப் பற்றுகிறது. படிப்படியாக சூட்சுமத்திற்குச் செல்கிறது. உலகம்தழுவிய சகோதரத்துவம் என்ற கருத்தை எப்படி அடைந்தோம் என் பதையே பாருங்களேன். முதலில் ஒரு சிறு பிரிவினுள் சகோதரத்துவம். இது குறுகியது, அந்தப் பிரிவுக்குள் மட்டுமே அடங்குவது, பக்குவப் படாதது. பிறகு படிப்படியாக விரிவான பொதுமையை அடைகிறது. பிறகு கருத்து நிலையை அடைகிறது.'

நி: 'ஆங்கிலேயர்களான நாங்கள் பாராட்டும் பல பிரிவுகள் அழிந்துவிடும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள், அப்படித்தானே! ஆனால் எங்களைப்பற்றி பிரெஞ்சுக்காரர்கள், ''இங்கிலாந்தில் பல பிரிவுகளிலிருந்தாலும் அங்கு முழுவதும் வீசுவது ஒரே மணம்'' என்று கூறுவதை நீங்கள் அறிந்திருப்பீர்களே!'

சு: 'ஆனால் அவை மறைந்துதான் தீர வேண்டும். முக்கியம் அல்லாதவற்றின்மீது அவை எழுப்பப்பட்டுள்ளன. முக்கிய மானவை அழியாமல் நிற்கும். அது இன்னொரு வடிவத்துடன் உயிர் பெற்றெழும். ''ஒரு மதத்தில் பிறப்பது நல்லது, ஆனால் அதுவே நிலையென்று அதிலேயே உயிரை விடுவது நல்லதல்ல'' என்ற பழமொழி உங்களுக்குத் தெரிந்தது தானே!'

நி: 'இங்கு உங்கள் பணியின் முன்னேற்றம் எப்படி உள்ளது?'

சு: 'மெதுவாகத்தான். காரணங்களை ஏற்கனவே கூறி னேன். அடிப்படைத் தத்துவங்களையும் மூலங்களையும் ஆராயும்போது எந்த உண்மையான முன்னேற்றமும் மெது வாகத்தான் இருக்கும். ஆனால் அந்தக் கருத்துக்கள் பரவத்தான்

போகின்றன. நாம் பலரும் அவற்றைப் பரப்புவதற்கான வேளை வந்துவிட்டது போலவே உள்ளது.'

பின்பு இந்தப் பணி எப்படி உருவாகும் என்பதை சுவாமிஜி விளக்கினார்:

'பண்டைய கோட்பாடுகள் போலவே இந்தப் புதிய கருத்தும், பரிசையும் பணத்தையும் எதிர்பார்க்காமல் வழங்கப் படும். தாமே பணிபுரிய முன்வருபவர்களின், பலனை எதிர் பாராத முயற்சிகளையே இந்தப் பணியும் சார்ந்து நிற்கிறது.' ❑

## 7. இந்தியாவும் இங்கிலாந்தும்

'இந்தியா', லண்டன் 1896

நிருபர்: 'சூடான் முதலிய இடங்களுக்கு அனுப்பப்பட்ட படையெடுப்புகளின்மூலம் ஏற்பட்ட செலவுக் கணக்கைத் தீர்ப்பதும், நீதி வழங்குவதும், நிர்வாகமும் ஒருவரிடமே உள்ளதையும், ஆட்சி புரியும் நாட்டிற்காக ஏற்படும் செலவுகளைப் பற்றியும் இந்தியர் செய்த ஆட்சேபணைகளைத் தவிர, வேறு என்ன செய்தியை இந்தியா இங்கிலாந்திற்கு அனுப்ப இயலும்?'

சுவாமிஜி: 'இந்தியா மதப் பிரச்சாரகர்களை அனுப்புவது ஒன்றும் புதுமை இல்லை. புத்த மதத்தின் ஆரம்பக்காலம் முதல், அசோக சக்கரவர்த்தியின் ஆட்சியிலிருந்து இந்தியா அயல் நாடுகளுக்குப் போதிக்கவே செய்தது.'

நி: 'பிறகு ஏன் அது தன் பிரச்சாரத்தை நிறுத்தியது, ஏன் இப்போது மீண்டும் தொடங்கியுள்ளது?'

சு: 'சுயநலம் வளர்ந்ததால். அது மட்டுமின்றி, நாடுகளானாலும் தனிமனிதன் ஆனாலும் கொடுக்கல்-வாங்கல் மூலமாகத்தான் வளர முடியும் என்னும் தத்துவத்தை அது மறந்ததும் ஒரு காரணம். இந்தியா உலகிற்குச் செய்யும் பணி எப்போதும் ஒன்றே—அது ஆன்மீகம். பல யுகங்களாக அது ஆட்சி செய்யும் உலகம், அக உலகமாகிய கருத்துலகமே. சூட்சுமத்தை அறிதல், தத்துவம், தர்க்கம்—இவையே இந்தியாவின் விசேஷத் துறைகள். உண்மையில் இங்கிலாந்து இந்தியாவிற்குச் செய்த பணியின் விளைவே நான் இங்கிலாந்திற்கு ஆற்றும் பணி. வெல்வதும், ஆள்வதும், சொந்த நன்மைக்காகவும் எங்கள் நன்மைக்காகவும் விஞ்ஞான அறிவைப் பயன்படுத்திக் கொள்வதும் இங்கிலாந்தின் போக்காக இருந்தது.

'இந்தியா உலகிற்கு அளித்த செல்வத்தைக் குறிப்பிடும் போது, சம்ஸ்கிருதத்திலும் ஆங்கிலத்திலும் உள்ள வழக்கம் என் நினைவுக்கு வருகிறது. ஒருவன் மரணமடைந்துவிட்டால், ''அவன் தன் உயிரை விட்டுவிட்டான்'' என்று நீங்கள் கூறுகிறீர்கள். நாங்களோ, ''அவன் உடலை விட்டுவிட்டான்''

என்கிறோம். அதுபோல் நீங்கள் உடலையே சிறந்ததெனக் கொண்டு, ''ஆன்மா உடலின் உடைமை'' என்கிறீர்கள். நாங் களோ ''மனிதன் என்பவன் ஆன்மா, உடல் அவனது உடைமை'' என்கிறோம். இவை மேற்பரப்பில் எழும் சிற்றலைகளே என்றாலும், உங்கள் தேசியச் சிந்தனையின் போக்கை உணர்த்திவிடுகிறது.

'இருள் சூழ்ந்த இடைக்காலத்தின் பின் கிரேக்க, லத்தீன் மறுமலர்ச்சிக் காலம் ஐரோப்பாவில் எப்படிச் சிறந்து விளங் கியதோ, அப்படியே இந்தியத் தத்துவத்தின் சக்தியும் பரவும் என்று ஷோபனேர் கூறியதை உங்களுக்கு நினைவுபடுத்து கிறேன். கீழைநாட்டு ஆராய்ச்சி மிகவும் வளரத் தொடங்கி விட்டது. உண்மையை நாடுபவனின் முன் ஒரு புதிய கருத்துலகம் விரியத் தொடங்குவதை இப்போது காண்கிறோம்.'

நி: 'தன்னை வென்றவர்களை இறுதியில் இந்தியா வெற்றி கொள்ளுமா?'

சு: 'ஆம், கருத்துலகத்தில் வெல்லும். முகமதியர்கள் வாள் வலிமையால் வெற்றி பெற்றதுபோல், இங்கிலாந்து பண வலிமையால் வெல்ல முயல்கிறது. அக்பர் நடைமுறையில் இந்து என்றே சொல்ல வேண்டும். கல்வியில் சிறந்த முகமதியர் களான சூஃபிகள் இந்துக்களைப் போன்றவர்களே. அவர்கள் மாட்டிறைச்சியை உண்பதில்லை. அவர்களின் பழக்கவழக்கங் கள் எங்களுடையவற்றுடன் ஒத்திருக்கின்றன. அவர்களின் கருத்தில் எங்கள் கருத்து ஊடுருவிக் கலந்துவிட்டது.'

நி: 'அப்படியானால், உங்களை ஆளும் ஆங்கிலேயருக்கும் இதே கதி என்பதை முன்னோக்கியே உணர்கிறீர்களா? ஆனால் அவர்கள் இப்போது அதற்கு வெகு தொலைவில் நிற்கிறார்கள்.'

சு: 'நீங்கள் நினைப்பதுபோல் அவர்கள் அவ்வளவு தொலைவில் இல்லை. மதக் கருத்துலகில் இந்துக்களுக்கும் ஆங்கிலேயர்களுக்கும் அதிக ஒற்றுமை உண்டு. பிற மதத் தினரிடையேயும் இத்தகைய ஒற்றுமை இருப்பதைக் காண முடியும். ஆளும் ஆங்கிலேயனோ, தொழில் செய்யும் ஆங்கிலே யனோ இந்திய இலக்கியத்தை ஓரளவாவது படித்தால் ஒரு வரையொருவர் அன்போடு உணர்கின்ற தன்மை ஏற்படும். இந்தத் தன்மை தொடர்ந்து விரிந்துகொண்டே செல்லும். அவர்கள் தனித்து நிற்பதற்குக் காரணம் அறியாமை. சில நேரங் களில் அவர்கள் இந்துக்களை இகழ்ச்சியுடன் பார்ப்பதற்கும் இதுவே காரணம்.'

நி: 'ஆம், அது அறிவின்மையின் ஆழத்தையே காட்டுகிறது. மதப் பணிக்காக இங்கிலாந்திற்கு வராமல் நீங்கள் அமெரிக்கா சென்றது ஏன்?'

சு: 'அது தற்செயலாக நடந்தது, சர்வமத மகாசபை சிகாகோவில் நடந்ததன் விளைவு. அது இங்கிலாந்தில் நடத்தப் பட்டிருக்க வேண்டியது. மைசூர் மன்னரும் வேறு நண்பர்களும் இந்துக்களின் சார்பில் என்னை அனுப்பினர்.

'இங்கு லண்டனில் நான் சொற்பொழிவு செய்ய வந்தேன். கடந்த இரண்டாண்டுகளில் கோடைக் காலத்தைத் தவிர மூன்று ஆண்டுகள் அமெரிக்காவில் தங்கினேன். அமெரிக்கர்கள் மிக உயர்ந்தவர்கள், அவர்களின் எதிர்காலம் சிறப்பாக இருக்கும். நான் அவர்களை மிகவும் மதிக்கிறேன். அவர்களுள் எனக்குப் பல நண்பர்களும் வாய்த்தனர். ஆங்கிலேயரிடம் காணப்படும் பல தவறான கருத்துக்கள் அமெரிக்கர்களிடம் இல்லை. புதிய கருத்தாக இருந்தாலும் அளந்து ஆராயும் இயல்புடையவர்கள் அமெரிக்கர்கள். விருந்தினரை நன்றாக உபசரிக்கிறார்கள்.

'சான்றிதழ்கள், அத்தாட்சிகள் என்றெல்லாம் அவர்கள் நேரத்தை வீணாக்குவதில்லை. நான் நண்பர்களிடையே சொற் பொழிவாற்றிக் கொண்டே ஒரு நகரத்திலிருந்து மற்றொரு நகரத்திற்குச் சென்றதுபோல் நீங்களும் செல்லலாம். பாஸ்டன், நியூயார்க், பிலடெல்பியா, பால்டிமோர், வாஷிங்டன், டெஸ் மாய்ன், மெம்பிஸ் முதலிய பல இடங்களுக்கு நான் சென்றுள் ளேன்.'

நி: 'அந்த எல்லா இடத்திலும், நீங்கள் சீடர்களை விட்டுச் சென்றுள்ளீர்களா?'

சு: 'ஆம். சீடர்கள்தான், அமைப்புக்கள் அல்ல. அமைப்புக் களை நிறுவுவது என் வேலையும் அல்ல. உண்மையில் அமைப்புக்களுக்குக் குறைவில்லை. அவற்றை நிர்வகிக்கத்தான் ஆட்கள் தேவை. அதிகாரம், பொருள், செல்வாக்கு இவற்றையே மக்கள் விரும்புகின்றனர். அடிக்கடி ஆட்சிக்காகப் போராடு கின்றனர், சண்டை இடுகின்றனர்.'

நி: 'உங்கள் செய்தியை ஒரு சில வரிகளில் கூற முடியுமா? மத ஒப்புமையா நீங்கள் போதிக்க விரும்புவது?'

சு: 'உண்மையில் நான் சொல்ல விரும்புவது மதத் தத்துவ சாரமாகும். மதங்களில் எல்லா நிலைகளிலும் முக்கியமான பகுதிகளும் முக்கியமற்ற பகுதிகளும் உண்டு. முக்கியம் அற்றவை நீங்கினால் எஞ்சி நிற்பதுதான் உண்மையான அடிப்படை.

அது எல்லா மதங்களுக்கும் பொதுவானது. அவை எல்லாவற்றின் பின்னாலும் ஒருமை நிலவுகிறது. அதைக் கடவுள், அல்லா, ஜெஹோவா, ஆன்மா, அன்பு என்று எப்படி வேண்டுமானாலும் அழைக்கலாம். மிகத் தாழ்ந்த உயிரினம் முதல் மிக உயர்ந்த மனிதன்வரை எல்லாவற்றையும் இயக்குவது அந்த ஒருமையே. அந்த ஒருமையைத்தான் நாம் வலியுறுத்திப் பேச வேண்டும். மேலை நாடுகளில், ஏன், எங்கும் முக்கியமற்றதையே பேசுகிறார்கள். இந்த முக்கியம் அல்லாதவற்றைப் பற்றிக்கொண்டு, தான் சொல்வதைப் பிறர் பின்பற்ற வேண்டும் என்று தங்களுக்குள் அடித்துக் கொள்கிறார்கள். இறைவனிடமும் மனிதர்களிடமும் மலரும் அன்புதான் சாரம், அப்படியிருந்தும் இவர்கள் இப்படி நடப்பது ஆச்சரியமாக இருக்கிறது.'

நி: 'ஓர் இந்து பிறரைத் தாக்குவதில்லையா?'

சு: 'இதுவரையில் இல்லை. மிகவும் சகிப்புத் தன்மை உடையவன் அவன். அவன் ஆழ்ந்த மதப் பற்றுள்ளவன், எனவே இறை நம்பிக்கை இல்லாதவர்களை அவன் கொடுமைப் படுத்தியிருப்பான் என்று நினைக்கலாம். கடவுள் என்பதே ஒரு மனமயக்கம் என்று சமணர்கள் கூறினர். அப்படியிருந்தும் ஒரு சமணனும் வதைக்கப்படவில்லை. மதவெறியின் பெயரில் முதன் முதலாக இந்தியாவில் வாள் பிடித்தவர்கள் முகமதியர்களே.'

நி: 'இங்கே ஆயிரக்கணக்கில் மதப் பிரிவுகள் உள்ளன. ஒற்றுமைக் கொள்கை எவ்வாறு முன்னேற முடியும்?'

சு: 'தாராள மனமும் அறிவும் வளரவளர மதப் பிரிவுகள் படிப்படியாக மறைந்தேயாக வேண்டும். இவையெல்லாம் சாரமற்றவைமீது எழுப்பப்பட்டுள்ளன, இயல்பாகவே நீடித்து நிற்காது. தங்கள் பிரிவிற்குள் ஒரு குறுகிய சகோதரத்துவத்தை ஏற்படுத்தியதுடன் மதப்பிரிவுகளின் வேலை முடிந்துவிட்டது. மனிதர்களைப் பிரிக்கும் சுவர்களை இடித்துத் தள்ளி எல்லாவற்றையும் தழுவக்கூடிய சகோதரத்துவம் நாளடைவில் வளரும். இங்கிலாந்தில் பணி மெள்ளத்தான் வளர்கிறது. ஒருவேளை, அதற்கான காலம் இன்னும் கனியவில்லை போலும். ஆனாலும் அது வளர்ந்து கொண்டுதான் இருக்கிறது.

'இங்கிலாந்தில் போலவே இந்தியாவிலும் இப்போது பணி தொடங்கப்பட்டுள்ளது என்பதை இந்த வேளையில் தெரிவித்துக்கொள்கிறேன். தற்கால ஜாதிப் பிரிவினை இந்தியாவின் முன்னேற்றத்திற்குக் குறுக்கே நிற்கிறது. அது மனத்தைக் குறுகச் செய்கிறது, பிளவை ஏற்படுத்துகிறது, எல்லை அமைக்கிறது.

ஆனால் கருத்துக்களின் முன்னேற்றத்தின் முன் அந்த எல்லை இடிந்து நொறுங்கிவிடும்.'

நி: 'ஆனால் இந்தியாவின்மீது அனுதாபம் உடைய, அதன் வரலாற்றை அறிந்த ஆங்கிலேயர் சிலர், ஜாதி மிகவும் நன்மை செய்யக்கூடியதென்று நினைக்கின்றனர். ஒருவன் எளிதாக ஐரோப்பாவைப் பின்பற்ற முடியும். எங்கள் லட்சியங்களை நீங்கள் உலோகாயதம் என்று பழிக்கிறீர்களே!'

சு: 'உண்மைதான், இந்தியாவை இங்கிலாந்துடன் பிணைப்பதை அறிவுள்ள யாரும் விரும்ப மாட்டார்கள். உடல் என்பது அதன் பின்னாலுள்ள எண்ணங்களால் உருவாக்கப்பட்டது. அதுபோல், அரசியல் என்பது தேசியச் சிந்தனைகளின் திரண்ட வடிவம். இந்தியாவைப் பொறுத்தவரையிலோ, அது பல நூற்றாண்டுகளாக வந்த கருத்துக்களின் வடிவம். அதனால் இந்தியாவை ஐரோப்பிய மயமாக்குவது சாத்தியமல்ல, அது முட்டாள்தனமும்கூட. முன்னேற்றத்தின் அம்சங்கள் எப்போதும் இந்தியாவில் துடிப்புடன் இயங்கியே வந்திருக்கின்றன. அமைதியான அரசாங்கம் ஒன்று இருக்கும்போதெல்லாம் அவை நிமிர்ந்து நின்றன.

'உபநிடத காலம் முதல் இன்று வரையிலும் அனேகமாக எங்கள் எல்லா ஆச்சாரியர்களும் ஜாதிச் சுவர்களை இடித்துத் தள்ள விரும்பியுள்ளனர். அவர்கள் தகர்க்க முயன்றது சீரழிந்து போன இன்றைய ஜாதிப் பிரிவுகளையே, ஆதியில் ஏற்பட்ட ஜாதி அமைப்பையல்ல. ஆரம்பத்திலுள்ள ஜாதி அமைப்பு மிகவும் பெருமை வாய்ந்த ஒரு சமுதாய அமைப்பாக இருந்தது. இன்றைய ஜாதி அமைப்பில் நீங்கள் காண்கின்ற ஏதோ சிறு நன்மை அந்த ஆரம்ப அமைப்பிலிருந்து வந்ததே. அதை மீண்டும் பண்டைய நிலைக்குக் கொண்டுவர புத்தர் முயன்றார். இந்தியா விழித்தெழுகின்ற ஒவ்வொரு காலகட்டத்திலும் ஜாதியைத் தகர்ப்பதற்கான முயற்சிகள் இருந்தே வந்தன. புதிய இந்தியாவை நாங்களே படைக்கிறோம். அனுகூலமான அன்னிய கருத்துக்களை இணைத்து, கடந்த காலத்தின் தொடர்ச்சியாக ஒரு புதிய இந்தியாவை உருவாக்குவது 'நாங்கள்'; 'அவர்கள்' அல்ல, அதாவது பிறர் அதனை உருவாக்க முடியாது. வளர்ச்சி என்பது உள்ளிருந்தே வர வேண்டும். எங்கள் வளர்ச்சிக்கான வழியை நாங்களே வகுத்துக்கொள்ள உதவுவதே இங்கிலாந்து செய்யத் தக்கது. கழுத்தில் கை வைத்து அன்னியர் நம்மை ஆட்டிவைக்கும் நிலையில் நிகழும் எந்த முன்னேற்றமும், என்

கருத்தின்படி, பயனற்றதே. மிக உயர்ந்த பணியானாலும், அது அடிமைத்தனத்தின் மூலம் செய்யப்பட்டால் சீரழிவுக்கே வழிவகுக்கும்.'

நி: 'இந்திய தேசிய காங்கிரசில் நீங்கள் கவனம் செலுத்தியது உண்டா?'

சு: 'அதிகமாகக் கவனம் செலுத்தியதில்லை. எனது பணி வேறு துறையைச் சேர்ந்தது. ஆனால் அந்த இயக்கமும் முக்கியமானது என்று கருதுகிறேன். அது வெற்றி பெறட்டும் என்று மனப்பூர்வமாக வாழ்த்துகிறேன். பல இனத்தினரால் இந்தியா உருவாகியுள்ளது. ஐரோப்பாவைப் போலவே இந்தியாவிலும் பல்வேறு இனத்தினர் உள்ளனர் என்றே நான் எண்ணுகிறேன். அன்றைய உலக நாகரீகத் துறையில் மிகப் பெரிய இடம் வகித்த இந்திய வாணிபத்தைக் கைப்பற்ற ஐரோப்பா போராடியது. அதைக் கைப்பற்றியது உலக வரலாற்றில் ஒரு திருப்பம் என்றே சொல்ல வேண்டும். டச்சுக்காரர், போர்ச்சுகீசியர், பிரெஞ்சுக் காரர், ஆங்கிலேயர் இவர்கள் ஒவ்வொருவரும் அதற்காகப் போராடினார்கள். வெனிஸ் வணிகர்கள் கீழை நாட்டில் பெரு நஷ்டம் அடைந்தனர். அப்போது, அமெரிக்க நாடு கண்டு பிடிக்கப்பட்டது. அவர்கள் கிழ்த்திசையில் அடைந்த நஷ்டத்தை அருகிலுள்ள மேற்றிசையில் ஈடு செய்தனர். அதாவது அமெரிக்காவைக் கண்டுபிடித்தனர்.'

நி: 'அந்த இயக்கம் எதில் நிறைவுறும்?'

சு: 'நிச்சயமாக இந்தியாவின் ஒற்றுமையை உருவாக்கு வதிலும், ஜனநாயகக் கருத்துக்கள் என்று கூறுகிறோமே, அவற்றைப் பெறுவதிலும்தான். அறிவு என்பது பண்பட்ட ஒருசிலரின் ஏகபோகமாக மட்டுமே இருந்துவிடக் கூடாது. உயர்ந்த இனத்திலிருந்து தாழ்ந்த இனம் வரையிலும் அது பரவ வேண்டும். கல்வி வளர்ந்து வருகிறது, கட்டாயக் கல்வியும் தொடர்ந்து வரும். நமது மக்களின் அளவற்ற செயல்திறனைப் பயன்படுத்த வேண்டும். இந்தியாவின் உள்ளுறையும் ஆற்றல்கள் மகோன்னதமானவை. அவை தட்டி எழுப்பப்படும்.'

நி: 'பெரிய ராணுவ பலமின்றி எந்த நாடாவது எப் போதாவது சிறப்பாக இருந்ததுண்டா?'

'ஆம்' என்று சிறிதும் தடங்கலின்றி வந்தது சுவாமிஜியின் பதில். அவர் தொடர்ந்தார்:

சு: 'சீனா அப்படித்தான் இருந்தது. சீனா, ஜப்பான் போன்ற நாடுகளுக்கு நான் சென்றுள்ளேன். இப்போது சீனா கலைந்த

சந்தையைப்போல் கிடக்கிறது. ஆனால் அதன் நல்ல காலத்தில், இதுவரை எந்த நாடும் காணாத நிறுவன அமைப்பு அதனிடம் இருந்தது. நவீனம், நவீனம் என்று நாம் இன்று சொல்கிறோமே, அந்த வழிகளும் முறைகளும் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே சீனர்களால் பின்பற்றப்பட்டவை, ஆயிரக்கணக்கான வருடங்களாகப் பின்பற்றப்பட்டவை. உதாரணத்திற்கு போட்டிப் பரீட்சையையே எடுத்துக் கொள்ளுங்களேன்.'

நி: 'அந்த நாட்டின் சீர்குலைவிற்குக் காரணம் என்ன?'

சு: 'தன் நிறுவன அமைப்பை நிர்வகிக்கத் தக்க மனிதர்களை அதனால் உருவாக்க முடியவில்லை. பாராளுமன்றத்தில் சட்டம் போடுவதால் மக்களை நல்லவர்களாக்க முடியாது என்று கேள்விப்பட்டிருப்பீர்கள். இதன் உண்மையை உங்களுக்கு முன்பே சீனர்கள் உணர்ந்திருந்தனர். அதனால்தான் அரசியலை விட மதம் முக்கியமானது, மதம் வேர் வரையில் செல்கிறது, ஒழுக்கத்தின் அடிப்படையையே ஆராய்கிறது.'

நி: 'நீங்கள் குறிப்பிடுகின்ற விழிப்பை இந்தியா உணர்ந்துள்ளதா?'

சு: 'முற்றிலும் உணர்ந்துள்ளது. இந்த விழிப்பைக் காங்கிரஸ் இயக்கத்திலும், சமூகச் சீர்திருத்தத் துறையிலும்தான் உலகம் காண்கிறது. மதத் துறையிலும் அந்த உண்மையான விழிப்பு இருக்கத்தான் செய்கிறது. ஆனால் அது ஆரவாரமின்றிச் செயல்படுகிறது.'

நி: 'மேலை நாடும் கீழை நாடும் மாறுபட்ட லட்சியங்களை உடையவை. முன்னது சமுதாயத்தை நிறைநிலைக்குக் கொண்டு வர முயல்கிறது. இத்தகைய பணிகளில் நாங்கள் ஆர்வமுடன் ஈடுபட்டிருக்கும்போது, கீழை நாட்டினரான நீங்கள் உலகிற்குப் புறம்பான சிந்தனைகளில் மூழ்கியுள்ளீர்கள். சூடானிலுள்ள இந்தியப் படைகளின் ஊதியத்தைப்பற்றி இங்கே பாராளுமன்றம் விவாதிக்கிறது. அரசின் அநியாயத் தீர்ப்பை எதிர்த்து கான்சர்வேடிவ் பத்திரிகைகளில் தரமான பிரிவினர் அனைவரும் கூச்சலிட்டனர். ஒருவேளை இவையெல்லாம் கவனிக்கத் தக்கதே அல்ல என்று நீங்கள் நினைக்கிறீர்களா?'

நிருபரின் கேள்விக்கு, 'நீங்கள் சொல்வது தவறு' என்று பதிலளித்த சுவாமிஜி அந்தப் பத்திரிகைகளுள் ஒன்றை வாங்கிப் பார்த்தார். பின்னர் தொடர்ந்தார்:

சு: 'இந்த விஷயத்தைப் பொறுத்தவரையில், என் அனுதாபமெல்லாம் இயல்பாகவே என் நாட்டின் பக்கம்தான்.

யானையை விற்ற பிறகு அங்குசத்திற்குப் போராடுகிற கதையாக உள்ளது இது. இந்தியா எப்போதும் கொடுத்துக்கொண்டே இருக்கிறதே! அரசியல்வாதிகளின் சண்டைகளும் சச்சரவுகளும் விசித்திரமாக உள்ளன. அரசியலில் ஆன்மீக உணர்வைக் கொண்டுவர பல ஊழிக் காலங்களாகும்.'

நி: 'எப்படியிருந்தாலும் அதற்காக முயற்சி செய்யத்தானே வேண்டும்?'

சு: 'இதுவரை எழுந்த ஆதிக்க அரசுகளில் மிகவும் பெரிதான இந்த நாட்டின் இதயமான லண்டனில் ஒரு நல்ல கருத்தை வேரூன்றச் செய்வது சிறப்பானது. இது செயலாற்றுவதை நான் கவனிக்கிறேன். தன் சக்தியாலும், குறையற்ற அமைப்பாலும், மிக நுண்ணிய பகுதிகளிலும் இது செயலாற்றுகிறது. இதன் செயல்பாடும், அனைவரையும் ஈடுபடுத்திச் செல்லும் பாங்கும் அற்புதமானவை. இது எவ்வளவு பெரிய அரசு, இதன் நிர்வாகம் எவ்வளவு கடினமானது என்பதை நாம் உணரும்படி இது உதவுகிறது. மற்ற அனைத்துடன் சிந்தனைகளையும் இது பரவச் செய்கிறது. இந்த இதயத்தில் சில கருத்துக்களைத் தூவுவது நல்லது, அது நாட்டின் மிக நுண்ணிய பகுதிகளையும் எட்டும்.' ❑

## 8. இந்தியப் பிரச்சாரகர்களின் இங்கிலாந்துப் பணி

'தி எக்கோ', லண்டன் 1896

நிருபர்: 'தற்காலத்தில் மக்கள் முக்கியம் அல்லாதவற்றிற்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பதாக நினைக்கிறீர்களா?'

சுவாமிஜி: 'பின்தங்கிய நாடுகளிலும், மேலைநாடுகளில் பண்படாத மக்களிடையேயும்தான் இப்படி இருக்குமென நான் எண்ணுகிறேன். படித்தவர்களிடமும் பணக்காரர்களிடமும் விஷயங்கள் வேறு விதத்தில் உள்ளன என்பதை உங்கள் கேள்வி சுட்டுகிறது. ஆம், அது உண்மைதான். பணக்காரர்கள் சுக போகங்களில் ஆழ்ந்துள்ளனர், மேலும் பணம் சேர்க்கப் பாடுபடுகின்றனர். அவர்களும், ஓய்வின்றி ஓடுபவர்களுள் பெரும்பாலோரும் மதம் என்பது வீண் பிதற்றல், அழுகிய குப்பை என்று கூறுகிறார்கள், உண்மையாகவே அப்படித்தான் கருதுகிறார்கள். இப்போதைய மதம் என்பது நாட்டுப் பற்றும் பழமைவாதமும்தான். திருமணத்திற்கோ, இறந்தவரைப் புதைப்பதற்கோதான் மக்கள் சர்ச்சுக்குப் போகிறார்கள்.'

நி: 'உங்கள் உபதேசம் மக்களை அடிக்கடி சர்ச்சுக்குப் போகும்படித் தூண்டுமா?'

சு: 'அப்படித் தோன்றவில்லை. சடங்குகள், கொள்கைகள் இவற்றுடன் எனக்குச் சிறிதும் தொடர்பு இல்லை. மதமே எல்லாம், மதத்திலேயே எல்லாம். ... என்பதைக் காட்டுவதே எனது பணி. இங்கிலாந்திலுள்ள அமைப்பைப்பற்றி என்ன சொல்வது! சோஷலிசம், அது இது என்று எந்தப் பெயரிலாவது அழையுங்கள், மக்களால் ஆளப்படுகின்ற ஏதோ ஒன்று நடைமுறையில் இருப்பதை ஒவ்வொன்றும் காட்டுகிறது. பொருட் தேவைகளைப் பெறுதல், குறைந்த நேர வேலை, எதிர்ப்பின்மை, போரின்மை, அதிக உணவு முதலியவற்றை மக்கள் நிச்சயமாக விரும்புவார்கள். மதத்தின்மீது, மனிதனின் நல்லியல்பின்மீது நிறுவப்படாத இந்த நாகரீகமோ, எந்த நாகரீகமோ நிலைக்கும் என்பதற்கு என்ன உத்தரவாதம் உள்ளது? மதம்தான் எதையும்

அதன் வேருக்கே சென்று ஆராய்கிறது. அதைச் சார்ந்து நில்லுங்கள். அது சரியாக இருந்தால், எல்லாம் சரியாகி விடும்'.

நி: 'மதத்தின் முக்கியப் பகுதியை, தத்துவப் பகுதியை மக்கள் மனத்தில் நுழைப்பது சிரமம். அது அவர்களின் எண்ணங்கள், வாழ்க்கை முறை இவற்றிலிருந்து மாறுபட்டதாக அல்லவா உள்ளது?'

சு: 'எந்த மதமானாலும், நமது பயணம் சிறிய உண்மையிலிருந்து பேருண்மைக்குத்தானே தவிர, தவறிலிருந்து உண்மைக்கு அல்ல. படைப்பு அனைத்திற்கும் பின்னணியாக ஒருமை உள்ளது. ஆனால் மனங்கள் வெவ்வேறாக உள்ளன. 'உள்ளது ஒன்றே, மகான்கள் அதைப் பல்வேறாகக் கூறுகிறார்கள்'. சிறிய உண்மையிலிருந்து பேருண்மைக்கு ஒருவன் முன்னேறுகிறான் என்பதை நான் குறிப்பிடுகிறேன். மிகத் தாழ்ந்த மதங்கள்கூட, உண்மையின் திரிந்த நிலைகள் மட்டுமே. அதைச் சிறிதுசிறிதாகவே அறிய முடியும். பேய் வழிபாடுகூட, என்றும் சத்தியமான, மாறாத பிரம்மத்தைத் திரித்து வழிபடுவதே தவிர வேறில்லை. மற்ற மதங்களிலும் அந்தப் பிரம்மத்தின் குறைவான அல்லது அதிகமான பகுதிகள் கொள்ளப்படுகின்றன. எந்த மதத்திலும் அது முழுமையாக இல்லை.'

நி: 'நீங்கள் இங்கிலாந்தில் பரப்பக் கருதுகின்ற மதம் உங்களால் உருவாக்கப்பட்டதா?'

சு: 'இல்லவே இல்லை. இந்தியாவின் ஒரு சிறந்த ரிஷியான ராமகிருஷ்ண பரமஹம்சரின் சீடன் நான். எங்கள் ரிஷிகளுள் சிலரைப்போல் அவர் படித்தவர் அல்ல. அவர் மிகவும் புனிதமானவர், வேதாந்தத் தத்துவத்தின் சாரத்தைத் தன்னில் கொண்டவர். வேதாந்தத்தைத் தத்துவம் என்பதா, அதை ஏன் மதம் என்று சொல்லக் கூடாது என்று தோன்றுகிறது. உண்மையில் அது இரண்டுமாக உள்ளது. ''பத்தொன்பதாம் நூற்றாண்டு'' பத்திரிகையின் சமீப வெளியீட்டில் பேராசிரியர் மாக்ஸ்முல்லர் என் குருநாதரைப்பற்றி எழுதியிருப்பதை நீங்கள் படிக்க வேண்டும். அவர் ஹுக்ளி மாவட்டத்தில் 1836-இல் பிறந்தார். 1886-இல் மறைந்தார். கேசவ சந்திரசென் முதலியோரின் வாழ்வில் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தினார். உடலையும் உள்ளத்தையும் அடக்கி, ஆன்மீக உலகத்தின் அற்புத உள்ளுணர்வைப் பெற்றார். அவரது முகத்தில் குழந்தையைப்போல் மென்மையும் எளிமையும் இனிமையும்

தவழும். அந்தத் திருமுகத்தைக் கண்டு மகிழாதவர் யாரும் இருக்க முடியாது.'

நி: 'உங்கள் உபதேசம் வேதங்களிலிருந்து திரட்டப் பட்டதா?'

சு: 'ஆம், வேதாந்தம் என்பது வேதங்களின் முடிவு. இதுவே வேதங்களின் மூன்றாம் பகுதியாகிய உபநிடதங்கள். முன் பகுதி களில் முளையாக உள்ள கருத்துக்கள் இங்கே வளர்ச்சியுற்று இருப்பதைக் காணலாம். வேதங்களின் மிகப் பழைய பகுதி சம்ஹிதை. இது மிகப் பழமையான சம்ஸ்கிருதத்தில் அமைந் துள்ளது. யாஸ்க நிருக்தம் என்னும் அகராதியின் துணையுடன் தான் இதன் பொருளை நாம் அறிய முடியும்.'

நி: 'எங்களிடமிருந்து இந்தியா கற்றுக்கொள்ள ஏராளம் உள்ளது என்றே நாங்கள் எண்ணியிருந்தோம்! என்ன மடத் தனம்! இந்தியாவிலிருந்து நாங்கள் தெரிந்துகொள்ள வேண்டி யவை உள்ளன என்பது பொதுவாக யாருக்கும் தெரியாது.'

சு: 'அது சரிதான். இந்தியாவிடமிருந்து கற்க வேண்டியவை ஏராளம் உள்ளது, அவை எவ்வளவு சிறப்பானவை என்பதை அறிஞர்கள் அறிந்துள்ளனர். மாக்ஸ்முல்லர், மோனியர் வில்லியம்ஸ், சர் வில்லியர் ஹன்டர் மற்றும் கீழை நாடு பற்றிய ஆராய்ச்சி வல்லுனர்களான ஜெர்மானிய அறிஞர்கள் எல்லாம் இந்து வேதாந்தத்தை மறுப்பதே இல்லை.' ❑

## 9. மதுரையில் விவேகானந்தருடன்

'இந்து' (The Hindu) சென்னை, பிப்ரவரி 1897

நிருபர்: 'பிரபஞ்சம் பொய் என்ற வாதம் பின்வரும் வகைகளில் அறிந்து கொள்ளப்படுகிறது: 1. எல்லையில்லாத காலத்துடன் ஒப்பிடும்போது அழிந்துபோகும் நாமரூபங்களின் கால அளவு ஒன்றுமே இல்லை. 2. இரண்டு பிரளயங்களுக்கு இடையில் உள்ள காலமும் எல்லையற்ற காலத்துடன் ஒப்பிடுகையில், ஒன்றுமே இல்லை. 3. நம் அறிவின் ஒரு கோணத்திலிருந்து பார்த்தால், உண்மைபோல் தோற்றமளிக்கும் பிரபஞ்சம் இறுதியில் பொய் என்பது முடிவாகும். சிப்பியில் வெள்ளியையும், கயிற்றில் பாம்பையும் காண்பதுபோல் நம் மனத்தைப் பொறுத்தே பிரபஞ்சத் தோற்றமும் உள்ளது. 4. மலடி வயிற்று மகன் போலவும், முயல் கொம்பு போலவும் இவை யாவும் மாயை.

அத்வைதத்தில் மேலே கூறப்பட்டவைகளுள் எது எடுத்துக் கொள்ளப்படுகிறது?'

சுவாமிஜி: 'அத்வைதிகளுள் பல பிரிவுகள் உள்ளனர். ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாகக் கொள்கின்றனர். மூன்றாவதாக நீங்கள் குறிப்பிட்ட பொருளைத்தான் சங்கரர் கையாள்கிறார். இந்தச் சாதாரண உணர்வு நிலையில் பொதுவாகப் பிரபஞ்சம் உண்மைபோல் தெரியும். ஆனால் உணர்வு விரியவிரிய அது மறைகிறது. உங்கள் முன்னால் ஒரு மரம் நிற்கிறது. நீங்கள் அதைப் பேயாகக் காண்கிறீர்கள். அந்த நேரத்திற்கு அது உண்மைதான். ஏனெனில் பேயைக் காணும்போது எந்த உணர்ச்சி ஏற்படுகிறதோ, அதே உணர்ச்சியைத்தான் உங்கள் மனம் அப்போது அடைகிறது. அது மரம் என்பதை உணரும்போது, பேய் என்ற எண்ணம் போய்விடுகிறது. மரம் என்ற கருத்தும் பேய் என்ற கருத்தும் சேர்ந்திருக்க முடியாது. ஒன்று இருந்தால் இன்னொன்றிற்கு இடமில்லை.'

நி: 'நான்காவது கருத்தும் சங்கரரின் சில நூல்களில் இடம் பெற்றுள்ளது அல்லவா?'

சு: 'இல்லை. சங்கரரின் கருத்தைச் சரியாகப் புரிந்து கொள்ளாத சிலர் செய்த வேலை அது. அதை அவர்கள் வெகு தூரம் நீட்டிவிட்டனர். ஒன்றாவதும் இரண்டாவதும் சில அத்வைதிகளின் கருத்துக்களே. ஆனால் இவற்றிற்குச் சங்கரரின் நூல்களில் எந்த ஆதாரமும் இல்லை.'

நி: 'பிரபஞ்சம் இப்படி உண்மைபோல் தோன்றக் காரணம் என்ன?'

சு: 'மரத்தைப் பேயாக நீங்கள் கண்டதற்குக் காரணம் என்ன? பிரபஞ்சம் எப்போதும் ஒன்றாகத்தான் உள்ளது. உங்கள் மனம்தான் பல விசித்திரங்களை எழுப்புகிறது.'

நி: 'வேதங்கள் முதலும் முடிவும் இல்லாதவை என்று கூறுவதன் உண்மைப் பொருள் என்ன? வேதங்கள் என்னும் போது, அது வேத மந்திரங்களைக் குறிக்கிறதா? அவற்றில் அடங்கியுள்ள கருத்துக்களைக் குறிக்கிறதா? கருத்துக்களைக் குறிக்கிறது என்றால், தர்க்கம், கணிதம், வேதியியல் போன்ற வைகளும் அப்படியே முதலும் முடிவும் அற்றவைதானே! அவற்றிலும் நிலையான உண்மை காணப்படுகிறதே!'

சு: 'வேதங்களிலுள்ள தெய்வீக உண்மைகள் எப்போதும் மாறாதவை, அழிவற்றவை என்றும் அவை மனிதர்களுக்கு மட்டுமே வெளிப்படும் என்றும் கருதப்பட்ட காலம் உண்டு. பிறகு, வேதக் கவிதைகளைப் பொருள் புரிந்து ஓதுவது சிறப் பானது என்றும், அந்தக் கவிதைகள் தெய்வீகத்தன்மை வாய்ந் தவை என்றும் கொள்ளப்பட்டது. இன்னும் பிற்காலத்தில், சில கவிதைகளின் பொருளை ஆழ்ந்து ஆராய்ந்ததில் அவை தெய்வீகமானவையாக இருக்க முடியாது என்று கருதப்பட்டது. ஏனெனில் மிருகங்களை வதைத்தல் போன்ற செயல்களை அவை போதித்தன. மேலும் கேலிக்குரிய பல கதைகளையும் நாம் வேதங்களில் காண்கிறோம். வேதங்கள் முதலும் முடிவும் அற்றவை என்பதன் கருத்து, அவை மனிதனுக்குத் தெரிவிக்கும் நியதி அல்லது உண்மை எப்போதும் உள்ளது, என்றும் மாறாதது என்பதுதான்.

'தர்க்கம், கணிதம், வேதியியல் இவையும் ஒருவகையில் வேதங்களைப் போலவே முதலும் முடிவும் அற்றவை. ஏனெ னில் அவையும் நியதி அல்லது உண்மையையே கூறுகின்றன. ஆனால் வேதங்களில் காணப்படாத உண்மையோ நியதியோ இல்லை. அவற்றில் ஆராயப்படாத ஒன்றைக் காட்டுங்கள், பார்க்கலாம்.'

நி: 'அத்வைதத்தின்படி முக்தி என்பது என்ன? அது ஓர் உணர்வு நிலையா? அத்வைதம் கூறும் முக்திக்கும், பௌத்தம் கூறும் நிர்வாணத்திற்கும் வேறுபாடு உள்ளதா?'

சு: 'முக்தியில் ஓர் உணர்வு உள்ளது, அதை உணர்வுகடந்த நிலை என்கிறோம். இப்போதைய உணர்வு நிலையிலிருந்து அது வேறுபட்டது. முக்தியில் உணர்வு இல்லை என்பது தர்க்க ரீதியானது அல்ல. ஒளியைப் போலவே உணர்வும் மந்தம், நடுத் தரம், தீவிரம் என மூன்று வகைப்படும். அதிர்வு மிகமிக விரை வாக இருக்கும்போது ஒளி, நம் கண்களால் காண முடியாத அளவிற்குப் பிரகாசமாக உள்ளது. மங்கிய ஒளி எப்படிப் பயனற்றதோ அதுபோல் இதுவும் பயனற்றதே. பௌத்தர்கள் எப்படி வாதித்தாலும், அவர்கள் கண்ட நிர்வாணத்திலும் உணர்வு இருந்தே தீர வேண்டும். நாம் உடன்பாட்டு முறையில் முக்திக்கு இலக்கணம் அமைக்கிறோம், அவர்கள் எதிர்மறை முறையில் அமைக்கிறார்கள்.'

நி: 'எல்லைகள் எதுவுமற்ற பிரம்மம் உலகப் படைப்பாக வெளிப்பட்டு ஏன் எல்லைக்கு உட்பட வேண்டும்?'

சு: 'இந்தக் கேள்வியே தர்க்கரீதியில் முரணானது. பிரம்மம் வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாதது. காலம், இடம், காரண காரியம் இவற்றிற்கு அப்பாற்பட்ட எதையும் மனித மனத்தால் நினைக்க முடியாது. வாதமும் ஆராய்ச்சியும் காலம், இடம், காரணகாரியம் இவற்றிற்கு உட்பட்டது. எனவே மனிதச் சிந்தனைக்கு அப்பாலுள்ள ஒன்றைச் சிந்தனையால் ஆராய் வது வீண்.'

நி: 'புராணங்களில் உருவகமாக மறைந்துள்ள கருத்துக் களை வெளியே கொண்டு வருவதற்கான முயற்சிகளை இங்கு மங்கும் காண்கிறோம். புராணங்களில் வரலாற்று உண்மை இருக்க வேண்டிய அவசியமில்லை, கற்பனைப் பாத்திரங்கள் மூலம் உயர்ந்த லட்சியங்களைக் கூற உருவாக்கப்பட்டவையே அவை என்று கூறப்படுகிறது. உதாரணமாக விஷ்ணு புராணம், ராமாயணம், மகாபாரதம். இவற்றில் வரலாற்று உண்மை உள்ளதா? அல்லது தத்துவங்களை உருவகமாகக் காட்டியுள்ள வெறும் கதைகள்தானா? அல்லது சில நல்வழிக் கோட்பாடு களைக் காட்டுவதற்காக எழுந்த கதைகளா? அல்லது ஹோம ருடையது போன்ற வெறும் காவியங்களா?'

சு: 'ஏதோ ஒரு வரலாற்று உண்மையே புராணத்தின் கருவாக உள்ளது. உயர்ந்த கருத்துக்களைப் பல வடிவங்களில்

மக்களுக்குக் கற்பிப்பதே புராணங்களின் நோக்கம். வரலாற்று உண்மை அவற்றில் இல்லாமல் போனாலும் அவை உயர்ந்த தத்துவங்களைக் கற்பிப்பதால் அவற்றை அடிப்படை நூல் களாகக் கருதுகிறோம். உதாரணமாக ராமாயணத்தை எடுத் துக் கொள்வோம். ஒழுக்கத்தைக் கற்பிக்கும் நூல் என்ற முறை யில் அதை ஆராய்ந்தால் ராமர் என்று ஒருவர் வாழ்ந்திருக்க வேண்டிய அவசியமில்லை. ராமாயணமும் மகாபாரதமும் கண்ட நியதிப்படி, அவை ராமரையும் கிருஷ்ணரையும் சார்ந் திருக்க வேண்டியதே இல்லை. அவர்கள் வாழவே இல்லை என்றுகூடச் சாதிக்கலாம். ஆனால் அவை உயர்ந்த கருத்துக் களை மனித இனத்தின் முன் வைப்பதால், அவற்றைச் சிறந்த அடிப்படை நூல்களாகக் கருத வேண்டும். எங்கள் தத்துவம், தன் உண்மையை நிலைநாட்ட எந்தத் தனிமனிதனையும் சார்ந் திருக்கவில்லை. கிருஷ்ணர் புதிதாக எதையும் போதிக்கவில்லை, வேதங்களில் இல்லாதது ராமாயணத்தில் உள்ளது என்பதும் இல்லை. ஏசு இல்லாமல் கிறிஸ்தவ மதமோ, முகமது இல்லாமல் முஸ்லீம் மதமோ, புத்தர் இல்லாமல் புத்த மதமோ நிற்க முடி யாது என்பதை இங்கு நினைவில் கொள்ள வேண்டும். ஆனால் இந்து மதம் எந்தத் தனிமனிதனையும் சார்ந்திருக்கவில்லை.

'எந்தப் புராணமானாலும் சரி, அதிலுள்ள தத்துவத்தை அறிய, அதில் வரும் பாத்திரங்கள் உண்மையா கற்பனையா என்ற ஆராய்ச்சி தேவையில்லை. மனித இனத்திற்குப் போதிப்பதே புராணங்களின் நோக்கம். அவற்றைப் படைத்த ரிஷிகள் சில வரலாற்றுப் பாத்திரங்களைக் கண்டுபிடித்துத் தங்கள் விருப்பப்படி, நல்ல குணங்களையோ கெட்ட குணங் களையோ அவற்றின்மீது சுமத்தி உள்ளனர். இவ்வாறு மனித இனம் முறையாக வாழ ஒழுக்க விதிகளை அமைத்தனர். ராமாயணத்தில் வரும் பத்துத் தலை அசுரன் வாழ்ந்திருக்க வேண்டிய அவசியமில்லை. அவன் ஓர் உண்மைப் பாத்திரமா அல்லது கற்பனையா என்ற கேள்வியைத் தள்ளி வைத்துவிட்டு, அவன்மூலம் நமக்கு என்ன போதிக்கப்பட்டுள்ளது என்பதை அறிய வேண்டும். கிருஷ்ணரை இன்னும் வசீகரமானவராகச் சித்தரிக்க முடியும். உங்கள் லட்சியத்தின் உயர்விற்கு ஏற்ப அவரை அமைக்க இயலும். எப்படியானாலும் புராணத்தில் அடங்கியுள்ள மாபெரும் தத்துவங்களே நம் முன் எழும்.'

நி: 'திறமை வாய்ந்த ஒருவன் முற்பிறவிகளை நினைவிற்குக் கொண்டு வர முடியுமா? முற்பிறவிப் பதிவுகளால் நிரப்பப்பட்ட

மூளை இப்போது இல்லையே! இந்தப் பிறப்பில் வேறு மூளை அல்லவா உள்ளது?'

சு: 'திறமை வாய்ந்தவன்' என்கிறீர்களே, அதன் பொருள் என்ன?'

நி: 'மறைந்துள்ள தன் சக்திகளை விரியச் செய்பவன்.'

சு: 'மறைந்துள்ள சக்திகளை எப்படி விரிவடையச் செய்ய முடியும் என்பது எனக்குப் புரியவில்லை. நீங்கள் சொல்ல விரும்புவது எனக்குப் புரிகிறது. ஆனால் நீங்கள் பயன்படுத்தும் சொற்றொடர்கள் ஏற்றவையாக, சரியானவையாக அமைய வேண்டும் என்று விரும்புகிறேன். மறைந்துள்ள சக்திகளின் மறைப்பு அகற்றப்பட்டது என்று நீங்கள் சொல்லலாம். அப்படி மறைப்பை அகற்றியவர்களால் முற்பிறவிச் சம்பவங்களை நினைவிற்குக் கொண்டு வர முடியும். ஏனெனில் மூளை இறந்த பின்னும் இருக்கக்கூடிய நுண்ணிய உடலின் விதையை இப்போதுள்ள மூளை பெற்றிருக்கிறது.'

நி: 'அன்னியரைச் சேர்ப்பதற்கு இந்துமதம் அனுமதிக்கிறதா? ஒரு சண்டாளன் தத்துவ விளக்கம் செய்வதைப் பிராமணன் கேட்கலாமா?'

சு: 'மத மாற்றத்தை இந்துமதம் அனுமதிக்கிறது. சூத்திரன் ஆனாலும் சண்டாளன் ஆனாலும் அவன் பிராமணனுக்குத் தத்துவத்தை விளக்கலாம். ஜாதி, இனம் எல்லாம் எதுவாக இருந்தாலும், மிகத் தாழ்ந்த ஒருவனிடமிருந்தும் உண்மையை அறியலாம்.' ❑

## 10. வெளிநாடும் உள்நாட்டுப் பிரச்சினைகளும்

'இந்து'. (The Hindu) பிப்ரவரி 1897

செங்கல்பட்டு ரயில் நிலையத்தில் எங்கள் நிருபர் சுவாமி விவேகானந்தரை ரயிலில் சந்தித்தார். பேட்டி ரயிலில் நடந்தது. ஆதன் தொகுப்பு கீழே தரப்படுகிறது:

நிருபர்: 'சுவாமிஜி, உங்களை அமெரிக்காவிற்குச் செல்லத் தூண்டியது எது?'

சுவாமிஜி: 'சற்று கடினமான கேள்வி. சுருக்கமாக விடை சொல்ல முடியாது. இயன்றவரை சொல்கிறேன். இந்தியா முழுவதும் சுற்றினேன், வெளிநாடுகளுக்கும் செல்ல விரும்பினேன். கீழ்த் திசை நாடுகள் வழியாக அமெரிக்கா சென்றேன்.'

நி: 'ஜப்பானில் என்ன கண்டீர்கள்? அதன் முன்னேற்றத்திற்கான உத்திகளை இந்தியா பின்பற்ற வாய்ப்பு உண்டா?'

சு: 'இல்லை. முப்பது கோடி மக்களும் சேர்ந்து ஒரு நாடாக உருவாகும் வரையில் அது சாத்தியம் இல்லை. ஜப்பானியர்களைப் போல் நாட்டுப் பற்றும் கலைப்பண்பும் உள்ள மக்களை உலகம் கண்டதில்லை. அவர்களிடம் தனிப்பட்ட ஓர் அம்சத்தையும் குறிப்பிடலாம். ஐரோப்பாவிலும் பிற இடங்களிலும் கலையுடன் அழுக்கும் இணைந்தே செல்கிறது. ஜப்பானியரிடம் அழகுக் கலையும் முழுத் தூய்மையும் இணைந்திருப்பதைக் காணலாம். நமது இளைஞர்கள் ஒவ்வொருவரும் ஒருமுறையாவது ஜப்பானைச் சென்று பார்க்க வேண்டும் என்பது என் ஆவல். அங்கே போவது மிகவும் எளிது. இந்து நாட்டைச் சார்ந்த ஒவ்வொன்றும் சிறந்தது என்று ஜப்பானியர் கருதுகின்றனர், இந்தியா ஒரு புண்ணிய பூமி என்பதை நம்புகின்றனர். இலங்கையிலுள்ள புத்த மதத்திலிருந்து முற்றிலும் மாறுபட்டது ஜப்பானிய புத்த மதம். வேதாந்தத் தத்துவத்தைப் போலவே அது உள்ளது; உடன்பாட்டுக் கருத்துக்களுடன் கூடியதாக, ஆத்திக மதமாக உள்ளது. இலங்கையில் எதிர்மறைக் கருத்துக்களுடன் கூடியதாக, நாத்திக வாதமாகக் காணப்படுகிறது.'

நி: 'ஜப்பான் மிக விரைவில் உயர்ந்த நிலையை அடைந்த தன் ரகசியம் என்ன?'

சு: 'ஜப்பானியர்களின் தன்னம்பிக்கையும் நாட்டுப் பற்றும். தங்கள் நாட்டிற்காக எதையும் தியாகம் செய்யத் தயாராகவுள்ள, அடிவரை நேர்மையான மனிதர்கள் வருவார்களானால் ஒவ்வொன்றிலும் இந்தியா சிறந்தோங்கும். மனிதர்களே நாட்டை உருவாக்குகிறார்கள். நாட்டில் என்ன உள்ளது! ஜப்பானியரின் சமூக ஒழுக்கத்தையும், அரசியல் ஒழுக்கத்தையும் கைக்கொண்டால் நீங்களும் அவர்களைப்போல் மேன்மை பெறலாம். நாட்டிற்காக எதையும் தியாகம் செய்ய அவர்கள் தயாராக உள்ளனர். அதனால் அவர்கள் உயர்ந்த நிலையில் உள்ளனர். நீங்கள் அப்படி இல்லை, உங்களால் அப்படி இருக்கவும் முடியாது. நீங்கள் உங்கள் குடும்பங்களுக்காகவும் சொந்த உடைமைகளுக்காகவுமே எல்லாவற்றையும் தியாகம் செய்கிறீர்கள்.'

நி: ' இந்தியா ஜப்பானைப்போல் அமைய வேண்டும் என்பதா உங்கள் விருப்பம்?'

சு: 'நிச்சயமாக இல்லை. இந்தியா எப்படி இருக்கிறதோ, அப்படியேதான் தொடர்ந்து இருக்க வேண்டும். இந்தியா எப்படி ஜப்பானைப் போலவோ,வேறு எந்த நாட்டைப் போலவோ ஆக முடியும்? இசையைப்போல், ஒவ்வொரு நாட்டிற்கும் ஓர் ஆதாரச் சுருதி, ஒரு மையக் கருத்து உண்டு. அதைச் சுற்றியே மற்றவையெல்லாம் அமையும். ஒவ்வொரு நாட்டிற்கும் ஒவ்வொரு மையக் கருத்து உண்டு, மற்றதெல்லாம் இரண்டாம் பட்சமானவை. இந்தியாவின் மையக் கருத்து மதம். சமூகச் சீர்திருத்தம், அது இது எல்லாம் இரண்டாம் பட்சமானவை. எனவே இந்தியா ஜப்பானைப் போலாக முடியாது. 'உள்ளம் உருகுமானால், சிந்தனையருவி பாயும்' என்பர். இந்தியாவின் இதயமும் கரைந்து கசியுமானால், ஆன்மீக வெள்ளம் பெருக்கெடுத்தோடும். இந்தியா இந்தியாவே. நாம் ஜப்பானியர்களைப் போல் அல்ல, நாம் இந்துக்கள். இந்தியாவின் சூழ்நிலையே இதமானதாக உள்ளது. இங்கே நான் தொடர்ந்து வேலை செய்கிறேன். வேலையின் இடையிலும் எனக்கு ஓய்வு கிடைக்கிறது. ஆன்மீகப் பணியின்மூலமே இந்தியாவில் அமைதி பெற முடியும். உங்கள் தொழில் உலகியலுக்காக இருந்தால், நீரிழிவு வியாதியால்தான் சாக வேண்டியிருக்கும்.'

நி: 'ஜப்பானைப்பற்றி இவ்வளவு போதும், அமெரிக்காவைப் பற்றிய உங்கள் ஆரம்ப அனுபவம் என்ன சுவாமிஜி?'

சு: 'ஆரம்பத்திலிருந்து கடைசிவரையில் நல்ல அனுபவம் தான். பாதிரிகளையும், ''சர்ச்-பெண்களையும்'' தவிர அமெரிக்க

மக்கள் மிகவும் விருந்தோம்பும் பண்பு உடையவர்கள். அன்புள்ளம் உடையவர்கள். கொடுக்கும் தன்மையும் நல்ல இயல்பும் கொண்டவர்கள்.'

நி: 'சுவாமிஜி, ''சர்ச்-பெண்கள்'' என்கிறீர்களே, அவர்கள் யார்?'

சு: 'எப்படியாவது ஒருவனைக் கணவனாக அடையத் தன்னாலான முயற்சிகளையெல்லாம் பெண்கள் செய்கிறார்கள். கடற்கரையிலுள்ள நாகரீக ஹோட்டல்களுக்கெல்லாம் போகிறாள், ஒருவனையாவது தன் வலையில் சிக்கவைக்க எல்லா விதத் தந்திரங்களையும் செய்கிறாள். ஒன்றும் பலனளிக்கவில்லை என்றால், அமெரிக்காவில் கூறுவதுபோல், ''கிழடு தட்டிய'' காலத்தில் சர்ச்சில் சேர்ந்துவிடுகிறாள். இவர்களுள் சிலர் தீவிர மதவெறியர்கள். இவர்களே ''சர்ச்-பெண்கள்''. இவர்களைப்போல் பயங்கர மதவெறி பிடித்தவர்களைக் காண முடியாது. இவர்கள் பாதிரிகளின் பிடியில் உள்ளனர். இருவரும் சேர்ந்து உலகை ஒரு நரகம் ஆக்குகின்றனர், மதத்தை ஒரு குழப்பக் குட்டை ஆக்குகின்றனர். இவர்களைத் தவிர மற்ற அமெரிக்கர்கள் நல்லவர்கள். அவர்கள் என்னை நேசித்தார்கள், நானும் அவர்களுள் ஒருவன்போலவே என்னை உணர்கிறேன்.'

நி: 'சர்வமத மகாசபையின் விளைவுகளைப்பற்றி உங்கள் கருத்து என்ன?'

சு: 'அஞ்ஞானிகளை ''மட்டம் தட்டவே'' அந்தச் சபை கூட்டப் பட்டதாக எனக்குத் தோன்றுகிறது. ஆனால் ''அஞ்ஞானி''களின் கைதான் அங்கே ஓங்கி நின்றது, கிறிஸ்தவர்கள் தான் மட்டம் தட்டப்பட்டனர். கிறிஸ்தவர்களைப் பொறுத்த வரை இது அவர்களுக்குத் தோல்வி என்றே கூற வேண்டும். ஏனெனில் பாரிசில் இதைப் போன்ற ஒரு சபை கூட்ட வேண்டும் என்று பேச்சு எழுந்தபோது இந்தச் சபையைக் கூட்டிய ரோமன் கத்தோலிக்கர்களே அதை எதிர்த்திருக்கிறார்கள். ஆனால் சர்வமத மகாசபை இந்தியாவிற்கும் இந்தியச் சிந்தனைக்கும் ஒரு மாபெரும் வெற்றியாகும். பொங்கியெழுந்து உலகையே சூழ்கின்ற வேதாந்தப் பெருவெள்ளத்திற்கு அது ஒரு வடிகாலாக இருந்தது. மதவெறி பிடித்த பாதிரிகளையும் சர்ச்-பெண்களையும் தவிர, மற்ற எல்லா அமெரிக்கர்களும் இந்தச் சபையின் விளைவுகளில் மிகவும் மகிழ்ச்சி கொள்கின்றனர்.'

நி: 'உங்கள் பணி பரவுவதற்கான வாய்ப்பு இங்கிலாந்தில் எந்த அளவில் உள்ளது?'

சு: 'ஏராளமான வாய்ப்பு உள்ளது. இன்னும் சில ஆண்டு களுள் ஆங்கிலேயருள் பெரும்பாலோர் வேதாந்திகளாகி விடு வார்கள். இந்த விஷயத்தில், அமெரிக்காவைவிட இங்கிலாந் தில்தான் வாய்ப்பு அதிகம் உள்ளது. அமெரிக்கர்கள் எதையும் ஆடம்பரமாக்கி விடுகின்றனர், இது ஆங்கிலேயரிடம் இல்லை. வேதாந்தத்தை உணராமல் கிறிஸ்தவர்கள்கூடப் புதிய ஏற் பாட்டைப் புரிந்துகொள்ள முடியாது. எல்லா மதங்களுக்கும் அறிவுபூர்வமான விளக்கம் தருவது வேதாந்தமே. வேதாந்தம் இல்லையானால் எல்லா மதங்களும் மூடநம்பிக்கைகளே, வேதாந்தம் இருந்தால் எதுவும் மதமாகிவிடும்.'

நி: 'ஆங்கிலேயரின் குணத்தில் தனிச் சிறப்பு வாய்ந்ததாக உங்களுக்குப் பட்டது எது?'

சு: 'ஆங்கிலேயன் ஏதேனும் ஒன்றை நம்பினால் உடனடி யாக அதைச் செயல்படுத்த முயற்சிக்கிறான். செயல்முறையில் அவனுக்கு அளவற்ற ஊக்கம் உள்ளது. இதில் ஆங்கிலேயருக்கு இணையில்லை. இதனால்தான் அவர்களிடம் எனக்கு நம்பிக்கை ஏற்படுகிறது. அவனது அறிவு சற்று மந்தமானதுதான், மிகவும் உந்தித் தள்ளித்தான் ஒரு கருத்தை அவன் மூளையில் நுழைக்க வேண்டும். புகுந்துவிட்டால் அது அகலாது. இங்கிலாந்தில் பாதிரிகளோ, வேறு யாருமோ எனக்கு எதிராக எதுவும் பேச வில்லை, என்னைப்பற்றி அவதூறு எதையும் பரப்பவில்லை. வியப்பு என்னவென்றால் எனக்கு நெருங்கிய நண்பர்களுள் பல ரும் சர்ச்சைச் சார்ந்தவர்களே. இங்கிலாந்தின் பாதிரிகள் மிக உயர்ந்த ஜாதிகளிலிருந்து வந்தவர்கள் அல்ல. இங்கு போலவே அங்கும் ஜாதிப் பிரிவினை தலைவிரித்தாடுகிறது. சர்ச்சைச் சார்ந்த பாதிரிகள் சற்று உயர்ந்த ஜாதியினர். அவர்கள் உங்கள் கருத்திலிருந்து வேறுபடலாம். ஆனால் அதற்காக அவர்கள் உங்கள் நண்பர்களாக இருக்க எந்தத் தடையும் இருக்காது. எனவே என் நாட்டு மக்களுக்கு ஒன்று சொல்ல விரும்புகிறேன்: ஏசித் திரிகின்ற பாதிரிகளைப் பொருட்படுத்த வேண்டாம், அவர்களை நான் அறிந்துவிட்டேன். அதனால், அமெரிக்கர்கள் சொல்வதுபோல் நாம் அவர்களை ''அளந்து''விட்டோம். நாம் செய்ய வேண்டுவதெல்லாம் அவர்களைப் புறக்கணிப்பதே.'

நி: 'அமெரிக்கா மற்றும் இங்கிலாந்தின் சமூகச் சீர்திருத்த இயக்கங்களைப்பற்றிச் சற்றுக் கூறுங்கள்.'

சு: 'சொல்கிறேன். சமுதாயப் புரட்சிவாதிகள் எல்லோரும், அவர்களுடைய தலைவர்களேனும், தங்கள் கம்யூனிசக்

கருத்துக்களுக்கும், சம உடைமைக் கருத்துக்களுக்கும் ஆன்மீக அடிப்படை காண முயல்கிறார்கள். அந்த அடிப்படை, வேதாந் தத்தில்தான் உள்ளது. என் சொற்பொழிவுகளைக் கேட்ட பல தலைவர்கள், தங்கள் சமுதாயத்தின் புதிய அமைப்பிற்கு வேதாந்தம்தான் அடிப்படையாக இருக்க வேண்டுமென்று சொல்கிறார்கள்.'

நி: 'இந்தியப் பொதுமக்களைப்பற்றி உங்கள் கருத்து என்ன?'

சு: 'அந்தோ! நாம் மிகக் கொடிய வறுமையில் உள்ளோம்! உலக வாழ்வு பற்றிய எதையுமே நமது மக்கள் உணரவில்லை. அவர்கள் மிக நல்லவர்கள், ஏனெனில் இங்கே வறுமை ஒரு குற்றமாகக் கருதப்படுவதில்லை. அவர்கள் வன்முறையில் ஈடு படுவதில்லை. எனது உடை காரணமாகப் பலமுறை அமெரிக்கா விலும் இங்கிலாந்திலும் மக்கள் கூச்சலிட்டு என்னைச் சூழ்ந்த துண்டு. சற்று வேறுபட்ட உடையை உடுத்ததற்காக, இந்தியா வில், மக்கள் ஒருவனைச் சூழ்ந்ததாக நான் கேள்விப்பட்ட தில்லை. மற்ற எல்லாவிதத்திலும் நம் மக்கள் ஐரோப்பியப் பொதுமக்களைவிட நாகரீகம் வாய்ந்தவர்களே.'

நி: 'பொதுமக்களின் முன்னேற்றத்திற்கு உங்கள் திட்டம் என்ன?'

சு: 'அவர்களுக்குக் கல்வி அளிக்க வேண்டும், முன் னோர்கள் வகுத்தளித்துள்ள திட்டத்தைப் பின்பற்ற வேண்டும். அதாவது, எல்லா லட்சியங்களையும் பொதுமக்களிடையே மெல்லமெல்லப் பரப்பி, மெதுவாக அவர்களை உயர்த்த வேண்டும். அவர்களைச் சமநிலைக்குக் கொண்டு வாருங்கள். சாதாரண அறிவையும் மதத்தின் வாயிலாகக் கொடுங்கள்.'

நி: 'சுவாமிஜி, இந்தப் பணி எளிது என்று நினைக் கிறீர்களா?'

சு: 'படிப்படியாகத்தான் செய்ய வேண்டும். தன்னலம் கருதாமல் தியாகம் செய்யத் துணிகின்ற போதிய இளைஞர் களும் இருந்து, அவர்கள் என்னோடு சேர்ந்து வேலை செய்வார் களானால் நாளையே நாம் இதனைச் சாதிக்கலாம். எல்லாம் ஊக்கத்தையும் தன்னலத் தியாகத்தையும் பொறுத்தே இருக்கிறது.'

நி: 'இப்போதைய இழிநிலை முன்வினையால் வந்த தானால், அதிலிருந்து அவர்கள் எளிதில் மீள முடியுமா? இதில் நீங்கள் எப்படி உதவப் போகிறீர்கள்?'

தயக்கமின்றி வந்தது சுவாமிஜியின் பதில்:

'வினை என்பது மனித சுதந்திரத்தைத் தொடர்ந்து நிலை நாட்டுவதே. நம் கர்மத்தால் நம்மைத் தாழ்த்திக்கொள்ள முடியுமானால், அதன்மூலம் கட்டாயமாக உயர்த்திக் கொள்ளவும் முடியும். மேலும், பொதுமக்கள் தங்கள் கர்மத்தால் தங்களை முற்றிலும் தாழ்த்திக் கொண்டுவிடவில்லை. அவர்கள் வேலை செய்ய ஏற்றச் சூழ்நிலையை அமைத்துத் தர வேண்டும். ஜாதிகளைச் சமப்படுத்துவது போன்ற திட்டம் எதையும் நான் சொல்லவில்லை. ஜாதி அமைப்பு மிகவும் நல்லது, அதையே நாம் பின்பற்ற வேண்டும்.

'ஜாதி என்பது என்ன என்பதைக் கோடியில் ஒருவர்கூடப் புரிந்துகொள்ளவில்லை. ஜாதி இல்லாத நாடே இந்த உலகில் இல்லை. இந்தியாவைப் பொறுத்தவரை, ஜாதியிலிருந்துதான் ஜாதியில்லாத ஒரு நிலையை அடைகிறோம். அந்தத் தத்துவ அடிப்படைமீதுதான் ஜாதியே அமைந்துள்ளது. மனித இனத்தின் லட்சியம் பிராமணன். எனவே எல்லோரையும் பிராமணன் ஆக்குவதே, இந்தியாவைப் பொறுத்தவரை செயல்திட்டம். இந்திய வரலாற்றைப் படித்தால், கீழ் ஜாதியினரை உயர்த்துவதற்கான முயற்சிகள் எப்போதும் நடைபெற்று வந்துள்ளதைக் காண்பீர்கள். அப்படிப் பல பிரிவினர் உயர்த்தப் பட்டிருக்கிறார்கள். எல்லோரும் பிராமணர் ஆகின்ற வரையில் இது நடந்து கொண்டிருக்கும். இதுதான் என் திட்டம். யாரையும் கீழே கொண்டுவராமல் இதைச் செய்ய வேண்டும். இந்தப் பணியைப் பெரும்பாலும் செய்ய வேண்டியது பிராமணர்களே. தனிச்சலுகை பெற்றுத் திளைத்த எதுவும் தனக்கே குழித் தோண்டிக் கொள்ள வேண்டியது கடமை. இது எவ்வளவு விரைவில் நடக்குமோ, அந்த அளவிற்கு எல்லோருக்கும் நன்மை. காலம் தாழ்த்தக் கூடாது.

ஐரோப்பா மற்றும் அமெரிக்காவைவிட நமது ஜாதிமுறை சிறந்தது, அது முற்றிலும் நல்லது என்று நான் சொல்லவில்லை. ஜாதி இல்லாதிருந்தால் உங்கள் நிலை எப்படி இருந்திருக்கும்? ஜாதிப்பிரிவு இல்லை என்றால் உங்கள் படிப்பும் மற்றவையும் எப்படி இருந்திருக்க முடியும்? ஜாதி இல்லாதிருந்தால், ஐரோப்பியர்கள் நம்மிடமிருந்து படிக்க எதுவுமே இருந்திருக்காது, முகமதியர்கள் எல்லாவற்றையும் அழித்திருப்பார்கள்.

'இந்திய சமுதாயம் இயங்காமல் நிற்கிறதா? அது எப்போதும் செயல்பட்டுக் கொண்டேதான் இருக்கிறது. அன்னியர்

படையெடுப்பு போன்ற காலங்களில் அது மெதுவாக இயங்கு கிறது, பிற காலங்களில் விரைவாக இயங்கும். இதைத்தான் என் நாட்டு மக்களுக்குச் சொல்கிறேன். அவர்களை நான் குறை கூறவில்லை. நான் அவர்களது பண்டைக் காலத்தை ஆழ்ந்து நோக்குகிறேன். அந்தச் சூழ்நிலையில் எந்த நாடும் இதைவிட மேலான செயலைச் செய்திருக்க முடியாது. அவர்கள் நன் றாகவே செயலாற்றியுள்ளனர், அவர்களிடம் நான் கூறுகிறேன். இன்னும் சிறப்பாகச் செயலாற்றும்படி மட்டுமே கேட்டுக் கொள்கிறேன்.'

நி: 'சுவாமிஜி, ஜாதிக்கும் அதன் சடங்குகளுக்குமான தொடர்பைப்பற்றி உங்கள் கருத்து என்ன?'

சு: 'ஜாதி தொடர்ந்து மாறிக்கொண்டே இருக்கும், சடங்கு களும் சம்பிரதாயங்களும் அப்படியே. அவற்றின் அடிப்படை, அவற்றின் தத்துவம் மாறாது. வேதங்களில்தான் நாம் நமது மதத்தைப் படிக்க வேண்டும். வேதங்களைத் தவிர எல்லா நூல்களும் மாறியே தீர வேண்டும். எக்காலத்திற்கும் அதிகாரம் பெற்றது வேதமே. மற்ற நூல்கள் ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு மட்டுமே உரியது. உதாரணமாக, ஒரு ஸ்மிருதி ஒரு காலத்தில் ஆதிக்கம் செலுத்தலாம், மற்றொரு காலத்தில் வேறொன்று ஆட்சி செலுத்தும். மகான்கள் தோன்றியே எப்போதும் நாம் பணிபுரிய வேண்டிய பாதையைக் காட்டுகின்றனர். சிலர் கீழ் ஜாதியினருக்காக வேலை செய்தனர். மத்வரைப் போன்ற சிலர் பெண்களுக்கு வேதம் படிக்கும் உரிமையை அளித்தனர். ஜாதி போகக் கூடாது. அதைக் காலத்திற்கு ஏற்றவாறு அமைத்துக் கொள்ள வேண்டும், அவ்வளவுதான். பல்லாயிரக்கணக்கான புதிய அமைப்புகளுக்குரிய உயிர்த்துடிப்பு பழைய அமைப்பி லேயே உள்ளது. ஜாதியை அழிக்க விரும்புவது வடிகட்டின முட்டாள்தனம். பழையதைப் பரிணமிக்கச் செய்வதே புதிய முறை.'

நி: 'இந்துக்களுக்குச் சமுதாய சீர்திருத்தம் தேவை யில்லையா?'

சு: 'தேவையானதுதான். அவ்வப்போது மகான்கள் முன் னேற்றத்திற்கான கருத்துக்களை அளிப்பார்கள், மன்னர்கள் அவற்றைச் சட்டம் ஆக்குவார்கள். இவ்வாறுதான் இந்தியாவில் அன்று சமூகச் சீர்திருத்தங்கள் செய்யப்பட்டன. இன்றும் சீர் திருத்தம் வேண்டுமானால், முதலில் சட்டத்தின் பக்கபலம் வேண்டும். மன்னர்கள் மறைந்துவிட்டனர், இன்று அதிகாரம்

மக்களிடம் உள்ளது. ஆதலால் மக்கள் கல்வி பெறும்வரை தங்கள் தேவைகளை உணரும்வரை, தங்கள் பிரச்சினைகளைத் தீர்க்கும் திறமையைப் பெறும்வரை நாம் காத்திருந்துதான் ஆக வேண்டும். சிறுபான்மையினரின் கொடுங்கோன்மைபோல் வேறு கொடுமை இல்லை. லட்சியச் சீர்திருத்தங்களில் நமது ஆற்றல்களைச் சிதறடிக்க வேண்டாம், அவை ஒருபோதும் செயலளவில் நடைபெறப் போவதில்லை. எனவே அதை விட்டு விட்டு, தீமையின் வேருக்கே செல்வோம், ஒரு சட்டசபை அமைப்பை உருவாக்குவோம், அதாவது மக்களுக்குக் கல்வி கற்பித்து அவர்களின் பிரச்சினைகளை அவர்களே தீர்க்கும் படிச் செய்வோம். இது நிறைவேறாதவரை லட்சியச் சீர்திருத் தங்கள் எல்லாம் கொள்கையளவிலேயே நிற்கும். மக்கள் மக்களால் உயர்வதுதான் புதிய முறை. இது செயலளவில் வர நீண்ட காலமாகும், முன்பு மன்னர்களால் ஆளப்பட்டு வந்த தால், முக்கியமாக இந்தியாவில் அதிக காலமாகும்.'

நி: 'ஐரோப்பியச் சமுதாயச் சட்டங்களை இந்து சமுதாயம் ஏற்று வெற்றி பெற முடியும் என்று நினைக் கிறீர்களா?'

சு: 'இல்லை, அவற்றை நாம் முழுவதுமாக ஏற்க முடியாது. கிரேக்கரின் மனப் பண்பாடு, அதைக் குறிக்கின்ற ஐரோப்பியரின் ஊக்கம், அதனுடன் இந்துக்களின் ஆன்மீகமும் இணைந்த ஒன்றே இந்தியாவிற்கு லட்சியச் சமுதாயமாக இருக்கும். ஆற்றல் களைச் சிதறவிடுதல், சோம்பல், வீண் பிதற்றல்கள் இவற்றை விட்டு, தலைவர்களிடம் பணிவு காட்டுவது, பொறாமை யின்மை, தீவிர விடாமுயற்சி, வற்றாத தன்னம்பிக்கை இத்தகைய குணங்களை ஆங்கிலேயரிடமிருந்து கற்பது மிகவும் இன்றியமை யாதது. ஓர் ஆங்கிலேயன் ஒரு தலைவனைத் தேர்ந்தெடுத்து விட்டால், எத்தனைத் துன்பங்கள் நேரிட்டாலும் அவனையே பின்பற்றுவான், அவனுக்குக் கீழ்ப்படிவான். இங்கே இந்தியா வில் ஒவ்வொருவனும் தலைவனாக இருக்க விரும்புகிறான், கீழ்ப்படிய யாருமில்லை. அதிகாரம் செலுத்து முன், கீழ்ப்படி வதைக் கற்றுக்கொள்ள வேண்டும். நமது பொறாமைகளுக்கோ அளவில்லை. இந்துவிடமோ, அவனது முக்கியத்திற்கு ஏற்ற வாறு அவனிடம் பொறாமையும் ஓங்கி நிற்கிறது. பொறாமை அகலாதவரையில், தலைவர்களுக்குக் கீழ்ப்படியக் கற்றுக் கொள்ளாதவரையில், ஸ்தாபனரீதியான ஆற்றலுக்கு இட மில்லை; ஒன்றும் செய்வதற்கு இயலாத குழப்ப நிலையில்

இருப்பதுபோல் சந்தைக்கூட்டமாக இருக்கலாம்; கொள்கைகளை வகுப்பதும், எதுவும் செயலில் சாதிக்காதவர்களாகவும் இருக்கலாம். புற இயற்கையை வெல்வதை இந்தியா ஐரோப்பாவிடமிருந்தும், அக இயற்கையை வெல்வதை ஐரோப்பா இந்தியாவிடமிருந்தும் கற்றுக்கொள்ள வேண்டும். அப்போது இந்துக்கள், ஐரோப்பியர்கள் என்ற பிரிவு போய், அகத்தையும் புறத்தையும் வென்ற லட்சிய மனித இனம் தோன்றும். நாம் மனிதனின் ஒரு பக்கத்தை வளர்த்தோம், அவர்கள் மற்றொரு பக்கத்தை வளர்த்தார்கள். இந்த இரண்டின் சேர்க்கைதான் தேவை. நமது மதத்தின் ஜீவநாதம் சுதந்திரம் என்று சொல்லும்போது, உடல் சுதந்திரம், மனச் சுதந்திரம், ஆன்மீகச் சுதந்திரம் ஆகிய அனைத்துமே அதில் அடக்கம்.'

நி: 'சுவாமிஜி, மதத்தில் சடங்குகளின் இடம் என்ன?'

சு: 'மதத்தின் பாலர் வகுப்பே சடங்குகள். உலகின் இப்போதைய நிலைக்கு அவை முற்றிலும் இன்றியமையாதவை. ஆனால் புதிய புதிய சடங்குகளை மக்களுக்குக் கொடுக்க வேண்டும். இதற்காக அறிஞர் குழு ஒன்று செயல்பட வேண்டும். பழைய சடங்குகளை அகற்றிப் புதிய சடங்குகளை அறிமுகப் படுத்த வேண்டும்.'

நி: 'சடங்குகளை அகற்ற வேண்டும் என்கிறீர்களா?'

சு: 'இல்லை. எனது கொள்கை ஆக்குவது, அழிப்பது அல்ல. இருக்கின்ற சடங்குகளிலிருந்து புதியவற்றை உருவாக்க வேண்டும். வளர்வதற்குரிய எல்லையற்ற சக்தி ஒவ்வொன்றிலும் இருக்கிறது என்பது என் நம்பிக்கை. ஓர் அணுவில்கூடப் பிரபஞ்சம் முழுவதன் சக்தியும் உள்ளது. இந்து இன வரலாற்றை ஆரம்பத்திலிருந்து பாருங்கள், அவர்கள் அழிவுச் செயலில் ஈடுபட்டதாக எங்கும் காண முடியாது, அவர்களுடையது ஆக்கபூர்வமானது. ஒரு பிரிவினர் அழிக்க முயன்றனர், அவர்கள் நாட்டை விட்டுத் துரத்தப்பட்டனர். அவர்களே பௌத்தர்கள். சங்கரர், ராமானுஜர், மத்வர், சைதன்யர் என்று எத்தனையோ சீர்திருத்தவாதிகளை நாம் பெற்றுள்ளோம். இவர்கள் தலைசிறந்த சீர்திருத்தவாதிகள்; இவர்கள் தத்தம் காலங்களுக்கு ஏற்ப ஒவ்வொன்றையும் ஆக்கபூர்வமாக அமைத்தார்கள். இதுவே செயல்புரிவதில் நமது தனிப்பட்ட முறை. நவீனச் சீர்திருத்தவாதிகள் ஐரோப்பியர்களின் அழிவுமுறையைப் பின்பற்றுகிறார்கள். இந்தச் சீர்திருத்தங்கள் ஒருவருக்கும் நல்லது செய்யாது, செய்ததுமில்லை. தற்காலத்தில் ஆக்கபூர்வமான

சீர்திருத்தவாதி ஒரே ஒருவர் இருந்தார். அவர்தான் ராஜாராம் மோகன்ராய். வேதாந்த லட்சியங்களை அடைவதற்கான திசையிலேயே இந்து இனத்தின் வளர்ச்சி இருந்திருக்கிறது. நல்ல காலத்திலும் சரி, கெட்ட காலத்திலும் சரி, இந்திய வாழ்க்கையின் வரலாறு முழுவதுமே வேதாந்த லட்சியத்தை அடைவதற்கான போராட்டமாகவே உள்ளது. எங்கேயாவது வேதாந்த லட்சியத்தைப் புறக்கணித்து ஒரு சீர்திருத்தப் பிரிவோ மதமோ எழுந்தால் அது இடிந்து நொறுங்கிப் பொடிப்பொடியாவதைக் காண்கிறோம்.'

நி: 'இங்கே உங்கள் செயல்திட்டம் என்ன?'

சு: 'என் திட்டத்தைச் செயலாக்கச் சென்னையிலும் கல்கத்தாவிலும் இரண்டு இயக்கங்களை ஆரம்பிக்க விரும்புகிறேன். சுருங்கக் கூறினால், மகான்-பாவி, பண்டிதன்-பாமரன், பிராமணன்-தாழ்ந்த குலத்தினன் என்று ஒவ்வொருவரின் அன்றாட நடைமுறை வாழ்க்கையில் வேதாந்த லட்சியங்களைப் புகுத்துவதே என் திட்டம்.'

இந்த வேளையில் எங்கள் நிருபர் இந்திய அரசியல் பிரச்சினைகளை சுவாமிஜியிடம் எழுப்பினார். சுவாமிஜி பதில் சொல்லுமுன்பே ரயில் எக்மோர் ரயில் நிலையத்திற்கு வந்து விட்டது. அவசரம் அவசரமாக சுவாமிஜியிடமிருந்து வந்த பதில் இதுதான்: 'அரசியல் பிரச்சினைகளிலிருந்து நான் முற்றிலும் விலகியிருக்க விரும்புகிறேன்.' ❑

## 11. கேள்வி–பதில்

பேலூர் மடத்து நாட்குறிப்பிலிருந்து திரட்டியது

1

கேள்வி: 'யாரை குரு என்பது?'

பதில்: 'உனது கடந்தகாலத்தையும் எதிர்காலத்தையும் சொல்லவல்லவரே உனது குரு.'

கே: 'பக்தி எப்படி உண்டாகும்?'

ப: 'பக்தி உன்னிடம் இயல்பாகவே இருக்கிறது. காமமும் செல்வச் செருக்கும் அதை மறைத்திருக்கின்றன. அவற்றை நீக்கினால் பக்தி வெளிப்படும்'

கே: 'நாம் நம்மை நம்பியிருக்க வேண்டுமென்று சொல்வதன் உண்மைக் கருத்து என்ன?'

ப: 'நம்மையென்று சொல்லும்போது இங்கு நிலையான பரமாத்மா குறிக்கப்படுகிறது. நிலையற்றதான ஜீவான்மாவைச் சார்ந்திருப்பதும் படிப்படியாக நம்மைச் சரியான லட்சியத்திற்கு அழைத்துச் செல்கிறது. ஏனெனில் உண்மையில் ஜீவாத்மா என்பது மாயை வசப்பட்ட பரமாத்மாவே.'

கே: 'ஒருமையே உண்மையென்றால், கணந்தோறும் எல்லோராலும் அறியப்படுகின்ற இருமை எவ்வாறு வந்தது?'

ப: 'அறிவது ஒருபோதும் இருமையாகாது. அறிவதை விளக்க முயலும்போது இருமை உண்டாகிறது, அவ்வளவுதான். அறிவது இருமையானால் அறிபவன் இல்லாமலே அறியப்படும் பொருள் இருந்திருக்கும், அறியப்படும் பொருள் இல்லாமல் அறிபவன் இருந்திருப்பான்.'

கே: 'குணநலனைச் சீராக வளரச் செய்வது எப்படி?'

ப: 'குணநலனை வளர்த்திருக்கின்ற ஒருவரின் தொடர்பின்மூலம்.'

கே: 'வேதங்களை நாம் எப்படி அணுக வேண்டும்?'

ப: 'வேதங்களில் பகுத்தறிவுக்கு ஏற்ற பகுதிகளை மட்டுமே அத்தாட்சியாக ஏற்றுக்கொள்ள வேண்டும். புராணங்கள் போன்றவை வேதங்களுக்கு முரணாக இல்லாதவரை, அவற்றை

ஒப்புக்கொள்ளலாம். வேதங்களுக்குப் பின்னால் வந்த மதச் சிந்தனைகள், அவை உலகின் எந்தப் பகுதியிலிருந்து வந்தாலும், வேதங்களிலிருந்து வந்தவை என்றே கருத வேண்டும்.'

கே: 'காலத்தை நான்கு யுகங்களாகப் பிரித்திருப்பது வானஇயலை அனுசரித்தா அல்லது விருப்பம்போல் யாராவது செய்த பாகுபாடா?'

ப: 'வேதங்களில் யுகங்களைப்பற்றிச் சொல்லப்பட வில்லை. இவை புராணகாலத்தைச் சேர்ந்த சாதாரணப் பாகுபாடு.'

கே: 'எண்ணத்திற்கும் சொற்களுக்கும் உள்ள உறவு அவசிய மானதா, மாற்றக் கூடாததா, எதேச்சையாக ஏற்பட்டதா, மாற்றக் கூடியதா?'

ப: 'இந்த விஷயம் தீவிர விவாதத்திற்கு உரியது. ஏதோ ஒருவகை அவசியமான ஆனால் நிரந்தரமல்லாத உறவு இருக் கிறது. வேறுபட்ட பல மொழிகள் இருப்பதிலிருந்து இதை அறிந்து கொள்ளலாம். ஏதோ ஒரு நுட்பமான உறவு இருக்க லாம், அதை நாம் இதுவரை அறிந்துகொள்ளவில்லை.'

கே: 'இந்தியாவில் வேலை செய்வதற்கு எத்தகைய முறையைப் பின்பற்ற வேண்டும்?'

ப: 'முதலில் மக்களைச் செயல்முறைக்குப் பயிற்சி அளிக்க வேண்டும், பலசாலிகளாக்க வேண்டும். இத்தகைய சிங்கங்கள் ஒரு டஜன் இருந்தால் போதும், உலகையே வென்றுவிடலாம்; ஆடுகள் பல கோடி இருந்தாலும் பலனில்லை. இரண்டாவதாக, எப்படிப்பட்ட மாமனிதராக இருந்தாலும், அந்தத் தனிமனிதரை லட்சியமாகக் கொள்வதை ஊக்குவிக்கக் கூடாது.'

இந்து மதச் சின்னங்களில் ஏற்பட்ட சில தவறுகளை சுவாமிஜி எடுத்துச் சொன்னார். ஞானம் மற்றும் பக்தி நெறி களுக்குள்ள வித்தியாசங்களைக் காட்டினார்: 'ஞான நெறி, ஆரியர்களுடையது. அதன் காரணமாக அதற்குத் தகுந்தவர் களைத் தேர்ந்தெடுப்பதில் தீவிரக் கட்டுப்பாடுகள் இருந்தன. பக்தி நெறி தெற்கேயிருந்து, அதாவது ஆரியர் அல்லாதவர் களிடமிருந்து வந்ததால் அதில் அதிகக் கட்டுப்பாடுகள்இல்லை.'

கே: 'புதிய பாரதத்தை உருவாக்குவதில் ராமகிருஷ்ண மிஷனின் பங்கு என்ன?'

ப: 'இந்த மடத்திலிருந்து நற்பண்புகள் மிக்கோர் பலர் புறப்பட்டு, உலகம் முழுவதையும் ஆன்மீகப் பெருவெள்ளத்தால் நிரப்புவார்கள். இந்த ஆன்மீகப் பேரெழுச்சியைத் தொடர்ந்து

பல துறைகளிலும் முன்னேற்றம் ஏற்படும். இவ்வாறு பிராமண, க்ஷத்திரிய, வைசியர்கள் உருவாகுவார்கள். சூத்திர ஜாதியே இருக்காது. அவர்களுடைய வேலையை எந்திரங்கள் செய்யும். இந்தியாவின் இன்றைய தேவை க்ஷத்திரிய பலமே.'

கே: 'மனிதப் பிறவியிலிருந்து கீழான பிறவிக்குப் போகும் வாய்ப்பு உண்டா?'

ப: 'உண்டு. பிறவி, கர்மத்தைச் சார்ந்தது. ஒருவனது செயல்கள் மிருகத்தனமாக இருந்தால் அவன் மிருகப் பிறவியை நோக்கி இழுக்கப்படுவான்.'

1898-ஆம் ஆண்டு ஒருநாள் கேள்வி நேரத்தில், உருவ வழிபாடு பௌத்த மதத்திலிருந்து தோன்றியது என்று சுவாமிஜி விளக்கினார். முதன்முதலில் சைத்தியம், பிறகு ஸ்தூபம், அதன் பிறகு புத்தர் கோயில் வந்தது. அதனுடன் இந்துத் தெய்வங்களுக்கும் கோயில்கள் உண்டாயின.'

கே: 'குண்டலினி நமது தூல உடலில் உண்மையில் இருக்கிறதா?'

ப: 'யோகிகள் கூறும் அந்தத் தாமரைகள் தூல உடலில் இல்லையென்றும், அவை யோக ஆற்றல்களால் ஒருவனில் உருவாகுபவை என்றும் ஸ்ரீராமகிருஷ்ணர் கூறுவதுண்டு.'

கே: 'உருவ வழிபாட்டின்மூலம் ஒருவன் முக்திபெற முடியுமா?'

ப: 'உருவ வழிபாடு நேரடியாக முக்தி தராது. அது ஒரு மறைமுகக் காரணம், முக்திப் பாதையில் உதவக்கூடிய ஒன்று. உருவ வழிபாட்டைக் கண்டிக்கக் கூடாது. பலருடைய விஷயத்தில், அத்வைத நிலையை அடைய இது அவர்களுடைய உள்ளத்தைப் பண்படுத்துகிறது. அத்வைத நிலை மட்டுமே பூரண நிலையை அளிக்க முடியும்.'

கே: 'குணநலனின் மிக உயர்ந்த லட்சியம் எதுவாக இருக்க வேண்டும்?'

ப: 'துறவு.'

கே: 'புத்த மதம் எப்படி இந்தியாவில் தவறான பலவற்றை விட்டுப் போயிற்று?'

ப: 'பௌத்தர்கள் இந்தியாவில் உள்ள ஆண், பெண் ஒவ்வொருவரையும் துறவியாக்க முயன்றனர். ஆனால் இது எல்லோராலும் முடியக்கூடிய விஷயம் அல்லவே! இதனால் பிட்சுக்களும் பிட்சுணிகளும் நெறி பிறழத் தொடங்கினர். திபெத்தியருடைய மற்றும் காட்டுமிராண்டித்தனமான பல

பழக்கங்களைப் பின்பற்றியதும் புத்த மதத்தின் சீர்குலைவிற்கு ஒரு காரணமாயிற்று. மதப் பிரச்சாரத்திற்காக அவர்கள் அங்கே சென்றனர், அங்கிருந்து அந்தப் பழக்கங்களை ஏற்றனர், பின்னர் அவற்றை இந்தியாவில் கொண்டுவந்து நுழைத்தனர்.'

கே: 'மாயை முதலும் முடிவும் அற்றதா?'

ப: 'பிரபஞ்சம், இனம் இவற்றைப் பொறுத்த வரையில் முதல் முடிவற்றது, தனி மனித விஷயத்தில் முடிவு உடையது.'

கே: 'பிரம்மத்தையும் மாயையும் ஒரேவேளையில் தெரிந்து கொள்ள முடியாது. அப்படியானால் ஒன்று மற்றதிலிருந்து வருவதை எப்படி நிரூபிப்பது?'

ப: 'அனுபூதியால் மட்டுமே அதை நிரூபிக்க முடியும். ஒருவனுக்கு பிரம்ம ஞானம் ஏற்பட்டதும் அவனுக்கு மாயை மறைந்துவிடும். கயிறு என்பதை அறிந்ததும் பாம்புத் தோற்றம் மறைவது போன்றது அது.'

கே: 'மாயை என்பது என்ன?'

ப: 'இருப்பது ஒன்றே, அதை ஜடம் என்றோ சைதன்யம் என்றோ சொல்லுங்கள். ஒன்றை விட்டு மற்றொன்றைத் தனியாகச் சிந்திப்பது கடினம், முடியாது. இதுதான் மாயை, அல்லது அறியாமை.'

கே: 'முக்தி என்றால் என்ன?'

ப: 'முக்தி என்றால் முழுச் சுதந்திரம், பாவ புண்ணிய பந்தங்களிலிருந்து சுதந்திரம். பொன் விலங்கும் இரும்பு விலங்கைப் போன்றதே. ஒரு முள் தைத்தால், வேறொரு முள்ளால் முதல் முள்ளை எடுத்துவிட்டு, இரண்டையும் எறிந்துவிட வேண்டுமென்று ஸ்ரீராமகிருஷ்ணர் சொல்வார். ஆகவே கெட்ட பழக்கங்களை ஒழிக்க நல்ல பழக்கங்களைக் கையாள வேண்டும். பிறகு நல்ல பழக்கங்களையும் கடந்துபோக வேண்டும்.'

கே: 'முக்தி என்பது இறையருள் இல்லாமல் கிடைக்குமா?'

ப: முக்திக்கும் இறைவனுக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. முக்தி ஏற்கனவே உள்ளது.'

கே: 'ஜீவாத்மா உடலிலிருந்து தோன்றியதல்ல என்பதை எப்படி நிரூபிப்பது?'

ப: 'நான்-உணர்வும் (Ego) நான்-உணர்வின்மையும் (Non-Ego)தான் உடல் மற்றும் மனத்திலிருந்து தோன்றியவை. உண்மையான ஆன்மா இருப்பதற்கான ஒரே நிரூபணம் அனுபூதிதான்.'

கே: 'உண்மையான ஞானி யார்? உண்மையான பக்தன் யார்?.'

ப: 'உள்ளத்தில் ஆழ்ந்த அன்பும், அதேவேளையில் வெளி உறவுகளில் அத்வைதத்தை நடைமுறையில் காண்பவனுமே உண்மை ஞானி. தன் ஆன்மாவைப் பரமாத்மாவுடன் ஒன்றாக உணர்ந்து, அதனால் உள்ளத்தில் உண்மை ஞானம் நிறையப் பெற்று, பிறரிடம் கருணையும் அன்பும் கொள்பவன் உண்மை பக்தன். ஞானம் அல்லது பக்தியில் ஒன்றைப் புகழ்ந்து மற்றொன்றை இகழ்பவன் ஞானியும் அல்ல, பக்தனும் அல்ல; அவன் பொய்யன், ஏமாற்றுபவன்.'

கே: 'இறைவனுக்கு மனிதன் ஏன் சேவை செய்ய வேண்டும்?'

ப: 'இறைவன் இருப்பதை நீ ஏற்றுக் கொள்வதானால், அவருக்குச் சேவை செய்வதற்குக் கணக்கற்ற சந்தர்ப்பங்கள் கிடைக்கும். சாஸ்திரங்களின்படி இறை-சேவை என்பது ஸ்மரணம், இறைவனை நினைப்பதுதான். இறைவன் இருப்பதை நம்பினால், உன் வாழ்வில் ஒவ்வொரு கணமும் அவரது நினைவு எழவே செய்யும்.'

கேள்வி: 'மாயாவாதம் அத்வைத வாதத்திலிருந்து வேறானதா?'

ப: 'இல்லை, இரண்டும் ஒன்றுதான். மாயா வாதத்தைத் தவிர அத்வைத வாதத்திற்கு வேறு எந்த விளக்கமும் கிடையாது.'

கே: 'எல்லையற்ற பரம்பொருளான கடவுள் எப்படி எல்லைக்கு உட்பட்ட மனிதனாக அவதரிக்க முடியும்?'

ப: 'கடவுள் எல்லையற்றவர் என்பது உண்மைதான். ஆனால் அவர் எல்லையற்றவர் என்பது நீங்கள் புரிந்துகொண்ட விதத்தில் அல்ல. உலகத்தில் நீங்கள் காண்கின்ற ஏதோ ஒரு பொருளைப்போல் அவரும் பரந்திருப்பதாகக் கொண்டு, எல்லையற்றது என்பதற்குப் பொருளைக் குழப்பிக் கொள்கிறீர்கள். கடவுள் மனித உருவில் அவதரிக்க முடியாது என்று சொல்லும்போது நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? பரந்த எல்லையற்ற தூலப் பொருளாகக் கடவுளை நினைக்கிறீர்கள். அவ்வளவு பெரிய பரந்த ஒன்று இவ்வளவு சிறிய உடலில் எவ்வாறு அடங்கும் என்பதே உங்கள் கேள்வி. ஆனால் எல்லையற்ற பரம்பொருள் என்கிறபோது தனி ஆன்மாவையே குறிப்பிடுகிறோம். அந்த ஆன்மா மனித உருவத்தில் தோன்றுவதால் துளியளவுகூடப் பாதிக்கப்படுவதில்லை.'

கே: 'முதலில் சித்தனாகு (உண்மையை உணர்ந்தவன்), அப்போதுதான் உனக்குக் கர்மம் செய்யவும் பிறருடைய நலத்திற்காக உழைக்கவும் உரிமையுண்டு என்று சிலர் கூறுகின்றனர். வேறு சிலரோ, ஆரம்பத்திலிருந்தே பிறருக்காக உழைக்க வேண்டும் என்கிறார்கள். இந்த இரு கருத்தையும் இணைப்பது எப்படி?'

ப: 'நீங்கள் ஒன்றை மற்றொன்றுடன் குழப்புகிறீர்கள். கர்மம் என்றால் மனிதகுலத்திற்குத் தொண்டு செய்வது அல்லது போதிப்பது. சித்த புருஷன் ஒருவனுக்கே அதாவது, உண்மையை உணர்ந்தவனுக்கே உபதேசம் செய்யும் உரிமை உண்டு. ஆனால் தொண்டு செய்வதைப் பொறுத்தவரை எல்லோருக்கும் உரிமை உண்டு, அது மட்டுமல்ல, தான் பிறரிடமிருந்து உதவியைப் பெறும் வரை பிறருக்கு உதவுவது ஒருவனது கடமையும் ஆகும்.'

## 2. யோகம், வைராக்கியம், தவம், அன்பு

கே: 'உடல் பூரண ஆரோக்கியமாகவும் வலுவாகவும் இருப்பதற்கு யோகம் உதவுமா?'

ப: 'ஆம்; நோய்களைத் தடுக்கவும் செய்யும். சொந்த உடலை ஒரு புறப்பொருளாக நினைப்பது கடினம், ஆனால் பிறர் விஷயத்தில் அது எளிதானது. பாலும் பழமுமே யோகிகளின் மிகச் சிறந்த உணவு.'

கே: 'வைராக்கியம் வந்ததுமே ஆனந்த நிலையையும் அடையலாமா?'

ப: 'வைராக்கியத்தின் முதற்படி மிகவும் வேதனை தருவது. அது பூர்த்தியானால் ஆனந்த நிலையைத் தரும்.'

கே: 'தவம் என்றால் என்ன?'

ப: 'தவம் மூன்று வகை: உடல் தவம், சொல் தவம், மனத் தவம்; அதாவது பிறருக்குச் சேவை செய்வது, உண்மையைக் கடைப்பிடிப்பது, மனக் கட்டுப்பாடும் மன ஒருமைப்பாடும்.'

கே: 'எறும்பிடமும் பூரண மகானிடமும் ஒரே உணர்வு இருப்பதை நாம் ஏன் காண்பதில்லை?'

ப: 'அதற்கு, தகுந்த காலம் வர வேண்டும்.'

கே: 'நிறைநிலையை அடையுமுன் உபதேசம் செய்ய முடியுமா?'

ப: 'முடியாது. எனது குருநாதருடையவும் என்னுடையவும் சீடர்கள் பூரண நிலை பெறுவார்களாக! பிரச்சாரப் பணி செய்யும் தகுதி பெறுவார்களாக!'

கே: 'கீதையில் காணும் கிருஷ்ணரின் திவ்ய விசுவரூப கம்பீரம், கோபிகைகளிடையே காணும் கிருஷ்ணனின் தனிக் காதலைவிட உயர்ந்ததா'?

ப: 'தெய்வீகக் காதலே சிறந்தது. தெய்வீகமில்லாத தனி நபர் காதல் உயர்ந்ததாகாது. அவ்வாறு உயர்ந்ததாக இருக்கு மானால் உடம்பை நேசிக்கின்ற எல்லோரும் முக்தி அடைந்திருப் பார்களே!'

### 3. நிவேதிதைக்கு அளித்த விடை[1]

**கே:** 'கன்னோஜில் நடந்த சுயம்வரத்திற்குச் சென்றபோது பிருதிவிராயும், சாந்தும் என்ன வேடம் பூண்டிருந்தார்கள் என்பது எனக்கு ஞாபகமில்லை.'

ப: 'இருவரும் தெருப்பாடகர்களாகச் சென்றனர்.'

கே: 'பிருதிவிராய் சம்யுக்தையைத் திருமணம் செய்ய வேண்டுமென்று உறுதி பூண்டது எதனால்? எதிரியுடைய பெண் என்பதாலும் பேரழகி என்பதாலுமா? பிருதிவிராய் தன் வேலைக்காரி ஒருத்தியை அனுப்பி சம்யுக்தையின் வேலைக் காரியாக இருக்கச் செய்தானா? இந்தக் கிழவி, பிருதிவிராய்மீது சம்யுக்தையைக் காதல் கொள்ளச் செய்தாளா?'

ப: 'அவனுடைய வீரச் செயல்களைக் கேட்டும், அவ ளுடைய அழகைக் கேட்டும் ஒருவர் மற்றவரின் சித்திரங்களைக் கண்டும் காதல் கொண்டனர். சித்திரங்களைக் கண்டு காதல் கொள்வது பண்டைய இந்தியப் பழக்கம்.'

கே: 'இடையர்களிடையே எவ்வாறு கிருஷ்ணன் கொண்டு வரப்பட்டான்?'

ப: 'கொடுங்கோல் மன்னனாகிய கம்சனிடமிருந்து குழந்தையைக் காப்பாற்றுவதற்காக, அவனைத் தூக்கிக்கொண்டு அவனது தந்தை ஓட வேண்டியிருந்தது. பிறக்கும் குழந்தை களில் ஒருவன் இந்தக் கிருஷ்ணனாயிருந்து, தன்னைச் சிம்மாசனத்திலிருந்து அகற்றி விடுவான் என்று அசரீரி வாக்கு சொல்லக்கேட்டு பயந்தான் கம்சன். எனவே அவன் அந்த ஆண்டிலிருந்து பிறந்த எல்லா ஆண் குழந்தைகளையும் கொல்லக் கட்டளையிட்டான். கிருஷ்ணனின் தந்தையையும் தாயையும் சிறை வைத்தான்.'

கே: 'அவனுடைய வாழ்வு எப்படி முடிந்தது?'

---

1. சகோதரி நிவேதிதையின் கேள்விகளுக்கு சுவாமிஜி 1900, மே 24–ஆம் நாள் சான்பிரான்ஸிஸ்கோவில் இருக்கும்போது எழுதிய பதில்கள்.

ப: 'கம்சனால் ஒரு விழாவிற்கு அழைக்கப்பெற்றுத் தன் தமையனாகிய பலதேவனையும் வளர்ப்புத் தந்தையாகிய நந்தனையும் அழைத்துக் கொண்டு கிருஷ்ணன் வந்தான். அவனைக் கொல்வதற்குக் கம்சன் ஏற்பாடு செய்திருந்தான். ஆனால் கிருஷ்ணன் கம்சனைக் கொன்றான். அரசைத் தான் எடுத்துக் கொள்ளாமல், கம்சனின் நெருங்கிய உறவினன் ஒருவனைச் சிம்மாசனத்தில் அமரச் செய்தான். செயலின் பலன் எதையும் அவன் ஏற்கவில்லை.'

கே: 'கிருஷ்ணனின் வாழ்வில் இந்தக் காலகட்டத்தில் நடந்த ஏதாவதொரு சுவையான சம்பவத்தைக் கூற முடியுமா?'

ப: 'இந்தக் காலகட்டம் பல அற்புதச் செயல்கள் நிறைந்தது. சுட்டிப் பையனாக இருந்த அவனைத் தாயாகிய யசோதை, தயிர் கடையும் கயிற்றைக் கொண்டு கட்ட முயன்றாள். ஆனால் அவளிடமிருந்த கயிறு அனைத்தாலும்கூட அவனைக் கட்ட முடியவில்லை. அப்போது அவளது கண் திறந்தது. பிரபஞ்சம் முழுவதுமே அடங்கியிருக்கும் அந்தக் கிருஷ்ணனுடைய உடம்பைக் கட்டுவது முடியாத காரியம் என்று அவள் உணர்ந்தாள். அவளது உடம்பு நடுங்கியது. அவள் அவனைத் துதித்தாள். கிருஷ்ணன் உடனே தன் மாயையை அவள்மீது திருப்பினான், அவ்வளவுதான், அவன் மீண்டும் அவளுக்குச் சாதாரணக் குழந்தையானான்.

'தேவர்களில் முதல்வரான பிரம்மா, இறைவனே கோபாலனாக அவதரித்திருக்கிறார் என்பதை நம்பாமல் பசுக்களையும் இடையர்களையும் கொண்டுபோய் ஒரு குகைக்குள் தூங்கச் செய்துவிட்டார். ஆனால் அவர் கிருஷ்ணனிடம் வந்தபோது கிருஷ்ணனைச் சுற்றி எப்போதும்போல் அந்தப் பசுக்களும் இடையர்களும் இருந்தார்கள். இந்தப் பசுக்களையும் இடையர்களையும் அதுபோல் கொண்டுபோனார் பிரம்மா. மீண்டும் வந்து பார்த்தார். முன்போலவே அவர்கள் கிருஷ்ணனிடம் காணப்பட்டனர். அவருக்கு விழிப்பு ஏற்பட்டது, ஒன்று மற்றொன்றைவிடச் சிறந்ததான பல்லாயிரம் உலகங்களையும், விண்ணுலகங்களையும், பிரம்மாக்களையும் பகவானுடைய உடலில் அவர் கண்டார்.

'காளிங்கன் என்ற பாம்பு யமுனை நதியில் விஷத்தைக் கக்கி நீரைப் பாழாக்கியது. கிருஷ்ணன் அதை அடக்கி, அதன் தலையில் நின்று நடனம் ஆடினார்.

'இந்திரனை வழிபடக் கூடாதென்று கிருஷ்ணன் சொல்ல அதனால் இந்திரனுக்குக் கோபம் உண்டாகி, பேய் மழை பொழியச் செய்தான். இந்த மழையினால் பிருந்தாவன மக்களைக் கொன்றுவிடலாமென்று எண்ணினான். ஆனால் கண்ணன் கோவர்த்தன மலையைத் தனது சிறிய விரலால் தூக்கிக் குடையாகப் பிடித்து அவர்களைக் காத்தான்.

'சிறு வயதிலிருந்தே பாம்பு வழிபாடு, இந்திர வழிபாடு இரண்டையும் கிருஷ்ணன் எதிர்த்தான். இந்திர வழிபாடு வேதச் சடங்காகும். கீதையில் வேத முறைகள் பாராட்டப் படவில்லை.

'இந்தக் காலம் கோபியருடன் ஆடல் புரிந்தகாலம். கண்ணனுக்கு அப்போது வயது பதினொன்று.'

## 4. குரு அவதாரம், யோகம், ஜபம், சேவை

கே: 'வேதாந்தத்தை எப்படி உணர்வது?'

ப: 'கேட்டல், சிந்தித்தல், தியானித்தல் ஆகியவைமூலம். சத்குருவிடமிருந்து கேட்க வேண்டும். சீடனாக இல்லாவிட்டாலும், தகுந்த சாதகனாக இருந்து, அவரது உபதேசங்களைப் பின்பற்றுபவன் முக்தி பெறுவான்.'

கே: 'சத்குரு யார்?'

ப: 'குருபரம்பரைமூலம் வருகின்ற ஆன்மீக சக்தியைப் பெற்றவர் அல்லது தொடர்ந்த குரு பரம்பரையில் வந்தவர்.

'குருவாக இருப்பது மிகவும் கடினம். அவர் பிறருடைய பாவங்களை ஏற்க வேண்டும். நல்ல தேர்ச்சி அடையாத குருவாக இருந்தால் வீழ்ச்சி அடையவும் நேரும், உடம்பிற்கு மட்டும் வேதனை ஏற்படுவதோடு நின்றுவிட்டால் பெரிய விஷயம்.'

கே: 'குருவால் ஒருவனைத் தகுதியானவனாக்க முடியாதா?'

ப: 'அவதார புருஷரால் முடியும், சாதாரண குருவால் முடியாது.'

கே: 'முக்திக்கு எளிய வழி கிடையாதா?'

ப: 'ஜியோமிதிக்கு (Geometry) ராஜ பாதை கிடையாது. அவதார புருஷருடன் நேருக்குநேர் தொடர்புகொள்ளும் புண்ணியமிருந்தால் முடியும். ''கடைசிப் பிறவியை எடுத்தவன் எப்படியாவது என்னைப் பார்ப்பான்'' என்று பரமஹம்ச தேவர் கூறுவார்.'

கே: 'யோகம் அதற்கு எளிய வழியல்லவா?'

ப: '(சிரிப்புடன்) நன்றாகச் சொன்னாய்! அப்படியா, யோகம் எளிய வழியா? மனத் தூய்மையில்லாதவன் யோகப்

பயிற்சி செய்தால் ஒருவேளை சில சித்திகளைப் பெறலாம். ஆனால் அதுவே ஒரு தடையாகிவிடும். ஆகவே தூய உள்ளமே முதல் தேவை.'

கே: 'அதை அடைவது எப்படி?'

ப: 'நற்செயல் புரிவதால். நற்செயல்கள் இருவகைப்படும்: ஒன்று, உடன்பாட்டுமுறை, மற்றொன்று எதிர்மறை முறை. 'திருடாதே' என்பது எதிர்மறை முறை. 'பிறருக்கு நன்மை செய்' என்பது உடன்பாட்டு முறை'.

கே: 'உயர்ந்த நிலையில் இருக்கும் போதல்லவா, பிறருக்கு நன்மை செய்ய வேண்டும்? கீழ் நிலையில் அது உலக பந்தத்தை அல்லவா உண்டாக்கும்?'

ப: 'அதை முதல் படியிலேயே செய்ய வேண்டும். ஆசையிருப்பவனே அதில் மயங்குகிறான், பந்தத்தில் அகப்படுகிறான். மற்றவர்கள் கட்டுப்பட மாட்டார்கள். படிப்படியாக அது இயல்பாகிவிடும்.'

கே: 'நேற்றிரவு, ''எல்லாம் உன்னிடமே உள்ளன'' என்றீர்கள். நான் விஷ்ணுவாக வேண்டும் என்றால் அந்த உருவத்தையும் தியானிக்க வேண்டுமா, அல்லது கருத்தை மட்டும் சிந்தித்தால் போதுமா?'

ப: 'சக்திகேற்றவாறு இரண்டில் ஒன்றை நினைக்கலாம்.'

கே: 'அனுபூதிக்கான வழிகள் எவை?'

ப: 'குருவே வழி. குருவில்லாமல் ஞானம் கிடையாது.'

கே: 'தியானம் செய்யப் பூஜையறை தேவையில்லை என்று சிலர் சொல்கின்றனர். இது எவ்வளவு தூரம் உண்மை?'

ப: 'இறைவனது சான்னித்தியத்தை உணர்ந்தவர்களுக்குத் தேவையில்லை, மற்றவர்களுக்கு வேண்டும். உருவக் கடவுளைக் கடந்து, இறைவனின் அருவ நிலையைத் தியானிக்க வேண்டும். ஏனெனில் உருவக் கடவுள் வழிபாடு முக்தியைத் தர முடியாது. ஆனால் அதன்மூலம் உலகச் செல்வங்களைப் பெறலாம். தாயை வழிபடுபவன் வெற்றி அடைகிறான், தந்தையை வழிபடுபவன் சொர்க்கத்தை அடைவான். சாதுவை வழிபடுபவன் ஞானத்தையும் பக்தியையும் பெறுவான்.'

கே: 'கணநேர சத்சங்கம்கூட இந்தச் சம்சாரத்திலிருந்து விடுதலை தந்துவிடும் என்கிறார்களே, அதன் கருத்து என்ன?'

ப: 'தகுதியுள்ள ஒருவன் உண்மையான சாதுவை அடைந்தால் முக்தி பெறுவான். உண்மையான சாதுக்களைக் காண்பது மிகவும் அரிது. அதனால் அவர்களின் சிறப்பை எவ்வளவு

அழகாக ஒருவர் கூறுகிறார்: 'துர்குணம் நற்குணத்திற்கு வழங்கும் புகழுரையே போலித்தனம்.' ஆனால் அவதாரங்கள் கபால மோசனர்கள்' அதாவது மனிதர்களுடைய விதியையே அவர்களால் மாற்ற முடியும். அவர்களால் உலகையே அசைக்க முடியும். மனிதனை வழிபடுவதே மிகக் குறைந்த அபாயமான தும், மிகச் சிறந்ததுமான வழிபாடு. மனிதனில் பிரம்மத்தைக் காண்பவன் பிரபஞ்சத்தில் வியாபித்திருக்கும் பிரம்மத்தை அறி வான். வெவ்வெறு சூழ்நிலைகளுக்கு ஏற்ப துறவறம், இல்லறம் இரண்டும் நல்லதுதான். வேண்டியது ஞானம் மட்டுமே.'

கே: 'எங்கு ஒருவன் தியானம் செய்ய வேண்டும்? உடலுக்கு உள்ளேயா, வெளியிலா? மனம் உள்ளே இழுக்கப்பட வேண் டுமா, வெளியே இருக்கலாமா?'

ப: 'உள்ளேயே தியானம் செய்ய வேண்டும். மனம் இழுக்கப் பட வேண்டுமா, வேண்டாமா என்ற விஷயத்தைப் பொறுத்த வரை, அந்த மனத் தளத்தை அடையவே நீண்ட காலமாகும். இப்போது நமது போராட்டம் உடம்புடன்தான். தொடர்ந்து அசைவற்று அமரும் நிலை பெற்றபிறகு, பிறகு மட்டுமே மனத் துடனான போராட்டத்தைத் தொடங்க வேண்டும். ஆசனம் நிலைபெற்றுவிட்டால் உடல் அசைவற்றிருக்கும். அப்போது விருப்பப்படி நீண்டநேரம் உட்காரலாம்.'

கே: 'சிலவேளைகளில் ஜபம் சோர்வைத் தருகிறது. அப்போது ஜபத்தைத் தொடர்வதா, நல்ல நூல்களை வாசிக்கலாமா?'

ப: 'ஜபத்தினால் சோர்வு இரண்டு காரணங்களால் ஏற்பட லாம்—ஒன்று, மூளை களைத்துவிடுவதால்; இரண்டு, சோம் பலினால். முதல் காரணமாயிருந்தால் ஜபத்தைச் சற்று நிறுத்திக் கொள்ளலாம். ஏனெனில் இந்த நிலையில் ஜபத்தைத் தொடர்ந் தால் போலிக் காட்சிகளில் மயங்க நேரும், சிலவேளைகளில் பைத்தியமும் பிடிக்கலாம். சோம்பலினால் ஏற்பட்ட சோர்வு என்றால், அதற்குப் பரிகாரம் மனத்தைப் பலவந்தப்படுத்தி, ஜபத்தில் தொடர்ந்து ஈடுபடச் செய்வதே.'

கே: 'சிலவேளைகளில் ஜபம் செய்யும்போது ஆனந்தம் உண்டாகிறது. இந்த ஆனந்தத்தால் ஜபத்தை மேலும் செய்யத் தோன்றாமல் போகிறது. அப்போது மேலும் ஜபம் செய்வதா?'

ப: 'ஆம், இந்த ஆனந்தம் சாதனைக்கு இடையூறானது. அதற்குப் பெயர் ரஸாஸ்வாதனம் (இன்பத்தைச் சுவைப்பது). இதைத் தாண்டிச் செல்ல வேண்டும்.'

கே: 'மனம் அலைந்து கொண்டிருந்தால், நீண்ட நேரம் ஜபம் செய்வது நல்லதா?'

ப: 'ஆம். முரட்டுக் குதிரையை அடக்க அதன் முதுகில் எப்போதும் உட்கார்ந்து பழக்குவது போன்றது இது.'

கே: 'பலவீனமான ஒருவன் யோகப் பயிற்சி செய்தால் கடுமையான எதிர்ச் செயல் உண்டாகலாம் என்று பக்தி யோகம் என்னும் நூலில் எழுதியிருக்கிறீர்கள். அப்போது என்ன செய்வது?'

ப: 'ஆன்மாவை அறியும் முயற்சியில் இறந்தால்தான் என்ன? படிப்பிற்காகவும் மற்றும் பல விஷயங்களுக்காகவும் உயிரைவிட மனிதன் பயப்படுவதில்லை. ஆன்மீகத்திற்காக உயிரிழக்க ஏன் பயப்பட வேண்டும்?'

கே: 'ஜீவ சேவை மட்டும் முக்தி தருமா?'

ப: 'ஜீவ சேவை நேரடியாக முக்தி தராது; உள்ளத்தைத் தூய்மை செய்வதன்மூலம் மறைமுகமாக முக்தி தரும். ஒரு காரியத்தைச் சரியாகச் செய்ய வேண்டுமானால், அந்த வேளை யில் அந்த வேலையே எல்லாம் என்று கருதி அதில் ஈடுபட வேண்டும். எந்தப் பிரிவைப் பின்பற்றினாலும், ஊக்கம் இல்லை யானால் பயனில்லை. நிஷ்டை வேண்டும், இல்லாவிடில் எந்தப் பயனும் இல்லை. இப்போது கர்மத்தில் கருத்துச் செலுத்துவது அவசியமாக உள்ளது.'

கே: 'கருணை நோக்குடன் கர்மம் செய்ய வேண்டுமா, அல்லது வேறெதாவது நோக்குடனா?'

ப: 'கருணை நோக்குடன் சேவை செய்வது நல்லதுதான். எல்லா உயிர்களையும் இறைவனாக எண்ணிச் சேவை செய்வது அதைவிட உயர்ந்தது.'

கே: 'பிரார்த்தனையால் என்ன பயன்?'

ப: 'பிரார்த்தனையால் நுண்ணிய ஆற்றல்கள் எளிதாக விழிப்படைகின்றன. தன்னுணர்வுடன் பிரார்த்தனை செய்தால் எல்லா விருப்பங்களும் நிறைவேறும்; உணர்வற்ற நிலையில் செய்தால் பத்தில் ஒன்று ஒருவேளை நிறைவேறலாம். அத்தகைய பிரார்த்தனை சுயநலமானது, அதனை விட்டுவிட வேண்டும்.'

கே: இறைவன் மனிதனாக வரும்போது அவரை எப்படி அறிந்து கொள்வது?'

ப: 'மக்களின் விதியை மாற்றும் வல்லமை பெற்றிருந்தால் அவர் இறைவன். ஒரு சாது எவ்வளவுதான் முன்னேறியவராக இருந்தாலும் இந்த ஈடிணையற்ற நிலையை அடைய முடியாது.

ஸ்ரீராமகிருஷ்ணரை இறைவனாக உணர்ந்த யாரையும் நான் காணவில்லை. நாங்கள் ஏதோ சிலவேளைகளில் மங்கலாக உணர்கிறோம், அவ்வளவுதான். அவரை இறைவனாக உணர்வதும், அதேவேளையில் உலக வாழ்க்கையில் பற்றுடன் இருப்பதும் முரணானது. ❑

## 12. சென்னையில் எடுக்கப்பட்ட குறிப்புகள்

1892—93

இந்து மதத்தின் இன்றியமையாத கருத்துக்கள் மூன்று: கடவுள், வேதங்கள், அருள் வெளிப்பாடு மற்றும் வினைப்பயன், மறுபிறவி இவற்றில் நம்பிக்கை.

வேதங்களை நன்றாகப் படிக்கும்போது அங்கே சமரசம் நிறைந்த ஒரு மதத்தைக் காண முடிகிறது.

இந்து மதத்திற்கும் பிற மதங்களுக்கும் ஒரு பெரிய வேற்றுமை உள்ளது. இந்துமதம் உண்மையிலிருந்து உண்மைக்கு, அதாவது கீழ்நிலை உண்மையிலிருந்து உயர்நிலை உண்மைக்குச் செல்வது பற்றியே பேசுகிறது. தவறிலிருந்து உண்மைக்குச் செல்வது என்பதே அங்கு இல்லை.

பரிணாமம் என்னும் கண்ணாடி அணிந்துகொண்டு வேதங்களைப் படிக்க வேண்டும். மத உணர்வின் ஆரம்பம் முதல் ஒருமையாகிய நிறைநிலையை அது அடைவது வரையிலான அதன் வளர்ச்சியின் முழு வரலாற்றையும் அவற்றில் நாம் காணலாம்.

வேதங்கள் அனாதி, படைக்கப்படாதவை. ஆனால் ஒரு சிலர் நினைப்பதுபோல், அவற்றில் வரும் சொற்கள் அனாதி என்பதல்ல, அவை புகட்டும் ஆன்மீக நியதிகளே அனாதியானவை. இவை மாற்ற முடியாதவை, அழியாதவை, பல்வேறு காலங்களில் பல்வேறு ரிஷிகளால் கண்டுபிடிக்கப் பட்டவை. இவற்றுள் சில மறந்துபோன போதிலும், மற்றவை பாதுகாக்கப் பட்டன.

பல்வேறு தொலைகளிலிருந்தும் பல கோணங்களிலிருந்தும் கடலைப் பார்ப்பவர்கள் அவரவர்க்கு எட்டியமட்டில் கடலைப் பார்க்கிறார்கள். தாங்கள் கண்டதே உண்மையான கடல் என்று ஒவ்வொருவரும் சொல்கிறார்கள். அவர்கள் சொல்வது உண்மை தான், ஏனெனில் எல்லோரும் கண்டது ஒரே கடலின் பகுதிகளையே. சாஸ்திரங்களும் பல்வேறு முரண்பட்ட கருத்துக்களைக் கொண்டிருப்பதாகத் தோன்றினாலும்

அவை உண்மையையே பேசுகின்றன. ஏனெனில் அந்தக் கருத்துக்களெல்லாம் எல்லையற்ற மெய்ப்பொருளின் விளக்கங்களே.

முதன்முதலாகக் கானல்நீரைக் காணும் ஒருவன் அதை உண்மை என்று நினைக்கிறான். அதில் தாகத்தைத் தணித்துக் கொள்வதற்காக அலைந்து திரிந்த பிறகே அது உண்மையல்ல என்று அறிகிறான். அறிந்த பிறகு அந்தக் காட்சியை அவன் எப்போது காண நேர்ந்தாலும் அதன் உண்மை அவனுக்குத் தெரிந்துவிடுகிறது. ஜீவன்முக்தனுக்கும் இந்த மாய உலகம் இது போன்றே காட்சியளிக்கிறது.

ஒருசில வேத ரகசியங்கள் சில குடும்பங்களுக்கு மட்டுமே தெரிந்திருந்தன. ஏனெனில் அதற்கான சக்திகள் இயல்பாகவே சில குடும்பத்தில்தான் காணப்பட்டன. அந்தக் குடும்பங்கள் அழிந்தபோது, அவற்றுடன் அந்த ரகசியங்களும் மறைந்தன.

வேதங்களில் காணப்படும் உடலியல் ஆயுர்வேதத்தைவிட எந்த விதத்திலும் குறைந்தது அல்ல.

மிருகங்களை வெட்டிப் பலியிட வேண்டியிருந்ததால், உடலின் வெவ்வேறு பாகங்களுக்கும் வெவ்வேறு தனிப் பெயர்கள் சூட்டியிருந்தனர்.

கப்பல்கள் நிறைந்து காட்சியளித்ததாகக் கடல் வர்ணிக்கப்பட்டுள்ளது. பிற்காலத்தில் கடல்பயணம் தடை செய்யப்பட்டது. செல்பவர்கள் எங்கே பௌத்தர்களாகிவிடுவார்களோ என்ற பயம்தான் இதற்குக் காரணம்.

புதிய க்ஷத்திரியர்கள் வைதீகப் புரோகிதர்களை எதிர்த்ததன் விளைவே புத்தமதம்.

இந்து மதம் புத்த மதத்தின் சாரத்தை ஏற்றுக்கொண்டு புத்த மதத்தை விலக்கிவிட்டது. தென்னாட்டு ஆச்சாரியர்கள் இரண்டிற்கும் இடையே ஒரு சமரசத்தை ஏற்படுத்த முயன்றார்கள். சங்கரரின் உபதேசங்களில் புத்தமதத்தின் தாக்கத்தைக் காண முடிகிறது. சங்கரரின் சீடர்கள் அவரது போதனைகளைத் திரித்துக் கூறினார்கள். அவரைப் பின்பற்றுவோரை 'மறைமுக புத்தர்கள்' என்று பிற்காலச் சீர்திருத்தவாதிகள் கூறியது சரி என்று கருதத்தக்க வகையில் அது போயிற்று.

* * *

அறிய முடியாதது என்று ஸ்பென்சர் கூறுவது என்ன? மாயை என்று நாம் சொல்வதைத்தான். மேலைநாட்டுத் தத்துவ

அறிஞர்கள் அறிய முடியாததை எண்ணி நடுங்குகிறார்கள். நம் நாட்டுத் தத்துவ ஞானியர் அதிலேயே குதித்தனர், வெற்றியும் கண்டனர்.

கழுகுகள் வானத்தில் மிக உயரப் பறந்தாலும் அவற்றின் பார்வை கீழே கிடக்கின்ற அழுகிய பிணத்தின்மீதே பதிந்திருக் கும். மேலை நாட்டுத் தத்துவ அறிஞர்களும் அவ்வாறே; அவர் களால் அந்த அறிய முடியாததைக் கடந்து செல்ல முடிய வில்லை, எனவே திரும்பி சர்வ சக்தி வாய்ந்ததான பணதெய் வத்தை வழிபடுகிறார்கள்.

உலகில் இரண்டுவித வளர்ச்சிகள் இருந்து வருகின்றன— ஒன்று அரசியல், மற்றொன்று மதம். அரசியலில் கிரேக்கர் களே எல்லாம். இன்றைய அரசியல் இயக்கங்கள் எல்லாம் கிரேக்க அரசியலிலிருந்து உருவானவைதான். மதத் துறையில் இந்துக்களே எல்லாமாக உள்ளனர்.

கிறிஸ்தவ மதத்தை ஒரு கிளையாகவும், புத்த மதத்தைப் புரட்சிக் குழந்தையாகவும் கொண்டதுதான் என் மதம்.

எல்லா மூலகங்களையும் தன்னிடமிருந்தே உற்பத்தி செய்யக்கூடிய ஒரு மூலகத்தைக் கண்டுபிடித்தால் வேதியியலின் வளர்ச்சி நின்றுவிடும். எல்லா சக்திகளையும் வெளிப்பாடு களாகக் கொண்ட ஒரு சக்தியைக் கண்டுவிட்டால் இயற்பியல் வளராது. அதுபோன்றே ஒருமையை அடைந்துவிட்டால் மத வளர்ச்சி நின்றுவிடும். இதுவே இப்போதைய இந்து மதத்தின் நிலை.

வேதங்களில் இல்லாத எந்தப் புதிய மதக் கருத்தும் உலகில் எங்கும் இல்லை.

பகுப்பு முறை, தொகுப்பு முறை என்று இருவகை வளர்ச்சிகள் ஒவ்வொன்றிலும் உண்டு. முன்னதில் இந்துக்கள் முன்னணியில் விளங்குகின்றனர், பின்னதில் அவர்கள் ஒன்றுமில்லை என்றே கூற வேண்டும்.

பகுத்துணரும் திறனிலும் நுண்ணுணர்விலும் இந்துக்கள் நல்ல வளர்ச்சி பெற்றுள்ளனர். பாணினியின் இலக்கணம் போன்றதொரு நூலை வேறு எந்த நாடும் இதுவரை படைத்ததில்லை.

சமணர்களையும் பௌத்தர்களையும் இந்துக்களாக மாற் றியது ராமானுஜரின் முக்கியப் பணி. அவர் உருவ வழிபாட்டை வலியுறுத்தினார். பக்தியையும் நம்பிக்கையையும் முக்திக்கு உகந்த சாதனங்களாக முதலில் கூறியவர் அவர்.

சமணர்களின் இருபத்து நான்கு தீர்த்தங்கரர்களைப்போல் பாகவதத்தில் இருபத்து நான்கு அவதாரங்கள் கூறப்பட்டுள்ளன. ரிஷப தேவரின் பெயர் இரண்டிலும் பொதுவாக உள்ளது.

யோகப் பயிற்சி நுண்ணுணர்வை வளர்க்கிறது. பொருட்களிலிருந்து அவற்றின் குணங்களைப் பிரித்து, அவற்றைத் தனியாகக் காணும் திறமை உடையவன் சித்தன்.

* * *

எதிரெதிர் துருவங்கள் எப்போதும் சந்திக்கின்றன, அங்கே இரண்டும் ஒன்றுபோலவே காட்சியளிக்கின்றன. தன்னை மறந்த பக்தன் எப்பொழுதும் எல்லையற்ற பிரம்மத்தை தியானித்து, அந்த இன்பத்தில் திளைத்திருக்கிறான். மிக இழிந்த குடிவெறியனும் வெளிப்பார்வைக்கு அவ்வாறே தெரிகிறான். இதனால் பக்தனையும் குடிவெறியனையும் உவமைப்படுத்துவது திகைப்பைத்தான் தருகிறது!

எளிதில் உணர்ச்சிவசப்படுபவர்கள் மத வாழ்வில் வெற்றி பெறுகின்றனர். அவர்கள் எதை ஏற்றுக்கொண்டாலும் அதில் தீவிர ஊக்கம் காட்டுகின்றனர்.

'இந்த உலகில் எல்லோரும் பைத்தியம்; சிலருக்குப் பொன் மீது பைத்தியம், சிலருக்குப் பெண்மீது பைத்தியம், சிலருக்குக் கடவுள்மீது பைத்தியம். மூழ்கி இறப்பதுதான் விதி என்றால், சாணக்குட்டையில் இறப்பதைவிட, பாற்கடலில் மூழ்கிச் சாவதே மேல்' என்றார் பைத்தியம் என்று அழைக்கப்பட்ட பக்தர் ஒருவர்.

எல்லையற்ற அன்பின் வடிவான, நுண்ணிய எல்லையற்ற அன்பைப் பெறுபவனுமான இறைவன் நீல நிறத்திலேயே வரையப்படுகிறான். கிருஷ்ணரின் உருவம் நீல நிறத்தில்தான் தீட்டப்படுகிறது. அதேபோல் சாலமனின் அன்புக் கடவுளின் நிறமும் நீலமே. எது நுண்ணியதாக, எல்லையற்றதாக இருக்கிறதோ, அதை நீல நிறத்துடன் இணைப்பது இயல்புதான். கை நிறையத் தண்ணீரை எடுத்துப் பாருங்கள், நிறம் எதுவுமில்லை. ஆனால் பரந்த கடலைப் பாருங்கள், அது நீல நிறமாகக் காட்சி அளிக்கிறது. உங்கள் அருகில் உள்ள வெட்ட வெளிக்கு நிறமில்லை, ஆனால் எல்லையற்றுப் பரந்த வானத்தைப் பாருங்கள், நீல நிறமாக உள்ளது.

லட்சியத்தில் மூழ்கியிருந்த இந்துக்களுக்கு நடைமுறைக் கண்ணோட்டத்தில் அவ்வளவு திறமை போதாது. ஓவியம் மற்றும் சிற்பக் கலையையே எடுத்துக் கொள்வோம். இந்துக்களின்

ஓவியங்களில் என்ன காண்கிறோம்? இயற்கைக்கு மாறுபட்ட, வினோதமான எத்தனை உருவங்கள் உண்டோ அத்தனையும் அங்கே உண்டு. இந்துக் கோயிலிலோ, சதுர்பங்க (நான்கு இடங்களில் வளைந்த) நாராயணனையும் அதைப் போன்ற உருவங்களையும் காணலாம். இத்தாலிய ஓவியம் அல்லது கிரேக்கச் சிற்பத்தை எடுத்துக் கொள்ளுங்கள். இயற்கையை எவ்வளவு நுணுக்கமாக ஆராய்ந்து தீட்டியிருக்கிறார்கள்! எரியும் மெழுகுவர்த்தியைக் கையில் ஏந்திய ஒரு பெண்ணின் படத்தை வரைவதற்காக, ஒருவர் தாமும் கையில் மெழுகுவர்த்தியை ஏந்திக்கொண்டு இருபது வருடங்கள் உட்கார்ந்திருந்தார். அகவியல் விஞ்ஞானங்களில் இந்துக்கள் முன்னேறியுள்ளார்கள்.

மனித இயல்பில் பல வேறுபாடுகள் இருப்பதால், வேதங்களில் ஒழுக்க நியதிகளும் பலவகையாகக் கூறப்பட்டுள்ளன. வயது வந்தவனுக்குக் கற்றுக் கொடுக்கும் ஒன்றைக் குழந்தைக்குக் கற்றுக் கொடுக்க முடியாது.

குரு, மனிதனின் வைத்தியராக இருக்க வேண்டும். சீடனின் இயல்பை அறிந்து, அவனுக்கு மிகவும் தகுதியானதை அவர் கற்பிக்க வேண்டும்.

யோகப் பயிற்சிக்கு எண்ணற்ற வழிகள் இருக்கின்றன. சில வழிகள் சிலருக்கு நல்ல வெற்றியை அளித்துள்ளன. ஆனால் எல்லா வழிகளிலுமே இரண்டு விஷயங்கள் முக்கியமானவை: (1) அறிந்த அனுபவம் எல்லாம் உண்மையல்ல என்று ஒதுக்கி மெய்ப்பொருளை அடைவது. (2) எல்லாமே, இந்தப் பிரபஞ்சமே நீதான் என்று நினைப்பது. இரண்டாவது வழி, முதல் வழியை விட விரைவில் பலன் அளிப்பது என்றாலும், அது அவ்வளவு பாதுகாப்பானது அல்ல. அது அபாயங்கள் நிறைந்த வழி. அந்த வழியில் செல்பவன் வழி தவறக்கூடும், அவன் லட்சியத்தை அடையாமல் போகவும்கூடும்.

கிறிஸ்தவ மதம் போதிக்கும் அன்புக்கும் இந்து மதம் போதிக்கும் அன்புக்கும் வேறுபாடு உண்டு. பிறர் நம்மை எவ்வாறு நேசிக்க வேண்டும் என்று விரும்புகிறோமோ, அவ்வாறு நாம் பிறரை நேசிக்க வேண்டும் என்று கிறிஸ்தவ மதம் போதிக்கிறது. இந்து மதமோ அவர்களை நாமாகவே எண்ணி நேசிக்கச் சொல்கிறது, உண்மையில் பிறரிடம் நம்மைக் காணச் சொல்கிறது.

ஒரு கண்ணாடிப் பெட்டியில் அடைத்து வைக்கப்படும் கீரிப்பிள்ளை, பெட்டிக்கு வெளியே சுதந்திரமாக உலவிவர

நீண்ட சங்கிலியால் கட்டப்படுகிறது. அது வெளியில் திரியும் போது ஏதாவது ஆபத்து வருவதாக உணர்ந்தால், உடனே ஒரே தாவலில் கண்ணாடிப் பெட்டிக்குள் போய்விடுகிறது. யோகியும் இவ்வாறே செய்கிறான்.

* * *

இந்தப் பரந்த பிரபஞ்சம் ஒரு தொடர்சங்கிலி போன்றது. அதன் ஒரு துருவம் ஜடம், மற்றொரு துருவம் கடவுள். விசிஷ்டாத்வைத தத்துவத்தை இந்த மாதிரி சில கருத்துக்களால் விளக்கலாம்.

சகுணக் கடவுள் ஒருவர் இருக்கிறார் என்பதை நிரூபிக்கின்ற பல பகுதிகள் வேதங்களில் உள்ளன. நீண்ட காலம் பக்தியின்மூலம் கடவுளைக் கண்ட ரிஷிகள், அறிய முடியாத பரம் பொருளை எட்டிப் பார்த்து, இந்த உலகிற்குச் சவால் விடுத்துள்ளனர். இந்த ரிஷிகள் காட்டிய வழியில் செல்லாத, அவர்களது உபதேசங்களைப் பின்பற்றாத அகந்தை மிக்கவர்களே அவர்களை விமர்சிக்கின்றனர், எதிர்க்கின்றனர். 'நான் ரிஷிகள் கூறிய வழியைப் பின்பற்றினேன். ஆனால் ஒன்றையும் காணவில்லை. அவர்கள் பொய்யர்கள்' என்று கூற இதுவரை யாரும் துணியவில்லை. எத்தனையோ சோதனைகளுக்கு உள்ளாகியும், தாங்கள் கடவுளால் கைவிடப்படவில்லை என்பதை உணர்கின்ற பலர் இருக்கின்றனர். இறைநம்பிக்கை ஆறுதல் அளிக்காவிட்டால் தற்கொலையே நல்லது என்று நினைத்துவிடுகிறது இன்றைய உலகம்.

பக்திமிக்க மதப் பிரச்சாரகன் ஒருவன் வெளியூர் சென்றிருந்தான். அப்போது அவனுடைய பிள்ளைகள் மூவரும் திடீரென்று காலரா கண்டு இறந்துவிட்டனர். அவனது மனைவி ஆசைக் குழந்தைகள் மூவரையும் ஒரு துணியால் போர்த்திவிட்டு, கணவனின் வருகைக்காக வாசலில் காத்து நின்றாள். அவன் வந்ததும், அவனை வாசலிலேயே நிறுத்தி, 'என் அன்பே, ஒருவர் ஒரு பொருளை உங்களிடம் ஒப்படைக்கிறார். நீங்கள் வெளியே சென்றிருக்கும்போது திடீரென அதைத் திருப்பி எடுத்துச் செல்கிறார். அதற்காக நீங்கள் வருந்துவீர்களா?' என்று கேட்டாள். 'நிச்சயமாக வருந்த மாட்டேன்' என்றான் அவன். உடனே அவள் அவனை உள்ளே அழைத்துச் சென்று, போர்வையை நீக்கிப் பிள்ளைகள் மூவரின் பிணத்தைக் காட்டினாள். அமைதியாகப் பிணங்களைப் பார்த்த அவன் உடல்களை அடக்கம் செய்தான். நடப்பவை எல்லாம் கருணைக்

கடலாகிய ஆண்டவனின் செயலே என்று உறுதியாக நம்புபவர்களின் மனநிலை இத்தகையது.

பரம்பொருள் ஒருபோதும் சிந்தனைக்கு எட்டாதது. எல்லைக்கு உட்பட்ட ஒன்றையே நாம் சிந்திக்க முடியும். எல்லையற்ற கடவுளை எல்லைக்கு உட்பட்டவராகக் கருதிதான் நம்மால் வழிபட முடியும்.

யோவான் ஸ்நாபக அருளப்பர் பௌத்தர்களில் ஒரு பிரிவான எஸ்ஸீனைச் சேர்ந்தவர். கிறிஸ்தவர்களின் சிலுவை சிவலிங்கமே, வேறு எதுவும் அல்ல. குறுக்கில் இரண்டாகப் பிரிக்கப்பட்டுள்ளது, அவ்வளவுதான். பண்டைய ரோமின் பாழடைந்த சின்னங்களில் புத்த வழிபாட்டின் சுவடுகளை இன்றும் காணலாம்.

தென்னிந்தியாவில் சில ராகங்களைத் தனி ராகங்கள் என்று கூறுகிறார்கள். ஆனால் அவையும் ஆறு ஆதி ராகங்களிலிருந்து பிறந்தவையே. அவர்களது இசையில் மூர்ச்சனை, அதாவது ஆலாபனை மிகமிகக் குறைவு. உயர்தர இசைக் கருவிகளைப் பயன்படுத்துவதும் குறைவே. தென்னிந்தியாவில் காணப்படும் வீணை உண்மையான வீணை அல்ல. நம்மிடம் ராணுவ இசையும் இல்லை, ராணுவ கீதங்களும் இல்லை. பவபூதியின் பாடல்கள் ஓரளவு ராணுவப் பாடல்கள்.

* * *

ஏசு ஒரு துறவி. அவரது மதமும் முக்கியமாகத் துறவிகளுக்கே ஏற்ற ஒன்று. அவருடைய போதனைகளை 'துறந்துவிடு' என்று சுருக்கமாகக் கூறிவிடலாம். இதற்குமேல் அதில் எதுவும் இல்லை. தகுதியுள்ள ஒரு சிலருக்கே இது பொருத்தமானது.

'மற்ற கன்னத்தையும் காட்டுங்கள்'—இது முடியாது, நடைமுறையில் சாத்தியம் அல்ல. மேலை நாட்டினருக்கு இது தெரியும். பேரின்ப வாழ்விற்காக ஏங்கி நிற்பவர்களுக்காக, பரிபூரணம் அடைய விரும்புபவர்களுக்காகக் கூறப்பட்டது இது.

'உன்னுடைய உரிமைகளில் உறுதியாக நில்' என்பதுதான் சாதாரண மனிதனுக்கான விதி. ஒரேமாதிரியான ஒழுக்க நியதிகளைத் துறவிகள், இல்லறத்தார்கள் என்று எல்லோருக்கும் போதிக்க முடியாது.

மனிதர்கள் எல்லோரும் சமமானவர்கள் என்றே எல்லா பிரிவினைவாத மதங்களும் கருதுகின்றன. இதை விஞ்ஞானம் ஒத்துக்கொள்ளவில்லை. மனிதர்களில் உடல்

வேறுபாடுகளைவிட அதிகமானவை மன வேறுபாடுகள். மனிதர் ஒவ்வொருவரும் வேறுபட்டவர்கள், ஆனால் இந்த வேறுபாடுகளுள் ஒருமை நிலவுகிறது என்பது இந்து மதத்தின் அடிப்படைக் கோட்பாடுகளில் ஒன்று. குடிகாரனுக்கும் விலைமகளின் வீடு செல்பவனுக்கும்கூட சில மந்திரங்கள் உள்ளன!

ஒழுக்கம் என்பது இதுதான் என்று அறுதியிட்டுக் கூற முடியாது. அப்படி இந்த உலகில் எதுவும் இல்லை. இருப்பதாக நினைப்பது மூட நம்பிக்கை. எல்லா காலத்திலும் எல்லா மனித ரையும் ஒரே அளவுகோல் கொண்டு மதிப்பிட நமக்கு உரிமை யில்லை.

ஒவ்வொரு நாட்டில், ஒவ்வொரு காலத்தில், மனிதன் வெவ்வேறு சூழ்நிலையில் உள்ளான். சூழ்நிலைகள் மாறும் போது எண்ணங்களும் மாற வேண்டும். ஒருகாலத்தில் மாட் டிறைச்சி உண்பது சரியென்று கருதப்பட்டது. குளிர் மிகுந்த இடம் அது. தானியங்கள் அவ்வளவாகப் பழக்கத்தில் இல் லாத காலம், கிடைத்த முக்கிய உணவு மாமிசம் ஒன்றே. ஆகையால் அந்தக் காலத்தில், அத்தகைய காலநிலையில் மாட்டிறைச்சி ஒருவகையில் தவிர்க்க முடியாததாயிற்று. ஆனால் இப்போது மாட்டிறைச்சி உண்பது தவறு என்று கருதப்படுகிறது.

மாறுதலற்ற ஒன்றே ஒன்று கடவுள். சமூகம் இயங்கிக் கொண்டிருக்கிறது. ஜகத் (உலகம்) என்றால் இயங்குவது என்று பொருள். கடவுள் அசலம், அசைவற்றவர்.

நான் சொல்வது 'சீர்திருத்தம்' என்பதல்ல, 'முன்னேறிச் செல்' என்பதே. சீர்திருத்தம் செய்ய வேண்டிய அளவிற்கு எது வும் கெட்டுவிடவில்லை. சூழ்நிலைக்கு ஏற்ப மாறுவதுதான் வாழ்க்கையின் ரகசியம், இதுவே வாழ்வின் ரகசியங்களை வெளிப்படுத்தும் அடிப்படைக் கோட்பாடு. அடக்க முயற்சிக் கின்ற புறச் சக்திகளை எதிர்த்து ஆன்மா போராடுவதன் விளைவே மாறுதல் அல்லது அனுசரித்துப் போதல். நன்றாக அனுசரித்துப் போகிறவன் நீண்ட காலம் வாழ்கிறான். இதை நான் கூறாவிட்டாலும், சமூகம் மாறிக்கொண்டே இருக்கிறது, மாறியே தீர வேண்டும். கிறிஸ்தவ மதமோ, விஞ்ஞானமோ சமூகத்தை மாற்றுவதில்லை; தேவைதான் அடிப்படையில் வேலை செய்கிறது. வாழ்வதா அல்லது பட்டினி கிடப்பதா என்ற தேவைதான் சமுதாயத்தை மாற்றுகிறது.

உலகில் மிகச் சிறந்த இயற்கைக் காட்சிகளை இமயமலை உச்சிகளில் காணலாம். அங்கே சில காலம் ஒருவன் வசித்தால் எவ்வளவு மனக்குழப்பம் மிக்கவனாக இருந்தாலும் மன அமைதி பெறுவான்.

பொது நியதியின் மிகவுயர்ந்த வடிவமே இறைவன். இந்த நியதியை அறிந்துவிட்டால், மற்றவை யாவும் இதில் அடக்கம் என்பது எளிதில் விளங்கும். கீழே விழும் பொருட்களுக்கும், நியூட்டனின் புவியீர்ப்பு விதிக்கும் உள்ள தொடர்பு எதுவோ, அதுவே கடவுளுக்கும் மதத்திற்கும் உள்ளது.

வழிபாடு ஒவ்வொன்றும் மிக உயரிய பிரார்த்தனையைக் கொண்டது. தியானம் அல்லது மானசபூஜை செய்ய முடியாத ஒருவனுக்குப் பூஜையும் சடங்குகளும் தேவை, தூலமானவை அவனுக்குத் தேவைப்படுகின்றன.

தைரியசாலிகள்தான் நேர்மையாக இருக்க முடியும். சிங்கத்தையும் நரியையும் ஒப்பிட்டுப் பாருங்கள்.

இறைவனிலும் இயற்கையிலும் உள்ள நல்லவற்றை மட்டும் நேசிப்பது பெரிதல்ல, ஒரு குழந்தைகூட இதைச் செய்துவிடும். பயங்கரத்தையும் துன்பத்தையும்கூட நேசிக்க வேண்டும். குழந்தை தொந்தரவு கொடுத்தாலும் ஒரு தந்தை அவனை நேசிக்கிறார் அல்லவா?

ஸ்ரீகிருஷ்ணர் கடவுள்; மனித இனத்தைக் காப்பதற்காக அவதரித்தார். கோபி லீலை என்பது பக்திநெறியின் சிகரம். இங்கே தனித்துவம் மறைகிறது, இரண்டறக் கலந்துவிடுகிறது. 'எனக்காக மற்ற பந்தங்களை விடு' என்று தாம் கீதையில் போதித்ததை, இந்த லீலையில்தான் ஸ்ரீகிருஷ்ணர் செயல்முறையில் காட்டுகிறார். பக்தி என்றால் என்ன என்பதைப் புரிந்து கொள்ள வேண்டுமானால், பிருந்தாவன லீலையில் சரணடை. இதுபற்றி ஏராளமான நூல்கள் எழுதப்பட்டுள்ளன. இது இந்தியாவின் மதம். இந்துக்களுள் பெரும்பாலோர் ஸ்ரீகிருஷ்ணரைப் பின்பற்றுகின்றனர்.

ஏழை, பிச்சைக்காரன், பாவி, குழந்தை, தந்தை, மனைவி என்று ஒவ்வொருவருக்கும் கடவுள் ஸ்ரீகிருஷ்ணர். அவர் நமது ஒவ்வோர் உறவிலும் நெருக்கமாகக் கலந்து, ஒவ்வொன்றையும் புனிதமாக்கி, இறுதியில் நமக்கு முக்தியையும் தருகிறார். தத்துவ அறிஞர்கள் மற்றும் மேதைகளிடமிருந்து அவர் தம்மை மறைத்துக் கொள்கிறார், பாமரர்களுக்கும் குழந்தைகளுக்கும் தம்மை வெளிப்படுத்தி அருள்கிறார். அவர் நம்புவோருக்குத்

தெய்வம்; அன்பரின் கடவுள், அறிஞரின் கடவுள் அல்ல. கோபிகளைப் பொறுத்தவரை அன்பும் இறைவனும் ஒன்றே. அன்பின் அவதாரமாகவே ஸ்ரீகிருஷ்ணரை அவர்கள் அறிந்தார்கள்.

துவாரகையில் ஸ்ரீகிருஷ்ணர் கடமையைப் போதிக்கிறார்; பிருந்தாவனத்தில் அன்பைப் போதிக்கிறார். தமது பிள்ளைகள் கொடியவர்களாக இருந்ததால், ஒருவர் மற்றொருவரைக் கொன்று குவிக்குமாறு விட்டுவிட்டார்.

யூத மற்றும் முகமதிய மதக் கோட்பாடுகளின்படி கடவுள் ஒரு பெரிய விசாரணை நீதிபதி. நமது கடவுள் புறத்தே கண்டிப்பானவர், அகத்தே அன்பும் இரக்கமும் மிக்கவர்.

அத்வைதத்தைச் சரியாகப் புரிந்துகொள்ளாமல் சிலர் அதனைக் கேலிக்கூத்தாக்கி விடுகின்றனர். 'சுத்தமாவது அசுத்தமாவது, நல்லொழுக்கமாவது தீயொழுக்கமாவது, இவை எல்லாம் மூட நம்பிக்கைகள்' என்று இவர்கள் சொல்கிறார்கள். தங்கள் செயல்களில் எந்த ஒழுக்கத்தையும் இவர்கள் கடைப்பிடிப்பதில்லை. இது அசல் போக்கிரித்தனம். இத்தகைய கருத்துக்களைப் போதிப்பதால் விளையும் தீங்கு அளவற்றது.

இந்த உடல் இருவகை வினைகளால் ஆனது. ஒன்று புண்ணியம், மற்றது பாவம். புண்ணியம் நன்மை தரும், பாவம் தீமை தரும். உடம்பில் முள் குத்துகிறது, மற்றொரு முள்ளால் அதை எடுக்கிறேன், பிறகு இரண்டையும் எறிந்துவிடுகிறேன். நிறைநிலை அடைய விரும்பும் ஒருவன் புண்ணிய முள்ளால் பாவ முள்ளை அகற்றுகிறான். இப்போது அவன் உயிர் வாழ்கிறான், புண்ணியம் மட்டுமே எஞ்சி நிற்கிறது. இந்தப் புண்ணியம் மேலும்மேலும் புண்ணியம் செய்ய அவனைத் தூண்டுகிறது. ஜீவன்முக்தனிடம் சிறிது புனிதம் எஞ்சுகிறது, அவன் வாழ்கிறான், ஆனால் அவன் செய்பவை யாவும் புனிதம் வாய்ந்ததாகவே இருக்கும்.

நல்லொழுக்கம் நம் வளர்ச்சிக்குத் துணை செய்கிறது; தீயொழுக்கம் நம்மைச் சீரழிக்கிறது. மிருகத்தனம், மானுடம், தெய்வீகம் என்று மூன்று பண்புகளால் ஆனவன் மனிதன்; உன்னுள் உள்ள தெய்வீகத்தை வளர்க்கக் கூடியது நல்லொழுக்கம், மிருகத்தனத்தை வளர்ப்பது தீயொழுக்கம். மிருகத்தனத்தை அழித்து மனிதனாக வேண்டும். அதாவது அன்பும் அறச் சிந்தனையும் உள்ளவனாக வேண்டும். பின்னர்

அந்தக் கட்டத்தையும் தாண்டி, தூய ஆனந்தமாக, ஸத்-சித்-ஆனந்தமாக ஆக வேண்டும். சுடுதலற்ற தியாகவும், மனித அன்பின் பலவீனமற்ற அற்புத அன்புகொண்டவனாகவும், துன்ப உணர்ச்சியே அற்றவனாகவும் திகழ வேண்டும்.

வைதி பக்தி, ராகானுக பக்தி என்று பக்தி இருவகைப்படும்.

வைதி பக்தி என்பது வேதங்களில் மாறாத நம்பிக்கை கொள்வது, அவற்றைப் பின்பற்றி நடப்பது.

ராகானுக பக்தி ஐந்து வகைப்படும்.

1. சாந்தம்—கிறிஸ்தவ மதத்தில் கூறப்பட்டிருப்பது போன்றது.

2. தாஸ்யம்—ராமனிடம் அனுமன் கொண்டது போன்றது.

3. சக்யம்—கிருஷ்ணரிடம் அர்ஜுனன் கொண்டது போன்றது.

4. வாத்ஸல்யம்—கண்ணனிடம் வசுதேவர் கொண்டது போன்றது.

5. மதுரம்—கண்ணனிடம் கோபியர் கொண்டது போன்றது.

சமூகத்தை ஒரு நீள்வட்டத்திற்கு (Ellipse) ஒப்பிட்டார் கேசவ சந்திரசென். இதன் நடுநாயக சூரியனாக விளங்குபவன் இறைவன். சமூகம் சிலநேரம் இறைவனிலிருந்து மிக தூரத்திலும் (Aphelion), சிலநேரங்களில் அருகிலும் (Perihelion) வருகிறது. தூரத்தில் செல்லும்போது, ஓர் அவதார புருஷர் வந்து அதைக் கடவுளுக்கு அருகில் அழைத்து வருகிறார். மறுபடியும் அது கடவுளிடமிருந்து விலகிச் செல்கிறது. அது ஏன் அவ்வாறு செல்ல வேண்டும்? எனக்குத் தெரியாது. அவதாரத்திற்கு என்ன அவசியம்? படைப்புதான் எதற்கு? எல்லோரையும் ஆண்டவன் ஏன் நிறைமனிதர்களாகப் படைக்கவில்லை? இவையெல்லாம் லீலை, நமக்குப் புரியாது.

மனிதன் பிரம்மமாகலாம், ஆனால் கடவுளாக முடியாது. யாராவது கடவுளாகியிருந்தால் அவருடையை படைப்பை எனக்குக் காட்டுங்கள் பார்க்கலாம். விசுவாமித்திரரின் படைப்பு என்பது அவருடைய கற்பனை மட்டுமே. அது விசுவாமித்திரரின் சட்டத்திற்குப் பணிந்து நடந்திருக்கலாம். யாராவது கடவுளாகியிருந்தால், படைப்பவர் இருவராகி, சட்டங்களில் முரண்பாடு ஏற்பட்டு, உலகமே முடிந்து போயிருக்கும். உலகத்தின் சமநிலை மிகவும் நுண்மையானது, ஓர் அணுவின் சமநிலை குலைந்தால்போதும், உலகமே அழிந்துவிடும்.

மாமனிதர்கள் இருந்திருக்கிறார்கள். எந்த எண்ணிக்கையும், எந்த மனிதக் கணக்கீடும் அவர்களுக்கும் நமக்கும் உள்ள வித்தியாசங்களைக் கணக்கிட முடியாது. ஆனால் கடவுளுடன் ஒப்பிடும்போது அவர்கள் வெறும் புள்ளிகளே. எல்லையற்ற பரம்பொருளின் முன் மற்றவை பூஜ்யமே. இறைவனுடன் ஒப்பிடும்போது விசுவாமித்திரர் ஒரு மனித விட்டில்பூச்சி என்பதைத்தவிர வேறு என்ன?

ஆன்மீக மற்றும் பௌதீக பரிணாம தத்துவத்தின் தந்தை பதஞ்ஜலி.

பொதுவாக உயிர்கள் சூழ்நிலையைவிட வலிமை குறைந்தவை, சூழ்நிலையை அனுசரித்துக் கொள்ளவே அவை போராடுகின்றன. சிலவேளைகளில் இந்த அனுசரித்தல் அளவுமீறி விடுகிறது, அப்போது ஓர் உயிரினம் இன்னோர் இனமாக மாறுகிறது. நந்தி ஒரு மனிதர். ஒரு மனித உடல் அவரது புனிதத்தைத் தாங்கமுடியாத அளவுக்கு அவர் புனிதம் பெற்றவர். எனவே அவருடைய உடலின் மூலக்கூறுகள் மாறி தேவ-உடலாகி விட்டது.

போட்டி என்ற பயங்கர எந்திரம் இருக்கிறதே அது எல்லாவற்றையும் அழித்துவிடும். நீ வாழ வேண்டுமானால், காலத்திற்கு ஏற்ப அனுசரித்து நடந்து கொள்ள வேண்டும். நாம் வாழ வேண்டுமானால், நமது நாடு ஒரு விஞ்ஞான நாடாக வேண்டும். அறிவின் ஆற்றலே சக்தி. ஐரோப்பியர்களின் நிறுவன அமைப்புத் திறமையை நாமும் கற்க வேண்டும். நீங்கள் கல்வி பெற வேண்டும், உங்கள் பெண்களையும் படிக்கவைக்க வேண்டும். சிறுவயதுத் திருமணத்தை அறவே நிறுத்த வேண்டும்.

இந்தக் கருத்துக்கள் எல்லாம் சமூகத்தில் இருக்கவே செய்கின்றன. உங்களுக்கும் அது தெரியும், ஆனால் அவற்றைச் செயல்படுத்தும் துணிவு உங்களிடம் இல்லை. பூனைக்கு மணி கட்டுவது யார்? காலம் கனியும்போது அற்புத மனிதர் ஒருவர் வருவார், அப்போது இந்த எலிகள் எல்லாம் வலிமை பெற்றெழும்.

மாமனிதர் தோன்றும்போது சூழ்நிலைகள் அனைத்தும் அவருக்கு ஏவல் செய்யச் சித்தமாக இருக்கின்றன. எல்லாம் தயார், அவர் கொடியை மட்டும் அசைத்தால் போதும். வெடிமருந்து கெட்டித்து எல்லாம் தயாராக உள்ளது, அதை வெடிக்கச் செய்வதில் கடைசிகட்டமான தீப்பொறி அவர்.

நாம் அவரைப்பற்றிப் பேசத் தொடங்கிவிட்டோம், அவருக்காக நாம் தயார் செய்து கொண்டிருக்கிறோம்.

கிருஷ்ணர் சூழ்ச்சிக்காரரா? இல்லை. போரைத் தடுப்பதற்காக அவர் தம்மால் இயன்றவரை முயன்றார். போருக்கு வற்புறுத்தியவன் துரியோதனனே. ஆனால் முடிவாகிவிட்டால், முன்வைத்த காலைப் பின்வைக்கக் கூடாது, அவனே கடமை வீரன். கடமையிலிருந்து தப்பி ஓடாதே. அது கோழைத்தனம். ஒன்றில் ஈடுபட்டால் அதைச் செய்துமுடி. ஓர் அங்குலமும் விலகாதே, அதற்காகத் தவறான ஒன்றில் ஈடுபடாதே. ஸ்ரீகிருஷ்ணர் ஈடுபட்டது தர்ம யுத்தம்.

சாத்தான் பல்வேறு வேடங்களில் வருகிறான்: கோபம், நீதியின் வடிவில் வருகிறது; ஆசைகள், கடமை என்ற வேடத்தில் வருகின்றன. அவ்வாறு வரும்போது முதலில் அவற்றை மனிதன் இனம்காண்கிறான், பிறகு மறந்து விடுகிறான்—வழக்கறிஞர்களின் மனச்சாட்சியைப்போல். எல்லாம் புரட்டு என்பது முதலில் அவருக்குத் தெரியும், பிறகு அதுவே கட்சிக்காரர்களுக்குச் செய்யவேண்டிய கடமையாகிறது, இறுதியில் அவர்களுடைய மனசாட்சி கல்லாகிவிடுகிறது.

யோகிகள் நர்மதைக் கரையில் வாழ்கின்றனர். அது அவர்களுக்கு மிகவும் உகந்த இடம், ஏனெனில் அங்கே தட்பவெப்பம் சமமாக இருக்கிறது. பக்தர்கள் பிருந்தாவனத்தில் வசிக்கிறார்கள்.

சிப்பாய்கள் சீக்கிரம் இறந்துவிடுகிறார்கள். இயற்கையில் குறைகள் ஏராளம். விளையாட்டு வீரர்களும் விரைவில் இறந்து விடுகிறார்கள். கனவான்கள் ஆற்றல் உள்ளவர்கள்; ஏழைகள் உடல் உறுதி படைத்தவர்கள்.

மலச்சிக்கலுள்ளவனுக்குப் பழவகை உணவு பொருந்தலாம். பண்பட்ட மனிதன் மூளைவேலையின் பொருட்டு ஓய்வு கொள்வது அவசியம். அவன்தன் உணவில் மசாலா, ஊறுகாய் முதலியவற்றைச் சேர்க்க வேண்டியிருக்கிறது. காட்டுமிராண்டியோ ஒரு நாளைக்கு நாற்பது ஐம்பது மைல் நடக்கிறான். மோசமான உணவையும் அவன் ருசித்துச் சாப்பிடுகிறான்.

நமது பழவகைகள் எல்லாம் செயற்கையானவை. இயற்கையான மாம்பழமோ சுவையற்றதாக உள்ளது. கோதுமையும் செயற்கை உணவே.

பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடித்து உடலில் உள்ள ஆன்மீக பலத்தைக் காத்துக்கொள்.

இல்லறத்தான் தன் வருமானத்தை இவ்வாறு செலவிட வேண்டும்: கால்பாகம் குடும்பத்திற்கு, கால்பாகம் தானத்திற்கு, கால் பாகம் சேமிப்பிற்கு, கால்பாகம் சொந்தச் செலவிற்கு.

வேறுபாட்டில் ஒருமை, பிரபஞ்சத்துவத்தில் தனித்துவம்— இவைதான் படைப்பின் திட்டம்.

காரணத்தை மட்டும் மறுப்பது ஏன், விளைவையும் மறு. விளைவில் உள்ள ஒவ்வொன்றும் காரணத்திலும் அமைந் திருக்கும்.

ஏசுவின் பொதுவாழ்வு பதினெட்டு மாதங்கள் மட்டுமே. இதற்காக அவர் முப்பத்திரண்டு ஆண்டுகள் அமைதியாகத் தம்மைத் தயார் செய்து கொண்டிருந்தார். முகமது வெளியே வரும்போது அவருக்கு நாற்பது வயதாகி இருந்தது.

* * *

சாதாரண வாழ்க்கையில் ஜாதிமுறை அவசியம் என்பது உண்மைதான். ஒரு குறிப்பிட்ட வேலையைச் செய்யும் திறமை உள்ளவர்கள் ஒரு ஜாதியாகிறார்கள். ஒரு தனி மனிதனுக்கு எதில் திறமை இருக்கிறது என்பதை யார் முடிவு செய்வது? ஆன்மீக விஷயங்களில் தனக்கு விசேஷத் தகுதியிருப்பதாக ஒரு பிராமணன் நினைத்தால், அதில் பகிரங்கமாக ஒரு சூத்திரனுடன் போட்டியிட அவன் ஏன் தயங்க வேண்டும்? நோஞ்சான் குதிரையுடன் போட்டியிடப் பந்தயக் குதிரை அஞ்சுமா?

கிருஷ்ண கர்ணாம்ருதத்தை இயற்றியவரான வில்வமங் களரின் வரலாற்றைப் பாருங்கள். தம்மால் கடவுளைக் காண முடியவில்லை என்பதற்காக அவர் தமது கண்களையே பிடுங்கி விட்டார்! தவறான அன்புகூடக் கடைசியில் சரியான அன்புக்கு இட்டுச்செல்லும் என்பதை அவருடைய வாழ்க்கை காட்டுகிறது.

வெகுகாலத்திற்கு முன்பே மதத் துறையில் முன்னேற்றம் பெற்றதும், எல்லாவற்றையும் நுண்மையாக அணுகியதால் உயர்பொருளைப்பற்றி நின்றதும் இந்துக்களை இன்றைய நிலைக்குக் கொண்டுவந்துள்ளன. அவர்கள் உலக வாழ்விற் கான சிறிதை மேலை நாட்டினரிடமிருந்து கற்றுக்கொண்டு, அவர்களுக்குச் சிறிது ஆன்மீகத்தைக் கற்பிக்க வேண்டும்.

முதலில் உங்கள் பெண்களுக்குக் கல்வி அளியுங்கள், பிறகு அவர்களை விட்டுவிடுங்கள். தங்களுக்கு என்னென்ன சீர்திருத் தங்கள் தேவையென்பதை அப்போது அவர்கள் கூறுவார்கள். அவர்களின் விஷயங்களைப் பேச நீங்கள் யார்?

தாழ்ந்த ஜாதியினரையெல்லாம் இன்றைய இழிநிலைக்குக் கொண்டு வந்தவர் யார்? அழகாக அத்வைதம் பேசி, அதே வேளையில் ஈவிரக்கமின்றி நடந்துகொண்ட நாம்தான். வெந்த புண்ணில் வேல் பாய்ச்சுவது அல்லவா இது?

இந்த உலகில் உருவமும் அருவமும் பிணைந்து காணப் படுகின்றன. உருவமற்றதை உருவத்தின்மூலம்தான் விளக்க முடியும், உருவம் உள்ளதை உருவமற்றதுடன் இணைத்துதான் சிந்திக்க முடியும். இந்த உலகம் நம் சிந்தனைகளின் உருவமே. மதத்தின் வெளிப்பாடுதான் விக்கிரகம்.

கடவுளிடம் எல்லா இயல்புகளும் இருக்க முடியும், ஆனால் மனித இயல்பு மூலமாகத்தான் நாம் அவரைக் காண இயலும். தந்தை, மகன் என்று மனிதனை நேசிப்பதுபோலவே நாம் அவரை நேசிக்க முடியும். உலகில் மிகச் சக்திவாய்ந்த அன்பு ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே உள்ளதுதான். அதிலும் கள்ளக் காதல் ஆற்றல் மிகுந்தது. கிருஷ்ணன்-ராதை காதலின் மூலம் இந்தக் கருத்தே விளக்கப்படுகிறது.

மனிதன் ஒரு பாவியாகப் பிறக்கிறான் என்று வேதங்களில் எந்த இடத்திலும் கூறப்படவில்லை. அவ்வாறு சொல்வது மனித இயல்பின்மீது அவதூறு சொல்வதேயாகும்.

மெய்ப்பொருளை நேருக்குநேராகக் காணும் நிலையை அடைவது எளிதல்ல.

அன்றொரு நாள் எவ்வளவோ முயன்றும், ஒரு வரை படத்தில் மறைந்திருந்த ஒரு பூனையைக் கண்டுபிடிக்க முடிய வில்லை, இத்தனைக்கும் படத்தின் பெரும்பகுதியை அதுவே ஆக்கிரமித்துக் கொண்டிருந்தது.

* * *

யாருக்காவது தீமை செய்துவிட்டு, நீங்கள் நிம்மதியாக உட்கார்ந்திருக்க முடியாது. கடவுளின் தண்டனையிலிருந்து நீங்கள் தப்ப முடியாது, அப்படியோர் அற்புதமான அமைப்பு அது.

காமத்திற்குக் கண்ணில்லை, அது நரகத்திற்கே இட்டுச் செல்லும். பிரேமைதான் அன்பு, அது சொர்க்கத்திற்குக் கூட்டிச் செல்லும்.

கண்ணன்-ராதை காதலில் காமத்தின் நிழலோ அனு தாபமோ இல்லை. ராதை கண்ணனிடம், ‘உன் பாதங்களை என் இதயத்தில் வைத்தால் காமமெல்லாம் மறைந்துவிடும்’ என்றாள்.

நுட்பமான நிலையை அடையும்போது காமம் அழிகிறது, அன்பு மட்டுமே இருக்கிறது.

கவிஞன் ஒருவன் ஒரு வண்ணாத்தியைக் காதலித்தான். கொதிக்கும் பருப்புக் குழம்பு ஒரு நாள் அவளது காலில் கொட்டியது, கவிஞனின் கால்களில் கொப்புளங்கள் ஏற்பட்டன.

கடவுளின் நுண்மை அம்சம் சிவபெருமான், அழகு அம்சம் கண்ணன். அன்பு நீலநிறமாக உருக்கொள்கிறது. ஆழ்ந்த காதலை வெளிப்படுத்துவது நீலநிறம். சாலமன் 'கண்ணனை'க் கண்டார். எல்லோரும் காண வேண்டும் என்பதற்காகவே கண்ணன் வந்தான்.

இன்றும்கூட, உங்களுக்குக் காதல் ஏற்படுமானால் நீங்கள் ராதையைக் காண்பீர்கள். ராதையாகுங்கள், நற்கதி பெறுங்கள். வேறு வழி இல்லை. சாலமனின் பாடல்களைக் கிறிஸ்தவர்களால் புரிந்துகொள்ள முடியவில்லை. அது சர்ச்சின்மீது கிறிஸ்துவுக்குள்ள அன்பைச் சித்தரிக்கின்ற தீர்க்கதரிசனம் என்று கூறுகிறார்கள். இதெல்லாம் பொருளற்றது என்று கருதி அவற்றின்மீது ஏதோ கதை கட்டுகிறார்கள்.

இந்துக்கள், புத்தரை ஓர் அவதாரம் என்று நம்புகின்றனர்.

கடவுள் உண்டு என்று இந்துக்கள் உறுதியாக நம்புகிறார்கள். கடவுள் இருக்கிறாரா இல்லையா என்பதை அறிந்துகொள்வதற்குக்கூட புத்த மதம் முயலவில்லை.

நம்மைச் செயல்முறையில் உந்தித் தள்ளுவதற்காக வந்தார் புத்தர். நல்லவர்களாக இருங்கள், ஆசைகளை அழியுங்கள். துவைதம் உண்மையா, அத்வைதம் உண்மையா; ஒரே பொருள் தான் இருக்கிறதா, ஒன்றுக்கு மேற்பட்டவை உண்டா? இவையெல்லாம் அப்போது உங்களுக்குத் தெரியும்.

புத்தர் இந்துசமயச் சீர்திருத்தவாதி.

ஒரே மனிதனிடம் தாய் மகனைக் காண்கிறாள், மனைவி வேறு விதமாகப் பார்க்கிறாள். கடவுளிடம் தீயவர்கள் தீமையைக் காண்கிறார்கள், நல்லவர்கள் நன்மையைக் காண்கிறார்கள். எல்லா உருவமும் அவருக்கு ஏற்புடையதே. ஒவ்வொருவரும் தங்கள் கற்பனைக்கேற்ற வகையில் அவரைக் காணலாம். தண்ணீர், அதை வைத்திருக்கும் பாத்திரங்களுக்கு ஏற்பப் பல வடிவங்களைப் பெறுகிறது. எல்லாவற்றுள்ளும் தண்ணீர்தான் இருக்கிறது. எனவே எல்லா மதங்களும் உண்மையானவையே.

கடவுள் கொடியவர், அதேவேளையில் கொடியவர் அல்ல; எங்குமுள்ளவர், எங்குமில்லாதவரும்கூட. எல்லா

முரண்பாடுகளும் அவரே. இயற்கையும் ஒரு முரண்பாட்டுக் குட்டையே தவிர வேறல்ல.

நினைத்தபடிச் செயல்படும் உரிமை உனக்கு உண்டு என்று உணர்வதே சுதந்திர சங்கல்பம். ஆனால் இது அவசியத்தினால் ஏற்படுகின்ற ஒன்று. சிந்தனைக்கும் செயலுக்கும் முன்னாலும் பின்னாலும் ஓர் எல்லையற்ற தொடர்பு இருக்கிறது. இதில் செயல் ஒன்றே சுதந்திரம் என்ற பெயர் பெறுகிறது. வெளிச்சம் மிகுந்த அறைவழியே பறவை ஒன்று சிறகடித்துப் பறந்து செல்வதுபோன்ற சுதந்திரம் அது. நாம் சுதந்திரமாக இருப்பதாக உணர்கிறோம், அதற்கு வேறு எந்தக் காரணமும் இல்லை யென்று நினைக்கிறோம். உணர்வுக்கு அப்பால் நம்மால் போக முடியாது, அதனால்தான் நாம் சுதந்திரமாக இருப்பதாக நினைக் கிறோம். உணர்வுக்கு அப்பால் அதைத் தொடர முடியாது. இறைவன் ஒருவனே உண்மையான சுதந்திரத்தை உணர்கிறார். மகான்கள் இறைவனுடன் ஒன்றுபட்டிருப்பதை உணர் கிறார்கள், ஆகையால் அவர்களும் உண்மையான சுதந்திரத்தை உணர்கிறார்கள்.

ஊற்றிலிருந்து வெளிவரும் நீரைப் போகவிடாமல் தடுத்து அந்த இடத்திலேயே தேங்குமாறு செய்யலாம், அதற்குமேல் உங்களுக்குச் சுதந்திரமில்லை. ஊற்றுக்கண் மாறாமல் அப் படியேதான் இருக்கும். எல்லாம் முன்னை விதிப்படியே நடக் கும். உங்கள் சுதந்திர உணர்வுகூட அந்த முன்னை விதியின் ஒரு பகுதிதான். என் செயலை நானே உருவாக்கிக் கொள்கிறேன். எதிர்ச்செயலை உணர்வதே பொறுப்பு எனப்படும். பரிபூரண அதிகாரம் என்று எதுவுமில்லை. இங்குள்ள அதிகாரமெல்லாம், தேவையின் பொருட்டு செய்வதை, சொந்தத் திறமையினால் செய்வதாக உணர்வதுதான். 'நான் செய்கிறேன்' என்ற எண்ணம் மனிதனுக்கு இருக்கிறது, சுதந்திரம் என்று அவன் கூறுவது இந்த எண்ணத்தையே. இந்தச் சுதந்திர ஆற்றலுடன் பொறுப்பும் சேர்ந்துவிடுகிறது. முன்னை விதிப்படி நம்மூலமாக எது நடந் தாலும் சரி, நாம் அதன் எதிர்ச்செயலை உணர்கிறோம். எறியப் பட்ட பந்து அதே வேகத்தோடு திரும்பிவருகிறது.

சுதந்திரம் என்னும் பெயரில், நமக்கு ஏற்படுகின்ற இயல்பான இந்தத் தேவை, சுற்றுச் சூழ்நிலையுடன் நாம் கொண்டுள்ள எந்தத் தொடர்பையும் பாதிப்பதில்லை; தொடர்பும் மாறுவதில்லை. எல்லோரும் சுதந்திரமாக இருக்கிறார்கள், அல்லது ஏதாவது தேவைக்காக இருக்கிறார்கள்.

அது பெரிய விஷயமில்லை; தொடர்புகள் அவ்வாறே இருக்கும். பாவமும் புண்ணியமும் ஒன்றாகவே இருக்கும். திருடுவது அவசியமாக இருந்தது என்று திருடன் சொன்னால், தண்டிப்பது அவசியமாக இருக்கிறது என்று நீதிபதி சொல்வார். ஓர் அறையில் நாம் உட்கார்ந்திருக்கிறோம். அந்த அறையே இயங்குகிறது—நம்மிடையே மாறுதல் ஏதும் நிகழ்வதில்லை.

எல்லையற்ற இந்தக் காரணகாரியச் சங்கிலித் தொடரி லிருந்து விடுபடுவதுதான் முக்தி. முக்தர்கள் தேவையால் தூண்டப்படுவதில்லை. அவர்கள் கடவுளைப் போன்றவர்கள். காரணகாரியத் தொடரை அவர்கள் ஆரம்பித்து வைக்கிறார்கள். கடவுள் ஒருவரே சுதந்திரமானவர், முக்தர்களின் சங்கல்பத்திற்கு இறைவன்தான் முதற்காரணம், அப்படித்தான் அவர்கள் இறை வனை அனுபவிக்கின்றனர்.

வேண்டும் என்ற உணர்வுதான் உண்மையான பிரார்த் தனை, சொற்கள் அல்ல. பிரார்த்தனைகள் நிறைவேறுகின் றனவா என்பதைக் காத்திருந்து பார்க்கும் பொறுமை உங்களுக்கு வேண்டும்.

நீங்கள் கடமையைச் செய்து கண்ணியத்தை வளர்க்க வேண்டும். கடமையைச் செய்வதன்மூலம், கடமைபற்றிய எண் ணத்தை அகற்றுகிறோம். அதன்பின்னரே எல்லாம் ஆண்டவன் செயல் என்ற எண்ணம் நமக்கு ஏற்படுகிறது. நாம் அவனது கையில் வெறும் கருவிகள். இயக்குபவன் அவன். இருள் நிறைந் தது இந்த உடல், அதற்கு ஒளிதரும் விளக்கு அவன். இந்த உடல்மூலம் நடைபெறும் செயல் எல்லாம் அவன் செய்வது. இந்த உண்மையை உணராமல், நீங்கள் செய்வதாக நினைக் கிறீர்கள். இது மாயை. இறைவனின் திருவுளத்திற்கு அமைதியாக அடிபணியக் கற்றுக்கொள்ள வேண்டும். அதற்குச் சிறந்த பள்ளிக்கூடம் கடமைதான். கடமையே அறநெறி. முற்றிலும் இறைவனைச் சரணடைந்து வாழப் பழகுங்கள். ‘நான்’ என்பதை அகற்றுங்கள், ஏமாற்றுவேலை வேண்டாம். அப்போது கடமை எண்ணமே உங்களிடமிருந்து அகலும், எல்லாம் அவன் செயல். அதன்பிறகு நீங்கள் இயல்பாகவே மன்னித்து விடுவீர்கள், பிறர் குற்றத்தை மறப்பீர்கள்.

நமது மதம் பல்வேறு மக்களுக்கும் பல்வேறு படித்தரங் களில் கடமையையும் சாதனைகளையும் கூறுகிறது.

ஒளி எங்கும் நிறைந்துள்ளது, மகான்களிடம் பிரகாசிக் கிறது. மகான்கள் பளிங்கை ஒத்தவர்கள். அவர்களின் உள்ளும்

புறமும் இறையொளிக் கிரணங்கள் ஊடுருவிச் செல்கின்றன. அப்படியிருக்க ஒரு ஜீவன்முக்தனை ஏன் வழிபடக் கூடாது?

மகான்களிடம் தொடர்பு கொள்வது நல்லது. அவர்களின் எல்லாமே புனிதத்தால் நிறைந்திருப்பதைக் காணலாம்.

உனக்குச் செய்யப்பட்ட தீமையை எதிர்க்காதே, ஆனால் மற்றவர்களுக்குச் செய்யப்படும் தீமையை எதிர்க்கலாம். நீ மகானாக விரும்பினால் எல்லாவித இன்பங்களையும் துறந்துவிட வேண்டும். சாதாரணமாக இன்பங்களை நுகரலாம். ஆனால் நல்வழி காட்டுமாறு ஆண்டவனை வேண்ட வேண்டும். அவர் வழிகாட்டி உன்னை அழைத்துச் செல்வார்.

இந்த உலகிற்கு அப்பாற்பட்டதும் மேலானதுமான ஒன்றுக்காக ஆசைப்படும் இதயத்தின் ஒரு சிறு பகுதியைத்தான் இந்தப் பிரபஞ்சம் நிறைவு செய்கிறது.

சுயநலம் என்பது ஒவ்வொரு மனிதனிடமும் குடிகொண்டிருக்கும் பேய். சுயநலத்தின் ஒவ்வொரு பகுதியும் பேய்தான். ஒருபக்கம் வழியாக இந்தச் சுயநலத்தை அகற்று, மறுபக்கம் வழியாக இறைவன் நுழைகிறான். சுயநலம் முற்றிலும் அகன்று விட்டால், இறைவன் மட்டுமே அங்கு இருப்பான். ஒளியும் இருளும் சேர்ந்திருக்க முடியாது.

ஆரோக்கியமான, தூய்மையான மனத்திற்கு அடையாளம் சிறிய-நான் என்பதை மறப்பதே.

சீதை தூயவள் என்று சொல்வது அபத்தம், தூய்மையே அவள் என்று கூற வேண்டும். அவளைப் போன்ற மற்றொருவர் உலகில் கிடையாது.

சீதை ராமனிடம் இருந்ததுபோல் ஒரு பக்தன் இருக்க வேண்டும். எத்தனையோ துன்பங்களுக்கு அவன் ஆளாக நேரிடலாம். சீதை தனது எந்தத் துன்பத்தையும் பொருட்படுத்தவில்லை. அவள் ராமனிலேயே நிலைபெற்றிருந்தாள்.

* * *

புத்த மதம் அறுதிப் பரம்பொருளைப்பற்றி எதுவும் நிரூபிக்கவில்லை. ஆற்றிலுள்ள தண்ணீர் மாறிக்கொண்டே இருக்கிறது, எனவே அது ஒரே ஆறு என்று கூற முடியாது. புத்த மதத்தினர் 'ஒன்று' என்பதை மறுத்து 'பல' என்று கூறுகின்றனர். நாம் 'பல' என்பதை மறுத்து 'ஒன்று' என்கிறோம். அவர்கள் கர்மம் என்று அழைப்பதையே நாம் ஆன்மா என்று கூறுகிறோம். மனிதன் என்பவன் அலைத் தொடரே என்கிறது புத்தமதம். ஒவ்வோர் அலையும் அழிகிறது, அழியும் அலை

ஒவ்வொன்றும் அதற்கு அடுத்த அலையை எப்படியோ எழுப்பி விடுகிறது. இரண்டாவது அலை, முதல் அலையை ஒத்தது என்று சொல்வது மாயை. இதிலிருந்து விடுபடுவதற்கு நற்கர்மம் வேண்டும்.

இந்த உலகிற்கு அப்பாற்பட்ட எதையும் புத்த மதம் கூற வில்லை. இந்தச் சார்பு உலகிற்கு அப்பால் அறுதிப் பரம்பொருள் உள்ளது என்று நாம் கூறுகிறோம். உலகில் துன்பம் உள்ளது என்பதைப் புத்தமதம் ஒப்புக் கொள்கிறது. இந்தத் துன்பத்தைப் போக்குவதே போதுமானது; நமக்குச் சுகம் கிடைக்குமா, கிடைக் காதா என்பதும் நமக்குத் தெரியாது.

மற்றவர்கள் போதித்தது போன்றதோர் ஆன்மாவை புத்தர் போதிக்கவில்லை. இந்து மதத்தின்படி ஆன்மா ஒரு தனிப் பொருள், இறைவன் பரிபூரணமானவர். சார்பு உலகை மறுப் பதில் இரண்டு மதங்களும் உடன்படுகின்றன. ஆனால் அவ்வாறு மறுப்பதன், அழிப்பதன் விளைவு என்ன என்பதை புத்த மதம் கூறவில்லை.

தற்கால இந்து மதமும் புத்த மதமும் ஒரே மரத்துக் கிளைகள். புத்தமதம் சீரழிந்தது, சங்கரர் அதை வெட்டி வீழ்த் தினார்.

வேதங்களில் உயிர் வதையும் பிறவும் மிகுதியாகக் காணப் பட்டதால் புத்தர் வேதங்களை மறுத்தார் என்று கூறப்படுகிறது. புத்தமத வரலாற்றின் ஒவ்வொரு பக்கமும் வேதங்களுடன் (அதாவது சடங்குகள் சம்பந்தப்பட்ட பகுதியுடன்) ஒரு போராட்டமாக உள்ளது. ஆனால் இவ்வாறு போரிட அவருக்கு எவ்வித அத்தாட்சியும் இல்லை.

கடவுள் விஷயத்தில் புத்தர் ஒரு பழுத்த ஆஜ்ஞேயவாதி யாக இருந்தார். நமது மதத்தில் கடவுளைப் பற்றியே எங்கும் கூறப்பட்டுள்ளது. கடவுளின் உருவம், அருவம் இரண்டைப் பற்றியும் வேதங்கள் கூறுகின்றன. கீதையிலும் கடவுளைப் பற்றியே போதிக்கப்படுகிறது. கடவுள் இல்லாமல் இந்து மதம் இல்லை, அவனின்றி வேதங்களும் இல்லை. அது ஒன்றே முக்திக்கு வழி. 'முக்திபெற விரும்பும் நான், உலகைப் படைத்த வனை, வேதங்களை மூச்சாக வெளிப்படுத்தியவனைச் சரணடை கிறேன்' என்று துறவியர் பலமுறை சொல்ல வேண்டும்.

மதங்களின் சமரசத்தை புத்தர் அறிந்திருக்க வேண்டும் என்று இப்போது நாம் கூறலாம். பிரிவினைவாதத்தைப் புகுத்தியவர் அவர்.

புதிய இந்து மதமும், புதிய சமண மதமும், புத்த மதமும் ஒரே காலத்தில் தோன்றியவை. வேடிக்கையாலும் ஏமாற்று வேலைகளாலும் ஒன்று மற்றொன்றை வீழ்த்தச் சில காலம் போட்டியிட்டன.

* * *

கடவுள் அல்லாத எதையும் நம்மால் கற்பனை செய்ய முடியாது. ஐம்புலன்களாலும், அதற்கு மேற்பட்டும் அறியக் கூடிய அனைத்தும் அவரே. அவரைப் பச்சோந்திக்கு ஒப்பிட லாம்; ஒவ்வொரு மனிதனும், ஒவ்வொரு நாடும், வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு வடிவங்களில் அவரது ஒரு பகுதியைக் காண்கிறது. ஒவ்வொரு மிருகமும் இயற்கையிலிருந்து தனக்குத் தேவையான உணவை எடுத்துக் கொள்வதுபோல், ஒவ்வொரு மனிதனும் தனக்குப் பொருத்தமானதாக, ஏற்புடைய தாகத் தோன்றுவதை அவரிடமிருந்து ஏற்றுக்கொள்ள வேண்டும்.

எல்லோருக்கும் ஒரே மாதிரி நியதிகளைக் கூறுவதுதான் கிறிஸ்தவம் போன்ற மதங்களில் உள்ள தவறு. இந்து மதமோ வெவ்வேறு நிலைகளில், வெவ்வேறு படிகளில் இருப்பவர்கள் அனைவருக்கும் ஏற்ப உள்ளது. எல்லா லட்சியங்களும் அதில் பூரண நிலையில் உள்ளன. உதாரணமாக, சாந்த லட்சியத்திற்கு வசிஷ்டர், அன்பிற்குக் கிருஷ்ணர், கடமைக்கு ராமரும் சீதையும், அறிவுக்கு சுகதேவர். இவர்களையும், பிற லட்சிய புருஷர்களை யும் படியுங்கள். உங்களுக்கு ஏற்றவரைப் பின்பற்றுங்கள்.

சத்தியம் எங்கே இட்டுச்சென்றாலும் அதைப் பின்பற்றுங் கள். கருத்துக்களைக் கடைசி எல்லைவரை ஆராய்ந்து, தர்க்க ரீதியான முடிவு காணுங்கள். கோழைகளாக இருக்காதீர்கள், பாசாங்குக்காரனாக இருக்காதீர்கள்.

லட்சியத்தின்மீது உங்களுக்கு ஆழ்ந்த ஈடுபாடு வேண்டும்; கணநேர ஈடுபாடு அல்ல, அமைதியும் விடாமுயற்சியும் நிலை யான தன்மையும் கொண்ட ஈடுபாடு வேண்டும். சாதகப் பறவையைப் பாருங்கள். இடி மின்னல்களுக்கு இடையே வானத்தை மட்டுமே அது பார்க்கிறது, மழையிலிருந்து கிடைக் கும் நீரைத் தவிர வேறந்த நீரையும் அது பருகுவதில்லை, அதைப் போன்று இருங்கள். புனிதமாக இருப்பதற்காக நடத் தும் போராட்டத்தில் அழியவும் தயாராக இருங்கள். ஆயிரம் தடவை மரணத்தை வரவேற்க வேண்டும். மனம் தளரா தீர்கள். அமுதம் கிடைக்கவில்லை என்பதற்காக விஷம் குடிக்கத்

தேவையில்லை. தப்ப முடியாது. மறு உலகைப்போல் இந்த உலகமும் அறிய முடியாததே.

தர்மம் ஒருபோதும் தோற்பதில்லை. ஒரு லட்சியத்தில் ஈடுபாடு கொள்வது அனுதாபத்தை உண்டாக்குகிறது, பிறரையும் அனுதாபத்துடன் அனுசரித்துப் போகச் செய்கிறது. சாதாரண மனிதர்களால் பகைவரை நேசிப்பது இயலாது. தாங்கள் வாழ்வதற்காக, இவர்கள் மற்றவர்களை விரட்டி விடுகிறார்கள். இரண்டையும் செய்தவர்கள் வெகுசிலர் மட்டுமே. அவர்களில் ஒருவர் ஜனகர். இத்தகையோர் துறவியரைவிட உயர்ந்தவர். தூய்மையும் துறவும் உருவான சுகதேவர் ஜனகரை குருவாக ஏற்றுக்கொண்டார். ஜனகர் சுகதேவரிடம், 'நீ பிறவியிலேயே சித்தன்; உனக்கு என்ன தெரியுமோ, உனக்கு உன்னுடைய தந்தை எவற்றைக் கற்றுக் கொடுத்தாரோ, அவை அனைத்தும் உண்மைதான் என்று நான் உறுதி கூறுகிறேன்' என்றார்.

பிரபஞ்சத்துவத்தில் தனித்துவமே படைப்பின் திட்டம். உணர்வை ஏற்படுத்துவதில் ஒவ்வோர் அணுவுக்கும் பங்கு உண்டு. மனிதன் தனியானவன், அதேவேளையில் பிரபஞ்சமயமானவனும்கூட. நமது தனித்துவத்தை உணரும்போதுதான், நமது தேசிய இயல்பையும் பிரபஞ்ச இயல்பையும் உணர்கிறோம். ஒவ்வொன்றும் ஓர் எல்லையற்ற வட்டம், அதன் மையம் எல்லா இடங்களிலும் இருக்கிறது, அதன் சுற்றுக் கோடு எங்கேயும் இல்லை. பயிற்சியின்மூலம் ஒருவன் எல்லாவற்றுள்ளும் தானே இருப்பதைக் காண முடியும். இதுவே இந்து மதத்தின் சாரம். ஒவ்வோர் உயிரிலும் தனது ஆன்மாவைக் காண்பவனே ரிஷி.

ஆன்மீக நியதிகளைக் கண்டுபிடித்தவர்கள் ரிஷிகள்.

ஜீவான்மாவை அத்வைதம் ஏற்பதில்லை. அது வெறும் மாயை என்கிறது. துவைதம் ஜீவான்மாவை ஏற்கிறது, பரம்பொருளிலிருந்து என்றென்றும் வேறானது ஜீவான்மா என்பது துவைதத்தின் கருத்து. இரண்டும் உண்மையே; ஒன்று நீரூற்றுக்குச் சென்றது, மற்றொன்று குளத்திற்குச் சென்றது. நமது உணர்வைப் பொறுத்தவரை நாமெல்லோரும் துவைதிகள் என்பது வெளிப்படை. ஆனால் அதற்கு அப்பால் நாமெல்லோரும் அத்வைதிகள். உண்மை இதுதான். 'ஒவ்வொருவரையும் உனது சகோதரனாக நேசி' என்று கிறிஸ்தவம் கூறுகிறது. அத்வைதமோ 'ஒவ்வொருவரையும் உன்னைப் போலவே நேசி' என்கிறது. சகோதரத்துவம் நீங்கி, பிரபஞ்ச சகோதரத்துவம்

வர வேண்டும். பிரபஞ்ச சகோதரத்துவம் என்றல்ல, பிரபஞ்ச ஆன்மத்துவமே நமது நோக்கம். பேரின்பக் கொள்கையும் அத்வைதத்தில் அடங்கும்.

'ஸோஹம், நானே அவன்' தொடர்ந்து இதைச் சிந்தியுங்கள். முதலில் நீங்கள் முயற்சி செய்து சிந்திக்க வேண்டும், பிறகு அது தானாகவே வரும். அது நரம்புவரை ஊடுருவிச் செல்லும். மீண்டும்மீண்டும் சிந்திப்பதன்மூலம் நமது நரம்புகளில்கூட இந்த எண்ணம் சென்று படிய வேண்டும்.

அல்லது, முதலில் உங்கள் உணர்வில் நிறைந்துள்ள துவைதத்தில் ஆரம்பியுங்கள். இரண்டாவது கட்டம் விசிஷ்டாத்வைதம்: 'நான் உன்னில் இருக்கிறேன். நீ என்னில் இருக்கிறாய். எல்லாம் கடவுளே'. இதுதான் கிறிஸ்துவின் போதனை.

மிக உயர்ந்த அத்வைதத்தை நடைமுறை வாழ்க்கையில் கொண்டுவர முடியாது. விசிஷ்டாத்வைத நிலையில்தான் அத்வைதம் நடைமுறையில் செயல்பட முடியும். ஒரு பெரிய வட்டம், அதிலிருந்து வேறுபட்ட சிறிய வட்டம், இந்த இரண்டு வட்டங்களையும் இணைத்து நிற்பது பக்தி—இது துவைதம். பெரிய வட்டம், அதனுள் சிறிய வட்டம், சிறிய வட்டத்தை இயங்கச் செய்வது பெரிய வட்டம்—இது விசிஷ்டாத்வைதம். சிறிய வட்டம் விரிந்துவிரிந்து பெரிய வட்டத்தில் ஐக்கியமாகிறது—இது அத்வைதம். அத்வைதத்தில், 'நான்' என்பது இறைவனில் மறைகிறது. இறைவன் இங்கே உள்ளார், அங்கே உள்ளார், நானே இறைவன்.

* * *

பக்தியைப் பெறுவதற்கான ஒரு வழி, இறைவனின் திருநாமத்தைத் திரும்பத்திரும்பக் கூறுவது. மந்திரங்கள் சொற்கள்தான். எனினும் அவற்றை மீண்டும்மீண்டும் சொல்வதற்குப் பலன் உள்ளது. ஜலங்கிமான் செட்டியின் சக்திகளெல்லாம் மந்திர ஜபம் செய்ததால், அதாவது சில சடங்குகள் செய்து சில சொற்களை ஜபித்ததால் ஏற்பட்டவை. பண்டைய போர்களில் ஆயுதங்களுக்கும் அம்புகளுக்கும் இருந்த சக்திகளெல்லாம் மந்திரங்களிலிருந்து வந்தவையே. நம்முடைய சாஸ்திரங்கள் இந்தக் கருத்தை ஒப்புக்கொள்கின்றன. இந்தச் சாஸ்திரங்கள் எல்லாமே கற்பனை என்றுகொள்வது வெறும் மூடத்தனம்.

பக்தி ஏற்பட வேண்டுமானால் மகான்களின் நட்பை நாடு. இதை, கிறிஸ்துவின் வழியில் (Imitation of Christ) போன்ற

நூல்களைப் படி. இறைவனின் பெருமைபற்றி எப்போதும் சிந்தனை செய்.

பக்தி பெறும் வழியை மட்டும்தான் வேதங்கள் கூறுகின்றன என்பதில்லை; இந்த உலகில் நன்மை, தீமைகளை அடைவதற்கான வழிகளையும் கூறுகின்றன. உங்களுக்கு எது வேண்டுமோ அதை எடுத்துக் கொள்ளலாம்.

பக்தியும் பக்தர்களும் நிறைந்த நாடு வங்காளம். ஜகன்னாதர் கோயிலில் விக்கிரகத்தைப் பார்ப்பதற்காகச் சைதன்யர் வழக்கமாக ஏறி நிற்கும் கல், அவர் அன்பாலும் பக்தியாலும் உகுத்த கண்ணீரால் தேய்ந்துவிட்டது. அவர் துறவு மேற்கொண்டபோது, தமது நாக்கில் சர்க்கரையை வைத்து அதைச் சிறிதுநேரம் கரையாமல் காட்டியதன்மூலம் தமக்குள்ள தகுதியை குருவிற்கு வெளிப்படுத்தினார். தாம் பக்தியினால் பெற்ற உள்ளுணர்வுச் சக்தியின் ஆற்றலால் அவர் பிருந்தாவனத்தைக் கண்டுபிடித்தார்.

உங்களுக்கு வாழ்க்கை வழிகாட்டியாக இருக்கச் சிலவற்றைக் கூறுகிறேன். இந்தியாவிலிருந்து வருபவற்றை எல்லாம் உண்மையென்று கொள்ளுங்கள், நம்பாமல் இருப்பதற்குத் தகுந்த காரணங்கள் காணும்வரை நம்புங்கள். ஐரோப்பாவிலிருந்து ஏதாவது வந்தால், அதை நம்புவதற்குச் சரியான காரணங்கள் கிடைக்கும்வரை பொய்யென்றே கருதுங்கள்.

ஐரோப்பியர்களின் ஏமாற்று வித்தைகளை நம்பி ஏமாந்து போகாதீர்கள். நீங்களாகவே சிந்தியுங்கள். ஒரே ஒரு குறை உங்களிடம் உள்ளது: நீங்கள் அடிமைகள், ஐரோப்பியர்கள் என்ன செய்தாலும் அதை நீங்கள் அப்படியே பின்பற்றுகிறீர்கள். மனம் வலுவற்றிருப்பதன் அடையாளம் இது.

சமுதாயம் தனக்கு வேண்டிய சாதனங்களை எங்கிருந்து வேண்டுமானாலும் பெறலாம், ஆனால் அது சொந்த இயல்பிற்கு ஏற்பத்தான் வளர வேண்டும்.

புதிய பழக்கத்தைக் கண்டு அதிர்ச்சியடைவது மூடநம்பிக்கையின் சிகரம், நரகத்திற்கு இட்டுச்செல்கின்ற முதல் பாதை. அது நம்மை மூடநம்பிக்கைக்கும் மதவெறிக்கும் ஆளாக்கிவிடும். உண்மையே சொர்க்கம், மூடநம்பிக்கையே நரகம். ❑

## பொன்மொழிகள்

1. இயற்கையை வெல்வதற்கே மனிதன் பிறந்திருக்கிறான், அதற்குப் பணிந்து போவதற்கல்ல.

2. உன்னை உடம்பாக நினைக்கும்போது உலகிலிருந்து நீ வேறுபடுகிறாய்; உன்னை உயிராக நினைக்கும்போது நிலையான பேரொளிப் பிழம்பின் பொறி ஆகிறாய்; நீ ஆன்மா என்று எண்ணும்போது அனைத்தும் ஆகிறாய்.

3. சங்கல்பம் சுதந்திரமானது அல்ல, காரிய காரணங்களால் கட்டுண்ட நிகழ்ச்சியே அது. ஆனால் சுதந்திரமான ஒன்று ச்ங்கல்பத்திற்குப் பின்னால் இருக்கிறது.

4. நன்மையிலும் தூய்மையிலும் வலிமை உள்ளது.

5. கடவுளின் தோற்றமே உலகம்.

6. நீ உன்னை நம்புவதற்கு முன் கடவுளை நம்ப முடியாது.

7. நாம் உடம்பு என்று எண்ணும் மனமயக்கமே தீமையின் வேர். 'முதற்பாவம்' (Original Sin) என்ற ஒன்று உண்டானால் அது இதுவே.

8. எண்ணம் ஜடத்தால் உண்டானது என்று ஒரு பிரிவு கூறுகிறது. ஜடம் எண்ணத்தால் ஆனது என்று மற்றொரு பிரிவு கூறுகிறது. இரண்டும் தவறு. எண்ணமும் ஜடமும் சேர்ந்தே இருக்கின்றன. இவை இரண்டும் மூன்றாவதொரு பொருளிலிருந்து தோன்றியவை.

9. ஜடத்தின் அணுக்கள் வெளியில் (Space) சேர்வதுபோல், மன அலைகள் காலத்தில் சேர்கின்றன.

10. கடவுளை விளக்குவது அரைத்ததையே அரைப்பது போன்றது. ஏனெனில் அவரை மட்டுமே நாம் அறிவோம்.

11. மிருகத்தை மனிதனாகவும், மனிதனைக் கடவுளாகவும் உயர்த்தும் கருத்தே மதம்.

12. அக இயற்கையைப் பெரிய அளவில் சித்தரிப்பதே புற இயற்கை.

13. நோக்கமே நீ செய்யும் வேலையின் அளவுகோல். நீ கடவுளே என்பதைவிட, எவ்வளவு தாழ்ந்த மனிதனும் கடவுளே என்பதைவிட உயர்ந்த நோக்கம் வேறு எது இருக்க முடியும்?

14. மன உலகில் சாட்சியாக இருப்பவன் மிகவும் பலவானாகவும், விஞ்ஞானரீதியாகப் பயிற்சி பெற்றவனாகவும் இருக்க வேண்டும்.

15. மனமே எல்லாம், எண்ணமே எல்லாம் என்று நம்புவது சற்று உயர்வான உலோகாயதம் மட்டுமே.

16. இந்த உலகம் பெரியதொரு பயிற்சிக் கூடம். நம்மை வலிமைப் படுத்திக் கொள்வதற்கே நாம் இங்கு வந்திருக்கிறோம்.

17. ஒரு செடி வளர நீ என்ன செய்ய முடியுமோ, அதைத் தான் ஒரு குழந்தைக்குக் கற்பிப்பதிலும் செய்ய முடியும். மறைமுகமாக மட்டுமே எதுவும் செய்ய இயலும், அதாவது உதவி செய்யத்தான் உன்னால் முடியும். கல்வி என்பது உள்ளிருந்து வெளிப்படுவது; அது, தானே தன் இயற்கையை விரிவாக்குகிறது. தடைகளை மட்டுமே நீ விலக்க முடியும்.

18. ஒரு பிரிவை ஆரம்பித்த உடனே பிரபஞ்ச சகோதரத் துவத்தை நீ எதிர்க்கிறாய் என்பது பொருள். எல்லோரும் சகோதரர்களே என்று உண்மையாக உணர்பவர்கள் அதிகம் பேசுவதில்லை; அவர்களது செயலே முழங்குகிறது.

19. உண்மையை ஆயிரம் விதமாகக் கூறலாம், அவை ஒவ்வொன்றும் உண்மையே.

20. நீயே உன்னுள்ளிருப்பதை வெளிவரச் செய்ய வேண்டும். ஒருவராலும் உனக்குக் கற்பிக்க முடியாது, யாராலும் உன்னை ஆன்மீகவாதியாக்க முடியாது. உன் ஆன்மாவைத் தவிர வேறெந்த ஆசிரியரும் இல்லை.

21. முடிவற்ற சங்கிலியில் சில வளையங்களை விளக்க முடியுமானால், அதே முறையில் அனைத்தையும் விளக்க முடியும்.

22. உலகின் எதனாலும் அலைக்கழிக்கப்படாதவன் மரண மில்லாத நிலையை அடைந்துவிட்டான்.

23. உண்மைக்காக எதையும் துறக்கலாம், ஆனால் எதற்காகவும் உண்மையைத் துறக்கக் கூடாது.

24. உண்மையைத் தேடுவது வலிமையின் அடையாளம்; பலவீனர்களுடைய வழியல்ல அது, பார்வையற்றோர் தப்பித் தடவிச் செல்வதல்ல அது.

25. கடவுள் மனிதனாகியுள்ளார், மனிதன் மீண்டும் கடவுள் ஆவான்.

26. மனிதன் சாகிறான், சொர்க்கத்திற்குப் போகிறான் என்பதெல்லாம் குழந்தைத்தனமான பேச்சு. நாம் ஒருபோதும்

வருவதுமில்லை, போவதுமில்லை. நாம் இருக்கும் இடத்திலேயே இருக்கிறோம். இருந்த, இருக்கின்ற, இருக்கப்போகின்ற எல்லா ஆன்மாக்களும் ஒரே புள்ளியில்தான் உள்ளன.

27. இதயப் புத்தகம் யாருக்குத் திறந்துவிட்டதோ அவனுக்கு மற்ற நூல்கள் தேவையில்லை. அவை நம்முள் ஒரு தூண்டுதலை ஏற்படுத்தும், அவ்வளவுதான்; அவை பிறரது அனுபவங்கள் மட்டுமே.

28. எல்லோரிடமும் அன்பாயிரு. துன்பப்படுபவர்களிடம் பரிவுகொள். எல்லா உயிர்களையும் நேசி. யார்மீதும் பொறாமைப் படாதே. பிறரது குற்றங்களைக் காணாதே.

29. மனிதன் ஒருபோதும் இறப்பதுமில்லை, பிறப்பதுமில்லை. உடல்களே சாகின்றன, மனிதன் ஒருபோதும் சாவதில்லை.

30. ஒருவனும் ஒரு மதத்தில் பிறப்பதில்லை; ஆனால் அனைவரும் ஏதாவது ஒரு மதத்திற்காகப் பிறக்கின்றனர்.

31. உண்மையில் இருப்பது ஒரே ஆன்மாதான், மற்றவையெல்லாம் அதன் தோற்றங்களே.

32. பாமரர்கள், தைரியசாலிகளான ஒருசிலர் என்று பக்தர்களை இருவகையாகப் பிரிக்கலாம்.

33. இங்கே, இப்போதே நிறைநிலையை அடைய முடியாதென்றால், வேறெந்த மறு வாழ்க்கையிலும் அடைவோம் என்பதற்கு எந்த உத்தரவாதமும் இல்லை.

34. ஒரு களிமண் கட்டியை நன்றாகத் தெரிந்துகொண்டால், எல்லா களிமண்ணையும் தெரிந்தவன் ஆவேன். இது தத்துவங்களின் அறிவு. ஆனால் களிமண் பல்வேறு வகைகளில் பயன்படுத்தப்படுகிறது. நீ உன்னை அறிந்துகொண்டால் அனைத்தையும் அறிவாய்.

35. என்னைப் பொறுத்தவரையில், வேதங்களில் பகுத்தறிவுக்கு ஏற்புடைய அனைத்தையும் ஏற்றுக்கொள்வேன். வேதங்களில் சில பகுதிகள் முரண்படுவதுபோல் தோன்றுகின்றன. அவை மேலைநாட்டினர் அருள் வெளிப்பாடு (Inspired) என்கிறார்களே, அத்தகைய ஒன்றாகக் கருதப்படுவதில்லை. வேதங்கள் இறையறிவு அனைத்தின் மொத்தமாக, அனைத்தறிவாகக் கொள்ளப்படுகின்றன. இந்த அறிவு ஒவ்வோர் யுகத்தின் ஆரம்பத்திலும் வெளிப்படுகிறது, யுகத்தின் முடிவில் மறைந்து நுண்ணுருவைப் பெறுகிறது. மீண்டும் யுகம் தொடங்கும்போது இந்த அறிவும் அதனுடன் வெளிப்படுகிறது.

இதுவரை சரிதான். ஆனால் வேதங்கள் என்று கூறப்படும் இந்த நூல்கள் மட்டுமே இறையறிவு என்பது நியாயமற்றது. வேதங்களில் பகுத்தறிவுக்கு ஏற்புடைய பகுதியே வேதம், மற்றவையல்ல என்று மனு ஓரிடத்தில் கூறுகிறார். நமது தத்துவ அறிஞருள் பலரும் இதை ஏற்றுக் கொள்கின்றனர்.

36. உலக சாஸ்திரங்களுள் வேதங்கள் மட்டுமே, வேதங் களைக் கற்பதுகூட இரண்டாம் பட்சமானவை என்று கூறு கின்றன. 'எதனால் மாற்றமில்லாத பொருளை உணர்கிறோமோ' அதுவே உண்மைக் கல்வி. அது படிப்பல்ல, நம்பிக்கையல்ல, பகுத்தறிவும் அல்ல; அது உணர்வுகடந்த நிலை அல்லது சமாதி.

37. நாம் ஒரு காலத்தில் தாழ்ந்த மிருகங்களாக இருந்தோம். அவை நம்மிலிருந்து வேறுபட்டவை என்று நினைக்கிறோம். 'உலகம் நமக்காகவே படைக்கப்பட்டது' என்று மேலை நாட்டினர் சொல்வதாகக் கேட்டிருக்கிறேன். புலிகளால் புத்தகம் எழுத முடிந்தால் அவை, 'மனிதன் நமக்காகவே படைக்கப்பட் டான், நமக்கு எளிதில் பிடிபடாமல் வாழ்வதால் அவன் பெரும்பாவியான மிருகம்' என்று எழுதி வைக்கும்! இன்று உன் காலின்கீழ் நெளிகின்ற புழுவும் கடவுளாக மாறக் கூடியதே.

38. நியூயார்க்கில் சுவாமிஜி பேசினார்: 'எங்கள் நாட்டுப் பெண்கள் உங்களைப் போன்ற அறிவு பெற வேண்டும்; ஆனால் அதற்காகத் தூய வாழ்வை இழக்க வேண்டும் என்றால் அந்த அறிவு தேவையில்லை. உங்கள் அறிவையெல்லாம் மெச்சு கிறேன்; ஆனால் தீமையை ரோஜாப்பூக்களால் மறைத்து, அதை நன்மை என்று நீங்கள் வற்புறுத்துவதை வெறுக்கிறேன். அறிவுதான் மிக உயர்ந்த நன்மை என்பதல்ல. ஒழுக்கம், ஆன்மீகம் இவற்றிற்காகவே நாங்கள் முயல்கிறோம். எங்கள் பெண்கள் உங்களைப்போல் படித்தவர்கள் அல்ல, ஆனால் அவர்கள் தூய்மையில் சிறந்தவர்கள்.

'ஒவ்வொரு பெண்ணும் தன் கணவனைத் தவிர பிற ஆண்களைத் தன் பிள்ளைகளாகப் பார்க்க வேண்டும். ஒவ்வோர் ஆணும் தன் மனைவியைத் தவிர மற்ற பெண்களைத் தன் தாயாகக் காண வேண்டும். நீங்கள் பெண்களிடம் காட்டும் மரியாதை இருக்கிறதே, அதைக் காணும்போது எனக்கு வெறுப்பே மிகுகிறது. பால்வேற்றுமையை மறந்து, மனிதர்கள் என்னும் அடிப்படைமீது இருபாலரும் சந்திக்கக் கற்றுக்

கொள்ளும்போதுதான் இந்த நாட்டுப் பெண்கள் உண்மையாக முன்னேறுவார்கள். அதுவரை அவர்கள் விளையாட்டுப் பொருட்கள், அதற்குமேல் எதுவும் அல்ல. இவை எல்லாம் தான் விவாகரத்திற்குக் காரணமாகின்றன. ஆண்கள் குனிந்து பெண்களுக்கு நாற்காலி அளித்து உபசரிக்கின்றனர்; அவர்களின் அழகைப் புகழ்கின்றனர்: 'அப்பப்பா, உன் கண்கள் எவ்வளவு அழகாக இருக்கின்றன!' இதற்கு அவர்களுக்கு உரிமை ஏது? ஆணுக்கு அவ்வளவு தைரியமா? உங்கள் பெண்கள் இதை அனுமதிக்கலாமா? இவை மனிதனின் மோசமான குணத்தை வளர்க்கின்றன, உயர்ந்த நோக்கங்களை அல்ல.

'நான் ஆண், நான் பெண்' என்னும் எண்ணங்களைவிட்டு, நாம் மனிதர்கள், அன்புகாட்டவும் உதவி புரியவும் பிறந்திருக்கிறோம் என்று நினைக்க வேண்டும். ஒரு வாலிபனும் ஓர் இளம்பெண்ணும் தனியிடத்தில் இருக்க நேர்ந்தால், அவன் அவளது அழகை வர்ணிக்கிறான். அவன் மணமாகுமுன் இருநூறு பெண்களின் அழகையாவது புகழ்ந்திருப்பான். சீ! நான் திருமணம் செய்யும் வகுப்பைச் சேர்ந்தவனாக இருந்தால், இவ்வளவு தொல்லையில்லாமல் அன்பிற்குரிய மனைவி ஒருத்தியையே தேர்ந்தெடுத்திருப்பேன்!

'நான் இந்தியாவில் இருந்தபோது இவற்றை மேலோட்டமாகவே பார்த்தேன்; இவை சரிதான், வெறும் வேடிக்கை என்று கூறப்பட்டதை நம்பினேன். இப்போது நேரில் பார்த்த போது அவை சரியல்ல என்பது தெரிய வருகிறது. அவை தவறு, மேலை நாட்டினராகிய நீங்கள் கண்மூடித்தனமாக இதைச் சரி என்கிறீர்கள். மேலை நாடுகள் இளமையும், முட்டாள்தனமும், சலன புத்தியும், நிறைந்த செல்வமும் உடையவை. அவற்றின் பிரச்சினையும் இவைதான். இந்த விஷயங்களுள் ஒன்றுகூட எவ்வளவோ தீமை விளைவிக்கும்! மூன்று நான்கு சேரும்போதோ, மிகவும் எச்சரிக்கையுடன் இருங்கள்.'

எல்லோரிடமும் கண்டிப்பாயிருந்த சுவாமிஜி பாஸ்டன் நகரில் மிகக் கடுமையாக இருந்தார்:

'அனைத்திலும் மோசமானது பாஸ்டன். அங்குள்ள பெண்கள் பைத்தியங்கள்; நிலையான புத்தியற்றவர்கள்; எப்போதும் புதியவற்றின், வினோதங்களின் பின்னால் ஓடுபவர்கள்.'

39. தங்கள் நாகரீகத்தைப் பற்றி இவ்வளவு பெருமையடித்துக் கொள்கின்ற நாட்டில் (அமெரிக்காவில்) என்ன ஆன்மீகத்தை எதிர்பார்க்க முடியும்?

40. 'இந்தப் பிறவி, மறு பிறவி என்னும் வார்த்தைகள் குழந்தைகளைத்தான் பயமுறுத்த முடியும். எல்லாம் ''இந்தப் பிறவி''தான். இங்கேயே, இந்த உடம்பில் இருந்துகொண்டே இறைவனில் வாழவும், அவனில் இயங்கவும் வேண்டுமானால், சுயநலமும் மூட நம்பிக்கையும் முற்றிலும் அகல வேண்டும். அத்தகைய மனிதர்கள் இந்தியாவில் உள்ளனர். இங்கே (அமெரிக்காவில்) இருக்கிறார்களா? உங்கள் பாதிரிகள் ''கனவு'' காண்பவர்களைப் பற்றிக் குறை கூறுகின்றனர். ஆனால் இன்னும் அதிகமாகக் ''கனவு'' காண்பவர்கள் இங்கிருந்தால் இந்த நாட்டு மக்கள் பயன் பெறுவார்கள். ''கனவு'' காண்பதற்கும், பத்தொன்பதாம் நூற்றாண்டின் பெருமை பேசுவதற்கும் அதிக வேறுபாடு உள்ளது. உலகமெங்கும் நிறைந்திருப்பது இறைவனே தவிர பாவம் அல்ல. நாம் ஒருவருக்கொருவர் உதவி செய்வோம், ஒருவரையொருவர் நேசிப்போம்.

41. பொன்னையோ பெண்ணையோ புகழையோ விரும்பாமல் என் குருதேவரைப்போல் நானும் உண்மைத் துறவியாக இறக்க வேண்டும். இந்த மூன்றிலும் மிகவும் துரோகம் செய்வது புகழாசையே.

42. பழிவாங்குவதைப் பற்றி நான் ஒருபோதும் பேசவில்லை, வலிமையைப் பற்றியே பேசியிருக்கிறேன். கடலிலிருந்து நம்மீது தெறிக்கின்ற ஒரு நீர்த்துளியை நாம் பழிவாங்குவோமா? ஆனால் கொசுவிற்கு அது அபாயம் விளைக்கக் கூடியது!

43. இது (அமெரிக்கா) உயர்ந்த நாடு. ஆனால் இங்கு வாழ நான் விரும்பவில்லை. அமெரிக்கர்கள் பணத்தை மிகப் பெரிதாக நினைக்கின்றனர். மிக உயர்ந்த இடத்தை அவர்கள் பணத்திற்கே அளிக்கின்றனர். நீங்கள் எவ்வளவோ கற்க வேண்டியுள்ளது. இந்தியாவைப்போல் வயது முதிர்ந்த நாடாகும் போது இந்த நாட்டினருக்கும் அறிவு முதிரும்.

44. பழைய துணிகளைக் களைவதுபோல் இந்த எனது உடலை விட்டு வெளியேறுவதை நான் விரும்பலாம். ஆனாலும் என் பணி ஓயாது. உலகெங்கும் வாழும் மனிதர்களைத் தட்டி யெழுப்பிக் கொண்டே இருப்பேன். தான் இறைவனுடன் ஒன்றுபட்டிருப்பதை உலகம் உணரும்வரை என் பணி தொடர்ந்துகொண்டே இருக்கும்.

45. இன்று நான் எதுவாக இருக்கிறேனோ, அது என் குருதேவர் ஸ்ரீராமகிருஷ்ணரால்தான். உலகமே அவரால் ஒருநாள் உன்னதம் பெறும். அவர் அவதரித்து, அனைத்திலும் நிலவும்

அற்புத ஒருமையை அனுபவித்தார். இந்துமதம், இஸ்லாம், கிறிஸ்தவம் அனைத்திலும் அந்த ஒருமையைக் கண்டார். அதையே போதித்தார்.

46. சுவைப்புலனை அதன் விருப்பப்படி விட்டால், மற்ற புலன்களும் கடிவாளமின்றி ஓடும்!

47. ஞானம், பக்தி, யோகம், கர்மம் இவை முக்திக்கு அழைத்துச் செல்லும் நான்கு பாதைகள். தனக்கு மிகவும் ஏற்புடைய வழியையே ஒருவன் பின்பற்ற வேண்டும். இந்தக் காலத்தில் கர்மயோகத்தை வலியுறுத்த வேண்டும்.

48. மதம் என்பது கற்பனையல்ல, அது நேரடி அனுபவம். ஆன்மாவின் பேரொளியில் ஒரு சிறு பகுதியையாவது பார்த்தவன் பல நூல்களைக் கற்ற பண்டிதனைவிட மேலானவன்.

49. சுவாமிஜி ஒருவரை மிகவும் புகழ்ந்தார். அருகில் இருந்த ஒருவர் இதைக் கேட்டு, 'ஆனால் அவர் உங்களிடம் நம்பிக்கை வைக்கவில்லையே!' என்றார். சுவாமிஜி உடனே, 'அப்படி நம்பவேண்டுமென்று ஏதாவது சட்டம் இருக்கிறதா என்ன? அவர் நல்ல காரியம் செய்கிறார், எனவே புகழத் தக்கவர்' என்று கூறினார்.

50. உண்மையான மதத்தின் எல்லைக்குள் நூலறிவிற்கு நுழைய உரிமை இல்லை.

51. ஒரு மதப் பிரிவில், பணக்காரர்களை ஆதரிக்கும் வழக்கம் என்று ஏற்படுகிறதோ அன்றே அதன் வீழ்ச்சி ஆரம்பமாகிறது.

52. நீ ஏதாவது தீமை செய்ய விரும்பினால், உன் பெரியோர்களின் முன்னிலையில் அதைச் செய்!

53. குருவின் அருளால் சீடன் நூல்களைக் கற்காமலேயே அறிஞன் ஆகிறான்.

54. பாவம், புண்ணியம் என்று எதுவும் இல்லை. உள்ளதெல்லாம் அறியாமை மட்டுமே. இரண்டற்ற ஒன்றை உணர்வதால் இந்த அறியாமை விலகுகிறது.

55. மத இயக்கங்கள் கூட்டமாக எழுகின்றன, ஒவ்வொன்றும் மற்றவற்றைவிட ஓங்கி நிற்க முற்படுகின்றன. பொதுவாக, முடிவில் ஒன்று உண்மையான வலிமையுடன் விளங்கும், காலப் போக்கில் அது சமகால இயக்கங்களை எல்லாம் தன்னுள் அடக்கி விடுகிறது.

56. ராமநாதபுரத்தில் சுவாமிஜி கூறினார்: 'ஸ்ரீராமன் பரமாத்மா, சீதை ஜீவாத்மா. ஒவ்வோர் ஆண் மற்றும்

பெண்ணின் உடலே இலங்கை. உடம்பில் கட்டுண்ட அதாவது இலங்கைத் தீவில் சிறைப்பட்ட, ஜீவாத்மா, ஸ்ரீராம னுடன், பரமாத்மாவுடன் இணையவே எப்போதும் விரும்பு கிறது. ஆனால் அசுரர்கள் இதை அனுமதிப்பதில்லை. அசுரர்கள் சில குணங்களின் வடிவங்கள்: விபீஷணன் சத்வ குணம், ராவணன் ரஜோ குணம், கும்பகர்ணன் தமோ குணம். சத்வ குணம் என்றால் நன்மை; காமமும் ஆசைகளுமே ரஜோ குணம்; தமோ குணம் என்பது இருள், மயக்கம், சோம்பல், பொறாமை மற்றும் இவை போன்றவை. இந்த மூன்று குணங்களும், இலங்கையில் இருக்கும் சீதையை (உடலில் கட்டுண்ட ஜீவாத் மாவை) ராமனுடன் (பரமாத்மாவுடன்) சேர விடுவதில்லை. சிறைப்பட்ட சீதை தன் இறைவனோடு இணைய விரும்பும் போது அனுமன் (குரு) வந்து சேர்ந்து, இறைவனின் மோதிரத்தை அவளுக்குக் காண்பிக்கிறான். இதுவே எல்லா மனமயக்கங் களையும் அழிக்கின்ற பிரம்மஞானம், உயரிய அறிவு. இவ்வாறு சீதைக்கு ஸ்ரீராமனுடன் ஒன்றிவிட அதாவது, ஜீவாத்மா பரமாத் மாவுடன் ஐக்கியமாக வழி தெளிவாகிறது.'

57. உண்மையான கிறிஸ்தவன் உண்மையான இந்துவே, உண்மையான இந்து உண்மையான கிறிஸ்தவனே.

58. எல்லா நல்ல சமுதாய மாற்றங்களும் உள்ளே செயல் படுகின்ற ஆன்மீகச் சக்திகளின் வெளிப்பாடே. இவை வலிமை யாக ஒழுங்குபடுத்தப்பட்டவையாக இருக்குமானால் சமு தாயமும் அத்தகைய அமைப்பைப் பெறும். ஒவ்வொருவனும் தன் முக்திக்குத் தானே முயல வேண்டும், வேறு வழி இல்லை. நாடுகளின் விஷயமும் அப்படியே. ஒவ்வொரு நாடும் இயங்கு வதற்கு அந்த நாட்டில் உள்ள பெரிய அமைப்புக்கள் இன்றியமை யாதவை. ஒரு நாடு மற்ற நாட்டின் அச்சில் உருமாற்றம் பெற முடியாது. மேலான அமைப்புக்கள் உருவாகும் வரை பழைய அமைப்புக்களை உடைக்கும் முயற்சி தீமையையே விளை விக்கும். வளர்ச்சி எப்போதும் நிதானமாகவே நடைபெறுகிறது.

எந்த அமைப்புமே நிறைநிலையை அடைந்தது அல்ல, அவற்றின் குறைபாடுகளைச் சுட்டிக்காட்டுவது மிக எளிது. ஒருவன் எந்த அமைப்பைச் சேர்ந்து வாழ்ந்தாலும், அவனது குறைபாடுகளை அகற்ற உதவுபவனே மனித இனத்தின் உண்மை யான நண்பன். தனி மனிதர் உயர்ந்தால் நாடும் அதன் அமைப்புக் களும் உயர்ந்தே தீரும். தீய பழக்கங்களையும் சட்டங்களையும் நல்லவர்கள் புறக்கணித்து விடுவார்கள். எழுத்தில் வராத,

அதேவேளையில் அதிக வலிமைமிக்க சட்டங்களாகிய அன்பு, இரக்கம், நேர்மை இவை அவற்றின் இடத்தில் அமரும். மிகக் குறைவான சட்ட நூல்கள், எந்த அமைப்பைப் பற்றியும் கவலைப்படாத நிலை—இத்தகைய நாடே மகிழ்ச்சியான நாடு. நல்லவர்கள் எல்லா நியதிகளையும் கடந்து, தங்கள் சக மனிதர்கள் எந்தச் சூழ்நிலையில் இருந்தாலும் அவர்கள் முன்னேற உதவுவார்கள்.

ஆகவே இந்தியாவின் கதிமோட்சம் தனி மனிதனின் வலிமையையும், அவன் தனக்குள் இருக்கும் தெய்வீகத்தை உணர்வதிலுமே இருக்கிறது.

59. உலகாயதம் விலகாமல் ஆன்மீகத்தை அடைய முடியாது.

60. கீதையின் முதல் அத்தியாயத்தை உருவகமாகக் கொள்ளலாம்.

61. அமெரிக்க பக்தர் ஒருவர், உரிய நேரத்தில் கப்பலைப் பிடிக்க முடியாதோ என்ற அச்சத்தால் பொறுமை இழந்து, ‘சுவாமிஜி, காலம் கடப்பது உங்களுக்குத் தெரியவில்லையா?’ என்று கேட்டார். அதற்கு சுவாமிஜி அமைதியாக, ‘இல்லை, நீங்கள் காலத்தில் வாழ்கிறீர்கள்; நாங்கள் நிலைபேற்றில் வாழ்கிறோம்!’ என்றார்.

62. நாம் எப்போதும் கடமையின் இடத்தில் உணர்ச்சிக் கனிவைத் (Sentiment) திணிக்கிறோம். பிறகு உண்மை அன்பைப் பின்பற்றுவதாக மார்தட்டிக் கொள்கிறோம்.

63. துறவு பூணும் வலிமை பெற வேண்டுமானால், உணர்ச்சி வசப் படுவதைக் கடக்க வேண்டும். உணர்ச்சி மிருகங்களுக்கு உரியது. விலங்கினம் முற்றிலும் உணர்ச்சியால் ஆனது.

64. சொந்தப் பிள்ளைகளுக்காகச் செய்கின்ற தியாகம் உயர்தரத் தியாகம் அல்ல. மனிதத் தாய் செய்வது போன்ற தியாகங்களை மிருகங்களும் இயல்பாகச் செய்கின்றன. அது உண்மையான அன்பின் அறிகுறி அல்ல, அது கண்மூடித் தனமான உணர்ச்சி.

65. பலவீனத்தைச் சக்திபோல், உணர்ச்சியை அன்புபோல், கோழைத்தனத்தை வீரம்போல் காட்டவே நாம் எப்போதும் முயன்று வருகிறோம்.

66. வீண் ஆடம்பரம், பலவீனம் முதலியவை தோன்றும் போது, ‘இது உனக்கு உகந்ததல்ல, உனக்கு இது தகாது’ என்று மனத்திற்குக் கூறு.

67. கணவன் ஒருபோதும் மனைவியை அவளுக்காகவே நேசித்ததில்லை; மனைவியும் கணவனை அவனுக்காகவே நேசித்ததில்லை. மனைவியில் இருக்கும் இறைவனிடமே கணவன் அன்பு காட்டுகிறான்; கணவனில் இருக்கும் இறைவனையே மனைவி அன்பு நேசிக்கிறாள். ஒவ்வொருவரிலும் இருக்கும் கடவுள்தான் இருவரிடையே கவர்ச்சியை ஏற்படுத்துகிறார். ஒவ்வொருவனிடமும், ஒவ்வொன்றிலும் இருக்கும் கடவுளே நம்மை அவன் அல்லது அதன்மீது அன்புகொள்ளச் செய்கிறார். இருக்கும் ஒரே அன்பு, கடவுளே.

68. ஆ! நீங்கள் மட்டும் உங்களை அறிந்துவிட்டால்...! நீங்கள் ஆன்மாக்கள், தெய்வங்கள். என்றாவது நான் தெய்வத்தை இழிவு செய்வதாகத் தோன்றுமானால், அது உங்களை மனிதரென்று சொல்லும்போதே.

69. எல்லோரிலும் இறைவன் உள்ளான், ஆன்மா இருக்கிறது; மற்றவையெல்லாம் கனவு, மனமயக்கம்.

70. ஆன்மீக வாழ்வில் நான் இன்பம் பெறவில்லை என்றால் அதற்காகப் புலன் வாழ்க்கையைத் தேட வேண்டுமா? அமுதம் கிடைக்கவில்லை என்பதற்காகச் சாக்கடைத் தண்ணீரையா விரும்புவது? சாதகப் பறவை மேகங்களிலிருந்து வரும் நீரை மட்டுமே அருந்தும்; உயரப் பறந்து 'தூய நீர், தூய நீர்' என்றே அது கூவுகிறது. எவ்வளவு பெரிய புயற்காற்றும் அது பறப்பதைத் தடை செய்வோ, பூமியில் இறங்கி நீர் அருந்தச் செய்யவோ முடியாது.

71. கடவுளை அறிய உதவும் எந்தப் பிரிவும் விரும்பத்தக்கதே. இறையனுபூதியே மதம்.

72. நாத்திகன் கொடையாளியாக இருக்கலாம், ஆன்மீகவாதியாக இருக்க முடியாது. ஆனால் ஆன்மீகவாதி கொடுக்கும் பண்பு உடையவனாக இருந்தாக வேண்டும்.

73. குரு ஆவதற்கென்று பிறந்தவர்களைத் தவிரப் பிறர் குரு ஆவதற்கு விரும்பி அழிந்து போகின்றனர்.

74. மிருகத் தன்மை, மனிதத் தன்மை, கடவுள் தன்மை இவற்றின் கலவையே மனிதன்.

75. 'சூடான பனிக்கட்டி', 'இருண்ட ஒளி' என்பது போன்ற பொருளற்ற சொல்லே 'சமுதாய முன்னேற்றம்' என்பதும். உண்மையில் 'சமுதாய முன்னேற்றம்' என்ற ஒன்று இல்லை!

76. பொருட்களில் மாற்றம் செய்வதால் அவை முன்னேறுவதில்லை, நாமே முன்னேறுகிறோம்.

77. என் சகோதரர்களுக்கு நான் உதவுவேனாக, அதுவே நான் விரும்புவது.

78. நியூயார்க்கில் ஒரு கேள்விக்கு சுவாமிஜி பதிலளித்தார்: 'இல்லை, ரகசிய வித்தை எதையும் நான் நம்பவில்லை. உண்மை யற்ற ஒரு பொருளும் இருக்க முடியாது. அதிசய நிகழ்ச்சிகளும் இயற்கையானவைதான். அவை விஞ்ஞான ரீதியில் அமைந்தவை என்பது எனக்குத் தெரியும், எனவே எனக்கு அவை ரகசிய வித்தை அல்ல. ரகசிய சங்கங்களில் எனக்கு நம்பிக்கை இல்லை. அவை ஒரு நன்மையும் செய்வதில்லை, செய்யவும் முடியாது.'

79. ஆராய்பவன், உணர்ச்சி வசப்படுபவன், யோகப்போக்கு உடையவன், செயல் புரிபவன் என நான்குவகை மனிதர்கள் உள்ளனர். இவர்கள் ஒவ்வொருவருக்கும் உரிய வழிபாட்டு முறைகளை வகுக்க வேண்டும். 'இந்த வழிபாட்டு முறை எனக்குத் தேவையில்லை. அறிவுபூர்வமானதை, தத்துவ ரீதி யானதைத் தாருங்கள், அதை ஏற்றுக் கொள்கிறேன்' என்கிறான் ஆராய்பவன். எனவே அவனுக்கு அறிவுபூர்வமான, தத்துவரீதி யிலான வழிபாட்டு முறையை அளிக்க வேண்டும். செயல் புரிபவனோ, 'தத்துவவாதியின் வழிபாட்டை நான் விரும்ப வில்லை. என் சகோதரர்களுக்காகப் பாடுபடும் வேலையைத் தாருங்கள்' என்கிறான். அவனுக்குச் செயலே வழிபாட்டு முறை யாக வகுக்கப்படுகிறது. யோக நெறியாளனுக்கும் உணர்ச்சி வசப்படுபவனுக்கும் உரிய வழிபாட்டு முறைகள் உள்ளன. இவர்கள் எல்லோருக்கும் தங்கள் நம்பிக்கைக்கு ஏற்ற அம்சங்கள் மதத்தில் உள்ளன.

80. உண்மைக்காக நான் வாழ்கிறேன். உண்மை ஒருபோதும் பொய்யுடன் இசைந்து செல்ல முடியாது. உலகனைத்தும் என்னை எதிர்த்தாலும், இறுதியில் உண்மையே வெல்லும்.

81. மிக உயர்ந்த மனிதநேயக் கருத்துக்கள் பாமரர்களின் கையில் சிக்குமானால், அதன் உடனடி விளைவு சீரழிவு. அறி வாற்றலும் புத்திவன்மையுமே எதையும் பத்திரமாகக் காக்க உதவுகின்றன. ஒரு சமுதாயத்தில், பண்பாடு மிக்கவர்களே மதத்தையும் தத்துவ ஞானத்தையும் மிகத் தூய்மையாகக் காப்பாற்றுவார்கள். இதுவே ஒரு சமுதாயத்தின் புத்தி நுட்ப நிலைகளுக்கு அறிகுறியாக விளங்குகிறது.

82. புதிய மதத்திற்கு உங்களை மாற்ற நான் வர வில்லை. உங்கள் மதத்தையே பின்பற்றுங்கள். மெதடிஸ்டைச் சிறந்த மெதடிஸ்டாக, ப்ரெஸ்பிடீரியனைச் சிறந்த

பிரெஸ்பிடீரியனாக, யூனிடேரியனைச் சிறந்த யூனிடேரியனாக ஆக்கவே நான் விரும்புகிறேன். உண்மையை வாழ்வது எப்படி, உங்களுள் உள்ள ஆன்ம ஒளியை வெளிப்படுத்துவது எப்படி என்பதைப் போதிக்கவே நான் விரும்புகிறேன்.

83. மகிழ்ச்சி தன் தலைமீது துயரக் கிரீடத்தை அணிந்தே மனிதனின் முன்னால் வருகிறது. மகிழ்ச்சியை வரவேற்பவன் துயரத்தையும் வரவேற்றேயாக வேண்டும்.

84. உலகை விட்டு, எல்லாம் துறந்து, உணர்ச்சி வேகங்களை அடக்கி, அமைதிக்காக ஏங்குபவன் சுதந்திரன், பெரியவன். அரசியல் துறையிலோ சமூகத் துறையிலோ ஒருவன் சுதந்திரம் பெறலாம், ஆனால் அவன் தன் உணர்ச்சிகளுக்கும் ஆசைக்கும் அடிமையாக இருப்பானானால் உண்மையான சுதந்திரத்தின் தனி சுகத்தை அனுபவிக்க முடியாது.

85. பிறருக்கு நன்மை செய்வது புண்ணியம், தீமை செய்வது பாவம். வலிமையும் ஆண்மையும் புண்ணியம், பலவீனமும் கோழைத்தனமும் பாவம். சுதந்திரம் புண்ணியம், சார்ந்திருப்பது பாவம். பிறரை நேசிப்பது புண்ணியம், வெறுப்பது பாவம். கடவுளையும் தன் ஆன்மாவையும் நம்புவது புண்ணியம், சந்தேகிப்பது பாவம். ஒருமையை அறிவது புண்ணியம், வேறுபாடு காண்பது பாவம். புண்ணியம் பெறும் வழியையே சாஸ்திரங்கள் காட்டுகின்றன.

86. உண்மையைப் பகுத்தறிவின்மூலம் புத்தி அறிகிறது, உடனே உணர்ச்சியின் ஊற்றுக்கண்ணாகிய இதயத்திலும் அது அனுபவமாகிறது. இவ்வாறு மனமும் இதயமும் ஒரே நொடியில் ஒளி பெறுகின்றன. அப்போதுதான் உபநிடதத்தில் கூறியது போல், 'இதயத்தின் முடிச்சு அறுபடுகிறது, சந்தேகங்கள் அனைத்தும் அகல்கின்றன.'

பண்டைய நாளில் இந்த அறிவும் உணர்ச்சியும் ஒரே நேரத்தில் முனிவர்களின் இதயத்தில் மலர்ந்தது. அப்போது, மிக உயர்ந்த உண்மை, கவிதை ஆயிற்று. வேதங்களும் மற்ற சாஸ் திரங்களும் எழுதப்பட்டன. இதனால்தான் அவற்றைப் படிக் கும்போது, இணைபாதைகளில் செல்பவையான உணர்ச்சியும் அறிவும் கடைசியாக அங்கே சந்தித்து ஒன்றிவிட்டதுபோல் வும் அவை பிரிக்க இயலாதவை போலவும் காண்கிறோம்.

87. பிரபஞ்சம்தழுவிய அன்பு, சுதந்திரம், ஆண்மை, சுய நலமற்ற உதார குணம் போன்ற லட்சியங்களை அடைவதற் கான பல்வேறு வழிகளை வெவ்வேறு மத சாஸ்திரங்கள்

காட்டுகின்றன. ஒவ்வொரு மதப் பிரிவும் புண்ணியத்தையும் பாவத்தையும் விளக்குகின்றன. அவை பொதுவாக நன்மை, தீமை என்ற கருத்திலேயே வேறுபடுகின்றன. லட்சியத்தை நாடுவதை விட்டுவிட்டு, தீமையை விலக்கி நன்மையை அடையும் வழி பற்றியே ஒன்றுடன்ஒன்று போரிடுகின்றன. ஏறத்தாழ ஒவ்வொரு வழியும் உதவுபவைதான்; கீதை சொல்வதுபோல் (18.48) ‘நெருப்பு புகையால் சூழப்பட்டுள் ளதுபோல் எல்லா முயற்சிகளும் குறைகளால் சூழப்பட்டுள் ளன.’ ஆகவே எந்த வழியும் சற்று குறைபாடுள்ளதாகவே தென் படும். நாம் நமக்குரிய சாஸ்திரங்கள் சொன்ன வழியிலேயே மேலான நிலையை அடைய வேண்டும். நமது வழியைப் பின்பற்ற முயல வேண்டும். மேலும், பகுத்தறிவு, விவேகம் இவற்றால் அந்தப் பாதையைத் திடப்படுத்தவும் வேண்டும். இவ்வாறு நாம் முன்னே செல்லச் செல்ல, பாவ புண்ணியங் களின் புதிர் தானாகவே அவிழ்ந்துவிடும்.

88. தற்காலத்தில் நம் நாட்டில் எத்தனை பேர் சாஸ் திரங்களைப் புரிந்து கொண்டிருக்கின்றனர்? பிரம்மம், மாயை, பிரகிருதி என்ற ஏதோ சில வார்த்தைகளை மட்டும் தெரிந்து கொண்டு மூளையைக் குழப்பிக் கொள்கின்றனர். சாஸ்திரங் களின் உண்மையான பொருளையும் நோக்கத்தையும் ஒதுக்கி விட்டு, வார்த்தைகளை மட்டும் பிடித்துக்கொண்டு சண்டை யிடுகின்றனர். எப்போதும், எல்லா நிலையிலும், எல்லோருக் கும் உதவ முடியாவிட்டால், அந்தச் சாஸ்திரங்களால் என்ன பயன்? துறவிகளுக்கு மட்டும் பயன்பட்டு, இல்லறத்தார்களுக்கு வழி காட்டாத ஒருதலைப்பட்சமான சாஸ்திரங்களை வைத்துக் கொண்டு இல்லறத்தான் என்ன செய்வான்? வேலையையெல் லாம் விட்டுவிட்டு, காட்டிற்குச் சென்றவனுக்கு மட்டுமே சாஸ் திரங்கள் உதவ முடியுமானால் அவை எதற்கு? தினசரி வாழ் வின் உழைப்பு, நோய், துன்பம், வறுமை இவற்றிற்கிடையில், பாவச் செயலுக்காக வருந்துபவனின் வெறுப்பில், தாழ்த்தப் பட்டவனின் சுய கண்டனத்தில், போர்க்களத்தில், அச்சத்தில், காமம் கோபம் இன்பம் இவற்றின் நடுவில், வெற்றிக் களிப்பில், தோல்வித் துயரில், கடைசியாக மரணமென்னும் அச்சத்திற் குரிய இரவில் அவை சாதாரண மனிதர்களின் இதயத்தில் நம்பிக்கை விளக்கேற்றாவிட்டால், பலவீனமான மனித இனத் திற்கு அத்தகைய சாஸ்திரங்களால் ஒரு பயனும் இல்லை; உண்மையில் அவை சாஸ்திரங்களே அல்ல.

89. போகத்தின்மூலம் நாளடைவில் யோகம் வரும். ஆனால் அந்தோ! யோகத்தை எட்டுவது இருக்கட்டும் சிறிது போகம் கூடக் கிடைக்காத நிலையில் அல்லவா என் நாட்டினர் உள்ளனர்! எப்படிப்பட்ட அவமானங்களையெல்லாம் சகித்து, சிரமப்பட்டு, உடலுக்கு இன்றியமையாத தேவைகளை மட்டும் பூர்த்தி செய்கின்றனர். அப்படியும் எல்லோராலும் முடிகிறது என்பதில்லை. இத்தகைய நிலைமை நம்மை உறக்கத்திலிருந்து எழுப்பி, உடனடியாகச் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்யத் தூண்டாதது வியப்புதான்!

90. உங்கள் உரிமைகளுக்கும் சலுகைகளுக்கும் வேண்டிய அளவு போராடுங்கள். ஆனால் நாட்டின் சுயமரியாதையைத் தீவிரமாகக் கிளர்ந்தெழச் செய்து நம்மை நாமே உயர்த்திக் கொள்கின்ற வரையில் சலுகைகளும் உரிமைகளும் பெற விரும்பும் நமது ஆசைகள் அல்னாஸ்கரின் பகற்கனவாகவே முடியும் என்பதை மறக்க வேண்டாம்.

91. விசேஷ ஆற்றலுடன்கூடிய மேதை ஒருவர் பிறக்கும் போது, அவரது ஆளுமை அமைவதற்காக அவரது பரம் பரையின் மிகச் சிறந்த, ஆக்கபூர்வமான குணங்கள் எல்லாம் கவரப்பட்டு, சாறு பிழிந்தாற்போல் ஆகிவிடும். அதனால் தான் அந்தக் குடும்பத்தில் அவருக்குப் பின் பிறப்பவர்களெல் லாம் முட்டாள்களாகவோ, மிகச் சாதாரணமானவர்களாகவோ இருப்பார்கள்; நாளடைவில் அத்தகைய குடும்பம் அனேகமாக அழிந்துபோவதும் உண்டு.

92. இந்தப் பிறவியில் முக்தி பெற இயலாவிட்டால், அடுத்த பிறவியில் அல்லது பிறவிகளில் முக்தி பெறுவதற்கு என்ன உத்தரவாதம்?

93. ஆக்ராவின் தாஜ்மகாலைப் பார்த்தபோது சுவாமிஜி கூறினார்: ‘இங்குள்ள சலவைக் கல்துண்டு ஒன்றைப் பிழிய முடியுமானால் அதிலிருந்துகூட அந்த அரசனின் காதலும் சோகமும் சொட்டும். இதன் உள்ளே உள்ள அழகு வேலைப் பாட்டைக் கற்க வேண்டுமானால், ஒவ்வொரு சதுர அங்குலத் திற்கும் ஆறுமாதமாவது தேவைப்படும்.’

94. இந்தியாவின் உண்மையான வரலாறு வெளிப்படும் போது, மதத்தில் போலவே நுண்கலைகளிலும் உலகின் முதற் குரு இந்தியாவே என்பது நிரூபிக்கப்படும்.

95. கட்டிடக் கலையைப்பற்றிக் கூறினார்: ‘கல்கத்தாவை அரண்மனைகள் நிறைந்த நகரம் என்று சொல்கிறார்கள்.

ஆனால் அங்குள்ள வீடுகள் பெட்டிகளை ஒன்றின்மீது ஒன்றாக அடுக்கியதுபோல் தெரிகின்றன, அவை எந்தக் கருத்தையும் வெளிப்படுத்தவில்லை. தூய இந்துக் கட்டிடக் கலை ராஜ புதனத்தில் இப்போதும் காணப்படுகிறது. அங்கு ஓர் சத்திரத்தைப் பார்த்தால், உள்ளே புகுந்து அதன் இணையிலா விருந்தோம்பலை அனுபவிப்பதற்காக அது தன் இரு கைகளாலும் உங்களை அழைப்பதுபோல் தோன்றும். ஒரு கோயிலைப் பார்த்தால், அதற்கு உள்ளேயும் வெளியேயும் கடவுளின் சான்னித்தியத்தை உணர்வது நிச்சயம். கிராமக் குடிசை ஒன்றைப் பார்த்தால், அதன் பல பாகங்களின் விசேஷக் கருத்துக்களை உடனே புரிந்துகொள்ளலாம்; அந்த வீட்டுத் தலைவனின் முக்கியக் குணம், லட்சியம் ஆகியவற்றை அது உணர்த்தி நிற்பது தெரியவரும். கருத்தை வெளிப்படுத்தும் இத்தகைய கட்டிடக் கலையை நான் இத்தாலியைத் தவிர வேறெங்கும் கண்டதில்லை.

96. 'ஒன்றே உண்மை, பல என்பது பொய்' என்று வைதிக இந்து மதம் கூறுகிறது, 'பல என்பதுதான் உண்மை, ஒன்று என்பது பொய்' என்று புத்தர் போதித்தாரா?' என்று சுவாமிஜியிடம் கேட்டனர். 'ஆம், அத்துடன் ராமகிருஷ்ண பரமஹம்சரும் நானும், ''ஒன்று என்பதும் பல என்பதும் ஒரே மனத்தால் பல காலங்களில் வெவ்வேறு மனநிலைகளில் காணப்பெறும் ஒரே உண்மை'' என்பதைச் சேர்த்துள்ளோம்' என்று சுவாமிஜி கூறினார்.

97. நினைவிற்கொள்: ஆன்மா இயற்கைக்காக அல்ல, ஆன்மாவிற்காகவே இயற்கை—இதுவே என்றென்றும் இந்தியாவின் செய்தி என்பதை மறக்காதே.

98. அதோ அந்தத் தெருவில் நின்றுகொண்டு, தங்களுக்குச் சொந்தமாகக் கடவுளைத் தவிர வேறொன்றுமில்லை என்று தைரியமாகச் சொல்லத்தக்க இருபது ஆண்களும் பெண்களுமே இப்போது உலகிற்குத் தேவை. யார் வருவார்கள்? பயம் எதற்கு? இது உண்மையானால் வேறெதனாலும் என்ன பயம்? இது உண்மையில்லை என்றால் நம் வாழ்க்கையால் என்ன பயன்?

99. ஆ! மனிதனின் தெய்வீகத்தைச் சரிவரப் புரிந்துகொண்ட ஒருவனது பணி எவ்வளவு அமைதியாக இருக்கும்! அத்தகையோர் பிறரது கண்களைத் திறந்துவிடுவதைத் தவிர வேறு எதுவும் செய்வதற்கில்லை. மற்றவை எல்லாம் தானாக நடக்கும்.

100. ஸ்ரீராமகிருஷ்ணர் அந்தப் பெருவாழ்வை வாழ்வதிலேயே திருப்தியுற்றார். அதன் செய்தி என்ன என்பதைப் பிறர் கண்டுகொள்ள விட்டுவிட்டார்!

101. வெறும் திட்டங்கள்! திட்டங்கள்! அதனால்தான்... மேலை நாட்டினர் மதம் என்பதையே உருவாக்கவில்லை. யாராவது ஏதாவது செய்திருக்கிறார்கள் என்றால், அது திட்டங்கள் தீட்டாத ஒருசில கத்தோலிக்கப் புனிதர்களே. திட்டமிட்டுக் கொண்டே இருப்பவர்களால் மதம் போதிக்கப் பட்டதில்லை.

102. மேலைநாட்டில் சமூக வாழ்வு கணீரென்று சிரிப்பதைப் போன்றுள்ளது; அதன் உள்ளேயோ அழுகை மறைந்திருக்கும், அது விம்மலில் முடிகிறது. வேடிக்கையும் கேளிக்கையும் எல்லாம் மேற்பரப்பில்தான், உண்மையாக அங்கே ஆழ்ந்த துயரமே உள்ளது. இங்கு இருளும் துயரும்தான் வெளியே தெரிகிறது, ஆனால் உள்ளே திருப்தியும் மகிழ்ச்சியும் விளங்குகிறது.

கடவுள் பொழுதுபோக்காகத் தம்மையே பிரபஞ்சமாக உருவாக்கினார் என்றும், அவதார புருஷர்கள் விளையாட்டிற்காகவே வந்து மனிதர்களிடையே வாழ்ந்தார்கள் என்றும் இங்கே ஒரு கொள்கை உள்ளது. எல்லாம் வீண் விளையாட்டே. கிறிஸ்துவைச் சிலுவையில் அறைந்தது ஏன்? வெறும் விளையாட்டிற்காக. வாழ்க்கையும் விளையாட்டே. இறைவனுடன் விளையாடுங்கள். 'எல்லாம் விளையாட்டு, எல்லாம் விளையாட்டே' என்று சொல்லுங்கள். நீங்கள் ஏதாவது செய்வதுண்டா?

103. தலைவன் ஒரே பிறவியில் உருவாவதில்லை என்று நான் நம்புகிறேன். அவன் அதற்காகப் பிறந்தாக வேண்டும். அமைப்பை உருவாக்குவதோ திட்டம் தீட்டுவதோ சிரமம் அல்ல. பல திறப்பட்ட மக்களை, அவர்களுக்குப் பொதுவான விருப்பங்களின் அடிப்படையில் ஒன்றுசேர்ப்பதுதான் தலைவனுக்குச் சரியான சோதனை. இது தானாக அமைந்தால் உண்டு, முயல்வதால் ஆவதில்லை.

104. பிளேட்டோவின் கருத்துக் கோட்பாடுபற்றிக் கூறினார்: 'இவையெல்லாம் மேலான, உண்மையான, நிறைவான கருத்துக்களின் வலிமை குன்றிய வெளிப்பாடு. உங்களுள் எங்கோ ஒரு குறிக்கோள் இருக்கிறது, இது அதை வெளிப் படுத்துவதற்கான முயற்சி. முயற்சியில் பல குறைகள் உள்ளன,

எனினும் முன்னேறுங்கள். என்றாவது ஒருநாள் லட்சியம் நிறைவேறியே தீரும்.'

105. சொந்த முக்திக்காக முயல்வதைவிட மீண்டும்மீண்டும் பிறந்து தனக்கு விருப்பமான காரியங்கள் முன்னேற உதவுவதே மேலானது என்று சுவாமிஜியின் சிஷ்யை ஒருவர் கருத்துத் தெரிவித்தார். அதற்கு சுவாமிஜி கூறினார்: 'முன்னேற்றம் என்ற எண்ணத்தை உன்னால் தவிர்க்க முடியவில்லை, அதனால்தான் இப்படிப் பேசுகிறாய். ஆனால் முன்னேறுவது சூழ்நிலையல்ல; அது இருந்தபடிதான் இருக்கும்; அதில் மாற்றங்கள் செய்வதால் நாமே முன்னேறுகிறோம்.'

106. அல்மோராவில், பலவீனமான முதியவர் ஒருவர், 'பலசாலிகள் பலவீனர்களைத் துன்புறுத்துவதைக் காண்பதே மக்களின் கர்மமாக இருந்தால் அவர்கள் என்ன செய்வது?' என்று கேட்டார். 'ஏன், பலசாலிகளை அடித்துத் துரத்த வேண்டும். இந்தக் கர்மத்தில் உங்கள் பங்கை மறக்க வேண்டாம். எதிர்க்கும் உரிமை உங்களுக்கு எப்போதும் உண்டு' என்றார் சுவாமிஜி.

107. 'தர்மத்தைக் காப்பாற்றுவதற்காக மரணத்தை எதிர் கொள்வதா, அல்லது கீதை சொல்வதுபோல், எதனாலும் பாதிக்கப்படாமல் இருக்கப் பயில்வதா?' என்று கேட்டபோது கூறினார்: 'பாதிக்கப்படாமல் இருப்பதே எனது நோக்கம், ஆனால் அது துறவிகளுக்கு. தற்காப்பு இல்லறத்தார்களுக்கு.'

108. எல்லோருக்கும் இன்பமே நோக்கம் என்று கொள்வது தவறு. எத்தனையோ பேர் துன்பத்தைத் தேடவும் பிறக்கின்றனர். பயங்கரத்தை, அதற்காகவே நாம் வழிபடுவோம்!

109. அனைவருடனும் அவரவர் மொழியிலேயே பேச வேண்டும் என்று தைரியமாகச் சொன்னவர் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர் மட்டுமே.

110. காளியை ஒப்புக்கொள்ளுமுன் தமக்கு இருந்த சந்தேகங்களைப் பற்றிக் கூறினார்: 'நான் காளியை எவ்வளவு வெறுத்தேன்! அவளது வழிகளை யார்தான் அறிய முடியும்? அவளை ஒப்புக்கொள்ள முடியாமல் ஆறு வருடம் போராடிய தற்குக் காரணம் அதுவே. கடைசியில் அவளை ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று! ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர் என்னை அவளுக்கு அர்ப்பணித்தார். நான் செய்யும் ஒவ்வொரு பணி யிலும் அவளே எனக்கு வழிகாட்டுகிறாள், அவளது திருவுளம் போல் என்னை இயக்குகிறாள் என்பது என்நம்பிக்கை. ....

ஆனாலும் அவ்வளவு காலம் போராட நேர்ந்தது! நான் அவரை நேசித்தேன், அதுவே என்னைக் கட்டுப்படுத்தியது. நான் அவரது அற்புதத் தூய்மையைக் கண்டேன். .... அவரது அன்பை உணர்ந்தேன். ... அன்று அவரது மகிமை எனக்குத் தெரிய வில்லை; போராடுவதைவிட்டு நான் பணிந்த பின்னரே அது முழுவதும் தெரிய வந்தது. அதற்குமுன், அவர் மூளைக் கோளாறுள்ள குழந்தை, எப்போதும் கனவுலகில் காலம் கழிப் பவர் என்றுதான் நான் நினைத்தேன். நான் அதை வெறுத்தேன். பின்பு நானும் காளியை ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று!

'அப்படி நான் ஏன் பணிய வேண்டியதாயிற்று என்னும் ரகசியம் என்னுடன் மறைந்துபோகும். அப்போது நான் துரதிர்ஷடங்களுடன் போராடிக் கொண்டிருந்தேன். ... அதுவே தக்கத் தருணம் ஆயிற்று. ... அவள் என்னை அடிமை கொண் டாள். ''நீ அடிமை''—இவைதான் வார்த்தைகள்! ராமகிருஷ்ண பரமஹம்சர் என்னை அவளிடம் ஒப்படைத்தார். ஆச்சரியம்! இதைச் செய்தபின் அவர் இரண்டு வருடமே வாழ்ந்தார்! அதில் பெரும்பகுதி நோயிலேயே கழிந்தது, ஆறு மாதம்கூட ஆரோக்கியத்துடனும் துடிப்புடனும் அவர் வாழவில்லை.

'அவ்வாறே குருநானக்கும் தம் சக்தியை அளிப்பதற்கான ஒரு சீடனை எதிர்பார்த்திருந்தார். குடும்பத்தையோ பிள்ளை களையோ அவர் பொருட்படுத்தவில்லை. முடிவில் தம் சக்தியை அளிப்பதற்கான சிறுவனைச் சந்தித்தார், அவனிடம் அதை அளித்தார், பிறகு உயிர் துறக்கச் சித்தமானார்.

'ஸ்ரீராமகிருஷ்ணரை எதிர்காலத்தில் காளியின் அவதாரம் என்று கருதுவார்கள் என்றா சொல்கிறீர்கள்? ஆம், அவள் தனது பணிக்காக ஸ்ரீராமகிருஷ்ணரின் உடலைப் பயன் படுத்தினாள் என்றே நான் நினைக்கிறேன். அதில் சந்தேகம் இல்லை.

'தன்னைப் பெண்பாலாகக் கருதுகின்ற ஒரு பெரிய சக்தி எங்கோ இருக்கிறது, அதுவே காளி என்றும் அன்னை என்றும் அழைக்கப்படுகிறது என்பதை என்னால் நம்பாமல் இருக்க முடியவில்லை. ... பிரம்மத்திலும் எனக்கு நம்பிக்கை இருக் கிறது. ... எப்போதும் அது அப்படித்தானே? உடம்பிலுள்ள எண்ணற்ற உயிரணுக்கள் அல்லவா மனிதனாக அமைகின்றன? மூளையில் ஒன்றேயன்றிப் பல மையங்கள் அல்லவா உணர் கின்றன?. ... வேறுபாட்டில் ஒருமை. ஆம். பிரம்மத்தில் மட்டும் அது ஏன் மாறாக இருக்க வேண்டும்? அதுவே பிரம்மம்.

அதுவே ஒன்றான பொருள். இருந்தாலும், இருந்தாலும்கூட அதுவே பல்வேறு தெய்வங்களாகவும் உள்ளது.'

111. எனக்கு வயது முதிரமுதிர, எல்லாம் ஆண்மையில் அடங்கியுள்ளது என்ற எண்ணம் வலுக்கிறது; இதுவே என் புதிய செய்தி.

112. மனிதனை மனிதன் தின்பது சில சமுதாயங்களில் வழக்கமாகவே உள்ளது என்று ஐரோப்பியர் ஒருவர் சொன்னதைப் பற்றிக் கூறினார்: 'அது உண்மையல்ல; யாகத்திற்காக, அல்லது போரில் பழிவாங்கும் எண்ணத்துடன்—இவற்றிற்காக அல்லாமல் எந்த நாட்டினரும் மனித மாமிசம் தின்றதில்லை. கூட்டமாக வாழும் பிராணிகளின் வழக்கம் அதுவல்ல என்பது உங்களுக்குத் தெரிந்திருக்குமே! சமூக வாழ்வின் வேரையே அது அறுத்துவிடும்!'

113. பெண்ணின்பமும் படைப்பும்! இவையே பல மதங்களின் அடிப்படையாக உள்ளன. உதாரணத்திற்கு, இந்தியாவில் வைணவம், மேலைநாட்டில் கிறிஸ்தவம். மரணத்தையோ காளியையோ வழிபடும் தைரியம் மிகச் சிலருக்குத்தானே இருந்தது! நாம் மரணத்தை வழிபடுவோம்! பயங்கரத்தை, அதன் இயல்பு குறைய வேண்டுமென்று எண்ணாமல், அந்தப் பயங்கரத்திற்காகவே தழுவிக்கொள்வோம். துயரத்திற்காகவே துயரத்தை ஏற்றுக் கொள்வோம்.

114. ஐநூறு ஆண்டு சட்டம், ஐநூறு ஆண்டு விக்கிரகங்கள், ஐநூறு ஆண்டு தந்திரக் கிரியைகள் இவையே புத்த மதத்தின் மூன்று தலைமுறைகள். தனக்கென்றே கோயில்களும் புரோகிதர்களும் கொண்ட புத்தமதம் என்ற ஒன்று ஒரு காலத்தில் இந்தியாவில் இருந்ததாக எண்ணாதீர்கள்! அப்படி ஒன்றும் இல்லை. அது எப்போதும் இந்து மதத்தில் இருந்ததுதான். ஒரு குறிப்பிட்ட காலத்தில் புத்தரின் செல்வாக்கு மேலோங்கி நின்றது; அதுவே சமுதாயத்தைத் துறவு நாடாக்கியது.

115. பழைய வழக்கங்களைப் பாதுகாப்பவர்களின் குறிக்கோள் விட்டுக்கொடுத்தல், உங்கள் (மேலை நாட்டினரின்) குறிக்கோள் போராட்டம்! இதில் நாங்களே வாழ்க்கையை அனுபவிப்பவர்கள், ஒருபோதும் நீங்களல்ல என்பது தெளிவு. நீங்கள் எப்போதும் உங்களுடையதை இன்னும் சிறப்பாக மாற்ற முயல்கிறீர்கள். அந்த மாற்றத்தின் கடுகளவு நிறைவேறு முன் செத்துப்போகிறீர்கள். மேலைநாட்டினரின் குறிக்கோள் செய்வது, கீழை நாட்டினரின் குறிக்கோள் சகிப்பது. இந்த

இரண்டும் அற்புதமாக இயைந்து செல்லும்போது வாழ்க்கை பரிபூரணமாகும். ஆனால் அது ஒருபோதும் நடக்கக்கூடியதல்ல.

விரும்பும் அனைத்தையும் ஒருவன் பெறமுடியாது என்பதை எங்கள் மதம் ஒப்புக்கொள்கிறது. வாழ்க்கை பல இடையூறுகள் நிறைந்தது; அது இதமானதாக இல்லை. ஆனால் இந்த இடையூறுகள்தான் நம்மில் ஒளியையும் வலிமையும் கொண்டு வருகின்றன. சிலர் (Liberals) இந்த இதமின்மையை மட்டும் பார்த்து, இதை ஒழிக்கப் பாடுபடுகின்றனர். இதற்குப் பதிலாக அவர்கள் காட்டுவதோ இதைவிட மோசமானதாக உள்ளது. இந்தப் புது வழக்கம் வலிமைபெற, பழைய வழக்கத்தைப் போலவே காலமாகிறது.

மாற்றத்தால் சங்கல்பம் வலிமை பெறுவதில்லை, வலிமை இழந்து அடிமையாகிறது. நாம் எப்போதும் கிரகித்துக்கொள்ள வேண்டும், கிரகிப்பதால் சங்கல்பம் வலிமை பெறுகிறது. தெரிந்தோ தெரியாமலோ, இந்தப் பிரபஞ்சத்தில் சங்கல்ப சக்தி ஒன்றையே நாம் ஆமோதிக்கிறோம். உடன்கட்டை ஏறுதல் மதிக்கப்படுகிறது, ஏனெனில் அது சங்கல்ப சக்தியைப் புலப் படுத்துகிறது.

சுயநலத்தை ஒழிக்க மிகவும் முயற்சிக்க வேண்டும். எப் போதெல்லாம் நான் ஒரு தவறு செய்தேனோ, அப்போதெல் லாம் சுயநலமே அதற்குக் காரணமாக இருந்ததைக் கண்டேன். சுயநலம் இல்லாத எனது முயற்சிகள் எல்லாமே சரியாக இலக்கை அடைந்திருக்கின்றன.

சுயநலம் இல்லையானால் இந்த மதங்கள் எதுவும் இருக் காது. மனிதன் தனக்காக எதுவும் விரும்பவில்லையானால், இவ்வளவு பிரார்த்தனைகளும் வழிபாடுகளும் இருக்குமா என்ன? ஏன், அவன் கடவுளையே நினைத்திருக்க மாட்டான். அழகிய இயற்கைக் காட்சி ஒன்றைக் காணும்போதோ, அது போல் எப்போதோ அவரைச் சிறிது புகழ்ந்திருப்பான் அவ னுக்கு அதுவே போதும். புகழ்பாடுவதும், நன்றி கூறுதலும் மட்டும் அவனுக்குப் போதும். நம்மிடம் சுயநலம் இல்லாமல் போனால் எவ்வளவு நன்றாக இருக்கும்!

போர் செய்வது வளர்ச்சியின் அடையாளம் என்று நீங்கள் நினைப்பது தவறு. அப்படியல்ல; கிரகிப்பதே, ஏற்றுக் கொள் வதே வளர்ச்சியின் அடையாளம். அதற்குப் பெயர்பெற்றது இந்துமதம். போர் செய்வதை நாங்கள் ஒருபோதும் மதித்த தில்லை. வீடு வாசலைப் பாதுகாக்கச் சிலவேளைகளில் ஏதோ

சண்டையிட்டிருப்போம், அதில் தவறில்லை. ஆனால் சண்டைக் காகவே சண்டையிட நாங்கள் ஒருபோதும் விரும்பியதில்லை. இதை எல்லோரும் அறிந்துகொள்ள வேண்டும். எனவே புதிதாக வந்த இந்த இனத்தினர் சுழலட்டும்; முடிவில் இந்துமதம் இவர்கள் எல்லோரையும் தனக்குள் கிரகித்துவிடும்.

116. மனித ஆன்மாக்கள் மட்டுமல்ல, எல்லா ஆன்மாக்களின் தொகுதியே சகுணக் கடவுள். தொகுதியான கடவுளின் சங்கல்பத்திற்கு எதிராக எதுவும் நிற்க முடியாது. அதையே நாம் நியதி என்கிறோம். சிவன், காளி என்றெல்லாம் கூறுவது இதையே.

117. பயங்கரத்தை வழிபடு. மரணத்தை வழிபடு. மற்றவையெல்லாம் வீண். எல்லா போராட்டமும் வீண். இதுவே கடைசிப் படிப்பினை. ஆனால் கோழை மரணத்தை விரும்புவது போன்றதல்ல இது; பலவீனன் தற்கொலை செய்ய விரும்புவதும் அல்ல. ஒவ்வொன்றையும் அடிவரை ஆழம் பார்த்து, வேறு வழி இல்லையென்று துணிந்த பலசாலி வரவேற்பதே இது.

118. என் நாட்டினருக்கு மீண்டும் அவர்களின் மூட நம்பிக்கைகளை அளிப்பவர்களுடன் நான் மாறுபடுகிறேன். எகிப்திய நாட்டுப் பூர்வீக வரலாற்றறிஞன் அந்த நாட்டை விரும்புவதுபோல், இந்தியாவையும் தன்னல வழியில் நேசிப்பது எளிது. ஒருவன் நூல்களில், ஆராய்ச்சிகளில், கனவுகளில் கண்ட இந்தியாவை மீண்டும் காண விரும்பலாம். இந்தக் காலத்தின் வலிமைமிக்க அம்சங்களால் இயல்பாக வளம்பெற்ற அந்த இந்தியாவின் வலிமையான அம்சங்களை மீண்டும் காணவே நான் விரும்புகிறேன். இந்தப் புதிய வளர்ச்சி உள்ளிருந்து வருவதாக இருக்க வேண்டும்.

நான் உபநிடதங்களையே போதிக்கிறேன். நீங்கள் ஆராய்ந்து பார்த்தால், உபநிடதங்களைத் தவிர வேறெதையும் நான் மேற்கோள் காட்டியதில்லை என்பதைக் காணலாம். அதிலும் அவற்றிலுள்ள வலிமை என்னும் ஒரே எண்ணத்தைத் தான் கையாண்டிருக்கிறேன். அந்த வார்த்தையில் வேத வேதாந்தங்களின் சாரம் அடங்கியுள்ளது. புத்தர் அஹிம்சையைப் போதித்தார். அதைப் போதிப்பதற்கு இன்னும் சிறந்த வழி இது என்று நான் நினைக்கிறேன். ஏனெனில் அஹிம்சைக்குப் பின்னால் திகிலூட்டும் பலவீனம் உள்ளது. எதிர்ப்பு எண்ணம் பலவீனத்தின் காரணத்தாலேயே வருகிறது.

கடல்நீர்த்துளியைத் தண்டிக்கவோ அதிலிருந்து தப்பித்துக் கொள்ளவோ நான் முயல்வதில்லை; எனக்கு அது ஒரு பொருட்டல்ல. ஆனால் கொசுவிற்கு அது அபாயகரமானது. துன்புறுவது எல்லாம் அவ்வாறே என்று நான் நினைக்கிறேன். வலிமை! அச்சமின்மை! இந்திய சிப்பாய்க் கலகத்தின்போது கொல்லப்பட்ட அந்த மகானே எனது லட்சியம்! நெஞ்சில் குத்துண்டபோதுகூட அவர், 'நீயும் அவனே' என்றார்.

'இந்தத் திட்டத்தில் ஸ்ரீராமகிருஷ்ணரின் இடம் என்ன?' என்று நீங்கள் கேட்கலாம்.

அவரே வழி, முனைப்பில்லாத அந்த அற்புத வழி அவரே. அவரது வாழ்வு இயல்பாக நடைபெற்றது. அதைப் புரிந்து கொள்ள அவர் முயன்றதும் இல்லை. இங்கிலாந்தைப் பற்றியோ, ஆங்கிலேயரைப் பற்றியோ அவருக்கு எதுவும் தெரியாது. அவர்கள் கடல் கடந்து வந்த விந்தை மனிதர்கள் என்பது அவரது கருத்து. அவர் பெரு வாழ்வை வாழ்ந்தார். அதன் பொருளை நான் விளக்குகிறேன். யாரையும்பற்றி ஒரு நிந்தனைச் சொல்கூட அவரிடமிருந்து வந்ததில்லை. பேய்களை வழிபடு கின்ற எங்கள் நாட்டுப் பிரிவு ஒன்றை நான் ஒரு நாள் நிந்தித்துப் பேசினேன். மூன்று மணி நேரம் நான் பிதற்றியதை அவர் பொறுமையுடன் கேட்டுக்கொண்டிருந்தார். நான் பேசி முடித்த தும் அவர், 'சரி, சரி; ஒவ்வொரு வீட்டிற்கும் புறக்கடைக் கதவு இருக்கலாம். யாருக்குத் தெரியும்?' என்று கூறினார்.

எங்கள் இந்திய மதத்தின் பெரிய குற்றம் என்னவென்றால், துறவு, முக்தி என்னும் இரண்டு சொற்களை மட்டும் அது அறிந்திருந்ததுதான். முக்தி மட்டுமே இங்குள்ளது. இல்லறத் தானுக்கு எதுவும் இல்லை.

ஆனால் இந்த மனிதர்களுக்கே நான் உதவி செய்ய விரும்பு கிறேன். ஏனெனில் எல்லா ஆன்மாக்களும் ஒரே தன்மை யுடையவை அல்லவா? எல்லோரின் குறிக்கோளும் ஒன்றே அல்லவா!

எனவே சமுதாயத்திற்குக் கல்வியின்மூலம் வலிமை வந் தாக வேண்டும்.

119. உயர்ந்த லட்சியங்கள் பாமரர்களையும் அடைவதற் காக இந்துமதம் எடுத்துக்கொண்ட முயற்சியே புராணங்கள். இந்தியாவில், இந்தத் தேவையை முன்கூட்டியே உணர்ந்த ஒரே ஒருவர் கிருஷ்ணரே. இதுவரை வாழ்ந்த மனிதர்களுள் மகோன்னதமானவர் கிருஷ்ணரே.

வாழ்க்கையை நேசித்து, அதை அனுபவித்து, இறுதிப் படியில் விஷ்ணுவை வழிபட்டு, இறையனுபூதி பெறுவதற்கு வழிகாட்டும் ஒரு மதம் இவ்வாறு உருவாயிற்று. எங்கள் மிகச் சமீப காலப் பிரிவான சைதன்ய நெறி போகத்திற்கே என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கும். சமண மதம் மறு எல்லையைக் காட்டுகிறது. அதாவது, தன்னைத்தானே சித்திரவதை செய்து கொண்டு மெல்லமெல்ல உடலை மாய்த்துக் கொள்வது! சீரமைக்கப்பட்ட சமண மதமே புத்த மதம். புத்தர் ஐந்து முனிவர்களைவிட்டுச் சென்றதன் உட்கருத்து இதுவே. சித்திர வதை என்னும் எல்லையிலிருந்து போகத்தின் எல்லைவரை பௌதீகப் பயிற்சியின் ஒவ்வொரு படியையும் காட்டுகின்ற மதப் பிரிவுகள் இந்தியாவில் எப்போதும் இருந்திருக்கின்றன. அதேபோல் புலன்களைக் கருவியாக உபயோகிப்பது முதல் அவற்றை அடக்குவது வரையிலான பல்வேறு வழிகளால் கடவுளை அறியும் தத்துவஞானப் பிரிவுகளும் அவற்றுடனேயே வளர்ந்தன. இப்படி ஒரே அச்சைச் சுற்றிச் செல்கின்ற சுருளும் எதிர்ச்சுருளும் போல், ஒன்றையொன்று பூர்த்தி செய்யும் பிரிவுகள் இந்து மதத்தில் எப்போதும் உள்ளன.

வைணவம் சொல்கிறது: 'ஆம்; தந்தை, தாய், சகோதரன், கணவன், குழந்தை இவர்களிடம் கொள்ளும் பேரன்பு சரிதான். ஆனால் உன் குழந்தை கண்ணனே என்றும், உன் குழந்தைக்கு உணவு ஊட்டும்போது கண்ணனுக்கே ஊட்டுகிறாய் என்றும் நினைத்துக் கொள்'. வேதாந்தம், 'புலன்களைக் கட்டுப்படுத்து, புலன்களை அடக்கு' என்று சொன்னதற்கு மாறாகச் சைதன்யர், 'புலன்கள் வழியே கடவுளை வழிபடு' என்று கூறினார்.

இந்தியா இளமையுடனும் உயிர்த்துடிப்புடனும் வாழ்வதை நான் காண்கிறேன். ஐரோப்பாவும் இளமையுடன், உயிருணர்வுடன்தான் உள்ளது. அவற்றின் அமைப்புக்களை நாம் விமர்சிக்கும் அளவிற்கு அவை இரண்டும் வளரவில்லை. இரண்டும் இன்னும் முற்றுப் பெறாத பெரிய ஆராய்ச்சிகள். இந்தியாவில் எங்களுக்குச் சமூகப் பொதுவுடைமை (Social Communism) இருக்கிறது. அதன்மீதும், அதைச் சுற்றிலும் அத்வைதம், அதாவது, ஆன்மீகத் தனித்துவம் ஒளி வீசுகிறது. ஐரோப்பாவில் உங்கள் சமுதாயத்தில் தனித்துவம் விளங்குகிறது. உங்கள் எண்ணமோ துவைதம், அதாவது, ஆன்மீகப் பொதுவுடைமை (Spiritual Communism). ஆகவே இந்தியாவில் தனித்துவ எண்ணத்தால் சூழப்பட்ட சமுதாய அமைப்புகளும்,

ஐரோப்பாவில் பொதுவுடைமை எண்ணத்தால் சூழப்பட்ட தனித்துவ அமைப்புக்களும் உள்ளன.

இந்திய ஆராய்ச்சியை அது இருக்கின்ற நிலையிலேயே உதவி வளர்க்க வேண்டும். இந்த நோக்கில் பார்த்தால், பொருட்களை அவை இருக்கின்ற நிலையிலேயே ஏற்றுக்கொண்டு சீர்ப்படுத்த முயலாத இயக்கங்கள் பயனற்றவை. எடுத்துக்காட்டாக ஐரோப்பாவில், திருமணம் போலவே திருமணமின்மையும் மதிப்பிற்குரியதுதான். ஒருவன் தன் குணங்களால் ஆவதுபோல் தன் குற்றங்களாலும் பெரியவனாகிறான் என்பதை மறக்காதீர்கள். ஆகவே ஒரு நாட்டினரின் இயல்பை—அது குறைகள் நிறைந்தது என்பதற்கு நிரூபணமிருந்தாலும்—நாம் குலைக்கக் கூடாது.

120. விக்கிரகம் கடவுளே என்று கூறலாம். கடவுளே விக்கிரகம் என்று நினைக்கும் தவறைத் தவிர்க்க வேண்டும்.

121. ஆப்பிரிக்காவிலுள்ள ஹாட்டன் டாட் ஜாதியினரின் காட்டுமிராண்டி மதத்தைக் கண்டிக்க வேண்டுமென்று சுவாமிஜியை ஒருமுறை கேட்டுக் கொண்டனர். அதற்கு அவர், 'அந்த மதம் என்ன என்பது எனக்குத் தெரியாது' என்று கூறினார். ஒன்றை வழிபடுவது, பிறகு அதை அடிப்பது, பின்பு அதற்கு நன்றி கூறுவது—இந்தப் போக்குடைய அவர்களின் வழிபாடுகள்பற்றி சுவாமிஜிக்குக் கூறப்பட்டது. உடனே அவர், 'நானே அப்படித்தான் செய்கிறேன்' என்றார். ஒரு நிமிடம் பொறுத்து, அந்தத் தாழ்ந்த மக்களுக்குச் செய்யப்படும் அநீதியைப்பற்றி மிகவும் கோபத்துடன், 'காட்டுமிராண்டி மதம் என்பதே இல்லை. ஆ! உங்கள் இதயம் இரும்பாகிவிட்டது. அதனால் குழந்தையின் மனப்பான்மை சரி என்பதை உங்களால் புரிந்துகொள்ள முடியவில்லை. குழந்தை எங்கும் மனிதனையே காண்கிறது. நமது அறிவு காரணமாக, குழந்தை காண்கின்ற காட்சியை நாம் பெறவில்லை. ஆனால் முடிவில் உயர்ந்த அறிவால் நாம் அதை மீண்டும் பெறுகிறோம். பாறை, தடி, மரம், முதலியவற்றின் பின்னால் உயிருள்ள ஒரு சக்தி இருப்பதை அவன் உணர்கிறான். உயிருள்ள ஒரு சக்தி அங்கு இல்லையா என்ன? அது காட்டுமிராண்டித் தனமல்ல, அது ஒரு சின்னம். புரிந்துகொள்ளுங்கள்' என்றார்.

122. தராசின் ஒரு தட்டில் கண்ணன் அமர்ந்திருக்க, மறுதட்டில் கண்ணனின் திருநாமத்தை எழுதிய காகிதத்தை மட்டுமே இட்டு, தராசுத் தட்டுகளைச் சமப்படுத்தினாள் சத்தியபாமா.

வேதங்கள், நாதம் அனைத்திற்கும் ஆதாரம் வைதீக இந்து மதம். நாம் காணும் உலகமாகிய பொருள் அதற்கு முன்னேயும் நிலையாகவும் உள்ள கருத்தின் வலிமை குன்றிய வெளிப்பாடே. கடவுளின் திருநாமமே எல்லாம். கடவுள்கூட, நிலையான மனத்தில் அந்தக் கருத்து உருப்பெறுவதுதான். உங்கள் பெயர், 'நீ' என்னும் தனிமனிதனைவிட எல்லையற்ற மடங்கு பூரண மானது. கடவுளின் திருநாமம் கடவுளைவிடச் சிறப்பு வாய்ந்தது. யோசித்துப் பேசுங்கள்.

123. கிரேக்க தெய்வங்களைக்கூட நான் வழிபட மாட்டேன். ஏனெனில் அவர்கள் மனித குலத்திலிருந்து வேறுபட்டிருந்தனர்! நம்மைப் போன்றவர், ஆனால் நம்மைவிட மேலானவரான ஒருவரையே வழிபட வேண்டும். தேவர்களுக்கும் எனக்கும் உள்ள வேறுபாடு அளவில் மட்டுமே

124. ஒரு கல் விழுந்து ஒரு புழுவை நசுக்குகிறது. ஆதலால் எல்லா கற்களும் விழும்போது புழுக்களை நசுக்குமென்று ஊகிக்கிறோம். ஒருமுறை நடந்தது மீண்டும் நடக்கும் என்று உடனே ஏன் முடிவு செய்ய வேண்டும்? அனுபவமே என்கிறார் ஒருவர். ஆனால் முதன்முதலாக அது நிகழ்கிறது என்று வைத்துக்கொள்வோம். ஒரு குழந்தையை மேலே எறிந்தால் அது அழுகிறது. அது முற்பிறவிகளால் ஏற்பட்ட அனுபவமா? ஆனால் எதிர்காலத்திற்கு அது ஏன் பொருந்த வேண்டும்? காரணம், சில பொருட்களுள் உண்மையான இணைப்பு இருக் கிறது, தொடர்ச்சி இருக்கிறது. ஆனால் அது உதாரணத்தைக் கடந்து செல்லவோ, அதில் எட்டாது நிற்கவோ செய்யாமல் நாம் கவனிக்க வேண்டும். மானிட அறிவு முழுவதும் இந்தப் பகுத்தறிவிலேயே நிலைபெற்றுள்ளது.

தவறான அறிவைப் பொறுத்தவரை நேரடி அறிவுதான் ஒரே நிரூபணம். அந்த நேரடி அறிவைப் பெறும் கருவி, வழி, முயற்சியின் தன்மை—இவை தூய்மையாக இருக்க வேண்டும். நோய், உணர்ச்சிப்பெருக்கு போன்றவை நாம் அந்த அறிவைப் பெறுவதற்கு இடையூறானவை. ஆதலால் நேரான காட்சியும் ஒருவித ஊகமே. இதனால்தான் மானிட அறிவு எல்லாம் அறுதியானவை அல்ல, தவறாக இருக்கலாம். உண்மையான சாட்சி யார்? சொல்லப்பட்ட பொருள் யாருக்கு நேரடிக் காட்சியாகிறதோ, அவனே உண்மையான சாட்சி. ஆகவே வேதங்கள் உண்மை. ஏனெனில் அவை தகுந்தவர்களின் சான்று களால் அமைந்தவை. ஆனால் இப்படி அறிவதற்கான சக்தி

யாருக்காவது சிறப்பானதா? இல்லை. ரிஷி, ஆரியன், மிலேச்சன் அனைவருக்கும் இது பொதுவானது.

நேரடி அறிவின் ஒரு தனிவகையே சான்று என்பதும், ஒப்புமையும் யுக்தி சமத்துவமும் கீழ்நிலை ஊகங்கள் என்பதும் இன்றைய வங்க நாட்டின் கொள்கைகள். ஆகவே நேரடிக் காட்சி, ஊகம் என்று இரண்டு மட்டுமே சரியான அத்தாட்சிகள்.

சிலர் புறத் தோற்றத்திற்கு அதிக மதிப்புத் தருகின்றனர், சிலர் அகக் கருத்தை அதிகம் மதிக்கின்றனர். பறவை முந்தியதா, முட்டை முந்தியதா? எண்ணெய் கிண்ணத்தைத் தாங்குகிறதா, கிண்ணம் எண்ணெயைத் தாங்குகிறதா? இந்தப் பிரச்சினைக்கு முடிவேயில்லை. இதை விட்டுவிடுங்கள். மாயையிலிருந்து விடு படுங்கள்!

125. உலகமே அழிந்தாலும் நான் ஏன் கவலைப்பட வேண்டும்? என் தத்துவப்படி அது மிக நல்லது. ஆனால் உண்மையில் எனக்கு எதிராகவுள்ள அனைத்தும் கடைசியில் என்னுடனே இருக்க வேண்டும். நான் தேவியின் வீரன் அல்லவா?

126. ஆம், என் வாழ்க்கைக்கு ஒரு மாமனிதரின் உற்சாகமே வழிகாட்டி! அதனால் என்ன? உலகிற்குத் தேவையான புத்துணர்ச்சி ஒரே மனிதனிடமிருந்து மட்டும் கிடைத்ததல்ல.

அது உண்மைதான். ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர் தெய்வீகப் பேருணர்வு பெற்றவர் என்று நான் நம்புகிறேன். ஆனால் நானும் தெய்வீகப் பேருணர்வு பெற்றவன், நீங்களும் அப்படியே. உங்கள் சிடர்களுக்கும் அவர்களுடைய சீடர்களுக்கும் அதே நிலை வரும். இவ்வாறே காலத்தின் இறுதிவரை நடக்கும்.

நுட்ப விளக்கங்களின் காலம்கடந்து விட்டது உங்களுக்குத் தெரியவில்லையா? நன்மைக்கோ தீமைக்கோ அந்தக் காலம் போய்விட்டது, இனி திரும்பி வராது. எதிர்காலத்தில் உண்மை உலகிற்கெல்லாம் வெளிப்படும்.

127. உலகின் அனைவரையுமே உபநிடதங்களின் நிலைக்கு உயர்த்திவிடலாம் என்று நினைத்ததே புத்தர் செய்த பெருந் தவறு. பிறகு அனைத்தையும் சுயநலம் நாசம் செய்தது. கண்ணன் இன்னும் கூரிய அறிவு படைத்தவராக இருந்தார். அவர் செயல் முறை அறிவு மிக்கவர். விட்டுக்கொடுப்பது என்பது புத்தரிடம் இருக்கவில்லை. அவதார புருஷர்கூட விட்டுக்கொடுத்ததால் அழிந்ததையும், ஏற்றுக் கொள்ளாததால் சித்திரவதைக்குள்ளாகி இறந்ததையும் உலகம் இதற்குமுன் பார்த்திருக்கிறது. ஆனால் புத்தர் ஒரு நொடியேனும் விட்டுக் கொடுத்திருந்தால் தம்

வாழ்நாளிலேயே, ஆசியாக் கண்டம் முழுவதிலும் கடவுளாகப் போற்றப்பட்டிருப்பார். ஆனால் 'புத்தத் தன்மை என்பது ஒரு நிலை; அது ஒரு தனி மனிதன் அல்ல' என்பதே அவரது பதிலாக இருந்தது. இவ்வுலகில், தெளிந்த அறிவுடன் இருந்தவர் அவர் ஒருவரே. இதுவரை பிறந்தவர்களுள் தெளிந்த அறிவு கொண்டவர் அவர் ஒருவரே.

128. 'புத்தரைச் சிலுவையில் அறைந்திருந்தால் அவரை மக்கள் இன்னும் பாராட்டியிருப்பார்கள்' என்று சுவாமிஜியிடம் மேலைநாட்டில் யாரோ ஒருவர் கூறினார். அதற்கு சுவாமிஜி கூறினார்: 'இது ரோமானியரின் மிருகத்தனம், செயல் புரிவதற்கான மிகவும் கீழ்த்தரமான, முற்றிலும் மிருகத்தனமான ஆசை. இதன் காரணமாகத்தான் மக்கள் எப்போதும் காவியங்களை விரும்புகிறார்கள். 'செங்குத்தான பாதாளத்தில் தலை கீழாகத் தள்ளினார்' என்றெல்லாம் மிகைப்படுத்தி எழுதிய மில்டனைப் போன்ற கவிஞர்கள் இந்தியாவில் தோன்றாதது இந்தியாவின் நல்ல காலம்தான். அந்தப் பாடல் முழுவதற்கும் பதிலாக நான் பிரௌனிங் இயற்றிய பாடலின் இரண்டு அடிகளை ஏற்றுக்கொள்வேன்' என்று கூறினார். கதையின் நீண்ட காவியத் திறத்தையே ரோமானியர் மெச்சினர் என்பது அவரது கருத்து. கிறிஸ்துவைச் சிலுவையில் அறைந்ததாலேயே அவரது மதம் ரோமப் பேரரசெங்கும் பரவிற்று. 'ஆம், ஆம். மேலைநாட்டினரான உங்களுக்குச் செயலே தேவை. வாழ்க்கையின் ஒவ்வொரு சிறு நிகழ்ச்சியிலும் உள்ள கவிதையை நீங்கள் இன்னும் காணவில்லை. இளம்தாய் ஒருத்தி, இறந்த தன் மகனைத் தூக்கிக்கொண்டு புத்தரிடம் வந்த கதையைவிடச் சிறந்த கதை வேறெங்கு உள்ளது? அல்லது ஆடுகளைப் பற்றிய நிகழ்ச்சிதான் என்ன அருமை! மாபெரும் துறவு என்பது இந்தியாவில் புதிதல்ல. .... ''நிர்வாணத்திற்குப் பிறகு'' என்பதன் கவித்துவத்தைப் பாருங்கள்—

இரவில் மழை பெய்கிறது. அவர் ஓர் இடையனின் குடிசைக்கு வந்து நீர் சொட்டுகின்ற கூரைக்குக் கீழே சுவரோரமாக ஒதுங்குகிறார். மழை பொழிகிறது, காற்று மிகக்கடுமையாக வீசுகிறது.

உள்ளேயிருந்த இடையன் ஜன்னல் வழியாக அந்த முகத்தை ஒருகணம் பார்த்து, 'ஆகா, மஞ்சள் உடை! அங்கேயே இரு, அது போதும் உனக்கு!' என்று நினைக்கிறான். பிறகு பாடத் தொடங்குகிறான்:

'என் மாடுகள் வீட்டிற்கு வந்துவிட்டன, தீ நன்றாக எரிகிறது. என் மனைவி பத்திரமாக இருக்கிறாள், என் குழந்தைகள் சுகமாக உறங்குகிறார்கள். ஆதலால் மேகங்களே, நீங்கள் இன்றிரவு வேண்டுமளவு நீர் சொரியலாம்!'

வெளியே நின்ற புத்தர் பதிலளிக்கிறார்: 'என் மனம் கட்டுப்பாட்டில் இருக்கிறது. என் புலன்கள் உள்ளே ஒடுங்கி விட்டன. என் இதயம் நிலையாக உள்ளது. ஆதலால் முகில்களே, இன்றிரவு வேண்டுமானால் நீங்கள் மழை பொழியலாம்!'

இடையன் மீண்டும் பாடுகிறான்: 'வயல்கள் அறுவடை ஆகிவிட்டன. வைக்கோல் களஞ்சியத்தில் சேர்க்கப்பட்டு விட்டது. நதி நிறைந்தோடுகிறது, பாதைகள் கெட்டியாக உள்ளன. ஆகவே மேகங்களே, இன்றிரவு வேண்டுமானால் நீங்கள் பொழிந்துத் தள்ளுங்கள்!'

இவ்வாறு தொடர்ந்து செல்கிறது. இறுதியில் தன் செயலுக்கு வருந்திய இடையன் எழுந்து, புத்தரைக் கண்டு ஆச்சரியமுற்று அவருக்குச் சீடனாகிறான்.

இனி, நாவிதனின் கதையைவிட இனிய கதை உண்டா? அவன் பாடுகிறான்:

நாவிதன் என் வீட்டருகே நல்மனிதர் அவர் சென்றார்.

தாவி நான் ஓடினேன். ஆனால் அவர் திரும்பி எனக்காகக் காத்து நின்றார்!

'பிரபுவே, உம்முடன் பேசலாமா?'

'பேசலாம்.'

'என்னைப் போன்றவர்களுக்கு நிர்வாணம் கிடைக்குமா?'

'நாவிதனான உனக்கும் கிடைக்கும்.'

'உங்களை நான் தொடரலாமா?'

'தொடரலாம்.'

'நாவிதனான நானும்கூடத் தொடரலாம் என்றார்.'

'பிரபுவே, நான் தங்கள் பக்கத்தில் தங்கலாமா?'

'தங்கலாம்.'

'ஏழை நாவிதனான நான்கூடத் தங்கலாம் என்றார்.'

129. புத்த மதத்திற்கும் இந்து மதத்திற்கும் உள்ள பெரிய வேறுபாடு இதுவே. 'எல்லாம் மனமயக்கம் என்பதை உணர்' என்று புத்தர் சொன்னார். 'அந்த மாயைக்குள் மெய்ப்பொருள் இருப்பதை உணர்' என்கிறது இந்து மதம். இதைச் செய்வது எப்படி என்பதற்கு, இந்து மதம் கடுமையாக வரையறுக்கப் பட்ட நியதி எதையும் சொல்ல முற்படவில்லை. புத்தரின்

கட்டளையைப் பின்பற்றத் துறவறம் ஒன்றே வழி. ஆனால் இந்து மதத்தை வாழ்க்கையின் எந்த நிலையிலும் பின்பற்றலாம். அனைத்தும் ஒரே மெய்ப்பொருளை அடையும் பாதைகளே. இந்து மதத்தின் மகோன்னதமான படிப்பினை, இல்லறப்பெண் ஒருத்தியின் தூண்டுதலால் கசாப்புக் கடைக்காரன் வாயிலாகத் துறவி ஒருவருக்கும்கூடப் புகட்டப்பட்டுள்ளது. இவ்வாறு புத்த மதம் துறவியர் சங்கத்தின் மதமாயிற்று. இந்துமதம் துறவை உயர்வாகக் கருதியபோதிலும், அன்றாடக் கடமை எதுவாயிருந்தாலும் அதைச் சரிவர நிறைவேற்றுவது மனிதன் இறைவனை அடையும் வழி என்று எப்போதும் போதித்து வந்திருக்கிறது.

130. பெண்களுக்கான துறவற லட்சியத்தைப் பற்றி சுவாமிஜி கூறினார்: 'உங்களுக்கான சட்டதிட்டங்களை வகுத்துக் கொள்ளுங்கள்; உங்கள் கருத்துக்களை வரையறுத்துக் கொள்ளுங்கள். முடிந்தால் சிறிது பரந்த நோக்கை அதில் புகுத்துங்கள். ஆனால் ஒருபோதும் ஆறு பேருக்குமேல் இந்த லட்சியத்திற்குத் தயாராக இருக்க மாட்டார்கள் என்பதை நினைவில் கொள்ளுங்கள். பிரிவுகளுக்கும் இடமிருக்க வேண்டும், பிரிவுகளைக் கடந்து செல்லவும் முடிய வேண்டும். உங்களுக்குத் தேவையானவற்றை நீங்களே செய்துகொள்ள வேண்டியிருக்கும். சட்டங்களை வகுத்துக் கொள்ளுங்கள்; ஆனால் அவையின்றி மக்கள் வாழத் தயாராகும்போது அவற்றை உதறிவிடும்படி அவற்றை வகுக்க வேண்டும். முழு அதிகாரத்துடன் முழுச் சுதந்திரத்தை இணைப்பதிலேயே நமது சுய ஆற்றல் இருக்கிறது. துறவறத்தில்கூட இதைச் செய்ய முடியும்.'

131. வேறுபட்ட இரண்டு இனங்கள் கலந்து ஒன்றாகின்றன; அதிலிருந்து வலிமையான தனி இனமொன்று உண்டாகிறது. இது மற்ற இனங்களுடன் கலக்காமல் இருக்க முயல்கிறது. இங்கேதான் ஜாதி என்பது ஆரம்பமாவதை நீங்கள் காண்பீர்கள். ஆப்பிள் பழத்தைப் பாருங்கள், ஒட்டுமுறையில்தான் மிகச் சிறந்த பழங்கள் உண்டாகின்றன; ஆனால் ஒட்டுமுறையின் ஒரு கலவை இனத்தை உருவாக்கியபின் நாம் அந்த இனத்தைத் தனியாகக் காப்பாற்றுகிறோம்.

132. இந்தியாவில் பெண் கல்விபற்றிப் பின்வருமாறு கூறினார்: 'தெய்வங்களை வழிபடுவதற்குத் திருவுருவங்கள் அவசியமே. ஆனால் அவற்றை நீங்கள் மாற்ற முடியும். காளி

எப்போதும் ஒரே நிலையில் இருக்க வேண்டாம். அவளைப் புதிய வழிகளில் சித்தரிப்பதற்கு உங்கள் பெண்களுக்கு ஊக்கம் அளியுங்கள். கலைமகளை நூறு வெவ்வேறு விதங்களில் கற்பனை செய்யுங்கள். பெண்கள் தங்கள் கருத்துக்களையே சித்தரித்து வரைய வேண்டும்.

'கோயிலின் கர்ப்பக்கிருகத்தில் பீடத்தின் மிகத்தாழ்ந்த படியிலுள்ள பாத்திரத்தில் எப்போதும் நீர் நிறைந்திருக்க வேண்டும். பெரிய தமிழ்நாட்டு நெய் விளக்குகள் எப்போதும் எரிந்து கொண்டிருக்க வேண்டும். தொடர்ந்து பூஜைக்கும் ஏற்பாடு செய்ய முடியுமானால் அது இந்துவின் உணர்ச்சியைப் பெரிதும் பின்பற்றுவதாகும்.

'ஆனால் சடங்குகள் அனைத்தும் வைதீகமாக இருக்க வேண்டும். அங்கே ஒரு வைதீகப் பீடம் இருக்க வேண்டும். பூஜை வேளையில் அதில் வேள்வித்தீ மூட்ட வேண்டும். சிறுவர்களும் ஆஹுதி அளிக்க வகை செய்ய வேண்டும். இந்தச் சடங்கு இந்தியா முழுவதிலும் மதிப்புப் பெறுவது உறுதி.

'எல்லா வகையான மிருகங்களையும் உங்களுடன் சேர்த்துக் கொள்ளுங்கள். பசுவுடன் தொடங்குவதே சிறப்பு. நாய், பூனை, பறவைகள் அனைத்தையும் சேர்த்துக்கொள்ள வேண்டும். இவற்றிற்கு உணவளித்துப் பராமரிக்கச் சிறுவர்களுக்கும் வாய்ப்புக் கொடுங்கள்.

'பின்பு கல்வி வேள்வி உள்ளது. அது அனைத்திலும் இனியது. இந்தியாவில் எல்லா நூல்களும் புனிதமாகக் கொண்டாடப் படுகின்றன. வேதங்கள் மட்டுமின்றி, ஆங்கில, முகமதிய நூல்கள் அனைத்தும் புனிதமானவைதான், தெரியுமா உங்களுக்கு?

பழைய கலைகளுக்குப் புத்துயிர் கொடுங்கள். பாற்கட்டியால் பழங்களை வடிவமைக்க உங்கள் பெண்களுக்குக் கற்றுக் கொடுங்கள். சமையல், தையல் போன்றவற்றை ஒரு கலையாகச் செய்வதற்கு அவர்களுக்குக் கற்பியுங்கள். ஓவியம், புகைப்படம், காகிதத்தில் மாதிரி-உருவங்களைக் கத்தரித்தல், பொன் வெள்ளிச் சரிகை வேலை, சித்திரத் தையல் எல்லாம் அவர்கள் கற்க வேண்டும். தேவைப்படுமானால், வாழ்க்கை நடத்தப் போதுமான பொருளைத் தேட ஒவ்வொரு பெண்ணிற்கும் ஒரு கலை தெரிய வேண்டும் என்பதை வற்புறுத்துங்கள்.

'மனிதகுலத்தை ஒருபோதும் மறக்காதீர்கள்! மனித நேயத்துடன் மனிதனை வழிபடுவது என்பதன் விதை

இந்தியாவில் இருக்கிறது; ஆனால் அது போதிய அளவில் சிறப்பாக விரிக்கப்படவில்லை. உங்கள் மாணவர்கள் அதைச் செய்யட்டும். அதைப்பற்றிக் கவிதை எழுதுங்கள், ஓவியம் வரையுங்கள். தினமும் குளித்துச் சாப்பிடுமுன், பிச்சைக்காரர்களின் பாதங்களில் பணியுங்கள், அது கைகளுக்கும் இதயத்திற்கும் ஒருங்கிணைந்த அற்புதப் பயிற்சி. சில நாட்களில் குழந்தைகளை, உங்கள் மாணவர்களை வழிபடலாம். அல்லது சிறு குழந்தைகளை எடுத்து வந்து உணவூட்டிப் பாதுகாக்கலாம். மாதாஜி[1] என்னிடம் என்ன சொன்னார் தெரியுமா? ''சுவாமிஜி, எனக்கு உதவ யாருமில்லை; ஆயினும் இந்தப் புண்ணியச் சிறுமிகளை வழிபடுகிறேன். இவர்கள் என்னை முக்திக்கு அழைத்துச் செல்வார்கள்'' என்றார் அவர். ஒரு சிறுமிக்குச் சேவை செய்யும்போது, அவர் அந்த உமாதேவிக்குச் சேவை செய்வதாகவே உணர்ந்தார். இத்தகையதோர் எண்ணத்துடன் ஒரு பள்ளி தொடங்குவது சிறப்பு அல்லவா!'

133. அன்பு எப்போதும் ஆனந்தத்தின் வெளிப்பாடே. துன்பத்தின் நிழல் சிறிதாவது அதன்மீது இருக்குமானால் அது பௌதீகம், சுயநலம் இவற்றின் அறிகுறி.

134. திருமணத்தைப் பற்றிய மேலைநாட்டுக் கருத்தில் சட்டரீதியான பிணைப்பிற்கு அப்பாலுள்ள எல்லாம் அடங்கும். இந்தியாவிலோ, அது இருவரை என்றென்றைக்குமாக இணைத்து வைப்பதற்காகச் சமூகம் ஏற்படுத்தும் பிணைப்பாகக் கருதப் படுகிறது. அந்த இருவர் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் பிறவிகள்தோறும் மணந்தே தீரவேண்டும். ஒருவரின் புண்ணியத்தில் பாதியை மற்றொருவர் பெறுகிறார், இந்தப் பிறவியில் ஒருவர் முன்னேற முடியாமல் வீழ்ந்துவிட்டால், அவர் தம்முடன் வந்து சேரும்வரை மற்றவர் காத்திருக்க வேண்டும்.

135. ஆழ் உணர்வு, உணர்வுகடந்த நிலை என்னும் இரண்டு கடல்களுக்கு இடையேயுள்ள திரையே உணர்வு.

136. உணர்வைப்பற்றி மேலை நாட்டினர் அவ்வளவு பேசுவதை என்னால் நம்பவே முடியவில்லை. உணர்வா? அதனால் என்ன பயன்? ஆழ் உணர்வின் அளக்க முடியாத ஆழங்களுடனும் உணர்வுகடந்த நிலையின் உயரங்களுடனும் ஒப்பிட்டால்,

---

1. தபஸ்வினி மாதாஜி, இவர் கல்கத்தாவில் மகாகாளி பாடசாலையை நிறுவியர், பக். 51-52 பார்க்க.

அது ஒன்றுமேயில்லை. இந்த விஷயத்தில் எனக்குச் சந்தேகமே இல்லை. ஏனெனில் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர் பத்தே நிமிடங்களில் ஒரு மனிதனின் ஆழ் உணர்வு நிலையிலிருந்து அவனது இறந்தகாலம் முழுவதையும் தெரிந்துகொண்டு, அவனது எதிர்காலம் மற்றும் ஆற்றல்கள் அனைத்தையும் தீர்மானிப்பதை நான் பார்த்திருக்கிறேன் அல்லவா?

137. இவையெல்லாம் (ஆன்மீகக் காட்சிகள் முதலியவை) வழியில் வருபவை. அவை உண்மையான யோகம் அல்ல. நாம் கூறியவற்றின் உண்மைக்கு, மறைமுகமான அத்தாட்சியாக அவை சிறிது பயன்படலாம்; ஒரு சிறு காட்சிகூட, ஜடப் பொருளுக்குப் பின்னால் ஏதோ இருக்கிறது என்ற நம்பிக்கையை ஊட்டத்தான் செய்கிறது. ஆனால் அவற்றில் காலத்தை வீணாக்குபவர்களுக்குப் பெரிய அபாயம் நேரிடும்.

இந்தச் சித்திகள் போன்றவை 'எல்லைப் பிரச்சினைகள்' அதாவது மிகமுக்கியப் பிரச்சினைகள். இவற்றின் மூலமாக அறிவின் உறுதியோ, நிலையான தன்மையோ கிட்டாது. இவை 'எல்லைப் பிரச்சினைகள்' என்று நான் கூறவில்லையா? எல்லைக்கோடு எப்போதும் மாறிக்கொண்டே இருக்கிறது.

138. ஆன்மா வருவதோ போவதோ இல்லை. பிரபஞ்சத்தின் இந்த மண்டலங்கள் அல்லது அடுக்குகள் எல்லாமே ஆகாசம் மற்றும் பிராணனின் பல்வேறு விளைவுகளே என்பது அத்வைத நெறியின் கருத்து. மிகக் கீழானது, மிகவும் தூலமானது சூரிய மண்டலம். நாம் காண்கின்ற பிரபஞ்சம் அதில்தான் உள்ளது. அதில் பிராணன் பௌதீகச் சக்தியாகவும், உணரக் கூடிய ஜடப்பொருளாக ஆகாசமும் தோன்றுகிறது. அதற்கடுத்தது அதைச் சுற்றியிருக்கும் சந்திர மண்டலம். அது சந்திரன் அல்லவே அல்ல. அது தேவர்களின் இருப்பிடம். அதில் பிராணன் நுண்ணிய மன ஆற்றல்களாகவும், ஆகாசம் தன்மாத்திரைகள் அல்லது நுண் மூலக்கூறுகளாகவும் தோன்றுகிறது. அதற்கும் வெளியே மின்சார மண்டலம் உள்ளது. அது ஆகாசத்திலிருந்து பிரியாத நிலை. மின்சாரம் சக்தியா ஜடப்பொருளா என்பது சொல்ல முடியாது. அதற்கு அடுத்தது பிரம்ம லோகம். அங்கே பிராணனோ ஆகாசமோ இல்லை, இரண்டும் மூல சக்தியாகிய சித்தத்தில் ஒன்றாகிவிட்டன. அங்கு ஆகாசமோ பிராணனோ இல்லாததால், ஜீவன் பிரபஞ்சம் அனைத்தையும் 'சமஷ்டியாக', மஹத் அல்லது மனத்தின் தொகுதியாகத் தியானம் செய்கிறது. இதுவே புருஷனாக,

நுணுக்கமான பிரபஞ்ச ஆன்மாவாகத் தோன்றுகிறது. ஆனால் இதில் இன்னும் பன்மை இருப்பதால், இது சார்பற்ற பரம் பொருள் அல்ல. ஜீவன் இதிலிருந்து இறுதியாக ஒருமை என்னும் லட்சியத்தை அடைகிறது. ஜீவன் வருவதும் போவதும் இல்லை. அதற்கு முன்னர் இந்தக் காட்சிகள் அனைத்தும் ஒன்றன் பின் ஒன்றாக எழுகின்றன. நாம் இப்போது காணும் காட்சியும் அதுபோன்றதே என்கிறது அத்வைத நெறி. படைப்பும் ஒடுக்கமும் அதே வரிசைக் கிரமத்தில் நிகழும்—ஒன்று முன்னால் வருவது, இன்னொன்று பின்னால் செல்வது.

ஒவ்வொருவனும் தன் பிரபஞ்சத்தையே காண முடியும். அது அவன் கட்டுண்டிருப்பதால் படைக்கப்படுகிறது, முக்தி பெறும்போது நீங்குகிறது. ஆனால் கட்டுண்டிருக்கும் மற்றவர்களுக்கு அது இருக்கவே செய்யும். நாமரூபமே பிரபஞ்சத்தை உருவாக்குகிறது. கடலில் எழும் அலை, நாமரூபம் இருக்கும் வரை அலையாக இருக்கும். அலை வீழ்ந்துவிட்டால் அது கடல், நாமரூபம் போய்விடுகிறது. அலைவடிவில் நீர் எழாவிட்டால் அலை என்னும் நாமமோ ரூபமோ இருக்கவே முடியாது. அதேவேளையில் வெறும் நாமரூபமே அலை என்று சொல்லி விட முடியாது. அலை நீருடன் கலந்ததும் அவை அழிகின்றன, ஆனால் வேறு அலைகளில் வேறு பெயர்களும் உருவங்களும் தொடர்கின்றன. இந்த நாமரூபம், அதாவது பெயரும் உருவமும்தான் மாயை. தண்ணீரே பிரம்மம். அலை எப்போதும் தண்ணீராகவே இருந்தது. அலை என்ற நிலையில் அதற்குப் பெயரும் உருவமும் இருந்தன. இந்த நாமரூபம் அலையிலிருந்து வேறாக ஒரு நொடிப்பொழுதுகூட நிற்க முடியாது. அலை, தண்ணீர் என்ற நிலையில் எப்போதும் நாமரூபத்திலிருந்து வேறாயிருக்க முடியும். நாமரூபங்களை ஒருபோதும் பிரிக்க முடியாது. அவை இருப்பதாகச் சொல்ல முடியாது, எனினும் அவை சூன்யமல்ல. இதுவே மாயை.

139. நான் புத்தரின் சேவகருக்குச் சேவகர்களுக்குச் சேவகன். அவரைப்போல் யார் இருந்தார்கள்? தமக்காக ஒருபோதும் எதையும் செய்துகொள்ளாத அந்தப் பிரபுவின் இதயம் உலகையெல்லாம் அணைத்துக்கொண்டது. அரச குமாரனும் துறவியுமான அவருக்கு ஓர் ஆட்டுக்குட்டிக்காகத் தம் உயிரையே அளிக்கவல்ல கருணை இதயம் இருந்தது. பெண்புலியின் பசியைத் தீர்ப்பதற்காகத் தம்மையே அளிக்கத் துணிகின்ற அளவிற்கு அவரிடம் அன்பிருந்தது. ஒரு புலையனையும் அவர்

வரவேற்று ஆசீர்வதித்தார். நான் சிறுவனாயிருந்தபோது அவர் என் அறையில் வந்தார். நான் அவரது திருப்பாதங்களில் வீழ்ந் தேன். ஏனெனில் அவர் அந்தப் பிரபுவே என்பதை நான் தெரிந்து கொண்டேன்.

140. அவரே (சுகரே) லட்சிய பரமஹம்சர். சார்பற்ற அகண்ட சச்சிதானந்தக் கடல் நீரில் ஒரு கையளவு முகந்து பருகக் கொடுத்து வைத்தவர் மனிதர்களுள் அவர் ஒருவரே. அதன் அலைகள் கரைமீது மோதுவதைக் கேட்டதிலேயே பல மகான்கள் தங்களை இழந்துவிட்டனர்; சிலர் அதைக் கண் டுள்ளனர், சிலர் அதைச் சுவைத்துள்ளனர். ஆனால் அவரோ அந்த ஆனந்தக் கடலைப் பருகவே செய்தார்.

141. துறவில்லாத பக்தி அழிவை உண்டாக்கக் கூடியது.

142. நாம் இன்பத்தையோ துன்பத்தையோ வழிபடு வதில்லை; அவை இரண்டையும் கடந்த ஒன்றை அடையவே அவற்றின்மூலம் முயல்கிறோம்.

143. தேசிய இசையாகிய வேதங்களின் ராகத்தை சங்கரர் அறிந்திருந்தார்; நான் கண்டதுபோல் அவரும் இளமையில் ஏதேனும் காட்சி பெற்றிருப்பார் என்றே நான் கருதுகிறேன். அவ்வாறுதான் அவர் அந்த இசையை மீண்டும் பெற்றிருக்க வேண்டும்! அது எப்படி ஆனாலும் தமது வாழ்க்கையில் அவர் சாதித்தது, அந்த வேதங்கள் மற்றும் உபநிடதங்களுடைய அழகின் துடிதுடிப்பே அல்லவா!

144. தாயின் அன்பே சில வழிகளில் மிக மேலானதாக இருந்தாலும், ஆண்-பெண் காதலே ஆன்மாவிற்குக் கடவுளிடம் உள்ள அன்பின் மாதிரியாக அனைவராலும் கருதப்படுகிறது. வேறெந்த அன்பிற்கும் அவ்வளவு தீவிர சக்தி இல்லை. அன் பிற்குரியது என்று ஒருவன் எதைக் கருதுகிறானோ உண்மையில் அதுவாகவே ஆகிறான். இந்த அன்பு, அன்பு செய்யப்படும் பொருளை மாற்றி விடுகிறது.

145. ஜனகராவது அவ்வளவு எளிதா? சிறிதும் பற்றில் லாமல், பணம், புகழ், மனைவி மக்கள் எதையும் பொருட்படுத் தாமல் சிம்மாசனத்தில் வீற்றிருப்பது எளிதா? இந்த நிலையை அடைந்து விட்டதாக மேலைநாட்டில் எத்தனையோபேர் வந்து கூறினர். நானோ, 'இந்தியாவில் அத்தகைய மாமனிதர்கள் பிறந்ததில்லை' என்றுதான் சொல்ல முடிந்தது.

146. இல்லறத்தானுக்கும் துறவிக்குமுள்ள வேறுபாடு மின்மினிப்பூச்சிக்கும் எரிக்கும் சூரியனுக்கும், சிறு குளத்திற்கும்

அளவற்றுப் பரந்த கடலுக்கும், கடுகிற்கும் மேருமலைக்கும் உள்ள வேறுபாடு போன்றதே என்று உங்களுக்குள் சொல்லிக் கொள்ளுங்கள்; உங்கள் குழந்தைகளுக்கும் கற்றுக்கொடுங்கள்.

அனைத்திலும் பயம் நிறைந்துள்ளது. துறவு ஒன்றே பயம் அற்றது.

போலிச் சாதுக்களும், தங்கள் விரதங்களைக் காப்பாற்ற முடியாதவர்களும்கூடப் போற்றுதற்கு உரியவர்களே. ஏனெனில் அவர்களும் தங்கள் லட்சியத்திற்குச் சாட்சியாகிறார்கள்; ஆகையால் மற்றவர்களின் வெற்றிக்கு ஒருவகையில் காரணமாகிறார்கள்.

நாம் ஒருபோதும், ஒரு நொடி நேரமும் நம் லட்சியத்தை மறக்காமல் இருப்போமாக.

147. பாயும் ஆறே தூயது; சஞ்சரிக்கும் துறவியே தூயவன்.

148. பொன்னை எண்ணி, அதை அடைய விரும்பும் துறவி தற்கொலை செய்தவனே.

149. முகமதுவோ, புத்தரோ நல்லவராக இருந்தார் என்பதால் எனக்கென்ன வந்தது? அது எனது நல்லதையோ கெட்டதையோ மாற்றுகிறதா? நாம் நமக்காக, நம் பொறுப்பிலேயே நல்லவர்கள் ஆவோம்.

150. இந்த நாட்டில் நீங்கள் உங்கள் த-னித்-து-வத்-தை இழக்க எவ்வளவு பயப்படுகிறீர்கள்! ஏன்? நீங்கள் இன்னும் தனி மனிதர்கள் ஆகவேயில்லையே! உங்கள் முழு இயல்பையும் உணரும்போதுதான் உண்மையில் தனி மனிதர் ஆவீர்கள், அதற்கு முன்பு அல்ல. வேறொன்றும் நான் இந்த நாட்டில் கேள்விப்படுகிறேன்—இயற்கையுடன் இசைந்து வாழ வேண்டும் என்பதே அது. முன்னேற்றங்கள் அனைத்தும் இயற்கையை வென்றதாலேயே உண்டாயின என்பது உங்களுக்குத் தெரியாதா? முன்னேற்றம் வேண்டுமானால், நாம் ஒவ்வோர் அடியிலும் இயற்கையை எதிர்த்தாக வேண்டும்.

151. நான் பாமர மக்களுக்கு அத்வைத வேதாந்தத்தைப் போதிக்கக் கூடாதென்று இந்தியாவில் சொல்கிறார்கள். ஆனால் சிறு குழந்தைகூட அதைப் புரிந்துகொள்ளுமாறு செய்ய என்னால் முடியும் என்கிறேன் நான். மிக உயர்ந்த ஆன்மீக உண்மைகளை எவ்வளவு சீக்கிரம் கற்பிக்க முற்படுகிறீர்களோ அவ்வளவு நல்லது.

152. எவ்வளவு குறைவாகப் படிக்கிறீர்களோ அவ்வளவு நல்லது. கீதையையும் நல்ல வேதாந்த நூல்களையும் படியுங்கள்;

அவ்வளவுதான் உங்களுக்குத் தேவை. இப்போதைய கல்வி முறை முற்றிலும் தவறு. சிந்திப்பது எப்படி என்பதை அறிவதற்குமுன் மனத்தில் தகவல்களைத் திணிக்கிறார்கள். மனத்தைக் கட்டுப்படுத்துவதே முதலில் கற்பிக்கப்பட வேண்டும். நான் மீண்டும் கல்வி கற்க நேர்ந்தால், அதில் எனக்குச் சுதந்திரம் அளிக்கப்படுமானால், முதலில் என் மனத்தை அடக்கக் கற்றுக் கொள்வேன்; பிறகு, தகவல்கள் தேவைப்படும்போது அவற்றைச் சேகரித்துக் கொள்வேன். நினைத்தபோது மனத்தைக் கட்டுப் படுத்த முடியாததாலேயே எதையும் புரிந்துகொள்ள நீண்ட காலம் ஆகின்றது.

153. கெட்டகாலம் வந்தால், அதனால் என்ன? ஊஞ்சல் மறுபக்கமும் ஆடியே ஆக வேண்டும். ஆனால் அதனாலும் நன்மையில்லை, அதை நிறுத்துவது எப்படி என்பதையே அறிய வேண்டும். ❑

**சுடர் 6 முற்றும்**